சாண்டில்யன்



# கடல் புறா




► பாகம் 1: சோழப் பேரரசனை வீரராஜேந்திரன் அளித்த சமாதான ஓலையுடன் கலிங்கத்துத் துறைமுகமான பாலூர்ப் பெருந்துறைக்கு வந்த கருணாகரப் பல்லவன் என்ற இளையபல்லவன் அங்கு தமிழர்கள் சிறைசெய்து துன்புறுத்தப் படுவதையும், சோழ இளவலான அநபாயனும் ஆபத்தில் சிக்கியிருப்பதையும் உணருகிறான். அங்கு இறங்கியதும் காவலரால் துரத்தப்பட்ட இளையபல்லவன் தப்பி யோடி கடாரத்திலிருந்து சோழர்கள் உதவி நாட வந்து பாலூரில் மறைந்துறைந்த அரசன் குணவர்மனையும் அவன் மகள் காஞ்சனாதேவியையும் சந்தித்து, காஞ்சனா தேவியிடம் காதல் கொள்கிறான். சோழ இளவலின் நண்பனான அரபு நாட்டு அமீரின் முயற்சியாலும் சீனக் கொள்ளைக்காரனான அகூதாவின் உதவியாலும் பீமன் பிடியிலிருந்து தப்பிய காஞ்சனாதேவி, குணவர்மன், அநபாயன் முதலி யோர் ஒரு கப்பலில் பூம்புகார் சென்றுவிட, காயமுற்ற இளையபல்லவனைச் சுங்க அதிகாரி கண்டியத்தேவனும், அமீரும், கூலவாணிகனும் தூக்கிக் கொண்டு அகூதாவின் கப்பலில் தூரக் கிழக்குப் பகுதிக்குச் செல்கிறார்கள்.

► பாகம் 2: பாலூர்க் கடற்கரையில் பீமன் வீரர்களிடம் பொருதி படுகாய முற்று அகூதாவின் கப்பலில் தூரக்கிழக்கு சென்ற இளையபல்லவன் ஒரே வருடத் தில் கப்பல் போர் வல்லவனாக மாறி, கலிங்கத்தின் கடற்படை பலத்தைத் தூரக் கிழக்கில் உடைக்கத் தீர்மானித்து, அதற்குத் தளம் நாடி சொர்ணத் தீவின் அக்ஷய முனைக்கு வருகிறான். அங்கிருந்த தீயவனான பலவர்மனையும் பூர்வகுடிகளை யும் தந்திரத்தாலும் தீரத்தாலும் வெற்றி கொண்ட இளையபல்லவன், அங்கிருந்த காலத்தில் பலவர்மன் வளர்ப்புப் பெண் மஞ்சளழகியிடம் மையல் கொள்கிறான். அவள் அகூதாவின் சகோதரி மகள் என்பதை அறிந்து அகூதாவை வரவழைத்து அக்ஷயமுனையை மஞ்சளழகியிடம் ஒப்படைத்துவிட்டு, பலவர்மனைச் சிறை செய்து கடல்புறாவெனும் தனது அபூர்வ மரக்கலத்தில் கடல் மோகினி என்ற நக்காவரம் தீவை நோக்கிச் செல்கிறான்.




## அத்தியாயம் 1

# கடல் மோகினி

சித்திரைத் திங்களின் இறுதியில் துவங்கி வைகாசியின் மத்தியில் பெரிதும் வலுத்துவிட்ட தென்மேற்குப் பருவக் காற்று விளைவித்த இடைஞ்சலைச் சிறிதும் லட்சியம் செய்யாமலும் ஓங்கி எழுந்து பக்க இறக்கைகளில் தாக்கிய அலைகளை அடியோடு புறக்கணித்து நிமிர்ந்தும் குனிந்தும் நீரைக் கிழித்து நடுக்கடலில் ஓடிக்கொண்டிருந்த கடல் புறாவின் முதுகுத் தளத்தில் நின்ற இளையபல்லவன் முகம் திருப்தியையும் அதிருப்தியையும் கலந்து காட்டியது. விர்ரென்று பேரோசையுடன் பாய்ச் சீலைகளுக்குள் பாய்ந்த தென்மேற்குப் பருவக் காற்றின் வேகத்தைக்கூடக் கடல் புறாவின் பிரும்மாண்டமான எடை சமாளித்துக் கொண்டதையும், அத்தனை காற்றிலும் அது திசை தவறாது ஓரளவு வடக்கு நோக்கியே ஓடுவதையும், பாய்கள் காற்றில் பெரிதாகப் புடைத்து அழுத்தியபோது முன்பக்கம் நன்றாகச் சாய்ந்து மூக்கையும் தலையின் பாதியையும் நீருக்குள் புகுத்திய கடல் புறா, காற்று சற்று நிதானப்பட்ட சில விநாடிகளில் சரேலென்று தலையைத் தூக்கி மூக்கில் தவழ்ந்த

# கடல் புறா

1. கடல் மோகினி

மூன்றாம் பாகம்



சாண்டில்யன்

மீன்களுடனும் கடல் நண்டுகள் முதலிய கடல்வாழ் ஜீவராசி களுடனும் எழுந்ததையும் அப்படி நிமிர்ந்து எழுந்ததால் கடல் புறாவின் முதுகு பழையபடி சமநிலைக்கு வந்துவிட்டதை யும், இப்படி அமிழ்ந்து நிமிர்ந்த அதன் முக அமைப்பு வனப்புடனும் நீரில் எந்தச் சீதோஷ்ண நிலையையும் சமாளித்துக் கொள்ளும் திறனுடனுமிருந்ததையும் கண்ட இளையபல்லவன், அத்தகைய ஒரு மரக்கலத்துக்குத் தான் தலைவனாயிருக்கும் பாக்கியம் பெற்றதை நினைத்துப் பேருவகை கொண்டானாதலால் அவன் முகத்தில் பெரும் திருப்தி நிலவியிருந்தது. காற்றில் பாய்கள் விரிந்தபோது அவன் இதயம் மகிழ்ச்சியால் விரிந்தது. பேரலைகள் கடல் புறாவைத் தாக்கியபோது அந்தக் குளிர்ந்த நீர் அவன் உள்ளத்தைக் குளிர வைத்து, கடல் புறா மூக்கில் மீன்களுடனும் வேறு பல நீர்வாழ் ஜந்துக்களுடனும் எழுந்தபோது அந்தக் காட்சி அவன் கண்களைப் பெரிதும் மயக்கி எல்லையற்ற இன்பத்தை அளித்தது இளையபல்லவனுக்கு.

அந்த இன்ப நாதத்துக்குச் சுற்றிலும் இருந்த இயற்கையின் விஸ்தாரம், நிலத்தில் கண்களால் காண முடியாத மாபெரும் காட்சி, சுருதி கூட்டி நின்றது. கடல் புறாவின் தளத்தில் நின்று சுற்றிப் பார்த்த இளையபல்லவன், வானம் கடலைச் சுற்றிலும் தொட்டு நின்று தனக்கும் தன் மரக்கலத்துக்கும் பெரும் கூடாரம் அமைத்துக் கொடுத்திருந்ததையும், நீலவானத்தில் அந்த எழிற்பந்தலில் வேகமாக ஓடிய சின்னஞ்சிறு கரு மேகங்களும், நிலைத்திருந்தாலும் கப்பலின் வேகத்தால் நிலைக்காமல் தனக்கு எதிர்த் திசையில் ஓடுவதுபோல் இருந்த நக்ஷத்திரக் குவியல்களும், வளைந்து கிடந்த பிறைமதியும் அந்தப் பந்தலுக்குப் பற்பல விதமாகச் சித்திரங்களைத் தீட்டி யிருந்ததையும் கண்டு சிருஷ்டியின் பெரும் விநோதத்தை, பேரின்பத்தைக் கடலின் நடுவில்தான் பார்க்க முடியுமே தவிர, வேறெங்கும் பார்க்க முடியாதென்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான். வானம் இட்ட இந்தப் பெரிய கூடாரத்துக்குள், நிலையில்லாமல் சதா சலித்துத் தூக்கித்

தள்ளும் இந்த நீரின் மேலும் சஞ்சரிக்க மனிதன் துணிவு கொண்டதற்கிணை சிருஷ்டியின் சரித்திரத்தில் இருக்க முடியாதென்பதைத் தீர்மானித்த இளையபல்லவன், இந்த நிலையற்ற நீரின் மேலும் சண்டையிடும் மனப்பான்மையை வளர்த்துக் கொண்ட மனிதனுடைய துர்க்குணத்திற்கிணையும் சிருஷ்டியில் கிடையாதென்ற முடிவுக்கும் வந்தான்.

இப்படியொரு தத்துவம் அவன் மனத்தில் உதயமாகியும் கூட, வீர உணர்ச்சி ரத்தத்தில் ஊறி இருந்த காரணத்தால் இதே கடலில் தான் அகூதாவின் உபதலைவனாகச் செய்த பெரும் போர்களையும் அடைந்த வெற்றிகளையும் எண்ணி உள்ளூர உவகையே கொண்டான் இளையபல்லவன். அத்தகைய போர்களில் மீண்டும் ஈடுபடப் போகிறோம் என்ற நினைப்பும் வீரனான அவனுக்கு உவகையையே அளித்தது. இத்தனை இயற்கை எழில் சூழ்ந்திருந்தும், அவையனைத்தும் அவனுக்கு உவகையையே அளித்திருந்தும், உள்ளூர ஒரு துன்பரேகை மட்டும் ஓடிக் கொண்டிருந்ததால் அவன் முகத்தில் திருப்தியுடன் அதிருப்தியும் கலந்தே இருந்தது. இயற்கை எழில் அளித்த உவகைக்கு இடையிடையே மஞ்சளழகியின் துயரம் தோய்ந்த முகம் ஊடுருவி ஊடுருவி வந்து கொண்டிருந்ததால் இளையபல்லவன் துன்பப் பெருமூச்சை விட்டான். அந்தத் துன்பப் பெருமூச்சும் தென்மேற்குப் பருவக் காற்றில் கலந்து கடல் புறாவுக்கு முன்புறத்தில் ஓடி விட்டதால், பின்னே நெடுந்தூரத்தில் அக்ஷயமுனைக் கோட்டையில் தன்னந்தனியாக இருந்த மஞ்சளழகிக்குத் தன் துயரத்தை எடுத்துச் செல்லாது என்ற நினைப்பும் அவனுக்கு வேதனையையே தந்தது. வானக் குடையில் மேகங்களும்தான் திட்டை திட்டையாக ஓடின. ஆனால் அவையும் முன்னோக்கி ஓடியதால் அவை தூது சொல்லவும் வழியில்லை என்றே எண்ணினான் இளைய பல்லவன். அப்படியே வழியிருந்தாலும், 'மேகத்தைத் தூதுவிட நான் என்ன காளிதாசனா? கவி பாட முடியுமா?' என்றும் அலுத்துக்கொண்டான் அந்த வீரன்.

அக்ஷயமுனையைவிட்டுக் கிளம்பி நாட்கள் ஆறு ஆகியும் இரவும் பகலும் மஞ்சளழகி தன் மனத்திலேயே வலம் வருவது பெரும் வியப்பாயிருந்தது இளையபல்லவனுக்கு. காஞ்சனா தேவியிடம் தான் காதல் கொண்டிருந்தும் அவளுக்காகவே கடாரத்தை வெற்றி கொள்ள உறுதிபூண்டு கடற்போர்ப் பயிற்சியை ஓராண்டு காலம் அகூதாவிடம் பெற்றிருந்தும், அந்தக் காஞ்சனாதேவியைவிட ஒரு பங்கு அதிகமாக மஞ்சளழகி தன் மனத்தைப் பிடித்துக் கொண்டிருக்கும் காரணமென்னவென்று ஆராய்ந்து பார்த்த இளையபல்லவன் காரணம் தெரியாமல் தவித்தான். 'காஞ்சனாதேவிக்குத் தந்தையொருவர் இருக்கிறார். ஆள அரசுமிருக்கிறது. அவள் வாழ்வு திடமானது. ஆதரவு உள்ளது. இவளுக்கு அப்படி இல்லையே. இவளுக்கும் தந்தையிருக்கிறான், ஜெயவர்மன். ஆனால் அவன் அவளை மகள் என்று ஏற்றுக்கொள்ள மாட்டான். அரசு இருக்கிறது, சாமான்யமான அரசல்ல; தூரக் கீழ்த்திசையில் பெரும் சாம்ராஜ்யம் அது. இருந்தும் பயன் என்ன? அந்த சாம்ராஜ்ய பீடத்தில் அவள் அமர முடியாது. ஆதரவற்றவள் பாவம்!' என்று தனக்குள் சொல்லிக்கொண்ட இளையபல்லவன் அவளிடம் தனக்கேற்பட்டது கருணையா, காதலா, அனுதாபமா, ஆழ்ந்த அன்பா என்பது புரியாமல் தவித்தான்.

இதற்கிடையே எழுந்தது காஞ்சனாதேவியின் எழில் முகம். பாலூர்ப் பெருந்துறையில் அந்த மாடியறையில் அவள் பழைய ஆடையைக் களைய முற்பட்ட காட்சி, மாற்றுடையைச் சுற்றிப் பிடித்துக் கொண்ட கவர்ச்சி, வாள் முனையில் தன்னை வரவேற்ற வீரம் இவையெல்லாம் அவன் மனத்தில் வலம் வந்தன. அன்றிரவு தூதுப் புறாவை அவள் துரத்தித் தன்னறைக்கு வந்ததும் அந்த வீட்டுப் புறாவிடம் தன் மனத்தைப் பறிகொடுத்ததும் எழுந்தன அவன் சிந்தையிலே. அந்தக் காஞ்சனைப் புறாவின் நினைப்பே கடல் புறாவைச் சிருஷ்டித்தது என்பதை நினைக்க அவன் இதயம் மகிழ்ச்சி அலையிலே துள்ளி விளையாடியது. கடல் புறாவின்

நடுத்தளத்தில் நின்றிருந்த அவன், அந்தச் சமயத்தில் தான் காஞ்சனாதேவியின் இதயத்திலே நிலைத்து நின்றுவிட்டதாக எண்ணியதால் அவன் உடலெங்கும் இன்ப உணர்ச்சி பாய்ந்து சென்றது. "நிச்சயமாக என் இதயம் காஞ்சனா தேவியிடம் தான் நிலைத்திருக்கிறது" என்று திரும்பத் திரும்பப் பலமுறை சொல்லிக்கொண்டான் இளையபல்லவன். அப்படிச் சொல்லித் திடப்படுத்திக் கொண்ட சமயத்தில் மஞ்சளழகியின் பாதங்கள் சலங்கையுடன் அவன் இதயத்தில் ஆடின. மெல்லமெல்ல இதயத்தை மாறிமாறித் தொட்ட அந்த மலர்ப் பாதங்கள் தன் காதலையே மாற்றிவிடும்போல் இருக்கவே தன் உணர்ச்சிகளிலிருந்து இரண்டு பெண்களையும் உதறி விடும் நோக்கத்துடன் கடல் புறாவின் தளத்தைச் சுற்றி வேகமாக நடந்தான் இளையபல்லவன்.

அப்படி வேகமாக நடந்ததாலும், எண்ணங்கள் குழம்பிக் கிடந்ததாலும் எதிரே வருவது யாரென்பதைக் கூடக் கவனிக்காத இளையபல்லவன் திடீரெனத் தன்மீது ஒருவன் மோதிவிட்டதை உணர்ந்து விழிகளை மோதியவன் மீது நாட்டினான். இளையபல்லவன் வேகமாக மோதியதால் திடீரெனக் கீழே விழுந்துவிட்ட பலவர்மன் மெல்லச் சமாளித்துக் கொண்டு எழுந்திருந்து, "சோழர் படைத் தலைவர் நிதானமிழந்திருப்பதாகத் தெரிகிறது" என்று சர்வ சாதாரணமாகச் சொற்களை உதிர்த்தான்.

இளையபல்லவனின் கண்கள் வியப்புடன் பலவர்மனை நோக்கின. அக்ஷயமுனையில் எத்தனையோ அக்கிரமங்களைச் செய்தாலும், பலதரப்பட்ட பலவீனங்கள் அவனிடமிருந்தாலும் பலவர்மனிடம் கோழைத்தனம் மட்டும் கிடையாதென்பதைச் சென்ற ஆறு நாட்களில் உணர்ந்து கொண்ட இளையபல்லவன் அவன்மீது ஓரளவு மதிப்பே கொண்டிருந்தான். அகூதாவை அறையில் சந்தித்ததும் பலவர்மன் நடுங்கிய நடுக்கத்தைக் கண்டு அவன் சுத்தக் கோழையென்று தான் நினைத்தது பெரும் பிசகென்பதை நான்கே நாட்களில் புரிந்துகொண்ட இளையபல்லவன், அவனைச் சிறைப்படுத்த

வேண்டாமென்றும் இஷ்டப்படி மரக்கலத்தில் உலாவ அனுமதிக்குமாறும் உத்தரவிட்டிருந்தான். எதிரியைச் சுதந்திர மாகக் கடல் புறாவில் உலாவ விட்டு அதன் சூட்சுமங்களை அறியும்படி செய்வது விவேகமா என்று நினைத்த கண்டியத் தேவன் அதை வாய்விட்டுச் சொல்லியும்கூட "பாதகமில்லை, பலவர்மன் சுதந்திரமாக உலாவட்டும்" என்று உத்தரவே இட்டான் இளையபல்லவன்.

அந்த உத்தரவின் விளைவாக, கடந்த இரண்டு நாட்களாகக் கடல்புறாவின் தளத்திலும் சுழல் மரச் சக்கரங்கள் இருந்த யந்திர அறைகளிலும் சுற்றி வந்த பலவர்மன், அக்ஷயமுனையில் தனக்குக் காட்டப்பட்ட மர்மங்களை விடப் பலதரப்பட்ட போர் மர்மங்கள் கடல் புறாவில் அடங்கியிருப்பதைக் கொண்டு அந்தக் கப்பலை முறியடிக்க வேண்டுமானால் குறைந்தபட்சம் நான்கு மரக்கலங்கள் ஏககாலத்தில் அதைச் சுற்றிக் கொண்டால்தான் முடியும் என்பதை நிர்ணயித்துக் கொண்டான். தவிர அந்த மரக்கலத்திலிருந்த மாலுமிகளும் லேசுப்பட்டவர்களல்ல என்பதையும், கண்டியத்தேவனைப்போல் போர்க்கலத்தைச் செலுத்தி மாலுமிகளை வேலை வாங்கும் திறமைசாலியைக் கண்டுபிடிப்பது கஷ்டமென்பதையும் அறிந்துகொண்ட பலவர்மன் எப்பொழுதும் எந்த விதத்திலும் தான் அந்த மரக் கலத்திலிருந்து தப்பமுடியாதென்பதைப் புரிந்துகொண்டான். ஆனால் ஒன்றுமட்டும் புரியவில்லை அவனுக்கு. கண்டியத் தேவனோ இளையபல்லவனோ மரக்கலம் செல்லும் திசையை நிர்ணயிப்பதற்கு நக்ஷத்திரங்களை அடியோடு பார்க்கா திருப்பதைக் கண்டு இவர்கள் எப்படி திசை தப்பாமல் செல்கிறார்கள் என்று யோசித்து வியந்தான். அந்த வியப்புடன் வந்துகொண்டிருந்த சமயத்தில்தான் இளையபல்லவன் அவன் மீது மோதினான். தான் மோதியதால் விழுந்த பலவர்மன் எழுந்து கேட்ட கேள்வியால் சற்று நிதானமடைந்த இளைய பல்லவன், "என்ன கேட்டீர்கள்?" என்று மரியாதையுடனேயே வினவினான் பதிலுக்கு.

"நீங்கள் நிதானமிழந்திருக்கிறீர்களே, எதிரில் மனிதர் வருவதும் தெரியவில்லையே என்று கேட்டேன்" என்றான் பலவர்மன்.

"ஆம், சற்று நிதானமிழந்துதான் இருக்கிறேன். ஆனால் மது அருந்தவில்லை" என்று புன்முறுவலுடன் பதில் கூறினான் இளையபல்லவன்.

"அதற்கு இப்பொழுது அவசியமில்லை" என்ற பலவர்மனும் பதிலுக்குப் புன்முறுவல் கோட்டினான்.

"எதற்கு? மது அருந்துவதற்கா?"

"இல்லை. மது அருந்துவதாகப் பாசாங்கு செய்வதற்கு."

பலவர்மனின் இந்தப் பதிலைக் கேட்ட இளையபல்லவன் பெரிதாக நகைத்தான். பலவர்மனும் அவனுடன் சேர்ந்து நகைத்தான். அந்த இருவரும் நகைத்த சமயத்தில் துரிதமாக அவர்கள் இருப்பிடத்தை நோக்கி வந்த கண்டியத்தேவன், "தலைவர் உத்தரவு தேவையாயிருக்கிறது" என்று துவங்கியவன், பலவர்மன் இருப்பதைப் பார்த்ததும் சிறிது தயங்கினான்.

"பாதகமில்லை சொல். இவர் உதவியும் நமக்குத் தேவை" என்றான் இளையபல்லவன்.

சிறகொடிந்த பட்சியான பலவர்மன் என்ன உதவியைத் தங்களுக்குச் செய்ய முடியும் என்பதை உணராத கண்டியத் தேவன் ஒரு விநாடி விழித்தானானாலும் பிறகு சமாளித்துக் கொண்டு, "பருவக் காற்று வலுக்கிறது" என்று சுட்டிக் காட்டினான்.

இளையபல்லவன் விழிகள் கடல் புறாவின் நடுவிலிருந்த பெரும் பாய்மரத்தைக் கவனித்தன. "ஆம், பாய் அதிகமாகப் புடைத்திருக்கிறது. இன்னும் இரண்டு நாழிகைகளுக்குள் கடலில் கொந்தளிப்பும் பன்மடங்கு அதிகப்பட்டுவிடும்" என்று அவன் உதடுகள் சொற்களை உதிர்த்தன.

அதை ஆமோதிப்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்த கண்டியத்தேவன், "ஆகவே மரக்கலத்தை எந்த திசையில் செலுத்தலாம்? இப்பொழுது போகும் பாதை..."

என்று நிதானித்தவனை இடைமறித்த பலவர்மன், "நேர் வடக்கு" என்றான்.

"எப்படித் தெரியும் உங்களுக்கு!" என்று வினவினான் கண்டியத்தேவன்.

"அதோ துருவ நக்ஷத்திரம் இருக்கிறது" என்று சுட்டிக் காட்டிய பலவர்மன் தனக்கும் மரக்கலம் செலுத்தும் வித்தை தெரியுமென்பதை வலியுறுத்தினான்.

இளையபல்லவன் இதழ்களில் புன்முறுவல் அரும்பியது. "துருவ நக்ஷத்திரத்தைக் கொண்டு திசையைப் பெரும்பாலும் நிர்ணயிக்கலாம். ஆனால் பூர்ணமாக அதையே நம்ப முடியாது. திசையைத் துளி பிசகாமல் நிர்ணயிக்க வேறு சாதனமிருக்கிறது" என்று கூறிய இளையபல்லவன், "திசைக் கருவியைக் கொண்டு வா!" என்று தேவனுக்கு உத்தர விட்டான்.

அந்தப் பணியை நிறைவேற்றச் சென்று சில விநாடிகளில் திரும்பி வந்த கண்டியத்தேவன் ஒரு தங்கப் பேழையை இளையபல்லவன் கையில் கொடுத்தான். அந்தப் பேழையை வாங்கிக்கொண்டு மரக்கலத்தின் ஓரத்திலிருந்த பந்தத்தின் வெளிச்சத்திற்குப் பலவர்மனையும் அழைத்துச் சென்ற இளையபல்லவன் அந்தப் பேழையை மெல்லத் திறந்தான். அதன் நடுவில் ஒரு சிறிய அச்சு இருந்தது. அந்த அச்சில் ஊசலாடிக் கொண்டிருந்தது ஓர் ஊசி. "இதுதான் திசை காட்டும் ஊசி.* இது அகூதாவினால் எனக்குப் பரிசாக அளிக்கப்பட்டது. அந்த ஊசியின் அம்புமுனை எப்பொழுதும் வடதிசையைத்தான் காட்டும். இது காந்த ஊசி. இந்த ஊசிதான் திசையை நிர்ணயிக்க சீனக் கப்பலோட்டிகளால் உபயோகப்படுத்தப்படுகிறது. வானம் கறுத்துத் துருவ நக்ஷத்திரம் மறைந்துவிட்டாலும் இது திசையைச் சொல்லும்,

* திசை காட்டும் கருவியின் உபயோகத்தைச் சீனர்கள் கி.மு. 2634 முதலே அறிந்திருந்தார்கள். - Further India-By High Clifford C.M.G., Page 17, Chapter I

பாருங்கள். இதைப் பலவகைகளில் திருப்புகிறேன். அதன் முனைகள் மட்டும் வடக்கு தெற்குமாகவே நிற்கும்" என்று சொல்லிய இளையபல்லவன் அந்தக் கருவியைப் பலவாறு திருப்பினான்.

பலவர்மன் அந்தக் கருவியை வியப்புடன் பார்த்தான். இம்மி பிசகாமல் திசை காட்டிய அந்தக் காந்த ஊசியின் அம்புமுனையிலிருந்து கடல்புறா போவது நேர்வடக்கல்லவென்றும், லேசாக மேற்கிலும் சாய்ந்து செல்லுவதையும் புரிந்துகொண்ட பலவர்மன், "இளையபல்லவரே! இந்த ஊசிப்படி கடல் புறா லேசாக வடமேற்கில் திரும்பியிருக்கிறது," என்றான்.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்தான் இளைய பல்லவன். பலவர்மன் முகத்தில் ஈயாடவில்லை. நல்ல நெஞ்சுரமுள்ள அவன் நெஞ்சமும் சிறிது நெகிழ்ந்தது. "இந்தத் திசையில் இந்த மரக்கலம் சென்றால் எங்கு போகும் தெரியுமா?" என்று உள்ளே எழுந்த அச்சம் சொற்களிலும் ஒலிக்கக் கேட்டான் பலவர்மன்.

"தெரியும்." திட்டமாக வந்தது இளையபல்லவன் பதில்.

"எங்கே?"

"கடல் மோகினியிடம்."

"கடல் மோகினிக்கு இடுப்பில் வளையம் இருக்கிறது தெரியுமா?"

"தெரியும். பூ வளையம் இருக்கிறது."

"அதில் சிக்கியவர்கள்–"

"மீண்டதில்லை என்கிறீர்?"

"ஆம். திருப்புங்கள் மரக்கலத்தை" என்றான் பலவர்மன்.

"இல்லை, மோகினியிடமே போவோம்," என்று கண்டியத்தேவனை நோக்கி உத்தரவிட்டான் இளைய பல்லவன்.

"வேண்டாம். மோகினியிடம் போகவேண்டாம். போவது பேராபத்து," என்று கூவினான் பலவர்மன்.

அவன் கூச்சலை ஆமோதிப்பதுபோல் திடீரென எழுந்தது ஒரு பெருங்காற்று. 'ஊ' என்று பேரூதலாக ஊதிக் கொண்டு வந்த அந்தக் காற்றைத் தொடர்ந்து அலைகள் பெரிதாகச் சீறின. மரக்கலம் மேலும் கீழும் ஆட்டம் போட்டது. ஊழி வந்ததுபோல் வானமும் கறுத்தது. எங்கும் ஊழியின் பெருஞ் சத்தம். அதையும் கிழித்துக் கொண்டு எழுந்தது பாய்மரத்தின் உச்சியிலிருந்து பெருங்குரலொன்று. பேராபத்து அடுத்த சில விநாடிகளில் கடல் புறாவை நெருங்கிக்கொண்டிருந்ததை அந்தக் குரல் அறிவுறுத்தியது.



## அத்தியாயம் 2

# எரி அம்புகள்

கூடல் மோகினியை நாடிச் செல்வதிலிருந்த பேராபத்தைக் கலவரத்துடன் பலவர்மன் எடுத்துரைக்க முயன்ற நேரத்திலேயே திடீரெனத் தென்மேற்குப் பருவக் காற்று ஊளை என்ற சத்தத்துடன் ஊழிக்காற்றாக மாறிவிட்டதையும் அந்தக் காற்றின் பயங்கர ஒலியையும் கிழித்துக் கொண்டு எச்சரிக்கைக் கூச்சலொன்று நடுப் பாய்மரத்தின் உச்சியிலிருந்து எழுந்ததையும் கவனித்த இளையபல்லவன், கையிலிருந்த திசை காட்டும் கருவிப் பேழையைக் கண்டியத்தேவனிடம் கொடுத்து அதை மீண்டும் தனது அறைக்கு எடுத்துச் செல்லுமாறு உத்தரவிட்டுப் பக்கத்திலிருந்த பலவர்மனைப் பற்றிச் சிறிதும் சட்டை செய்யாமல் தனது மேலங்கியைக் கழற்றித் தளத்தில் எறிந்துவிட்டுக் காலிலிருந்து இடுப்புவரை மறைத்திருந்த சீனத்துச் சராயுடன் நடுப் பாய்மரத்தின்மீது தாவி மிகுந்த வேகத்துடன் அதில் ஏறிச் சென்றான். தன்னிடம் பேசிக்கொண்டிருந்த இளையபல்லவன் பாய்மரத்தின் உச்சியிலிருந்த மாலுமி போட்ட கூச்சலைக் கேட்டதும் தன்னைச் சிறிதும் சட்டை செய்யாமலும் மிகுந்த அநாகரிக முறையில் விலையுயர்ந்த மேலங்கியைக் கழற்றி எறிந்துவிட்டுப் பாய்மரத்தின்மீது தாவி விட்டதைக் கண்டதும் சினமும் வெறுப்பும் கொண்ட பலவர்மன், இளையபல்லவன் மரத்திலேறிய லாகவத்தைக் கண்டதும் அந்தச் சினத்தையும் வெறுப்பையும் உதறிவிட்டு வாயைப் பிளந்துகொண்டு வியப்பின் வசப்பட்டு அண்ணாந்து பார்த்துக்கொண்டு நின்றான். மரத்தின்மீது தாவியதும், அதன் தண்டில் இரு கால்களையும் வைத்து, கைகளை மேலும் கீழும் மாற்றிக் கொடுத்துத் தொத்தித் தொத்திச் சென்ற இளையபல்லவன் இடையிடையே இருந்த இரண்டொரு தட்டுக்களில் கூடக் காலை

வைத்துத் தன்னைத் திடப்படுத்திக் கொள்ளாமல் பக்கத்தி லிருந்த பாய் கயிற்றைப் பிடித்துத் தாவிச் சுழன்று மேலே போய்விட்டதையும், சுமார் நாலைந்து விநாடிகளுக்குள்ளேயே அவன் உச்சியினருகில் மரத்தண்டில் வளைத்து நிர்மாணிக்கப் பட்டிருந்த பலகையில் கால்களை வைத்து ஏறி நின்று விட்டதையும் பார்த்த பலவர்மன், 'பூர்வ ஜன்மத்தில் இவன் குரங்காய் இருந்திருக்க வேண்டும்' என்று தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டான். என்றும் காணாத அந்தக் காட்சியால் பலவர்மன் பிரமித்து நின்றானே யொழிய அவனுக்கு முன்னும் பின்னும் பல அலுவல்களில் சஞ்சரித்துக் கொண் டிருந்த மாலுமிகள் அதைப் பொருட்படுத்திப் பார்க்காமல் தங்கள் வேலையைக் கவனித்துப் போய்க்கொண்டிருந்தார்கள்.

காற்று வரவரப் படு மோசமாகிவிட்டதால் அதுவரை காற்றைச் சமாளித்த பெரும் எடையுள்ள கடல்புறா கூட லேசாக முன்னும் பின்னுமாகச் சாயத் தொடங்கியதால் பலவர்மன் நின்ற இடத்திலேயே திடமாக நிற்கமுடியாமல் தடுமாறித் தடுமாறிப் பின்னடைந்து அந்தப் பெரும் மரக்கலத்தின் பக்கப் பலகையை அணுகியதன்றி அதன்மீது சாய்ந்தும் கொண்டான். சாய்ந்த அந்த இடமும் அவனை நிம்மதியாயிருக்க விடவில்லை. பக்கவாட்டிலும் சாயத் தொடங்கிய கடல் புறாவைத் தாக்கிய பேரலைகளில் ஒன்று திடீரென நீரை வாரிக்கொட்டியதால் தலையிலிருந்து கால் வரை அபிஷேகம் செய்யப்பட்ட பலவர்மன் இஷ்ட விரோத மாக மேலங்கியைக் கழற்றிப் பிழிந்து தன் தலையைத் துவட்டிக்கொண்டான். நல்ல காற்று அடிக்கும் போது உபத்திரவம் ஏதுமில்லாத சமயத்தில் அக்ஷயமுனைக் கடற் கொள்ளைக்காரருடன் நாலைந்து முறை சிறிது தூரத்துக்கு மட்டும் உல்லாசப் பிரயாணம் செய்திருந்த பலவர்மன் ஊழிக் காற்றும் பனைமர உயரத்துக்கு எழுந்த பேரலைகளும் சேர்ந்து கடல் புறாவை ஆட்டியதைக் கண்டதும் கடல் பயணத்தின் பயங்கரத்தின் ஒரு பகுதியைப் புரிந்துகொண்டான். அக்ஷய முனைக் கோட்டையின் பாதுகாப்பிலிருந்து கொண்டு

கத்தைத் தவிர வேறெதையும் அறியாதவனும் சூளுக்களை யும் பதக்குகளையும் தன் வஞ்சகத்தால் இயக்கிக் காலத்தை ஓட்டியவனுமான பலவர்மன் கடலின் கோரத்தைக் கண்டு பெரிதும் கலங்கினான். அந்தக் கலக்கம் விளைவித்த பயத்தால் இருண்ட அவன் மனம் போலவே வானமும் கறுக்கத் தொடங்கியது. கண்ணிமைக்கும் நேரத்தில் எங்கிருந்தோ வந்த மேகங்கள் வானிலிருந்த நக்ஷத்திரக் கோலங்களைத் திடீரென மறைத்தன. பிறைமதியும் மேகத் திரையில் மறைந்துவிட்டது.

மையிருள் எங்கும் சூழ்ந்துவிட்டதாலும் கடலலைகளின் பேரிரைச்சலாலும் ஊழிக்காற்று வளைந்து வளைந்து அடித்து கடல்புறாவைப் பேயாட்டம் ஆட்டியதாலும் நிற்கவும் சக்தி யற்றுத் திகிலில் ஆழ்ந்துவிட்ட பலவர்மன் நடுப் பாய்மரத்தின் உச்சியிலிருந்து எழுந்த இளையபல்லவன் உத்தரவைக் கேட்டதும் பிரமித்தான். "யாரங்கே! தேவரே! பந்தங்களை அணைத்துவிடுங்கள். எனது அறையிலும் அடித்தளத்திலு முள்ள விளக்குகளைத் தவிர வேறெந்த விளக்கோ பந்தமோ எரியவேண்டாம்" என்ற உத்தரவு கடலின் கோரச் சத்தத்தை யும் மீறி, கணீரென்று கடல் புறாவின் தளத்தில் ஒலித்தது. கண்டியத்தேவன் திசைகாட்டும் கருவியை வைத்துவிட்டுத் தளத்துக்குத் திரும்பு முன்பே அந்த உத்தரவு பிறப்பிக்கப் பட்டாலும் மற்ற மாலுமிகள் வெகுதுரிதமாக அதை நிறை வேற்ற நாலா பக்கங்களிலும் ஓடினார்கள். சில விநாடி களுக்குள் தளத்தின் ஓரத்திலும் நடுவிலும் வளையங்களிலும் பாய்மரத் தண்டுகளிலும் செருகப்பட்டிருந்த பந்தங்களும் விளக்குகளும் அணைக்கப்பட்டதன் விளைவாக அந்தத் தளத்தை இருள் பரிபூரணமாகச் சூழ்ந்து கொண்டதால் யார் வருகிறார்கள், யார் போகிறார்கள் என்பதைப் புரிந்துகொள்ள முடியாமல் திணறிய பலவர்மன் இளையபல்லவன் அறையை நோக்கி நடக்க முற்பட்டான்.

சுமார் பத்தடிக்கு மேல் பலவர்மனால் காலை எடுத்து வைக்க முடியவில்லை. அவனுக்கு அக்கம் பக்கத்தில் மாலுமிகள் நடமாட்டமிருந்தது மட்டும் நடை ஒலியால்

அவனுக்குத் தெரிந்தது. சில மாலுமிகள் அவனைத் தாண்டிச் செல்ல அருகில் வந்தபோது நகைத்துக்கொண்டே சென்றதாலும், அந்த இருட்டிலும் கப்பலின் பேயாட்டத்திலும் அவர்கள் சர்வ சகஜமாக நடந்து சென்றதாலும் அவர்கள் பூர்வ ஜென்மத்தில் பிசாசுகளாய் இருந்திருக்க வேண்டுமென்று தனக்குள்ளேயே சபித்துக்கொண்டான் பலவர்மன். அப்படிச் சாபம் கொடுத்தும் அத்தகைய பிசாசுகளுடன் வர நேர்ந்த தன் விதியைப்பற்றி நொந்து கொண்டுமிருந்த பலவர்மன் அவர்கள் ஏன் மரக்கல விளக்குகளையும் பந்தங்களையும் அணைத்து விட்டார்கள் என்பதை அறிந்துகொள்ள முடியாமல் தவித்தான். தவித்ததோடு நிற்காமல் தன்னருகே சென்ற இரண்டொரு மாலுமிகளைத் தடுத்து அதற்குக் காரணமும் கேட்டான். மாலுமிகள் யாரும் அவனுக்குப் பதில் கூடச் சொல்லாமல் தங்கள் பணிகளை நிறைவேற்ற விரைந்து கொண்டிருந்தார்கள். ஆனால் கோபமுற்ற பலவர்மன் மாலுமியொருவனைக் கையைப் பிடித்து நிறுத்தி "கேட்பதற்குப் பதில் சொல்," என்று அதட்டவும் செய்தான்.

அப்படி மாலுமியின் கையைப் பிடிக்க நேர்ந்ததாலும், வேகமாகச் சென்ற மாலுமியின் கையைத் தனது இடக் கையால் பிடித்த சமயத்தில் வலக்கை பக்கப் பலகையிலிருந்து நீங்கிவிட்டதாலும் கப்பலின் ஆட்டத்தில் ஆடி விழ இருந்த பலவர்மனைப் பிடித்துக்கொண்ட மாலுமி, "கோட்டைத் தலைவரே! இது அக்ஷயமுனைக் கடற்கரை அல்ல. நடனமாட இது இடமும் அல்ல. சீக்கிரம் தலைவர் அறைக்குச் சென்று விடுங்கள்!" என்று கூறி நகைத்து விட்டுச் சென்றான். சாதாரணமாக உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்ளும் திறன்வாய்ந்த பலவர்மன் இதயத்தில் கோபம் கொழுந்துவிட்டு எரிந்தது. அக்ஷயமுனைக் கோட்டையில் இருக்கையில் தன்னை அணுகவும் முடியாத சர்வசாதாரண மனிதர்களெல்லாம் கடலின் நடுவில் தத்தளித்த அந்த மரக்கலத்தில் தன்னை ஏளனம் செய்வதை எண்ணி மனதிற்குள் பெரிதும் பொருமினான்.

அவன் அப்படிப் பொருமிக் கொண்டு நிற்கையில் அவ்வழி வந்த கண்டியத்தேவனும் பலவர்மனை நோக்கி, "பலவர்மரே! கடலின் கொந்தளிப்பும் பருவக் காற்றின் வேகமும் அதிகமாய் இருக்கிறது. அறைக்குச் சென்றுவிடுங்கள். உங்களால் நடக்க முடியாவிட்டால் மாலுமியொருவனை அனுப்பிப் பிடித்து அழைத்துச் செல்லச் செய்கிறேன்" என்று ஆதரவுடன் கூறினான்.

"அவசியமில்லை. என்னாலேயே நடக்கமுடியும்," என்று வீம்புக்குக் கூறிய பலவர்மன் மேலும் இரண்டடி எடுத்ததும் திடீரெனப் பின்னால் வீசியெறியப்பட்டு நடுப் பாய்மரத் தண்டின்மீது சென்று விழுந்தான். ஒரு விநாடி சென்றிருந்தால் அவன் தலை பாய்மரத் தண்டில் மோதி பலவர்மனுக்குக் கபாலமோட்சம் கிடைத்திருக்கும். ஆனால் அதிர்ஷ்டவசமாக, பாய்மரத் தண்டில் இறங்கி வந்த இளையபல்லவன் புறங் கால்களால் அவன் தலையைத் தடுக்கவே பலவர்மன் பின்பக்கமிருந்து முன்பக்கம் விழ ஓடினான். முன்னால் இருந்த கண்டியத்தேவன் அவனைப் பலமாகப் பிடித்து நிறுத்தினான். அதற்குள் பாய்மரத்திலிருந்து தளத்தில் குதித்த இளையபல்லவன், "பலவர்மரே! காற்று எழுந்ததும் நீங்கள் அறைக்குச் சென்றிருக்கவேண்டும். ஏன் இத்தனை நேரம் இங்கு தங்கிவிட்டீர்கள்?" என்று வினவினான்.

குழந்தையைப் பிடிப்பதுபோல் தன்னைப் பிடித்துக் கொண்டிருந்த கண்டியத்தேவனிடமிருந்து திமிறித் தன்னை விடுவித்துக்கொள்ள முயன்ற பலவர்மனை நோக்கிய இளையபல்லவன், "பலவர்மரே! பருவக் காற்று நாழிக்கு நாழி மும்முரமாகிறது. இந்த நிலையில் உங்களால் இந்தத் தளத்தில் நடக்க முடியாது" என்று கூறிவிட்டு, "தேவரே! கோட்டைத் தலைவரைக் கொண்டுபோய் என் அறையில் விட்டு வாரும்" என்றான். "முடியாது! நான் இங்குதானிருப்பேன். இங்கு நடப்பது என்னவென்பது எனக்குத் தெரியவேண்டும்," என்று பிடிவாதம் பிடித்தான் பலவர்மன்.

இளையபல்லவன் கப்பல் பேயாட்டமாடியும் கால்களைப் பரப்பித் திடமாக நின்றுகொண்டு சொன்னான், "நீங்கள் இருப்பது எங்கள் வேலைக்கு இடைஞ்சல்," என்று.

"என்ன வேலை செய்யப் போகிறீர்கள்?" என்று வினவினான் பலவர்மன், கண்டியத்தேவன் உறுதியான பிடியில் நின்ற வண்ணம்.

"பலவர்மரே! இந்த வேலையின் விவகாரங்களை நீங்கள் அறிய மாட்டீர்கள். இங்கு விஷம் வைத்து எதிரிகளைக் கொல்ல முடியாது. இங்கு நடக்க வேண்டியது வீரர்கள் போர். நிதானமாக உட்காருவதற்குத் திடமான தரையல்ல இது. வாழ்வைப்போல நிலையற்ற அலைகளில் நாமிருக்கிறோம். பாருங்கள் சுற்றிலும்" என்றான் இளையபல்லவன்.

சுற்றிலும் கண்களை ஓட்டினான் பலவர்மன். கடலின் பெரும் கொந்தளிப்பால் பேரலைகள் எழும்பி, சரேல் சரேல் என்று கடல்புறாவின் இறக்கைகளை அறைந்து கொண்டிருந்தன. அப்படி அறையப்பட்டதால் ஆடிய கடல்புறாவின் பக்கப் பகுதிகளிலிருந்து தளத்தில் வாரியடித்த நீர்த்துளிகள், ஆங்காங்கு துரிதமாகச் சென்று கொண்டும், உருளைகளைச் சுழலவிட்டும், கயிறுகளை இழுத்தும், சங்கிலிகளைச் சரசர வென அகற்றிக்கொண்டும் ஏதேதோ அலுவல்களைப் புரிந்து கொண்டிருந்த மாலுமிகள் மீது வாரியடித்தன. அந்த நீர்த்துளிகளில் ஓரிரண்டு பலவர்மன் கன்னத்திலும் பாய்ந்து ஆணிகளை அறையும் துன்பத்தைக் கொடுத்தன. ஆணி செலுத்தப் படுவதுபோல் தன்னைத் துன்புறுத்திய நீர்த்துளிகளைப்போல் பல நீர்த்துளிகள் அலுவல் புரிந்துகொண்டிருந்த மாலுமிகள் மீது விழுந்தும் அவர்கள் அதைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் தங்கள் வேலையைக் கவனித்துக் கொண்டிருந்ததைப் பார்த்த பலவர்மன் உண்மையில் பெருவியப்படைந்தான்.

வரவரக் காற்று கடுமையாகியது. கடல்புறாவின் ஆட்டமும் அதிகப்பட்டது. அத்தனை மையிருளிலும் திடமாகப் பாய்மரச் சீலை உருளைகளை நோக்கி அவற்றை இயக்கிக் கொண்டிருந்த மாலுமிகளின் உருவம் மங்கலாகத்

தென்பட்டதால், 'நமக்கு இவர்களையே சரியாகத் தெரிய வில்லையே, இவர்களுக்கு உருளைகள் இருக்குமிடம் எப்படித் தெரிகிறது?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான் பலவர்மன். இயற்கை மையிருட்டை அளித்திருக்க இளைய பல்லவன் எதற்காகப் பந்தங்களையும் விளக்குகளையும் அணைக்கச் சொன்னான் என்பது மட்டும் பலவர்மனுக்குப் புரியவில்லையாகையால் அவன் வாய்விட்டு இளைய பல்லவனைக் கேட்டான், "ஏன் விளக்குகளையும் பந்தங் களையும் அணைக்கச் செய்தீர்கள்?" என்று.

இளையபல்லவன் ஒரு விநாடி யோசித்தான். பிறகு கண்டியத்தேவனிடமிருந்த பலவர்மனை விடுவித்துத் தன் கையால் பிடித்துக்கொண்டு, "பலவர்மரே, காரணத்தை அவசியம் அறிய வேண்டுமா உங்களுக்கு?" என்று வினவினான்.

"ஆம்" என்றான் பலவர்மன்.

"அப்படியானால் வாருங்கள்," என்று அவனைப் பிடித்து அழைத்துக்கொண்டு நடுப் பாய்மரத்துக்குச் சென்ற இளைய பல்லவன் அதை ஒட்டி நின்ற நூலேணியில் பலவர்மனை ஏறச் சொன்னான்.

"முடியாது, என்னால் முடியாது. மரக்கலம் பயங்கரமாக ஆடுகிறது," என்றான் பலவர்மன்.

"நானிருக்கிறேன் பயப்படாதீர்கள்" என்று கூறிய இளைய பல்லவன் பலவர்மனை நூலேணியில் காலை வைத்து முன்னால் ஏறச் சொல்லிப் பின்னால் தானும் ஏறி அவனை ஒரு கையால் பிடித்துக்கொண்டு சென்றான். கால்கள் நடுங்க, கைகள் உதற, நெஞ்சு திக்திக்கென்று அடித்துக்கொள்ள அந்தப் பாய்மரத்து நூலேணியில் ஏறிச் சென்ற பலவர்மன் கப்பலின் ஆட்டத்தால் பலமுறை விழ இருந்தும் இளையபல்லவன் அவனை விழவொட்டாமல் தடுத்து நூலேணியின் மேல் ஏற்றிச் சென்றான். நூலேணியின் இருபது படிகள் தாண்டியதுமே கடல்புறாவின் பக்கப் பலகை கீழே போய் விட்டதால் கடலின் கோரக் காட்சி விரிந்தது பலவர்மனின்

கண்களுக்கெதிரே. கொந்தளித்த கடலில் பெரும் அலைகள் கரிய உருளைகளாகத் திரண்டு திரண்டு கடல்புறாவை நோக்கி வந்து கொண்டிருந்தன. பருவக் காற்றின் பயங்கர வீச்சு பலவர்மன் காதுகளில் புகுந்து குப்பென்று அடைத்துக் கொண்டதன்றி மூக்கிலும் வீசி மூச்சைத் திணற அடித்தது. பாய்மரம் திடமாக நின்றாலும் பாய்கள் மட்டும் பேயாட்டம் ஆடி தடால் தடாலென்று கிழிந்து விடுவன போல் அடித்துக் கொண்டன.

அந்தச் சூழ்நிலையில் நிற்கவும் மாட்டாமல் நூலேணியில் ஆடிய பலவர்மனை மேலே ஏறச் சொல்லித் தூண்டி, பாய்மரத்தின் முதல் தட்டில் நிற்க வைத்த இளையபல்லவன் தானும் அந்தத் தட்டில் நின்று கடலை நோக்கிக் கையை நீட்டி, "பலவர்மரே! இந்த மாதிரிக் காட்சியை நீர் இதற்கு முன் கண்டிருக்கிறீரா?" என்று கேட்டான்.

மிகுந்த குளிரினாலும் எதிரே கருமை தட்டிக்கிடந்த கடலின் கோரத்தினாலும் பற்கள் கடகடவென்று சப்திக்க, "இல்லை இல்லை," என்று உளறினான் பலவர்மன்.

"இந்த மாதிரி காற்று..." என்று மீண்டும் துவங்கினான் இளையபல்லவன்.

"பயங்கரம்," என்று பதிலுரைத்தான் பலவர்மன்.

"அலைகள் எழுச்சி?"

"பயங்கரம்."

"கடல் புறாவின் நடனம்?"

"நடனமா இது!"

"ஆம். இதைவிட இன்ப நடனம் உலகில் எதுவும் கிடையாது."

"அப்படியா?" பலவர்மன் அத்தனை பயத்திலும் இகழ்ச்சியைக் காட்டினான்.

"ஆம்! பலவர்மரே? இது இன்ப நடனம்தான். இதற்கு இயற்கைதான் ஆசிரியன். கடல் போடுகிறது தாளம். இதோ பாருங்கள், காற்று அளிக்கிறது கானம்" என்றான் இளைய பல்லவன், காற்றை மகிழ்ச்சியுடன் முகர்ந்துகொண்டே. அந்தச்

சமயத்தில் காற்று 'ஊ ஊ' என்ற பேரூதலாக ஊதியது. "இயற்கையின் குழலோசையைக் கேளுங்கள் பலவர்மரே! உமது ஆயுளில் கிடைக்காத காட்சி, கீதம், அனுபவம் அத்தனையையும் கடலன்னை அளித்திருக்கிறாள்," என்று தொடர்ந்து கூறினான் இளையபல்லவன்.

பலவர்மன் கடலன்னையின் அந்த வசதிகளை அனுபவிக்க இஷ்டப்படவில்லை. "இதைக் காட்டத்தான் இங்கு அழைத்து வந்தீர்களா?" என்று ஆத்திரத்துடன் வினவவும் செய்தான்.

"இல்லை, வேறொன்றைக் காட்டவும் அழைத்து வந்தேன். கீழே விளக்குகளையும் பந்தங்களையும் அணைக்கச் சொன்னதற்குக் காரணம் கேட்டீர்களல்லவா?"

"ஆம்."

"இப்பொழுது உற்றுப் பாருங்கள் நேரே" என்று கூறிய இளையபல்லவன் ஒரு திசையில் கையை நீட்டினான்.

அவன் கை குறித்த திசையை நோக்கிப் பலவர்மனின் இதயம் முன்னைவிடப் பலமாக அடித்துக் கொண்டது. "அதோ சின்னஞ்சிறு வெளிச்சங்கள் இரண்டு இடங்களில் தெரிகின்றன" என்று அந்தப் பயத்தின் ஊடே கூறினான்.

"ஆம்," என்று ஆமோதித்தான் இளையபல்லவன்.

"அவை?" பலவர்மன் கேள்வியில் சந்தேகத்துடன் பயமும் கலந்து ஒலித்தது.

"இரண்டு மரக்கலங்கள்," என்று இளையபல்லவன் விளக்கினான்.

"மிகவும் வேகமாக வருகின்றனபோல் தெரிகிறதே."

"ஆம்."

"ஏன்?"

"நம்மைத் தாக்க?"

இதைக்கேட்ட பலவர்மன் திகைத்தான். "இந்த மையிருளில் கடல் போரா!" என்று வியப்பும் கிலியும் கலந்த குரலில் வினவவும் செய்தான்.

"ஆம்," என்று கூறிய இளையபல்லவன் அந்த இடத்தி லிருந்தே கீழே குனிந்து, "கண்டியத்தேவரே! நமது பாய்களில் நடுவிலிருக்கும் பெரும்பாய் ஒன்றைத் தவிர மற்றவைகளை இறக்கிவிடுங்கள்," என்று கூறினான்.

"ஏன் இறக்க வேண்டும்?" என்று குறுக்கே கேட்டான் பலவர்மன்.

"அந்த மரக்கலங்கள் நம்மை அணுக உதவுகிறோம்," என்றான் இளையபல்லவன்.

இளையபல்லவன் புத்தி பிசகியிருக்கிறதோ என்று கூடப் பலவர்மன் நினைத்தான். 'இவன் எதற்காக ஆபத்தை விலை கொடுத்து வாங்குகிறான்?' என்று தனக்குள் கேட்டுக் கொண்டே கடற்பகுதியை நோக்கினான். எதிரி மரக்கலங்கள் வெகு வேகமாகக் கடல்புறாவை நோக்கி ஓடி வந்தன. பாய்கள் இறக்கப்பட்ட கடல்புறாவின் வேகம் ஓரளவு குறைந்தது. அப்படிக் குறைந்ததால் எதிரி மரக்கலங்களுக்கும் கடல் புறாவுக்கும் இடையே இருந்த தூரம் மெள்ள மெள்ளக் குறைந்து கொண்டிருந்தது. அதற்கு மேல் அங்கு நிற்கச் சக்தி யற்ற பலவர்மனைப் பிடித்து இறங்கிக் கொண்டு கடல் புறாவின் தளத்துக்கு வந்த இளையபல்லவன், "தளம் தயாராகட்டும், விற்களும் வேல்களும் பொருத்தப்படட்டும். எல்லோரும் போருக்குச் சித்தமாகட்டும்," என்று பெருங் கூச்சல் போட்டான்.

அந்தக் கூச்சலுக்குப் பிறகு பலப்பல விதமான ஒலிகள் தளத்திலும் மற்ற இடங்களிலும் கேட்டன. ஒரு நாழிகை பயங்கரமாக நகர்ந்தது. அந்த நாழிகையின் முடிவில் வானில் பறந்து வந்தன நான்கு எரி அம்புகள்.

அத்தியாயம் 3

# கடல்புறாவின் முதல் போர்

இளையபல்லவன் உத்தரவுப்படி கடல் புறாவின் நடுமரப் பாய் தவிர மற்றப் பாய்கள் இறக்கப்பட்டபடியால் அதன் வேகம் பெரிதும் தடைப்பட்டு விட்டதையும், சில நாழிகைகளுக்குள் எதிரிக் கப்பல்களுக்கும் அதற்குமிருந்த இடைவெளியும் குறைந்து விட்டதையும், கடல்புறாவை அதிகமாக நெருங்கு முன்பே எதிரி மரக்கலமொன்று எரி அம்புகளை வீசத் தொடங்கிவிட்டதையும் கண்ட பலவர்மன் இளைய பல்லவனின் முட்டாள்தனத்தைப் பற்றிப் பெரிதும் நொந்து கொண்டான். கடல் புறாவை அணுகி வரும் கப்பல்கள் எதிரிக் கப்பல்கள் என்பதை அறிந்ததுமே பாய்கள் உதவியால் மட்டுமின்றி, துடுப்புகளையும் வேகமாகப் பயன்படுத்தி ஓடுவது விவேகமாயிருக்க, இளையபல்லவன் மரக்கலத்தின் வேகத்தைத் தளர்த்த சகல ஏற்பாடுகளையும் செய்ததன்றி, போருக்கும் சித்தப்பட்டதைப் பார்த்துப் படைத்தலைவன் துணிவுக்கும் ஓர் எல்லை இருக்க வேண்டுமென்று பலவர்மன் நினைத்தான். கடல் புறாவின் அமைப்பைப் பார்த்த நாள் முதல் அது ஒரே சமயத்தில் நான்கு மரக்கலங்களை எதிர்த்துப் போராடவல்லது என்பதை பலவர்மன் உணர்ந்திருந்தாலும் அன்று கடலில் இருந்த கொந்தளிப்பான நிலையில் இரண்டு கப்பல்களுடன் போருக்கு முனைவதில் அர்த்தமில்லையென்றே நினைத்தான் அக்ஷயமுனைக் கோட்டையின் பழைய தலைவன். திறமையுடன் சுக்கானைப் பிடித்திருந்த கூலவாணிகனையும் மீறி மரக்கலத்தைக் கடல் தூக்கியெறிந்து கொண்டிருந்த நிலையில் மரக்கலத்தைக் குறிப்பிட்ட திசையில் திருப்புவது கஷ்டமாயிருக்க, அவசியத்துக்குத் தக்கபடி திருப்பித் திருப்பிப் போரிடுவது சாத்தியமில்லையென்று பலவர்மன் நினைத்தான். பலவர்மனுக்குக் கடல்

போரைப் பற்றி எதுவும் தெரியாதென்றாலும் அது சம்பந்தமாக சூளுக்களும் அக்ஷயமுனைக் கடற்கொள்ளைக் காரர்களும் விவரமாகச் சொல்லியிருந்தார்களாகையால் அவனுக்குக் கேள்விஞானம் அதிகமாயிருந்தது. ஆனால் அந்தக் கேள்வி ஞானத்துக்குச் சற்றும் பொருந்தாத போர் ஒன்று அன்று துவங்கியிருப்பதைக் கண்டு பெரும் வியப்பு மட்டுமின்றி அந்தப் போரின் முடிவுபற்றிப் பெரும் சந்தேகமும் கொண்டான் பலவர்மன்.

இப்படி யோசித்துக் கொண்டிருந்த சமயத்திலும் கடல் புறாவைத் தென்மேற்குப் பருவக் காற்றும் கடலலைகளும் தூக்கித் தூக்கி எறிந்துகொண்டிருந்ததால் தளத்தில் நிற்கச் சக்தியற்ற பலவர்மன் மெள்ளப் பக்கப் பலகையை நாடிச் சென்றான். அவன் உத்தேசத்தைக் கண்ட இளையபல்லவன், "பலவர்மரே! இன்னும் இரண்டே நாழிகைகளில் போர் துவங்கப் போகிறது. ஆகையால் அறைக்குச் சென்று விடுங்கள்" என்று கூறினான்.

இதைச் செவியுற்ற பலவர்மன் கடற்போரைப் பற்றி ஓரளவு பீதியடைந்திருந்தாலும் அந்தப் போரைப் பார்க்க வேண்டுமென்ற ஆசையும் இருந்ததால், "இல்லை! இங்கேயே இருக்கிறேன்?" என்றான்.

இளையபல்லவன் புருவங்கள் வியப்பால் உயர்ந்தன. "இங்கு என்ன வேலை உங்களுக்கு?" என்று வினவினான்.

"வேலையில்லை. ஆசையிருக்கிறது" என்று பலவர்மன் பதில் சற்றுத் திட்டமாகவே வந்தது. அடிக்கடி வாரியடித்த அலை நீர்த்துளிகளில் நனைந்ததாலும், காற்றில் நீண்ட நேரம் நின்றுவிட்டதாலும் குளிர் உடலுக்குச் சகஜமாகி விடவே பல்லடிப்பு நின்று சற்றுப் பலமாகவே சொற்களை உதிர்த்தான் பலவர்மன்.

"என்ன ஆசை?" என்று இளையபல்லவன் வினவினான்.

"உங்கள் துணிவின் எல்லை எது என்பதைப் பார்ப்பதில் உள்ள ஆசை" என்று விடையிறுத்தான் பலவர்மன்.

"துணிவா!" வியப்புடன் மீண்டும் எழுந்தது இளைய பல்லவன் கேள்வி.

"ஆம் துணிவுதான்."

"எதில் துணிவு?"

"எதிரிக் கப்பல்கள் துரத்தும்போது பாய்களை நன்றாக விரித்து ஓடுவதுதான் விவேகம்."

"அப்படியானால் இப்பொழுது விவேகக் குறைவான காரியம் நடந்திருக்கிறது?"

"சந்தேகமென்ன?"

"எதிரி வரும்போது ஓடுவதுதான் விவேகம் போலிருக் கிறது."

"எதிரியின் பலத்தைப் பொறுத்தது போர்முறை."

"இப்பொழுது எதிரியின் பலத்தை நீங்கள் நன்றாக உணர்ந்து கொண்டுவிட்டீர்கள்!"

"உணராமலென்ன? ஒரு கப்பலுக்கு இரண்டு கப்பல் களாக வருகின்றன."

"அப்படியா!"

"அதுமட்டுமல்ல. எரி அம்புகளையும் எதிரிகள் வீசத் தொடங்கிவிட்டார்கள்."

இதைக் கேட்டதும் இளையபல்லவன் மட்டுமின்றி, பக்கத்தில் நின்ற கண்டியத்தேவனும் பெரிதாக நகைத்தான். இருவரும் நகைத்ததைக் கண்டதால் வெகுண்ட பலவர்மன், "நகைப்புக்கு இதில் என்ன இருக்கிறது," என்று வினவினான்.

"எங்கே அந்த எரி அம்புகள்?" என்று கேட்ட இளைய பல்லவன் மீண்டும் பலமாக நகைத்தான்.

பறந்து வந்த எரியம்புகள் கடல்புறாவை அணுகாமல் பயனற்றுக் கடலில் விழுந்துவிட்டதை அப்பொழுதுதான் அறிந்த பலவர்மன் பேந்தப் பேந்த விழித்தான். "பலவர்மரே! கடல் போர்முறை தரைப்போருக்கு முற்றிலும் வித்தியாச மானது. படைகள் பின்வாங்கி மறுபடியும் முன்னேறிப் போரிடுவது இரண்டிலும் உண்டு. ஆனால் போரில் தரையின்

சந்தர்ப்பங்கள் வேறு, கடலின் சந்தர்ப்பங்கள் வேறு. உதாரண மாகப் பாருங்கள், எதிரிகள் எரி அம்புகளை வீசுவார்கள் என்பது எனக்குத் தெரியும். ஒருவேளை அவை கடல்புறாவை எட்டிவிட்டால் பாய்ச் சீலைகள் பற்றிக் கொள்ளாதிருக்கப் பாய்களை இறக்கிவிட்டேன். அப்படிப் பாய்கள் இறக்கப் படாமல் பாய்களின் மீது எரி அம்புகள் பாய்ந்திருந்தால் பாய்கள் பற்றிக் கொள்வது மட்டுமின்றி மரத்தண்டுகளும் பற்றிக் கொள்ளலாம். அதைத் தடுக்கவே மாலுமிகளுக்கு வேலை சரியாயிருக்கும். இப்பொழுது வேகம் சற்றுத் தடைப் பட்டிருக்கிறது. அதனால் அனுகூலமும் இருக்கிறது. பொறுத் திருந்து பாருங்கள்," என்று இளையபல்லவன் விளக்கிய பிறகு தான் ஓரளவு கடற்போரின் தத்துவம் விளங்கலாயிற்று பலவர்மனுக்கு.

இளையபல்லவன் மேலும் விளக்கினான்: "பலவர்மரே! எதிரி ஆத்திரக்காரனாயிருக்கிறான். குறி எட்டுமுன்பே எரி அம்புகளைப் பிரயோகித்திருக்கிறான். கடலில் அம்புகளை எய்யுமுன்பு எதிரிக்கும் நமக்கும் இடையே உள்ள தூரம், மரக்கலத்தின் வேகம், காற்றின் திசை, வேகம் ஆகிய பல விஷயங்களைக் கணக்கிட்டு எய்ய வேண்டும். ஆனால் அந்தக் கணக்கு எதிரிக்குப் பூஜ்யமென்று நினைக்கிறேன். தவிர இந்தக் கொந்தளிக்கும் கடலில் மரக்கலம் ஒரு நிலையில் நிற்க முடியாத சமயத்தில் அவசரமாக மரக்கலங்களைப் போருக்குச் செலுத்துவதும் தவறு. அந்தத் தவற்றைச் செய்கிறான் எதிரி. இருப்பினும் நாம் எச்சரிக்கையாயிருக்க வேண்டும். வரும் மரக்கலங்கள் இரண்டும் நம் மரக்கலத்தைவிட அதிக எடை யுள்ளவை. கடல் புறாவின்மீது அவை மோதினால் கடல் புறாவுக்குத்தான் நஷ்டம்" என்றான் படைத்தலைவன்.

"இத்தனையும் அறிந்தா போருக்கு முனைகிறீர்?" ஆச்சரியம் ததும்பி நின்றது பலவர்மன் கேள்வியில்.

"ஆம். இருப்பினும் நமக்கு ஓர் அனுகூலமும் இருக்கிறது இதில்."

"என்ன அனுகூலமோ?"

"எதிரி ஆத்திரக்காரனாயிருக்கிறான் என்று முன்னமே சொல்லவில்லையா நான்?"

"சொன்னீர்கள்."

"ஆத்திரக்காரனுக்குப் புத்தி மட்டு என்று தமிழ்ப் பழமொழியொன்று இருக்கிறது."

"பழமொழிகளைக் கொண்டு போரில் வெற்றிகொள்ள முடியுமா?"

"ஏன் முடியாது? பழமொழிகள் மக்களின் ஆழ்ந்த அனுபவத்திலிருந்து ஏற்படுகின்றன. அனுபவம் மனிதனுக்குச் சிறந்த வழிகாட்டி. ஆகவே பழமொழிகளைவிடச் சிறந்த சாதனம் மனிதனுக்கு ஏது?"

இளையபல்லவன் பேச்சு தர்க்க ரீதிப்படி சரியா யிருந்தாலும் அதில் சாரமில்லையென்றே நினைத்தான் பலவர்மன். அதற்குமேல் அவனிடம் பேச இஷ்டப்படாத இளையபல்லவன், "பலவர்மரே! நீண்ட தர்க்கத்துக்கு இப்பொழுது அவகாசமில்லை. நீங்கள் அக்ரமந்திரத்துக்குச் சென்றால் அங்கிருந்தே சாளரத்தின் வழியாகப் போரை நன்றாகப் பார்க்க முடியும். சீக்கிரம் போய்விடுங்கள்" என்று கூறிவிட்டு, "தேவரே! வாரும்," என்று கண்டியத்தேவனை அழைத்துக்கொண்டு கடல் புறாவின் பின்புறம் நோக்கிச் சென்றான்.

முன்புறமும் பின்புறமும் பக்கவாட்டிலும் பலபடி எழுந்து அல்லாடிக் கொண்டிருந்த கடல் புறாவின் தளத்தில் சிறிது கூட ஆடாமலும் அசையாமலும் சர்வ சாதாரணமாகத் தரையில் நடப்பதுபோல் ஒரே சீராக நடந்துசென்ற அந்த இருவரையும் கண்ட பலவர்மன் மிகுந்த ஆச்சரியமடைந்தான். தனக்குப் பரிச்சயமில்லாத சூழ்நிலையில் சிக்கிக் கொண்டதால் சிறிது பயமடைந்தாலும் உண்மையில் கோழை யில்லாத பலவர்மன் கடல் புறாவின் ப்க்கமரப் பலகையைப் பலமாகப் பிடித்துக்கொண்டும் சில நாழிகைகளுக்கொரு முறை வாரியடித்த நீரை லட்சியம் செய்யாமலும் அடுத்து

நடப்பதைக் கவனித்துக் கொண்டிருந்தான். நடுப்பாய் தவிர மற்றப் பாய்கள் அவிழ்க்கப்பட்டதால் எந்தத் தடங்கலுமின்றி நாற்புறமும் பார்க்கும் வசதி பெற்ற பலவர்மன் எதிரிக் கப்பல் களிலிருந்து எரியம்புகள் நான்கு நான்காக அடிக்கடி பறந்து வந்தாலும் கடல் புறாவைத் தொடச் சக்தியற்றுக் கடல் நீரில் விழுந்து கொண்டிருந்ததையும் கடல் புறாவின் பின்புறம் சென்ற இளையபல்லவன் ஏதோ கண்டியத்தேவனிடம் சொல்ல, சேந்தனுக்குப் பதில் கண்டியத்தேவன் சுக்கானைப் பிடித்துக் கொண்டதையும் பார்த்த பலவர்மன் அடுத்த சில நாழிகைகளில் போர் துவங்கிவிடும் என்ற முடிவுக்கு வந்தான்.

அவன் நினைத்தபடி போர் துவங்கவில்லை. கண்டியத் தேவன் சுக்கானைப் பிடித்துத் திடீரென்று திருப்பவே, கடல் புறா ஒரு முறை பலமாகச் சுழன்றது. அப்படிச் சுழன்ற படியால் அதுவரை வடமேற்கே நோக்கி ஓடிய கடல் புறா கிழக்கு நோக்கிக் குறுக்கில் திரும்பியது. இப்படித் திரும்பியதால் கடல்புறாவின் ஒருபக்கம் பூராவும் வேகமாக வந்த எதிரிக் கப்பல்களை நோக்கிவிட்டதைப் பார்த்த பலவர்மன் அதனால் எதிரிக்குப் பெரும் அனுகூலமே என்று நினைத்தான். ஆனால் அந்த அனுகூலத்தை எதிரி பயன் படுத்திக் கொள்ளவில்லை. திடீரென எதிரிக் கப்பல்களின் வேகமும் குறைந்ததைத் தூரத்தே தெரிந்த அவற்றின் விளக்குகள் மெள்ள நகர முற்பட்டதிலிருந்து பலவர்மன் ஊகித்துக் கொண்டான். இளையபல்லவன் ஏற்பாட்டால் எதிரி ஏதோ எச்சரிக்கையடைந்து விட்டானென்பது பலவர்ம னுக்குப் புரிந்துவிட்டதானாலும் அது என்ன ஏற்பாடு, என்ன எச்சரிக்கை என்ற விவரங்கள் ஆரம்பத்தில் புரியவில்லை அக்ஷயமுனையின் பழைய தலைவனுக்கு. போகப் போக அதுவும் புரிந்தது.

எரியம்புகளை வீசுவதையும் எதிரி மரக்கலங்கள் நிறுத்தி விட்டன. பேயாட்டம் ஆடிக்கொண்டிருந்த கடலில் எதிரி மரக்கலங்கள் ஆடியும் எழுந்தும் தாழ்ந்தும் மெல்ல மெல்லக் கடல்புறாவை நோக்கி வந்தன. அருகே வரவர அவற்றின்

விளக்குகளும் பந்தங்களும் நன்றாகப் பளிச்சிட்டதால் அந்த மரக்கலத்தின் பரிமாணங்களும் கண்ணுக்குத் தெரிந்தன. மையிருட்டைக் கிழித்த அந்தப் பந்த ஒளிகள் கடல்நீரிலும் விழுந்ததால் கடலின் பயங்கரத்தில் சிறிது வசீகரமும் உண்டாயிற்று.

இரண்டு மரக்கலங்களின் அமைப்பைக் கண்டதும் அவை கலிங்கத்தின் மரக்கலங்களாக இருக்க வேண்டும் என்று நிர்ணயித்தான் பலவர்மன். கடல்புறாவின் எடையை விட இரண்டு பங்கு எடையுடனும், சர்ப்ப முகங்களுடனும் இரண்டு பெரும் கடற்பாம்புகளைப்போல் சீறிவந்தன அந்த மரக்கலங்களிரண்டும். அலைகளின் ஆட்டத்தில் அவை திரும்பித் திரும்பி நெளிந்தது, கடல் நாகங்களே மேலெழுந்து நெளிவதை ஒத்திருந்தது பலவர்மன் கண்களுக்கு. அவற்றை இந்தக் கடல்புறா எப்படிச் சமாளிக்க முடியும் என்ற சந்தேகமும் ஏற்பட்டதால் பலவர்மன் இளையபல்லவன் இருந்த இடத்தை நோக்கினான். இளையபல்லவன் சுக்கானைப் பிடித்திருந்த கண்டியத்தேவனுக்கருகில் கடல் புறாவின் பின்னிறகில் சாய்ந்து கொண்டிருந்தான். அவன் முகத்தைப் பலவர்மன் கவனிக்க முடியவில்லையாகையால் அவன் ஆராய்ச்சியை அறிந்துகொள்ளும் வாய்ப்பும் பலவர்மனுக்கு இல்லை.

கடல் புறாவை நோக்கி மெதுவாக ஆனால் திடமாக வந்துகொண்டிருந்த இரு கப்பல்களையும் நோக்கிய இளைய பல்லவன், "தேவரே! மரக்கலங்கள் இரண்டும் தீர்க்கா வகையைச் சேர்ந்தவை" என்றான்.

"தீர்க்காவில் எந்த உட்பிரிவைச் சேர்ந்தது?" என்று வினவினான் கண்டியத்தேவன்.

"தாரணி உட்பிரிவு."

"இரண்டும் தாரணிகளா?"

"ஆம்."

"அப்படியானால் அவற்றின் போர்க் கருவிகளெல்லாம் முன்புறத்தில்தானிருக்கும். இந்த வகை மரக்கலங்களைக்

கலிங்கத்தின் சுங்க அதிகாரியாயிருக்கையில் பார்த்திருக் கிறேன்."

"அவை போர் தொடுப்பதானால் முகத்தின் புறமாகத் தான் தொடுக்க வேண்டும்."

"வேறு வழியில்லை."

"இரண்டுக்கும் சர்ப்ப முகம் இருக்கிறது."

"அநேகமாக சர்ப்பத்தின் படத்தில்தானிருக்கும், அம்பு களையும் வேல்களையும் வீசும் யந்திரங்கள்."

இதற்குப் பிறகு இளையபல்லவன் சில விநாடிகள் யோசித்தான். பிறகு சொன்னான்: "நல்லது தேவரே! கடல் புறாவின் பக்க இறக்கையையே சர்ப்பமுகங்கள் பார்க்கட்டும். சுக்கானை லேசாகத் திருப்புங்கள்," என்று.

கண்டியத்தேவன் சுக்கானைத் திருப்பிக் கடல்புறாவின் இறகை எதிரி நன்றாகப் பார்க்கும்படி செய்தான். இதற் கிடையே கடல்புறாவின் தளத்தில் முன்னும்பின்னும் நடந்த இளையபல்லவன் தனது உபதலைவர்களை நோக்கி, "எதிரி மரக்கலங்கள் இரண்டும் நன்றாக அருகில் வரும்வரை நமது அம்புகளை வீச வேண்டாம். அருகில் நன்றாக வந்ததும் அவற்றின் பாய்ச் சீலைகளைக்கூடத் தொடவேண்டாம். மரக் கலங்களின் முகப்பை நோக்கி வேல்களை மட்டும் வீசுங்கள். முகப்பு உடைந்ததும் பிறகு நடக்கட்டும் வாண வேடிக்கை. பிறகு பற்றட்டும் அவற்றின் பாய்ச்சீலைகள்," என்று உத்தர விட்டான். அவன் உத்தரவை நிறைவேற்ற அரை நிர்வாண மாலுமிகள் விரைந்தார்கள். சிலர் தமிழ்நாட்டு வழக்கப்படி இடையில் துணியுடுத்தி முழந்தாள் வரை தெரியும்படி கச்சமாக இழுத்துக் கட்டியிருந்தார்கள். மற்றும் சிலர் சீனத்துச் சராயணிந்திருந்தார்கள். யாருக்கும் மேலே எதுவுமில்லா விட்டாலும் காதிலணிந்திருந்த குண்டலங்களும், வளையங் களும், கழுத்தில் இருந்த சங்கு மாலைகளும் அவர்களை விநோத மனிதர்களாக அடித்திருந்தன. உடல் நனைந்து அவர்கள் அலட்சியத்துடன் கடல்புறாவின் போர்க் கருவி களை இயக்கியது தூரத்தே நின்ற பலவர்மன் கண்களுக்குப் பெரும் விருந்தாயிருந்தது.

எதிரி மரக்கலங்கள் வெகு சீக்கிரம் கடல் புறாவை அணுகியும் கடல்புறா மட்டும் அவற்றை அணுகவிடாமல் திடீரென முன்னும் பின்னும் திரும்பி அந்த மரக்கலங்களுக்குப் பாய்ச்சல் காட்டியதால் எதிரிகள் வீசிய வேல்களும் அம்புகளும் கண்ட இடத்தில் கடல்புறாவின் தளத்தில் விழுந்தனவேயொழிய அதற்கு எந்தச் சேதத்தையும் விளைவிக்கச் சக்தியற்றவையாயின. இத்தனைக்கும் கடல்புறா ஒரு வாளியைக்கூட ஏதிரிமீது வீசாமல், எதிரிகள் மரக்கலங்களை மேலும் மேலும் நெருங்க அனுமதித்துக் கொண்டிருந்தது. இளையபல்லவன் ஏன் இன்னும் போர் துவங்காமல் தாமதப்படுத்துகிறான் என்று யோசித்து விடை காணாமல் குழம்பினான் பலவர்மன். அந்தக் குழப்பம் எதிரி மரக்கலங்களுக்கும் இருந்திருக்க வேண்டும். அணுகி வந்த மரக்கலங்கள் சற்று தாமதித்தன. அந்த மரக்கலங்களில் ஒன்றில் மாலுமிகள் பலர் கூடி ஏதோ பேசியது பலவர்மன் கண்களுக்கு அந்த மரக்கலங்களில் எரிந்த பந்தங்களின் வெளிச்சத்தில் தெரிந்தது. அந்த மாலுமிக் கூட்டத்தை உயரமான ஒருவன் அணுகி ஏதோ கூறினான். அடுத்த விநாடியில் இரண்டு பந்தங்கள் எழுந்து பக்கத்து மரக்கலத்துக்கு ஏதோ சைகை செய்தன. அந்தச் சைகைக்குப் பிறகு அந்த மரக்கலங்கள் இரண்டும் சற்றே திரும்ப முற்பட்டன. அந்தச் சமயத்தில் எழுந்தது இளையபல்லவன் கூச்சல், "உம்! உடையுங்கள் முகப்புக்களை," என்று.

திடீரெனக் கடல்புறாவின் தளம் உயிர்பெற்றுத் துடிப்புற்றது. அதன் பக்கப் பகுதிகளின் சுழல் யந்திரங்களில் பொருத்தப்பட்டிருந்த வேல்கள் விர்விர்ரென்று நூற்றுக் கணக்கில் கிளம்பி எதிரி மரக்கலங்களின் முகப்பில் பாய்ந்தன. சர்ப்பங்களின் தலைகள் இரண்டும் இரண்டே விநாடிகளில் சுக்கு நூறாகப் பிளந்தன. அதே சமயத்தில் தளத்தின் மற்றொரு புறத்திலிருந்து எழுந்த சீனத்து வாணங்கள் விர்ரென்று எதிரி மரக்கலங்கள்மீது பாய்ந்து அங்கிருந்த பாய்களைப் பற்ற வைத்தன.

கண்மூடிக் கண் திறப்பதற்குள் ஏற்பட்ட தாக்குதலால் எதிரி மரக்கலங்களில் ஜ்வாலை அதிகமாகி, கடல் பிராந்தியத்தின் மையிருட்டைக் கலைத்தன. "விசிறுங்கள் வளையங்களை," என்ற இளையபல்லவன் குரல் கடலலைகளின் ஓசையையும் கிழித்துக்கொண்டு பயங்கரமாக ஒலித்தது. அதைத் தொடர்ந்து உருளைகள் சுழலும் சத்தம் கேட்டது. கடல்புறா தனது இறகில் ஒன்றைப் பெரிதாக விரித்தது. அதில் தாவிய மாலுமிகள் பெரும் கயிறுகளை எதிரி மரக்கலங்களை நோக்கி வீசினார்கள். கண்டியத்தேவன் சுக்கான் வித்தையால் எதிரி மரக்கலமொன்றைக் கடல்புறா அணுகிவிட்டதால் மாலுமிகள் வீசிய கயிறுகளின் முகப்பிலிருந்த வளையங்கள் எதிரி மரக்கலத்தின் பக்கப் பலகைகளிலும் பாய்மரத் தூண்களிலும் கௌவி மரக்கலத்தைக் கடல்புறாவுக்காக இழுத்தன.

திடீரென எதிரி மரக்கலத்தில் பெரும் கூச்சலும் குழப்பமும் கேட்டது. கடல்புறா வெகு வேகத்துடன் அதை மோதவே, அந்த மோதலில் திணறியது அந்தத் தாரணி. கடல்புறாவின் இறக்கையில் தயாராக நின்ற மாலுமிகள் வாட்களைப் பல்லில் கடித்துக்கொண்டு எதிரி மரக்கலத்தின் மீது தாவி விட்டார்கள்.

அடுத்த இரண்டு நாழிகைகளுக்குள் அந்தப் பயங்கரக் கடற்போர் முடிந்தது. கடல்புறாவின் முதல்போர் அது. ஆனால் அந்தப் பயங்கரப் போரின் விசித்திரத்தை அதன் தலைவனின் திறமையைக் கண்டு மலைத்து வியந்து நின்றான் பலவர்மன். பலவர்மன் வியப்பு அத்துடன் முடியவில்லை. போர் முடிந்த பிறகு அவன் வியப்பு உச்சநிலைக்குச் சென்றது. அந்த வியப்பு நிகழ்ந்தது இளையபல்லவன் அறையில். படுக்கையில் கிடந்து மெள்ள மெள்ளக் கண் விழித்த பலவர்மன் நடுங்கினான், எதிரே நின்ற உருவத்தைக் கண்டு. "யார்! நீயா? எப்படி வந்தாய் இங்கே? உன்னை நான் இங்கு எதிர்பார்க்கவில்லை" என்று தட்டுத் தடுமாறிக் குழறவும் செய்தான் பலவர்மன்.

அத்தியாயம் 4

# புஷ்ப ஒட்டியாணம்

படைத்தலைவன் அறைப் பஞ்சணையில் மல்லாந்து கிடந்து விழித்த பலவர்மன் தன் கண்களுக்கெதிரே வாயிற் படியில் எழுந்த உருவத்தைக் கண்டதும் பெரும் பிரமிப்புக்கும் அச்சத்துக்கும் உள்ளாகி நடுநடுங்கி, "நீயா! நீ எப்படி இங்கு வந்தாய்? உன்னை நான் இங்கு எதிர்பார்க்கவில்லை" என்று குழறியதும், தான் காண்பது கனவாயிருக்குமோ என்றுகூட எண்ணியதால் மீண்டும் கண்களை இறுக மூடிக்கொண்டான். தானிருப்பது கடல்புறாவின் அக்ரமந்திரந்தானா என்ற ஐயமும் அவன் சித்தத்தில் எழுந்து குழப்பவே அவன் சிந்தனையை மறுபடியும் படுத்திருந்த இடத்திலிருந்து கடல் புறாவின் தளத்துக்கே திருப்பினான். எதிரிக் கப்பலொன்றின் மீது கடல்புறா மோதியதும், மோதிய வேகத்தில் எதிரிக் கப்பல் மட்டுமின்றிக் கடல்புறாவும் சிறிது நேரம் தத்தளித்ததும் அந்தத் தத்தளிப்பிலும் இளையபல்லவன் ஏதேதோ பலதரப்பட்ட உத்தரவுகளைப் பிறப்பித்து மாலுமிகளைக் கொண்டு கடல் புறாவைத் திடப்படுத்தியதன்றி, எதிரிக் கப்பல்மீதும் மாலுமி களைத் தாவ விட்டதும் நன்றாக நினைவிருந்தது பலவர்ம னுக்கு. எதிரிக் கப்பல் ஒன்றுடன் இரும்புக் கொக்கிகளை வீசிக் கடல் புறாவை இளையபல்லவன் இணைத்ததாலும் கடல் புறாவின் தளத்திலேயே இருத்தப்பட்ட இருபது மாலுமிகள் அவன் உத்தரவுப்படி அதன் யந்திர விற்களையும் வேல்களையும் எரிபந்தங்களையும் மற்றொரு மரக்கலத்தின் மீதும் பிரயோகித்ததால் அதிலும் பெரும் சேதம் ஏற்பட்டதை யும் பலவர்மன் மீண்டும் மனக்கண்ணில் பார்த்தான். மையிருட்டு மண்டி நின்ற வேளையில் ஒரு கப்பலை இணைத்து மாலுமிகளைக் கைகலக்க விட்டும் மற்றொரு கப்பலை யந்திர வசதியால் தாக்கியும், ஏககாலத்தில் இரு

மரக்கலங்களையும் சமாளித்த இளையபல்லவனை நினைத்து அந்தச் சமயத்திலும் வியப்பின் எல்லையை எய்தினான் பலவர்மன். போரை முக்கால்வாசி பார்த்தும் முழுமையும் தான் பார்க்கவில்லையென்பதும் அவன் புத்திக்குத் திட்ட வட்டமாகத் தெரிந்தது.

கடல் புறாவின் தாக்குதலால் எதிரி மரக்கலமொன்றில் மாலுமிகள் போட்ட வீரக் கூச்சலும், மடிந்து கொண்டிருந்த வர் மரண ஒலிகளும், பந்தங்களிலிருந்து தீப்பிடித்த பாய்களின் பெரும் ஜ்வாலையும் கலந்த காட்சி பலவர்மன் மனக்கண் முன்பாக நன்றாக எழுந்தது. இரண்டாவது மரக்கலத்திலும் வேல்களாலும் அம்புகளாலும் தீப்பந்தங்களாலும் சேதம் ஏற்பட்டதும் தெரிந்தது பலவர்மனுக்கு. எதிரி மரக்கலங் களிலிருந்து வீசப்பட்ட பந்தங்களும் வேல்களும் எரியம்பு களும் கடல் புறாவின் நடுச் சீலையையும் பக்கப் பலகை களையும் சிறிதளவு பாதித்தாலும் சேதம் அதிகப்படுவதை மாலுமிகள் சமாளித்துவிட்டதையும், புறாவின் நடுப்பாயில் சிறிது தீ மூண்டதுமே பாய் சரேலென இறக்கப்பட்டுத் தீ அணைக்கப்பட்டதும் நினைப்பிருந்தது அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவனுக்கு. கொந்தளிக்கும் கடலில் நடந்த அந்தப் போரின் விவரங்கள் அத்தனையும் நினைவிருந்தாலும் முடிவு நினைவிலில்லை அவனுக்கு. போர் முடிவதற்கான அறிகுறிகள் ஏற்பட்ட சமயத்தில் திடீரென ஏதோ ஒன்றினால் தான் தாக்கப்பட்டதும் அதன் பிறகு தனக்கு ஸ்மரணை தப்பி விட்டதும் மாத்திரம் புரிந்தது பலவர்மனுக்கு. பிறகு என்ன நடந்தது என்பது ஏதும் புரியாததாலும், கண்விழித்த சமயத்தில் எதிரே நின்ற உருவத்தை நிச்சயமாக நம்ப முடியாத தாலும் திகிலடைந்த பலவர்மன், அந்தத் திகிலிலிருந்து மீளாமலே மீண்டும் கண்களை அகல விரித்து நாற்புறமும் நோக்கினான்.

படுத்திருந்த அறை இளையபல்லவன் அறைதான், அதில் சந்தேகமில்லை அவனுக்கு. இருந்ததும் கடல்புறாதான், அதிலும் சந்தேகமில்லை. ஆனால் எதிரே வாயிற்படியில்

நின்றது பேயா பிசாசா, உண்மையாக அவன்தானா? அதைத் தீர்மானிக்க எழுந்திருக்க முயன்றான் பலவர்மன். எழுந்திருக்க அடியோடு முடியவில்லை அவனால். தலை பெரிதும் கனத்தது. தலையில் கையை வைக்க முயன்றான். "தலையைத் தொடாதே. காயம் இன்னும் குணப்படவில்லை," என்று எச்சரிக்கைக் குரலைக் கிளப்பியது வாயிற்படியில் நின்ற உருவம். அதுமட்டுமல்ல, பலவர்மன் படுத்துக் கிடந்த பஞ்சணையை நோக்கி நகரவும் முற்பட்டது.

"வராதே! அருகில் வராதே!" என்று கிலி பிடித்துக் கூவினான் பலவர்மன்.

"பயப்படாதே! உனக்கு எந்தத் தீங்கும் செய்யும் உத்தேசம் எனக்கில்லை," என்று கூறிக்கொண்டே அந்த உருவம் அவன் பஞ்சணைக்கருகில் வந்து பஞ்சணை முகப்பில் உட்கார்ந்து பலவர்மன் கையையும் ஆதரவுடன் பிடித்தது.

சொப்பனத்தைத் தவிர வேறெதிலும் அந்த விசித்திரம் நடக்க முடியாதென்பதைத் திட்டமாகப் புரிந்துகொண்ட பலவர்மன், "இதில் ஏதோ மர்மமிருக்கிறது. நீ என்னிடம் ஆதரவோ அன்போ எப்படிக் காட்ட முடியும்?" என்று கூறிப் பஞ்சணையின் மற்றொரு ஓரத்துக்கு நகர்ந்தான்.

கருணை நிரம்பிய கண்கள் அவனை உற்று நோக்கின. "பலவர்மா! தீங்கிற்குப் பதில் தீங்கை விளைவிப்பது பண்பாடு ஆகாது. புத்தர்பிரான் விதித்த கட்டளையும் அது அல்ல," என்றது அந்த உருவம்.

"நான் உனக்கு... உனக்கு" என்று குழறினான் பலவர்மன்.

"விளைவித்ததெல்லாம் தீங்குதான்," என்று முடித்தது அந்த உருவம்.

"நீ நாடிழக்க..."

"ஜெயவர்மனுக்கு உதவினாய்."

"கடாரத்திலும்..."

"நான் வாழ முடியாத நிலையை ஏற்படுத்தினாய்."

"அதுமட்டுமல்ல..."

"சோழ நாட்டிலும் என்னை அழித்துவிடத் திட்ட மிட்டாய். ஜெயவர்மனைத் தூண்டி நீ எழுதச் செய்த ஓலையை நானே பார்த்தேன்."

"பார்த்தாயா?"

"பார்த்தேன்."

"யார் காட்டியது?"

"இளையபல்லவர்."

"எங்கு?"

"பாலூர்ப் பெருந்துறையில். அந்த ஓலையின் விளைவாகத் தான் இளையபல்லவர் பாலூர்ப் பெருந்துறைக்கே வந்தார். என்னை அழிக்க நீ அனுப்பச் செய்த ஓலை சோழ மன்ன னிடம் கிடைத்தது. என்னையும் என் மகளையும் காப்பாற்றி அழைத்து வரும்படி சோழ மன்னர் இளையபல்லவரை அனுப்பியிருந்தார்?" என்ற குணவர்மன் பெருமூச்செறிந்தான். மேலும் சொன்னான், "அதுமட்டுமல்ல, அவர் உதவியாலும் சோழ இளவல் அநபாயர் உதவியாலும் நாங்கள் தப்பினோம். ஆனால் இளையபல்லவரை இழந்தோம். பாலூர்ப் பெருந் துறைக் கடற்கரையில் அவரைப் பிரிந்தோம். அவர் இறந்து விட்டதாகக்கூட நினைத்தோம். எங்கள் துரதிர்ஷ்டம் அவரை அழித்துவிட்டதாக நினைத்தோம். அவர் அழியவில்லை. எங்களை மீண்டும் காப்பாற்ற போதி சத்துவர் அவரை உயிருடன் காப்பாற்றி வைத்திருக்கிறார். புத்தர்பிரான் கருணை தீட்சண்யத்தில் அகப்பட்டுக்கொண்டவர்கள் அழிவ தில்லையென்பதை இன்றுதான் புரிந்துகொண்டேன்," என்று.

பலவர்மனுக்கு என்ன பதில் சொல்வதென்று புரிய வில்லை. இருப்பினும், குணவர்மன் பூராக் கதையையும் இளையபல்லவனிடம் சொன்னால் இளையபல்லவன் தன்னை நடுப் பாய்மரத் தண்டில் கழுத்தில் கயிறு கட்டித் தூக்கிலிட்டு விடுவாரென்பதைச் சந்தேகமற உணர்ந்திருந் ததால், "அண்ணா!" என்று குரல் குழைய அழைத்தான் குணவர்மனை.

"ஏன் தம்பி?" கருணையே ததும்பி நின்றது குணவர்மனின் குரல்.

"நான் பிழைத்தால் என் தவறுகளுக்குப் பரிகாரம் செய்ய முடியும்" என்று கூறிக் கெஞ்சும் கண்களைக் குணவர்மன் மீது ஓடவிட்டான் பலவர்மன்.

"பரிகாரத்தைப் பற்றி நான் கவலைப்படவில்லை தம்பி! நீ பிழைப்பதுதான் முக்கியம். நீ எனக்கு ஒன்றுவிட்ட சகோதர னானாலும் உன் ரத்தம் ஓரளவு என் உடலிலும் ஓடுகிறது. உனக்கு எந்தவித ஆபத்தும் நேரிடாமல் காப்பது என் கடமை," என்றான் குணவர்மன்.

வாழ்க்கையில் யாருக்கும் கருணை காட்டாத வஞ்சக னான பலவர்மனுக்குக் குணவர்மன் பேச்சு விசித்திரமா யிருந்தது. தனக்கு ஆரம்ப முதல் தீங்கு விளைவித்திருப்பவனை எந்த மனிதன் மன்னிக்க முடியும் என்று உள்ளூர நினைத்த பலவர்மன் வாய்விட்டும் கேட்டான், "உண்மையாகத்தான் சொல்லுகிறாயா அண்ணா?" என்று.

"ஆம், திரிகரண சுத்தியாகச் சொல்லுகிறேன்," என்றான் குணவர்மன்.

"என்னிடம் உனக்கு வெறுப்பே இல்லையா?" சந்தேகத்துடன் கேட்டான் பலவர்மன்.

"அடியோடு இல்லை."

"அதெப்படி முடியும்?"

"உனக்கு அதன் தத்துவம் புரியாது."

"என்ன தத்துவம்?"

"நாம் விதைப்பதற்குத் தக்க அறுவடை கிடைக்கிறது. தீமை விதைத்தால் தீமை கிடைக்கிறது. நன்மை விதைத்தால் நன்மை கிடைக்கிறது."

"என்ன நன்மையைக் கண்டுவிட்டாய் நீ? நீ உட்கார வேண்டிய அரியணை உன்னிடமில்லை. ஜெயவர்மனிட மிருக்கிறது. கடாரம் உன் வசமிருந்தும் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத் தைக் கைக்கொள்ள அது உனக்கு உதவவில்லை. நீ பரதேசி

யாக இன்னொரு நாட்டை நாடிச் சென்றாய் உதவிக்கு. அங்கும் அல்லல் பட்டாய். இன்று நாம் சந்தித்திருக்கிறோம். இன்றும் உன் நிலை பழைய நிலைதானே?"

குணவர்மன் முகத்தில் சிந்தனையின் சாயை சில விநாடிகள் தோன்றியது. பிறகு அவன் இதழ்களில் புன்முறுவல் படர்ந்தது. கடைசியாகப் பேசிய அவன் குரலில் உறுதி பூரணமாக இருந்தது. "வாழ்க்கையைப் பார்க்கும் முறை அதல்ல பலவர்மா! அரியணையை நான் இழந்தது உண்மை தான். ஆனால் உன்னிடமிருந்தும் ஜெயவர்மனிடமிருந்தும் நான் தப்பிப் பிழைத்திருப்பதை நினைத்துப் பார். நான் பரதேசம் போனது உண்மை. அங்கு நானும் காஞ்சனாவும் சிக்கல்களில் அகப்பட்டுக் கொண்டோம். இருப்பினும் தப்பி, கலிங்கத்திலிருந்து சோழநாடு சென்றோம். சோழ மன்னர் உதவியளிக்க வாக்களித்தார். ஆனால் அந்த வாக்கைப் பெற மாதங்கள் பத்து ஆயின. வாக்கைப் பெற்று நாடு திரும்பினேன் சோழர் மரக்கலத்தில். அதை கலிங்கத்தின் கப்பல்கள் வழி மறித்து அழித்தன. நானும் மகளும் சிறைப்பட்டோம். இருப்பினும் எங்கிருந்தோ இளையபல்லவர் குறுக்கே புகுந்தார். சிறை மீட்கப்பட்டோம். கலிங்கத்தின் கப்பல்கள் இரண்டும் தோல்வியுற்றன. நானும் மகளும் பழையபடி தானிருக்கிறோம். இதோ மீண்டும் சௌகரியம்தான் எங்களுக்கு. ஆபத்துகள் பல வந்தன பலவர்மா! ஆனால் அந்த ஆபத்தின் அலைகள் எங்களை அமிழ்த்தவில்லை. அவற்றைத் தாண்டித் தாண்டி வந்திருக்கிறோம் நாங்கள். ஆகையால் நன்மை இறுதியில் நன்மையைத்தான் தந்திருக் கிறது. இல்லாவிட்டால்..." என்று குணவர்மன் பேச்சை சிறிது நிறுத்தினான்.

"இல்லாவிட்டால்?" ஆர்வத்துடன் எழுந்தது பலவர்மன் கேள்வி.

"இல்லாவிட்டால் கடல் புறாவை ஏன் நாங்களிருந்த கலிங்கத்தின் மரக்கலங்கள் துரத்த வேண்டும்? துரத்தி ஏன் இளையபல்லவர் வசம் சிக்கவேண்டும்? தம்பி! விதியைப்

பற்றி நாம் நினைப்பது தவறு. போதி சத்துவர் வழிவந்தவர்கள் கர்ம பலன்களையும் விதியையும் ஒப்புக்கொள்வது தவறு. இருப்பினும் அதை ஒப்புக்கொள்ளவே என் மனம் தூண்டு கிறது. எங்கள் வாழ்க்கையையும் இளையபல்லவர் வாழ்க்கை யையும் ஏதோ ஒரு பெரும் சக்தி இணைக்கிறது. அடிக்கடி அவரை அனுப்பி எங்களை மீட்கிறது," என்ற குணவர்மன் முகத்தில் கனவுச் சாயை பலமாகப் படர்ந்தது.

அந்தக் கனவுச் சாயையை, அதில் துளிர்விட்ட நம்பிக்கையை பலவர்மன் கவனித்தான். பிறகு கேட்டான்: "கலிங்கத்தின் மரக்கலங்களுக்குப் பெரும் சேதமா?" என்று.

குணவர்மன் பதில் பெரும் வியப்பை விளைவித்தது பலவர்மனுக்கு. "இல்லை. அதிகச் சேதமில்லை," என்றான் குணவர்மன்.

"என்ன சேதமில்லையா?" பலவர்மன் கேள்வியில் ஆச்சரியம் பலமாகத் தொனித்தது.

அந்த ஆச்சரியத்தைக் குணவர்மனும் கவனித்தான். "எனக்கும் ஆச்சரியமாகத்தானிருக்கிறது தம்பி! எப்படி அதிகச் சேதமில்லாமல் ஒரு மரக்கலம் இரண்டு பெரும் மரக்கலங் களைப் பிடிக்க முடியுமென்று எனக்கே புரியவில்லை. இளைய பல்லவர் தரையில் படைகளை நடத்துவதில் வல்லவர் என்பது தெரியும் எனக்கு. கடற்படைப் போரில் இத்தனை வல்லவர் என்பது இரண்டு நாட்களுக்கு முன்னதாகத்தான் அறிந்தேன்" என்றான்.

பலவர்மன் அதிர்ச்சியுடன் எழுந்திருக்க முயன்று படுக்கையில் தொப்பென்று விழுந்தான். "இரண்டு நாட்களுக்கு முன்பா?" என்றும் கூவினான்.

"ஆம். போர் நடந்து இரண்டு நாட்களாகின்றன! இன்னும் ஒருநாள் பொறு," என்றான் குணவர்மன்.

"பொறுத்தால்?"

"கடல் மோகினியை அடைந்துவிடலாம்."

பலவர்மன் முகத்தில் பெரும் பீதி படர்ந்தது. "அண்ணா! கூப்பிடுங்கள் இளையபல்லவரை முதலில்," என்றான் பீதி குரலிலும் சுடர்விட.

"எதற்கு?"

"கப்பல் திசையைத் திருப்ப."

"ஏன்?"

"கடல் மோகினியை அடைந்தால் ஒழிந்தது இந்த மரக்கலம். இளையபல்லவன், நீ, நான், அனைவரும் அழிவோம்" என்று பலவர்மன் கூறினான்.

திடீரென இளையபல்லவன் மரக்கலத் தாரைகள் சப்தித்தன. "கெட்டது குடி. நாம் ஒழிந்தோம், ஒழிந்தோம்," என்று கூவிய பலவர்மன் பஞ்சணையில் புரண்டு நினை விழந்தான். கடல்புறா அது அறியாத பெரும் ஆபத்தை நோக்கி ஓடிக்கொண்டிருந்தது.

ஆபத்து பார்வைக்கு அழகாயிருந்தது. புஷ்பங்கள் பூத்துக் குலுங்கின. மோகினியின் அந்தப் புஷ்ப ஒட்டியாணம் ரமணீயமாயிருந்தது. ஆனால் அதில்தான் எத்தனை கொட்டும் தேனீக்கள்! உள்ள ஆபத்தை உணராமல் ஊர்ந்தது கடல்புறா. அதில் ஊர்ந்த வெண்புறாவொன்றும் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்து கிடந்தது. மெள்ள மெள்ள அழகு நெருங்கியது; ஆபத்தும் நெருங்கியது.

அத்தியாயம் 5

# வெண்புறா

கடல் புறாவின் முதல் போரை முழுதும் காணாமல் மண்டையில் அடிபட்டு நினைவிழந்து இரண்டு நாட்கள் இளையபல்லவனின் அறைப் பஞ்சணையில் கிடந்த பலவர்மன், கடல் மோகினியை அடைவதிலிருந்த ஆபத்தை எடுத்துக் குணவர்மனுக்குச் சொல்லிப் புலம்பிய அதே சமயத்தில் கடல் புறாவின் தளத்தின் ஒரு மூலையில் கடல் புறாவின் எழிலைவிட ஆயிரம் மடங்கு அதிக எழிலுடன் விளங்கிய வெண்புறாவொன்று மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்து கிடந்ததென்றால் அதற்குக் காரணங்கள் பல இருந்தன. முதல் காரணம் கடல் புறாவின் பிரமிக்கத்தக்க போர் முறை. இரண்டாவது காரணம் அந்தச் சந்திப்புக்கு உந்திய விதியின் விசித்திர கரம். இப்படியாகப் பல காரணங் களைத் திரும்பத் திரும்ப எண்ணிப் பார்த்ததால் மகிழ்ச்சி உடலையும் உள்ளத்தையும் ஆட்கொள்ள நின்ற அந்த வெண்புறா பக்கத்திலிருந்த வேட்டுவனை மீண்டும் மீண்டும் திரும்பிப் பார்த்தது. அந்தப் பார்வையில் அர்த்தங்கள் பல புதைந்து கிடந்தன. கேள்விகளும் பலப்பட எழுந்து ஒலித்தன. புதைந்து கிடந்த பொருள்களைப் புரிந்து கொண்டான் அந்த வேட்டுவன். கேள்விகளுக்கும் அவனால் பதில் சொல்ல முடியும். ஆனால் புரிந்ததைப் புரிந்ததாகக் காட்டிக்கொள்ள முடியவில்லை அவனால். கேள்விகளுக்கு எழுந்த பதிலை நாவும் சொல்ல மறுத்தது. இப்படியொரு விபரீத நிலை உண்டா என்று எண்ணிய வேட்டுவன் வேறு துறையில் பேச்சைத் திருப்பிக் கேட்டான், “வெண் புறாவுக்குக் கடல் புறாவைப் பிடித்திருக்கிறதா?” என்று.

வெண்புறா தன் அழகிய கண்களைத் திருப்பிச் சிவந்த வாயையும் திறந்து பதில் கூறியது: “வேட்டுவருக்குப் பிடித்த எதுவும் வெண்புறாவுக்கும் பிடிக்கும்.”

வேட்டுவன் நகைத்தான்; "வேட்டுவனுக்குப் பிடிப்பது புறாவுக்கு எப்படிப் பிடிக்கும்? வேட்டுவனே புறாவைப் பிடிப்பவனாயிற்றே!" என்றும் கேட்டான்.

"இந்தப் புறாவை வேட்டுவர் பிடிக்கவில்லையே," என்று கூறி வெண்புறாவும் நகைத்தது பதிலுக்கு.

· "வேறு யார் பிடித்தது வெண்புறாவை?" பொய்க் கோபத்துடன் கேட்டான் வேட்டுவன்.

"விதி பிடித்தது."

"அப்படியானால் வேட்டுவன் எதைப் பிடித்தான்?"

"புறா இருந்த கூண்டைப் பிடித்தார். ஆனால் கூண்டுக்குள் இருந்தது என்னவென்பது அவருக்குத் தெரியாது."

"தெரிந்திருந்தால்?"

"மோசம் நடந்திருக்கும்?"

"என்ன மோசம்?"

"கூண்டைப் பிடித்திருக்க மாட்டார்."

"ஏன்?"

"புறாவுக்கு அபாயம் நேருமோவென்று திகில் அடைந் திருப்பார்."

"புறாவிடம் அத்தனை ஆசையா அவனுக்கு?"

"ஆம்."

"அதை உண்ண ஆசையா?"

"உண்ண ஆசையோ, உள்ளத்தில் எண்ண ஆசையோ?"

"உம். சொல் வெண்புறாவே!"

"ஊஹூம்."

கலகலவென்று நகைத்தது வெண்புறா. கூண்டின் திறந்த வாயிலுக்குள் வலிய நுழையவும் செய்தது. வேட்டுவன் கரங்கள் கூண்டின் கதவுகளெனத் திறந்தன. அதில் நுழைந்த வெண்புறா தன் அழகிய தலையை வேட்டுவன் மார்பின்மீது சாய்த்துக்கொண்டது. வேட்டுவன் அழைத்தான் அதன் காதுக் கருகில் தன் உதடுகளைக் கொண்டுபோய் "வெண்புறாவே!" என்று.

வெண்புறா பதிலிறுக்க மறுத்தது. "வீட்டுப் புறாவே!" என்று அழைத்தான் மீண்டும் வேட்டுவன். அதற்கும் பதிலில்லை. "கடல்புறாவே!" என்றான் வேட்டுவன் மூன்றாம் முறையும். அதற்கும் பதில் கிடைக்காது போகவே, "ஏன் பதிலில்லை, கோபமா?" என்றும் வினவினான்.

"இந்தப் புறாவுக்குச் சொந்தப் பெயரும் இருக்கிறது," என்று வந்தது பதில் சற்றுக் கோபத்துடன்.

"தங்கம்" என்று அடுத்தபடி அழைத்தான் வேட்டுவன் மீண்டும்.

"அதல்ல என் பெயர்." இந்தப் பதிலும் உஷ்ணமாகவே உதிர்ந்தது.

"சொர்ணம்," என்று மெள்ள அழைத்தான் அவன்.

"காஞ்சனா என்ற பெயரும் மறந்துவிட்டதா இளைய பல்லவருக்கு?" அதிக உஷ்ணத்துடன் எழுந்தது கேள்வி.

இளையபல்லவன் காஞ்சனாதேவியை இறுகப் பிடித்துக் கொண்டு பலமாக நகைத்தான். கடல்புறாவின் பக்கத்தே மெல்லவே அறைந்து கொண்டிருந்த அலைகளும் அவனுடன் சேர்ந்து நகைத்தன.

"எதற்காக நகைக்கிறீர்கள்?" என்று கேட்டாள் காஞ்சனா தேவி.

"வீணாகக் கோபம் வருகிறதே உனக்கு என்று நகைத்தேன்," என்று பதில் கூறினான் படைத்தலைவன்.

"வீணாகக் கோபம் வரவில்லையே. ஏதேதோ பெயர் வைத்துக் கூப்பிடுகிறீர்களே என்றுதான் கோபித்தேன்."

"என்ன அப்படிக் கூப்பிட்டு விட்டேன்?"

"பாலூர்ப் பெருந்துறையில் வீட்டுப் புறா என்றீர்கள். காட்டுப் புறா என்றீர்கள். கடல்புறா என்றீர்கள். இப்போது வெண் புறாவாக மாறிவிட்டது—"

"அதில்..."

"பேசாதீர்கள், அதுதான் அப்படி என்றால் இப்பொழுது தங்கம், சொர்ணம் என்று ஏதேதோ புதுப் பெயர்கள்

வைக்கிறீர்கள்-" என்று மேலும் பொரிந்து தள்ளப்போன காஞ்சனாதேவியின் வாயை ஒரு கையால் பொத்திய இளையபல்லவன், "அடடே! நிறுத்தமாட்டேனென்கிறாயே. பெண்களைப் பேசவிட்டால் நிறுத்தமாட்டார்கள். கொஞ்சம் பொறு," என்றான்.

"எதற்குப் பொறுக்க வேண்டும்?" என்று வினவினாள் அவள் வாயை மூடிய அவன் கையைத் தன் கையால் அகற்றி.

"அவசரப்படுவதே பெண்களுக்கு அலுவலாகப் போய் விட்டது," என்றான் இளையபல்லவன்.

"அவசரப்படாவிட்டால் என்ன விளக்கிவிடுவீர்கள்?" என்று காஞ்சனாதேவி அவன் மார்பில் சாய்ந்தபடியே அவன் முகத்தை நோக்கித் தன் கண்களை உயர்த்தினாள்.

இளையபல்லவன் கண்கள் அவள் கண்களுடன் சில விநாடிகள் உறவாடின. அந்த உறவாடலுக்கு, உறவாடலால் உந்தப்பட்ட உணர்ச்சிகளுக்குச் சூழ்நிலையும் பெரிதும் உதவி செய்தது. கடல் புறாவின் முதற்போர் முடிந்து இரண்டு நாட்களாகி மூன்றாம் நாளிரவு முதிர்ந்துவிட்டதால் ஆரம்ப மதியும் மறைந்து இருள் சூழ்ந்து கிடந்த நேரம் அது. எசமான் அகன்றுவிட்ட நேரங்களில் பணியாட்கள் பிரகாசிப்பதைப் போல வெண்மதி மறைந்து விட்டதால் தாரகைகள் பிரமாத மாக ஜொலித்துக்கொண்டிருந்தன. போர் நடந்த அன்று வீசிய பெருங்காற்று மறைந்து மந்தமாருதம்போல மெல்ல வீசிக் கொண்டிருந்தது. ஆகவே கடலலைகளின் ஆர்ப்பாட்டமும் அடங்கிக் கடல்புறா ஒரே சீரான வேகத்துடன் ஓடிக்கொண் டிருந்தது. அதன் பாய்கள் தேவையான அளவுக்குப் புடைத் திருந்ததால் கடல்புறாவின் அழகு இணையற்றதாயிருந்தது. இரவு ஏறிவிட்டதாலும் அவசியம் எதுவுமில்லாததாலும் பந்தங்களில் சிலவும் விளக்குகளில் சிலவுமே தளத்தில் எரிந்து கொண்டிருந்ததால் தளத்தின் சில பாகங்களில் மட்டுமே வெளிச்சம் விழுந்திருந்தது. அப்படி விழுந்திருந்த வெளிச்சப்

பகுதிகளை விலக்கி இருள் சூழ்ந்த இடமாகப் பார்த்து ஒதுங்கி பரஸ்பர அணைப்பில் நின்ற அந்தக் காதலர் இருவரும் தெய்வ வானத்தின் கீழே நின்ற இரு அற்புதக் குழந்தைகளைப் போலக் காட்சியளித்தார்கள். அவர்கள் இணைப்பைப் பார்த்து அவர்களைப் பிரிக்க விரும்பாத கடலின் அடிப்பகுதி 'உச், சர்' என்று புதுவிதமான எச்சரிக்கையைச் சூழ்நிலைக்குச் செய்து கொண்டிருந்தது..

இயற்கையின் இந்த எண்ணத்தை அள்ளும் சூழ்நிலையில் காஞ்சனாவின் அஞ்சன விழிகளைக் கவர்ந்து நின்ற இளையபல்லவனின் காந்தக் கண்கள் நீண்ட நேரம் அவள் உள்ளத்தையே விழிகள் மூலமாகப் பார்த்து விடுவனபோல் அசைவற்று நின்றன. அவை உள்ளத்தை ஊடுருவியும் இருக்க வேண்டும். இல்லாவிட்டால் காஞ்சனாதேவி ஏன் அப்படிச் சங்கடப்பட்டுப் படைத்தலைவன் பிடியில் அசையவேண்டும்! அவள் நாசி ஏன் மெள்ள மலர முற்படும் செண்பக மொட்டுப் போல லேசாக விரிந்து புடைத்துப் பெருமூச்சொன்றை வெளியிடவேண்டும்? அவள் மார்பு ஏன் எழுந்து ஒருமுறை தாழ வேண்டும்? அவள் பொன்னிறக் கன்னம் ஏன் அவன் மார்பில் புரண்டு உராய வேண்டும்?

தனது உள்ளத்தையே அலசிப் பார்க்கும் படைத் தலைவனின் கண்களைப் பார்க்கச் சக்தியற்ற காஞ்சனாதேவி சில விநாடிகளுக்குள்ளாகவே தன் கண்களை அவன் காந்த விழிகளிலிருந்து விடுவித்துக் கொண்டாள். மேலும் தன்னைச் சுற்றி இளையபல்லவன் பின்னிவிட்ட இன்ப வலையிலிருந்து விடுபடவும் முயன்ற அவள் அந்த வலை எத்தனை பலமானது என்பதையும் புரிந்துகொண்டாள். வேடன் விரித்த வலையில் விழுந்துவிட்ட தன்னைப் புறாவென்று அவன் நினைப்பதில் தவறில்லையென்றே நினைத்தாள் அவள். மற்றதும் தவறில்லை என்பதைச் சுட்டிக் காட்ட முயன்ற இளையபல்லவன் மெதுவாகச் சொன்னான்: "காஞ்சனாதேவி! உன்னைப் புறா வாகத்தான் நான் எண்ணுவேன். அதை நீ மாற்ற முடியாது. முதலில் பாலூர்ப் பெருந்துறையில் சாளரத்தின் மூலம்

வந்ததே தூதுப் புறா, அந்தக் காட்டுப் புறாதான் உன் அறை யிலிருந்து என் அறைக்கு உன்னை இழுத்து வந்தது. நினைப் பிருக்கிறதா உனக்கு? அப்பொழுதும் வெண்மையான ஆடை தான் நீ புனைந்திருந்தாய். இதோ இன்று புனைந்திருக்கும் இதே வெண்பட்டுதானென்று நினைக்கிறேன். இந்த வெண்பட்டு அன்றுகூட உன் பொன்னிற மேனிக்கு எத்தனை சோபையை அளித்தது தெரியுமா காஞ்சனா? அன்று அந்தப் புறாவைத் தொடர்ந்து ஓடிவந்ததை இன்றுவரை நான் மறக்க முடியவில்லை."

காஞ்சனாதேவி உணர்ச்சி வசப்பட்டுக் கிடந்ததால் பதிலேதும் சொல்லவில்லை. இளையபல்லவனே மேற் கொண்டு பேச முற்பட்டு, "இன்றிரவு அந்த வெண்பட்டைப் புனைந்து நீ அறையிலிருந்து வெளிப்போந்த போது நான் இருக்குமிடத்தை மறந்தேன், அதோ கூட வரும் இரு மரக் கலங்களை மறந்தேன், கடலைக்கூட மறந்தேன். பாலூர்ப் பெருந்துறையில் அந்த வெளிநாட்டுப் பிரமுகர் வீதி மாளிகை யிலிருப்பதாகவே நினைத்தேன். அதே வெண்புறா என்முன் காட்சி அளித்ததை நினைத்தேன். அந்த வெண்புறாவை எண்ணி, புறாவினால் இணைக்கப்பட்ட நமது இதயங்களை எண்ணித்தான் இந்த மரக்கலத்துக்கும் கடல்புறா எனப் பெயர் சூட்டினேன். ஆகவே வெண்புறாவென்று உன்னை அழைத்ததில் தவறில்லை" என்றான்.

"அப்படியானால் தங்கம், சொர்ணம் என்ற புதுப் பெயர்கள்?" காஞ்சனாதேவி மெல்ல முணுமுணுத்தாள்.

"தங்கம், சொர்ணம், பொன், காஞ்சனம் எல்லாமே ஒரே உலோகத்தின் பெயர்கள்தாம்" என்று இளையபல்லவனும் முணுமுணுத்து அவள் கன்னத்தைத் தடவிக் கொடுத்துப் புன்முறுவலும் கோட்டினான்.

"அப்படியானால் நான் உலோகமா? சடப்பொருளா?"

"என்ன அப்படிக் கேட்டுவிட்டாய். தங்கத்தை நாடித் திரிபவர்கள் எத்தனை பேர்?"

"நீங்கள் அப்படித் தேடவில்லையே. தானாக வந்துதானே காலில் இடறியது. காலிலா? இல்லை இல்லை, கடலில்."

"எப்படியிருந்தாலென்ன? அதிர்ஷ்டக்காரனைச் சீதேவி வலிய வந்து அடைகிறாள்."

காஞ்சனாதேவி சற்று வாய்விட்டு நகைத்தாள். "கெட்டிக்காரத்தனமாகத்தான் பேசுகிறீர்கள்" என்றும் சொன்னாள் நகைப்புக்கிடையே. "ஆனால்..." என்று மேலும் ஏதோ சொல்ல முற்பட்டு நிறுத்தினாள்.

"என்ன ஆனால்?" என்று வினவினான் இளைய பல்லவன்.

"நான் போரில் கிடைத்த அடிமைதானே?"

"இங்குதான் ஆச்சரியம் இருக்கிறது."

"என்ன ஆச்சரியம்?"

"சாதாரணமாக ஒரு மரக்கலம் மற்றொரு மரக்கலத்தை வெற்றி கொள்ளும்போது, பிடிபடும் மரக்கலத்திலிருப்பவர்கள் பிடித்த மரக்கலத்தின் தலைவனிடம் அடிமைப்படுவார்கள். இங்கு விஷயம் நேர் விரோதமாயிருக்கிறது."

இதைக்கேட்ட காஞ்சனாதேவி கலகலவென நகைத்தாள். அவளை இன்னும் இறுக்கிப் பிடித்தான் இளையபல்லவன். அந்த நிலையில் சற்றுத் திடப்பட்டுப் பேசினான் அவன். "காஞ்சனாதேவி! விதி நம்மைத் திடீர் திடீரென எதிர்பாராத இடங்களில் முட்ட வைக்கிறது. முன்பு பாலூர்ப் பெருந்துறை. இப்பொழுது கடல் மோகினிக்கு அருகில். இதிலும் நான் விதியின் கரத்தைக் காண்கிறேன்" என்றான்.

"கடல் மோகினியா?" என்று வினவினாள் காஞ்சனா தேவி.

"ஆம் தேவி! நக்காவரம் தீவுகளைத் தமிழகத்தில் அப்படித்தான் அழைக்கிறோம்."

"ஏன்?"

"அது இராஜேந்திர சோழதேவர் வைத்த பெயர்."

"எதற்காக அப்படிப் பெயர் வைத்தார்?"

"தமிழகத்துக்கும் பொற்கிரிசே எனப்படும் சொர்ண பூமிக்கும் இடையே இருக்கின்றன இந்த நக்காவரம் தீவுகள். இவற்றின் ஓரங்களைப் புஷ்பச்சோலைகள் சூழ்ந்திருக்கின்றன. ஆகவே இந்தத் தீவுகளின் கூட்டத்தை வெற்றி கொண்ட இராஜேந்திர சோழதேவர் இவற்றுக்குத் தென் கடல் மோகினியின் புஷ்ப ஒட்டியாணம் என்று பெயர் வைத்தார்."

"என்ன அழகான பெயர்!" என்றாள் காஞ்சனாதேவி.

இளையபல்லவன் முகத்தில் பெருமையின் சாயை மிகப் பெரிதாகப் படர்ந்தது. "இராஜேந்திர சோழதேவரைப் போன்ற வீரரும் ரஸிகரும் தமிழகத்தில் இருந்ததில்லை காஞ்சனாதேவி. அவர் கங்கை கொண்டதுமே வியந்த பாரதம் அவரைக் கங்கைகொண்ட சோழர் என்று அழைத்தது. அவர் கங்கை யைக் கொண்டதன்றிக் கடாரத்தையும், ஏன் அந்தக் கீழ்த்திசை முழுவதையுமே வெற்றி கொண்டதும் உலகமே வியந்தது. அத்தகைய வீரர் இந்த நக்காவரம் தீவுகளைக் கண்டார். அதன் ஓரங்களில் மண்டிக் கிடந்த புஷ்பச் சோலைகளைக் கண்டார். ரசிகரான அந்தப் பேரரசர் இதற்குத் தென் கடல் மோகினியின் புஷ்ப ஒட்டியாணம் என்று பெயர் இட்டார். காலம் பெயரைத் தேய்த்தது. புஷ்ப ஒட்டியாணம் மறைந்தது. 'தென்' என்ற சொல்லும் மறைந்தது. கடல் மோகினி மாத்திரம் மிஞ்சியது" என்றான் இளையபல்லவன்.

"சரி, இந்த கடல் மோகினிக்கும் நாம் சந்தித்ததற்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டாள் காஞ்சனாதேவி.

"பெரும் சம்பந்தம் இருக்கிறது தேவி! பாலூர்ப் பெருந் துறைக்கு நீங்கள் வந்தது ஸ்ரீவிஜயத்தில் ஜெயவர்மன் ஆதிக்கத்தைக் குலைக்க. அதைப்பற்றி அங்கு பேசினோம். ஆனால் அதன் அலுவல் துவங்கப் போவது கடல் மோகினியில்" என்றான் இளையபல்லவன்.

அவன் கூறுவதை ஆமோதிப்பதுபோல் கடல் புறாவின் தாரைகள் மற்றுமொருமுறை பெரிதாகச் சப்தித்தன. "கடல்

மோகினியை நெருங்குகிறோம் வெண் புறாவே! இனி புஷ்பச் சோலைகளில் வெண்புறா இஷ்டப்படி திரியலாம். ஆனால் பறந்தோடி விட முடியாது. கூட வேடனும் இருப்பான்" என்று கூறினான் இளையபல்லவன், தாரைகளின் அலறலைக் கேட்டதும். இதற்குச் சற்று முன்புதான், "கெட்டது குடி" என்று அக்ரமந்திரத்தின் பஞ்சணையில் நினைவிழந்தான் பலவர்மன்.

அடுத்த இரண்டு நாழிகைக்குள்ளாகவே பலவர்மன் சொன்னது சரியென்பதற்கு அடையாளம் கிடைத்தது. உள்ள ஆபத்தை அறிவிக்க வந்த அமீர் முகத்தில் ஈயாடவில்லை.

அமீரின் முக பாவத்தைக் கண்டு அதிர்ச்சியடைந்த இளையபல்லவன், "என்ன அமீர்" என்று வினவினான் கவலையுடன்.

"நாம் மோசம் போய்விட்டோம்" என்றான் அமீர்.

"என்ன மோசம் போய்விட்டோம்" என்று கேட்டான் இளையபல்லவன்.

"இப்படி வாருங்கள்" என்று இளையபல்லவனைத் தனியாக அழைத்துச் சென்று அமீர் ஏதோ மிக ரகசியமாகச் சொன்னான். அதைக் கேட்டு திரும்பி வந்த இளையபல்லவன், "காஞ்சனா! நீ உன் தந்தையிருக்குமிடம் போ! அங்கேயே இரு. நான் சொல்லும்போது தளத்துக்கு வரலாம்" என்று கூறிவிட்டு, நடுப் பாய்மரத் தண்டை நோக்கி ஓடினான். அடுத்த நிமிஷம் இளையபல்லவனும் அமீரும் அந்தப் பாய்மரத்தின் உச்சிக்குத் தொத்தித் தொத்திப் போய்க் கொண்டிருந்தார்கள்.

அத்தியாயம் 6

# மருந்தும் மந்திரமும்

•

அணுகிவரும் ஆபத்து மலைபோலிருந்தாலும் அசையாத நெஞ்சுரம் படைத்த அமீரின் முகத்திலேயே கலவரம் நிரவிக் கிடந்ததையும், "நாம் மோசம் போய்விட்டோம்" என்று அவன் அச்சத்துடன் இணைந்து கூறித் தன்னை தனியே வரும்படி அழைத்ததையும் கண்ட இளையபல்லவன் எதிர் நோக்கி வரும் ஆபத்து உண்மையில் பெரிதாகத்தானிருக்க வேண்டுமென்பதை உணர்ந்து கொண்டானாகையால் அருகிலிருந்த காஞ்சனாதேவியைச் சட்டென விட்டு அமீருடன் சற்று எட்டச் சென்று, "என்ன அமீர்? நாம் என்ன மோசம் போய்விட்டோம்?" என்றான்.

அமீரின் பெருவிழிகள் இளையபல்லவனைச் சஞ்சலத்துடன் ஏறெடுத்து நோக்கின. "நக்காவரம் நாம் ஓராண்டுக்கு முன் பார்த்த நிலையில் இல்லை," என்ற அவன் பெரு உதடுகளிலிருந்த சொற்களிலும் அது சந்தேகமற ஒலித்தது.

"வேறு எப்படியிருக்கிறது?" என்று வினவினான் இளைய பல்லவன், அமீரின் குரலிலும் முகத்திலும் தெரிந்த கவலையால் தானும் கவலைக்குள்ளாகி.

"விரோத பாவத்திலிருக்கிறது" என்று விளக்கினான் அமீர்.

"நக்காவரமா?" ஆச்சரியத்துடன் வினவினான் இளைய பல்லவன்.

"ஆம்."

"நக்காவரம் தமிழர்கள் வசமில்லையா?"

"இல்லையென்று தெரிகிறது."

"அங்குள்ள சோழநாட்டுப் படைப்பகுதி?"

"என்ன ஆயிற்றென்று தெரியவில்லை."

"இதெல்லாம் உனக்கு யார் சொன்னார்கள்?"

"நக்காவரத்தை அணுக வேண்டாமென்று பலவர்மன் சொன்னதாக முதலில் கண்டியத்தேவர் சொன்னார். இரண்டு நாட்களாக நினைவிழந்து படுத்திருந்த பலவர்மன், 'கடல் மோகினியில் ஆபத்து. கப்பலைத் திருப்பு' என்று அடிக்கடி கூவியதாக அவனுக்குச் சிகிச்சை செய்த சேந்தன் சொன்னான். ஓராண்டுக்கு முன்னர் நக்காவரத்தில் தமிழர் குடியிருப்பும் படையிருப்புமிருந்ததைப் பார்த்திருந்ததால் பலவர்மன் வீண் பிரமையில் உளறுகிறானென்று நினைத்தேன்."

"நானும் அப்படித்தான் நினைத்தேன். என்னிடமும் கடல் மோகினியில் ஆபத்து காத்திருப்பதாகப் பலவர்மன் கூறினான். தமிழர் குடியிருப்பில் தமிழர் ஆதிக்கத்துக்குள் ளிருக்கும் அந்தத் தீவுகளில் என்ன ஆபத்திருக்க முடியும் என்று நானும்தான் எண்ணினேன்," என்றான் இளைய பல்லவன்.

"நாம் எண்ணியது தவறு! இளையபல்லவரே! மேலே வாருங்கள் காட்டுகிறேன்," என்ற அமீர் சற்றுத் தூரத்தே யிருந்து நடுப் பாய்மரத்தின் உச்சியைத் தன் பெருவிழிகளால் நோக்கினான்.

அமீரின் நோக்கமின்னதென்று புரிந்துகொண்ட இளைய பல்லவன் காஞ்சனாதேவியை அணுகி அவளைத் தனது அறைக்குப் போகச் சொல்லிவிட்டு அமீருடன் நடுப் பாய்மரத் தண்டில் ஏறிச் சென்றான். மரத்தில் தொற்றி ஏறும் மந்திகளை விட அதிக லாகவமாகவும் துரிதமாகவும் பாய்மரத் தண்டில் ஏறிச் சென்ற அமீரையும் இளையபல்லவனையும் அவர்கள் உச்சியை அடையும் வரையில் பார்த்துக்கொண்டு தளத்தின் மீதே நின்ற காஞ்சனாதேவி உள்ளே எழுந்த விசாரத்தின் விளைவாகப் பெருமூச்சொன்றை விட்டுவிட்டு அக்ர மந்திரத்தை நோக்கி நடந்தாள். நடுப் பாய்மரத்தின் உச்சிக் கருகிலிருந்த சக்கர வட்ட மரப்பலகையில் அமீருடன் நின்று கொண்ட இளையபல்லவன் தூரத்தே தெரிந்த நக்காவரம்

தீவுகளை நோக்கிக் கண்களை ஓடவிட்டான். நான்கு பெரும் தீவுகளையும், புள்ளி புள்ளியாகப் பல திட்டுகளையும் கொண்டிருந்த நக்காவரம் தீவுக் கூட்டத்தைக் கடல் மோகினியின் புஷ்ப ஒட்டியாணமென்று தமிழர்கள் அழைத்ததில் தவறில்லையென்றே இளையபல்லவன் அந்த விநாடியில் நினைத்தான்.

கடல் மோகினித் தீவுக் கூட்டத்தின் ஓரங்களில் மண்டிக் கிடந்த பூமரச்சோலைகள் அந்த இரவில் கண்ணுக்குச் சரியாகத் தெரியாவிட்டாலும் புஷ்பங்களின் நறுமணம் மட்டும் இளையபல்லவன் நாசியை எட்டியதாகையால் நக்காவரம் முகப்புத் தீவின் தூரம் அதிகமில்லை என்பதைப் புரிந்து கொண்டான் படைத்தலைவன். தூரத்தே அடர்த்தியாக, கரேலெனத் தெரிந்தது கரையோரத் தோப்பிலொன்றாகத்தானிருக்க வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்ட இளையபல்லவன் மீண்டும் அந்தத் திசையிலேயே கண்களை ஊன்றிக்கொண்டு, "கடல் மோகினியின் முகப்புத் தீவுக்கு அரை காத தூரமே இருக்கிறது அமீர்," என்று உள்ளத்தில் எழுந்ததை வெளிப்படையாகவும் காரணமாகவே சொன்னான்.

"படைத்தலைவர் ஊகத்தில் தவறில்லை," என்று ஆமோதித்தான் அமீர்.

"தரை அரை காதத்திற்குள் இருந்தால்தான் புஷ்ப வாசனை நாசியை எட்டும்" என்று புதிதாகக் கண்டுபிடித்து விட்டவன் போல் கூறினான் படைத்தலைவன்.

"ஆம்." ஏதோ ஆமோதிக்க வேண்டுமென்பதற்காக வந்தது அமீரின் பதில்.

"நமக்கும் கடல் மோகினிக் கரைக்குமுள்ள தூரம் அதிகமிருந்தால் கரையோ தோப்போ கண்ணுக்குப் புலப்படா."

"ஆம் ஆம்."

இதற்குப் பிறகு சில விநாடிகள் மௌனம் சாதித்த இளையபல்லவன் தான் நின்றுகொண்டிருந்த நடு மரத்தின்

பாயின் புடைப்பையும் தூரத்தே இருந்த கரையின் நிலையையும் பல விநாடிகள் ஆராய்ந்தான். பிறகு மீண்டும் அமீரை நோக்கி, "அமீர்! காற்று இருக்கும் வன்மையைப் பார்த்தால் விடிவதற்கு முன்பே நாம் கடல் மோகினியின் பிரதானத் துறைமுகத்தை அணுகிவிடுவோம்" என்றான்.

"சந்தேகமில்லாமல் அணுகி விடுவோம்" என்றான் அமீர்.

"அணுகினால்_" என்று மேலும் ஏதோ சொல்லப்போன இளையபல்லவனை இடைமறித்த அமீர், "அதோ அந்த நான்கு பிசாசுகள் காத்திருக்கின்றன நம்மை வரவேற்க," என்று துறைமுகத்தின் ஒரு பகுதியைச் சுட்டிக்காட்டினான்.

அந்த இடத்தை முன்பே கவனித்து அங்குக் காத்திருந்த நான்கு பிசாசுகளையும் பார்த்துவிட்ட இளையபல்லவன், "அந்த நான்கு ஏன் தமிழருக்குச் சொந்தமாயிருக்கக் கூடாது?" என்று வினவினான்.

"துறைமுகத்தை அடுத்துள்ள கோட்டையின் ஸ்தூபி அதோ அந்தத் தோப்புக்குள் தெரிகிறதல்லவா?" என்று தீவிலிருந்த ஓரிடத்தைச் சுட்டிக் காட்டினான் அமீர்.

"ஆம். தெரிகிறது, நடுவே சிறிது வெண்மையாய்," என்று தலையை ஆட்டினான் இளையபல்லவன்.

"அந்த ஸ்தூபியின் உச்சியில் விளக்கு இருக்கிறதா?"

"இல்லை."

"துறைமுகத் தளத்தில் எங்காவது விளக்கு இருக்கிறதா?"

"இல்லை. எங்குமே விளக்கில்லை."

"ஊர் உறங்குகிறது. பிரதான மாளிகைகூட உறங்குகிறது என்றெல்லாம் வைத்துக் கொள்வோம். ஆனால் கலங்கரை விளக்கம் கூடவா உறங்கும்?" இப்படிக் கேட்ட அமீர் துறைமுக முனையில் தெரிந்த ஒரு பெரும் தூணைச் சுட்டிக் காட்டினான்.

தூரம் அதிகமிருந்ததால் அது ஒரு தூணாக இளைய பல்லவன் கண்களுக்குத் தெரியாவிட்டாலும் தூரக்கிழக்கில்

பல வருஷங்கள் அகூதாவுடன் கழித்திருக்கும் அமீரின் கூரிய கண் பார்வையும் ஊகமும் தவறாயிருக்க முடியாதென்பதை உணர்ந்துகொண்ட படைத்தலைவன், "ஆமாம், அமீர்! எந்தத் துறைமுகத்திலும் கலங்கரை விளக்கத்தை அணைக்க மாட்டார்கள். ஏன் அதை அணைத்து விட்டார்கள் இங்கே?" என்று கேட்டான்.

"தூரக்கிழக்கு நாடுகளில் ஒரு பழக்கமுண்டு படைத் தலைவரே! புதிதாகப் பிடிக்கப்படும் தீவுகளில் அதைப் பிடிப்பவர்கள் ஆதிக்கம் நிலைக்கும்வரை கலங்கரை விளக்கம் எரியாது. வேறு விளக்குகளும் இல்லங்களுக்கு வெளியே அனுமதிக்கப்படமாட்டாது. கடற்கரை எங்கணும் காவல் மட்டும் பலமாயிருக்கும்" என்று அமீர் விளக்கினான்.

கடற்போரில் வெகு சீக்கிரம் மிகுந்த திறமை எய்தியிருந்த இளையபல்லவனுக்கு அந்தப் பகுதிகளிலிருந்த தீவுகளின் பழக்க வழக்கங்கள் சரியாகத் தெரியாதிருந்தாலும் அமீரின் விளக்கத்திலிருந்து பல விஷயங்களை அவன் ஊகித்துக் கொண்டான். அவன் ஊகித்துக்கொண்ட விஷயங்களில் முதலாவது கடல் மோகினி சமீப காலத்தில் கைமாறியிருக்கிற தென்பது. ஆகவே அதுவரை அங்கிருந்த தமிழர் ஆதிக்கம் நீங்கிவிட்டது என்பது இரண்டாவது. தமிழர் விரோதிகளிடம் சிக்கியிருந்தால், ஒன்று ஸ்ரீவிஜயத்திடம் சிக்கியிருக்க வேண்டும், அல்லது கலிங்கத்திடம் சிக்கியிருக்க வேண்டும் என்பது மூன்றாவது. இரண்டும் தூரக்கிழக்கில் கடலாதிக்கம் உள்ள நாடுகள். ஆகவே கடல் புறாவை எதிர்க்கச் சித்தமாய் இருப்பவை என்பது நான்காவது. எதிரே தூரத்தில் துறைமுகப்பில் தெரிந்த நான்கு பிசாசுகளும் நான்கு பெரும் மரக்கலங்கள் என்பது ஐந்தாவது. ஆறாவதும் ஒன்றிருந்தது. ஆனால் அந்தக் கேள்விக்கு மட்டும் விடை கிடைக்கவில்லை இளையபல்லவனுக்கு. 'கடல் மோகினி கலிங்கத்திடமிருந் தாலும் ஸ்ரீவிஜயத்திடம் இருந்தாலும் பலவர்மன் அச்சமுறக் காரணமில்லை. அப்படியானால் ஏன் திகில் படுகிறான் அவன்?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான்

இளையபல்லவன். ஆகவே தன் ஊகத்துக்கு மேற்பட்ட மர்மம் ஒன்று எதிரேயுள்ள துறைமுகத்தில் தன்னை எதிர்நோக்கி யிருக்கிறது என்பதை மட்டும் புரிந்துகொண்ட இளைய பல்லவன், "சரி, வா அமீர்," என்று அந்த அரபுநாட்டு வணிகனை அழைத்துக்கொண்டு பாய்மரத்தின் கீழே இறங்கித் தளத்துக்கு வந்து சில விநாடிகள் யோசித்துவிட்டு, "அமீர்! இந்த நிலையைச் சற்று சாமர்த்தியத்துடன்தான் கையாள வேண்டும்," என்று கூறினான்.

"உண்மைதான் படைத்தலைவரே!" என்று அமீர் கூறினான்.

"அதற்கு என்ன செய்யலாம்?" என்று கேட்டான் இளைய பல்லவன்.

"நமது மரக்கலத்திலும் நம்மைத் தொடரும் இரண்டு மரக்கலங்களிலுமுள்ள பந்தங்களையும் விளக்குகளையும் அணைத்துவிட வேண்டும்."

"உம்..."

"இப்பொழுது நமது மரக்கலத்தில் மூன்று பாய்களே விரிந்திருக்கின்றன."

"உம்."

"மற்றவற்றையும் விரித்துவிட்டால் இருட்டிருக்கும்போதே நாம் துறைமுகத்திற்குள் பிரவேசித்துவிடலாம்."

"பிறகு?"

"பிறகு நமது கடல் புறாவையும் மற்ற இரு மரக்கலங் களையும் கொண்டு அந்த நான்கு மரக்கலங்களையும் அழித்து விடலாம்."

அமீரின் திட்டத்துக்கு இளையபல்லவன் முகத்தில் சிறிதும் ஆதரவில்லை. தீவிர சிந்தனையில் இளையபல்லவன் இறங்கிவிட்டதை அவன் முகம் சந்தேகமற நிரூபித்தது. பல விநாடிகள் மௌனமாயிருந்த பிறகு இளையபல்லவன் சொன்னான்: "அமீர்! உன் திட்டங்களில் இரண்டு பலவீனங்கள் இருக்கின்றன" என்று.

"என்ன பலவீனங்கள்?" என்று ஏதும் புரியாமல் வினவினான் அமீர்.

"முதலாவது, உன் திட்டம் நிறைவேற வேண்டுமானால் நமது மரக்கலம் வருவதைத் துறைமுக வீரர்கள் காணாதிருக்க வேண்டும். ஆனால் இதுவரை பெரும் பந்தங்களுடனும் விளக்குகளுடனும் நம்து மரக்கலம் வந்து கொண்டிருக்கிறது. இரண்டாவது அதோ அந்த நான்கு மரக்கலங்களும் போருக்குத் தயாராயில்லாமல் உறங்கிக் கொண்டிருக்க வேண்டும். மூன்றாவது ஒன்றிருக்கிறது—"

"என்ன படைத்தலைவரே?"

"நாம் கைப்பற்றியிருக்கும் இரண்டு மரக்கலங்களிலுள்ள கலிங்கத்து மாலுமிகள் ஒத்துழைக்க வேண்டும்?"

"அவர்கள் ஏன் ஒத்துழைக்க வேண்டும்?"

"நம் கைவசமிருக்கும் மாலுமிகளைக் கொண்டு மூன்று மரக்கலங்களை நடத்திச் செல்வதே கஷ்டம். போர் என்றால் எப்படி சாத்தியம்?" என்று வினவினான் இளையபல்லவன்.

இளையபல்லவன் சொல்லியதில் உண்மை ததும்பிக் கிடந்ததைக் கவனித்த அமீர், ஓராண்டுக்குள் கடற்போர் தத்துவங்களை அவன் தன்னைவிட அதிகமாகப் புரிந்து கொண்டதை நினைத்துப் பெரும் ஆச்சரியத்துக்குள்ளானான். "உண்மை படைத்தலைவரே! இந்த விஷயங்களை நான் யோசிக்கவில்லை" என்றும் கூறினான் ஆச்சரியம் குரலில் பிரதிபலிக்க.

இளையபல்லவன் மீண்டும் தீவிர யோசனையில் ஆழ்ந்தான். பிறகு தானே தலையை இருமுறை ஆட்டிக் கொண்டான். அவன் தீவிர யோசனையிலிருக்கும்போது தலையிடுவது ஆபத்தென்பதைப் பலமுறை உணர்ந்து கொண்டுள்ள அமீர் அவன் பக்கத்தில் மௌனமாகவே நின்றான். பல விநாடிகளுக்குத் தனது ஈட்டி விழிகளை அமீரை நோக்கித் திருப்பிய படைத்தலைவன், "அமீர், விளக்குகள் தளத்தில் நன்றாக எரியட்டும். அணைந்த

பந்தங்களையும் கொளுத்திவிடு" என்று அமீர் சொன்ன யோசனைக்கு நேர் விரோதமான யோசனையைச் சொன்னான்.

"இளையபல்லவரே! நீங்கள் கூறுவது..." மேலும் ஏதோ கூறப்போன அமீர்மீது இன்னும் பெரிய இடியை எடுத்து வீசிய இளையபல்லவன், "நம்மைத் தொடரும் மற்ற இரு மரக்கலங்களிலும் பந்தங்கள் கொளுத்தப்படட்டும். விளக்குகளும் எரியட்டும்" என்று.

அமீரின் முகத்தில் வியப்பு மட்டுமல்லாமல் எரிச்சலின் சாயையும் விரிந்தது. "நாம் வருவது எதிரிகளுக்கு நன்றாகத் தெரிய வேண்டுமா?" என்று வியப்பும் எரிச்சலும் குரலிலும் தொனிக்கக் கேட்டான் அவன்.

இளையபல்லவன் பதில் தங்கு தடையின்றி வந்தது. "மிக நன்றாகத் தெரியவேண்டும்" என்றான் அகூதாவின் உபதலைவனாகப் பிரசித்தி பெற்ற இளையபல்லவன்.

"அடுத்தபடி என்ன செய்யவேண்டும்?"

"பாய்களை அவிழ்த்துச் சுருட்டிவிட வேண்டும்."

"மரக்கலம் எப்படித் துறையை நோக்கிப் போகும்?"

"மாலுமிகள் துடுப்புகளைக் கொண்டு துழாவட்டும்."

அதுவரை பொறுத்த அமீர் அதற்குமேல் பொறுக்காமல், "துடுப்புகளைக் கொண்டு துழாவினால் கடல்புறா துறைமுகத்துக்கருகில் எப்பொழுது போகும் தெரியுமா?" என்று வினவினான்.

"தெரியும். விடிந்து பல நாழிகைகளுக்குப் பிறகுதான் போகும்" என்றான் படைத்தலைவன்.

"அப்பொழுதுதான் எதிரிகள் நம்மைக் கஷ்டமில்லாமல் எதிர்த்து அழிக்க முடியுமாக்கும்?" என்று இகழ்ச்சியுடன் வினவினான் அமீர்.

இளையபல்லவன் மெல்ல நகைத்தான். "எதிர்க்கவும் மாட்டார்கள், அழிக்கவும் மாட்டார்கள்" என்று கூறினான் சிரிப்புக்கிடையே.

"அவர்களை மயக்க மந்திரம் வைத்திருக்கிறீர்களாக்கும்!" அமீரின் அந்தக் கேள்வியில் இகழ்ச்சி அதிகமாக ஒலித்தது.

"மந்திரமும் வைத்திருக்கிறேன். மருந்தும் வைத்திருக்கிறேன். சொன்னபடி செய் அமீர். நான் மருந்தைத் தயார் செய்துவிட்டு வருகிறேன். பிறகு உனக்கு மந்திரம் சொல்லித் தருகிறேன்" என்று இளையபல்லவன் கூறிவிட்டு விடுவிடு என்று அக்ரமந்திரத்தை நோக்கி நடந்தான்.

இளையபல்லவன் ஏதோ பெரும் திட்டத்தை வகுத்து விட்டானென்பதை மட்டும் அமீர் புரிந்துகொண்டானே யொழிய அத்திட்டம் என்ன என்பது அவனுக்குப் புரிய வில்லையாகையால் முகத்தில் மிகுந்த குழப்பத்துடன் இளைய பல்லவன் போவதைப் பார்த்துக்கொண்டே நின்றுவிட்டுப் பிறகு படைத்தலைவன் இட்ட கட்டளைகளை நிறைவேற்றச் சென்றான். விடியற்காலைக்குச் சற்று முன்பு அக்ரமந்திரத் திலிருந்து மீண்ட இளையபல்லவன், "மருந்தைத் தயார் செய்து விட்டேன். வா, மந்திரத்தைச் சொல்லித் தருகிறேன்" என்று அமீரை அழைத்தான்.

அமீர் அருகில் வந்ததும் காதோடு காதாக மந்திரத்தை நீண்ட நேரம் ஓதினான். மந்திரத்தின் சக்தி அளவிட முடியாத தாயிருக்க வேண்டும். அமீரின் முகத்தில் அதுவரையிருந்த கலக்கம், குழப்பம், சோர்வு அனைத்தும் மறைந்தன. வெற்றிக் குறி பரந்துலாவியது.



# கடல் புறா

## 7. உளறலில் ஒரு விளக்கம்

கடல்
மோகினியைப்
பார்த்து
இவர்
ஏன்
நடுங்க
வேண்டும்?



அத்தியாயம் 7

# உளறலில் ஒரு விளக்கம்

மரக்கலத்தின் முகப்பில் அமைக்கப்பட்டதால் வட மொழியில் அக்ரமந்திரம் எனப் பெயர் பெற்றதும் மற்ற வகை மரக்கலங்களின் அளவுகளைவிட அதிக வசதிகள் பெற்றதுமான கடல் புறாவின் முகப்பு அறையை நோக்கி இளையபல்லவன் உத்தரவுப்படி சென்ற காஞ்சனாதேவியின் மனத்தில் ஏதேதோ எண்ணங்கள் அலைமோதிக் கொண் டிருந்தன. எண்ணங்கள் அலைமோதியதை அவள் பால் வண்ண முகம் திண்ணமாக எடுத்துக் காட்டியதன்றி, கால் களின் தளர்ந்த நடையும் உள்ளத்தின் ஊசலாட்டத்துக்குச் சாட்சி கூறியது. அமீர் திடீரென வந்து இளையபல்லவனைத் தனியாக அழைத்து ஏதோ கூறியதும், அதைத் தொடர்ந்து இளையபல்லவன் தன்னை அக்ரமந்திரத்துக்குப் போக உத்தரவிட்டு நடுப் பாய்மரத் தண்டின் மீது மிக அவசரமாகத் தொத்தி ஏறிச் சென்றதையும் நினைத்துப் பார்த்ததன்றி அமீரின் முகத்தில் தெரிந்த கவலையையும் யோசித்துப் பார்த்ததால், தன்னால் ஊகிக்க முடியாதபடி புது ஆபத் தொன்று வந்திருக்க வேண்டுமென்று காஞ்சனாதேவி புரிந்து கொண்டாளாகையால் அந்த ஆபத்தின் தன்மை எதுவா யிருக்கும் என்பதைப் பற்றி யோசித்துக்கொண்டே அக்ர மந்திரத்துக்குள் நுழைந்தாள்.

மரக்கலத் தலைவன் மட்டுமே தங்குவதற்காக அந்த முகப்பு அறை நிர்மாணிக்கப்பட்டிருந்தாலும், கடல் புறா முதல் தரப் போர்க்கலமாகையால் நாலைந்துபேர் விசால மாகப் படுப்பதற்குக்கூட அதில் வசதி இருந்தது. அந்த அறையின் கோடியில் இருந்த உள்ளறையின் அமைப்புக்கூட இரண்டொருவர் உட்கார்ந்து உணவருந்தக் கூடிய நிலையில் இருந்தது. முகப்பு அறையிலிருந்த வெண்கலக் கூண்டு

விளக்கின் வெளிச்சம் அந்த அறையில் மட்டுமின்றி உள்ளறை யிலும் விழுந்ததால், உள்ளறையில் சில சமயங்களில் அமர்ந் திருக்கும் இளையபல்லவன், அங்கிருந்து கொண்டே வருகிற வர்களை ஊன்றிப் பார்க்கும்படியாக அதை அமைத்திருந்த தைக் கண்ட காஞ்சனாதேவி, ஏதோ காரணத்துக்காகத்தான் அந்த அறை நிர்மாணிக்கப்பட்டிருக்கிறதென்பதைப் புரிந்து கொண்டாள். அது எந்தக் காரணத்துக்காக நிர்மாணிக்கப் பட்டதோ அந்தக் காரணத்துக்கான அவசியமும் உபயோக மும் வெகு சீக்கிரம் ஏற்படப் போகிறதென்பதை மட்டும் அக்ரமந்திரத்தில் நுழைந்த அந்தச் சமயத்தில் அவள் அறிந்து கொள்ளவில்லையாகையால் உள்ளறையை ஒருமுறை நோக்கி விட்டுப் பலவர்மன் நினைவிழந்து படுத்துக் கொண்டிருந்த பஞ்சணையை அணுகினாள்.

பலவர்மன் அப்பொழுதும் நினைவிழந்து கிடந்தான். இடையிடையே நினைவு பெற்ற இரண்டொரு சமயங்கள் "வேண்டாம் கருணாகரா! வேண்டாம்! கடல் புறாவைத் திருப்பிவிடு" என்று கிலியால் உடலைத் தூக்கித் தூக்கிப் போட்டுக் கூவினான். அப்படித் தூக்கிப் போட்ட உடலைத் தன் இருகைகளாலும் பிடித்துக் கொண்டான் பக்கத்தே அமர்ந்திருந்த குணவர்மன். அவன் உடல் நிலையைக் கண்ட காஞ்சனாதேவியின் அஞ்சன விழிகளிலும் கருணை பெருக் கெடுத்து நீரைக் கொட்டின. "ஏனப்பா! கூலவாணிகர் சிகிச்சைக்குப் பிறகும் இவர் கண்விழிக்கவில்லையா?" என்று வினவினாள் காஞ்சனாதேவி துயரத்துடன்.

"இரண்டொரு முறை கண்களைத் திறந்தார். கடல் மோகினியை நினைத்ததும் நினைவிழந்து விடுகிறார்" என்று குணவர்மன் விளக்கினான்.

"கடல் மோகினியைப் பார்த்து இவர் ஏன் நடுங்க வேண்டும்?" என்று மீண்டும் வினவினாள் காஞ்சனாதேவி.

அதற்குக் குணவர்மனிடமிருந்து பதிலேதும் வரவில்லை சில விநாடிகளுக்கு. பிறகு அவன் சொன்ன பதிலும் சாரமற்

றிருந்தது. "எனக்கெப்படித் தெரியும் காஞ்சனா?" என்றான் குணவர்மன்.

இதற்குப் பிறகு தந்தை மகள் இருவருமே நீண்ட நேரம் மௌனம் சாதித்தார்கள். நேரம் போவதே தெரியாமல் பலவர்மன் நிலை குறித்துக் கவலையுடன் அவனைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்திருந்த அவ்விருவர் நெஞ்சுகளில் உலவிக்கொண்டிருந்த சந்தேகத்துக்கு ஒரு நாழிகை கழித்துப் பலவர்மனே பதில் சொன்னான். அவன் கண்கள் ஒருமுறை மலர்ந்து மிரண்டு விழித்தன. பிறகு உதடுகள் திறந்து உளறின. "கடல் மோகினியில் இருக்கும் நிலை... உம் உம்... உனக்கு எங்கே தெரியப்போகிறது?... அது இப்பொழுது கலிங்கத்தின் வசம். ஆம், ஆம். கலிங்கத்தின் வசம்தான் இருக்கிறது... அங்கிருக்கும் துறைமுகத் தலைவன் கலிங்கத்தான்... ஆனால் கலிங்கத்துக்கும் படியாதவன்... கலிங்கத்தின் பெயரால் கொலை- ஜனங்கள் கொலை- கொள்ளை- அழிவு- எல்லாம் நடத்துகிறான்... போகாதே அங்கே! அடே கருணாகரா! மடையனே!" இப்படிப் பலபடி உளறினான். அந்த உளறலைத் தந்தையும் மகளும் மட்டுமல்ல, அந்தச் சமயத்தில் உள்ளே அடியெடுத்து வைக்க முற்பட்டு வாயிற்படியிலேயே நின்றுவிட்ட இளையபல்லவனும் கேட்டான். பலவர்மன் சொற்களைக் கேட்டதால் தந்தையும் மகளும் பெரும் பீதியடைந்தார்களென்றாலும், இளையபல்லவன் முகத்தில் மட்டும் பீதி சிறிதும் இல்லை. முகத்தில் தன் உள்ளத்தே இருந்த ஒன்று உறுதிப்பட்டதற்கான சாயையே இருந்தது. அதனால் விளக்கமுற்ற முகத்துடனும் சிறிது சுறுசுறுப்புடனும் அறைக்குள் நுழைந்த இளையபல்லவனைத் தொடர்ந்து கூலவாணிகன் சேந்தனும் நுழைந்தான்.

அவர்களிருவரும் வந்ததும் பலவர்மன் பஞ்சணை முகப்பிலிருந்து எழுந்த காஞ்சனாதேவி கவலை படர்ந்து கிடந்த தன் அஞ்சன விழிகளை இளையபல்லவனை நோக்கி உயர்த்திவிட்டுச் சொன்னாள், "இவர் உடல் நிலை கவலைக்கிடமாய் இருக்கிறது. அடிக்கடி இப்படித்தான் உளறுகிறார்" என்று.

"மிக நல்லது" என்றான் இளையபல்லவன் குரலில் ஓரளவு திருப்தியுடன்.

காஞ்சனாதேவியின் கருணை விழிகளில் வியப்பு அதிகமாய்ப் படர்ந்தது. யாரிடத்திலும் அன்பு காட்டும் பழக்கமுடைய சோழநாட்டுப் படைத்தலைவன் இதயம் அத்தனை இரும்பாகிவிட்டதை எண்ணிய அந்தக் கடாரத்துக் கட்டழகி கேட்கவும் செய்தாள், "எது நல்லது? இவர் உடலிருக்கும் நிலையா? உளறலா?" என்று.

இளையபல்லவன் சிறிதுகூடச் சிந்திக்காமலே, "இரண்டும் நல்லது" என்று பதில் சொன்னான்.

"ஒருவர் உடல்நிலைக் கேட்டைக் கண்டு மகிழ்ச்சியடைவது பண்பாடா?" என்று வினவினாள் காஞ்சனாதேவி சீற்றத்துடன்.

"சந்தர்ப்பத்தைப் பொறுத்தது" என்று இளையபல்லவன் சுட்டிக்காட்டினான்.

"எந்தச் சந்தர்ப்பத்தைப் பொறுத்தது?" என்று வினவினாள் காஞ்சனாதேவி கோபத்தால் முகம் சிவக்க.

இளையபல்லவன் அவளை நோக்கிப் புன்னகை செய்தான். அவன் புன்முறுவலைக் கண்டபோதெல்லாம் இதயத்தைப் பறி கொடுக்கக்கூடிய காஞ்சனாதேவி அந்தச் சமயத்தில் பெரிதும் வெகுண்டாள். அவள் உள்ளத்தில் உள்ளதைப் புரிந்து கொண்ட இளையபல்லவன் தனது இதழ்ப் புன்முறுவலைப் பெரிதாக்கிக் கொண்டு சொன்னான், "அவரவர் இருக்கும் சந்தர்ப்பத்தைப் பொறுத்தது" என்று.

"விளங்கவில்லை எனக்கு" என்று சுடச்சுடச் சொன்னாள் காஞ்சனாதேவி.

"விளக்கிச் சொல்கிறேன் கேள் காஞ்சனா! குணவர்மரே! நீங்களும் கேளுங்கள். தமிழகத்தில் தென் கடல் மோகினியின் புஷ்ப ஒட்டியாணம் என்று புகழப்படுவதும் நறுமலர்ச் சோலைகளால் சூழப்பட்டதுமான மாநக்காவரம் தீவுகளின் கூட்டத்தின் பிரதானத் தீவை நாம் எட்டிக் கொண்டிருக் கிறோம். இந்தத் தீவைக் கண்டு அக்ஷயமுனைக் கோட்டைத்

தலைவர் என்ன காரணத்தாலோ அஞ்சுகிறார். காரணம் எனக்கு விளங்கவில்லை. நாம் விடியற்காலையில் அடையப் போகும் நக்காவரத்தின் பிரதான துறைமுகம் முன்பு தமிழர் வசமிருந்தது. இப்பொழுது இல்லை..." என்று கூறிய இளைய பல்லவன் அவ்விருவரையும் உற்று நோக்கினான்.

அந்த நோக்கைச் சந்திக்க இயலாத காஞ்சனாதேவியின் கண்கள் கீழே தாழ்ந்தன. "அப்படியானால் கடல் மோகினி..." என்று கூறிய குணவர்மன் மட்டும் இளையபல்லவனை ஏறெடுத்துப் பார்த்தான்.

"ஒன்று ஸ்ரீவிஜயத்திடம்' இருக்கவேண்டும். அல்லது அவர்கள் துணைவர்களான கலிங்கத்தாரிடமிருக்க வேண்டும் என நான் ஊகித்தேன். ஆனால் இப்பொழுது இவர் உளறிய திலிருந்து..." இளையபல்லவன் பதிலை முடிக்கு முன்பே இடைமறித்த குணவர்மன், "கலிங்கத்திடமிருக்கிறதென்று தெரிகிறது" என்றான்.

ஆமென்பதற்கறிகுறியாகத் தலையை ஆட்டிய இளைய பல்லவன், "ஸ்ரீவிஜயத்திடம் இருந்தாலும் கலிங்கத்திடமிருந் தாலும் பலவர்மர் பயப்படக் காரணமில்லை. பலவர்மர் ஸ்ரீவிஜயத்தின் கோட்டைத் தளபதிகளுள் ஒருவர். மன்ன வருக்கு உறவினர். ஆகவே, கலிங்கத்துக்கும் துணைவர். அப்படி யிருக்க அவர் பயப்படவேண்டிய அவசியமே இல்லை. இருப் பினும் பயப்படுகிறார். ஏன் என்று இத்தனை நேரம் விளங்க வில்லை. இப்பொழுது விளங்குகிறது. இங்குள்ள துறைமுகத் தலைவன் கலிங்கத்தவனாயிருப்பினும் பெருங்கயவன். எந்த அக்கிரமத்துக்கும் அஞ்சாத பலவர்மனும் அஞ்சும் கயவன். உளறலால் இதைத் தெரிந்துகொண்டோம். இது நமக்குப் பெரும் உதவி. இவர் உடல்நிலையும் நமக்கு உதவும்" என்றான்.

இளையபல்லவன் விளக்கிச் சொன்ன காரணங்கள் மிகக் கோர்வையாய் இருந்தாலும், பலவர்மன் உடல்நிலையும் உளறலும் எப்படிக் காஞ்சனாவையும் மற்றவர்களையும் அந்தக் கலிங்கத்தாரிடமிருந்து காப்பாற்றும் என்பது மட்டும் குணவர்மனுக்குப் புரியவில்லை. ஆகவே கேட்டான், "இவை எப்படி நமக்கு உதவும்?" என்று.

"பலவர்மன் உடல்நிலைக் காரணத்தைக் காட்டி நாம் பல காரியங்கள் செய்யலாம். அது மட்டுமல்ல, இப்பொழுது எதிரி எப்பேர்ப்பட்டவனென்று தெரிந்துவிட்டதால் அவனுக் கேற்ப நமது திட்டத்தையும் வகுக்கலாம். எதிரி சிக்குவதற்குப் பலவர்மன் உடல்நிலை மிக அனுகூலம்" என்று கூறிய இளையபல்லவன் அதற்கு மேல் அவனுடன் எதுவும் பேசாமல் கூலவாணிகனை அழைத்து, "சேந்தா! பலவர்மன் உடல்நிலை எப்படியிருக்கிறது பார்," என்று பணித்தான்.

பலவர்மன் கைநாடியைப் பிடித்து நீண்ட நேரம் பரிசோதித்த கூலவாணிகன், "காலையிலிருந்ததை விட மோசமாயிருக்கிறது படைத்தலைவரே!" என்றான்.

"உயிருக்கு ஏதாவது..." என்று சந்தேகத்துடன் கேட்டான் படைத்தலைவன்.

"உயிருக்கு எந்த ஆபத்துமில்லை. இரண்டு நாட்களில் குணமாகிவிடும். உளறல்கூட இந்த லேசான காய்ச்சலால் இல்லை. தலையில் பட்ட அடி மூளைக்குச் சிறிது அதிர்ச்சி யைத் தந்திருக்கிறது. அதுவும் இரண்டு நாட்களில் குணப்பட்டு விடும்."

"அந்த இரண்டு நாள்கள் வரை?" காஞ்சனாதேவியின் கவலைக்குரல் இடையே புகுந்தது.

"இப்படித்தான் சிறிது நேரம் சுயநினைவுடனும் சிறிது நேரம் சுயநினைவு இழந்தும் இருப்பார்" என்றான் சேந்தன்.

இதற்குப் பிறகு யாருமே சில விநாடிகள் பேசவில்லை. பஞ்சணை முகப்பில் உட்கார்ந்த இளையபல்லவன் தீவிர யோசனையில் ஆழ்ந்துவிட்டான். கடைசியாக ஒரு முடிவுக்கு வந்து சேந்தனை நோக்கிய படைத்தலைவன், "சேந்தா! பலவர்மரை அந்த உள்ளறைக்குக் கொண்டு போய்விடு. காஞ்சனாதேவியும் அந்த அறையிலேயே இருந்து கொண்டு, சிறிய தந்தைக்குப் பணிவிடை செய்யட்டும். ஆனால்..." என்று கூறிச் சற்றே நிறுத்தினான்.

சேந்தன் முகத்தில் பயம் படர்ந்தது. "ஆனால்" என்று பயத்துடன் கேட்டான் அவன்.

"பலவர்மருக்கு நாளை இரவு வரை நினைவு வரக் கூடாது" என்றான் திட்டமாக இளையபல்லவன்.

"அதனால்..."

"என்ன நேரிட்டாலும் சரி."

"உயிருக்கு ஆபத்து நேரிட்டால்?"

"நேரிடக் கூடாதுதான். ஆனால் இந்த மரக்கலத்திலும் நாம் கைப்பற்றியிருக்கும் மரக்கலங்களிலும் சேர்ந்து சுமார் இருநூறு பேர் இருக்கிறார்கள். அவர்கள் உயிர் காப்பாற்றப்பட வேண்டும்?"

"அதற்காக?"

"ஓர் உயிரைப் பலி கொடுப்பது தவறாகாது. இதைத் தமிழகத்தின் தர்ம சாத்திரங்கள் அனுமதிக்கின்றன."

இதைக் கேட்டதும் காஞ்சனாதேவி சீறி எழுந்தாள். "மிக நன்றாக இருக்கிறது உங்கள் தர்மசாத்திரம். உடல் நலமில்லாதிருப்பவரைக் கொல்லுவதுதான் விவேகமா? இதுதான் தமிழகத்தின் பண்பாடோ?" என்று இரைந்து கூவவும் செய்தாள்.

"இவரைக் கொல்ல வேண்டுமென்று நான் நினைத்திருந்தால் இந்த நிலையில் கொல்ல வேண்டிய அவசியமில்லை காஞ்சனாதேவி. அக்ஷயமுனையில் அதற்கு நிரம்ப சந்தர்ப்பங்கள் இருந்தன. இவர் முழு நினைவுடனிருக்கையில் இவரை வெட்டி வீழ்த்த எத்தனையோ வசதிகள் இருந்தன. உயிர்க் கொலையில் நம்பிக்கை இல்லாததால்தான் நான் இவரைக் கொல்லவில்லை. இப்பொழுது கொல்ல இஷ்டம் இல்லை. இவருக்கு நினைவு வராமல் இன்னும் ஒரு நாளிருப்பது அவசியம். அதைத்தான் சேந்தன் செய்வான். அந்தப் பணியில் நம் இஷ்டவிரோதமாகப் பலவர்மன் இறந்தால் நானல்ல பொறுப்பாளி. என் கடமை இந்தச் செயலுக்குத் தூண்டுகிறது. இந்த மரக்கலத்திலும் மற்ற இரு மரக்கலங்களிலும் உள்ள இருநூறு மாலுமிகளின் உயிரைப் பற்றிய எச்சரிக்கையும் இந்தப் பாதையையே எனக்குக் காட்டுகிறது" என்று விடுவிடு என்று கூறிய இளையபல்லவன்

சேந்தனை நோக்கி, "இவர் நினைவிழந்திருப்பதற்கு வேண்டிய மருந்தை மட்டும் கொடு. இவர் இறப்பதில் எனக்கிஷ்ட மில்லை. கூடியவரை எச்சரிக்கையுடனிரு. இவர் படுக்கையை நான் சொன்னபடி உள்ளறையில் போடு. காஞ்சனாதேவி சிகிச்சை செய்யட்டும். இப்பொழுது நாம் பெரும் அபாயத்தை நோக்கிச் செல்கிறோம். அந்த அபாயத்திலிருந்து நாமனை வரும் தப்பப் பலவர்மன் முக்கிய மருந்து நினைப்பிருக்கட்டும். மேற்கொண்டு செய்யவேண்டியதைப் பின்னால் சொல்லு கிறேன்" என்று உத்தரவிட்டு அறையிலிருந்து வேகமாகத் தளத்துக்குச் சென்றான்.

தளத்திலிருந்த அமீரிடம் தான் மருந்தைத் தயார் செய்து விட்டதைக் குறிப்பிட்டு, "இனி மந்திரத்தைக் கேள் அமீர்," என்று கூறிவிட்டு அவன் காதிற்கு அருகில் நின்று நீண்ட நேரம் ஏதேதோ கூறினான்.

அமீரின் விழிகள் பெரிதாக மலர்ந்தன. "ஒழித்து விட்டோம் எதிரிகளை" என்றான் அவன் குதூகலத்துடன்.

"ஆம். உளறலிலும் பலனிருக்கிறது" என்றான் படைத் தலைவனும் உற்சாகத்துடன்.

"அப்படியானால்?" அமீர் கேட்டான் மகிழ்ச்சியுடன்.

"ஏற்றிவிடு கலிங்கத்தின் கொடியை, கடல்புறா மீது" என்று உத்தரவிட்டான் இளையபல்லவன்.

அடுத்த சில நிமிஷங்களில் கடல் புறாவின் நடுப் பாய்மரத்தின் உச்சியில் கலிங்கத்தின் கொடி கம்பீரமாகப் பறந்தது. பொழுதும் மெள்ள மெள்ளப் புலர்ந்தது. எதிரில் புஷ்ப ஒட்டியாணத்தின் வரிசைகள், "வா, வா," என்று கடல் புறாவைத் தலைகளை ஆட்டி அழைத்தன.

அந்த அழைப்பு ஆனந்தத்தைத் தந்தது மற்ற மாலுமி களுக்கு. இளையபல்லவனுக்கு மட்டும் அது பெரும் எச்சரிக்கையைத் தந்தது. அந்த எச்சரிக்கை தூரத்தே தெரிந்த ஒரு படகில் வெகு வேகமாக வந்துகொண்டிருந்தது.

அத்தியாயம் 8

# கங்கதேவன்

மாநக்காவரத்தின் முகப்புத் தீவின் தென்முனைக்கெதிரே கடல் புறாவையும் மற்ற இரு மரக்கலங்களையும் நங்கூரம் பாய்ச்சி நிறுத்திவிட்டுக் காலை நேரத்தில் கடல் புறாவின் தளத்தில் நின்று எதிரேயிருந்த பெரும் தீவை நோக்கியதும் இளையபல்லவன் மகிழ்ச்சிக்குப் பதில் பெரும் எச்சரிக்கை யையே அடைந்தானென்றால் அதற்குத் தகுந்த காரணம் இருக்கவே செய்தது. அவன் கண்ணெதிரே அன்று காலையில் விரிந்த காட்சி ரமணீயமாகத்தானிருந்தது. மாநக்காவரத்தின் அமைப்பும் எதிரே மெள்ள அலை மோதிய கடலின் அழகும் அவன் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளவே செய்தன. எதிரே தெரிந்த அந்தப் பிரதானத் தீவின் பெயரையொட்டியே அதை ஒட்டிய தீவுக் கூட்டம் முழுதும் *மாநக்காவரம் என அழைக்கப்பட்டு வந்ததையும், அந்தத் தீவின் இணையற்ற அழகும், நதிகளும், புஷ்பச் சோலைகளுமே அதைச் சார்ந்த மற்றத் தீவுகளின் பெருமையையும் மிகைப்படுத்தி இருந்ததை யும் இளையபல்லவன் முன்னரே அறிந்திருந்தான். கவலை இதயத்தில் மண்டிக் கிடந்த அந்த நேரத்திலும் அந்தக் கடல் பிராந்தியத்தின் கவர்ச்சி அவன் உணர்ச்சிகளைப் பெரிதும் கௌவவே செய்தது.

---

* நக்காவரம் தீவுக்கூட்டத்தின் தென்கோடியிலுள்ள பெரும் தீவே மாநக்காவரம் அல்லது பெரிய நக்காவரம் என்று பெயருள்ளது. அந்தப் பெயரையொட்டியே அந்தத் தீவுக்கூட்டம் முழுவதையும் பழந்தமிழர் மாநக்காவரம் என்று அழைத்து வந்தார்கள். மாநக்காவரத்தைப் பற்றி இங்கு தரப்படும் சரித்திர, பூகோள தகவல்கள் அனைத்துக்கும் "Imperial Gazeteer of India," Nayakanhatti to Parbhani Vol XIX பக்கங்கள் 9-79-ல் உள்ள Nicobars என்ற பகுதியைக் கவனிக்கவும்.

எதிரே தெரிந்த மாநக்காவரத்தின் தென்முனைப் பகுதியை இரண்டாகக் கிழித்துக்கொண்டு கடலுக்குள் பாய்ந்த *காளத்தி நதியையும் தூரத்தே அந்தத் தீவின் வடக்குப் பகுதியில் பிரும்மாண்டமாக எழுந்து நின்ற தைல கிரியையும் கண்ட இளையபல்லவன், எங்கோ நடுக்கடலுக் கிடை மனிதர்கள் கைகளுக்குச் சாதாரணமாக எட்ட முடியாத இடத்தில் ஆண்டவன் எத்தகைய இன்பங்களைச் சிருஷ்டித்திருக்கிறான் என்று எண்ணி எண்ணிப் பரவசப் பட்டான். இத்தனை இன்பங்களையும் அடைய மனிதன் செய்யும் முயற்சியும் அந்த முயற்சியில் அவன் செய்யும் அக்கிரமங்களுங்கூட அவன் நெஞ்சில் அந்தத் தருணத்தில் எழுந்து நின்றதால், பேராசை மட்டும் மனித உள்ளத்தி லில்லாமல் இருந்தால் இந்த இன்பங்களை அவன் எப்படிப் பகிர்ந்து கொண்டு எத்தனை மகிழ்ச்சியுடன் வாழலாம் என்றும் எண்ணிச் சோகப் பெருமூச்சொன்றும் விட்டான். இந்த நினைப்புகளுக்கிடையே மாநக்காவரம் அழகுடன் தனக்குத் தந்துள்ள ஆபத்தும் அவனுக்குத் தெள்ளென உள்ளத்தில் ஊறவே சற்றுக் கவலையுடனேயே காளத்தி நதி பாயும் முகத்துவாரத்தையும் துறைமுகத்தின் இதரப் பகுதிகளையும் பார்த்தான்.

முகத்துவாரத்திலிருந்து சற்றுத் தள்ளிக் கிழக்குப் பக்கத்தில் கலிங்கத்தின் அந்த நான்கு பெரும் கப்பல்களும் நின்றிருந்ததால் சரியாக அவை மாநக்காவரத்தின் துறைமுகத்தை அடைந்து விட்டதையும், மேற்குப் பகுதியில் இருந்த நதி வேகம் கடலின் அந்தப்புறத்தை அணுகவிடா தென்பதையும் அறிந்துகொண்ட இளையபல்லவன், தான் என்ன முயன்றாலும் எதிராளியின் தயவில்லாமல்

* 1846–கீழ்த்திசை வந்த காலதீயா (டேனிஷ்) ஆராய்ச்சிக் குழுவின் தலைவர் Dr. Rink இந்த நதிக்கு Galathea (காலதீயா) என்று பெயரிட்டதாக ஒரு வரலாறு உண்டு. ஆனால் அதற்கு வெகு காலத்திற்கு முன்பே பழந்தமிழர் இதைக் காளத்தி நதி என்று அழைத்து வந்திருக்கிறார்கள் என்றும் தெரிய வருகிறது.

துறைமுகத்துள் கடல் புறாவைக் கொண்டு போக முடியா தென்ற முடிவுக்கு வந்தான். பலவர்மன் உளறலிலிருந்து துறைமுகத் தலைவனிடமிருந்து எந்தவிதமான கருணை யையோ உதவியையோ எதிர்பார்ப்பதும் பயனற்றது என்பதை யும் இளையபல்லவன் புரிந்து கொண்டானாகையால் அதிக முன்னெச்சரிக்கையுடனும் தந்திரத்துடனும் தான் நடந்து கொள்ளவேண்டுமென்ற முடிவுக்கு வந்தான். இத்தனை யோசனையிலும் அவனுக்கு ஆதரவளித்த அம்சமும் ஒன்றிருந்தது. மாநக்காவரத்தின் கடற்கரையோரமாக வளர்ந்து புஷ்ப ஒட்டியாணம் போல் அதைச் சூழ்ந்திருந்த பூமரச் சோலைகளும், அந்தச் சோலைகளை அடுத்துக் கடல்நீரை அணைத்து நின்ற பெரும் கடற்கோரைகளும் அவனுக்கு ஓரளவு சாந்தியை அளித்தன.

இப்படியாக அந்தத் தீவின் அமைப்புகள், அந்த அமைப்புகளால் ஏற்படக்கூடிய பலாபலன்கள், கஷ்ட நஷ்டங்கள் ஆகிய அனைத்தையும் எடைபோட்டுக் கொண்டு நின்ற இளையபல்லவன் காலைக் கதிரவன் தலை காட்டிய அந்தச் சமயத்தில் துறைமுகத்திலிருந்து ஒரு பெரும் படகு தனது மரக்கலத்தை நோக்கி வருவதைக் கவனித்ததும் தான் சோதனைக்குத் தயாராக வேண்டுமென்பதைத் தீர்மானித்துக் கொண்டு, "அமீர்! அமீர்!" என்று இருமுறை கூவினான். அருகே ஓடிவந்த அமீருக்கும் அந்தப் படகைக் காட்டி, "அமீர்! அதோ பார்! எதிரி வருகிறான்," என்று கூறினான்.

அமீர் பதிலேதும் சொல்லவில்லை; இடுப்புக் கச்சை யிலிருந்த குறுவாட்களை மெள்ளத் தடவினான். அமீரின் மனப்போக்கைப் புரிந்துகொண்ட இளையபல்லவன், "அவற்றுக்கு இப்பொழுது தேவையில்லை அமீர். அவற்றைத் தற்சமயம் உபயோகிப்பது நம்மை ஆபத்திலேயே அழுத்தும்," என்று எச்சரித்ததன்றி, "இந்த விநாடி முதல் நாமனைவரும் கலிங்கத்தின் கடல் வீரர்கள் என்பது நினைவிருக்கட்டும்," என்று கூறினான்.

ஏதும் புரியாத விழிகளை இளையபல்லவன் மீது நாட்டிய அமீர், "நாமா? கலிங்கத்தின் மாலுமிகளா? என்று முதல் கலிங்கத்தின் சேவையில் இருக்கிறோம்?" என்று வினவினான் குழப்பமும் இகழ்ச்சியும் கலந்த குரலில்.

"இன்று காலை முதல்" என்று கூறிய இளையபல்லவன் கடல்புறாமீது கம்பீரமாகப் பறந்துகொண்டிருந்த கலிங்கத்தின் கொடியைக் காட்டினான்.

அமீரின் பெருவிழிகள் ஆச்சரியத்தால் மலர்ந்தன. "அப்படியானால் மாநக்காவரம்..." என்று துவங்கிய அமீர் ஆச்சரியம் இதயத்திலும் விரிந்ததால் வாசகத்தை முடிக்காமல் இழுத்தபடியே விட்டான்.

"கலிங்கத்தின் வசம்தானிருக்கிறது அமீர்," என்று அமீரின் இதய வாசகத்தைப் பூர்த்தி செய்தான் சோழர் படைத் தலைவன்.

"உங்களுக்கென்ன, சோதிடம் தெரியுமா?" என்று அமீர் வினவினான், மேலும் ஆச்சரியம் உள்ளத்தில் பொங்கி எழ.

"மருந்து சொன்னேன், மந்திரம் சொன்னேன், இப்பொழுது சோதிடம் சொல்கிறேன். ஆய கலைகள் அறுபத்து நான்கினையும் அறிவதில் தவறென்ன அமீர்?" என்று கூறிய இளையபல்லவன் பேச்சில் நகைச்சுவை இருந்தாலும் குரலில் அந்தச் சுவை சிறிதும் தெரியவில்லை. குரலில் கவலையே மண்டிக் கிடந்தது.

"நீங்கள் சொல்வது புரியவில்லை," என்றான் அமீரும் கவலையுடன், இளையபல்லவன் குரலிலிருந்த கவ்லையைக் கவனித்ததால்.

"கடல் புறா பெரும் ஆபத்தில் சிக்கிக் கொண்டிருக்கிறது. சற்று நாம் நிதானம் தப்பி நடந்தால் கடல் புறா நாம் கைப்பற்றிய கலிங்கத்தின் மரக்கலங்கள், இந்த மூன்றிலுமுள்ள மாலுமிகள் அனைவரும் அழிந்து போவோம். அந்த அழிவிலிருந்து நம்மை விடுவித்துக்கொள்ள மருந்து கண்டுபிடித்தேன். மந்திரம் கண்டுபிடித்தேன். சோதிடமும்

இப்பொழுது சொன்னேன். மருந்து பலவர்மன், மந்திரம் அதோ பறக்கும் கலிங்கத்தின் கொடி. சோதிடம் உதிர்ந்தது பலவர்மன் உளறலிலிருந்து. மாநக்காவரம் கலிங்கத்தின் பெரும் கயவனொருவன் கையிலிருக்கிறதென்பதை பலவர்மன் மயக்கத்தில் உளறினான். அதைக்கேட்ட பின்புதான் உன்னிடம் சொன்ன திட்டத்தை வகுத்தேன்," என்று விளக்கிய இளையபல்லவன், "சொல்லிவிடு அமீர், எல்லோரிடமும் சொல்லிவிடு. கடல் புறா கலிங்கத்தின் மரக்கலம். புதிதாக ஸ்ரீவிஜயத்தில் நிர்மாணிக்கப்பட்டது. கலிங்கத்திற்கு அனுப்ப மாலுமிகளை அமர்த்த இங்கு வந்திருக்கிறது. இதில் உள்ள அனைவரும் கலிங்கத்தின் மாலுமிகள். தெரிகிறதா?" என்று உத்தரவிட்டான்.

"தெரிகிறது" என்று கூறிய அமீர் சந்தேகத்துடன் இளைய பல்லவனை நோக்கினான்.

"என்ன சந்தேகம் அமீர்? நான் சொல்வது விளங்கவில்லை உனக்கு?" இளையபல்லவன் கேள்வி திடமாக எழுந்தது.

"விளங்குகிறது." அமீரின் பதிலில் சிறிதும் திடமில்லை.

"பின் என்ன?"

"இருப்பினும் ஒரு சந்தேகம்!"

"என்ன சந்தேகம்?"

"கடல் புறாவிலேயே மாலுமிகள் இருக்கிறார்கள்."

"ஆம் இருக்கிறார்கள்."

"பிடிபட்ட இரு மரக்கலங்களிலும் மாலுமிகள் இருக்கிறார்கள்!"

"ஆம்."

"இவர்களிருக்கக் கலிங்கத்துக் கடல் புறாவை அனுப்ப மாலுமிகளைத் தேடி மாநக்காவரம் வருவானேன்."

"பலமான காரணம் இருக்கிறது."

"என்ன காரணமோ?"

"காரணம் பலவர்மன்."

இதைக்கேட்ட அமீர் மெள்ள நகைத்தான். "மயங்கிக் கிடக்கும் பலவர்மன் காரணமா!" என்று வினவினான் நகைப்பின் ஊடே.

"அவன்தான் காரணம்," என்றான் படைத்தலைவன் உறுதியான குரலில்.

"ஏன்?" என்று மீண்டும் வினவினான் அமீர்.

இளையபல்லவன் பதில் கூறினான். பதிலைக் கேட்டுத் திகைத்தே போனான் அமீர். "என்ன! என்ன!" என்று இருமுறை அந்தத் திகைப்புக்கிடை வினவவும் செய்த அமீரின் பெருவிழிகள் அத்தனை திகைப்பிலும் பயங்கரமாக உருண்டன.

இளையபல்லவன் மீண்டும் அந்தப் பதிலை அமைதி யுடன் சொன்னான், "பலவர்மன்தான் கடல் புறாவின் தலைவர்" என்று.

"பலவர்மன் தலைவரா? கடல் புறாவுக்கா?" அமீரின் ஒவ்வொரு கேள்வியும் சுரீல் சுரீலென எழுந்தது.

"ஆம்!"

"அவருக்கு நாங்கள் கீழ்ப்படிய வேண்டும்."

"ஆம்."

"அவர் உத்தரவை நானும் கண்டியத்தேவரும், கூல வாணிகரும் நிறைவேற்ற வேண்டுமாக்கும்?" அமீரின் பேச்சில் பெரும் வெறுப்பும் கோபமும் மண்டிக் கிடந்தது.

"அது தேவையில்லை," என்று கூறிய இளையபல்லவன் இதழ்களில் புன்முறுவல் படர்ந்தது.

"எது தேவையில்லை," என்று காரணமில்லாமல் சீறினான் அரபுநாட்டு அமீர்.

"அவர் உத்தரவுகளுக்குப் பணிய வேண்டிய தேவை யில்லை."

"அவர் தலைவரானால், அவர் உத்தரவிட்டால் படியாமல் என்ன செய்வது?"

"உத்தரவிட்டால்தானே படியவேண்டும்?"

"ஆம்!"

"பயப்படாதே, அவர் உத்தரவிடமாட்டார்."

"ஏன்?"

"மயக்கமாயிருக்கிறார்?"

"மயக்கம் தெளிந்தால்?"

"தெளியாது!"

"எப்படித் தெரியும் உங்களுக்கு? வைத்தியத்திலும் பரிச்சயம் உண்டா?"

"கிடையாது, வைத்தியத்தில் பரிச்சயமுள்ளவனிடம் சொல்லியிருக்கிறேன்."

"என்ன சொல்லியிருக்கிறீர்கள்?"

"தலைவரை விழிக்கவிட வேண்டாமென்று." இதைச் சர்வ சாதாரணமாகத்தான் இளையபல்லவன் சொன்னான். அந்தச் சொற்களின் அர்த்தத்தைப் புரிந்துகொண்ட அமீரின் விழிகள் முன்னைவிட அதிகமாக மலர்ந்தன. இளையபல்லவன் அத்தனைக் கொடூரமாக மாற முடியும் என்பதை அமீர் சிறிதுகூட நம்ப முடியாததால் தன் பெரு உதடுகளைத் திறந்து "பலவர்மனைக் கொன்றுவிட..." என்று சொற்களை உதிர்க்க முற்பட்டு நிறுத்தினான்.

"இல்லை. கொல்லச் சொல்லவில்லை. அவன் இறப்பதால் நமக்கு லாபமில்லை" என்றான் இளையபல்லவன்.

"லாபமிருந்தால் கொன்று விடுவீர்களா?"

"லாபமிருந்தால் என்பதைவிட அவசியமிருந்தால் என்ற சொல்லை உபயோகப்படுத்தலாம் அமீர்."

"அந்தச் சொல் உங்கள் கொலையுணர்ச்சிக்குத் திருப்தியைத் தரும் போலிருக்கிறது."

"ஆமாம் அமீர். போரில் எதிரிகளை அவசியத்தினால் கொல்லுகிறோம். இல்லாவிட்டால் அவர்கள் நம்மைக்

கொன்று விடுவார்கள்; தற்காப்புக்காகக் கொல்வதைச் சாத்திரம் அனுமதிக்கிறது."

"சாத்திரத்தை நன்றாகப் படித்திருக்கிறீர்கள்." அமீரின் குரலில் இகழ்ச்சி தொனித்தது.

"அதனால்தான் பல காரியங்களைச் சாதிக்க முடிகிறது" என்று விளக்கினான் இளையபல்லவன்.

இளையபல்லவன் நோக்கும் போக்கும் அமீருக்குச் சரியாகப் பிடிபடவில்லை. இருப்பினும் தலைவன் சொல்லை என்றும் தட்டாத அமீர் அப்பொழுதும் தட்டாமலே நடந்து கொண்டான். காயப்பட்டுப் படுத்திருக்கும் பலவர்மனை எந்த நன்மையையோ லாபத்தையோ அவசியத்தையோ முன்னிட்டுக் கொல்வது சரியாகாது என்ற முடிவே வீரனான அமீரின் மனத்தில் எழுந்தது. கொல்லும் உத்தேசமில்லாமல் அவனை நினைவிழக்க மருந்து கொடுக்கச் சொல்வது தவறு என்று நினைத்தான் அமீர். இருப்பினும் தனது எண்ணங்களை வெளிக்குக் காட்டாமல் "அடுத்து என்ன செய்யவேண்டும் படைத்தலைவரே?" என்று வினவினான் வறண்ட குரலில்.

அவன் கேட்ட நேரத்தில் கடல் புறாவை அணுகி வந்து கொண்டிருந்த படகின் மீதே கண்களை நாட்டிக் கொண் டிருந்த இளையபல்லவன், "அமீர், இக்கப்பலின் தலைவர் அக்ஷயமுனைக் கோட்டைத் தலைவர் பலவர்மர். நான் அவருடைய உபதலைவன். இடையே சோழர் கப்பல்களுடன் போரிட நேர்ந்தபோது பலவர்மர் காயமுற்றுச் சிகிச்சை யிலிருந்து வருகிறார் என்று நமது மாலுமிகளுக்குச் சொல்லி வை. குணவர்மரை ஓர் அறையில் அடைத்து வை. வெளியில் தலைகாட்ட வேண்டாமென்று எச்சரித்துவிடு" என்று விடுவிடு என்று உத்தரவிட்டான்.

"காஞ்சனாதேவியையும் அறையில் அடைத்து விடவா?"

"வேண்டாம். காஞ்சனாதேவி பலவர்மனின் வளர்ப்பு மகள்."

"ஓகோ!"

"ஆம். புரிகிறதா?"

"புரிகிறது."

"சரி வேலையைக் கவனி."

இளையபல்லவன் இட்ட பணிகளைச் செய்யச் சென்ற அமீர் திடீரெனத் திரும்பி வந்து, "படைத்தலைவரே! உமது பெயர் என்ன?" என்று வினவினான்.

இளையபல்லவன் ஒரு விநாடிதான் யோசித்தான். "என் பெயர் கங்கதேவன்," என்று கூறினான். திடீரென நினைவுக்கு வந்த கலிங்க நாட்டுப் பெயரொன்றைச் சொல்லி வைத்த படைத்தலைவன் எத்தனை பயங்கரமான தவற்றைச் செய்து விட்டோம் என்பதை அடுத்த இரண்டு நாழிகைகளுக்குள் புரிந்துகொண்டு பிரமித்தான்.

தூரத்தே வந்த படகு அடுத்த இரண்டு நாழிகைகளில் கடல் புறாவை அடைந்தது. அதில் வந்த மாநக்காவரக் கடல் படைத்தலைவன் வெகு லாகவமாக நூலேணியில் ஏறிக் கடல் புறாவின் தளத்தில் குதித்தான். அவனை வரவேற்ற இளைய பல்லவன், "தாங்கள்..." என்ற கேள்வியொன்றை மிகப் பணிவுடன் வீசி மரியாதைக்கு அறிகுறியாகத் தலையும் தாழ்த்தி வணங்கினான்.

தயக்கமின்றியும் அதிகாரத் தோரணையிலும் கிடைத்தது பதில்: "கங்கதேவன். கலிங்கத்தின் கடற்படைப் பிரிவின் தலைவன். மன்னன் பீமதேவரின் ஊழியன்?" என்று.

அத்தியாயம் 9

# தேவர் இருவர்

காளத்தி நதியின் முகத்துவாரத்திலிருந்து காலை நேரத்தில் படகில் வந்து கடல் புறாவின் தளத்தில் குதித்த வனிடம் இளையபல்லவன் குரூரமான நடத்தையை எதிர் பார்த்தான், வஞ்சகத்தை எதிர்பார்த்தான், மிதமிஞ்சிய அதிகாரத்தை எதிர்பார்த்தான். இன்னும் பலப்பல விஷயங்களை எதிர்பார்த்தானென்றாலும் அவன் பெயர் கங்கதேவனாயிருக்க முடியும் என்ற ஒன்றை மட்டும் எதிர்பார்க்கவில்லயாகையால், வந்தவன் உச்சரித்த பெயரைக் கேட்டதும் ஒரு விநாடி பிரமித்தே போனான். காக்கை உட்காருவதற்கும் பனம்பழம் விழுவதற்கும் ஏற்படும் எதிர் பாராத ஒற்றுமை போல அமீர் பெயர் கேட்டதும் திடீரெனத் தனக்கு வாய்க்கு வந்த பெயரைச் சொல்லப் போக அதே பெயர் வந்தவனுக்கும் இருந்ததை எண்ணி அந்த விபரீத ஒற்றுமையின் சிந்தனையில் பிரமிப்பு அடைந்ததன்றி உள்ளத்தே சற்று நகைத்துக் கொண்டான் இளையபல்லவன். கங்கதேவன் என்ற பெயர் சாதாரணமாகக் கலிங்கத்தார் ஏற்று வந்த பெயராதலால் அமீர் கேட்டதும் அந்தப் பெயரே தனக்கு நினைவுக்கு வந்ததை எண்ணிப்பார்த்த இளைய பல்லவன் இனி எப்பொழுதாவது தனது பெயரை மாற்றிக் கொள்ள அவசியம் நேரிடும் பட்சத்தில் மிகுந்த எச்சரிக்கை யுடன் அபூர்வமான பெயரை வைத்துக்கொள்ள வேண்டு மென்று தன்னைத்தானே எச்சரித்துக் கொண்டான். இப்படி உள்ளத்தே பிரமிப்பும், நகைப்பும், எச்சரிக்கையும் ஏற்பட்ட போதிலும் அதைச் சிறிதும் வெளிக்குக் காட்டாத இளைய பல்லவன், கலிங்கத்தின் அந்தப் படைத்தலைவனுக்குத் தலையை நன்றாகத் தாழ்த்தி வணங்கி, "கலிங்கத்தின்

கடற்படைத் தலைவர் வரவால் கடல் புறா பயன்பெற்றது" என்று முகமனும் கூறி அவனை வரவேற்றான்.

காளத்தித் துறைமுகத்திலிருந்து வந்த கங்கதேவன் பெரிய தலையுடனும், பருத்து வீங்கிய இமைகளுடனும், அவற்றில் புதைந்து கிடந்த ஆழமான கண்களுடனும், தடித்த மீசையுடனும் பார்ப்பதற்கு மிகப் பயங்கரமாய் இருந்தான். அவன் இடையே இருந்த நீண்ட வாளும் அது தடவி நின்ற தொடையும்கூடப் பயங்கரத் தோற்றத்தையே தந்தன. கங்க தேவன் இளையபல்லவனைவிட இரண்டடி உயரமாயும் பல அடிகள் பருமனாயும் இருந்ததால் பெரிய ராட்சதனைப் போல் நின்றான் அவன் கடல் புறாவின் தளத்தில். அவன் தலைமயிர்கள் கூடக் கன்னாபின்னாவென்று கலைந்து காளத்தி நதி முகத்துவாரத்தில் தெரிந்த கடற்கோரைகளைப் போல மிக முரடாகவே தொங்கிக் கொண்டிருந்ததால் தென் கலிங்க மன்னன் பீமனின் கீழ்த்திசைக் கடற்படைத் தலைவன் சாட்சாத் கொலைகாரன் போலவே காட்சியளித்தான். அவன் அணிந்திருந்த உடை விலை உயர்ந்ததாய் இருந்தாலும் சரியாக அணியப்படாததிலிருந்தும், அந்த உடை கலிங்கத்தின் கடற்படை உடையாக இல்லாமல் வேறு நாட்டு உடையாய் இருந்ததிலிருந்தும் அந்தக் கொலைகாரத் தலைவன், பெயருக்குத்தான் கலிங்கத்தின் கடற்படைத் தலைவனே யொழிய உண்மையில் சுயலாபத்துக்கு உழைக்கும் கொள்ளைக்காரர் குழாத்தையே சேர்ந்தவன் என்பதைப் புரிந்துகொண்ட இளையபல்லவன் அவனிடம் தான் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்துகொள்ள வேண்டிய அவசியத்தை உணர்ந்து கொண்டான்.

இளையபல்லவன் கங்கதேவனை எடைபோட்டுக் கொண்டிருந்த சமயத்தில் கங்கதேவனும் படைத்தலைவனை எடை போட முற்பட்டுத் தனது ஆழ்ந்த கண்களால் அவனை ஆராய்ந்தான். அந்த ஆராய்ச்சி ஒரே விநாடியில் முடிந்ததும் அவன் கண்கள் கடற் புறாவின் தளத்தை ஒருமுறை சந்தேகத்துடன் துழாவின. பிறகு மிதமிஞ்சிய சந்தேகத்துடன் இளைய

பல்லவன் மீது நிலைத்தன. அவன் கன்னங்கள் ஒருமுறை உப்பி அழுந்தவே பெரிய உதடுகள் அசைந்தன. அசைந்த உதடுகளிலிருந்து எழுந்தன கடுங்குரலில் சொற்கள். "நீ யார்?" என்று குற்றவாளியை விசாரிக்கும் நீதிபதியைப்போல் கங்க தேவன் கேட்டாலும், அவன் குரலில் நீதிபதியின் தொனி யில்லை, கொலைகாரத் தொனியே இருந்தது.

இளையபல்லவன் பதில் தயக்கமின்றி வந்தது. "கலிங்கத்தின் கடற்படையின் உபதலைவர்களில் ஒருவன், ஆகவே தங்களுக்கும் அடிமை" என்றான் இளையபல்லவன் மீண்டும் ஒருமுறை தலைவணங்கி.

ஆழ்ந்த சந்தேகக் கண்கள் மறுபடியும் கூர்ந்து நோக்கின இளையபல்லவனை. கேள்வியும் இடிபோல் எழுந்தது. "உன் பெயர்?" என்று கேட்டான் கங்கதேவன்.

இளையபல்லவன் முகத்தில் அடிமைக் களை நன்றாகச் சுடர்விட்டது. "இப்பொழுது சொல்வதற்கில்லை" என்ற அவன் குரலில் போலி அடக்கமும் பயமும் ஒலித்தன.

"ஏன் சொல்வதற்கில்லை?" கங்கதேவன் குரல் கடுமையுடன் ஒலித்தது.

"துணிவில்லை."

"ஏன் துணிவில்லை?"

"தலைவர் எதிரில் அதைச் சொல்வது தகாது."

"நீ கூறுவது புரியவில்லை எனக்கு."

"தலைவர் பெயரைத் தலைவர்தான் உச்சரிக்கலாம். அடிமைகள் உச்சரிக்கலாகாது."

கங்கதேவனுடைய ராட்சத முகத்தில் திருப்தி பூரணமாக நிலவியது. சின்ன மனிதர்களுக்குப் பெரிய பதவிகளையும் தாங்க முடியாத குணங்களையும் பிறர் அளிக்கும் போது அந்தச் சின்ன மனிதர்கள் முகத்தில் ஏற்படும் அசட்டுப் பெருமை கங்கதேவன் முகத்திலும் படர்ந்தது. விகாரமான அவன் உதடுகள் அகல விரிந்து விகாரமான ஒரு

புன்முறுவலையும் காட்டின. "உன் பெயரும் கங்கதேவனா?" என்று ஆச்சரியத்துடன் வினவினான் கங்கதேவன்.

"தலைவர் பெயரைத் தாங்கும் பாக்கியம் அடிமைக்கும் இருக்கிறது" என்று இளையபல்லவன் புன்முறுவல் கொண்டான்.

கங்கதேவன் சற்றுப் பெரிதாக நகைத்தான். "இதுவரை இந்தப் பிராந்தியத்தில் ஒரு கங்கதேவன்தானிருந்தான். இப்பொழுது நீ போட்டிக்கு வந்து விட்டாய். நல்லது, நல்லது" என்று நகைப்பின் ஊடே பேசவும் பேசினான்.

"தலைவருடன் போட்டியிட அடிமைக்கு எந்தத் தகுதியுமில்லை!" என்றான் இளையபல்லவன்.

இளையபல்லவன் தன்னைத் தாழ்த்திச் சொல்லிக் கொண்ட ஒவ்வொரு சமயத்திலும் எதிராளியின் முகம் மலருவதைக் கண்டு உள்ளூரத் திருப்தியே அடைந்தான் இளையபல்லவன். இப்படிச் சில்லறைப் பெருமையிருந்தாலும் வந்தவன் அதிக முட்டாளில்லை என்பதை அடுத்த சில விநாடிகளில் இளையபல்லவன் புரிந்துகொண்டான். இளைய பல்லவன் பெயரைக் கேட்டதும் ஓரளவு திருப்தியைக் காட்டிய கங்கதேவன் அத்துடன் பேச்சை நிறுத்திக்கொண்டு விடுவிடு என்று கடல்புறாவின் தளத்தில் நடக்க முற்பட்டான். அந்தத் தளத்தை ஒருமுறை சுற்றி வந்த பிறகு தள்ளிக் கடலில் ஊசலாடி நின்ற மற்ற இரு மரக்கலங்களையும் கவனித்தான். அப்படிச் சுற்றி வருகையிலும் மற்ற மரக்கலங்களைப் பார்வை யிடும் போதும், கடல் புறாவில் இருந்த மாலுமிகளைத் திரும்பத் திரும்ப ஊன்றிப் பார்த்த கங்கதேவன் கண்களில் சந்தேகம் பெரிதும் படர்ந்தது. ஆகவே கடல் புறாவைச் சுற்றி வந்து நடுப் பாய்மரத்தண்டின் அருகே நின்றுகொண்ட கங்க தேவன் தன்னைத் தொடர்ந்து வந்துகொண்டிருந்த இளைய பல்லவனை நோக்கி, "கங்க தேவ!" என்று அழைத்தான் திடீரென்று.

"தலைவரே!" என்று பணிவுடன் கேட்கும் பாவனையில் நின்று கொண்டான் இளையபல்லவன்.

"இந்த மரக்கலம் நன்றாக இருக்கிறது," என்றான் கங்கதேவன்.

"உத்தரவு கொடுத்தால் ஒரு திருத்தம் சொல்கிறேன்," என்று இளையபல்லவன் மன்றாடும் குரலில் கேட்டான்.

"திருத்தமா?" கங்கதேவனின் கரிய பெரிய புருவங்கள் வியப்பால் மேலெழுந்து ஆழத்திலிருந்த கண்களைப் பளிச்சிடச் செய்தன.

"ஆம். ஒரு திருத்தம். தலைவர் உத்தரவிட்டால்."

"என்ன திருத்தம், சொல்?"

"இந்த மரக்கலம் நன்றாக இருக்கிறது என்று சொன்னீர்கள்."

"ஆம். சொன்னேன்."

"இதைவிடச் சிறந்த மரக்கலம் கிழக்குக் கடலில் கிடையாது என்று சொல்லியிருக்க வேண்டும்."

"ஏன்?"

"இதன் எடை மற்ற மரக்கலங்களைப் போல் இருமடங்கு."

"அப்படியானால் வேகம் குறையும்."

"இல்லை, வேகம் நான்கு மடங்கு."

"அப்படியா?"

"ஆம்! ஆனால் அது மட்டுமல்ல," என்ற இளைய பல்லவன் ரகசியம் பேசுபவன் போல் குரலைத் தாழ்த்தினான். அக்கம் பக்கத்திலும் பார்த்தான்.

அவன் அப்படித் திருட்டுத்தனமாகப் பார்த்ததிலிருந்து அந்த மரக்கலத்தைப்பற்றி ஏதோ பெரிய மர்மம் இருப்பதை உணர்ந்துகொண்ட கங்கதேவன், "சொல், வேறென்ன?" என்றும் வினவினான்.

"இது பெரிய போர்க்கலம்," என்று மெதுவாகச் சொன்னான் இளையபல்லவன்.

"அதிலென்ன ரகசியம்? அதுதான் பார்க்கும்போதே தெரிகிறதே," என்றான் கங்கதேவன்.

"பார்க்கும்போது போர்க்கலம் சாதாரண மனிதனுக்கும் தெரியும். ஆனால் எப்பேர்ப்பட்ட போர்க்கலம் என்பதுதான் தெரியாது."

"எப்பேர்ப்பட்ட போர்க்கலம்?"

"இது ஒரே சமயத்தில் நான்கு பெரும் போர்க்கலங்களை அழிக்கவல்லது."

இதைக்கேட்ட கங்கதேவன் முகத்தில் வியப்புக்குறி நன்றாகப் படர்ந்தது. "என்ன! உண்மையாகவா?" என்ற கேள்வியிலும் வியப்பு மண்டிக் கிடந்தது.

"சத்தியமாக" என்றான் இளையபல்லவன் திடமான குரலில். அதைத் தொடர்ந்து, "இல்லாவிட்டால்..." என்று ஏதோ ஆரம்பித்து, "சரி சரி, அதற்கு இப்பொழுது அவசர மில்லை," என்று கூறினான்.

"சொல்! இல்லாவிட்டால் என்ன!" என்றும் அதட்டினான் கங்கதேவன்.

"அதை நீங்கள் இந்த மரக்கலத்தின் தலைவரிடம் நாளையோ மறுநாளோ தெரிந்துகொள்ளப் போகிறீர்கள்" என்று இளையபல்லவன் பேச்சை மாற்றுவதுபோல் பாசாங்கு செய்தான்.

"ஏன் இப்பொழுது மரக்கலத் தலைவர் பேச மாட்டாரோ?" என்று கேட்டான் கங்கதேவன்.

"பேசமாட்டார்," என்று கூறினான் இளையபல்லவன்.

"நான் பேச வைக்கிறேன் அவனை," என்று இடியென வார்த்தைகளை உதிர்த்தான் கங்கதேவன்.

"தங்களால் முடியாது," என்று இளையபல்லவன் சர்வ சாதாரணமாகச் சொன்னான்.

"என்னால் முடியாதா? பார் இப்பொழுது," என்று கூறி அக்ரமந்திரத்தை நோக்கி நடக்க முற்பட்டான் கங்கதேவன்.

"தலைவர் நிதானமிழக்கக் கூடாது" என்ற இளைய பல்லவனின் சொற்கள் கங்கதேவனைத் தேக்கி நிறுத்தின.

அவன் முகத்தில் பயங்கரமான கோபம் அடுத்த விநாடி நிலவியது. "எனக்கு நீ புத்தி சொல்கிறாயா?" என்று இடிபோல் இரைந்து அந்தத் தளம் அதிரும்படியாகக் கூவினான்.

"அடிமை சொன்னதைத் தலைவர் புரிந்துகொள்ள வில்லை" என்றான் இளையபல்லவன்.

"புரிந்துகொள்ளும் சக்தி உனக்கிருக்கிறதாக்கும்? இருக்கட்டும். உன் தலைவன் மூளைக்கும் அந்தச் சக்தியைக் கொடுக்கிறேன்."

"அதுதான் முடியாது."

"ஏன்?"

"தலைவர் இரண்டு நாட்களாக மயக்கத்திலிருக்கிறார். அவருக்கு எதையும் புரிய வைக்க இரண்டு நாளாகும் என்று சிகிச்சை செய்யும் வைத்தியர் சொல்லுகிறார். ஆகவே தற்சமயம் தங்கள் முறைகள் அவர் சம்பந்தப்பட்ட வரையில் பயன்படா. அவர் இந்த நிலையில் இல்லாவிட்டால் கடல் புறா கடல் மோகினியை நோக்கி வந்திருக்கவும் வந்திருக்காது."

இளையபல்லவன் நிதானமாகவும் பணிவான வருத்தம் தோய்ந்த குரலிலும் இந்த வார்த்தைகளைச் சொன்னான். மெள்ள மெள்ள உள்ள நிலைமையைப் புரிந்துகொண்ட கங்கதேவன் பலவர்மன் உடல்நிலைக்கு என்ன கோளாறு என்பதை வினவவே பாதி உண்மையும் பாதி பொய்யும் கலந்த விவரங்களைச் சொல்ல முற்பட்டான் இளைய பல்லவன். கங்கதேவனை நோக்கி, "தலைவரே!" என்று மிகப் பணிவுடன் விவரத்தைத் துவக்கிய இளையபல்லவன் "இந்த அரிய பெரும் மரக்கலம் ஸ்ரீவிஜய சாம்ராஜ்ய சக்கரவர்த்தி ஜெயவர்மரால் தென்கலிங்கநாட்டு மன்னர் பீமதேவருக்காக நிர்மாணிக்கப்பட்டது. சோழநாட்டுக் கடலாதிக்கத்தை உடைக்க பீமதேவர் அளித்த உதவிக்கு நன்றி தெரிவிக்க இந்த அரும்பெரும் மரக்கலம் தயாரிக்கப்பட்டது. இது தென்கலிங்க மன்னரின் சொந்த உபயோகத்துக்காகப் பாலூர்ப் பெருந் துறைக்குச் செல்கிறது. இதன் சூட்சுமங்கள் பல, யந்திர

வசதிகள் பல, இணையற்ற காணிக்கை இது பீமதேவருக்கு. இதைத் தயாரித்தவர்கள் இந்தக் கலையில் தலைமுறை தலைமுறையாகப் பயிற்சியுள்ளவர்கள். சிலர் ஸ்ரீவிஜயத்தி லுள்ள சீனர்கள். சிலர் கடலோடும் சூளு இனத்தினர். சிலர் ஸ்ரீவிஜயத்தில் அடிமைப்பட்டுக் கிடக்கும் தமிழர்கள். இதைத் தயாரிக்க ஆறு மாதங்கள் ஆகிவிட்டன. இதை மன்னரிடம் கொண்டு சேர்க்கும் பொறுப்பை ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதி என் தலைவரிடம் ஒப்படைத்தார். வரும் வழியில் கடல் புறா நீங்கள் பார்க்கும் அந்த இரு சோழர் மரக்கலங்களால் தாக்கப் பட்டன. தலைவர் கடல் புறாவை நடத்தி மிகச் சாமர்த்திய மாகத்தான் போரிட்டார். வெற்றியும் அடைந்தார். ஆனால் போரின் இடையே அவர் தலையில் பாய்ந்து விட்டது ஒரு வேல். அதனால் காயமடைந்து மயக்கமுற்றுப் படுத்திருக் கிறார். இந்த நிலையில் அவரைக் கலிங்கம் கொண்டு செல்ல முடியாதென நினைத்தேன். ஆகவே நீங்களிருக்கும் இந்தக் கடல் மோகினிக்குக் கொண்டு வந்தேன்" என்று கூறினான்.

இளையபல்லவன் பேச்சை நிறுத்தியதும் கங்கதேவன் இதழ்களில் பயங்கரப் புன்முறுவலொன்று படர்ந்தது. "உன் கதை திருப்தியாயிருக்கிறது," என்று நிதானமாக ஆனால் பயங்கரமாகச் சொன்னான் கடைசியில் கங்கதேவன்.

"கதையா?" இளையபல்லவன் மேலுக்கு வியப்புடனும் உள்ளே ஓரளவு அச்சத்துடனும் கேட்டான்.

"ஆம், கதைதான்," என்ற கங்கதேவன் சொற்கள் நெருப்புப் பொறிகளென உதிர்ந்தன.

"எப்படிக் கதையாகும் அது?" என்று வினவினான் இளையபல்லவன்.

பதிலுக்குப் பேய்ச் சிரிப்புச் சிரித்தான் கங்கதேவன். "அட முட்டாள், நான் கடல் மோகினியைப் பிடித்துப் பதினைந்து நாட்கள்கூட ஆகவில்லை. இதற்குள் நான் இங்கிருப்பது உனக்கு எப்படித் தெரியும்? உன் சரக்கை என்னிடமே காட்டுகிறாயே, சடமே! உன் வாழ்க்கை இன்றுடன் முடிந்து

விட்டது. கங்கதேவனிடம் விளையாடிவிட்டாய் நீ" என்று கோபநகை நகைத்து அந்த நகை ஒலியின் ஊடே சொற்களையும் கொட்டினான்.

அந்தப் பேய்ச் சிரிப்பைச் சிறிதும் லட்சியம் செய்யாத இளையபல்லவன், "தலைவர் நிலைமையைச் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை," என்று சற்றுக் கடுமையாகச் சொன்னான்.

திடீரெனக் கடுமையாகிவிட்ட இளையபல்லவனின் குரலைக் கேட்டதால் சற்று நிதானப்பட்டுச் சிரிப்பை அடக்கிக்கொண்ட கங்கதேவன், "எதைப் புரிந்துகொள்ளவில்லை நான்?" என்று கேட்டான்.

"தாங்கள் இங்குக் கடல் புறாவின் தளத்தில் இருக்கிறீர்கள்–"

"ஆம், இருக்கிறேன். இருந்தாலென்ன?"

"இந்த மரக்கலத்தின் உபதலைவனை அவமதிப்பாகப் பேசி இருக்கிறீர்கள்–"

"பேசினேன், இன்னும் பேசுவேன்."

"கொல்வதாகவும் பயமுறுத்தியிருக்கிறீர்கள்."

"பயமுறுத்தலல்ல, செய்து காட்டுவேன்."

"அதற்குமுன்–"

"சொல், முட்டாள்."

"இந்த மரக்கலத்தைவிட்டுச் செல்லவிட மாட்டேன், அது மட்டுமல்ல–"

"கொன்று விடுவாயோ?"

"தற்காப்புக்கு அதைச் செய்வதும் தவறாகாது."

இளையபல்லவன் கடைசி வார்த்தைகள் தயக்கமின்றி, திடமாக இருந்ததைக் கவனித்த கங்கதேவன் சற்று நிதானப் படுத்திக் கொண்டு, "இப்பொழுது என்ன செய்ய உத்தேசிக் கிறாய்?" என்று வினவினான்.

அவன் உள்ளத்தில் திகில் மூண்டுவிட்டதைக் கவனித்தான் இளையபல்லவன். பார்ப்பதற்குப் பயங்கரமா

யிருக்கும் கங்கதேவன் உண்மையில் ஓரளவு கோழை என்பதை உணர்ந்து கொண்டான். ஆகவே அதற்குமேல் சம்பாஷணையை நீட்ட இஷ்டப்படாமல் பணிவான குரலில் சொன்னான்: "தலைவர் தவறாக நினைக்கக் கூடாது. பதற்றத்தில் பேசிவிட்டேன். எங்கள் மரக்கலத் தலைவர் நிலையைப் பார்த்தால் நான் சொன்னதனைத்தும் உண்மை என்பதைப் புரிந்து கொள்வீர்கள்."

தலைவன் அறையைக் காட்டச் சொல்லி, கங்கதேவன் இளையபல்லவனைத் தொடர்ந்து சென்றான். அக்ரமந்திரத் துக்குள் நுழைந்ததும் அங்கு நினைவிழந்து கிடந்த பலவர்மனை நீண்ட நேரம் உற்று நோக்கினான் கங்கதேவன். பலவர்மனை நோக்க நோக்க கங்கதேவனின் ஆழ்ந்த விழிகள் அதிகமாக உள்ளே பதுங்கி விபரீதமாகக் காட்சியளித்தன.

"இவனை எனக்குத் தெரியும். நன்றாகத் தெரியும். இந்தத் துரோகியா இந்த மரக்கலத்தின் தலைவன்!" என்று உதடுகள் உறுமின. பிறகு மெல்ல கங்கதேவன் விழிகள் இளைய பல்லவனை நோக்கித் திரும்பின. இருவர் விழிகளும் சில விநாடிகள் சந்தித்தன. உண்மை கங்கதேவனும் போலி கங்கதேவனும் ஒருவரையொருவர் புரிந்துகொண்டதற்கான பொருள் அந்தக் கலந்த பார்வையில் தெரிந்தது. மீண்டும் ஓர் ஆபத்தைச் சமாளிக்க அவசியமேற்பட்டு விட்டதை இளையபல்லவன் புரிந்துகொண்டான்.

அத்தியாயம் 10

# கங்கதேவனின் விருப்பம்

அக்ரமந்திரத்துக்குள் நுழைந்து உள்ளறை வாயிற்படியில் நின்ற கங்கதேவன், நினைவிழந்து கிடந்த பலவர்மனை விநாடிப் பொழுதில் அடையாளம் கண்டுபிடித்து விட்டதையும் அப்படி அடையாளம் தெரிந்துவிட்டதால் அவன் வாயிலிருந்து உதிர்த்த உக்கிரச் சொற்களையும் அந்தச் சொற்களைத் தொடர்ந்து தன்மீது திரும்பிய விபரீதப் பொருள் துலங்கிய பயங்கரப் பார்வையையும் கவனித்த இளையபல்லவன் மீண்டும் ஒரு புயல் உருவாகிறதென்பதைப் புரிந்துகொண்டாலும், தன் மனத்தில் ஓடிய எண்ணங்களை வெளிக்குக் காட்டாமல், "நாலைந்து நாட்களாகவே இப்படித் தான் படுத்திருக்கிறார்," என்று கங்கதேவனிடம் கூறினான்.

கங்கதேவன் உடனே பதிலேதும் சொல்லாமல் அந்த உள்ளறையை ஒருமுறை துழாவிப் பார்த்தான். பிறகு பலவர்மன் தலைப்புறத்தில் உட்கார்ந்து அவனுக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்த காஞ்சனாதேவியைக் கவனித்தான். கடைசியில் காஞ்சனாதேவியைச் சுட்டிக்காட்டி, "யார் இவள்?" என்று வினவினான்.

கங்கதேவன் பார்வையிலும் குரலிலும் இருந்த அவமரியாதையைக் கவனித்த போதும் உணர்ச்சிகளைப் பறக்கவிடாத இளையபல்லவன், "இவர்கள் தலைவரின் புதல்வி" என்று தன் குரலில் மரியாதையையும் ஓரளவு கண்டிப்பையும் காட்டிக் கூறினான்.

கங்கதேவனின் ஆழ்ந்த சிறுவிழிகள் பெரிதாகி விடுவன போல் ஒருமுறை பள்ளத்தில் உருண்டன. "என்னிடம் பொய் உதவாதென்று சொல்லவில்லை நான்?" என்று சீறினான் கங்கதேவன்.

"நான் பொய்யேதும் சொல்லவில்லை!" என்று அடக்கமாகவே வந்தது இளையபல்லவன் பதில்.

"பலவர்மனுக்குப் பெண் ஏது?" என்று மீண்டும் கேட்டான் கங்கதேவன்.

"சொந்தப் பெண் இல்லை."

"இவள்?"

"வளர்ப்புப் பெண்."

"இவள் பெயர்?"

"உண்மைப் பெயர் எனக்குத் தெரியாது. ஆனால் அக்ஷய முனையில் இவளை மஞ்சளழகியென்று சொல்கிறார்கள்."

"மஞ்சளழகியென்று பேர் உண்டா?"

"உண்மைப் பெயர் அல்ல, காரணப் பெயர். இவள் மேனி பொன்னைப்போல மஞ்சள் நிறம் பெற்றிருப்பதால் மஞ்சளழகி என்று அங்குள்ளவர்கள் அழைக்கிறார்கள்."

இதைக் கேட்டதும் கங்கதேவன் காஞ்சனாதேவி மீது தன் கண்களை ஓட்டினான். அவள் கையும் கழுத்தும் முகமும் அத்தனை மஞ்சளில்லை என்றாலும் பொன்னிறம் பெற்றுக் கண்ணைக் கவர்ந்ததைக் கண்ட கங்கதேவன் சித்தத்தில் ஏதேதோ எண்ணங்கள் எழுந்து உலாவின. அதன் விளைவாக அவன் வேறெந்தக் கேள்வியையும் கேட்காமல் அந்த அறையை விட்டு வெளியே கிளம்பினான். அவனைத் தொடர்ந்து தளத்துக்கு வந்த இளையபல்லவன் முகம் உணர்ச்சியற்று வெறும் கல்லாயிருந்தது. அவன் நடையிலும் ஒரு கடுமை இருந்ததை மற்ற மாலுமிகள் மட்டுமின்றி அமீரும் கண்டியத்தேவனும்கூட கவனித்தார்கள். இளையபல்லவன் அக்ரமந்திரத்துக்குள் சென்ற சமயத்தில் மருந்துக் கலவை போடக் கீழறைக்குச் சென்றிருந்த சேந்தனும் அந்தச் சமயத்தில் உயரத் தளத்துக்கு வந்து இளையபல்லவனின் உணர்ச்சிகளின் இறுக்கத்தைப் புரிந்துகொண்டு அதற்குக் காரணம் புரியாமல் மிரண்ட விழிகளை மற்றவர் மீது ஓடவிட்டான்.

இளையபல்லவன் உக்கிரத்துக்குக் காரணம் சொல்லும் நிலையில் யாருமில்லையென்றாலும், அவனைக் கடும் சிற்றத்துக்குள்ளாக்கக் கூடிய சம்பவம் ஏதோ அக்ரமந்திரத்தில் நடந்திருக்கிறதென்பதை அமீர் மட்டும் தெளிவாகப் புரிந்து கொண்டானாகையால், கங்கதேவனைத் தொடர்ந்து நடந்த இளையபல்லவனைப் பின்பற்றித் தானும் நடந்து சென்றான். கடல்புறாவின் தளத்தை மீண்டும் இருமுறைகள் சுற்றிப் பார்த்த கங்கதேவன் தன்னைத் தொடர்ந்து வந்த இளைய பல்லவனை நோக்கித் திடீரெனத் திரும்பி, "இதில் ஏதோ சூட்சுமங்கள், யந்திர வசதிகள் இருப்பதாகச் சொன்னாயே?" என்று வினவினான்.

"ஆம். இருக்கின்றன தலைவரே," என்றான் இளைய பல்லவன் வரட்டுக் குரலில்.

"காட்டு பார்க்கிறேன்," என்று கங்கதேவன் கேட்டான் இளையபல்லவனை.

இந்தச் சொற்களைக் கேட்டதும் அமீர் சற்று அயர்ந்து விட்டானே தவிர, சிறிதும் அயராத இளையபல்லவன், "தளத்தில் நின்றபடி சூட்சுமங்களை நீங்கள் அறிய முடியாது தலைவரே, படகில் கடல்புறாவிலிருந்து சிறிது தூரம் தள்ளி நின்றால் இதன் சூட்சுமங்களைப் பார்க்க முடியும், புரிந்து கொள்ளவும் முடியும்" என்றான்.

"ஏனப்படி?" என்று வினவினான் கங்கதேவன்.

"இருக்கிற சூட்சுமங்கள் இறக்கைகளுக்கு அடியில் இருக்கின்றன. தளத்திலிருந்து உருளைகளைத் திருப்பினால் இறக்கைகள் எழுந்து விரியும். அவற்றின் அடியிலிருக்கும் யந்திர வசதிகளை மேலிருந்து நீங்கள் எப்படிப் பார்க்க முடியும்?" என்று பதிலுக்கு இளையபல்லவன் கேட்டு வைத்தான்.

கங்கதேவன் அதைப்பற்றிப் பிறகு சிரத்தை ஏதும் காட்ட வில்லை. மீண்டும் யோசனையில் ஆழ்ந்து தனது பெரும் மீசையைத் தடவி விட்டுக்கொண்டான். அடுத்தபடி அவன்

உதடுகளில் பழைய மந்தகாசம் நிலவியது. "சரி கங்கதேவா! உன் மரக்கலங்களை இனி நீ துறைமுகத்துக்குள் கொண்டு வந்துவிடலாம். போரில் ஏதாவது மரக்கலங்கள் சேதப் பட்டிருந்தால் பழுதும் பார்க்கலாம். உனக்கு வேண்டிய வசதிகளைச் செய்து தருகிறேன். என்ன வேண்டும் உனக்கு?" என்று கேட்டான் இளையபல்லவன் தோள்மீது கையைப் போட்டுக் கொண்டு.

அவன் உணர்ச்சிகளின் திடீர் மாறுதல், திடீரெனத் தோள்மீது கையைப் போட்டு அவன் காட்டிய நேசப்பான்மை அனைத்தும் நல்லதற்கல்ல என்பதைப் புரிந்துகொண்ட இளையபல்லவன், கங்கதேவன் போலவே நடிக்கத் தொடங்கி, "தலைவர் உத்தரவுப்படி எதை வேண்டுமானாலும் செய்கிறேன். முதலில் சோழர் மரக்கலங்கள் இரண்டைத்தான் பழுது பார்க்க வேண்டும். அவைதான் போரில் அதிகமாகப் பாதிக்கப்பட்டிருக்கின்றன. அவற்றைத் துறைமுகக் கரையில் உடனே இழுக்க அனுமதி வேண்டும்" என்றான்.

"அனுமதி கொடுக்கப்பட்டது." இதைச் சொல்லி இளையபல்லவனின் முதுகை ஆதரவுடன் தட்டினான் கங்கதேவன்.

"தலைவர் அன்பு நிகரற்றது" என்று பணிவைக் காட்டினான் இளையபல்லவன்.

"சரி, அடுத்தபடி கடல்புறாவை என்ன செய்ய உத்தேசம்?"

"தங்கள் நான்கு கப்பல்களும், பழுது பார்க்க வேண்டிய சோழர் கப்பல்கள் இரண்டும் ஆக ஆறு கப்பல்கள்தான் துறைமுகத்தில் நிற்கமுடியும். சோழர் கப்பல்கள் பழுது பார்க்கப்படும் வரை கடல்புறா துறைமுக வாயிலிலேயே நிற்பது நலமல்லவா?" என்று இளையபல்லவன் தனது கருத்தையும் சொல்லி, கங்கதேவனை யோசனை கேட்பது போல் கேள்வியாகவும் வசனத்தைத் தொடுத்தான்.

கங்கதேவன் தனது கையை இளையபல்லவன் தோளி லிருந்து எடுத்துவிட்டுத் திரும்பி அவனை நோக்கினான்.

"உனக்குக் கடற்பழக்கம் நிரம்ப இருக்கிறது" என்று சிலாகிக்கவும் செய்தான்.

இளையபல்லவன் புன்முறுவல் செய்துவிட்டுச் சொன்னான், "தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும் என்று தமிழர் சொல்வார்கள், கடற்பழக்கமும் அப்படிப்பட்டது தான்" என்று.

"உண்மை, உண்மை!" உற்சாகத்துடன் உதிர்ந்தன கங்கதேவன் சொற்கள்.

"ஆகவே கடலில் சிறு வயது முதல் பழகிவிட்டவர்களுக்கு எங்கு சென்றாலும் துறைமுக அமைப்பு, அங்குள்ள இடவசதி இவற்றைக் கவனிப்பது வழக்கமாகிவிடுகிறது" என்று தான் பிறவி மாலுமியென்ற ஒரு பெரும் பொய்யைச் சர்வ சாதாரணமாகச் சொன்னான் இளையபல்லவன்.

இதற்குப் பிறகு கங்கதேவன் போக்கு அடியோடு மாறி விட்டது. அவன் முகம் திடீரென மலர்ச்சி பெற்றது. "கங்கதேவா! நானும் உன்னைப் போலத்தான் சிறு வயது முதல் கடலோடுகிறேன். எனக்கு நிலத்தைக் கண்டாலே பிடிப்பது கிடையாது. கடலோடுவதிலும் போராடுவதிலுமே என் இன்பமெல்லாம் இருக்கிறது. நம்மிருவர் மனப்போக்கு, வாழ்க்கை எல்லாம் ஒரே விதம். பெயரிலும் பொருத்தம் இருக்கிறது. இனி இந்தக் கடல் மோகினி சம்பந்தப்பட்டவரை நீ வேறு நான் வேறு அல்ல. நீ இடும் கட்டளைகள் என் கட்டளைகளைப் போல நிறைவேற்றப்படும். ஆனால் நீ ஒருசில விஷயங்களை நினைவில் வைத்துக்கொள்ள வேண்டும்" என்றான் அன்பு ததும்பும் குரலில்.

"சொல்லுங்கள் தலைவரே" என்றான் சோழர் படைத் தலைவன்.

"எனக்கும் கடற்போர் தெரியும்."

"சந்தேகமென்ன?"

"கப்பல்கள் எந்த இடத்தில் எப்படி நிறுத்தப்பட்டால் எனக்குப் பாதகம் என்பதும் தெரியும்."

"இது தெரியாதிருக்க முடியுமா?"

"இதுவரை நீ தெரிந்து கொண்டால் போதும். தவிர இன்னொரு விஷயம்."

"என்ன தலைவரே!"

"பலவர்மனை என்ன செய்யப் போகிறாய்?"

"கடல் மோகினியில் இறக்கி, சிகிச்சை செய்ய வேண்டும். அது என் கடமை" என்று இளையபல்லவன் கூறி, கங்கதேவனை ஏறெடுத்து நோக்கினான்.

தயக்கமின்றி மிகுந்த அன்புடன் வந்தது கங்கதேவன் சொற்கள்.

"உன் கடமை மட்டுமென்ன, என் கடமையும் அதுதான். பலவர்மனைக் கொல்ல எனக்குக் காரணமிருக்கிறது. ஆனால் தென் கலிங்க மன்னருக்கு மரக்கலம் கொண்டு செல்லும் இவனைக் கொல்வது அரசத் துரோகமாகும். ஆகவே இம்முறை இவனைத் தப்ப விடுகிறேன். கடல் மோகினியில் இவனுக்குத் தீங்கு ஏதும் நேரிடாது. என் விடுதியிலேயே இவனை வைத்து சிகிச்சை செய்யலாம். மருத்துவர்கள்கூட இருக்கிறார்கள்" என்றான் கங்கதேவன்.

"மருத்துவர் தேவையில்லை. என்னிடம் ஒருவன் இருக்கிறான்" என்று பதில் கூறினான் இளையபல்லவன்.

"நல்லது, நல்லது, அவனைக்கொண்டே சிகிச்சை செய்து கொள்" என்ற கங்கதேவன், "கங்கதேவா! நீ துறைமுகத்துக்குள் உன் மரக்கலங்களை இன்று மாலை கொண்டு வந்துவிடலாம். எனது நான்கு கப்பல்களையும் சற்று விலக்கி, சோழர் மரக் கலங்களுக்கு வழிவிடப் பிற்பகல் வரை பிடிக்கும்" என்று கூறிவிட்டுப் புறப்படச் சித்தமானான்.

அவன் புறப்பட முற்பட்டு விட்டதைக் குறிப்பாலுணர்ந்த கடல்புறாவின் மாலுமிகள் வெகு சீக்கிரம் நூலேணியைத் தொங்கவிட்டு இழுத்துப் பார்த்துச் சரி செய்தார்கள். அத்துடன் இளையபல்லவனிடம் விடைபெற்றுக்கொண்டு

நூலேணியில் இறங்க முற்பட்ட கங்கதேவன், "கங்கதேவா!" என்று இளையபல்லவனை அருகில் வரும்படி அழைத்தான். அருகில் வந்த இளையபல்லவனிடம் அவனுக்கு மட்டுமே கேட்கும்படி சொன்னான்: "இதோ பார் கங்கதேவா! யாருக்கும் நான் ஆயுளில் அளிக்காத வசதிகளை உனக்கு அளிக்கிறேன்" என்று.

அந்த முன்னுரைக்குக் காரணத்தை அறியாத இளைய பல்லவன், "ஆம், தலைவரே! அதற்கு நான் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறேன்" என்று கூறினான்.

கங்கதேவன் புன்முறுவல் செய்து ரகசியமாகக் கேட்டான், "கடமைப்பட்டிருப்பதை எப்படிக் காட்ட உத்தேசம்?" என்று.

இளையபல்லவன் மூளை துரிதமாக வேலை செய்தது. "எப்படிக் காட்டச் சொன்னாலும் காட்டுகிறேன்" என்று உதடுகள் உணர்ச்சியின்றிச் சொற்களை உதிர்த்தன.

"எதைச் செய்யச் சொன்னாலும் செய்வாயா?" கங்க தேவன் கேள்வி ஆவலுடன் வந்தது.

"முடிந்ததைக் கண்டிப்பாய்ச் செய்வேன்" என்று பதில் சொன்ன இளையபல்லவன், "என்ன செய்ய வேண்டும் உத்தரவிடுங்கள்" என்று கேட்கவும் செய்தான்.

"சமயத்தில் உத்தரவு வரும் தேவா! சமயத்தில் வரும்" என்று கூறிவிட்டு நூலேணியில் இறங்கிச் சென்று விட்டான் கங்கதேவன்.

அடுத்த சில விநாடிகளில் கங்கதேவன் படகு கடல்நீரைக் கிழித்துக்கொண்டு துறைமுகத்தை நோக்கி வெகு வேகமாகச் சென்றுகொண்டிருந்தது. அந்தப் படகு செல்வதைப் பார்த்துக் கொண்டே நீண்ட நேரம் தளத்திலேயே நின்றுகொண்டிருந் தான் இளையபல்லவன். அமீர் படைத்தலைவனை அணுகி, "படைத்தலைவரே! இவன் எப்படி?" என்று வினவினான்.

"நான் இதுவரை சந்தித்த எதிரிகளுள் மிகவும் அபாய மானவன்" என்று லேசாகக் கவலை பாய்ந்த குரலில் பதில் வந்தது இளையபல்லவனிடமிருந்து.

"பலவர்மனை விடவா?" என்ற அமீரின் கேள்வியில் வியப்பு பிரதிபலித்தது.

"பலவர்மனை விடப் பன்மடங்கு அபாயமானவன்" என்றான் இளையபல்லவன்.

"வெறும் முரடனாயிருக்கிறானே பார்ப்பதற்கு?"

"ஆம்."

"பண்பாடுகூட இருப்பதாகத் தெரியவில்லை."

"அந்தச் சொல்லுக்கே அங்கு இடமில்லை."

"அப்பேர்ப்பட்டவன்..." வாசகத்தை அமீர் முடிக்கவில்லை.

இளையபல்லவனே இடைமறித்து முடித்தான். "அப்பேர்ப்பட்டவன் எப்படிப் புத்திசாலியாயிருக்க முடியுமென்று கேட்கிறாய் அமீர். எனக்கும் வியப்பாகத்தான் இருக்கிறது. இவன் முரடன், பண்பே அறியாதவன். இருப்பினும் கூரிய புத்தி இருக்கிறது. நமது எண்ணங்களை நிமிட நேரத்தில் அலசிவிடுகிறான். இவனிடம் நமது திறமை முழுவதையும் செலுத்த வேண்டிய அவசியமிருக்கிறது. ஆகவே எச்சரிக்கையுடன் இரு அமீர். மற்றவர்களையும் எச்சரிக்கைப்படுத்தி வை. சீக்கிரம் அவனிடமிருந்து நான் செய்தி எதிர்பார்க்கிறேன்."

அமீரின் முகத்தில் கவலை தெரிந்தது. "என்ன செய்தி எதிர்பார்க்கிறீர்கள்?" என்று வினவினான்.

"என்னைச் சீக்கிரம் விருந்துக்கழைப்பான்."

"எதற்கு விஷம் வைத்துக் கொல்லவா?"

"அல்ல. என்னைத் திருப்தி செய்ய."

"எதற்கு உங்களைத் திருப்தி செய்ய வேண்டும்?"

"ஏதோ ஒன்றை என்னிடம் எதிர்பார்க்கிறான் அவன்."

"என்ன என்று ஊகிக்க முடியுமா உங்களால்!"

"ஓரளவு ஊகிக்க முடியும். முழுவதும் ஊகிக்க முடியவில்லை."

"அவன் எதிர்பார்ப்பது?"

இளையபல்லவன் பதில் சொன்னான். அந்தப் பதில் அமீரை அப்படியே தூக்கி வாரிப் போட்டது. தங்கள் அபாயம் உச்ச நிலைக்குச் செல்வதை உணர்ந்துகொண்டான் அமீர். அந்த உணர்வால் பெரும் கோபமும் அவன் முகத்தில் துளிர்விட்டது. "விருந்துக்கு உங்களுடன் நானும் வருகிறேன்" என்றான் அமீர் உக்கிரத்துடன்.

"எதற்கு?" என்று வினவினான் இளையபல்லவன்.

"அந்தப் பாதகனைக் கொல்வதற்கு?" என்றான் அமீர். அவன் சொற்கள் நெருப்புத் துண்டங்களென உதிர்ந்தன. அவன் வலது கையும் இடையிலிருந்த குறுவாளொன்றைப் பயங்கரமாகத் தடவியது.



அத்தியாயம் 11

# காதலெனும் உறவு

கலிங்கத்தின் கிழக்குத் திசை கடற்படைத் தலைவனான கங்கதேவன் தன்னிடம் என்ன எதிர்பார்க்கிறானென்பதை கருணாகர பல்லவன் எடுத்துச் சொன்னதும் மிதமிஞ்சிய கோபத்தின் வசப்பட்ட அமீர் தன் இடையிலுள்ள குறு வாளைப் பயங்கரமாக ஒரு முறைக்கு இருமுறை தடவியதன்றி கங்கதேவன் துணிச்சலை நினைத்து ஓரளவு ஆச்சரியம் கொண்டான். கங்கதேவன் விருப்பத்தை ஊகித்துக்கொண்ட பிறகு அவனை இளையபல்லவன் கொல்லாமல் உயிருடன் கடல்புறாவிலிருந்து அனுப்பி வைத்ததை எண்ணிப் பார்த்ததால் அமீரின் வியப்பு ஆயிர மடங்கு அதிகமாயிற்று. கயவனான கங்கதேவன் தன்னிடமிருந்து எதிர்பார்ப்பது காஞ்சனாதேவியை என்று இளையபல்லவன் உணர்ச்சி களைப் பெரிதும் அடக்கித் தன்னைக் கல்லாக்கிக் கொண்டு சொன்னதைக் கேட்டதும் அமீர் ஒரு விநாடி திகைத்தே போனான். இளையபல்லவன் தன் இதயத்தைக் கல்லாக்கிக் கொண்டு உணர்ச்சிகள் அவன் முகத்தில் தெரிய முற்பட்ட தற்குக் காரணம், கங்கதேவனின் அந்த விபரீத விருப்பமே என்பதை அறிந்து கொண்ட அமீர் இளையபல்லவனுடன் தானும் கரை சென்று விருந்தருந்தும் பாவனையில் கங்க தேவனைக் கொன்றுவிடத் தீர்மானித்தான்.

அவன் தீர்மானம் நன்றாகப் புரிந்தது இளையபல்லவ னுக்கு. காஞ்சனாதேவிமீது காமக்கண்ணை ஓட்டிய அந்தக் கணமே கங்கதேவனைக் கொன்றுவிடத் தன் கரங்கள் துடித்தனவானாலும் தான் மேற்கொண்டிருக்கும் பெரும் பணியும் தனது மரக்கலங்களின் நிலையையும், சுமார் இருநூறு மாலுமிகளின் உயிர்களையும் உத்தேசித்துத் தன் பொறுமை

யின் எல்லையைத் தொட வேண்டிய அவசியத்தை உணர்ந்து அதை முன்னிட்டுத் தன்னை அந்தச் சமயத்தில் அடக்கிக் கொண்ட இளையபல்லவன் அமீருக்கும் பொறுமையையே போதித்தான். "அமீர், கோபத்தைக் காட்ட இது சமயமல்ல. தந்திரத்துக்கும் பொறுமைக்குமே நேரம் இது." என்று சுட்டிக் காட்டிய கருணாகர பல்லவனை ஏறெடுத்து நோக்கிய அமீர் கேட்டான்: "உங்கள் ஊகம் சரிதானா?" என்று.

"பொறுத்துப் பார்! இன்று இரவில் விருந்தில் என்ன நடக்கிறது கவனி," என்று இளையபல்லவன் கூறினான்.

"கங்கதேவன் உணர்ச்சிகளை அத்தனை பகிரங்கமாகக் காட்டினானா?" என்று வினவினான் மீண்டும் அமீர்.

"ஆம் அமீர்! அக்ரமந்திரத்தின் உள்ளறையில் படுத்திருந்த பலவர்மனைக் கண்டதும் முதலில் வெகுண்டான். பிறகு அவன் கண்கள் காஞ்சனாதேவியின் மீதே நிலைத்தன. அவளை விழுங்கிவிடுவதுபோல் பார்த்தான். ஒரு மனிதனின் பார்வையிலிருந்து அவன் எண்ணங்களை எடை போடுவது பிரமாதமல்ல. அந்த விந்தையில்..."

"நீங்கள் நிகரற்றவர் படைத்தலைவரே! இருப்பினும் எனக்குச் சந்தேகமாயிருக்கிறது. கங்கதேவன் விருப்பம் அதுவாயிருந்தால் நமக்கு அத்தனை வசதிகளைச் செய்து கொடுப்பானேன்? மரக்கலங்களைப் பழுது பார்க்க அனுமதிக்கிறான், கடல்புறாவை துறைமுக வாயிலை அடைத்து வைக்கவும் ஒப்புக்கொள்கிறான். இதெல்லாம் சந்தேகத்தை அளிக்கவில்லையா உங்களுக்கு? முக்கியக் கடல்புறாவை துறைமுகத்தின் வெளியில் நிற்க அனுமதிப்பது வியப்பாயில்லையா?" என்று வினவினான் அமீர்.

"வியப்பாகத்தான் இருக்கிறது அமீர்! அதனால்தான் இவனைப்பற்றி எச்சரிக்கையுடன் இருக்க வேண்டுமென்று சொல்கிறேன்" என்றான் இளையபல்லவன்.

கடல்புறா போன்ற பெரும் கப்பல் துறைமுகத்துக்குக் குறுக்கே நின்று அடைத்துவிட்டால் அதை இயக்கும்

தலைவன் கையில் இந்தக் கடல் மோகினி இருக்குமென்பது அவனுக்குத் தெரியாதா?" என்று மீண்டும் வினவினான் அமீர்.

"நன்றாகத் தெரியும்" என்றான் இளையபல்லவன்.

"அப்படியானால் ஏன் ஒப்புக்கொண்டான் உங்கள் ஏற்பாட்டுக்கு?"

"சொந்த ஆசையை உத்தேசித்து இருக்கலாம்."

"காஞ்சனாதேவியை உத்தேசித்தா?"

"அப்படித்தானிருக்கும்."

இந்த வழிகளில்தான் கங்கதேவன் எண்ணங்களை எடை போட்டான் இளையபல்லவன். ஆனால் அன்று பகலிலேயே தான் எடை போட்டது எத்தனை தவறானது என்பதையும் புரிந்து கொண்டான். கங்கதேவன் காஞ்சனாதேவியின் கட்டழகில் மனத்தைப் பறிகொடுத்திருந்தாலும் தன்னையும் தன்வசமுள்ள கடல் மோகினியையும் காப்பாற்றுவதில் எத்தனை சாமர்த்தியமாக நடந்துகொண்டிருக்கிறான் என்பதைக் கவனித்ததும் கடற்போரில் யாருக்கும் சளைக்காத ஒரு திறமைசாலியிடம் தான் சிக்கிக்கொண்டிருப்பதை இளையபல்லவன் உணர்ந்தான்.

கங்கதேவன் தன் வாக்கிலிருந்து இம்மிகூடப் பிசக வில்லையே தவிர தனது காவலையும் இம்மிகூடத் தளர்த்த வில்லையென்பதை, துறைமுக மரக்கலங்கள் நகர்த்தப்பட்ட முறையிலிருந்தே இளையபல்லவன் ஊகித்துக் கொண்டான். துறைமுகத்திலிருந்த கலிங்கத்தின் பெரும் மரக்கலங்கள் நான்கும் கங்கதேவன் படகுத் துறையை அடைந்த அரை ஜாமத்திற்குப் பிறகு அசையத் தொடங்கிவிட்டதைக் கடல் புறாவின் தளத்திலிருந்து கவனித்தான் சோழர் படைத் தலைவன். படகில் சென்ற கங்கதேவன் கரையை அடைந்ததுமே சட்டென்று கரையில் நின்றதையும் அங்கிருந்த சிலரைக் கூப்பிட்டு ஏதோ சொன்னதையும் கவனித்த இளைய பல்லவன் அடுத்து நடப்பதைக் கவனிக்கும்படி அமீருக்கும் கண்டியத்தேவனுக்கும் உத்தரவிட்டுக் காஞ்சனாதேவி இருந்த

அக்ரமந்திரத்தை நோக்கி நடந்தான். கங்கதேவன் வந்து போனதன் விளைவாகப் பெரும் மனச்சங்கடத்துடன் உட்கார்ந்திருந்த காஞ்சனாதேவியைக் கண்டதும், "காஞ்சனா! கவலை எதற்கு நானிருக்கும்போது உனக்கு?" என்று ஆதரவு தரும் சொற்களைக் கொட்டவும் செய்தான் படைத் தலைவன்.

சொற்களைக் கொட்டி ஆதரவு தருவதாயிருந்தாலும் இளையபல்லவனின் குரலில் ஆதரவும் உறுதியுமில்லா திருந்ததைக் கவனித்த காஞ்சனாதேவி தன் கருவிழிகளை அவன் மீது திருப்பினாள். அந்த அழகிய விழிகளில் அந்தச் சந்தர்ப்பத்தில் அச்சமிருந்தது. முகம்கூடச் சற்று சிவந்திருந்தது உணர்ச்சி மிகுதியால். அவள் செவ்விய உதடுகள் மெல்ல அசைந்தன. "கவலை உண்மையில் தேவையில்லையா?" என்று உதிர்ந்த சொற்களில் கவலை மிதமிஞ்சிக் கிடந்தது.

இளையபல்லவன் பதில் சொல்ல முடியாமல் சங்கடப் பட்டான். கவலைக்குக் காரணம் நிரம்ப இருக்கிறதென்று அவன் உணர்ந்திருந்தபடியாலும், அவளிடம் பொய் சொல்ல இஷ்டப்படாததாலும், "கவலைக்கிடமான நிலைதான். ஆனால் இதைவிட மோசமான நிலைமையைச் சமாளித்தது இல்லையா நான்?" என்று வினவினான் அவன்.

காஞ்சனாதேவி பெருமூச்சு விட்டாள், "ஆம், சமாளித் திருக்கிறீர்கள். பாலூர்ப் பெருந்துறையின் பிரமுகர் வீதியையும் கடற்கரை வாயிலையும் நான் எப்படி மறக்க முடியும்?" என்று சொன்ன அவள் உதடுகள் உணர்ச்சியால் மடிந்தன.

பஞ்சணையில் உட்கார்ந்திருந்த அந்தப் பைங்கிளியின் அருகே சென்று அவள் தோள்மீது தன் இடக்கையை ஆதரவுடன் வைத்த படைத்தலைவன் அவள் தோளை வலிக்கும்படி சற்று இறுக்கிப் பிடித்தான். அவன் வலது கை அவளது குழல்களை மெல்ல வருடியது. அவள் அழகிய முகம் அவன் மார்புக்கருகில் இருந்தது. சற்று நெருங்கினால் அந்தக் கொவ்வை இதழ்கள் தன் மார்பு அங்கியில் புதையும்

என்பதைப் புரிந்துகொண்டான் இளையபல்லவன். அந்த நிலையில் ஆபத்து உணர்ச்சி மறைய ஆசை உணர்ச்சி மேலோங்கக் கேட்டான்: "ஏன் காஞ்சனா! வேறு இடங்கள் உனக்கு நினைவில்லையா?" என்று.

காஞ்சனாதேவிக்கு நினைப்பு இருக்கத்தான் செய்தது. ஆயினும் அவள் அதை ஒப்புக்கொள்ள மறுத்தாள். தன் தலையைச் சற்றுத் திருப்பிப் பின்னால் மயக்கமாகப் படுத்திருந்த பலவர்மனை நோக்கினாள். மீண்டும் இளைய பல்லவனிருந்த பக்கம் திரும்பி, "வேறு எந்த இடத்தைக் குறிப்பிடுகிறீர்கள்?" என்று கேட்டாள் மிக மெதுவாக.

"இடத்தையல்ல, இடங்களை என்று சொன்னேன்" என்றான் இளையபல்லவன் ரகசியமாக.

"உம் உம். சரி! இடங்கள், எந்த இடங்கள்" என்று குழைந்தது காஞ்சனாதேவியின் குரல்.

"முதலில் கோதாவரிப் புனல். அங்கு..."

"அங்கு."

"புனலாடினாய். என்னைத்தான் மறைவில் இருத்தி விட்டாய்."

"உம்."

"பிறகு அதற்கடுத்த புஷ்பச்சோலை. அதன் வழியாக நடந்து வந்தோம். அப்புறம்..."

"சொல்வதுதானே?"

"கோதாவரிக் கரை தோப்புக் குடிசை... அதன்... அதன் உட்புறம்...""

காஞ்சனாதேவி மௌனம் சாதித்தாள். பேச முடிய வில்லை அவளால். அவள் தலை மெள்ள அவன் மார்பில் சாய்ந்தது. அவன் அவளருகில் உட்கார்ந்தான் பஞ்சணை முகப்பில். பின்னால் கிடந்த பலவர்மனைப் பற்றிய கவலை அந்தச் சமயத்தில் அவ்விருவருக்கும் இல்லை. அவர்கள் இருவரும் எங்கோ பழைய சம்பவங்கள் எழுப்பிய காற்றில்

பறந்து கொண்டிருந்தார்கள். அவள் பக்கத்திலமர்ந்த இளைய பல்லவன் இடதுகை அவள் இடையைச் சுற்றி வளைத்து அருகில் இழுத்தது. முகம் குனிந்து அவள் காதுக்கருகில் வந்தது. "சிறு வணிகர் வீதி காஞ்சனா" என்றான் அவள் காதில் கருணாகர பல்லவன்.

"உம்."

"அந்தச் சிறு வணிகர் வீதி... அங்கு."

"அங்குதான்... அமீர்..."

"வீடு இருக்கிறது... இருந்தது, அந்த விடுதியில்."

"உம்."

"இரவில் நிலா!"

"சாளரத்தருகே கொடிகள்... பூங்கொடிகள்..."

"ஊம்... ஊம்."

"அதனூடே புகுந்த பால் இரவு."

காஞ்சனாதேவி பதில் சொல்லவில்லை. பதில் வராத காரணத்தைப் புரிந்துகொண்ட இளையபல்லவன் மேலும் ஓதினான் அவள் காதுகளில், "கட்டிலில் ஒரு பெண்புறா... அதை நோக்கிச் சாளரத்தின் மூலம் புகுந்தான் ஒருவன்..." என்று.

காஞ்சனாதேவியின் கை இளையபல்லவன் கையுடன் இழைந்தது. வாய் பேச மறுத்ததைக் கைகள் பேசின.

"அங்குதான் காஞ்சனா..." என்று கடைசியாகச் சொல்லிப் பெருமூச்சு விட்டான் இளையபல்லவன்.

காஞ்சனாதேவி மறுபுறம் திரும்பி அவனை நன்றாகப் பார்த்தாள்; "அங்குதான்... என்ன?" என்றும் கேட்டாள்.

"எனக்கு ஞானோதயம் ஏற்பட்டது" என்றான் இளைய பல்லவன்.

"உங்களுக்கா! ஞானோதயமா?"

"வீட்டுப் புறா, காட்டுப் புறா, கடல் புறா என்று அங்குதான் சொன்னேன், நினைவிருக்கிறதா உனக்கு?"

"இருக்கிறது."

"இந்த மரக்கலத்தை அதனால்தான்..."

"கடல் புறாவென்று அழைக்கிறீர்கள். அதை அன்றே புரிந்துகொண்டேன்."

"என்று?"

"நீங்கள் என்னை மீட்டு இங்கு கொண்டு வந்த அன்று."

"நல்லது காஞ்சனா. இப்பொழுது தெரிகிறதா உனக்கு என் மன உறுதி?" என்று கேட்டான் இளையபல்லவன்.

கடாரத்துக் கட்டழகி காஞ்சனாதேவி அவனை மீண்டும் தன் விழிகளால் அளந்தாள். "புரிகிறது படைத் தலைவரே. ஆனால் ஒரு சந்தேகமும் இருக்கிறது" என்றாள் பிறகு.

இளையபல்லவன் விழிகள் அவள் விழிகளுடன் கலந்தன. இடது கை இடையைக் கன்னிச் சிவக்கப் பிடித்தது. "என்ன சந்தேகம்?" என்று வினவினான்.

"நாம் பிரிந்து ஓர் ஆண்டுக்கு மேல் ஆகிறது..." என்று நீட்டினாள் காஞ்சனாதேவி.

"ஆம்," என்று தலையை ஆட்டினான் இளைய பல்லவன்.

"இந்த ஓர் ஆண்டில் நீங்கள் பல நாடுகளைப் பார்த்திருப்பீர்கள்" என்றாள் அவள்.

"பார்த்திருக்கிறேன்."

"நாடுகளை மட்டுந்தானா?"

"வேறெதைப் பார்த்திருப்பேன்?"

"பல பெண்களைப் பார்த்திருப்பீர்கள்."

"பார்த்திருப்பேன்."

"பார்த்தது மட்டும் தானா?"

"வேறென்ன?"

"கொள்ளைக்காரராக இருந்திருக்கிறீர்களே, கொள்ளைக் காரர் நடத்தை..."

இளையபல்லவன் புன்முறுவல் கொண்டான். "அப்படி என்மீது சந்தேகம் ஏற்படுகிறதா உனக்கு?" என்று வினவினான்.

"சந்தேகமில்லை..." என்று இழுத்துப் பேசினாள் காஞ்சனா தேவி.

"ஏன் இழுக்கிறாய்? திட்டமாகத்தான் சொல்லேன்" என்றான் இளையபல்லவன்.

"சந்தர்ப்பங்கள் மனிதர்களைக் கெடுக்கின்றன" என்றாள் காஞ்சனாதேவி சற்றுத் திடமான குரலில்.

இதைக்கேட்ட இளையபல்லவன் பஞ்சணை முகப்பிலிருந்து எழுந்து அவளெதிரே நின்று சற்று முரட்டுத்தனமாகவே கூறினான், "சந்தர்ப்பங்களுக்கு இடங்கொடாத வீரர்களும் உண்டு காஞ்சனா!" என்று.

அந்தப் பதிலில் புதைந்து கிடந்த ஆவேசம், முரட்டுத்தனம் இரண்டும் பெரும் திருப்தியைத் தந்தது காஞ்சனாதேவிக்கு. அந்தத் திருப்தியின் விளைவாகச் சற்றுக் குழைந்தது அவள் குரல். "உண்மையாக..." என்று ஏதோ ஆரம்பித்தாள்.

"உண்மையாக! கேள் காஞ்சனா" என்று வந்தது இளைய பல்லவன் பதில்.

"நீங்கள் எந்தப் பெண்ணையும் இந்த ஓர் ஆண்டில் சந்தித்ததில்லையா? பலதரப்பட்ட அழகிகள் உள்ள இந்தக் கிழக்கு நாடுகளில் உங்களைப் போன்ற கொள்ளைக்காரரை மயக்கும் அழகி ஒருத்திகூட கிடைக்கவில்லையா?"

இதைக்கேட்ட இளையபல்லவன் மனத்தில் திகில் பரவியது. அந்தக் கேள்வியைத் தொடர்ந்து மஞ்சளழகி அவன் இதயத்தில் எழுந்து நகைத்தாள். அவள் கால்கள் கரை அலையோரத்தில் நின்றுகொண்டிருந்தன. அந்த அழகிய கால்களை அலைகள் தடவித் தடவிச் சென்றன. இளைய பல்லவன் இதயத்தில் கடல் மோகினிக்குப் பதில் எழுந்தாள் அக்ஷயமுனை மோகினி. அவளை இதயத்திலிருந்து அழிக்க

முயன்று ஒருமுறை அந்த அறையின் வாயிலுக்குச் சென்று திரும்பினான் இளையபல்லவன்.

அவன் சங்கடத்தைக் கவனித்த காஞ்சனாதேவியின் இதயத்தில் சந்தேகம் பெரிதும் கொழுந்துவிடத் துவங்கியது. "சரியாகப் போய்விட்டது. நான் நினைத்தது சரியாகப் போய்விட்டது" என்றாள் காஞ்சனாதேவி கடுமையான குரலில்.

"என்ன சரியாகப் போய்விட்டது."

"யாரோ ஓர் அழகி உங்கள் வாழ்க்கையில் புகுந்திருக் கிறாள் என்பது."

"பலர் புகலாம்." கருணாகர பல்லவன் காரணமின்றி உறுமினான்.

"பன்மையிலிருக்கிறதா விவகாரம்?"

"இதில் விவகாரம் ஏதுமில்லை. ஒரு மனிதன் வாழ்வில் தாய் தலையிடுகிறாள், சகோதரிகள் தலையிடுகிறார்கள், அந்தச் சந்தர்ப்பங்கள் வேறு, உறவுகள் வேறு. ஆனால் ஒரு குறிப்பிட்ட உறவில்..."

"சொல்லுங்கள்."

"காதலெனும் உறவில் ஒருத்திதான் தலையிட முடியும்."

"என்ன உறவு சொன்னீர்கள்?"

"காதலெனும் உறவு."

"அதில் நான் ஒருத்திதானா உங்களுக்கு?"

"ஆம்... ஆம்..." தடுமாற்றத்துடன் வந்தது இளைய பல்லவன் பதில். அவன் கண்கள் அவள் கால்களை நோக்கித் தாழ்ந்தன.

"என் கண்களைப் பார்த்துச் சொல்லுங்கள்." காஞ்சனா தேவி கேட்டாள்.

அந்தக் கேள்வி ஏதோ பெரும் சத்தியத்தைச் செய்யச் சொல்வதுபோல் அவன் காதுகளில் ஒலித்தது. பெரும்

திகைப்படைந்தான் அந்தச் சில விநாடிகளில் படைத் தலைவன். அந்தத் திகைப்புடன் அதிர்ச்சியையும் சேர்க்கத் தடதடவென்று உள்ளே நுழைந்தான் அமீர்.

அமீர் வந்தது பெரும் ஆறுதலாயிருந்தது இளைய பல்லவனுக்கு. "என்ன அமீர்?" என்று வினவினான் இளையபல்லவன் அமீரை நோக்கி.

"தளத்துக்கு வாருங்கள்" என்றான் அமீர்.

"ஏன்?"

"துறைமுகத்தைப் பார்க்க வேண்டும்."

"ஏன்?"

பதிலுக்குப் பெரும் அதிர்வெடியை எடுத்து வீசினான் அமீர். அந்த வெடி, காதலெனும் உறவையும் அது அளித்த கனவுலகத்தையும் விநாடியில் தகர்த்தெறிந்தது.



சித்திரம்: லதா




## 12. விசித்திர வரவேற்பு

அத்தியாயம் 12

# விசித்திர வரவேற்பு

காஞ்சனாதேவியின் கேள்விகளால் சிதறுண்டு போன சித்தத்துடன் திண்டாடிய இளையபல்லவன் மீது அமீர் வீசிய வெடி அதுவரை படைத்தலைவனுக்கு இருந்த பல குழப்பங்களைத் தகர்த்துத் தள்ளிவிடவே, "என்ன! என்ன! உண்மையாகவா?" என்று வியப்பும் திகைப்பும் மிகுந்த குரலில் வினவினான் அவன். படைத்தலைவன் உணர்ச்சிகளைக் கண்டும் சிறிதும் தளராமலே பேசத் துவங்கிய அமீர், "உண்மை தான் படைத்தலைவரே! தளத்துக்கு வந்து பாருங்கள். கடல் புறாவைச் சிறைப்படுத்த ஏற்பாடுகள் பலமாக நடக்கின்றன துறைமுகத்தில்" என்று வலியுறுத்தவும் செய்தான்.

அந்தச் செய்தியின் விளைவாக கட்டிலில் உட்கார்ந்து அவன் பதிலுக்காக எதிர்பார்த்திருந்த கடாரத்துக் கட்டழகி யையும் ஏறெடுத்துப் பார்க்காமல் விடுவிடு என்று அறை யிலிருந்து வெளிக் கிளம்பித் தளத்துக்கு வந்த இளைய பல்லவன் துறைமுகத்தின் மீது தன் கண்களை ஓடவிட்டான். கண்கள் கண்ட காட்சி, எதற்கும் கலங்காத அந்தக் கருணாகரனையும் ஒரு கலக்கு கலக்கியது. அதுவரை துறைமுகத்தை அடைத்துக்கொண்டு நின்ற, கலிங்கத்தின் நான்கு பெரும் கப்பல்களும் தனது மரக்கலங்களுக்கு வழிவிட, துறைமுகத்தின் ஒரு பக்கமாக ஒதுங்குவதற்குப் பதில் இரண்டு இரண்டாகப் பிரிந்து துறைமுகத்தின் கிழக்குப் பகுதியில் இரண்டும் மேற்குப் பகுதியில் இரண்டுமாகப் பிரிந்து கொண் டிருந்ததைக் கண்டான் படைத்தலைவன். அப்படி அவை இரண்டு பகுதிகளாகப் பிரிந்து இருபுறத்திலும் அணிவகுக்கும் காவலர்போல் நின்றுவிட்டால் இடையே போகும் எந்த மரக்கலமும் அவற்றின் தாக்குதலுக்கு இருபக்கமும் இலக்காகு

மாதலால் அவை எக்காரணத்தைக் கொண்டும் துறைமுகத்திலிருந்து தப்பி வெளிவர முடியாதென்பதைப் புரிந்து கொண்ட இளையபல்லவன் அமீரை நோக்கி, "அமீர்! இந்தத் துறைமுகத் தலைவனைப் பற்றி என்ன நினைக்கிறாய்?" என்று வினவினான்.

"கடற் போருக்கு இவன் புதியவனல்ல என்று தெரிகிறது" என்றான் அமீர்.

"புதியவனல்ல என்பது மட்டுமல்ல, கடல்போரில் முழுக்க முழுக்கத் திளைத்தவன். அதன் நுணுக்கங்களை நன்கு அறிந்தவன்" என்று இளையபல்லவன் கங்கதேவனைப் பாராட்டினான்.

அந்தப் பாராட்டுதலைக் கேட்ட அமீர், "ஆம் படைத் தலைவரே! இவன் தங்கள் பாராட்டுக்குரியவன்தான். ஆனால் இவன் திறமை பெரும் பாதகமாயிற்றே. அதோ கவனித்தீர்களா அவன் மரக்கலங்களைப் பிரிக்கும் முறையை?" என்று வினவினான்.

"கவனித்தேன். தனது மரக்கலங்களை இரண்டு வரிசைகளாக நிற்க வைத்து இடையே புகும் நம்மை அசைய வொட்டாமல் நிறுத்திவிட ஏற்பாடு செய்கிறான்" என்றான் இளையபல்லவன்.

"நாம் இடையே புகமறுத்தாலென்ன?" என்று அமீர் கேட்டான், தன் பெரு விழிகளால் படைத்தலைவனை ஏறெடுத்து நோக்கி.

"நாம் எப்படி மறுக்க முடியும்? நம் கைவசமிருக்கும் கலிங்கத்து மரக்கலங்கள் இரண்டையும் பழுது பார்க்க வேண்டுமே?"

"அவற்றை மட்டும் கரைக்குக் கொண்டு போவோம். கடல் புறா மட்டும் துறைமுகத்துக்கு வெளியிலேயே நிற்கட்டும்."

"எத்தனை நாள் நிற்க முடியும்?"

"இரண்டு மரக்கலங்களும் பழுது பார்க்கப்படும் வரை."

"பழுது பார்க்க நான்கு நாட்கள் ஆகாதா?"

"ஆகும்."

"அது மட்டும் நாம் கடல் புறாவிலிருந்து தரைக்குப் போய்ப் போய்த் திரும்ப முடியுமா?"

"திரும்புவதில் என்ன கஷ்டம்?"

அமீரின் கேள்வி இளையபல்லவன் முகத்தில் பெரும் கவலைக்குறியைப் பரப்ப வைத்தது. தீவிர சிந்தனைக்குப்பின் சொன்னான் படைத்தலைவன் அமீரை நோக்கி, "அமீர்! பெரும் கயவனொருவனிடம் நாம் சிக்கிக் கொண்டிருக்கிறோம். அவனுடைய மரக்கலங்கள் பிரிந்து நிற்பதன் காரணத்தை நாம் புரிந்துகொண்டதை அவன் உணர்ந்தால் நாம் போருக்கு முனையுமுன்பே நம்மை அவன் அழித்து விடுவான்."

அமீரின் பெரு விழிகளில் ஆச்சரியம் மண்டியது. "அவன் எப்படி நம்மை அழிக்க முடியும் படைத்தலைவரே? கடல் புறாவின் சக்தி உங்களுக்குத் தெரியாதா?" என்று வினவினான் அந்த அரபு நாட்டான்.

"நன்றாகத் தெரியும் அமீர். ஆனால் நீ ஒன்று புரிந்து கொள்ள வேண்டும். கடல் புறாவும் சென்ற கடற்போரில் சிறிது சேதப்பட்டிருக்கிறது. அதையும் பழுது பார்த்துவிட வேண்டும். அதுமட்டுமல்ல. நாம் கடல் புறாவில் இருக்கும் வரை கங்கதேவன் நம்மை எதுவும் செய்ய முடியாது. ஆனால் கரையில் இருக்கும்போது எதையும் செய்யலாம்," என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

"நாம் கரைக்குப் போகாவிட்டால்" என்று வினவினான் அமீர்.

"கடல் புறாவைத் தாக்க நான்கு மரக்கலங்களையும் நடத்திக்கொண்டு கங்கதேவன் வருவான்" என்று பதில் கூறினான் இளையபல்லவன்.

"அந்த நான்கு மரக்கலங்களைக் கடல் புறா சமாளிக்காதா?"

"சமாளிக்கும், ஆனால் வேறு விஷயங்களையும் நாம் சிந்திக்க வேண்டும்."

"என்ன விஷயங்கள் அவை?"

"பலவர்மன் நினைவிழந்து படுத்திருக்கிறான். அவனுக்குச் சிகிச்சை செய்ய கடல் புறாவிலுள்ள வசதிகள் போதா?"

"அவனுக்காக நாம் நமது தலையை வெட்டுப்பாறையில் நீட்ட வேண்டுமா?"

இளையபல்லவன் இதழ்களில் மெள்ளப் புன்னகை யொன்று விரிந்தது. அதுவரை அவன் மனத்திலுள்ள கவலையும் சற்றுத் தளர்ந்திருக்க வேண்டும் என்பதை முகச் சாயைகூட விளக்கியது. "யார் தலையையும் வெட்டுப் பாறையில் கொடுக்க வேண்டியதில்லை அமீர்! நமக்கு இந்தக் கடல் மோகினி தேவை. நமக்கும் நமது பிற்காலத் திட்டத் துக்கும் இது நம் கைவசமாவது இன்றியமையாதது. இதை நோக்கி ஏன் வந்தோம். நினைப்பில்லையா உனக்கு?" என்று வினவினான் இளையபல்லவன்.

"நன்றாக நினைப்பிருக்கிறது படைத்தலைவரே. கடல் மோகினி தமிழர் வசமிருப்பதாக நினைத்தோம். இங்கு வந்து தங்கி வேறு கப்பல்களையும் வாங்கிச் சிறுபடை நிறுவி கடாரத்துக்குச் செல்ல உத்தேசித்தோம். ஆனால் கடாரத்தில் நாம் பார்க்க வேண்டியவர்கள் இடையிலேயே கிடைத்து விட்டார்கள். தவிர, கடல் மோகினி நமது எண்ணத்துக்கு மாறாகக் கலிங்கத்தின் வசம் சிக்கிக் கிடக்கிறது..." என்று இன்னும் ஏதோ சொல்லப்போன அமீர் சட்டென்று பேச்சை நிறுத்திக்கொண்டு அந்த ஆட்சேபணைகளுக்குப் படைத் தலைவன் என்ன பதில் சொல்லப் போகிறான் என்பதை அறியத் தன் கண்களைப் படைத்தலைவன் முகத்துக்காக உயர்த்தினான்.

அமீரின் ஆட்சேபணைகளுக்குப் பதில் சொல்லுமுன்பாக சில விநாடிகள் மௌனம் சாதித்த இளையபல்லவன் கடல் மோகினியின் துறைமுகத்தையே பார்த்துக்கொண்டு நின்றான். பிறகு சரேலென அமீரை நோக்கித் திரும்பி, "அமீர்! தமிழர் வசமிருந்த இந்தக் கடல்மோகினி கலிங்கத்தின் வசமாகி விட்டது. இது மீண்டும் தமிழர் வசம் ஆகிவிட வேண்டியது அவசியமல்லவா?" என்று வினவினான்.

அமீரின் முகத்தில் வியப்புக்குறி விரிந்தது. "அவசியம்தான். ஆனால் முடிகிற காரியமா?" என்று கேட்டான் அவன், இளையபல்லவன் இதயத்தில் ஓடிய எண்ணங்களைப் புரிந்து கொண்டு.

இளையபல்லவன் யோசனையில் மீண்டும் ஆழ்ந்தான். அவன் யோசனை கலைந்து பேசியபோது குரலில் திடம் இருந்தது. "முடியவேண்டும் அமீர், முடியாவிட்டால் நமது லட்சியங்கள் நிறைவேறா" என்ற இளையபல்லவன் அமீரைப் பொருள்பட உற்று நோக்கினான்.

"கலிங்கத்தின் கடற்படையை உடைப்பதுதானே லட்சியம்?"

"ஆம்." தடையின்றி வந்தது இளையபல்லவனின் பதில்.

"அதற்குத்தான் கடல்புறா இருக்கிறதே?"

"கடல்புறா மட்டும் போதாது, கடல்புறா அபூர்வ சிருஷ்டி. கண்டியத்தேவனின், ஏன் பாரதத்தின் கப்பல் கட்டும் கலையின் இணையற்ற சிருஷ்டி. இருப்பினும் அதுமட்டும் இந்தப் பெருங்கடலில் உலாவும். கலிங்கக் கடற்படைப் பிரிவுகளைச் சமாளிப்பது முடியாது. துணைக் கப்பல்கள் நான்காவது வேண்டும். இரண்டு கைவசமிருக்கின்றன..."

"மீதி இரண்டை...!"

"இங்கே சம்பாதிக்கலாம்."

இளையபல்லவன் போக்கு நன்றாகப் புரிந்தது அமீருக்கு. கடல்மோகினியை வசமாக்குவது; தவிர, அங்கிருந்த

கலிங்கத்தின் மரக்கலங்கள் நான்கையும் விழுங்கப் படைத் தலைவன் திட்டமிடுகிறானென்பதையும் சந்தேகமறப் புரிந்து கொண்ட அமீர் மிதமிஞ்சிய வியப்பிலேயே மூழ்கினான்.

கங்கதேவனிடமிருந்து தாங்கள் மீள்வதே கஷ்டம் போலிருக்க, அவன் ஊன்றிக்கொண்ட தளத்தைத் தங்கள் கைவசமாக்குவதும், அவன் மரக்கலங்களைக் கைப்பற்றுவதும் எப்படி முடியும் என்று எண்ணிப்பார்த்த அமீர், படைத் தலைவன் அளவுக்கதிகமாக ஆசைப்படுகிறானென்பதை எண்ணினான். ஆகவே மீண்டும் இளையபல்லவனை ஏதோ கேள்விகள் கேட்க நினைத்து, "படைத்தலைவரே..." என்று துவங்கினான்.

படைத்தலைவன் உரையாடலில் இறங்கும் மனப் பக்குவத்தில் இல்லை. சிந்தனையில் பல விநாடிகள் திளைத்து, கடல்மோகினித் துறைமுகத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றிருந்தான். கடைசியில் முடிவுக்கு வந்து, "அமீர்! நீயும் நானும் இன்னும் இரு உபதலைவர்களும் கரைக்குப் புறப்படச் சித்தமாகுங்கள். நாம் நால்வரும் ஆளுக்கொரு விலை உயர்ந்த ஆபரணத்தை அணிய வேண்டும். கங்கதேவன் பார்த்துப் பிரமிக்க வேண்டும். முன்பு பலவர்மனைப் பார்க்கப் போனபோது எத்தனை ஆடம்பரமாகப் போனோமோ அத்தனை ஆடம்பரம் இப்பொழுதும் வேண்டும். அழைப்பு வந்ததும் அதிக ஆலசியம் வேண்டாம். கண்டியத்தேவரைக் கூப்பிடு," என்றான்.

அமீருக்கு இளையபல்லவன் உத்தரவு வியப்பையே அளித்தாலும் படைத்தலைவரின் இதயத்தில் ஏதோ புதிய புதிய திட்டம் உருவாகி விட்டதென்பதைப் புரிந்து கொண்டதால், அதற்குமேல் பேசாமல் தூரத்தே மாலுமி களுக்கு ஏதோ உத்தரவு இட்டுக் கொண்டிருந்த கண்டியத் தேவனை அருகில் வரும்படி சைகை செய்தான். கண்டியத் தேவன் அருகில் வந்ததும் இளையபல்லவன் பிறப்பித்த உத்தரவுகளைக் கேட்ட அமீர் அசந்து போனான். எதற்காகப்

படைத்தலைவன் தன் தலையைக் கொண்டு போய் எதிரியின் வலையில் நுழைக்கிறான் என்பது அவனுக்குப் புரியவில்லை. கண்டியத்தேவனுக்கு என்ன சொல்வதென்று புரியவில்லை. அவன் மிரண்டு விழித்தான். இளையபல்லவனின் முதல் உத்தரவே அவனைத் தூக்கிவாரிப்போட்டது.

அருகில் வந்த கண்டியத்தேவனிடம், "தேவரே! முதன் முதலில் நீர் நாம் கைப்பற்றியுள்ள கலிங்கத்தின் கப்பல் களிரண்டையும் கரைக்குச் செலுத்தும், பழுது பார்க்க. கடல் புறாவும் அதோ இரண்டாகப் பிரியும் கங்கதேவன் போர்க் கலங்களுக்கு இடையே தலையை மட்டும் நுழைக்கட்டும். ஏன், பாதிவரையில் கூட கங்கதேவன் மரக்கலங்களுக் கிடையே இருக்கலாம். புரிகிறதா?" என்றான் இளைய பல்லவன்.

உண்மையில் கண்டியத்தேவனுக்குப் புரியவில்லை அந்தப் பைத்தியக்கார உத்தரவைப் படைத்தலைவன் ஏன் பிறப்பிக் கிறானென்பது. கைப்பற்றி இருக்கும் இரு மரக்கலங்களையும் கரையில் இழுத்துவிட்டுக் கடல்புறாவின் தலையையும் கங்க தேவன் போர்க்கலங்களின் அணிவகுப்புக்கிடையே புகுத்த முயல்வது மூன்று மரக்கலங்களையும் கங்கதேவனிடம் ஒப்படைப்பது போலத்தான் என்பதை உணர்ந்த கண்டியத் தேவன் முகத்தில் பிரமிப்பே மண்டியது. இளையபல்லவனின் அடுத்த உத்தரவு அந்த வியப்பை உச்சநிலைக்குக் கொண்டு சென்றது. "நமது இரண்டு மரக்கலங்களும் பழுது பார்க்கப் பட்டதும் அவற்றை வெளிக்கொணர்ந்து கடல்புறாவைக் கரைக்குக் கொண்டுபோய்ப் பழுது பார்க்கலாம்" என்றான் இளையபல்லவன்.

இளையபல்லவனுக்குப் புத்தி சுவாதீனத்திலிருக்கிறதா என்பதில் பெருத்த சந்தேகம் ஏற்பட்டது கண்டியத்தேவனுக்கு. ஆகவே சற்றுச் சினத்துடன் வினவினான் கண்டியத்தேவன், "அடுத்தபடி பழுதுபார்க்கப்பட்ட இரு மரக்கலங்களையும் கங்கதேவன் அணிவகுப்புக்கிடையில் நிறுத்த வேண்டுமா?" என்று.

“சரியாகப் புரிந்து கொண்டீர் கண்டியத்தேவரே. அதேதான் என் உத்தேசமும்” என்றான் இளையபல்லவன், சர்வ சாதாரணமாக.

“அதேதான் உங்கள் உத்தேசமா?” கண்டியத்தேவன் கேள்வியில் கடுப்பு இருந்தது.

“ஆம்.”

“அப்படியானால் கடல் புறாவிலிருப்போரை என்ன செய்ய உத்தேசமோ?”

“பலவர்மனுக்குச் சிகிச்சை செய்ய கங்கதேவன் அவன் மாளிகையில் இடம் கொடுப்பான்…”

“காஞ்சனாதேவி?”

“பலவர்மன் மகள் அவனருகில் இருக்காமல் வேறெங்கு இருக்க முடியும்?”

“கடல்புறாவிலுள்ள மாலுமிகள்?”

“பாதிப்பேர் கடல்புறாவிலிருக்கட்டும்.”

“இன்னும் பாதி?”

“கரையில் அவர்களுக்கு விடுதி வசதி தரமாட்டானா கங்கதேவன்?”

“தருவான், தருவான். ஏன் தரமாட்டான்? தானாக வலிய வந்து வலையில் சிக்கும் பறவைகளை எந்த வேடன்தான் வரவேற்கமாட்டான்?” என்று உறுமினான் கண்டியத்தேவன்.

அவன் உறுமலில் அமீரும் கலந்துகொண்டான். “நீங்கள் தானே காஞ்சனாதேவியை அவன் விரும்புவதாகக் கூறினீர்கள்” என்று அமீர் வினவினான்.

“ஆம் சொன்னேன்” என்று ஒப்புக்கொண்ட இளைய பல்லவனை மற்ற இருவரும் வியப்புடன் நோக்கினார்கள்.

“அப்பேர்ப்பட்ட கயவன் கையில் கடாரத்து இளவரசியை ஒப்புவிப்பது விவேகமா?” என்று ஏககாலத்தில் இருவரும் கேட்டார்கள்.

இருவரையும் மாறிமாறிப் பார்த்த இளையபல்லவன், "அவனிடம் காஞ்சனாதேவியை ஒப்படைக்கப் போவதாக யார் சொன்னது?" என்று பதிலுக்குக் கேள்வியொன்றை வீசினான்.

"அவன் விடுதியில் காஞ்சனாதேவி சிக்கினால்?" சந்தேகத்துடன் எழுந்தது அமீரின் கேள்வி.

"அவள் மட்டுமல்ல, நானும் சிக்கப் போகிறேன். நமது மாலுமிகளில் பாதிப் பேர் சிக்குவார்கள். இப்படியாகப் பல பறவைகள் அவன் வலைக்குள் அகப்பட்டுவிடும்" என்று பதில் சொன்னான் இளையபல்லவன்.

"அப்படிச் சிக்குவது பறவைகளுக்குக் கேடல்லவா?" என்று வினவினான் தேவன்.

"அது தலைமைப் பறவையைப் பொறுத்தது" என்றான் படைத்தலைவன்.

"வலையில் அகப்பட்ட பின் தலைமைப் பறவைதான் என்ன செய்ய முடியும்?" அமீரின் கேள்வி பளீரென எழுந்தது.

"வழி சொல்ல முடியும்" என்று இளையபல்லவன் பதில் சொன்னான்.

"எதற்கு? தப்பிச் செல்லவா?" மீண்டும் கிளம்பியது அமீரின் கேள்வி.

"வலையைத் தூக்கிக்கொண்டு பறவைகள் பறந்தோட முடியும். பறந்தோடியதாக ஒரு கதையும் நமது நாட்டில் உலவுகிறது!" என்று குறிப்பிட்ட இளையபல்லவன், "தேவரே! அமீர்! இருவரும் நன்றாக உற்றுக் கேளுங்கள். இங்கிருந்து நாம் மரக்கலங்களை நகர்த்து முன்பு மற்ற இரண்டு மரக் கலங்களிலும் நாம் சிறைசெய்து வைத்திருக்கும் கலிங்கத்து மாலுமிகளைக் கடல்புறாவின் கீழ்ப்பகுதி அறையில் அடைத்துவிடுங்கள். அவர்களைக் காவல் புரியவும் பொதுவாகக் கடல் புறாவைப் பாதுகாக்கவும் சுமார் இருபது மாலுமிகள் கடல் புறாவில் இருக்கட்டும். மற்ற மாலுமிகள்

அனைவரும் கரைக்கு வந்துவிடட்டும். இஷ்டப்படி இந்தத் துறைமுகத்தில் உலாவட்டும். நடுப்பகலில் மட்டும் ஒவ்வொரு நாளும் அவர்கள் கடற்கரையில் வந்து கூடவேண்டும். நிலைமைக்குத் தகுந்தபடி உத்தரவுகள் பிறப்பிக்கப்படும்" என்று உத்தரவிட்டான். அத்துடன் கண்டியத்தேவனை விளித்து, "தேவரே! அதோ காளத்தி நதி பாய்கிறது பார்த்தீரா?" என்று நதியின் முகத்துவாரத்தைச் சுட்டிக் காட்டினான்.

"தெரிகிறது" என்றான் தேவன்.

"அதன் இக்கரையில் என்ன தெரிகிறது?"

"பெரும் காடாகக் கோரைகள் முளைத்திருக்கின்றன."

"கோரைகள் எங்கிருக்கின்றன?"

"கடற்கரையை அடைத்திருக்கின்றன."

"பாதி நீரிலும் இருப்பதைக் கவனியுங்கள்." —

"ஆம், ஆம்."

"அவற்றில் ஒரு மரக்கலத்தின் அடி சிக்கினால் என்ன ஆகும்."

"ஆவதென்ன? அதோகதிதான். மரக்கலத்துக்கு மாத்திரமல்ல இளையபல்லவரே, மனிதன் அதில் சிக்கினாலும் மீள்வது கஷ்டம்" என்று திகில் குரலில் தொனிக்கக் கூறினான் கண்டியத்தேவன்.

"கரைக்குச் சென்றதும் அந்தப் பகுதியைச் சுற்றிப் பாரும், நானும் பார்க்கிறேன்" என்றான் இளையபல்லவன்.

அந்த அபாயப் பிரதேசத்தை எதற்காகப் பார்க்கச் சொல்கிறான் இளையபல்லவன் என்பது புரியவில்லை கண்டியத்தேவனுக்கு. இருப்பினும், 'சரி,' என்று ஆமோதிப்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான். அத்துடன் அமீரைச் சேந்தனுடன் துறைமுகப் பயணத்துக்குத் தயார் செய்யுமாறு உத்தரவிட்ட படைத்தலைவன், தானும் அக்ர மந்திரத்தை நோக்கிச் சென்றான் பயணத்துக்குச் சித்தமாக.

இளையபல்லவன் எதிர்பார்த்தபடி நடு உச்சிக்குக் கதிரவன் வருவதற்குச் சிறிது முன்பாகவே கங்கதேவன் படகு வந்தது அவனை அழைத்துச் செல்ல. இளையபல்லவன், அமீர், சேந்தன், இன்னுமிரு உபதலைவர்கள் ஆகிய ஐவரும் கரையை நோக்கி அந்தப் படகில் சென்றனர். படகு வேகமாகச் சென்றது. அதைவிட வேகமாக ஓடின இளையபல்லவன் எண்ணங்கள். கடல் மோகினியின் இன்பக் காட்சி வழிநெடுக அவன் மனதைப் பறித்தது. துறைமுகத்தை அடைந்ததும் கங்கதேவன் அளித்த வரவேற்பு அவன் மனத்தைக் குலைத்தது.

வரவேற்பு மிகுந்த விசித்திரமாயிருந்தது. கடற்கரையிலேயே அவனை வரவேற்கச் சித்தமாயிருந்த கங்கதேவன், "வரவேண்டும், வரவேண்டும்" என்று போலிப் பணிவும் உண்மை நகைப்பும் கலந்த குரலில் படைத்தலைவனை வரவேற்றான்.

அவனுக்கருகில் ஆயுதம் தாங்கி நின்ற பத்துக் கலிங்க மாலுமிகள் படைத்தலைவனை நோக்கி நகர்ந்தனர்.



அத்தியாயம் 13

# கடல் நமது நாடு

கடல் மோகினித் தீவுக் கும்பலின் தென்முனைத் தீவான மாநக்காவரத்தின் மண்ணில் காலை வைத்தவுடன் இளைய பல்லவனை நோக்கி ஆயுதம் தாங்கிய வீரர் பத்துப் பேர் நகர்ந்ததைக் கண்டதும் அமீரும் சேந்தனும் மற்ற இரு உபதலைவர்களும் சினத்தின் வசப்பட்டார்களானாலும், இளையபல்லவன் மட்டும் அதைப்பற்றிச் சிறிதும் லட்சியம் செய்யாமல் அந்த வீரர் இரு புறமும் காவல் புரிந்து வர கங்கதேவனை நோக்கி நான்கடி நடந்து சென்று, "கலிங்கத்தின் கடற்படைத் தலைவரின் வரவேற்பு புது முறையில் அமைந் திருக்கிறது" என்று கூறி, மெல்ல அவனை நோக்கி நகைக்கவும் செய்தான்.

இளையபல்லவனின் அலட்சியத்தையும் நகைப்பையும் கண்ட கங்கதேவன் ஒரு விநாடி அசந்தே போனாலும் மறு விநாடி தன்னைச் சமாளித்துக்கொண்டு, "புதுவகை அபாயங்களை எதிர்நோக்கும்போது புதுமுறைகளை வரவேற்பிலும் கையாளுவதுதான் விவேகம்" என்று கூறினான். இம்முறை அவன் பேச்சில் நகைப்பில்லை. கடுமை பலமா யிருந்தது.

"புதுவகை ஆபத்தா?" ஏதுமறியாததுபோல் வினவினான் இளையபல்லவன்.

"ஆம்" என்று பதில் கூறினான் கங்கதேவன் குரலில் கடுமையைச் சிறிதும் குறைக்காமல்.

"கடற்படைத் தலைவர் கூறுவது விளங்கவில்லை எனக்கு" என்று முகத்தில் வேண்டுமென்றே குழப்பத்தை விளைய விட்டுக்கொண்ட இளையபல்லவன் தன் புருவங்களைச் சந்தேகத்துடன் முகத்தில் உயர்த்தினான்.

# கடல் புறா

## 13. கடல் நமது நாடு



"ஒரு விஷயம் விளங்கியிருக்க வேண்டும் உங்களுக்கு" என்ற கங்கதேவன் இளையபல்லவனை மட்டுமின்றி, சற்று எட்ட நின்றிருந்த அமீரையும் சேந்தனையும் மற்ற இரு உபதலைவர்களையும்கூடத் தன் கண்களால் சுடுநோக்கு நோக்கினான்.

அந்தச் சுடுநோக்கைக் கண்டு சிறிதும் அசையாத இளைய பல்லவன், "அது எந்த விஷயமோ?" என்று வினவினான்.

"நான் முட்டாளல்லவென்பது" என்று கங்கதேவன் சற்று இரைந்தே கூறினான்.

"இதைத் தாங்கள் வற்புறுத்த வேண்டிய அவசியமென்ன?" இளையபல்லவன் கேள்வியில் பணிவிருந்தது. அந்தப் பணிவுடன் ஏளனமும் கலந்திருந்தது.

கங்கதேவன் கண்கள் இளையபல்லவன் முகத்தைச் சில விநாடிகள் ஆராய்ந்தன. பிறகு அதிலிருந்து விலகி, தூரத்தே இருந்த கடல் புறாவையும் மற்ற இரு மரக்கலங்களையும் நோக்கின. கடைசியாக அவன் பெரு உதடுகள் வெறுப்புடனும் கோபத்துடனும் வார்த்தைகளை உதிர்த்தன. "அந்த அவசியத் தைக் கற்பித்தது நீ" என்று சீறினான் கங்கதேவன்.

பதிலுக்கு இளையபல்லவனும் சற்றுக் கோபத்தைக் காட்டத் தொடங்கி, "மரியாதையைக் கைவிட்டுப் பேசு கிறீர்கள்" என்றான் சீற்றம் தொனித்த குரலில்.

கங்கதேவனின் அடுத்த சொற்களில் கோபத்துக்குப் பதில் ஏளனம் தொனித்தது. "தங்களை நீ என்று அழைக்கக் கூடாதாக்கும்?" என்றான் கங்கதேவன்.

"ஆம்."

"ஏன்?"

"கலிங்கத்தின் கடற்படைத்தலைவர் அதன் உபதலைவரை மரியாதையுடன் அழைக்கக் கடமைப்பட்டவர்."

இதைக் கேட்டதும் இடிஇடியென நகைத்த கங்கதேவன், "நீ கலிங்கத்தின் உபதலைவனாயிருந்தால் தானே உன்னை

மரியாதையுடன் அழைப்பதற்கு? நீ கலிங்கத்தின் உப தலைவனுமல்ல, அதோ அந்த மரக்கலம் கலிங்கத்தின் மரக் கலமுமல்ல. அதுமட்டுமல்ல, அதோ நிற்கின்றனவே இரண்டு மரக்கலங்கள், அவை சோழநாட்டு மரக்கலங்களுமல்ல. இந்தப் பிராந்தியத்தில் எத்தனையோ அயோக்கியர்களை நான் பார்த்திருக்கிறேன். உன்னைப் போன்ற அயோக்கியனை இன்றுவரை நான் பார்த்ததில்லை" என்று நகைப்புக்கிடையே கூறிவிட்டுத் தன் வீரர்களை விட்டு, "இவனையும் இவன் சகாக்களையும் சிறைக்கோட்டத்தில் அடைத்து வையுங்கள்" என்று உத்தரவு இட்டான்.

அந்த உத்தரவைக் கேட்ட இளையபல்லவன் முகத்தில் எந்தவிதக் கலவரமோ அச்சமோ இல்லாதிருந்ததைக் கண்ட கங்கதேவன், "உன் அயோக்கியத்தனத்துக்கு ஏற்ற துணிவும் உன்னிடமிருக்கிறது" என்று பாராட்டவும் செய்தான்.

இளையபல்லவன் பதில் சர்வ சாதாரணமாக வெளி வந்தது. "இந்தச் சமயத்தில் என் துணிவைப் பாராட்டுவதை விட, தங்கள் அபாயத்தை எண்ணிப் பார்ப்பது நல்லது" என்றான் இளையபல்லவன்.

"எனக்கா! அபாயமா!" வியப்புடன் எழுந்தது கங்கதேவன் கேள்வி.

"ஆம். சற்றுத் திரும்பிப் பாருங்கள்" என்றான் இளைய பல்லவன்.

திரும்பிச் சுற்றுமுற்றும் பார்த்த கங்கதேவனுக்கு ஏதும் புரியாததால், "எங்கு பார்க்கச் சொல்கிறாய்?" என்று எரிந்து விழுந்தான்.

தங்களிருவருக்கும் சம்பாஷணை நிகழ்ந்து கொண்டிருந்த சமயத்தில் மெள்ள மெள்ள நழுவி, சற்றுத் தூரத்தில் போய்க் கொண்டிருந்த அமீரை கங்கதேவனுக்குக் காட்டிய இளைய பல்லவன் கேட்டான், "அது யார் தெரியுமா தங்களுக்கு?" என்று.

"தெரியாது."

"எத்தனை நாட்களாக இந்தப் பகுதிகளில் இருக்கிறீர்கள்?"

"பல வருடங்களாக."

"அகூதா என்பவரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக் கிறீர்களா?"

இந்தக் கேள்வி வெளிவந்ததும் கங்கதேவன் முகத்தில் பெரிய மாறுதல் ஏற்பட்டது. அதிலிருந்த தைரியம் மறைந்து அச்சம் அந்த இடத்தைக் குடிகொண்டது. அதைக் கவனித்த இளையபல்லவன் கங்கதேவன் பதிலுக்காகக் காத்திராமல் மேலும் சொன்னான்: "அகூதாவின் வலது கரம் போன்றவன் இந்த அரபு நாட்டு அமீர். வெகு தூரத்திலிருந்தாலும் குறி தவறாமல் குறுவாளெறியக் கூடியவன். எப்பொழுது கச்சை யிலிருந்து வாளெடுக்கிறான், எப்பொழுது எறிகிறான் என்பது கூடத் தெரியாமல் கண்ணிமைக்கும் நேரத்தில் காரியத்தை முடிக்கக் கூடியவன். இப்பொழுது அவன் கை கச்சையிலிருக் கிறது, கண் தங்கள் மேலிருக்கிறது."

இந்த வார்த்தைகளை மிக நிதானமாகவும் திடமாகவும் சொன்ன இளையபல்லவன் இதுவரை கையாண்ட மரியாதை யைக் கைவிட்டு, "கங்கதேவா! நீ முட்டாளல்ல என்பதைக் கடல் புறாவின் தளத்தில் வந்தபோதே நான் புரிந்து கொண்டேன். நீ கடல் புறாவின் தளத்தைச் சுற்றி வந்த போதும், நீ மற்ற இரு கப்பல்களை ஆராய்ந்த போதும் உன்னைத்தான் நான் கவனித்துக் கொண்டிருந்தேன். நீ உண்மையை உணர்ந்து கொண்டதை அப்பொழுதே அறிந்து கொண்டேன். இருப்பினும் இதோ இங்கே வந்திருக்கிறேன். தானாகத் தலையை அபாயத்தில் நுழைக்கும் அத்தனை முட்டாளல்ல இளையபல்லவன்" என்று சொற்களை ஒன்றன்பின் ஒன்றாக கங்கதேவன் புத்தியில் உறையும்படி உச்சரித்தான்.

இளையபல்லவன் வார்த்தைகளைக் கேட்ட கங்கதேவன் அப்படியே மலைத்துப் பல விநாடிகள் நின்றுவிட்டான். "இளையபல்லவன்! இளையபல்லவன்!" என்று மீண்டும்

மீண்டும் மந்திரத்தை உச்சரிப்பவன்போல் இளையபல்லவன் பெயரை உச்சரித்தான் நீண்ட நேரம். இப்படி மலைத்துக் குழம்பிய பிறகு, "நீ! நீ! அகூதாவின்..." என்று ஆரம்பித்து வார்த்தையை முடிக்காமல் விடவும் செய்தான்.

"ஆம், உபதலைவன்!" என்று கங்கதேவன் தொடங்கிய வார்த்தைகளைப் பூர்த்தி செய்த இளையபல்லவன், "இனி உனக்கு என் துணிவைப் பற்றி வியப்பு ஏற்படக் காரண மில்லை. நாம் பேசவேண்டியது ஏதாவது இருந்தால் உணவருந்தும்போது பேசலாம்! தவிர என்னிடம் மரியாதை காட்டுவது உனக்கு நல்லது. என்னிடம் அவமரியாதை காட்டும் யாரையும் என் மாலுமிகள் விடுவதில்லை" என்று அத்துடன் சம்பாஷணையை முடிவுகட்டிய இளையபல்லவன் அமீரை நோக்கி ஏதோ சைகை செய்யவே அமீர் இளைய பல்லவனை நெருங்கி வந்தான்.

இளையபல்லவன் கூறிய சொற்கள் கங்கதேவனை மட்டுமல்ல, இளையபல்லவனைச் சிறை செய்ய வந்த பத்து வீரர்களையுங்கூடப் பெருமலைப்பிலும் பயத்திலும் ஆழ்த்தி விடவே அவர்களும் செயலற்று நின்றுவிட்டனர். அதைக் கவனித்த சோழர் படைத்தலைவனே அவர்களுக்கு உத்தர விட்டான், "இனி நீங்கள் தேவையில்லை. போகலாம்" என்று. அதை ஆமோதிக்கும் வகையில் கங்கதேவனும் தலை யாட்டவே வீரர்கள் கலைந்து சென்றனர்.

அடுத்தபடி செய்யவேண்டியது என்ன என்பதைக்கூட அறியும் சக்தியை இழந்துவிட்ட கங்கதேவன் இளைய பல்லவனை ஏறெடுத்து நோக்கினான். "தங்கள் மாளிகையில் மீதி விஷயங்களைப் பேசுவோம் தலைவரே!" என்று இளைய பல்லவன் கூற, கங்கதேவன் மாளிகையை நோக்கி வழி காட்டி நடந்தான். அவனும் சரி, அவனைத் தொடர்ந்தவர்களும் சரி, மாளிகையை அடையும் வரையில் எதுவுமே பேசாமல் மௌனமாகவே நடந்தார்கள். கங்கதேவன் மாளிகை கடற் கரையை அடுத்து நின்ற சிறுமலைச் சரிவொன்றில் கட்டப்

பட்டிருந்ததால் அதன் உப்பரிகையில் இருந்து கடலை வெகு தூரம் ஆராயலாம் என்பதை இளையபல்லவன் அறிந்து கொண்டான். மாளிகை அப்படியொன்றும் பெரிதல்ல, இருப்பினும் நல்ல வசதியாகவும் பாதுகாப்புடனும் இருந்தது. பின்னாலிருந்த மலைச்சரிவும் அதன் வடக்குப் பாகத்துக்கு அரணாக அமைந்திருந்தது. கிழக்கு மேற்குமிருந்த பகுதி களிலும் பாறைகள் இருந்ததால் சுலபமாக அந்த மாளிகையை அந்த இரு பக்கங்களிலும் அணுகுவதும் சிரமம் என்பதை இளையபல்லவன் புரிந்துகொண்டான். வாயிலில் மட்டுமே காவல் இருந்தாலும் அதுவே அந்த மாளிகைக்குப் போதும் என்பதை இளையபல்லவன் உணர்ந்துகொண்டிருந்தான். இந்த மாளிகைக்குச் சற்றுத் தள்ளியே மாநக்காவரத்தின் ஊர் இருந்தது. அதில் வீடுகள் சுமார் நூறுக்கு மேலில்லை என்பதை மாளிகை வாயிலில் கால் வைத்துச் சுற்றுமுற்றும் பார்த்த வுடனேயே புரிந்துகொண்ட இளையபல்லவன், அந்த நூறு வீடுகளும் கடல்மோகினிக்கு வந்து சேர்ந்த தமிழர்கள் இல்லங்களாக இருக்க வேண்டுமென்றும் சமீபத்தில் கடல் மோகினியைக் கைப்பற்றிய கங்கதேவனின் மாலுமிகள் பலருக்கும் இன்னும் வீட்டு வசதி ஏற்படவில்லை என்பதை யும் உணர்ந்துகொண்டான். கங்கதேவனின் மாலுமிகள் பலருக்கு வீட்டு வசதியில்லாத காரணத்தால் அவர்கள் கடற் கரைப் பகுதிகளிலேயே கூடாரங்களை அடித்துக் குடிசைகள் போட்டுத் தங்கி இருந்ததையும் பார்த்த இளையபல்லவன் உள்ளூரத் திருப்தியும் கொண்டான்.

இப்படிச் சூழ்நிலையை எடை போட்டுக்கொண்டு மாளிகைக்குள் நுழைந்த இளையபல்லவன் கங்கதேவனை நோக்கி, “தேவரே! விருந்து தயாராயிருக்குமென்று நினைக் கிறேன். விருந்துண்ட பிறகு பேசுவோமா, முன்னமே பேசுவோமா?” என்று வினவினான்.

அவன் எதைப் பேச இஷ்டப்படுகிறான் என்பதைப் புரிந்துகொண்ட கங்கதேவன், “விருந்துக்குச் சிறிது நேரமாகும். முன்னரே பேசுவது நல்லது” என்று கூறினான்.

இளையபல்லவன் சந்தேகத்துக்கிடமின்றி நிலைமையைப் புரிந்துகொண்டான். தனக்கு விருந்தளிக்கும் நோக்கம் கங்கதேவனுக்குச் சிறிதும் கிடையாதென்பதையும், கரைக்கு அழைத்துத் தன்னைச் சிறைப்படுத்தி, தனது மரக்கலத்தையும் காஞ்சனாதேவியையும் கைப்பற்றுவதே அவன் நோக்க மென்பதையும் தெரிந்துகொண்ட இளையபல்லவன், "விருந்து தயாராயில்லை என்பது புரிகிறது கங்கதேவரே! கடல் புறாவுக்கு வருகிறீர்களா அங்கு தயாராயிருக்கும்" என்றான்.

"வேண்டாம்! வேண்டாம்! இங்கேயே தயார் செய்யச் சொல்கிறேன்" என்று கூறி, பணியாள் ஒருவனை விளித்து, உணவைச் சீக்கிரம் தயார் செய்ய உத்தரவிட்ட கங்கதேவன் இளையபல்லவனை அழைத்துக்கொண்டு அந்த மாளிகைத் தளத்தின் அறையொன்றுக்குச் சென்றான். மாடிப்படிகளில் ஏற முற்பட்டதும் தன் சகாக்களை நோக்கிய இளைய பல்லவன், "கங்கதேவர் என்னிடம் ரகசியமாகப் பேச விரும்புகிறார். ஆகவே நீங்கள் இங்கேயே தங்கி இருங்கள். அமீர் மட்டும் வரட்டும்" என்று கூறி அவர்களை அந்த முகப்பு மண்டபத்திலேயே இருக்க உத்தரவிட்டு, அமீர் பின்தொடர தான் மட்டும் கங்கதேவனைத் தொடர்ந்து சென்றான்.

மாடித் தளத்திலிருந்த தனது சொந்த அறைக்கே கங்கதேவன் இளையபல்லவனை அழைத்துச் சென்றான்.

அந்த அறை விசாலமாய் இருந்தது. படுத்தபடியே கடலை நீண்ட தூரம் நோக்கப் பஞ்சணைக்கருகில் சாளரமும் அமைக்கப்பட்டிருந்தது. அதில் அந்த சாளரத்தையும் பஞ்சணை அமைப்பையும் கண்ட இளையபல்லவன், 'இந்த இடத்திலிருந்தே விளக்குகளுடன் வந்த எனது மரக்கலத்தை கங்கதேவன் கவனித்திருக்க வேண்டும்' என்று தனக்குள் சொல்லிக்கொண்டான். அந்தச் சமயத்தில் உள்ளேயிருந்த அமீரை நோக்கி, "அமீர்! நீ அறைக்கு வெளியே இரு!" என்றும் உத்தரவிட்டு அவனை வெளியே அனுப்பிவிட்டு கங்க தேவனை நோக்கித் திரும்பினான்.

கங்கதேவனும் இளையபல்லவனும் சிறிது நேரம் ஒருவரையொருவர் நோக்கினர். பிறகு கங்கதேவனைப் பஞ்சணையில் அமரச் சொல்லிய இளையபல்லவன் தான் மட்டும் நின்றுகொண்டு பேச்சைத் துவங்கினான், "கங்கதேவரே! நீங்கள் சற்று அவசரப்பட்டுவிட்டீர்கள்" என்று.

கங்கதேவன் மனம் பெரிதும் குழம்பிக் கிடந்தது. சுமார் ஐந்நூறு மாலுமிகளையும் நான்கு போர்க்கலங்களையும் வைத்துக்கொண்டிருந்தும் மூன்றே பேருடன் கரை வந்த இளையபல்லவனைச் சிறை செய்ய முடியாத நிலையை அவன் ஏற்படுத்திவிட்டதை நினைத்துப் பெரிதும் குழம்பிக் கொண்டிருந்தான் அவன். கடல் புறா கலிங்கத்தின் மரக் கலமல்ல என்பதையும், மற்ற இரு மரக்கலங்களும் சோழ நாட்டு மரக்கலங்கள் அல்ல என்பதையும் சொன்ன மாத்திரத்தில் எதிரி திகிலடைந்து விடுவானென்று தான் நம்பியதற்கு மாறாக அவன் தன்னையே தன் வீரர்களுக்கு எதிரில் மிரட்டி மாளிகைக்கு அழைத்து வரவேண்டிய அவசியத்தை ஏற்படுத்திவிட்டதை நினைத்து அந்தக் குழப்பத்தினூடே ஆச்சரியமும் அடைந்தான். தன்னை மிரட்டிய இளையபல்லவனுக்குத் தான் பணிய நேரிட்டதற்கு மூலகாரணம் அகூதாவின் பயங்கரப் பெயரே என்பதை நிர்ணயித்துக்கொண்டதால் அந்த ஆச்சரியத்துடன் ஓரளவு சாந்தியும் அடைந்த கங்கதேவன், 'அகூதாவுக்குத்தான் நான் அஞ்சுகிறேன், அவன் பெயரைக் கேட்டு அஞ்சாதார் யார்?' என்று தன் அச்சத்துக்குச் சிறிது சப்பைக் கட்டும் போட்டுக் கொண்டான். இருப்பினும் அகூதா தொலை தூரத்தில் இருக்கிறானென்பதையும் தன்னிடம் வந்து அகப்பட்டுக் கொண்டிருக்கும் இளையபல்லவனைத் தான் பத்து நாட்களுக்குள் முடிவுகட்டிவிட முடியும் என்றும் தன்னைத் தானே தைரியப்படுத்திக் கொண்ட கங்கதேவன், "எதற்கு அவசரப்பட்டு விட்டேன்?" என்ற கேள்வியொன்றையும் வீசினான்.

இளையபல்லவன் பதில் நிதானமாக வந்தது. அதில் வருத்தமும் தோய்ந்திருந்தது. "என்னை உமது எதிரியாக நினைத்தது அவசரம்" என்றான்.

"சோழ நாடு கலிங்கத்துக்கு விரோதியல்லவா?" என்று வினவினான் கங்கதேவன்.

"இரண்டு நாடுகளும் தொலை தூரத்திலிருக்கின்றன" என்று கூறிய இளையபல்லவன் கங்கதேவனை உற்று நோக்கினான்.

அவன் நோக்கின் பொருள் புரியாததால், "ஆம்" என்று ஏதோ சொல்லி வைத்தான் கங்கதேவன்.

"எனது நாடு சோழ நாடுமல்ல. உமது நாடு கலிங்கமு மல்ல" என்றான் இளையபல்லவன்.

"பின் நமது நாடு..." என்று இழுத்தான் கங்கதேவன்.

"கடல் நமது நாடு, கொள்ளை நமது தொழில், நாமிருவரும் ஒரே குலம், ஒருவனே நமக்குத் தலைவன்."

"யாரந்தத் தலைவன்?"

"பொன்."

"பொன்னா?"

"ஆம். அதை நாடித்தான் மனிதர்கள் கடலோடுகிறார்கள். அதை நாடித்தான் நமது கொள்ளைக் குலம் கடலில் சஞ்சரிக் கிறது. ஆகவே..."

"சொல்லுங்கள்."

"நான் உமது நண்பனாக இங்கு வந்திருக்கிறேன். விரோதி யாக அல்ல." இளையபல்லவன் சொற்கள் திடமாக உதிர்ந்தன.

வியப்புடன் இளையபல்லவனை ஏறெடுத்து நோக்கி னான் கங்கதேவன். தான் கடல்மோகினிக்கு வந்த காரணத்தை விளக்கினான் இளையபல்லவன். அந்த விளக்கத்தின் முடிவில் பேருவகையைக் காட்டினான் கங்க தேவன். இளையபல்லவனை வலிய அணைத்துக்கொள்ளவும் செய்தான்.

அத்தியாயம் 14

# நண்பர்கள்

கடல்மோகினியின் கரையில் காலை வைத்த சில விநாடிகளுக்குள்ளாகவே கங்கதேவனைப் பூரணமாக எடை போட்டுவிட்ட கருணாகர பல்லவன், எந்த முறையைக் கையாண்டால் அந்தக் கொடியவனைச் சமாளிக்க முடியும் என்பதைத் தீர்மானித்துக் கொண்டானாகையால் அதற்கேற்ப தன் நடவடிக்கைகளையும் பேச்சு முறையையும் அமைத்துக் கொண்டான். பலவர்மன் உளறலிலிருந்து கங்கதேவன் கலிங்க நாட்டவனென்பதையும், இருப்பினும் நாட்டுப் பற்றோ இனப் பற்றோ அற்ற பெரும் கயவனென்பதையும் புரிந்துகொண்ட தால், சுயலாபத்தைத் தவிர வேறெதிலும் சிரத்தை இல்லாத அவனை லாபத்தைக் காட்டியே தன் வழிக்கு இழுக்க வேண்டும் என்ற முடிவுக்கு வந்தான் கருணாகர பல்லவன். தவிர, கடல் புறாவையும் மற்ற இரு கலிங்கத்து மரக்கலங் களையும் அவன் கவனித்த கவனிப்பிலிருந்தே அவனை ஏமாற்றுவது அத்தனை எளிதல்ல என்பதையும் அறிந்து கொண்ட சோழர் படைத்தலைவன் காரணமாகவே கலிங்கத்துக் கப்பல்களை ஆரம்பத்தில் கரையில் இழுத்துப் பழுது பார்க்கவும் கடல் புறாவைத் துறைமுகத்தை அடைத்து நிற்கச் செய்யவும் உத்தரவுகளைப் பிறப்பித்தான். அதை முன்கூட்டி ஊகித்துவிட்ட கங்கதேவன் துறைமுகத்திலிருந்த தனது நான்கு போர்க்கலங்களையும் இரண்டிரண்டாகப் பிரித்து நிற்கவைத்து இடையே இளையபல்லவன் மரக்கலங் களுக்கு வழிவிட்டான். அத்தகைய நிலையில் கடல் புறாவல்ல, அதைவிடப் பெரிய மரக்கலம் உள்ளே வந்தாலும் அக்கம் பக்கத்தில் தாக்கக் கூடும் நான்கு போர்க்கலங்களின் சக்தி யிலிருந்து அது மீள முடியாதென்பதை கங்கதேவன் உணர்ந் திருந்தான்.

இந்த உணர்வு இளையபல்லவனுக்கும் ஏற்படவே, கடல் புறா பழுது பார்க்கப்பட்டுத் திடமாகக் காயம் ஏதுமின்றி மீள வேண்டுமானால் கங்கதேவனின் நான்கு மரக்கலங்களும் துறைமுகத்திலிருந்து வெளியேற வேண்டும் அல்லது அழிக்கப் பட வேண்டும் என்று தீர்மானித்தான். அதுமட்டுமின்றி, கங்கதேவனைப் போன்ற ஒரு சிறந்த கடலோடியைச் சமாளிப்பதோ தோல்வியுறச் செய்வதோ அத்தனை எளிதல்ல என்பதையும் புரிந்துகொண்டான். ஆகவே தன் நடவடிக்கை எப்படி இருக்கவேண்டும் என்பதை ஓரளவு தீர்மானித்தும் கொண்டான். கங்கதேவனைப் பாதி ஆசை காட்டியும், பாதி மிரட்டியும், பாதி நட்புக் காட்டியும், பாதி விரோதமூட்டியும் தான் வெல்ல முடியும் என்பதைச் சந்தேகமற அறிந்து கொண்டான் சோழர் படைத்தலைவன். கலிங்கத்தின் கடல் வலிவை முறிப்பதற்கும் கடாரத்தை அணுகுவதற்கும் ஸ்ரீவிஜயத்தின் அஸ்திவாரத்தை ஆட்டுவதற்கும் கடல்மோகினி எப்படியும் தேவை என்பதையும் உணர்ந்துகொண்டான் இளையபல்லவன்.

இப்படித் திரும்பத் திரும்ப விஷயத்தை அலசிப் பார்த்து ஒரு முடிவுக்கு வந்த இளையபல்லவன், ஆரம்பத்தில் கங்க தேவன் விரோதத்தை விட நட்பே பலனளிக்கும் என்பதைப் புரிந்துகொண்டானாகையால் நட்பு வலையை முதன்முதலில் அவன்மீது விரித்தான். நட்பு வலையில் முதலில் விழ கங்க தேவன் மறுத்தான். ஆனால் இளையபல்லவன் அந்த வலையை வீசியதற்குக் காட்டிய காரணம், கண்ணியில் பளபளத்த ஆகாரம், எதையும் நம்பாத கங்கதேவனையும் அந்த வலைக்குள் இழுத்தது. அந்த வலையை மிகுந்த சாமர்த்தியத் துடன் வீசத் துவங்க முற்பட்ட இளையபல்லவன், “இங்கு நான் உமது நண்பராகத்தான் வந்திருக்கிறேன்” என்று திடமாகச் சொற்களை உதிர்த்தான்.

கங்கதேவன் புருவங்கள் வியப்புடன் மேலெழுந்தன. இளையபல்லவன் பேச்சை அவன் அடியோடு நம்பவில்லை யென்பது அவன் முகத்தில் எழுதி ஒட்டியிருந்தது. அதைக்

கவனித்தும் கவனிக்காதவன்போல இளையபல்லவன் கங்க தேவனை நோக்கி, "தலைவரே! நான் சொல்வது உமக்கு வியப்பாயிருக்கலாம். ஆனால் உம்மைப்போல ஓர் அறிவாளி எதையும் ஊன்றிப் பார்க்கவேண்டும். பார்த்தால் உண்மை விளங்காமல் போகாது" என்றான்.

கங்கதேவன் புத்தி குழம்பி இருந்தது. அந்தக் குழப்பத் திலும் சந்தேகம் மேலெழுந்து நின்றது. அந்தச் சந்தேகத்தின் சாயை பூரணமாக முகத்தில் படர, குரலிலும் அது லேசாக ஒலிக்கக் கேட்டான் கங்கதேவன், "எதை ஊன்றிப் பார்க்க வேண்டும்?" என்று.

"நான் இங்கு வந்த காரணத்தை!" என்றான் இளைய பல்லவன்.

"என்ன காரணம்?"

"உமது நட்பைப் பெறவென்று முன்னமே சொன்னேன்."

"நட்பைப் பெறுபவன் குறுவாளெறியக் கொலைகாரன் ஒருவனைக் கூட அழைத்து வருவானா?"

"அது தற்காப்புக்காக. இல்லையேல் இந்த விநாடி நான் சிறையிலிருப்பேனோ சொர்க்கத்திலிருப்பேனோ சொல்ல முடியாதல்லவா?"

இளையபல்லவனின் சமாதானம் சரியே என்று பட்டது கங்கதேவனுக்கு. ஆபத்து நெருங்கும் சமயத்தில் தானும் அத்தகைய தீவிர முறையைக் கையாண்டிருக்க நேரிடும் என்பதைப் புரிந்துகொண்ட கங்கதேவன், "நட்புக்கு வந்திருக் கிறீர்கள் என்பதற்கு என்ன அத்தாட்சி? நீர் சொல்வதை நான் எப்படி நம்புவது?" என்று வினவினான்.

இளையபல்லவன் அவனை நெருங்கி அவன் தோள்மீது கையை வைத்தான். பிறகு சொன்னான், "நண்பரே! சற்று கடற்புறம் பாருங்கள்?" என்று.

கடற்புறத்தைச் சாளரத்தின் மூலம் நோக்கினான் கங்கதேவன். கீழ்க்கடலின் கதிரவனொளியில் கடல் புறா

பயங்கரமாகத்தான் மூக்கைக் காட்டிக் கொண்டு நின்றிருந்தது. அதை கங்கதேவன் கவனிப்பதை இளையபல்லவனும் கவனித்ததால் சொன்னான், "அது பெரும் மரக்கலம் கங்கதேவரே. தளத்தில் மட்டும் இருபது விளக்குகளையும் பந்தங்களையும் உடையது" என்று.

"ஆம்" என்று கங்கதேவன் ஒப்புக்கொண்டான்.

"அந்த மற்ற இரு மரக்கலங்கள் இவ்வளவு பெரிதல்ல. இருப்பினும் சிறியவையுமல்ல. தீர்க்க வகையைச் சேர்ந்த தாரிணிகள். இரண்டும் போர்க்கலங்கள்" என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

ஆமோதிப்பதற்கறிகுறியாகத் தலையை அசைத்தான் கங்கதேவன். இளையபல்லவன் மேலும் தொடர்ந்தான். "இரண்டிலுமாகச் சேர்ந்து இருபது விளக்குகளும் இருபது பந்தங்களும் இருக்கின்றன."

இந்தத் தகவல்களை எதற்காக இளையபல்லவன் சொல்கிறான் என்பதை அறியாத கங்கதேவன், "இருக்கலாம்" என்றான்.

கங்கதேவன் தோளிலிருந்து கையை எடுத்த இளைய பல்லவன் தானும் பஞ்சணையில் கங்கதேவன் பக்கத்தி லமர்ந்து சாளரத்தில் சாய்ந்து, "மொத்தம் நாற்பது விளக்குகள், நாற்பது பந்தங்கள் அந்த மூன்று மரக்கலங்களில் இருக் கின்றன" என்று கையால் அந்த மரக்கலங்களைச் சுட்டிக் காட்டிக் கூறினான்.

"அதற்கென்ன?"

"நீங்களே சொல்லுங்கள் கங்கதேவரே! கடல்மோகினித் தீவுக்கருகில் எங்கள் கப்பல்கள் வருகின்றன. கடல்புறாவின் மரத்தண்டின் உயரத் தட்டிலிருக்கும் மாலுமி கடல்மோகினித் துறைமுகத்தில் விளக்குகளைக் காணோம் என்று அறிவிக் கிறான். கடல்மோகினி அதுவரை தமிழர்கள் கையிலிருப்பதாக நினைத்துக்கொண்டிருக்கும் மாலுமிகளில் சிலர் கடல் புறாவின் சுக்கானைத் திருப்பித் திசை திருப்ப வேண்டு

கிறார்கள். மற்றும் சிலர் கடல் புறாவின் தளத்திலுள்ள விளக்குகளை அணைக்கக் கூக்குரலிடுகிறார்கள். இந்தச் சந்தர்ப்பத்தில் தமிழர் தலைவனாயிருக்கும் கடல் புறாவின் உபதலைவன் என்ன செய்வான்?"

கங்கதேவன் மெள்ளத் திரும்பி இளையபல்லவனை நோக்கினான். அவன் முகத்தில் பழைய அவநம்பிக்கை லேசாக மறைந்திருந்தது. "அவர்கள் சொல்வதைத்தான் செய்வான்" என்று ஒப்புக்கொள்ளவும் செய்தான் கங்கதேவன்.

இளையபல்லவன் நம்பிக்கைத் தாக்குதலை மேற்கொண்டும் நடத்தினான். "அதுமட்டுமல்ல கங்கதேவரே!" என்று மெள்ளக் கூறினான்.

"வேறென்ன?" கங்கதேவன் குரலில் ஆவலிருந்தது.

"என் மரக்கலத்தை அந்த இரு மரக்கலங்களும் தாக்கின அல்லவா?"

"உம் உம்..."

"அப்பொழுது பலவர்மன் தலையில் பலமான அடி பட்டது."

"உம்."

"அந்த அடியில் ஜன்னி பிறந்தது."

"உம்."

"ஜன்னியில் மனிதர்கள் என்ன செய்வார்கள்?"

"உளறுவார்கள்."

இதைக் கேட்டதும் கங்கதேவனை உற்று நோக்கினான் இளையபல்லவன். பிறகு சொன்னான் மெதுவாக, "பலவர்மனும் உளறினான்."

"என்ன உளறினான்?" என்று கேட்டான் கங்கதேவன்.

"அதைச் சொல்ல யோசனையாயிருக்கிறது. என்னைத் தூற்றினால் பாதகமில்லை. ஆனால் உங்களைத் தூற்றினான்." இளையபல்லவன் வேண்டுமென்றே வாசகத்தை முடிக்கவில்லை.

"பாதகமில்லை, சொல்லுங்கள்" என்று உக்ரமாக எழுந்தன கங்கதேவன் சொற்கள்.

" 'அடே மடையா; இளையபல்லவா!' என்று கூவினான் உளறலில்" என்றான் இளையபல்லவன்.

"வேறென்ன கூறினார்?"

"கடல்புறாவைத் திருப்பு, கடல்மோகினியில் இருப்பவன் கங்கதேவன், கலிங்க நாட்டவன், இருப்பினும் கொலைகாரன், கொள்ளைக்காரன், கயவன்— இப்படியெல்லாம் உளறினான். தாங்கள் விரும்பக்கூடிய சொற்களல்லதான். இருப்பினும் அந்தச் சொற்கள் எனக்கு ஊக்கத்தை அளித்தன."

"எதற்கு?"

"இங்கு வருவதற்கு."

"இங்கு வர ஏன் விரும்பினீர்!"

"அகூதாவிடமிருந்தவன் எதை விரும்புவான்?"

"கொள்ளையையா?"

"திரும்பவும் அந்த அநாகரிகச் சொல் எதற்கு? கடல் தொழில் என்று சொல்லுவோம். அந்தத் தொழில் என் இஷ்டப்படி நடக்க எனக்குத் தளம் தேவையாயிருந்தது. கடல் மோகினி அந்தத் தளம் என்று முன்னமே முடிவு கட்டினேன். அதனால்..."

"அதனால்?"

"விளக்குகளையும் பந்தங்களையும் நீங்கள் பார்க்கும்படி மரக்கலங்களில் கொளுத்தினேன். அது மட்டுமல்ல..."

"வேறென்ன?"

"நேராக மரக்கலத்தை இங்குக் கொண்டு வந்தேன்."

இதற்குப் பின் சிறிது மௌனம் சாதித்த இளைய பல்லவன் கங்கதேவன் புத்தியில் தன் பேச்சு உறைய அவகாசம் கொடுத்தான். கங்கதேவன் நீண்ட நேரம் ஆழ்ந்த யோசனையில் இறங்கினான். இளையபல்லவன் சொன்ன

அனைத்தும் கோவையாயிருந்தது. எந்தப் பிசகையோ துர்எண்ணத்தையோ கண்டுபிடிக்க அவனால் முடியவில்லை. ஆகவே கேட்டான், "என்னிடமிருந்து நீங்கள் என்ன எதிர் பார்க்கிறீர்கள்?" என்று.

"முதலில் இங்கு தங்க வசதி."

"பிறகு?"

"உங்கள் கூட்டுறவு."

"எதற்கு?"

"கூடித் தொழில் செய்ய. நீங்கள் மட்டும் என் ஏற்பாட்டுக்கு உடன்பட்டால்..."

"என்ன ஏற்பாடு?"

"என்னிடம் மூன்று போர்க்கலங்கள் இருக்கின்றன. தங்களிடம் நான்கு போர்க்கலங்கள் இருக்கின்றன. ஏழு போர்க்கலங்கள்..." வாசகத்தை முடிக்கவில்லை இளைய பல்லவன். தூரக்கிழக்கில் சிறந்த கடலோடிகளில் ஒருவனான கங்கதேவன் மனத்தில் உண்மை விளக்கு பளிச்சென்று பிரகாசித்தது. அவன் கண்களிலும் உள்ளத்தின் ஒளி தெரிந்தது. "கடற்படையின் ஒரு பிரிவு" என்றான் குதூகலத்துடன்.

"கூட்டுறவில்தான் அது ஏற்பட முடியும்" என்று வலியுறுத்தினான் இளையபல்லவன்.

"ஆம். கூட்டுறவில்தான் ஏற்பட முடியும். தூரக்கிழக்கில் கேந்திரமான இடத்தில் ஒரு கடற்படைப் பிரிவு. அதை நடத்த இரு கடற்போர் வல்லவர்கள். இன்னும் என்ன தேவை? அவசியமானால் இந்தச் சாதனத்தைக் கொண்டு இங்கு ஓர் அரசையே ஸ்தாபிக்கலாம்" என்று படபடவென்று பேசிய கங்கதேவன் பஞ்சணையிலிருந்து எழுந்தான்! அவன் முகத்தில் பேராசையும் மகிழ்ச்சியும் பரவிக்கிடந்தது. அடுத்த விநாடி அந்த மகிழ்ச்சி மறைந்தது. சற்று வருத்தத்துடன் கூவினான் அவன், "இளையபல்லவரே, நான் இந்தக் கடல் மோகினியைத் தமிழர்களிடமிருந்து பிடித்துப் பதினைந்து நாட்களே ஆகின்றன" என்று.

"அதனாலென்ன?"

"இங்கு நூறு வீடுகளே இருக்கின்றன. அதிலிருந்த தமிழரில் பாதிப் பேர் போரில் மாண்டுவிட்டார்கள்."

இதைக்கேட்ட இளையபல்லவன் இதயம் கொதித்தது. இருப்பினும் அதை வெளிக்குக் காட்டாமலே சொன்னான், "அதனாலென்ன?" என்று.

"உணவு போதிய அளவு இந்தத் துறைமுகத்தில் இல்லை" என்றான் கங்கதேவன்.

"என்னிடமிருக்கிறது."

"எவ்வளவிருக்கும்?"

"அக்ஷயமுனையிலிருந்து கலிங்கம் செல்ல எவ்வளவு தேவையோ அவ்வளவு இருக்கிறது."

"கடற்போர் யந்திரங்கள்?"

"கடல் புறாவில் பூரணமாயிருக்கிறது. அதன் சக்தியை முன்பே தங்களுக்குச் சொன்னேன்."

"மற்ற இரண்டு மரக்கலங்களின் நிலை?"

"அதிகமாகச் சேதப்படுத்தாமல் கைப்பற்றியிருக் கிறேன்."

கங்கதேவன் முகம் திருப்தியைக் காட்டியது. இருப்பினும் ஒரு சந்தேகம் வரவே கேட்டான், "நீங்கள் கைப்பற்றிய இரு மரக்கலங்களும் கலிங்கத்துக்குச் சொந்தம். உங்கள் மரக் கலமோ கலிங்கம் செல்லும் மரக்கலம். அப்படியிருக்க, அவை தங்களைத் தாக்குவானேன்?" என்று.

கங்கதேவன் கேள்வி இளையபல்லவனை உள்ளூர அசர வைத்தாலும் அதை அவன் வெளிக்குக் காட்டவில்லை. "அந்த இரு மரக்கலங்களும் கடல் புறாவைத் தாக்கியிருக்கலாம். கடல் புறாவும் அந்த இரண்டு மரக்கலங்களைத் தாக்கி யிருக்கலாம். கடல்புறாவின் உடலில் அது எந்த நாட்டைச் சேர்ந்தது என்பதற்கு எந்த அடையாளமும் கிடையாது"

என்று சுட்டிக் காட்டிய இளையபல்லவன் பொருள்பட கங்கதேவனை நோக்கினான்.

"பலவர்மன் காயமடைந்தது?" என்று மற்றுமொரு கேள்வியை வீசினான் கங்கதேவன்.

"போரில் என்று மாலுமிகளுக்குச் சொன்னேன்" என்ற இளையபல்லவன் போலிச் சிரிப்புச் சிரித்தான். அந்தச் சிரிப்பில் கங்கதேவனும் கலந்துகொண்டான். சிரிப்பின் ஊடே இளையபல்லவனையும் அணைத்துக்கொண்டு, "நண்பரே!" என்று அழைத்தான். பிறகு நட்பை ஏற்றதற்கறிகுறியாக இளையபல்லவன் கைகளிரண்டையும் பற்றிக்கொண்டான் கங்கதேவன். அத்துடன் ஒரு வரமும் கேட்டான். அந்த வரத்தைக் கேட்ட இளையபல்லவன் பெரும் பீதியடைந்தான். ஏதோ நினைத்துக் காலை வைக்கப்போகப் பாதாளத்தில் இறங்கிவிட்டதை உணர்ந்த படைத்தலைவனுக்கு என்ன செய்வது என்று அடியோடு விளங்கவில்லை.





அத்தியாயம் 15

# ஒரு சொல்

"பொய்யுடையொருவன் சொல் வன்மையினால் மெய்போலுமே" என்ற தமிழ் மூதுரைக்கு ஏதாவது விளக்கம் தேவையாயிருந்தால் அந்த விளக்கத்தை இளையபல்லவன் கங்கதேவனிடம் கையாண்ட பேச்சு முறையில் காணலாம். பொய்கள் பலவற்றை ஆங்காங்கு சிற்சில உண்மைகளுடன் கலந்து கலந்து இளையபல்லவன் பரிமாறியதால் அவன் சொன்ன அனைத்தும் மெய்யே என நம்பிய கலிங்கத்து கங்கதேவன் அவனுடன் நட்புக் கொள்ளவே தீர்மானித்தான். கொள்ளையை முன்னிட்டே இளையபல்லவன் கடல் மோகினிக்குத் தனது துணைபெற வந்திருக்கிறானென்பதை அறிந்துகொண்டதால் மட்டுமின்றி, தங்கள் இருவர் கூட்டுறவால் ஏற்படக்கூடிய பெரும் லாபத்தை அவன் சுட்டிக் காட்டியதாலும், வந்திருப்பவன் அகூதாவின் உபதலைவன் என்ற காரணத்தாலும், இளையபல்லவன் விரோதத்தைவிட நட்பே தனக்குப் பலனளிக்கவல்லது என்பதை உணர்ந்து கொண்ட கங்கதேவன், விரோதத்தின் எல்லையிலிருந்து மனக்கப்பலை நட்பின் துறைமுகத்திற்கு இழுத்து நங்கூரம் பாய்ச்சினான். அந்த முடிவின் விளைவாகத்தான், "நண்பரே" என்று ஆர்வத்துடன் கூவி இளையபல்லவன் இரு கரங் களையும் பிடித்துக்கொண்டான்.

அத்துடன் விஷயம் நின்றிருந்தால் இந்தக் கதைப் போக்கும் கடல்மோகினியின் சரித்திரப் போக்கும் வேறு துறையில் திரும்பியிருக்கும். கங்கதேவன் நட்பை உறுதிப் படுத்தியதோடு நிற்காமல் மேலும் தனது எண்ணங்களை வெளியிட்டு வரம் ஒன்றையும் கேட்டான். வரத்தைக் கேட்ட வகையில் பணிவுகூட ஓரளவு இருந்தது. ஆனால் அந்த வரம்

இளையபல்லவன் இதயத்தைப் பெரிதும் கலக்கியது. கங்கதேவன் அத்தனை துரிதமாக அந்த வரத்தைக் கேட்டு விட்டான். கேட்க ஆரம்பித்தது சற்றுத் தாமதமாயிருந்தாலும் முடிவு திடீரென வந்தது. இளையபல்லவன் கையைப் பிடித்துக்கொண்டு, "நண்பரே" என முதலில் துவங்கிய கங்கதேவன், "உங்களை நான் மிகவும் பாராட்டுகிறேன்" என்றான்.

கங்கதேவன் வாசகத்துக்குப் பொருள் புரியாத இளைய பல்லவன் புருவங்களைச் சற்றே நெரித்து, "எதற்குப் பாராட்டு கிறீர்கள் தேவரே?" என்று வினவினான்.

கங்கதேவன் மெள்ள நகைத்து, "உங்கள் முடிவுக்கு" என்று பதிலிறுத்தான்.

"எந்த முடிவைக் குறிப்பிடுகிறீர்கள்?" என்று எழுந்தது இளையபல்லவன் கேள்வி. கங்கதேவன் குரலிலிருந்த ஏதோ ஓர் ஒலி இளையபல்லவன் இதயத்தில் சற்றுச் சந்தேகத்தைக் கிளப்பியது. இருப்பினும் மேற்படி கேள்வியைத் தொடுத்த இளையபல்லவன் அந்தச் சந்தேகம் முகத்தில் லவலேசமும் பிரதிபலிக்காமல் சர்வசகஜமாகவே நோக்கினான் கங்க தேவனை.

கங்கதேவன் இளையபல்லவன் கரங்களை அதிகமாக இறுக்கிப் பிடித்துத் தன் நட்பின் உறுதியைக் காட்டி, "கடல் மோகினிக்கு வர நீங்கள் செய்த முடிவைத்தான் குறிப்பிடு கிறேன்" என்றான்.

"வேறு எந்த முடிவை நான் செய்ய முடியும்?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"முடியாது. வேறு எந்த முடிவையும் செய்ய முடியாது. கடல் மோகினியைத் தளமாக அடைவதைவிடச் சிறந்த முடிவு கிடையாது. இந்தத் துறைமுகத்தின் வசதிகள் பல" என்றான் கங்கதேவன்.

"தெரியும் எனக்கு!" இளையபல்லவனின் குரலில் வியப்பு தெரிந்தது.

கேள்வியில் தொனித்த வியப்புச் சாயை பற்றிச் சிறிதும் லட்சியம் செய்யாமலே கேட்டான் கங்கதேவன், "கடல் மோகினித் தீவு கிடைத்தற்கரிய இடம் என்பதை ஒப்புக் கொள்கிறீர்களா?" என்று.

"கண்டிப்பாய் ஒப்புக் கொள்கிறேன்" என்றான் இளைய பல்லவன், கங்கதேவன் பேச்சின் போக்குக்குக் காரணம் புரியாமலே.

"என் நட்பு?"

"அதுவும் கிடைத்தற்கரியதுதான்?"

"அதையும் ஒப்புக் கொள்கிறீர்கள்?"

"ஆம்."

"இளையபல்லவரே!"

"உம்."

"ஸ்ரீவிஜயத்துக்கும் பாரதத்துக்கும் இடையே உள்ளதும் யாரும் சுலபத்தில் நெருங்க முடியாததுமான சிறந்த தளத்தில் உமக்குப் பங்கு தருகிறேன். கடற் போரில் வல்ல நானும் எனது மாலுமிகளும் உமது சகாக்களாகிறோம். இத்தனை நான் செய்வதற்குப் பதில் என்ன எனக்குத் தருவீர்கள்?" என்று வினவினான் கங்கதேவன்.

"கடற் கொள்ளையில் கிடைக்கும் எதிலும் பாதி" என்றான் இளையபல்லவன்.

"அதை நீங்கள் கொடுக்க வேண்டியதில்லை. நாளை நாம் செய்துகொள்ளப்போகும் ஒப்பந்தத்தில் அதெல்லாம் தெளிவு படுத்தப்படும். எனக்குச் சேர வேண்டியதை நானே எடுத்துக் கொள்வேன்."

"சரி."

"அப்படியானால் நீங்களாக என்ன தருவீர்கள்?"

"என்னிடமுள்ள எதையும், என்னால் கொடுக்கக் கூடிய எதையும் தருவேன்."

"நிச்சயமாக?"

"நிச்சயமாக."

"அப்படியானால் அந்தப் பெண்ணை எனக்குக் கொடுங்கள். இந்த வரம் தேவை எனக்கு."

எதிர்பாராதவிதமாக இடி தலையிலிறங்கினால்கூட அசையாத இளையபல்லவன் அந்த வரத்தைக் காதில் வாங்கியதும் பேரதிர்ச்சி அடைந்தான். பலவர்மன் அறையில் கங்கதேவன் காஞ்சனாதேவியைப் பார்த்த பார்வையிலிருந்தே அவன் துர் எண்ணத்தைப் புரிந்துகொண்ட இளைய பல்லவன், கங்கதேவன் தாங்கள் கரை சேர்ந்த பிறகு ஏதாவது துர்ச்செய்கைகளில் இறங்குவானென்று பதிர்பார்த்தானே யொழிய இத்தகைய பகிரங்க முறையில், அதுவும் தனது நட்புக் காணிக்கையாகக் காஞ்சனாதேவியைக் கேட்பான் என்பதை எதிர்பார்க்கவில்லையாதலால், "என்ன கேட்கிறீர்கள் கங்கதேவரே!" என்று உணர்ச்சிகளைக் கைவிட்டுச் சீற்றத்துடன் கேட்டான்.

அவன் சீற்றத்தைக் கண்ட கங்கதேவன் மெல்ல நகைத்து "இளையபல்லவரே! உலகத்தில் பெண்களால் பல சிறந்த காரியங்கள் கெட்டிருக்கின்றன. அந்தப் பட்டியலில் நமது நட்பும் சேரவேண்டாம்" என்று கூறினான்.

அப்பொழுதும் எச்சரிக்கை அடையாத இளைய பல்லவன், "தேவரே, நீர் கேட்பது..." என்று ஏதோ சொல்லப் போனான். அவன் சொற்களைப் பாதியிலேயே வெட்டிய கங்கதேவன், "அப்படியொன்றும் கைக்கெட்டாததல்ல" என்றான்.

அவன் சொற்களின் பொருளை நன்றாகப் புரிந்து கொண்டான் சோழர் படைத்தலைவன். அவசியமானால் பலாத்காரமாகத் தன்னிடமிருந்து காஞ்சனாதேவியை அவன் பறிக்க முடியுமென்பதையே கங்கதேவன் சுட்டிக் காட்டுகிறா னென்பதை உணர்ந்துகொண்ட சோழர் படைத்தலைவன், பலவர்மன் காய்ச்சல் உளறலில் உதித்த சொற்களின் உண்மை எத்தனை பலமானது என்பதையும் அறிந்து கொண்டதால்

வெகு சீக்கிரத்தில் எச்சரிக்கையடைந்து அதுவரை பேசி வந்த குரலையும் தோரணையையும் மாற்றிக்கொண்டு, "கங்கதேவரே! நான் உங்களுக்குத் தருவதாகச் சொன்னது என் வசத்திலிருப்பதைத்தான். இந்தப் பெண் அப்படியில்லை. இவள்..." என்று மேலே பேசுமுன்னே, "பலவர்மன் வளர்ப்பு மகள்தானே?" என்று கேட்டான் கங்கதேவன்.

"ஆம்" என்றான் படைத்தலைவன்.

"அவள் பெயர்? ஏதோ சொன்னீர்களே!"

"மஞ்சளழகி."

"மஞ்சளழகி! மஞ்சளழகி! என்ன அழகான பெயர்! அவள் உடல் பொன்னாகத்தானிருக்கிறது. கண்கள், ஆகா எத்தனை கருமை! அந்தக் கண்களைக் கவனித்தேன். அவற்றில் தெரிந்தது..."

"என்ன தெரிந்தது?"

"உண்மை."

"என்ன உண்மை?"

கங்கதேவன் பெருவிழிகள், இளையபல்லவனைக் கூர்ந்து நோக்கின. "சொன்னால் ஒப்புக் கொள்வீர்களா?" என்று அவன் பெரு உதடுகள் அகன்று சொற்கள் உதிர்ந்தன.

"உண்மை எதையும் ஒப்புக்கொள்வேன்" என்றான் இளையபல்லவன்.

"அவள் கண்களில் தெரிந்தது உண்மை. இளைய பல்லவரே! அந்தப் பெண்ணுக்கும் உமக்கும் ஏற்கெனவே உறவு உண்டு என்பது தெளிவாகத் தெரிந்தன. உங்களை ஏதோ விழுங்கி விடுவதுபோல் எத்தனை தடவை பார்த்தாள்?" என்ற கங்கதேவன், "கங்கதேவனை ஏமாற்ற முடியாது இளைய பல்லவரே! அதுவும் பெண்கள் சம்பந்தப்பட்டவரை ஏமாற்ற முடியவே முடியாது. எத்தனை நாட்டுப் பெண்களைப் பார்த்திருக்கிறான் கங்கதேவன்! பெண்களின் கண்கள் அவர்களைக் காட்டிக் கொடுக்கின்றன இளையபல்லவரே!

மஞ்சளழகியின் பார்வையிலிருந்து தெரிந்து கொண்டேன் அவள் உமது அடிமை என்பதை" என்றான்.

இளையபல்லவன் ஏதும் பேசாமல் சில விநாடிகள் நின்றான். பிறகு கேட்டான், "நண்பன் விரும்பும் பெண்ணைக் கேட்பதுதான் உமது பண்பாடா?" என்று.

கங்கதேவன் இடிஇடியென நகைத்தான். "பண்பாடு! என்ன அர்த்தமற்ற வார்த்தை! அதுவும் ஒரு கடற் கொள்ளைக்காரன் மற்றொரு கொள்ளைக்காரனிடம் சொல்லும் வார்த்தையா அது? அந்தச் சம்பிரதாய வார்த்தைக்கு இந்தப் பிராந்தியங்களில் பொருள் ஏது? கற்பழித்தல், களவாடல், கொள்ளையிடுதல் ஆகியவை கடல் பிராந்தியத்தில் நமது வர்க்கத்தின் வழக்கங்கள் அல்லவா? ஆகவே இளையபல்லவரே! சொல்லுங்கள். இந்தப் பெண்ணை என்னிடம் நீர் ஒப்படைக்க முடியுமா?" என்று கூறினான் நகைப்புக்கிடையே.

"அந்தப் பெண்ணை நான் ஒப்படைக்க முடியாது கங்கதேவரே!" என்று திட்டமாகக் கூறினான் இளைய பல்லவன் பதிலுக்கு.

"ஏன்?"

"நீர் நினைப்பதுபோல் அந்தப் பெண் எனது அடிமை யல்ல. தவிர..."

"தவிர?"

"அவள் தந்தை நினைவிழந்து படுத்திருக்கிறார்."

"அதற்கும் அவளை நான் அடைவதற்கும் என்ன சம்பந்தம்?"

"பெண்களைப்பற்றி எல்லாம் தெரிந்ததாகச் சொல் கிறீர்கள். ஆனால் முக்கியமானது தெரியவில்லை உங்களுக்கு."

"என்ன முக்கியமானது?"

"அவர்கள் மனோபாவம். தந்தையின் நிலை அபாயமா யிருப்பதால் மனம் கலங்கியிருக்கும் பெண்ணைத் துன்புறுத்துதல் கயவர் செய்யும் வேலை."

இதைக்கேட்ட கங்கதேவன் சற்று யோசித்தான். இளைய பல்லவன் சொன்ன சொற்களில் சிறிது உண்மை இருப்ப தாகவே புலப்பட்டது அவனுக்கு. அதுவும், துன்பப்படும் பெண்ணைப் பலவந்தப்படுத்துவதில் இன்பமிருக்க முடியாது என்பதையும் உணர்ந்துகொண்ட அவன், "சரி இளைய பல்லவேர! அவள் தந்தை தேகநிலை குணப்பட்ட பிறகு?" என்று வினவினான்.

"உங்களிஷ்டம்போல் எதை வேண்டுமானாலும் செய்யுங்கள். நான் தலையிடவில்லை. ஆனால் மீண்டும் சொல்கிறேன். அந்தப் பெண்ணிடம் எனக்கு எந்த உரிமையும் கிடையாது" என்று இளையபல்லவன் கூறினான்.

"இது போதும் எனக்கு" என்று கூறிய கங்கதேவன் அதற்கு மேல் உரையாடலை வளர்த்த இஷ்டப்படாமல் இளைய பல்லவனுடன் கைகோர்த்துக் கொண்டு அறையை விட்டு வெளியே வந்து வெளியே நின்ற காவலரை விளித்து இளைய பல்லவனுக்குத் தேவையான சகல வசதிகளையும் அளிக்க உத்தரவிட்டான். அத்துடன் கங்கதேவனிடம் விடைபெற்றுக் கொண்ட இளையபல்லவன், அமீர் பின்தொடர மாளிகைக்கு வெளியே வந்து தன்னுடன் வந்த மற்றவர்களையும் அழைத்துக் கொண்டு துறைமுகத்தின் முனைப்புக்கு வந்து நீண்ட நேரம் கடலையே பார்த்துக்கொண்டு நின்றான். பிறகு திரும்பி காளத்தி நதி பாயும் இடங்களையும் அங்கிருந்த கடற்கோரை களையும் கவனித்தான். அடுத்தபடி படகைக் கொண்டுவரச் சொல்லி, கடல் புறாவுக்குத் தனது சகாக்களுடன் வந்து சேர்ந்தான்.

கங்கதேவன் அறையிலிருந்து வெளிவந்தது முதல் இளைய பல்லவன் மனம் பெரிதும் குழம்பிக் கிடந்ததை முகபாவத்தி லிருந்தே அமீர் அறிந்துகொண்டான். கடற்கரையில் வந்தும் கூட இளையபல்லவன் உடனே படகைக் கொண்டுவரச் சொல்லாமல் நீண்ட நேரம் கடற்கரையையும், காளத்தி நதியையும் வெறித்து வெறித்து நோக்கியதையும் கண்டு இளையபல்லவன் இதயத்தை ஏதோ பெரும் துன்பம் சூழ்ந்து

விட்டது என்பதை உணர்ந்து கொண்டான். அதைப்பற்றி இருமுறை கேட்க அவன் முற்பட்டும் இளையபல்லவன் அதைக் காதில் வாங்கிக் கொள்ளாததிலிருந்து இளைய பல்லவன் அடியோடு சுயநிலை இழந்துவிட்டதைப் புரிந்து கொண்ட அமீர் பிரமித்தான். பெரிய பெரிய அபாயங்கள் நேர்ந்த போதெல்லாம் நிதானமிழக்காத இளையபல்லவனே நிதானத்தை இழக்க வேண்டுமானால் கங்கதேவன் ஏதோ பெரும் வெடியை இளையபல்லவன் மீது வீசி இருக்கிறான் என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டான் அமீர்.

இளையபல்லவன் யார் உணர்ச்சியையும் கவனிப்பதிலோ லட்சியம் செய்வதிலோ சிறிதும் சிரத்தை காட்டாமல் கடல் புறாவை அடைந்து நேரில் தனது அறைக்குச் சென்று கதவை அடைத்துக் கொண்டான். பல நாழிகைகள் அடைத்த கதவு அடைத்தபடியே இருந்தது. அறைக்குள் நுழையுமுன்பு கண்டியத்தேவனை அழைத்து யாரும் தன் அறைக்கு வர வேண்டாமென்றும் இளையபல்லவன் உத்தரவிட்டுச் சென்ற படியால் யாரும் அந்தப் பக்கம் போகவே இல்லை. இளைய பல்லவன் உத்தரவும் போக்கும் கண்டியத்தேவனுக்கும் புதிரா யிருக்கவே அவன் அமீரை அதற்குக் காரணம் விசாரித்தான். அமீர் தனக்குத் திட்டமாகக் காரணம் தெரியாதென்றும், கங்கதேவன் அறையிலிருந்து வெளிவந்த இளையபல்லவன் கங்கதேவன் பணியாட்கள் தயார் செய்திருந்த விருந்தைக் கூட மறந்து நேராகக் கடற்கரை வந்துவிட்டானென்றும் அறிவிக்கவே கண்டியத்தேவன் மேலும் குழம்பினான். நாழிகைகள் வேகமாக ஓடிக்கொண்டிருந்தன. மாலைப் பொழுதும் துரிதமாக அணுகிக்கொண்டிருந்தது. சீக்கிரம் மரக் கலங்களைத் துறைமுகத்துக்குக் கொண்டு போகாவிட்டால் ஒருநாள் வீணாகும் என்பதை நினைத்துப் பார்த்த கண்டியத் தேவன் நிலைமையைப் பற்றி அமீருடன் கலந்து பேசத் தொடங்கி, "அமீர்! பொழுது போகிறதே" என்றான்.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் அமீர். "கடல்மோகினியில் நாம் காலை வைக்க வேண்டு

மானால் பகல் வெளிச்சம் இருக்கும்போதே கால்வைப்பது நல்லதல்லவா?" என்று கேட்டான் கண்டியத்தேவன்.

"ஆம்."

"தலைவரை எப்படி அணுகுவது!"

"அணுகமுடியாது. •அவர் உத்தரவுதான் திட்டமா யிருக்கிறதே."

"அவர் பழைய உத்தரவை வைத்துக்கொண்டு கலிங்கத்தின் இரு மரக்கலங்களையும் கரைக்குக் கொண்டு போய்விட்டாலென்ன?"

"உங்கள் பொறுப்பில் வேண்டுமானால் அதைச் செய்யுங்கள்."

"ஏன்?"

"நான் பொறுப்பில் பங்குகொள்ள மாட்டேன்."

"ஏன்?"

"கரையிலிருந்து திரும்பிவந்த பிறகு படைத்தலைவர் எண்ணமோ திட்டமோ மாறியிருக்கலாம்."

அமீர் சொன்னதில் அர்த்தமிருப்பதாகவே பட்டது கண்டியத்தேவனுக்கு. படைத்தலைவன் உத்தரவின்றிக் கப்பல்களை நகர்த்துவதும் பிசகு. நகர்த்தாதிருந்தாலும் பிசகு. சீக்கிரம் கரையை அடைந்து பழுது பார்க்கும் வேலையைச் சீக்கிரமாகத் துவங்குவதே அப்பொழுது செய்யவேண்டிய முக்கிய வேலை. இந்த எண்ணங்களால் என்ன செய்வதென்று அறியாமல் திணறினான் கண்டியத்தேவன். திடீரென அவனுக்கு யோசனை தோன்றவே அமீரின் தோளைப் பலமாகத் தட்டி, "அமீர்! ஒரு யோசனை தோன்றுகிறது எனக்கு" என்றான்.

"என்ன யோசனை தேவரே?" என்று கேட்டான் அமீர்.

"நாம்தான் படைத்தலைவரைத் தொந்தரவு செய்ய முடியாது."

"யாரும் செய்யக் கூடாதெனப் படைத்தலைவர் உத்தரவு."

"எந்த உத்தரவுக்கும் ஒரு விலக்கு உண்டு அமீர்."

"இந்த உத்தரவுக்கு?"

"காஞ்சனாதேவி விலக்கு" என்று கூறினான் கண்டியத் தேவன்.

"ஆம் ஆம். அவர்களிடம் விஷயத்தைச் சொல்லி படைத் தலைவர் கருத்தை அறியலாம்" என்று அமீரும் ஒப்புக் கொண்டான்.

நல்ல திட்டத்தைத்தான் வகுத்தான் கண்டியத்தேவன். நிறைவேறக்கூடிய திட்டம்தான். திருப்திகரமாக நிறைவேறக் கூடிய திட்டமும்கூட. ஆனால் எந்தத் திட்டமும் நிறை வேற்றுபவனைப் பொறுத்திருக்கிறது. கண்டியத்தேவன் தன் திட்டத்தை நிறைவேற்றப் பொறுக்கிய மனிதன் சரியானவ னல்ல. அவனால் பெருவினையே விளைந்தது. முடிவு விபரீதமாயிருந்தது. தன் திட்டத்தை நிறைவேற்ற சேந்தனைத் தேர்ந்தெடுத்துக் காஞ்சனாதேவியிடம் அனுப்பினான் கண்டியத்தேவன். சேந்தன் தனது முட்டாள்தனத்தை மிகத் தெளிவாகக் காட்டினான். அவன் சொன்ன ஒரு சொல் பேராபத்தை, விபரீதத்தை விளைவித்தது. முட்டாளின் ஒரு சொல்லுக்கு எத்தனை வலிமை உண்டென்பதைக் கண்டியத் தேவன் மட்டுமல்ல, இளையபல்லவன் கூடப் புரிந்து கொண்டான்.

அத்தியாயம் 16

# பெண் எனும் புயல்

கடல் புறாவில் தலைவனுக்கெனப் பிரத்தியேகமாக அமைக்கப்பட்டிருந்த அக்ரமந்திரத்திற்குள் சென்று கதவைத் தாழிட்டுக்கொண்ட இளையபல்லவனைக் காஞ்சனாதேவி மூலம் அணுகத் தீர்மானித்த கண்டியத்தேவன் அந்தச் சமயத்தில் இருந்த எத்தனையோ வேதனையுடன் சிறிது தற்பெருமையும் கொண்டான். அக்ரமந்திரத்தைத் தான் சிருஷ்டித்த சமயத்தில் மற்ற சாதாரண அக்ரமந்திரங்களைப் போல் அதை நிறுவாமல் அதற்கு இரண்டு வாயிற்படிகளை யும் கதவையும் வைத்தது எத்தனை சாமர்த்தியம் என்று தன்னைத்தானே பாராட்டிக் கொண்டதல்லாமல் அதைப் பற்றி அமீருடனும் பிரஸ்தாபிக்கத் தொடங்கி, "நல்லவேளை அமீர்! அக்ரமந்திரத்தை அடைய வாயில்கள் இரண்டை அமைத்தேன்" என்றான் கண்டியத்தேவன்.

அப்பொழுதிருந்த ஆபத்தான சமயத்தில் கண்டியத் தேவனின் கப்பல் கட்டும் திறனைப்பற்றிப் பாராட்டும் மன நிலையில் இல்லாத அமீர், "ஆமாம் ஆமாம்! உமது திறமை பாராட்டத் தக்கதுதான்" என்று ஏளனத்துடன் கூறினான்.

அந்த ஏளனத்தைப் பற்றிச் சிறிதும் லட்சியம் செய்யாத கண்டியத்தேவன், "நீ எள்ளி நகையாடலாம் அமீர்! ஆனால் அந்த இரண்டு வாயில்களை நான் அமைத்திராவிட்டால்...?" என்று ஏதோ புது அர்த்தம் பார்வையில் தொனிக்க அமீரை நோக்கினான்.

"அமைத்திராவிட்டால் குடி முழுகிப் போய்விடு மாக்கும்?" என்றான் அமீர் இகழ்ச்சி குரலில் பிரதிபலிக்க.

"ஆம்." திட்டமாக வந்தது தேவனின் பதில்.

"யார் குடி?" எரிச்சலுடன் எழுந்தது அமீரின் கேள்வி.

"இந்தக் கடல் புறாவின் குடி. இந்தக் கடல் புறாவைக் காப்பாற்ற இளையபல்லவரை அணுகவேண்டும். அவரோ அக்ரமந்திரத்தைத் தாழிட்டுக்கொண்டுவிட்டார். அணுகக் கூடிய காஞ்சனாதேவியோ...?" வாசகத்தை முடிக்காமலே நிறுத்தினான் கண்டியத்தேவன்.

"உம். சொல்லுங்கள்."

"அக்ரமந்திரத்தின் உள்ளறையில் இருக்கிறார்கள் பலவர்மனுடன்."

அப்பொழுதுதான் விளங்கியது அமீருக்கு நிலைமை. "அக்ரமந்திரத்தில் இருக்கும் இளையபல்லவனும் காஞ்சனா தேவியும் இத்தனை நேரம் எப்படிச் சந்திக்காமல் இருக்க முடியும்?" என்று நினைத்த அமீர் அதைக் கேட்டும் விட்டான் கண்டியத்தேவனை.

"பலவர்மனும் காஞ்சனாதேவியும் இருக்கும் உள்ளறைக்கும் அக்ரமந்திரத்திற்கும் இடையே கதவிருக்கிறது அமீர். ஆனால் இப்பொழுதுள்ள மனநிலையில் அதையும் படைத்தலைவர் தாழிட்டிருப்பார். சந்தேகமே வேண்டாம். ஆகவே அக்ரமந்திரத்தின் மறு பக்கத்தில் நான் அமைத் திருக்கும் சிறு ரகசிய வாயிலைத் திறக்கிறேன். அதன் வழியாகக் காஞ்சனாதேவி இருக்கும் உள்ளறையை அடையலாம்" என்றான் கண்டியத்தேவன்.

"அந்த வாயிலைப்பற்றி இதுவரை நீர் எதுவுமே சொல்ல வில்லையே!"

"இல்லை. சொல்லும் வழக்கமில்லை."

"இதில் வழக்கம் வேறா?"

"ஆம் அமீர். கப்பலில் உள்ள ரகசிய அறைகள், இதர சூட்சுமங்கள், கப்பலை அமைப்பவனுக்கும் அதை இயக்கும் தலைவனுக்கும் மட்டுமே தெரியலாம் என்பது சாத்திரம். இப்பொழுது ஆபத்து நம்மை எதிர்நோக்கி இருப்பதால் அந்த வாயிலைத் திறக்கிறேன். சேந்தனைக் கூப்பிடு" என்றான் கண்டியத்தேவன்.

அமீரின் முகத்தில் வியப்பு விரிந்தது. "கூலவாணிகனா! அவனெதற்கு?" என்று வினவினான் அமீர், வியப்பு குரலிலும் ஒலிக்க.

"அவன்தான் நமது திட்டத்தை நிறைவேற்ற வேண்டும்."

"ஏன்?"

"அவன்தான் காஞ்சனாதேவியின் அறைக்குள் நுழைய முடியும்."

"ஏன்? நாம்...?"

"நுழையலாம். நுழைந்த காரணத்தைச் சட்டென்று விவரிக்க முடியாது. விவரித்தாலும் நாம் சொல்வதைக் காஞ்சனாதேவி எடுத்துக்கொள்ள மறுத்தால் நிலைமை சீர் கெட்டுவிடும். சேந்தன்தான் இதற்குத் தகுதி. அவன் பலவர்ம னுக்குச் சிகிச்சை செய்யும் காரணத்தால் சதா காஞ்சனா தேவியுடன் இருக்கிறான். அவன் விரிவாகப் பேசுகிற அளவுக்கு நாம் பேச முடியாது" என்று விளக்கினான் கண்டியத்தேவன்.

கண்டியத்தேவன் கருத்து சரியென்றே பட்டது அமீருக்கு. ஆகவே சேந்தனையே காஞ்சனாதேவியிடம் தூதனுப்பத் தீர்மானித்து அவனை வரவழைக்கவும் செய்தான் அமீர். அவர்கள் அழைப்புக்கிணங்கித் தளத்துக்கு வந்த சேந்தனை, "எங்கிருந்து வருகிறீர் கூலவாணிகரே?" என்று வினவினான் அமீர்.

"கீழிருந்து" என்றான் கூலவாணிகன்.

"கீழே எங்கிருந்து?"

"சமையலறையிலிருந்து. கரையில் விருந்தில் மண் விழுந்து விட்டது. கடல்புறாவிலும் அதற்கு ஏன் தடையிருக்க வேண்டு மென்று யோசித்தேன்."

"நல்ல யோசனை கூலவாணிகரே! உணவு அருந்தி விட்டீரா?" என்று குறுக்கே சம்பாஷணையில் புகுந்தான் கண்டியத்தேவன்.

"இல்லை, உட்கார்ந்தேன். அமீர் அவசரமாக அழைத்ததாகச் செய்தி வந்தது. எழுந்து வந்துவிட்டேன்" என்றான் சேந்தன் வருத்தத்துடன்.

"நல்ல வேலை செய்தீர்" என்று அமீர் பாராட்டினான்.

"எது நல்ல வேலை? பட்டினி கிடப்பதா?" என்று சீறினான் சேந்தன்.

"ஆம். சில வேளைகள் உபவாசம் உடலுக்கு நல்லது" என்ற கண்டியத்தேவன், மேற்கொண்டு அந்த சம்பாஷணையைத் தொடர இஷ்டப்படாமல், "நன்றாகக் கவனியுங்கள் கூலவாணிகரே! நாம் பேராபத்திலிருக்கிறோம். இன்று இருட்டுவதற்குள் மரக்கலங்கள் துறைமுகத்துக்குள் செல்ல வேண்டும். பொழுது ஓடுகிறது-" என்று சுட்டிக் காட்டினான்.

"அதற்கு நான் என்ன செய்யட்டும்? நான் என்ன கப்பல் தலைவனா!" என்று வினவினான் சேந்தன் குழப்பத்துடன்.

"நல்ல வேளையாக அந்த துர்பாக்கியம் கடல் புறாவுக்கு ஏற்படவில்லை" என்று குறுக்கிட்டான் அமீர்.

"அமீர்!" சேந்தன் சொல் ஆத்திரத்துடன் உதிர்ந்தது.

"கோபம் வேண்டாம் கூலவாணிகரே! அமீர், சும்மா இரு" என்று இருவரையும் சமாதானப்படுத்திய கண்டியத்தேவன், "கூலவாணிகரே! உமது உதவி இருந்தால்தான் கப்பல் துறைமுகத்தில் நுழைய முடியும்" என்றான்.

கூலவாணிகன் முகத்தில் பெருமை மிதமிஞ்சிப் பரவியது. "என்னால் முடிந்ததைச் செய்கிறேன் தேவரே!" என்று பெருமை குரலில் தாண்டவமாடச் சொன்ன சேந்தன் அதே பெருமை நிலவிய பார்வையை அமீர் மீதும் வீசினான். அமீரின் இதழ்களில் இகழ்ச்சிக் குறி படர்ந்தது. அவன் ஏதோ பதில் சொல்லப் போனதைத் தடுத்த கண்டியத்தேவன், "நமது சச்சரவுகளுக்குச் சமயம் இதல்ல" என்று கண்டித்துவிட்டு சேந்தனை நோக்கி, "கூலவாணிகரே! படைத்தலைவர் அக்ர மந்திரத்துக்குள் சென்று கதவை மூடிக்கொண்டுவிட்டார்" என்றான்.

"ஆம். தெரியும்."

"யாரும் தன்னைத் தொந்தரவு செய்யக் கூடாதென உத்தரவு இட்டிருக்கிறார்."

"அதுவும் தெரியும்."

"அவர் உத்தரவில்லாமல் கப்பல்களை எப்படிக் கரையை நோக்கிச் செலுத்துவது?"

"முடியாது முடியாது" என்ற சேந்தன், நிலைமையைப் புரிந்துகொண்டதோடல்லாமல், கண்டியத்தேவன் அழைத்த காரணத்தையும் புரிந்துகொண்டதால், "இந்தப் பணி நம்மால் முடியாது தேவரே," என்றான்.

"எந்தப் பணி?" கோபத்துடன் எழுந்தது கண்டியத்தேவன் கேள்வி.

"நீங்கள் கோபித்துப் பயனில்லை தேவரே! தலைவர் உத்தரவுக்கு மாறாகக் கதவைத் தட்டி அவரை அணுகச் சொல்கிறீர்கள் என்னை. தலைவருக்குக் கோபம் வந்தால் எப்படி இருக்கும் என்பது எனக்குத் தெரியும். அவர் கோபத்துக்கு என்னைக் காவு கொடுக்க நீங்களிருவரும் சதி செய்கிறீர்கள்?" என்று குரல் நடுங்கச் சொன்னான் சேந்தன்.

இத்துடன் பொறுமை இழந்த அமீர் திடீரென சேந்தன் அங்கியைப் பிடித்து ஓர் உலுக்கு உலுக்கி, "முட்டாள்! உன்னை யார் போகச் சொன்னது தலைவரிடம்?" என்று சீறினான்.

அமீரின் பிடியிலிருந்து சேந்தனை விலக்கிய கண்டியத் தேவன், "கூலவாணிகரே! நீங்கள் படைத்தலைவரைச் சந்திக்கத் தேவையில்லை. உள்ள நிலைமையை நீங்கள் காஞ்சனாதேவிக்கு எடுத்துச் சொல்லவேண்டும். அவ்வளவு தான் உமது வேலை" என்றான்.

அப்பொழுதும் கண்டியத்தேவனைச் சந்தேகத்துடன் பார்த்த சேந்தன், "காஞ்சனாதேவி உள் அறையிலிருக்கிறார் களே! அவர்களை எப்படி அணுகுவது?" என்று வினவினான்.

"வேறு வழி இருக்கிறது" என்று கூறிய கண்டியத்தேவன், "கூலவாணிகரே, கவனமாகக் கேளுங்கள். கப்பல்களை நங்கூர மெடுத்துத் துறைமுகத்துக்குள் கொண்டு செல்லப் படைத் தலைவர் அனுமதி வேண்டுமென்பதையும் பொழுது ஓடுகிற தென்பதையும் காஞ்சனாதேவியிடம் விளக்கிச் சொல்லுங்கள். அதுமட்டுமல்ல, கங்கதேவனிடம் பேசிவிட்டு வந்த தலைவர் மிகவும் குழப்பத்திலிருப்பதாகவும் அவரை அணுக நாம் பயப்படுவதாலேயே அவரை அந்தப் பணியைச் செய்யும்படி நாம் கேட்பதாகவும் சொல்லுங்கள். அக்ரமந்திரத்தின் உள்ளறைக்கும் பிரதான அறைக்குமிடையே உள்ள வாயிலைத் தட்டி, படைத்தலைவரைச் சந்திக்கச் சொல்லுங்கள். எப்படியும் தலைவர் உத்தரவு இன்னும் ஒரு நாழிகைக்குள் தேவையென்று சொல்லுங்கள்" என்று கூறினான்.

இதைக்கேட்ட சேந்தன், "இதை நீங்களே காஞ்சனாதேவி யிடம் கூறினால் என்ன?" என்று வினவினான்.

"கூறலாம். ஆனால் அக்ரமந்திரத்தின் பிரதான வாசல் அடைத்திருக்கிறது. திட்டிவாசல் வழியாக நுழைகிறோம். நாங்கள் நுழைவதைவிட நீர் நுழைவது பொருந்தும். நீர் மருத்துவரல்லவா?" என்றான் கண்டியத்தேவன்.

சேந்தன் இதயத்தில் மீண்டும் பெருமை எழுந்தது. மருத்துவனாயிருப்பதால் எத்தனை பேர் தனது தயவை நாடுகிறார்களென்று உணர்ந்து மகிழ்ந்து கண்டியத்தேவன் கட்டளையை நிறைவேற்ற உடன்பட்டான். அத்துடன் மற்ற மாலுமிகளைக் கப்பலை நகர்த்துவதற்கு வேண்டிய ஏற்பாடு களுக்குத் தூண்ட அமீரை அனுப்பிவிட்ட கண்டியத்தேவன், அக்ரமந்திரத்தின் மறுபுறத்துக்குச் சேந்தனை அழைத்துச் சென்று அங்கிருந்த சூட்சும ஆணியொன்றை அழுத்த ஒரு பலகை நகர்ந்து திட்டிவாசல் திறந்தது. அந்த வாயில் மூலமாகச் சேந்தன் உள்ளே நுழைந்தான்.

திடீரெனப் பின்பக்கத்தில் ஒரு வாயில் திறந்ததும் அதன் வழியாகச் சேந்தன் நுழைந்ததும் பிரமிப்பாயிருந்தது காஞ்சனா தேவிக்கு. பலவர்மன் பஞ்சணை முகப்பில் உட்கார்ந்திருந்த

காஞ்சனாதேவி வியப்புடன் அந்தப் புது வாயிலையும் பார்த்து சேந்தனையும் பார்த்தாள். பிறகு கேட்டாள், "இப்படி ஒரு வாயில் இருக்கிறதா இங்கு!" என்று வியப்பு குரலில் பூரண மாகப் பிரதிபலிக்க.

"ஆம், இருக்கிறது" என்று தான்தான் அதைக் கண்டு பிடித்ததுபோல் கூறிய கூலவாணிகள் நேராக மஞ்சத்திடம் சென்று பலவர்மன் நாடியைப் பரிசோதித்தான். பிறகு, "பாதக மில்லை! நாடி திட்டமாகவும் சரியான வரையறையுடனும் துடிக்கிறது" என்றான்.

"சீக்கிரம் குணமாகுமா இவருக்கு?" என்று கேட்டாள் காஞ்சனாதேவி.

குணமாகும் அல்லது நாள் பிடிக்கும் என்று பதில் சொல்லவேண்டிய சேந்தன் வேண்டுமென்றே சொற்களைக் கூட்டி, "கரைக்குச் சென்று சிகிச்சை செய்தால் சீக்கிரம் குணப்படும்" என்றான்.

"கரைக்குப் போவதில் இன்னும் ஏன் தாமதம்?" என்று வினவினாள் காஞ்சனாதேவி கவலையுடன்.

"கரைக்குப் போகத் தலைவர் உத்தரவு வேண்டுமல்லவா?" சாதுர்யத்துடன் பேசினான் சேந்தன்.

"ஏன், தலைவர் கட்டளையிடவில்லையா?" என்று கேட்டாள் காஞ்சனாதேவி.

"இல்லை."

"ஏன்?"

"தலைவரை யாரும் பார்க்க முடியவில்லை."

"ஏன் பார்க்க முடியவில்லை?"

"அக்ரமந்திரத்துக்குள் சென்று தாழிட்டுக் கொண்டு விட்டார். யாரும் கதவைத் தட்டக்கூடாதெனக் கண்டிப்பான உத்தரவும் பிறப்பித்திருக்கிறார்."

சேந்தன் பதில் காஞ்சனாதேவிக்குக் குழப்பத்தையும் ஓரளவு கவலையையும் விளைவிக்கவே அவள் சென்று இரண்டு அறைகளுக்குமிடையே இருந்த கதவைச் சற்றுத்

தள்ளிப் பார்த்தாள். கதவு அந்தப்புறம் தாழிடப்பட்டிருந்தது. அதைக் கண்டு சற்று நேரம் நின்று நிதானித்து உற்றுக் கேட்டாள். அடுத்த அறையில் இளையபல்லவன் நடமாடும் சத்தம் கேட்டது. அதைக் கேட்டுத் திரும்பிய காஞ்சனாதேவி, "கூலவாணிகரே! இளையபல்லவர் பெரும் குழப்பத்தில் இருப்பதாகத் தெரிகிறது" என்றாள்.

"குழப்பம் என்பதைவிட வேதனை என்பது பொருந்தும்" என்றான் கூலவாணிகன்.

"அவரை இப்பொழுது..." என்று இழுத்தாள் காஞ்சனா தேவி.

"உங்களைத் தவிர வேறு யாரும் அணுக முடியாது" என்றான் சேந்தன்.

இதைக்கேட்ட காஞ்சனாதேவியின் உள்ளத்தில் கவலை யுடன் ஆனந்தமும் கலந்து பிரவாகித்தது. இளையபல்லவன் மீது தனக்குள்ள சக்தியை அவள் உணர்ந்திருந்தாள். காதலனிடம் தனக்குள்ள சக்தியை உணராத காதலி உலகத்தில் யார்? ஆகவே அந்த எண்ணத்தால் ஏற்பட்ட பெருமிதத்துடன் கேட்டாள், "இப்பொழுது நான் என்ன செய்யவேண்டும் கூலவாணிகரே?" என்று.

"படைத்தலைவரை அணுகி, கப்பல்களை நகர்த்த அனுமதி பெறவேண்டும்."

"வேறு யாரும் அவரை அணுக முடியாதா?"

இந்தச் சமயத்தில் சேந்தன் தனது முட்டாள்தனத்தைக் காட்டினான். அதைச் சாமர்த்தியமென்று நினைத்து, "வேறு ஒருவரும் உண்டு..." என்று இழுத்தான்.

"யாரது?" கடுமையாக எழுந்தது காஞ்சனாதேவியின் கேள்வி.

அந்தக் கடுமையைக் கவனிக்காமலே சொன்னான் கூலவாணிகன், "மஞ்சளழகி" என்று.

"யாரது மஞ்சளழகி?" காஞ்சனாதேவியின் குரலில் சினம் பெரிதும் ஒலித்தது.

"பலவர்மன் புதல்வி."

"என் சிறிய தந்தைக்குக் குழந்தைகள் கிடையாது."

"வளர்ப்புப் பெண் உண்டு."

"அவள்தான்-"

"மஞ்சளழகி."

"அவளுக்கும் தலைவருக்கும் என்ன சம்பந்தம்?" இந்தக் கடைசிக் கேள்வி மிகுந்த சினத்துடன் எழுந்தது.

அவள் கோபத்தைக் கண்ட சேந்தன் தனது தவறை உணர்ந்து கொண்டான். ஆனாலும் அதை மறைக்கவோ பின்வாங்கவோ வழியில்லாமல், "இருவருக்கும்- இருவருக்கும்" என்று உளறினான்.

"என்ன இருவருக்கும்?" இடியென எழுந்தது காஞ்சனா தேவியின் கேள்வி.

"மணமாக இருந்தது. மன்னிக்க வேண்டும் தேவி, ஆனால் மணம் நடக்கவில்லை. சமயத்தில்... சமயத்தில்" உளறினான் சேந்தன்.

"உம்! சொல்."

"வேறு சந்தர்ப்பங்கள் குறுக்கிட்டன."

காஞ்சனாதேவியின் கோபம் எல்லை கடந்தது. எல்லை கடந்த கோபம் வெளியில் தெரியவில்லை. 'சந்தர்ப்பங்கள் குறுக்கிட்டன. இல்லாவிட்டால் அவளை மணம் செய்து கொண்டிருப்பார்?'

"அப்படியா சரி சரி. நீ போ வெளியே" என்று உத்தரவிட்ட அவள் இரண்டு எட்டில் அக்ரமந்திரத்தின் இடைக் கதவைத் தடதடவெனத் தட்டினாள்.

அது திறந்ததும் புயல் புகுவதுபோல் உள்ளே புகுந்தாள். அந்தப் புயலில் அகப்பட்ட படைத்தலைவன் தத்தளித்தான். அவன் மட்டுமல்ல, கடல்புறாவும் தத்தளித்தது. கடல்புறா மட்டுமல்ல, அதிலிருந்த சகலரும் தத்தளித்தார்கள். 'பெண் எனும் புயல் இத்தனை பயங்கரமானதா?' என்று அமீர் தன்னைத்தானே பலமுறை கேட்டுக்கொண்டான் அன்றும் மறுநாளும்.

## அத்தியாயம் 17

# சரணாகதி

அக்ரமந்திரத்தின் பிரதான அறைக்கும் உள்ளறைக்கு மிடையேயிருந்த சிறு கதவைத் திறந்துகொண்டு மிதமிஞ்சிய கோபத்துடன் புயலென உள்ளே நுழைந்த பெண்ணரசியான காஞ்சனாதேவியின் கண்கள் இளையபல்லவனைக் கண்டதும் சில விநாடிகள் அச்சத்தின் வசப்பட்டபடியால் அவள் அடைந்திருந்த கோபத்தின் ஊடே திகிலும் ஓரளவு புகுந்து கொண்டதன் விளைவாகக் கால்கள் சட்டென்று தேங்கி நிற்கவே செய்தன. இளையபல்லவன் முகத்தில் அன்றுவரை தான் காணாத கோபத்தின் ஜ்வாலை கொழுந்து விட்டெரிந்து கொண்டிருந்ததையும், தான் உள்ளே நுழைந்ததும் காதல் அம்சம் என்பது சிறிதும் இல்லாத கடுமையான கண்கள் தன் கண்களை வெட்டி விடுவனபோல் சந்தித்ததையும் பார்த்த காஞ்சனாதேவி சில விநாடிகள் பிரமித்தே போனாள். அவன் கண்களிலிருந்த சீற்றம் தன் சீற்றத்தை ஒரு நிலையில் நிற்க முடியாதபடி அடித்துவிட்டதையும் கண்ட அவள், பெண்கள் முன்பு எப்பொழுதும் பல்லிளிக்கும் புருஷர்களின் உறுதி சில சந்தர்ப்பங்களில் பெண்களை வெறுக்கவும் வல்லது என்பதையும் அந்தச் சில விநாடிகளில் புரிந்துகொண்டாள். ஆகவே அவள் வந்த வேகம் தடைப்பட்டது. கோபமும் தடைப்பட்டது. அப்படித் தடைப்பட்டு நின்ற காஞ்சனா தேவியை நோக்கி, "இங்கு எதற்கு வந்தாய்?" என்று இளைய பல்லவனின் சுடுசொற்கள் சீறி வந்தன.

அந்தச் சொற்களைக் கேட்ட காஞ்சனாதேவி ஒரு விநாடி திகைத்தாள். அடுத்த விநாடி அந்தத் திகைப்பை உதறிக் கொண்டு மஞ்சளழகியின் மணவாளனாக இருந்தவன் இளையபல்லவன் என்ற கருத்தை மீண்டும் இதயத்தில் ஏற்றுக்

கொந்தளிப்பு அடைந்தாள். ஆகவே, "இங்கு வந்தாலென்ன!" என்று வினவினாள் அந்தக் கொந்தளிப்பைக் குரலில் நன்றாகப் பாய்ச்சி.

இளையபல்லவன் கண்களில் சீற்றம் சிறிதும் குறைய வில்லை. காஞ்சனாதேவியைக் கண்டதும் அவன் மனம் கங்கதேவனை நினைத்தது. கங்கதேவனை நினைத்ததும் அவன் கேட்ட வரத்தை நினைத்தது. ஆகவே உள்ளம் கடலெனப் பொங்கியது. அந்தப் பொங்கிய கடலின் அலைகளிலிருந்து உஷ்ணத் துளிகள் சொற்களாக அள்ளித் தெளித்தன எதிரே இருந்த அஞ்சுகத்தின்மீது. "இங்கு யாரும் வரக்கூடாது என்று கட்டளை பிறப்பித்திருக்கிறேன்" என்றான் இளையபல்லவன் காஞ்சனாதேவியை நோக்கி.

காஞ்சனாதேவியின் கண்கள் சரேலென அவனை ஏறெடுத்து நோக்கின. "அந்தக் கட்டளையைப் பற்றி எனக்கு அக்கறையில்லை" என்றாள் கோபமும் அலட்சியமும் கலந்த குரலில்.

"கப்பலில் தலைவன் கட்டளையை மீறுபவர்களுக்குத் தண்டனை உண்டு." இளையபல்லவன் குரலில் உஷ்ணம் ஏறிக்கொண்டு போயிற்று.

"தெரியும் எனக்கு" என்றாள் காஞ்சனாதேவி.

"தெரிந்துமா வந்தாய்?"

"ஆம்."

"நான் தனிமையை விரும்புகிறேன்."

"யாரிடமிருந்து?"

"எல்லோரிடமிருந்தும்."

"இல்லை, இல்லை, என்னிடமிருந்து."

இதைக் கேட்டதும் இளையபல்லவனின் கண்கள் விசித்திரப் பார்வையொன்றை அவள்மீது வீசின. "என்ன உளறுகிறாய்?" என்று வினவினான் அவன் குரலில் சிறிது குழப்பத்துடன்.

"உளற எனக்குத் தலையில் அடியுமில்லை; காய்ச்சலு மில்லை" என்றாள் காஞ்சனாதேவி மீண்டும், உள்ளத்தில் உஷ்ணம் ஏறியதால் சொற்களிலும் சூடு ஒலிக்க.

"உன் சிறிய தகப்பனுக்கு இருக்கிறது."

"இருக்கிறது. ஆனால் அந்தக் காயமும் காய்ச்சலும் ஒட்டுவாரொட்டியல்ல."

"அப்படியா!"

"ஆமாம்! ஆமாம்!"

"இரண்டு தடவை வந்த 'ஆமா'மில் குரோதம் பொங்கி வந்து கொண்டிருந்ததை இளையபல்லவன் கவனித்தான். அந்தக் குரோதச் சொற்கள் உதிர்ந்தபோது உதடுகள் துடித்த தையும் கண்டான். துடித்தபோது அந்த உதடுகள் இருந்த அழகையும் கண்டான். அந்த அழகிய உதடுகளை விரும்பும் கங்கதேவனை எண்ணினான் அந்தத் தருணத்தில். அந்தச் சமயத்தில் அங்கு கங்கதேவனிருந்தால் அவன் கழுத்தை இளையபல்லவன் நெரித்துக் கொன்றிருப்பான். அதற்குப் பதில் காஞ்சனாதேவியைக் கடுவேகத்துடன் நெருங்கி அவள் தோள்மீது தனது இருகைகளையும் வைத்து இரு கைக்கட்டை விரல்களாலும் அவள் பொன்னிறக் கழுத்தைத் தடவினான்.

அந்தத் தடவலில் எத்தனையோ இன்பம் இருந்தது காஞ்சனாதேவிக்கு. இருப்பினும் அந்தச் சமயத்தில் அதை இன்பம் என்று உள்ளம் ஒப்புக்கொள்ளவில்லை. அவன் தன் கழுத்தைத் தடவியதற்குக் காரணம் மஞ்சளழகியின் நினைப்பும் அவள் கழுத்தும் என்றே நினைத்தாள் அந்தக் காரிகை. ஆகவே வேகத்துடன் சொன்னாள், "கட்டை விரல்களை நன்றாக அழுத்துங்கள்" என்று.

இளையபல்லவன் முகம் வெகு அருகிலிருந்ததால் அவன் உஷ்ண மூச்சுக்காற்று அவள் முகத்தில் பாய்ந்தது. அந்த உஷ்ணக் காற்று உண்மையில் அவள் சிந்தைக்கு இதமான ஒத்தடமாக இருந்திருக்கும் சாதாரண சமயத்தில். அந்தச் சமயத்தில் அது வெறும் வெறுப்பாக இருக்கவே அந்த

வெறுப்பு அவள் முகத்திலும் தெரிந்தது. அதை இளைய பல்லவன் கவனிக்கவே செய்தான். அதன் காரணம் புரியாமல், "கட்டை விரல்களை எதற்கு அழுத்தச் சொல்கிறாய்?" என்று கேட்டான்.

"கட்டை விரல்கள் கழுத்தின் இருபுறங்களிலும் இருக்கின்றன" என்றாள் காஞ்சனாதேவி.

"ஆம். இருக்கின்றன."

"அப்படியே அழுத்தினால்... அழுத்தினால்..."

"அழுத்தினால்."

"நெஞ்சுக்குழியில் அவை அழுந்தும்."

"எதற்கு அழுந்த வேண்டும்?"

"என்னைக் கொல்ல."

"உன்னை எதற்குக் கொல்ல வேண்டும்?"

"உங்கள் திருமணத்தைப் பார்க்காதிருக்க."

"யாருடன் எனக்குத் திருமணம்?"

"மஞ்சளழகியுடன். பொன்னிற மேனியுடன் இருப்பாளே என் தந்தையின் வளர்ப்பு மகள்! அவளுடன்தான்... அவளுடன்தான்... இளையபல்லவரே! மோசக்காரரே!" என்று திடீரென்று கோபம் உடைய, கனிவு மனம் குழையத் தேம்பித் தேம்பி அழுதாள் காஞ்சனாதேவி.

இளையபல்லவனின் இருண்ட மூளையில் திடீரென அப்பொழுதுதான் ஒளி வீசியது. அவள் போக்குக்கும் கோபத்துக்கும் அப்பொழுதுதான் அவன் காரணத்தைப் புரிந்துகொண்டான். அதைப் புரிந்துகொண்டதால் அதுவரை அவன் சித்தத்தைத் தழுவியிருந்த கோபமும் அகன்றது. கங்கதேவனை அழிப்பதைவிடத் தான் முதலில் காஞ்சனா தேவியைத் திருப்தி செய்யவேண்டிய அவசியத்தை உணர்ந்த அவன், அவள் கழுத்திலிருந்த கையை நீட்டி, உடல் முழுவதையும் தன் நீண்ட கரங்களில் சிக்க வைத்தான்.

பலமான அவன் கரங்கள் அவள் உடலை இரண்டு மூன்று முறை மாறிமாறிச் சுற்றிச் சென்றன. பிறகு இரு கரங்களும் மாறிப் பிணைந்து அவள் உடலை இறுக்கவும் செய்தன. அந்தக் கரங்களின் வேகத்தையும் அவற்றின் இறுக்கத்தையும் இறுக்கத்தின் விளைவாகத் தன் உடல் அவன் உடலுடன் நெருங்குவதையும் புரிந்துகொண்ட காஞ்சனாதேவி ஒரு விநாடி பரவசப்பட்டாலும் அடுத்த விநாடி அந்தப் பரவசம் வெறுப்பாக மாறவே கூவினாள், "விடுங்கள் என்னை" என்று.

அவன் விடவில்லை. அவளை இறுக்கி அணைத்தபடியே அருகிலிருந்த மஞ்சத்துக்கு இழுத்துச் சென்று தான் மட்டில் அதில் உட்கார்ந்துகொண்டு அவளை எதிரே நிற்க வைத்தான். அந்த நிலை அவளுக்குப் பெரும் சங்கடமாய் இருந்தது. அதிலிருந்து விலகச் சற்றுத் திமிறினாள். ஆனால் அந்த இரும்புக் கரங்கள் விடவில்லை அவளை. அந்தப் பிடிப்புடன் கேட்டான் இளையபல்லவன், "மஞ்சளழகியை நான் மணம் செய்துகொள்ளப் போவதாக யார் சொன்னது?" என்று.

"யார் சொன்னாலென்ன? உண்மை உண்மைதானே?" என்றாள் காஞ்சனாதேவி கோபத்தால் உதடுகள் துடிக்க.

"உண்மை உண்மைதான். ஆனால் சொன்னவர்கள் முழு உண்மையையும் சொல்லி இருக்கிறார்களாவென்பதுதான் கேள்வி" என்றான் இளையபல்லவன்.

"முழு உண்மையைச் சொல்லாமல் பாதி உண்மையைச் சொல்வார்களா?"

"ஏன் சொல்லக்கூடாது?"

"எதிரிகள் சொல்லலாம். நண்பர்கள் சொல்ல மாட்டார்கள்."

"ஏன் சொல்ல மாட்டார்கள்?"

"உன்னிடம் எனது நண்பர்களில் ஒருவர்தான் சொன்னாராக்கும்?"

"ஆம். நீங்கள் மஞ்சளழகியைத் திருமணம் செய்து கொள்ள ஒப்புக்கொண்டதாகச் சொன்னார்."

"அப்படியானால் திருமணம் ஏன் நடக்கவில்லையாம்? பெண் ஒப்புக்கொள்ளவில்லையா?" இளையபல்லவன் கேள்வியில் ஏளனத்தின் ஒலியிருந்தது. அதைக் காஞ்சனா தேவி கவனித்தாள். அவளும் ஏளனத்துடனேயே பதில் சொன்னாள், "பெண் எப்படி ஒப்புக்கொள்ளாமலிருப்பாள் ஒரு கட்டழகரைக் கைப்பிடிக்க, அதுவும் தமிழகத்தின் மகா வீரரை?" என்று.

"பெண்ணுக்குப் பிடித்து, பிள்ளைக்கும் பிடித்தும் திருமணம் ஏன் நடக்கவில்லையாம்?" என்று வினவினான் இளையபல்லவன்.

"வேறு சந்தர்ப்பங்கள் குறுக்கிட்டனவாம்" என்ற காஞ்சனாதேவி சேந்தன் சொன்ன வாசகத்தையே திருப்பிச் சொன்னாள்.

இளையபல்லவன் சிறிது யோசனைக்குப் பின் கேட்டான், "வேறு சந்தர்ப்பங்கள் திருமணம் நடைபெறுவதற்கு மட்டும்தான் குறுக்கிடுமா?" என்று.

காஞ்சனாதேவியின் இதயத்தில் இளையபல்லவனின் அந்தக் கேள்வி சிறிது சந்தேகத்தைக் கிளப்பியது. அந்தச் சந்தேகம் குரலில் ஒலிக்க, "வேறு எதற்குக் குறுக்கிடும்?" என்று கேட்டாள் அவள்.

இளையபல்லவன் பதில் நிதானமாகவும் திடமாகவும் கேள்வி ரூபத்தில் எழுந்தது. "திருமணத்திற்கு ஒப்புக் கொள்வதற்கே சந்தர்ப்பங்கள் வழிவகுக்கக் கூடாதா?" என்று வினவினான் அவன்.

காஞ்சனாதேவி, "ஆம் ஆம், வகுக்கலாம்" என்றாள்.

"காஞ்சனாதேவி!" என்றழைத்தான் இளையபல்லவன் அதற்குப் பிறகு சற்று உறுதியான குரலில்.

"உம்?" பதில் அந்த ஒலி மட்டும்தான். இருப்பினும் அதில் சற்றே மாறுதலிருந்தது. இதயம் சற்றுக் கனிந்ததற்கான அடையாளமிருந்தது.

அதைக் கவனித்த இளையபல்லவன் மிகுந்த நிதானத்துடன் வார்த்தைகளை உதிர்த்தான். "காஞ்சனா! மஞ்சளழகியைப் பற்றி உன்னிடம் நான் ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன்" என்று கூறினான் அவன்.

"இல்லை! சொல்லவில்லை." கண்டிப்புடன் வந்தது அவள் பதில்.

"நேரில் சொல்லவில்லை."

"பின் எப்படிச் சொன்னீர்கள்?"

"உன் காதுபடச் சொன்னேன்."

"எப்பொழுது?"

"கங்கதேவன் உன் அறை வாயிற்படியில் நின்றபொழுது உன்னைக் காட்டித்தான் பலவர்மன் பெண் மஞ்சளழகியென்று அவரிடம் சொன்னேன்."

காஞ்சனாதேவி ஒரு விநாடி யோசித்தாள். அந்தப் பெயர் காதில் விழுந்தது அவளுக்கு நினைப்பிலிருந்தது. உள்ளறையில் நுழையாத கங்கதேவன் வாயிற்படிக்கு வெளியே நின்றே பலவர்மன் உற்றுப் பார்த்ததையும் அவனைப் பற்றி ஏதோ கேட்டதையும் அவள் கவனித்திருந்தாள். கங்கதேவன் வரவாலும் அவன் தன்னை உற்று உற்றுப் பார்த்ததாலும் வெட்கித் தலைகுனிந்து விட்ட தனக்கு இளையபல்லவன் கங்கதேவனிடம் கூறிய சொற்கள் அரைகுறையாகவே காதில் விழுந்ததை அவள் உணர்ந்து கொண்டாள். அந்தச் சொற்களில் "பலவர்மன்.... வளர்ப்புப் பெண் மஞ்சளழகி" என்று சில சொற்கள் காதில் விழுந்ததும் கங்கதேவனை ஏமாற்றுவதற்காக இளையபல்லவன் ஏதோ சொல்கிறானென்று அவள் நினைத்திருந்தாள். அதைப் பற்றி அவள் அத்தனை உறுதியாக எண்ணிப் பார்க்காததால், கூலவாணிகன் சொற்கள் அவளை உக்ர நிலைக்குக் கொண்டு போயின. அந்த உக்ரத்திலிருந்து இளையபல்லவன் விளக்கத்தால் மெள்ள மெள்ள மீளவே அவள் மௌனம் சாதித்தாள்.

அதுவரை இளையபல்லவன் கைகளிலிருந்து திமிறிய அவள் திமிறலை லேசாக நிறுத்தவும் செய்தாள்.

அந்த மாறுதலைக் கவனித்த இளையபல்லவன் ஓரளவு சாந்தியடைந்தான். இருப்பினும் அவள் இதயத்தில் இருந்த சந்தேகத்தை அடியோடு அகற்றக் கேட்டான், "இப்பொழுது நினைப்புக்கு வருகிறதா, நான் மஞ்சளழகியைப் பற்றிக் கூறியது?" என்று.

"ஆம் ஆம். அப்படி ஏதோ சொன்னீர்கள்."

"ஏதோ என்றால்? நான் சொன்னது தெளிவாகக் கேட்கவில்லையா உனக்கு?"

"இல்லை."

"ஏன்?"

"நான் கவனிக்கவில்லை."

"ஏன் கவனிக்கவில்லை?"

"அவன் என்னை உற்று உற்றுப் பார்த்தான்."

இதற்குமேல் காஞ்சனாதேவி பேசவில்லை. அவள் மூச்சு சாதாரணமாக வந்துகொண்டிருந்தது. அதுவரை இதயத்திலிருந்த புயல் அடங்கிக்கொண்டிருப்பதை உணர்ந்துகொண்ட இளையபல்லவன் உள்ளே கொஞ்ச நஞ்சமும் இருந்த புயலையும் வெளியே விரட்ட அவள் பூவுடலை வலிக்கும்படி இறுக்கினான்.

காஞ்சனாதேவியின் உடல் அந்த இரும்புக் கரங்களின் இறுக்கலில் பெரிதும் வலித்தது. வலியில் வேதனை இருந்தது. வேதனையில் சுகம் பெரிதும் கலந்திருந்தது. அந்த வேதனை எத்தனை அவசியம் என்பதை அந்தப் பெண் அந்தச் சில விநாடிகளில் உணர்ந்தாள். அந்த வேதனையை அதிகப்படுத்த இளையபல்லவன் அவள் காதுக்கருகில் உதடுகளைக் கொண்டுபோய், "காஞ்சனா!" என்று இன்பமாக அழைத்தான்.

"ஏன்?" என்றாள் அவளும் ரகசியமாக. அந்த 'ஏனைச்' சொன்னபோது தனக்கிருந்த பலவீனத்தை அவள் நன்றாக

உணர்ந்தாள். "புருஷர்கள் கையில் சிக்கும்போது பெண்ணுக்கு எத்தனை கோபமிருந்தும் ஏன் பறந்துவிடுகிறது? எத்தனை பலவீனம் இந்தப் பெண் ஜன்மம்!" என்று தன் வர்க்கத்தைக் கண்டித்தாள்.

அந்தக் கண்டனத்திலும் தன் இனத்தின் பலவீனத்தை உணர்ந்ததிலும்கூட ஓர் இன்பம் இருந்தது அவளுக்கு.

இளையபல்லவன் மேலும் தேனொழுகப் பேசினான். "காஞ்சனா! வாழ்வு இன்புற எது தேவை தெரியுமா?" என்று கேட்டான்.

"எதுவாம்?"

"நம்பிக்கை."

"தேவைதான்."

"அதை நம்மிருவரில் ஒருவர் இழந்தாலும்..."

"வாழ்வு நாசப்பட்டுவிடும்."

"ஆம். எதனால் தெரியுமா?"

"எதனால்?"

"நம்மிருவரைப் பிரிக்கும் சக்தி..."

"சொல்லுங்கள்."

"பிறருக்குக் கிடையாது."

"ஆம்."

"ஆனால் நமக்குண்டு."

"நமக்கா?"

"ஆம். பரஸ்பர அவநம்பிக்கையால் நாம் பிரியலாம்."

"உண்மைதான். ஆனால் ஒருவர் அதிகமாக நம்பி இன்னொருவர் துரோகம் செய்தால்."

"விளைவு விபரீதம் காஞ்சனா! ஆனால் அதைவிட விபரீத நம்பிக்கையின்மையால் இருவர் தங்கள் வாழ்வைத் தாங்களே நாசம் செய்து கொள்வது. உண்மைதான் நம்மிரு வரையும் உறுதிப்படுத்தி ஒன்றுபட்டிருக்கச் செய்ய முடியும். நம்பிக்கைக்கு உண்மை அஸ்திவாரம்."

காஞ்சனாதேவியின் உடல் அவனை நோக்கித் தானாகவே நெருங்கியது. "அப்படியானால் உண்மையைச் சொல்லுங்கள். நீங்கள் அந்த மஞ்சளழகியைக் காதலித்தது உண்டா இல்லையா?" என்று கேட்டாள் அவள்.

இளையபல்லவன் பொய் சொல்ல மறுத்தான். "காதலித்த தாக நான் நினைத்தது உண்டு. நாட்டிலிருந்து தொலை தூரம் வந்தேன். அபலையொருத்தியைப் பார்த்தேன். அவளிருந்த சூழ்நிலையைக் கண்டேன். அவள் தாயற்றவள். தந்தை இன்னாரென்று அறியாதவள். அந்த நிலையில் அனுதாபம் மூண்டெழுந்தது. அவளைக் காட்டி என்னை அழிக்கத் திட்டமிட்டான் பலவர்மன். அதற்காகப் பல நாடகங்கள் ஆடினேன். அந்த நாடகங்களின் குறுக்கே பலமுறை வந்தாள் அந்த அபலை. அவள் இதயதாபம் என் இதயத்தில் அனுதாப மாக வடிந்தது. அதைக் காதலென்றும்கூட நினைத்தேன் ஒரு சமயம். ஆனால் உன்னைக் கண்டதும் புரிந்துகொண்டேன், அது காதலல்ல அனுதாபந்தான் என்று. புரிந்து கொண்டாயா காஞ்சனா; என் இதயத்தைத் திறந்து காட்டிவிட்டேன் உன்னிடம். இனி என்ன செய்தாலும் என் உயிரெல்லாம் உன்மீதுதான். நான் உன்னிடம் சரண். எது வேண்டு மானாலும் செய் என்னை," என்று மெள்ள மெள்ள உணர்ச்சி யுடன் உள்ளதை உள்ளபடி சொன்னான் இளையபல்லவன். நீண்ட நேரம் காஞ்சனாதேவியிடமிருந்து பதில் வரவில்லை. உதடுகள் பேச மறுத்தன. ஆனால் அவள் பூக்கரங்கள் அவன் கழுத்தைச் சுற்றி வளைத்தன.

அத்தியாயம் 18

# மேகத்திடையே சிறு மின்னல்

சேந்தனிழைத்த பிழையால் காஞ்சனாதேவி பெரிதும் வெகுண்டு புயலென அக்ரமந்திரத்தின் பெரிய அறைக்குள் நுழைந்த ஒரு முழு நாழிகைக்கு பின்பே இளையபல்லவன் வெளியேயுள்ள தளத்துக்கு வந்தான். அந்த ஒரு முழு நாழிகை போனது ஒரு முழுநாளே போய்விட்டது போலிருந்தது கண்டியத்தேவனுக்கு. அக்ரமந்திரத்தின் சிற்றறையில் நடந்த தென்ன என்பதை முழுவதும் சொல்லாமல் காஞ்சனாதேவி இளையபல்லவன் அறைக்குச் சென்றுவிட்டதை மாத்திரம் சேந்தன் சொல்லியிருந்தான் சுயப் பாதுகாப்பை முன்னிட்டு. அவள் அந்தத் தகவலைச் சொல்லி ஒரே முழு நாழிகை ஆகியும் படைத்தலைவன் வெளியே வராததைக் கண்ட கண்டியத்தேவன் மிகவும் கோபத்தின் வசப்பட்டுச் சேந்தனை நோக்கி, "ஒழுங்காக விஷயத்தைச் சொன்னீரா கூல வாணிகரே?" என்று அரை மிரட்டலும் அரை கேள்வியுமாக சீறிக்கொண்டிருந்த சமயத்தில் அக்ரமந்திரத்தின் பிரதான வாசல் திறந்து இளையபல்லவன் வெளி வந்துவிடவே சேந்தனிடமிருந்து பிரிந்து, இளையபல்லவனை நோக்கி அமீர் பின்தொடர நடந்தான் கண்டியத்தேவன்.

அவன் வரும் வேகத்தை அக்ரமந்திரத்தின் வாயிலி லிருந்தே கவனித்த இளையபல்லவன் கண்டியத்தேவனையும் நோக்கி உச்சியிலிருந்து மேற்கு நோக்கிச் சாய்ந்துவிட்ட கதிரவனையும் நோக்கிப் புன்முறுவல் கொண்டான். இளைய பல்லவன் வதனத்தில் விகசித்த புன்முறுவலைக் கண்டான் கண்டியத்தேவன். அதுமட்டுமின்றிக் கரையிலிருந்து வந்த போதிருந்த குழப்பமும் அவன் முகத்தில் மறைந்துவிட்டதை யும் அவன் முகம் பழைய முகமாகிவிட்டதையும் கவனித்த கண்டியத்தேவன், அந்த மாற்றத்தினால் சிறிது தைரியம்

# 18. மேகத்திடையே சிறு மின்னல்



அடைந்தான். இளையபல்லவன் முகமாற்றமும் முகத்தெளிவும் அவன் ஏதோ ஒரு பெரும் திட்டத்தை வகுத்துவிட்டதற்கு அறிகுறி என்பதை ஊகித்துக் கொண்ட கண்டியத்தேவன் இளையபல்லவனை அடைந்ததும், "கதிரவன் மேல்திசைப் புறம் சாய முற்பட்டு நான்கு நாழிகைகளுக்கு மேல் ஆகி விட்டது" என்று தைரியத்துடன் சுட்டிக்காட்டவும் செய்தான்.

இளையபல்லவன் கண்கள் மீண்டும் வானத்தை நோக்கி விட்டுக் கண்டியத்தேவன்மீது திருப்பி நிலைத்தன. "ஆம் தேவரே! பொழுது அதிகமாகத்தான் ஓடிவிட்டது" என்றான்.

"சீக்கிரம் நங்கூரம் எடுக்காவிட்டால் மரக்கலங்களைப் பொழுது சாயுமுன்பு கரைக்குக் கொண்டுபோக முடியாது" என்று உள்ள நிலையைச் சுட்டிக் காட்டினான் தேவன்.

"ஆம். ஆம். கஷ்டம்தான்" என்றான் இளையபல்லவன் அலட்சியமாக.

கண்டியத்தேவனின் முகத்தில் ஆச்சரியத்தின் சாயை அதிகமாகப் படர்ந்தது. இளையபல்லவன், 'ஆம் ஆம், கஷ்டம் தான்' என்று சர்வசகஜமாகச் சொன்னது பெரும் வியப்பா யிருந்ததால் இளையபல்லவன், ஒருவேளை நிலைமையின் கஷ்டத்தைப் பூரணமாக உணரவில்லையோ என்று நினைத்த கண்டியத்தேவன், "மரக்கலங்கள் மூன்றை நாம் துறைமுகத் துக்குள் செலுத்த வேண்டும்," என்றான்.

இளையபல்லவன் விழிகள் கண்டியத்தேவன் மீது நிலைத்தன. "மூன்றிருந்தாலென்ன தேவரே?" என்று கேட்கவும் செய்தான் இளையபல்லவன்.

கண்டியத்தேவன் உடனே பதில் சொல்லவில்லை. வானத்தை நோக்கித் தலையை உயர்த்தி மெல்ல வரத் தொடங்கிய காற்றை இருமுறை நாசியில் இழுத்து சுவாசித்தான். பிறகு சொன்னான், "காற்றின் வேகம் கிளம்பத் துவங்கியிருக்கிறது" என்று.

"அதைக் கவனித்தேன்." அசட்டையாகவே பதில் சொன்னான் இளையபல்லவன்.

"இன்னும் ஒரே நாழிகையில் காற்றின் வீச்சு மிகவும் அதிகப்படும்."

கண்டியத்தேவன் இச்சொற்களை உதிர்த்தபோது சிறிது உஷ்ணத்தையும் காட்டினான்.

"ஆம், ஆம். அதிகப்படும்." சர்வ சாதாரணமாக வந்தது இளையபல்லவன் பதில்.

"அதிகப்பட்டால் அலைகளின் எழுச்சி...?"

"அதிகப்படத்தான் செய்யும்."

"அலைகள் அதிகமாக உருண்டால் மரக்கலங்களின் அசைவு அதிகப்படுமே."

"படாமல் எப்படி இருக்கும்?"

"உருண்டு எழும் அலைகளில் கரையை நோக்கிக் கொண்டு போகப்படும் மரக்கலங்கள் அலை உருட்சியினால் கீழ்ப்பகுதி மணலில் சிக்கலாம்."

"சிக்கலாமென்ன? கண்டிப்பாய்ச் சிக்கும்."

"ஒரு மரக்கலம் சிக்கிவிட்டால் அதை எடுக்க இரண்டு நாளாகும். மீதி மரக்கலங்களை எப்படி உள்ளே கொண்டு போவது?"

"அவற்றையும் மணலில் சிக்க வைத்துவிட்டாலென்ன?"

இளையபல்லவனின் இந்தக் கேள்வியைக் கேட்டதும் கண்டியத்தேவன் அசந்தே போனான். இளையபல்லவன் முகத்தை ஒருமுறை கூர்ந்து கவனித்து அவனுக்கு மூளை பிசகவில்லை என்பதைத் தீர்மானித்துக் கொண்டான். இருப்பினும் கண்டியத்தேவனுக்குச் சந்தேகமுண்டாகக் கூடிய பாணியிலேயே பேசத் தொடங்கிய இளையபல்லவன், "தேவரே! மரக்கலங்களின் அடிகளைச் சுரண்ட வேண்டு மானால் என்ன செய்வீர்?" என்று கேட்டான்.

எதற்கு அந்தக் கேள்வியைக் கேட்கிறான் என்பதை அறியாத கண்டியத்தேவன், "கரையில் இழுப்பேன் மரக் கலங்களை" என்று பதில் கூறினான் குழப்பத்துடன்.

"நாம் கைப்பற்றிய இரு கலிங்கத்தின் மரக்கலங்களைக் கவனித்தீரா?" என்று எழுந்தது இளையபல்லவன் கேள்வி.

கண்டியத்தேவன் கடல் புறாவுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்த இரு மரக்கலங்களையும் ஒருமுறை பார்த்து விட்டுத் திரும்பி, "பார்த்தேன். அவற்றுக்கென்ன? சேதப் பட்டிருக்கின்றன" என்றான்.

இளையபல்லவன் கண்கள் தேவனை நோக்கி நன்றாக எழுந்தன. "அவை போரில் சேதப்பட்டிருப்பது யாருக்கும் தெரியும் தேவரே. கண்ணுள்ள யாவருக்கும் அவற்றின் உடைந்த பாய்மரங்களும் தீப்புண் பட்டிருக்கும் இடங்களும் தெரியும். அவற்றைக் காணக் கப்பல் நிபுணரான கண்டியத் தேவர் தேவையில்லை" என்றான் படைத்தலைவன்.

"வேறெதைப் பார்க்கச் சொல்கிறீர்கள்?"

"இப்பொழுது எதையும் பார்க்கச் சொல்லவில்லை."

"பின் எப்பொழுது பார்ப்பது?"

"நாம் அவற்றைக் கைப்பற்றி வந்தபோது பார்த்திருக்க வேண்டும்."

"என்ன பார்த்திருக்க வேண்டும்?"

"அவற்றின் ஓட்டத்தை, வேகத்தின் நிலையை."

இளையபல்லவன் மனப்போக்கு நன்றாகப் புரிந்துவிட்ட படியால் திடீரெனப் பெரும் பிரமிப்புக்குள்ளானான் கண்டியத்தேவன். "படைத்தலைவரே! நீங்கள் விளையாட வில்லையென நினைக்கிறேன்" என்று துவங்கினான் கண்டியத் தேவன்.

"விளையாட இது நேரமென்று நினைக்கிறீரா தேவரே?" என்று பதில் சொன்ன இளையபல்லவன் குரலில் ஏளன மிருந்தது.

"விளையாட்டு இல்லையென்றால் இது பெரும் வினை" என்றான் தேவன்.

"யாருக்கு வினை?"

"இந்த மரக்கலங்களிலுள்ள அனைவருக்கும்."

"என்ன அப்படி அபாயமான யோசனையைச் சொல்லி விட்டேன் நான்?"

கண்டியத்தேவன் முகத்தில் அச்சத்தின் சாயை படர்ந்து கிடந்தது.

"வேறு என்ன சொல்ல வேண்டும் படைத்தலைவரே? பிடித்த மரக்கலங்களின் வேகத்தைப் பற்றிக் குறிப்பிட்டீர்கள்" என்றான் தேவன் பயம் குரலிலும் ஒலிக்க.

"ஆம்."

"இரு கப்பல்களின் வேகமும் மட்டுத்தான்."

"அவை நீண்ட காலம் கடலிலேயே சஞ்சரித்திருக்க வேண்டும் தேவரே."

"ஆம் படைத்தலைவரே."

"அவற்றின் அடிப்புறங்கள் பாசியும், கடற்கிளிஞ்சல்கள், சங்குகள், பூச்சிக்கூடுகள் இவையும் பிடித்துக் கனத்திருக் கின்றன."

"ஆம். அவற்றால்தான் மரக்கலங்களின் வேகம் குறைந் திருக்கிறது."

"அவற்றைக் கரையில் இழுத்துச் சுத்தம் செய்தால் வேகம் சரிப்பட்டுவிடும்."

"புரிகிறது படைத்தலைவரே, புரிகிறது" என்ற கண்டியத் தேவன் அந்த இரு மரக்கலங்களையும் நோக்கிக் கையை நீட்டி, "அவை இரண்டையும் கரையில் இழுத்து மணலில் சிக்க வைத்துச் சுத்தம் செய்ய நாள் எத்தனை பிடிக்கும் தெரியுமா?" என்று வினவினான்.

'தெரியும்' என்பதற்கு அறிகுறியாகத் தலையை ஆட்டிய இளையபல்லவன், "குறைந்த பட்சம் ஒரு வாரம் ஆகும்" என்றான்.

"அப்படியானால் ஒரு வாரத்துக்கு இங்கேயே தங்குவதாக உத்தேசமா?" என்று கேட்டான் தேவன்.

"குறைந்தபட்சம் ஒரு மாதம் தங்க உத்தேசம். முடிந்தால் காலத்தைச் சற்று நீட்டவும் செய்யலாம்" என்றான் இளைய பல்லவன்.

கண்டியத்தேவன் கோபம் தெளிவாக அவன் முகத்தில் தெரிந்தது. "இந்தப் பயங்கர எதிரியுடன் ஒரு மாதம் இங்கு தங்கப் போகிறீர்களா?" என்று வினவினான் கோபம் பூரண மாகக் குரலில் தொனிக்க.

இளையபல்லவன் இதழ்களில் புன்னகை விரிந்தது. "கங்கதேவனை எதிரி என்று புகல்வது சரியல்ல" என்றான் குரலில் வருத்தத்துடன் படைத்தலைவன்.

கண்டியத்தேவன் முகத்தில் கோபம் மறைந்து ஆச்சரியம் அது இருந்த இடத்தை ஆக்ரமித்துக் கொண்டது. "அப்படி யானால் அவர்!" என்று இழுத்தான் கண்டியத்தேவன்.

"நண்பர்" என்றான் இளையபல்லவன்.

"நண்பரைப் பிரிந்து வந்தபோது ஏன் அத்தனை குழப்பத் துடன் வந்தீர்கள்?" கண்டியத்தேவன் கேள்வியில் ஏளனம் தொனித்தது.

"நண்பரைப் பிரிவதில் குழப்பமும் வருத்தமும் ஏற்படுவது இயற்கைதானே?" இளையபல்லவன் சொற்களில் நகைப்பொலி இருந்தது.

கண்டியத்தேவன் ஓரளவு நிலைமையைப் புரிந்து கொண்டான். இளையபல்லவன் மனத்தில் ஏதோ ஆழமான திட்டம் உருவாகி விட்டதென்பதையும், அதையொட்டியே அவன் இரு மரக்கலங்களையும் கரையில் இழுத்துப் பழுது பார்க்கச் சொல்கிறான் என்பதையும் புரிந்துகொண்டாலும் அந்தத் திட்டம் என்ன என்பது மட்டும் அவனுக்குப் புரிய வில்லை. இளையபல்லவன் பேச்சிலிருந்தும் போக்கிலிருந்தும் அவன் ஏதோ ஒரு முடிவுக்கு வந்துவிட்டானென்பதை மட்டுமே அறிந்துகொண்ட கண்டியத்தேவன் அந்தத் திட்டத்தின் விவரங்களைக் கேட்பதில் பயனில்லை என்பதை உணர்ந்துகொண்டிருந்தானாகையால், "படைத்தலைவர்

உத்தரவுதானென்ன? நான் என்ன செய்ய வேண்டும்?" என்று வினவினான்.

இளையபல்லவன் உத்தரவுகள் தெளிவுடன் வெளிவந்தன. "தேவரே! அதோ அந்த இரு மரக்கலங்களையும் ஒன்றன்பின் ஒன்றாகத் துறைமுகத்துக்குள் கொண்டுபோய்க் கரைக்கருகே அக்கம்பக்கத்தில் நிறுத்துங்கள். நாளைக் காலையில் அவற்றைக் கரையில் இழுத்துப் பழுது பார்க்கத் தொடங்கலாம். அவை இரண்டையும் கொண்டு சென்றபிறகு கடல்புறாவின் நங்கூரத்தை எடுத்து அதையும் துறைமுகத்திற்குள் கொண்டு சென்று_" என்று சொல்லிக்கொண்டுபோன இளையபல்லவனை எதிர்த்துப் பேசவிடாமல், கண்டியத் தேவன் குரல் மட்டுமல்ல, அவனை விட்டு இரண்டடி தள்ளி அதுவரை மௌனமாக நின்றுகொண்டிருந்த அமீரின் குரலும் எழுந்தது.

"படைத்தலைவரே?" என்று இருவரும் இளையபல்லவன் பேச்சைக் குறுக்கே மறுத்து ஏககாலத்தில் கூவினார்கள்.

இளையபல்லவன் கண்கள் ஒருமுறை எழுந்து கண்டியத் தேவனுக்குப் பின்னால் இருந்த அமீரை நோக்கின. பிறகு மீண்டும் தேவரை ஆராய்ந்தன. "ஏன் இந்தப் பதற்றம் அமீர்? தேவரே! ஏன் இப்படிக் கூவுகிறீர்..." என்ற சொற்கள் உறுதியுடனும் சற்று உணர்ச்சியுடனும் வெளிவந்தன அவன் உதடுகளிலிருந்து.

அமீர் சொன்னான் உறுதியான குரலில், "கடல்புறாவைத் துறைமுகத்தை அடைத்து நிற்க வைக்க வேண்டுமென நீங்கள் தான் ஏற்கெனவே கூறினீர்கள்" என்றான்.

"கூறினேன்." இளையபல்லவன் ஒப்புக்கொண்டான் தலையை அசைத்து.

"மரக்கலங்களிரண்டை எதிரிகள் நாசப்படுத்தாதிருப்பதற்குக் கடல்புறா துறைமுக வாயிலில் காவல் செய்ய வேண்டியது அவசியமென வற்புறுத்தினீர்கள்" என்றான் தேவன்.

"ஆம்."

"இப்பொழுது கடல்புறாவையும் துறைமுகத்திற்குள் கொண்டு செல்லச் சொல்லுகிறீர்கள்."

"ஆம்."

"கடல்புறா உள்ளே சென்றால் இரண்டிரண்டாகப் பிரிந்திருக்கும் எதிரி மரக்கலங்களுக்கு இடையில் நிற்க வேண்டியிருக்கும்."

இதைக்கேட்ட இளையபல்லவன் கண்டியத்தேவனை நோக்கி, "முதலில் அப்படித்தான் நினைத்தேன் தேவரே" என்றான்.

"இப்பொழுது நிலைமை மாறிவிட்டதா? எப்படி மாறி விட்டது?" என்று கேட்டான் தேவன்.

"நிலைமை மாறவில்லை தேவரே. நாம் நிலைமையை மாற்றலாமே" என்று இளையபல்லவன் கூறினான்.

கண்டியத்தேவனுக்கும் அமீருக்கும் ஏதும் புரியாதிருக்கவே இருவரும் விழிக்கவே செய்தனர். இளையபல்லவனே தனது யோசனையை விளக்கினான். "தேவரே! அமீர்! கேளுங்கள். கடல்புறாவை நம் எதிரியின் நான்கு மரக்கலங்களுக்கும் இடையே நிறுத்தினால் அதற்கு ஆபத்து அதிகம்தான். அதிக மென்ன அதை அழிப்பதும் எதிரிக்குச் சுலபம். ஆகவே அது வேண்டாமென்று முடிவு செய்துவிட்டேன். அதோ கரையைப் பாருங்கள். அந்தப்புறமல்ல, இதோ காளத்தி நதியின் கிழக்குப் புறம்," என்று இளையபல்லவன் காளத்தி நதி பாய்ந்த இடத்தைத் தன் வலது கையால் சுட்டிக் காட்டினான்.

இருவரும் அந்த இடத்தைக் கவனித்தார்கள். ஏற்கெனவே அந்த இடத்தை இரண்டு மூன்று முறை இளையபல்லவன் தங்களுக்குச் சுட்டிக் காட்டி இருப்பதை அந்த இருவரும் உணர்ந்தே இருந்தார்கள். இருப்பினும் அதற்குக் காரணம் தெரியாமல் அந்த இடத்தை வெறித்துப் பார்த்தார்கள். அந்த இடத்தைச் சுட்டிக் காட்டி அவ்விருவரையும் பார்த்து, "நதி

பாயும் இடத்தில் கடற்கோரைகள் மிகவும் அடர்த்தியா யிருக்கின்றன" என்றான்.

"ஆம்" என்றான் தேவன்.

"அந்த இடத்தில் அதாவது கோரைகளுக்கு அருகில் கடல்புறாவை நிறுத்தி வைத்தாலென்ன?" என்று வினவினான் இளையபல்லவன்.

"மிகவும் சௌகரியம்" கண்டியத்தேவன் குரலில் இகழ்ச்சி யிருந்தது.

"நீர் ஒப்புக்கொள்வீர் என்று எனக்குத் தெரியும்."

"எதை ஒப்புக்கொண்டேன்?"

"அந்த இடத்தில் கடல்புறாவை நிறுத்துவது சௌகரிய மென்பதை."

"எதிரிக்குச் சௌகரியமென்று சொன்னேன்."

"கரையிலிருப்பவன் எதிரியல்லவென்று நான்..."

"ஆம் சொன்னீர்கள். உங்கள் நண்பர்..."

"உங்களென்ன, நமது நண்பர் என்று சொல்லும்."

"ஆம், ஆம். நமது நண்பர்."

"அப்படி வாரும் வழிக்கு."

"கோரைக்கருகே கடல் புறாவை நங்கூரம் பாய்ச்சி, கலிங்கத்தின் இரு கப்பல்களையும் பழுது பார்க்கத் தரையில் இழுத்து விட்டால்..." கண்டியத்தேவன் ஆத்திரத்துடன் பேசினான். ஆத்திரம் இருந்ததால் பேச்சு முற்றுப்பெற வில்லை.

"இழுத்துவிட்டால்?" இளையபல்லவன் கேட்டான்.

"நண்பருக்குக் கொண்டாட்டம், நமக்குத் திண்டாட்டம்" என்றான் தேவன்.

"நம்மைப் பற்றி ஏன் கவலை? நண்பரைப் பற்றிக் கவலைப்படும்?"

"கங்கதேவனைப் பற்றி மிகவும் கவலையோ உங்களுக்கு?"

"ஆம்" என்று இளையபல்லவன் மேலும் சொன்னான். "தற்சமயம் அவனைப் பற்றிய கவலைதான் எனக்கு. அவனுக்குக் கொண்டாட்டமான எதையும் நாம் செய்ய வேண்டும். ஆகவே சொன்னபடி செய்யுங்கள் தேவரே! நமது மரக்கலங்கள் மூன்றினாலும் அவனுக்குத் துன்பம் நேரிடக் கூடாது. ஆகவே கடல்புறாவைக் கோரைக்கருகில் நிறுத்தி விடும். கரையில் இழுத்து விடுங்கள் மற்ற இரு மரக்கலங்களை. கங்கதேவன் மகிழ்ச்சிதான் நமது மகிழ்ச்சி."

இதைக் கேட்டதும் உக்கிரமான முகங்களுடனும் உள்ளெழுந்த கோபத்துடனும் செல்ல முற்பட்ட தேவனையும் அமீரையும், "இன்னும் ஒரு வார்த்தை" என்று சொல்லி நிற்கவைத்த இளையபல்லவன் அந்த ஒரு வார்த்தையையும் சொன்னான். அதைக்கேட்ட அந்த இருவரும் பிரமித்தனர். அதை ஏன் சொன்னான் இளையபல்லவன் என்பது இருவருக்கும் பெரும் குழப்பமாயிருந்தது. ஆனால் அந்த ஒரு வார்த்தையில் பெரும் மர்மம் புதைந்து கிடந்ததை உணர்ந் தார்கள். அதுவரை கவிந்த சொற்களாகிற ஆபத்து மேகங்களுக் கிடையே அது ஒரு நம்பிக்கை தரும் சிறு மின்னல் என்பது மட்டும் அவர்களுக்குப் புரிந்தது. ஆனால் இளையபல்லவன் மனத்தடியிலிருந்த திட்டம் மட்டும் இருவருக்கும் புரிய வில்லை. ஏதும் புரியாமலேயே இருவரும் அவன் கட்டளை களை நிறைவேற்றச் சென்றார்கள். அடுத்த அரை நாழிகைக்குள் கலிங்கத்தின் இரு மரக்கலங்களும் துறைமுகத்தை நோக்கி நகர்ந்தன. அவற்றைக் கவனித்த இளையபல்லவன் நாசியிலிருந்து சாந்தி கலந்த பெருமூச் சொன்று வெளிவந்தது.

அத்தியாயம் 19

# பழம் நழுவி...

கலிங்கத்தின் இரு மரக்கலங்களையும் கரையில் இழுத்துப் பழுது பார்க்குமாறும், கடல் புறாவைக் காளத்தி நதிபாயும் கடற்கோரைக் கூட்டத்தருகே நிறுத்துமாறும் இளைய பல்லவன் உத்தரவிட்டதால் பெரும் கோபமடைந்த கண்டியத் தேவனும் அமீரும், படைத்தலைவன் கடைசியாகச் சொன்ன ஒரு வார்த்தையைக் கேட்டதும் சற்றுப் பிரமிப்பும் சாந்தியும் அடைந்தனர். தனது கட்டளையை நிறைவேற்றக் கோபத்துடன் செல்ல முற்பட்ட அந்த இருவரையும், "இன்னும் ஒரு வார்த்தை," என்று கூறி அழைத்த சோழர் படைத்தலைவன், "தேவரே! கடற்புறாவை கடற்கோரைகளுக்கு அருகில்தான் நிறுத்தச் சொன்னேன்" என்று சற்று அழுத்தமாகத் தெரிவித்தான்.

"ஆம். அப்படித்தான் சொன்னீர்கள்" என்றான் கண்டியத் தேவன் கோபம் தெளிவாகத் தெரிந்த குரலில்.

"அருகில் என்றால், கடற்கோரைகள் மரக்கலத்தின் மீது படவேண்டுமென்று அர்த்தமல்ல" என்றான் படைத் தலைவன்.

"அப்படியா!" என்று சொன்ன கண்டியத்தேவன் இளைய பல்லவன் பேச்சின் அர்த்தம் புரியாமல் விழித்தான்.

"ஆம் தேவரே! கடற்கோரைகளை அளவுக்கதிகமாக நெருங்கினால் கப்பலின் அடிப்பாகம் கோரைகளில் சிக்கிக் கொள்ளும். ஆகவே, கடற்கோரைகளை அடைத்து, ஆனால் அவற்றில் படாதிருக்கப் போதிய அளவு இடம் கொடுத்து மரக்கலத்தை நிறுத்திவிடும். புரிகிறதா?" என்று வினவினான் இளையபல்லவன்.

கண்டியத்தேவன் பதில் சொல்லவில்லை. புரிகிறது என்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் ஆட்டினான். அப்படித் தலையை ஆட்டியதைக் கவனித்த பிறகு இளைய பல்லவன், "தேவரே! பார்வைக்குக் கடல்புறா கோரையை அடைத்து நிற்கவேண்டும். ஆனால் கோரையிலிருந்து ஓரளவு தள்ளியே இருக்கவேண்டும். இன்னொரு மரக்கலம் வந்தாலும் அது முகப்பை நீட்டும் அளவுக்குக் கடல் புறாவுக்கும் கோரைக் கூட்டத்துக்கும் இடைவெளியிருக்க வேண்டும்" என்று கூறிவிட்டு அவர்கள் போகலாம் என்பதற்கறிகுறியாகக் கையை ஆட்டினான்.

அத்துடன் இளையபல்லவனைப் பிரிந்து சென்ற அமீரும் கண்டியத்தேவனும் இளையபல்லவன் கடைசியாகச் சொன்ன வார்த்தைகளைப் பற்றியே யோசித்துக்கொண்டு சென்றனர். மற்ற இரு மரக்கலங்களையும் நாடிச் செல்லக் கடல் புறாவில் இருந்த படகொன்றை நீரில் இறக்கி நூலேணி மூலம் அதில் இறங்கிய பின்னரே அமீர் தனது சந்தேகத்தைக் கண்டியத் தேவனிடம் வெளியிட முற்பட்டு, "தேவரே! இளையபல்லவர் மிகவும் குழம்பிப் போயிருக்கிறார் என்று நினைக்கிறேன்" என்றான்.

"ஆம்" என்று கண்டியத்தேவனும் ஒப்புக்கொண்டான்.

"அவர் உத்தரவுகள் இதற்குள் மும்முறை மாறிவிட்டன" என்று சுட்டிக் காட்டினான் அமீர்.

"ஆம் அமீர்."

"முதலில் கடல்புறாவை முகத்துவாரத்தை அடைக்கும்படி நிற்க வைத்துக் கலிங்கத்தின் இரு மரக்கலங்களை உள்ளே கொண்டுபோய்ப் பழுது பார்க்கலாம் என்று சொன்னார்..."

"ஆம்."

"பிறகு இரு மரக்கலங்களையும் உள்ளே கொண்டுபோய்ப் பழுது பார்க்கலாமென்றும் கடல் புறாவை கங்கதேவனின் நான்கு மரக்கலங்களுக்கிடையே மூக்கை மாத்திரம் புகுத்தி நிற்க வைக்கலாமென்றும் கூறினான்."

"உண்மைதான்."

"இப்பொழுது கடல்புறாவைத் துறைமுகத்துக்குள்ளே கொண்டு போய்க் கடற்கோரைகளுக்கருகே நிற்க வைத்து உத்தரவு பிறப்பிக்கிறார்..."

"ஆம்."

"ஏன் இப்படி உத்தரவுகள் மாறுகின்றன?" இதைக்கேட்ட அமீர் கண்டியத்தேவன் முகத்தை உற்று நோக்கினான்.

கண்டியத்தேவன் முகமும் குழம்பிக் கிடந்தது. அவன் நீண்ட நேரம் யோசித்துவிட்டுச் சொன்னான்: "இப்படி இளையபல்லவர் அடிக்கடி உத்தரவை மாற்றியதில்லை. மாற்றும் காரணம் ஓரளவு எனக்குப் புரிகிறது. அவ்வப் பொழுது கங்கதேவன் மாறுவதற்கேற்ப இவரும் உத்தரவை மாற்றுகிறார். ஆனால் அமீர்! நமக்குத் தெரியாதா எந்தக் குழப்பத்திலும் இளையபல்லவரின் சிந்தனை தெளிவுபட்டு விடுமென்பது" என்று.

அதைப்பற்றிய சந்தேகம் அமீருக்கும் சிறிதுமில்லை யென்றாலும் இளையபல்லவனை கங்கதேவன் விருந்துக்கு அழைத்துக் கரையில் வரவேற்றதிலிருந்து படைத்தலைவனுக்கு எப்பொழுதும் ஆபத்து காத்திருக்கிறது என்பதையும், ஆகவே, தான் மிகுந்த எச்சரிக்கையுடனிருக்க வேண்டுமென்பதையும் தீர்மானித்துக்கொண்டான். படைத்தலைவன் இட்ட உத்தரவுகள் நிறைவேற்றப்பட்டவுடன், தாங்களனைவரும் தங்கள் மூன்று மரக்கலங்களும் கங்கதேவனின் கைக்குள்தான் அடங்கியிருக்கும் என்றும் முடிவு செய்துகொண்டான். அதைப்பற்றிக் கண்டியத்தேவனிடம் தெளிவாகவும் கூறினான். அமீர் கூறியதெல்லாம் உண்மையென்று தெரிந்திருந்தது கண்டியத்தேவனுக்கு. "இரு மரக்கலங்களையும் கரையில் இழுத்துவிட்டால் அவை செயலிழந்து விடும். கடல்புறாவைக் கோரையினருகில் நிறுத்திவிட்டால் அதன்மீது கங்கதேவன் போர்க்கலங்கள் நான்கும் ஏககாலத்தில் ஆயுதங்களை வீச முடியும். ஆகவே அதுவும் செயலிழந்தது போலத்தான்" என்ற

கண்டியத்தேவன், "ஆனால் நாம் என்ன செய்ய முடியும் அமீர்? தலைவர் உத்தரவுகளை நிறைவேற்றித்தானே ஆக வேண்டும்?" என்றான்.

"நிறைவேற்றித்தான் ஆகவேண்டும். இப்படி மூன்று போர்க்கப்பல்களும் செயலிழந்த பிறகு காஞ்சனாதேவியை எப்படி கங்கதேவனிடமிருந்து காக்கப் போகிறார் இளைய பல்லவர்? கங்கதேவன் கடாரத்து இளவரசியை விரும்புவதாக அவரே சொன்னாரே?" என்று வினவினான் அமீர்.

"அதுதான் எனக்கும் புரியவில்லை!" என்று கூறிய கண்டியத்தேவன் தாங்கள் பேசிக்கொண்டிருந்தபோதே கலிங்கத்தின் மரக்கலமொன்றுக்கருகில் வந்துவிட்டதை உணர்ந்தான். தாரிணி வகையைச் சேர்ந்த அந்த இருபெரும் போர்க்கலங்களும் ஒன்றன்பின் ஒன்றாக நின்றுகொண்டிருந்தன. கடல் புறாவுடன் போரிட்டதால் பெரும் சேதப் பட்டிருந்த நிலையிலும் அவற்றின் சர்ப்ப முகங்கள் மிகப் பயங்கரமாக அலைகளில் ஆடிக்கொண்டிருந்தன. அவ்விரண்டில் முதல் கப்பலிலேயே ஏறத் தீர்மானித்த கண்டியத்தேவன், அமீரை நோக்கி, "அமீர்! நான் இந்த மரக்கலத்தை முன்னால் செலுத்திச் செல்கிறேன். நீ அந்த மரக்கலத்தை எனக்குப் பின்னால் சிறிது தள்ளியே செலுத்திக் கொண்டு வா. அலைகள் வேகம் அதிகரிக்கிறது. மிகவும் நெருங்கினால் ஒன்றுடன் ஒன்று மோதும்" என்று கூறிவிட்டு முதல் மரக்கலத்தில் ஏறிக்கொண்டான்.

கண்டியத்தேவன் கடல் விவகாரங்களைத் தனக்குக் கூறியது வியப்பாக இருந்ததால் புன்முறுவல் கொண்டான் அமீர். அகூதாவிடம் கடற்போர் பயின்று கடற்காற்றே மூச்சுக் காற்றாக உடைய தனக்குக் கப்பலைச் செலுத்தும் முறையைக் கண்டியத்தேவன் போதிப்பது வியப்பாயிருந்தது அமீருக்கு. இருப்பினும் கண்டியத்தேவன் தன்னைவிட நாலைந்து ஆண்டுகள் பெரியவன் என்பதை முன்னிட்டும் கப்பல் கட்டும் பணியில் சிறந்தவன் என்பதாலும் அவனிடம் மரியாதையுடனும் தாழ்மையுடனும் அமீர் நடந்து

கொண்டான். அதுவும் கடல்புறாவைக் கண்டியத்தேவன் நிர்மாணித்த பிறகு தேவனிடம் அமீர் அளவிலா மதிப்புக் கொண்டிருந்தான். ஆகவே அடுத்த மரக்கலத்திலேயே தான் ஏறியதும் கண்டியத்தேவன் உத்தரவுப்படியே நடந்து கொண்டான்.

முதல் மரக்கலத்தில் ஏறிய கண்டியத்தேவன் கடல்நீரை ஊன்றிக் கவனித்தான். அதன் நிறத்தின் கனத்தைக் கொண்டு அந்தத் துறைமுகத்தில் எந்தப் பகுதியில் நுழைந்தால் கப்பல் சீராக உட்புக முடியுமென்பதை ஆராய்ந்தான். கடல்மோகினி துறைமுகத்தில் காளத்திநதி ஒருபுறம் பாய மற்றொரு புறத்தில் நிலமும் கடலுக்குள் நீண்டிருந்ததால் பிறைச்சந்திரன் போன்ற வடிவமுடையதாயிருந்தது அந்தத் துறைமுகம். காளத்திநதி பாயும் இடத்தில் கடற்கோரைகள் மண்டிக் கிடந்ததால் அந்தப் புறம் போவது ஆபத்து என்பதை உணர்ந்த கண்டியத் தேவன் நிலம் நீண்டு கிடந்த பகுதி மார்க்கத்தில் மரக் கலத்தைச் செலுத்த உத்தரவிட்டான் மாலுமிகளுக்கு. சுக்கான் பிடிக்க வேண்டியவனை அழைத்த கண்டியத்தேவன், "இதோ பார், அந்த நிலம் கடலில் புகுந்திருக்கும் இடத்துக்கருகே ஆழம் அதிகமில்லை. கடல்நீர் வெளுத்த நீலமாயிருக்கிறது. இடையே நீர் கறுத்திருக்கிறது பார் அதுதான் ஆழம் அதிகமான இடம். அதன் வழியே மரக்கலம் செல்லும்படி சுக்கானைப் பிடி" என்று மரக்கலம் செல்ல வேண்டிய மார்க்கத்தைச் சுட்டிக் காட்டினான். பிறகு அந்தத் தாரிணி மரக்கலத்தின் சர்ப்ப முகத்தில் காலை வைத்துக்கொண்டு நங்கூரத்தை எடுத்துவிடும் படிக்கும் துடுப்புகளைத் துழாவுமாறும் உத்தரவு பிறப்பித்தான். உத்தரவு மரக்கலத்தின் அடியறைக்குப் பறந்ததும் துடுப்புகள் துழாவின.

இத்தனை ஏற்பாடுகளைக் கிரமப்படி முடித்து மரக் கலத்தை நகர்த்த முற்படுவதற்குள் நாழிகைகள் இரண்டாகி விட்டனவாகையால் கடற்காற்று வலுத்து அலைகள் பெரிதாக உருண்டன. அந்த அலைகளில் அந்தத் தாரிணி எழுந்து எழுந்து தாழ்ந்தது. சில வேளைகளில் திடீரென முகப்பை

மாத்திரம் வெகு தூரம் தூக்கிக் கவிழ்ந்துவிடும் நிலைக்கும் வந்தது. அந்தக் காற்று உக்கிரத்தின் காரணமாகப் பாய் எதையும் விரிக்காமல் துடுப்புகளையும் சுக்கானையும் கொண்டே மிகுந்த எச்சரிக்கையுடன் மரக்கலத்தைத் துறைமுகத்துக்குள் நுழைத்தான் கண்டியத்தேவன். அந்த மரக்கலத்தைப் பின்பற்றி, சற்றுத் தூரத்தில் அமீரும் சென்றான்.

துறைமுகத்தின் ஒரு புறத்திலேயே கடலாழம் அதிகமா யிருந்தபடியால் அந்த வழியில் மரக்கலங்களை நுழைத்துப் பிறகு துறைமுகத்தின் நடுப்பகுதிக்கு மரக்கலங்களைத் திருப்ப வேண்டியதாயிற்று. அது தவிர கங்கதேவன் மரக்கலங்கள் துறைமுகத்துக்குள் இரண்டிரண்டாகப் பிரிந்து இருபுறங் களிலும் நின்றிருந்ததால் அவற்றின்மீது மோதாமலும் அந்த அலை உருட்சியில் மரக்கலங்கள் செல்ல வேண்டியதா யிருந்தது. மிகுந்த எச்சரிக்கையுடனும் லாகவத்துடனும் மரக் கலங்களை நடத்திச் சென்ற கண்டியத்தேவனும் அமீரும் தங்கள் மரக்கலங்களைத் துறைமுகத்தின் கரையருகே கொண்டுவந்து நிறுத்துவதற்குள் பொழுது சாயும் நேரம் நெருங்கிவிட்டது. அந்த இரு மரக்கலங்கள் கரைக்கருகில் வந்து நின்றதும் கடல் புறாவும் உள்புக அசையத் தொடங்கிவிட்டதையும் அதன் முகப்பில் இளையபல்லவன் நின்றுகொண்டிருந்ததையும் தங்கள் மரக்கலங்களிலிருந்தே கவனித்த அமீரும் கண்டியத்தேவனும் கடல் புறா துறைமுகத்தில் புக விளக்கு வைத்த ஒரு நாழிகைக்கு மேல் ஆகுமென்று தீர்மானித்தனர். ஆகவே கடல்புறாவுக்கு வழி காட்டுவதற்கான பந்தங்களையும் விளக்குகளையும் ஏற்றத் தயார் செய்தனர்.

கடல் புறாவின் அசைவை அவர்கள் மட்டுமல்ல, கரை யிலிருந்த கங்கதேவனும் கவனித்தான். பெரும் எடையுள்ள கடல்புறா தனது இறக்கைகளிலும் முகத்திலும் எழுந்து எழுந்து மோதிய பேரலைகளைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் துறைமுகத்துக்குள் புகத் துவங்கிவிட்டதைக் கரையிலிருந்து

கவனித்த. கங்கதேவன் அதன் அமைப்பைப் பார்த்துப் பெரிதும் வியந்தான். மாலை வெயிலில் அதன் கற்கள் பதிக்கப் பெற்ற கண்களும் பிரமாதமாகப் பிரகாசித்தன. அதன் இறக்கைகளில் பாய்ந்த மஞ்சள் வெய்யில் அவற்றைப் பொன்னிறமாக அடித்திருந்தன. அதன் தலையில் காலவைத்து நின்றிருந்த இளையபல்லவன் ஏதோ தெய்வீக பட்சிமீது அலைகளில் ஊர்ந்து வரும் தேவனெனத் தென்பட்டான் கங்கதேவன் கண்களுக்கு. அந்தச் சில நாழிகைகளில் இளைய பல்லவன்மீது பெரிதும் பொறாமையும் கொண்டான் கங்கதேவன். மிகச் சிறந்த கடலோடிகளுள் ஒருவனான கங்கதேவன் அந்தச் சில நிமிஷங்களில் காஞ்சனாதேவியைக் கூட மறந்தான். அந்தக் கடல் புறா தனக்குச் சொந்தமாய் இருக்கக்கூடாதா என்று நினைத்தான். அதன் அசைவு, கம்பீரம் இரண்டும் அத்தனை அழகாயிருந்தன. அதைப் பார்த்து மலைத்துக்கொண்டு கரையிலேயே நின்ற கங்க தேவன் கரைக்கு வந்து பந்தங்களைக் கொளுத்த முயன்ற கண்டியத்தேவனுக்கும் அமீருக்கும் சகல உதவிகளையும் செய்தான்.

கடல் புறா துறைமுகத்தின் முகப்புக்கு வருவதற்குள் இருள் சூழ்ந்துவிடவே பந்தங்களும் விளக்குகளும் கொளுத்தப் பட்டன. அந்தப் பந்தங்கள், விளக்குகளைக் கொண்டு அமீரும் தேவனும் காட்டிய அடையாளங்களால் கடல் புறாவைச் செலுத்தி, காளத்தி நதியின் முகத் துவாரத்தை நோக்கிச் சிறிதும் திருப்பி நிற்க வைத்த இளையபல்லவன் தான் மட்டும் ஒரு படகில் இறங்கிக் கரைக்கருகே வந்தான். அங்கு கங்கதேவனும் நிற்பதைக் கண்டதும் உள்ளூர மகிழ்ந்து, “கங்கதேவரே! உங்களைப் பார்க்கத்தான் வந்தேன், நல்ல வேளை, கரையிலேயே இருக்கிறீர்கள்” என்றான்.

“என்ன வேண்டும் உங்களுக்கு?” என்று வினவினான் கங்கதேவன்.

“முதலில் அதோ காளத்தி நதிக்கருகில் இருக்கும் இரண்டு மரக்கலங்களையும் சற்று முன்னோக்கி நகர்த்த

வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான் இளைய பல்லவன்.

"அவை அங்கிருந்தால் என்ன?" கங்கதேவன் சந்தேகத் துடன் கேட்டான்.

"கடல் புறாவை நிறுத்த அவை தடையாயிருக்கின்றன."

"எங்கு நிறுத்தப் போகிறீர்கள்?"

"அதோ அந்தக் கோரைகளுக்கு அருகே?"

இதைக்கேட்ட கங்கதேவன் இளையபல்லவனை உற்று நோக்கினான். அவன் முகத்தில் சிறிது சந்தேகத்தின் சாயை எழுந்தது. "உண்மையாகத்தான் சொல்கிறீர்களா?" என்று வினவினான் சந்தேகம் குரலில் தொனிக்க.

"ஆம்." இளையபல்லவன் பதில் திடமாக வந்தது.

கங்கதேவன் சிறிது யோசித்தான். பிறகு ஏதும் புரியாமல் தலையை அசைத்து, "சரி சரி! உங்களிஷ்டம்!" என்று கூறிவிட்டு இளையபல்லவன் உத்தரவுப்படி மரக்கலங்களை நகர்த்துமாறு உத்தரவிட்டான்.

அதற்குப்பின், "இன்னொரு வேண்டுகோள்" என்றான் மறுபடியும் இளையபல்லவன்.

"என்ன தேவை?"

"பலவர்மனையும் மஞ்சளழகியையும் உடனடியாகக் கரைக்குக் கொண்டுவர வேண்டும். அதற்கு உங்கள் மாளிகையில் ஓர் அறை தேவை."

"அதற்கென்ன, தயார் செய்யச் சொல்கிறேன்."

"நீங்களே பார்த்துச் சரியான அறை ஏற்பாடு செய்ய வேண்டும்" என்று கேட்டுக்கொண்டான் இளைய பல்லவன்.

"அப்படியே செய்கிறேன். வரவழையுங்கள் இருவரையும்" என்று கூறிய கங்கதேவன் மாளிகையை நோக்கி நடந்தான் அதிவேகமாக. அவன் சென்றதும் கடல் புறாவையும் மற்ற

மரக்கலங்களையும் நிறுத்தவேண்டிய முறை பற்றியும் யார் யார் எங்கெங்கு இருக்கவேண்டும் என்ற விஷயம் பற்றியும் அமீருக்கும் கண்டியத்தேவனுக்கும் உத்தரவுகளைப் பிறப்பித்தான் இளையபல்லவன். பிறகு காஞ்சனாதேவி யையும், பலவர்மனையும் அழைத்துவர மாலுமிகளை அனுப்பினான். மயக்கமுற்றிருந்த பலவர்மனை ஒரு மஞ்சத்தில் கிடத்தி இரண்டு மாலுமிகள் படகில் வைக்க அவன் பக்கத்தில் உட்கார்ந்து காஞ்சனாதேவி கரை வந்து சேர்ந்தாள். பலவர்மனைத் தூக்கி வரச்சொல்லி இரு மாலுமிகளுக்கு உத்தரவிட்டுக் காஞ்சனாதேவியுடன் நடந்து கங்கதேவன் மாளிகைக்குச் சென்ற இளையபல்லவனுக்கு அங்கு விருந்து தயாராயிருந்தது. மாளிகை மாடியிலிருந்த தனது ஓர் அறையைப் பலவர்மனுக்கும் காஞ்சனாதேவிக்கும் ஒதுக்கி விட்டிருந்தான் கங்கதேவன். அன்றிரவு காஞ்சனாதேவி உண்ண மறுத்ததால் கங்கதேவனுடன் உணவுண்ட இளைய பல்லவன் இரவின் நாழிகை எட்டுக்குமேல் ஓடி விட்டதை அறிந்து, "கங்கதேவரே, நாழிகை எட்டு ஓடி விட்டதே" என்றான்.

"ஆம், ஓடிவிட்டது."

"நான் கரைக்குப் போய், கடல் புறா நகர்த்தப்பட்டு விட்டதா என்பதைப் பார்க்க வேண்டும்."

"நன்றாய்ப் பாருங்கள், நானும் வேண்டுமானால் வருகிறேன்."

"வேண்டாம், வேண்டாம். நீங்கள் வரவேண்டாம். நீங்கள் படுத்து உறங்குங்கள். நான் போய் வருகிறேன்" என்றான் இளையபல்லவன்.

'பழம் நழுவி பாலில் விழுந்தது' என்று மனத்துள் உவகை கொண்டான் கங்கதேவன். இளையபல்லவன் கரைக்குச் சென்ற நீண்ட நேரத்திற்குப் பின்பும் அவன் திரும்பவில்லை. அதனாலேற்பட்ட சந்துஷ்டியுடன் மாளிகையின் தரைத்

தளத்திலிருந்த தனது அறையைத் திறந்து கொண்டு வெளியே வந்தான் கங்கதேவன். மாளிகை எங்கும் நிசப்தமாயிருந்தது. மெள்ள மெள்ள மாடிப்படிகளில் ஏறி காஞ்சனாதேவி இருந்த அறையை நோக்கிச் சென்றான் அந்தக் கயவன். அவன் கண்களில் காமவெறி மண்டிக் கிடந்தது.

கங்கதேவன் சம்பந்தப்பட்ட வரையில் அது அவனுக்கு அனுகூலமான காலம். பழம் நழுவிப் பாலில் விழுந்துவிட்ட காலந்தான். பழமும் பாலும், ஏன் சர்க்கரையும் கலந்தால்கூட ஏற்படாத இனிப்பு அவன் சிந்தையைத் தழுவிக் கிடந்தது. அதன் ஊடே கொழுந்து விட்டது காமாக்கினி. அந்தக் காமாக்கினி உந்த, மாடிப்படிகளில் ஏறிக் காஞ்சனாதேவி இருந்த அறையை இருமுறை தட்டவும் செய்தான்.



அத்தியாயம் 20

# சேந்தன் செய்த சத்தியம்

கடல் புறா கடற்கோரைக்கருகே சரியாக நகர்த்தப் ப்டுகிறதா என்பதைப் பார்க்கக் கடற்கரைக்குச் சென்று வருவதாகக் கூறிவிட்டு இளையபல்லவன் மாளிகையிலிருந்து சென்றதும், தன்னைவிட ஓர் அதிர்ஷ்டசாலி உலகில் இருக்க முடியாதென்றே கங்கதேவன் நினைத்தான். அன்று தான் விழித்த வேளை மிகவும் நல்லவேளையே என்பதையும், இல்லாவிட்டால் அடுத்தடுத்துத் தான் எண்ணியபடி யெல்லாம் காரியங்கள் நடக்குமாவென்றும், கலிங்கத்தின் தூரக்கிழக்குத் தளபதியும் கொள்ளைக்காரனுமான கங்கதேவன் பலமுறை எண்ணிப் பார்த்து இணையிலா திருப்தியும் பட்டுக்கொண்டான். விளக்குகள் பூரணமாகத் துறைமுகத்தில் அணைந்திருந்ததைப் பார்த்த பிறகும், கண்களுக்கு நன்றாகத் தெரியும்படியாகக் கடல் புறாவையும் மற்றுமிரு மரக்கலங்களையும் விளக்குப் போட்டு இளைய பல்லவன் கடல் பவனி வந்ததையும், பிறகும் தானாகவே துறைமுகத்துக்குள் வர அனுமதி கேட்டதையும் அப்படி அனுமதியளித்த பின்பும் தன் பெரு மரக்கலத்தைக் கடற் கோரைக்கருகில் நிறுத்த விண்ணப்பித்துக் கொண்டதையும் நினைத்துப் பார்த்த கங்கதேவனுக்கு, தன் அனுகூல காலத்தால் அத்தனையும் நடக்கிறதா அல்லது கடற்போர் வல்லவன் என்ற பிரசித்தி பெற்ற இளையபல்லவன் மூளை மழுங்கியதால்தான் அந்த விளைவுகள் உண்டாயினவா என்பது புரியவில்லை.

இளையபல்லவன் பேச்சிலிருந்தும் பார்வையிலிருந்தும் ஒன்று மட்டும் திட்டமாகப் புரிந்துகொண்டான் கங்கதேவன். இளையபல்லவன் சிறந்த அறிவாளி என்பதுதான் அது.

"அப்பேர்ப்பட்ட அறிவாளி தனது மரக்கலங்களில் போரிடும் நிலையிலிருந்த ஒரே மரக்கலமான கடல் புறாவை எதற்காகப் பயங்கரமான கடற்கோரைக்கருகில் நிற்க வைக்க முற்பட்டான்? அதுவும் எனது இரு மரக்கலங்களையும் நகர்த்த அவற்றுக்கும் கடற்கோரைக்கும் இடையே நிற்க வைக்கிறானே! என் மரக்கலங்கள் ஆயுதங்களை வீசினால் ஒன்று கடல் புறா திருப்பி அடிக்க வேண்டும், அல்லது பின்னடைய வேண்டும். திருப்பியடித்தால் பழுதுபடாத இரு மரக்கலங்களுக்கெதிரே பழுதுபட்ட கடல் புறா இருக்கும். பின்னடைந்தால் கடற்கோரைகளில் சிக்கும். இரண்டும் பேராபத்து ஆயிற்றே! இந்த நிலையில் மரக்கலத்தை நிறுத்த இளையபல்லவன் எப்படித் தீர்மானித்தான்?" என்று பலபடி தன்னைக் கேள்வி கேட்டுக்கொண்ட கங்கதேவன், தன்னைப் பிடித்த நல்ல காலந்தான் இளையபல்லவன் அறிவு கெட்டு விட்டதெனத் தீர்மானித்தான்.

அந்த விஷயத்தில் மட்டும் தனக்கு நல்ல காலம் ஏற்பட வில்லை என்றும் மற்ற விஷயங்களிலும் நல்ல காலம் ஏற்பட் டிருப்பதையும் உணர்ந்தான் கங்கதேவன். பலவர்மன் மகளைக் கடல் புறாவில் இருக்கச் செய்து அங்கேயே பலவர்மனுக்குச் சிகிச்சை செய்திருந்தால் தன் நிலைமை என்னவாகும் என கங்கதேவன் எண்ணிப் பார்த்தான். சண்டையின்றி மஞ்சளழகியைத் தான் அடைய முடியாதென்று தீர்மானித் தான் அவன். "காலம் இங்கும் எனக்கு அனுகூலம் செய்திருக் கிறது. என் மாளிகையிலேயே பலவர்மன் மகள் மஞ்சளழகி இருக்கிறாள் இப்பொழுது. இளையபல்லவனே! நீ வாழி பல்லாண்டு! உன் மூளைக்கிணை உலகில் கிடையாது. பஞ்சையும் நெருப்பையும் அக்கம் பக்கத்தில் வைக்காதே என்று உன் நாட்டவர் சொல்வார்களே! அதையுமா மறந்து விட்டாய்?" என்று உள்ளத்தில் கேள்வியொன்றை எழுப்பிக் கொண்டு குதூகலித்த கங்கதேவன், காலத்தை அதிகமாக ஓடவிடாமல் மேலறைக்குப் போகச் சிறிது தன்னைத் தயார் செய்துகொள்ளவும் முற்பட்டு அறையின் மூலையிலிருந்த ஒரு

தந்தப் பேழையிலிருந்து ஏதோ வாசனைத் திரவியத்தை எடுத்து மீசையிலும் அங்கி மீதும் தடவிக் கொண்டான். பிறகு மீசையை நன்றாக முறுக்கி, சமயம் வரும்போது உதட்டுக்கு இடைஞ்சலாய் இல்லாதிருக்க சற்று மேலேயே எழும்பி நிற்கும்படி செய்து கொண்டான். புடைத்த கன்னங்களுடனும் ஆழக் கண்களுடனுமிருந்த தன் முகத்தினழகைச் சிறிது கண்ணாடியிலும் பார்த்துக் கொண்டான். பின்பு தன்னைப் பற்றிய பரம திருப்தியுடன் படிகளில் ஏறிச் சென்றான். அப்பொழுதுதான் நினைத்தான், பழம் நழுவிப் பாலில் விழுந்தது என்று. 'அப்படியில்லாவிட்டால் மேலுக்கு கடற் கரை வருகிறேனென்று சொன்ன என்னை வேண்டாமென்று சொல்லிவிட்டு இளையபல்லவன் வெளியே செல்வானா?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான் கங்கதேவன்.

பண்பு மட்டும் சிறிது கங்கதேவனுக்கு இருந்திருந்தால் இதே நிலைமையை அவன் வேறு விதத்தில் ஆராய்ந் திருப்பான். கடல் புறாவைத் தன் மரக்கலங்களின் ஆதிக்கத்தில் நிறுத்த முற்பட்டதை இளையபல்லவனுக்குத் தன்மீது இருந்த நம்பிக்கையை உணர்த்துவதாக எண்ணி யிருப்பான். மஞ்சளழகியைத் தன் வசம் ஒப்படைத்துப் போனதை அந்த நம்பிக்கை வரையற்றது என்பதை அறிவுறுத்துவதாக அறிந்திருப்பான். தவிர நட்பின் கடமையும் புரிந்திருக்கும் அவனுக்கு. நண்பன் ஒப்படைத்தவளை அவன் அனுமதி கிடைக்கும்வரை அணுகுவது துரோகம் என்பதையும் புரிந்துகொண்டிருப்பான். ஆனால் பண்பு சிறிதுமற்றவனும் ஆயுளில் பல மங்கையரைக் கெடுத்திருப்ப வனுமான கங்கதேவன், இளையபல்லவன் செய்கை ஒவ்வொன்றிலும் அறிவீனத்தையும் அஜாக்கிரதையையுமே பார்த்தான். அத்தனையும் தன் அதிர்ஷ்டம் என்று எண்ணினான். மேலே இருப்பது பழம் என்றும் அது நழுவிக் கைகளில் விழப் போகிறதென்றும் நினைத்து அறையை விட்டு வெளியே வந்தான். இளையபல்லவன் கடற்கரைக்குக் கிளம்பி ஒரு நாழிகைக்கு மேல் ஆகிவிட்டது என்பதைத் தீர்மானித்துக்

கொண்ட கங்கதேவன் மாளிகையில் நிசப்தம் நிலவுவதைக் கண்டான். மாளிகைக்கு வெளியே காவல் புரிந்த இரு காவலர் பேசிக்கொண்டிருந்த சப்தம்கூடச் சரியாகக் காதில் விழ வில்லை, தூரத்தே கடல் போட்ட இரைச்சலால். ஆகவே பரம சந்துஷ்டியுடன் இணையற்ற இன்பத்தை எதிர்பார்த்து ஏறிச் சென்றான் அவன். மாடிப்படிகளில் ஏறிச் சென்று மாடிப்படிக் கதவைத் தட்டினான் இருமுறை.

கதவு திறக்கப்பட்டது. உள்ளே நோக்கிய கங்கதேவன் விழிகள் கன்னக்கதுப்புக்களின் ஆழத்திலிருந்தாலும் பயங்கர மாக ஒளிவிட்டன. அந்தக் கண்களுக்கெதிரே அவன் எதிர் பார்த்த பழம் இல்லை. ஆகவே அது பாலிலும் விழுவது சாத்தியமில்லை என்பதைப் புரிந்துகொண்டதால் கங்கதேவன் முகம் மிகக் கொடூரமாக மாறியது. அவன் கண்ணுக்கெதிரே தெரிந்தது மஞ்சளழகியின் அழகிய திருமேனியல்ல. மயக்கும் கண்களல்ல அவனை விழித்து நோக்கியவை. அந்த மாயக் கண்களை, மந்திரக் கண்களை அவன் கடல் புறாவில் ஏற்கெனவே பார்த்திருந்தான். அறைக் கதவைத் திறந்து அவனை நோக்கியவை மந்திரக் கண்களல்ல, இரண்டு தந்திரக் கண்கள் நோக்கின. கங்கதேவன் கோபத்தைக் கண்டு அந்தத் தந்திரக் கண்களில் அச்சத்துடன் விஷமங்கலந்த நகைப்பும் துளிர்விட்டது. "உன்னை நான் இங்கு எதிர்பார்க்கவில்லை" என்று கூறினான் கங்கதேவன், சொற்களில் அனல் பறக்க.

கூலவாணிகனின் கண்களில் சிரிப்புத் தாண்டவமாடி னாலும் மேலுக்குப் பணிவுடன் குரல் வெளிவந்தது. "அது அடிமையின் துர்பாக்கியம்" என்றான் கூலவாணிகன் தலை தாழ்த்தி வணங்கி.

சாதாரணச் சமயமாயிருந்தால் கூலவாணிகனின் குரலி லிருந்த ஏளனத்தையும் கண்களில் விளையாடிய நகைப்பையும் கங்கதேவன் கவனித்திருப்பான். காமவெறி மண்டிக்கிடந்த அந்தச் சமயத்தில் அவன் எதையும் கவனிக்கும் சக்தியை இழந்திருந்ததால் மீண்டும் உக்கிரத்துடன் கேட்டான், "நீ எதற்கு இங்கு வந்தாய்?" என்று.

"நான் இருக்க வேண்டிய இடம் இது." பணிவுடன் வந்தது சேந்தன் பதில்.

"நீ இருக்க வேண்டிய இடமா? முகத்தைப் பார் முகத்தை" என்றான் கங்கதேவன் வெறுப்புடனும் கோபத்துடனும்.

"என் முகத்துக்கென்ன?" சேந்தன் உள்ளூர நகைத்துக் கொண்டு வெளிக்குச் சர்வ சாதாரணமாகக் கேட்டான்.

"அழகு சொட்டுகிறது."

"அப்படித்தான் ஊரிலும் சொல்லுவார்கள்."

"எந்த ஊரில் எந்த மடையன் சொன்னான் அப்படி?"

"இப்போதுகூடத் தாங்கள்..."

சேந்தன் வார்த்தையை முடிக்கு முன்பாக, "டேய் மடையா!" என்று கூவி கங்கதேவன் சேந்தனை அறையத் தன் வலப் பெருங்கையை ஓங்கினான். சேந்தன் சற்றுப் பின்னடைந்து பதுங்கினான். அப்படிப் பதுங்கிக் கொண்டே சொன்னான், "அதிகமாகச் சத்தம் போடாதீர்கள்" என்று.

கங்கதேவன் கோபம் எல்லை மீறியது. "என் மாளிகையில் நான் சத்தம் போடக் கூடாதா? என்னிடம் விளையாடு கிறாய்?" என்று கூவிக்கொண்டே சேந்தனை அணுகினான். கங்கதேவனின் பயங்கர நடையிலிருந்தும் உதையிலிருந்தும் தப்ப, கூலவாணிகன் அறையின் மூலையில் அப்படியும் இப்படியும் பதுங்கிக்கொண்டே, "தங்கள் மாளிகைதான். இருப்பினும் இது தலைவரின் அறை" என்று கூவினான்.

"யார் சொன்னது இது தலைவர் அறையென்று?" என்று கங்கதேவன் வினவினான், சேந்தனைத் துரத்திப் பிடிக்க முயன்று கொண்டே.

"தாங்கள்தான்."

"எப்பொழுது சொன்னேன்?"

"சொன்ன மாதிரிதான்."

"சொன்ன மாதிரி என்றால்..."

"பலவர்மனுக்கு எப்பொழுது ஒழித்து விட்டீர்களோ அப்பொழுதே அவருக்கு இந்த அறையை அளித்தது போலத்தான்."

"அவனுக்கு மட்டும் ஒழித்து விடவில்லை."

"தலைவரை மரியாதையின்றிப் பேசுவது முறையல்ல."

"யார் என்னைத் தடுக்க முடியும்?"

இந்தச் சமயத்தில் பிரம்மாஸ்திரத்தை வீசினான் சேந்தன். "அவர் மகள்" என்று மெள்ளத்தான் சொன்னான் கூலவாணிகன். இருப்பினும் அந்தச் சொற்கள் கங்கதேவனைச் சட்டென்று ஓரிடத்தில் நிற்க வைத்தன. "என்ன சொன்னாய்; இன்னொரு முறை சொல்?" என்று கேட்டான் கங்கதேவன்.

"அவர் மகள்" என்று சற்று அழுத்திச் சொன்னான் கூலவாணிகன்.

"மஞ்சளழகியா?" இதைக்கேட்ட கங்கதேவன் குரலில் காமம் மட்டுமின்றிக் கனிவும் தொனித்தது.

"ஆம்" என்றான் சேந்தன்.

"எங்கே அவள் இப்பொழுது?" என்று கங்கதேவன் வினவினான்.

"தலைவர் பெண்ணை..." இழுத்தான் சேந்தன்.

"என்ன?"

"மரியாதையுடன் அழைக்க வேண்டும். அவள் இவள் என்று..." கூலவாணிகன் வார்த்தையை முடிக்காமல் விட்டாலும் முடிவு புரிந்தது கங்கதேவனுக்கு.

கங்கதேவன் அறை நடுவே சற்று நின்றான். பிறகு கேட்டான், "உன் பெயர் என்ன?" என்று.

தன் பெயரை ஏன் கேட்கிறான் என்பதை அறியாத கூலவாணிகன், "சேந்தன்" என்று பதில் சொன்னான்.

"உன் தொழில்?"

"பல."

"உதாரணமாக?"

"வர்த்தகம், வைத்தியம்."

"உனக்கு இரண்டாலும் நல்ல லாபம் வேண்டுமா?"

லாபம் என்ற வார்த்தையைக் கேட்டதும் கூலவாணிகன் சித்தத்தில் இன்ப அலைகள் பாய்ந்தன. "எந்த வணிகனாவது லாபத்தைப் புறக்கணிப்பானா?" என்று வினவினான் ஆசை குரலிலும் தொனிக்க.

அடுத்த விநாடி கங்கதேவன் குரல் அடியோடு மாறியது. சேந்தன் அருகே வந்து அவன் தோளில் கையைப் போட்டுக் கொண்டு, "சேந்தா!" என்று தேனொழுக அழைத்தான்.

"தலைவரே!" என்றான் சேந்தனும்.

"உனக்கு என்னால் நிரம்பப் பணம் தரமுடியும்" என்று கூறிய கங்கதேவன் சேந்தனை உற்று நோக்கினான்.

சேந்தன் கண்களில் மகிழ்ச்சி மண்டிக் கிடந்ததை அவன் உணர்ந்தான். ஆகவே மேலும் சொன்னான் கங்கதேவன், "சேந்தா! இந்த மாளிகையில் ஒரு சிற்றரசை வாங்கக்கூடிய அளவுக்கு நகைகளும் பொற்காசுகளும் வைத்திருக்கிறேன். அவை அனைத்தையும் உனக்குத் தருவேன்..." என்று.

"அனைத்தையுமா?" சேந்தன் அக்கறையுடன் கேட்டான்.

"ஆம்."

"அனைத்தையும் கொடுத்துவிட்டு நீங்களென்ன செய்வீர்கள்?"

"மீண்டும் கொள்ளையடிக்க எனக்குச் சாமர்த்தியமுண்டு."

"ஆம் ஆம். அதைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்."

கங்கதேவன் இதயத்தில் பெருமை மண்டியது. தன் பிரபாவம் வெகுதூரம் பரவியிருப்பதைப் பற்றிய மகிழ்ச்சியுடன் சொன்னான், "சேந்தா! எனக்கு நகை, பொன் முக்கியமல்ல" என்று.

"பின் எது முக்கியம்?" என்று அக்கறையைக் காட்டினான் குரலில் சேந்தன்.

“எதுவென்று பிறகு சொல்கிறேன். முதலில் நீ மறைக்காமல் விஷயங்களை எனக்குச் சொல்ல வேண்டும்” என்று கேட்ட கங்கதேவன் தனது குரலில் தோழமையைக் காட்டினான்.

“கண்டிப்பாய்ச் சொல்கிறேன். உங்களை எதிர்த்துக் கொண்டு இந்தத் துறைமுகத்தில் யார் பிழைக்க முடியும்?”

“அது தெரியுமல்லவா?”

“நன்றாகத் தெரியும். இல்லாவிட்டால் வாயைத் திறப்பேனா?”

“நீ புத்திசாலி...”

“சற்று முன்பு நீங்கள் என்னை...”

“மடையன் என்று அழைத்தேன். அதை மறந்துவிடு.”

“மறந்து விட்டேன்.”

“ஆத்திரத்தில், மஞ்சளழகியில்லாத ஏமாற்றத்தில் அப்படிக் கூறிவிட்டேன்.”

“அதனால் பாதகமில்லை.”

இதற்குப் பிறகு கங்கதேவன் பஞ்சணையில் மயக்கத்துடன் படுத்திருந்த பலவர்மனைச் சில விநாடிகள் பார்த்தான். பிறகு கேட்டான், “இவன் சுரணை அடைய...” என்று.

“இரண்டு நாட்களாகும்” என்றான் சேந்தன்.

“அப்படியானால் நாம் பேசலாம்” என்ற கங்கதேவன், “சேந்தா! இந்த மஞ்சளழகி இளையபல்லவனைக் காதலிக்கிறாள் என்பது எனக்குத் தெரியும்” என்றான்.

“அதை ஊகித்து விட்டீர்களா!” சேந்தன் குரலில் வியப்பைக் காட்டினான்.

“என் கண்களிலிருந்து எதுவும் தப்ப முடியாது” என்ற கங்கதேவன், “ஆனால் சேந்தா! இளையபல்லவன் இவளைக் காதலிக்கிறானா?” என்று வினவினான்.

“அதை ஏன் கேட்கிறீர்கள் போங்கள்...” என்று அலுத்துக் கொண்டான் சேந்தன்.

"என்ன சேந்தா?"

"கங்கதேவரே! இந்தப் பெண்கள்தான் இளைய பல்லவரைக் கண்டதும் தலை கீழாய் விழுகிறார்கள். அவர் யாரையும் சட்டை செய்வது கிடையாது. அகப்பட்ட பெண் களைச் சிறிது காலம்- சொல்லக் கூசுகிறதே."

"இதில் கூச்சமென்ன சேந்தா! கடலோடும் கொள்ளையர் வாழ்வே அவ்வளவுதான்."

"அப்படியா! நானும் கடலோடுகிறேன்."

"நீ. வேறு தினுசு."

"இதில் தினுசு வேறா?"

"ஆம் சேந்தா! சிலருக்குப் பண இச்சையிருக்கும். சிலருக்குக் காம இச்சை இருக்கும். இன்பங்கள் பலவிதம். அவற்றில் உனக்கு இன்பம் பணத்தில், நீ வணிகனல்லவா?"

"ஆம் ஆம்."

"ஆகவே சொல். இந்த மஞ்சளழகியை-" என்று பொருள் பட நோக்கினான் சேந்தனை கங்கதேவன்.

"இளையபல்லவன் சில நாட்களாக..." அங்குமிங்கும் நோக்கினான் சேந்தன்.

"இங்கே யாரும் வரமாட்டார்கள், சொல்."

"இளையபல்லவர் புறக்கணித்து வருகிறார். இப்போது கூட..."

"உம்- சொல்."

"அவருக்குத் தெரியாமல் இஷ்ட விரோதமாகக் கடற் கரைக்குப் போய் இருக்கிறாள்."

"ஏன்?"

"மஞ்சளழகிக்கு நேற்றிலிருந்தே சிறிது காய்ச்சல். கடலில் எப்போதும் போகாதவள் கடல் நோய் பிடித்துக் கொண்டிருக் கிறது. கடற்காற்று ஆகவில்லை."

"அப்படியா! இது எனக்குத் தெரியாதே!" என்றான் கங்கதேவன் கவலையுடன்.

"கவலைப்படுவதற்கு ஏதுமில்லை. இன்னும் நான்கே நாட்களில் குணப்பட்டுவிடும். தவிர—" என்று சேந்தன் ரகசியம் சொன்னான்.

"என்ன சேந்தா?"

"காய்ச்சலுடன் கடலோரம் வர வேண்டாமென்று தள்ளிவிட்டுப் போய்விட்டார் இளையபல்லவர்."

"என் அறையிலிருந்துதான் போனார்."

"ஆம். அவர் சென்ற அடுத்த விநாடி என்னை மட்டும் இங்கு உட்கார வைத்துவிட்டுப் படிகளில் இறங்கிச் சென்றுவிட்டாள். யார் சொல்வதைப் பெண்கள் கேட்கிறார்கள்?"

"அதிருக்கட்டும். நீ எப்போது இங்கு வந்தாய்?" கங்க தேவன் குரலில் சந்தேகம் இருந்தது.

"பலவர்மரைத் தூக்கி வந்த நால்வரில் நான் ஒருவன். ஏழையை நீங்கள் எங்கே கவனிக்கப் போகிறீர்கள்? திரும்பிப் போனவர்கள் மூவர் என்பதை எங்கே கவனித்திருக்கப் போகிறீர்கள்? உங்கள் பார்வையெல்லாம் மஞ்சளழகி மீது— அந்தப் பார்வையும் பழுதுபட்டு விட்டது. பார்வையல்ல, காது," என்றான் சேந்தன் கடுமையாக.

"என்ன சொல்லுகிறாய் சேந்தா?" என்று வினவினான் கங்கதேவன்.

"இளையபல்லவர் சென்றதும் உடனே நீங்கள் ஏன் இங்கு வரவில்லை? எதற்காக நீண்ட நேரம் அறைக்கதவை மூடிக் கொண்டு மஞ்சளழகி போவதுகூடத் தெரியாமல் இருந்தீர்கள்?" என்று கேட்டான் சேந்தன்.

சேந்தன் சொன்னது சரியென்றே பட்டது கங்க தேவனுக்கு. தன்னைச் சிங்காரித்துக் கொண்டிருந்த நேரத்தில் மஞ்சளழகி ஓடியிருக்க வேண்டுமென்பதைப் புரிந்து

கொண்டான். சற்று யோசித்துவிட்டு, "சேந்தா! நீ என் பக்கம் சேர விரும்புகிறாயா?" என்று வினவினான்.

"லாபத்தைப் பொறுத்தது, நான் வணிகன்" என்றான் சேந்தன்.

"இப்படி வா!" என்று கங்கதேவன் அவன் காதுக்கருகில் குனிந்து கிசுகிசு என்று ஏதோ சொன்னான். கூலவாணிகன் முகத்தில் சற்றுப் பயத்தைக் காட்டினான். "பயப்படாதே நானிருக்கிறேன்" என்ற கங்கதேவன், "சத்தியம் செய்" என்று தன் கையை நீட்டினான். கூலவாணிகன் கையடித்துச் சத்தியம் செய்தான். அத்துடன் கங்கதேவன் அறையை விட்டு வெளியே நடந்தான். கூலவாணிகன் கதவைச் சாத்திக்கொண்டு கதவின் மேல் சாய்ந்துகொண்டு ஆயாசப் பெருமூச்சு விட்டான். அடுத்த விநாடி அவன் முகத்தில் கிலி படர்ந்தது. பஞ்சணையில் மயக்கமுற்றிருந்த பலவர்மன் அவனைப் பார்த்துப் புன்முறுவல் செய்தான். பிறகு அருகில் வரும்படி சைகையும் செய்தான்.



அத்தியாயம் 21

# இரண்டாவது சத்தியம்

கெட்ட எண்ணங்களை நிரம்ப உடைய கங்கதேவன் தன்னிடம் காதில் கூறிய விஷயங்களை நினைத்தும் கையிலடித்து வாங்கிக்கொண்ட சத்தியத்தை நினைத்தும் கிலி கொண்டிருந்த கூலவாணிகனுக்கு கங்கதேவன் சென்றதும் பலவர்மன் கண் விழித்ததும் புன்முறுவல் செய்ததும் அருகில் வரச் சைகை செய்ததும் அந்தக் கிலியை ஆயிரம் மடங்கு உயர்த்தவே செய்தன. பூரண மயக்கத்தில் இருந்ததாகத்தான் எண்ணிய பலவர்மன் எப்படிக் கண்விழித்தான் என்பது பேராச்சரியமாக இருந்தது சேந்தனுக்கு. அது தவிர தன்னைச் சைகை காட்டி அழைக்குமளவுக்கு அவனுக்குத் தெம்பும் இருந்ததை எண்ணிப் பெரும் பிரமிப்புக்குமுள்ளானான் கூலவாணிகன். இளையபல்லவன் உத்தரவுப்படி தான் கடல் புறாவில் அளித்த மருந்தின் வேகத்தை அவன் உணர்ந்தே யிருந்தான். அந்த மருந்தையே ஜீரணம் செய்துவிட்டு அநாயாசமாகச் சிரிக்கும் பலவர்மன் உண்மையில் மனிதப் பிறவியல்லவென்றும் ராட்சதனாகத்தானிருக்க வேண்டு மென்றும் முடிவு செய்த சேந்தன் மிகுந்த பயத்துடனேயே பஞ்சணையை அணுகினான். அவனைப் பக்கத்தில் உட்காரச் சொல்லி சைகை காட்டிய பலவர்மன், "கூலவாணிகரே! அருகில் வாரும். இரைந்து பேசச் சக்தியில்லை" என்றான் தீனமான குரலில்.

கூலவாணிகன் நகைச்சுவையும் இடக்கும் அந்தச் சமயத்திலும் மேலோங்கி நின்றதால், "இரைந்து பேசச் சக்தி யில்லையா?" என்று ஏளனம் குரலில் தொனிக்கக் கேட்டான்.

பலவர்மர் தன் தலையைத் தலையணையில் மெள்ளத் திருப்பி, "ஆம் வணிகரே! முடியவில்லை" என்றான் சிரமப்பட்டு வார்த்தைகளை உதிர்த்து.

"ஏன், கத்திப் பேச ஆவலாயிருக்கிறதோ?" என்று வினவினான் சேந்தன்.

"இல்லை அந்த ஆவலில்லை" என்ற பலவர்மன் குரல் சற்று வித்தியாசமாக ஒலித்தது.

"அதுவரையில் சந்தோஷம்."

"உமக்கு மட்டுமல்ல; எனக்கும் சந்தோஷம்."

"என்ன சந்தோஷமோ?"

"எனக்கு உணர்ச்சியிருக்கிற வேகத்தில் சக்தி இருந்தால் இரைந்திருப்பேன். நான் இரைவது கங்கதேவன் காதில் விழுந்தால்..."

"விளைவில் சந்தேகமில்லை."

"அப்படி என்ன விளைவு?"

"என்னால் முடியாததை அவன் செய்திருப்பான்."

சேந்தன் சொன்ன சொற்களின் பொருளைப் பலவர்மன் பூரணமாகப் புரிந்துகொண்டான். சேந்தனிடம் ரகசியமாகச் சொன்னது தனது காதில் விழுந்துவிட்டதென்று தெரிந்தாலோ கங்கதேவன் தன்னை உடனே அந்தப் பஞ்சணையிலேயே கழுத்தை நெரித்துக் கொன்றிருப்பானென்று பலவர்மனுக்கு நன்றாகத் தெரிந்திருந்தது. தான் கங்கதேவனுக்கு ஏற்கெனவே இழைத்திருந்த கொடுமைக்கு அவன் ஏன் இன்னும் தன்னை உயிரோடு விட்டிருக்கிறானென்பது மட்டுந்தான் பலவர்மனுக்குப் புரியவில்லை. புரியவில்லையே தவிர அதைப் பற்றிச் சிந்திக்கும் நிலையிலும் இல்லை பலவர்மன் அந்தச் சந்தர்ப்பத்தில். அவன் மனமெல்லாம் கங்கதேவன் சேந்தனிடம் கூறிய ரகசியத்திலேயே நிலைத்திருந்ததால் அதைப்பற்றியே பேச முற்பட்ட பலவர்மன், "ஆம் கூலவாணிகரே! உமது மருந்தினால் முடியாததை அவன் கண்டிப்பாய் செய்திருப்பான்" என்று கூறினான்.

மருந்தைப் பற்றிப் பலவர்மனுக்குத் தெரிந்திருந்தது கூடக் கூலவாணிகனுக்கு வியப்பாயிருந்தது. 'இவனுக்கு மருந்து

கொடுக்க இளையபல்லவர் உத்தரவிட்ட சமயத்தில் இவன் தான் மயக்கத்திலிருந்தானே! அதைப்பற்றி இவன் எப்படி அறிந்தான்?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்ட கூலவாணிகள், "மருந்தா! என்ன மருந்து?" என்று பேச்சை மாற்ற முயன்றான்.

ஆனால் பேச்சை சிறிதும் மாற்ற இஷ்டப்படாத பலவர்மன், "ஆம், வணிகரே! நீர் கொடுக்க முயன்ற மயக்க மருந்தைப் பற்றித்தான் சொல்கிறேன்" என்றான், சொற்களை அழுத்தி உச்சரித்து உதடுகளில் புன்முறுவல் கூட்டி.

"கொடுக்க முயன்ற என்றால்?" கூலவாணிகன் சொற்கள் வியப்புடன் உதிர்ந்தன அந்தக் கேள்வியைக் கேட்டபோது.

"கொடுக்கவில்லை என்று பொருள்!" என்று பதில் சொன்னான் பலவர்மன்.

"யார் சொன்னது? என் கையால் நானே மருந்தைக் கரைத்து..." என்று கோபத்துடன் சொன்னான் சேந்தன்.

"புகட்டியதை யார் இல்லையென்கிறார்கள்?" என்று வினவினான் பலவர்மன்.

"புகட்டினால் ஒன்று நீர் மயக்கமுற்றிருக்க வேண்டும், அல்லது இறந்திருக்க வேண்டும். ஏன் இரண்டும் நடக்க வில்லை?" என்று கூலவாணிகன் வெறுப்புத் தொனித்த குரலில் கேட்டான்.

"கோபித்துக் கொள்ளாதீர்கள் கூலவாணிகரே! நான் இறக்கவும் இஷ்டப்படவில்லை. மயக்கமுறவும் இஷ்டப் படவில்லை" என்று பலவர்மன் பதில் கூறினான் ஏளனம் கலந்த குரலில்.

"உமதிஷ்டப்படி மருந்து வேலை செய்யுமா?"

"செய்வதைத்தான் நீரே பார்த்திருக்கிறீரே?"

இதைக்கேட்ட கூலவாணிகன், "இல்லை, இல்லை! இதில் ஏதோ சூது நடந்திருக்கிறது" என்று கூவினான்.

"ஆம், ஆம். சூதுதான் நடந்திருக்கிறது" என்று பலவர்மனும் ஆமோதித்தான்.

“சூது செய்தது யார்?”

“நீர்தான்.”

“நானா! என்ன சூது செய்தேன்?”

“கடல்புறாவின் அக்ரமந்திரத்திலிருந்து இளையபல்லவர் உத்தரவிட்டுச் சென்றார். நினைப்பிருக்கிறதா?” என்று பலவர்மன் குரல் பலவீனத்துடன் கேட்ட கேள்வியில் ஒரு விபரீதத் தொனியிருந்ததைக் கவனித்த கூலவாணிகன், கங்கதேவன் கயமைக்குச் சிறிதும் குறையாத அயோக்கியத் தனத்தையுடைய பலவர்மன் தனக்கு ஏதோ பெரும் குழியை வெட்ட முயல்கிறானென்பதை மட்டும் புரிந்து கொண்டதால் சிறிது நடுக்கத்துடனேயே பதில் சொன்னான், “ஆம். நினைப் பிருக்கிறது” என்று.

“அப்புறம் நீர் என்ன செய்தீர்?” அதே விபரீதத் தொனி யுடன் எழுந்தது பலவர்மன் கேள்வி.

“மருந்தைக் கலக்கினேன், கொடுத்தேன்” என்றான் பயத்துடன் கூலவாணிகன்.

“இல்லை. இல்லை. இரண்டும் செய்யவில்லை நீர்?”

“வேறென்ன செய்தேன்?”

“என் அருகில் வந்தீர்.”

“ஏன் உம்மிடம் நிறைய அன்போ எனக்கு?”

“இல்லாவிட்டால் வருவீரா?”

“ஆம், ஆம். வந்தேன். அன்பு சொட்டியது.”

“உண்மை கூலவாணிகரே! அருகில் வந்தீர். அதுமட்டுமா? என் மயக்கத்தைத் தீர்க்க மருந்து கொடுத்தீர். நானும் சற்று மயக்கம் தெளிந்தேன். அப்பொழுது காஞ்சனா சற்று வெளியே சென்றிருந்த சமயம்...”

இந்தக் கதையைக் கேட்ட கூலவாணிகனுக்கு ஏற்பட்டது மிதமிஞ்சிய பிரமிப்பா, மிதமிஞ்சிய கிலியா என்பது அவனுக்கே விளங்கவில்லை. “இத்தனையும் நடந்தது? உம்?” என்று கேட்டு வாயைப் பிளந்தான்.

"ஆம். இத்தனையும் நடந்தது. இவை மட்டுமல்ல, மேலும் நடந்ததைக் கேளும்" என்ற பலவர்மன், "காஞ்சனா இல்லாததைக் கவனித்த நீர் எனக்கு ஆசை காட்டத் துவங்கினீர். எனக்கு மயக்க மருந்து கொடுப்பதில்லை என்றும் எப்படியாவது தற்சமயம் பிழைக்க வைத்து, கடல்மோகினியை அடைந்ததும் தப்பவும் உதவுவதாகவும் வாக்கு அளித்தீர்..." என்றும் கூறினான்.

சேந்தன் பதில் சொல்லும் திறனை அறவே இழந்தான். வாயை வியப்பால் பிளந்தான். அதைக் கவனித்த பலவர்மன், சேந்தன் பதிலை எதிர்பாராமலே சொன்னான்: "நான் தப்பினால் உம்மையும் அக்ஷயமுனை அழைத்துச் செல்ல வேண்டுமென்றும் ஒரு லட்சம் பொன் கொடுத்துத் தமிழகம் செல்ல ஏற்பாடு செய்ய வேண்டும் என்றும் நிபந்தனைகள் கூறினீர். சுயநலத்தை முன்னிட்டு நானும் ஒப்புக்கொண்டேன்" என்று.

இதற்குமேல் பொறுக்காத கூலவாணிகன், "உம்முடன் தப்பிச் செல்லச் சதி செய்தேன்?" என்று வினவினான்.

"ஆம்."

"இதை யாராவது நம்புவார்களா?"

"இளையபல்லவர் நம்புவார்."

"எப்படி நம்புவார்?"

"இந்தக் கடலோடும் வாழ்வு உனக்கு அடியோடு பிடிக்க வில்லையென்பது அவருக்குத் தெரியும். அதுவும் போர் என்றால் நீர் பதுங்குவதையும் அவர் பார்த்திருக்கிறார். ஊர் திரும்ப நீர் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருக்கிறீர் என்பதும் அவருக்குத் தெரியும்."

பலவர்மன் தனது மனோநிலையையும், இளையபல்லவர் தன்னைப்பற்றிச் செய்துள்ள முடிவையும் நன்றாக உணர்ந்து கொண்டு விட்டானென்பதையும் புரிந்துகொண்டான் கூலவாணிகன். தவிர, அயோக்கியனான பலவர்மன் உண்மை யைத் திரித்துக் கூறுவதில் சாமர்த்தியமுள்ளவன் என்பதையும்

அவன் அறிந்திருந்ததால், 'என்னைப்பற்றி இளையபல்லவர் தவறாக எதையும் யார் சொன்னாலும் ஒப்புக்கொள்ள மாட்டார் என்பது உண்மை. இருப்பினும் நான் மயக்க மருந்து கொடுத்தும் கொடுக்கவில்லை என்பதை நிரூபிக்கும் நிலையில் பலவர்மன் கண்விழித்துக் கிடக்கிறானே? ஆகவே இவன் சொல்வதை ஒருவேளை இளையபல்லவர் நம்பிவிட்டால் என்ன செய்வது?' என்று சிந்தித்துப் பயமும் அடைந்தான் கூலவாணிகன். அத்தனை பயத்திலும் தன் மயக்க மருந்து வேலை செய்யாத காரணம் மட்டும் அவனுக்குத் தெரியாத தால் அதைப்பற்றிப் பலவர்மனைக் கேட்கத் துவங்கி, "பலவர்மரே! இளையபல்லவர் மயக்க மருந்து தர என்னை ஏவியது உமக்கு எப்படித் தெரிந்தது?" என்று வினவினான்.

"எனக்கு மட்டுமென்ன, நீர் அரைகுறை வைத்தியரா யில்லாதிருந்தால் உமக்கும் தெரிந்திருக்கும்" என்று பதிலிறுத் தான் பலவர்மன்.

"நீர் சொல்லுவது புரியவில்லை."

"நான் தலையில் அடிபட்டு மயக்கத்திலிருந்தேன் அல்லவா?"

"ஆம்."

"எப்பொழுதும் மயக்கத்திலிருந்தேனா?"

"இல்லை, சிலசமயம் நினைப்பும் வந்தது. மாறிமாறி இருந்தது."

"நினைப்பு வந்த சமயத்தில் நீர் ஏன் பேசியிருக்கக் கூடாது...?"

"அப்படியானால் இளையபல்லவர் உத்தரவிட்டபோது!"

"நினைப்பு திரும்பியிருந்தது."

"பின் ஏன் கண்ணைத் திறக்கவில்லை?"

"தன்னைக் கிட்டத்தட்டக் கொன்றுவிடும் திட்டம் வகுக்கப்பட்டிருந்த சமயத்தில் எந்த முட்டாளாவது கண்ணைத் திறந்து தன் சொரூபத்தைக் காட்டுவானா? காட்டினால்...?"

"அங்கேயே..."

"சமாப்தி செய்திருப்பீர்" என்று கூறிய பலவர்மன் புன்முறுவல் செய்தான்.

எவ்வளவோ பேர்களைத் தயை தாட்சண்யமின்றிச் சமாப்தி செய்திருக்கும் பலவர்மன் அதைப்பற்றிப் பேசுவதும் புன்முறுவல் செய்வதும் விந்தையாய் இல்லை கூலவாணிக னுக்கு. ஆகவே மேற்கொண்டு கேட்டான் அவன், "அப்படி யானால் இளையபல்லவர் உத்தரவை முழுதும் கேட்டுக் கொண்டிருந்தீர்?" என்று.

"ஆம்" என்று சொல்லிய பலவர்மன் புன்முறுவல் செய்தான்.

"ஆகவே...?"

"நீர் இரண்டு உதவிகள் புரிந்தீர்..."

"இரண்டா!"

"ஆம் இரண்டு. ஒன்று காஞ்சனை அறையைவிட்டு வெளியே சென்றபின்பு மருந்தைக் கலக்கி என் வாயில் ஊற்றியது..."

"இரண்டாவது?"

"நான் மருந்தை விழுங்குமுன்பு பாத்திரத்தை அலம்ப அறைக் கோடிக்குச் சென்றுவிட்டது."

"அப்படியானால் நீர்..."

"மருந்தைத் தலையணையின் அடியில் துப்பிவிட்டேன். மருந்து மிகவும் கசப்பு. குடித்திருந்தால்..."

"இப்பொழுது என்னுடன் பேசமாட்டீர். அல்லது..."

"அல்லது?"

"எப்பொழுதும் யாருடனும் பேசியிருக்கமாட்டீர்."

பலவர்மன் மீண்டும் புன்முறுவல் செய்தான். "இப்பொழுது புரிகிறதா கூலவாணிகரே?" என்றும் கேட்டான்.

"என்ன புரிகிறதா?" என்றான் சேந்தன்.

"மருந்து வேலை செய்யாத காரணம்?" என்றான் பலவர்மன்.

"புரிகிறது."

"வேறு ஒன்றும் புரிந்திருக்க வேண்டும் உமக்கு."

"வேறென்ன?"

"இந்த நிலைமையை நான் திரித்தும் கூறமுடியும் என்பது."

"எப்படித் திரித்துச் சொல்வீர்கள் என்பதைத்தான் கூறி விட்டீர்களே. ஆனால் நீர் சொல்வதை இளையபல்லவர் நம்புவார் என்று எதிர்பார்க்கிறீர்களா?"

"நம்பினாலும் நம்பாவிட்டாலும் பரவாயில்லை. ஆனால் உம்மீது அவநம்பிக்கை விதையை என்னால் விதைக்க முடியும். அவநம்பிக்கை என்னும் விதையின் சக்தி அபரிமிதம். அந்த விதையைப்போல் முளைவிட்டுத் துரிதத்தில் வளரும் விதை வேறெதுவும் உலகத்தில் இல்லை."

இதைக் கேட்டதும் சிறிது சிந்தித்த கூலவாணிகன், இளையபல்லவனின் கோபத்தைவிட அவநம்பிக்கைக்கு ஆளாவதில் பெரிதும் மனத்துயரம் எய்தினான். அதை எப்படியும் தவிர்க்க வேண்டுமென்ற எண்ணத்தில் முடிவாகக் கேட்டான், "இப்பொழுது என்ன செய்ய வேண்டுமென்கிறீர்?" என்று.

"எனக்கும் ஒரு சத்தியம் செய்து கொடுக்க வேண்டும்" என்றான் பலவர்மன்.

"என்ன சத்தியம்?" என்று கேட்டான் சேந்தன்.

"இங்கு நம் இருவருக்கும் நடந்த சம்பாஷணையை..." என்று இழுத்தான் பலவர்மன்.

"யாரிடமும் சொல்லவில்லை." சட்டென்று வந்தது சேந்தன் பதில்.

"அது மட்டும் போதாது."

"வேறென்ன செய்யவேண்டும்?"

"இப்பொழுது கங்கதேவனுக்குச் சத்தியம் செய்து கொடுத்தீரல்லவா?"

"என்ன செய்து கொடுத்தேன்?"

பலவர்மன் புன்முறுவல் மெள்ள மெள்ள மேலும் விரிந்தது. "கூலவாணிகரே! நீர் கங்கதேவனிடம் மெள்ளத் தான் பேசினீர்; இருப்பினும் என் காதில் விழாத அளவுக்குப் பேசவில்லை. கங்கதேவன் மஞ்சளழகியை அடைவதில் நீர் அவனுக்கு உதவி புரிய ஒப்புக்கொண்டதையும் அவள் உடல் நிலை சீர்பட்டதும் இன்றிலிருந்து ஐந்தாவது நாள் துறைமுகத் தைக் காட்டும் காரணத்தில் துறைமுகத்தின் மேற்குக் கோடிக்கு அழைத்துவர ஒப்புக்கொண்டதையும் நன்றாகக் கேட்டேன். அதைப்பற்றிக் கையடித்துச் சத்தியம் செய்ததையும் பார்த்தேன். இதில் பல ஆபத்துக்கள் இருக்கின்றன உமக்கு" என்று குரலில் சற்றுப் பயங்கரத்தையும் காட்டினான் பலவர்மன்.

"பல ஆபத்துக்களா?" திகிலுடன் கேட்டான் சேந்தன்.

"ஆம். பல ஆபத்துக்கள். முதலாவது, நீர் கங்கதேவனிடம் காஞ்சனையை ஒப்படைக்க ஒப்புக்கொண்டது இளைய பல்லவருக்குத் தெரிந்தால் ஏற்படக்கூடிய ஆபத்து. இரண்டா வது காஞ்சனாதேவி மஞ்சளழகியல்லவென்றும் அவனை ஏமாற்ற நீங்கள் சொன்ன பொய் அது என்றும் கங்கதேவ னுக்குத் தெரிந்தால் ஏற்படக்கூடிய ஆபத்து."

"பிறகு?"

"எனக்கு மயக்கமுமில்லை மாயமுமில்லை என்று இளைய பல்லவனுக்குத் தெரிந்தால் ஏற்படக்கூடிய ஆபத்து?"

இதற்குப் பிறகு கூலவாணிகள் பேசவில்லை. பஞ்சணையை விட்டு எழுந்தான். சற்று அப்புறம் சென்று நின்றுகொண்டே கேட்டான்: "உம்மை நான் இப்பொழுது கொன்றுவிடுவதை யார் தடுக்க முடியும்?" என்று.

"நான் மருந்தைக் குடிக்கமாட்டேன்" என்றான் பலவர்மன்.

"கழுத்தை நெரித்தால்?" கூலவாணிகன் கேள்வி திடமாக எழுந்தது.

"நான் இறப்பதற்குக் காரணம் சொல்ல வேண்டும்."

"யாருக்கு?"

"இளையபல்லவருக்கு."

"சொல்கிறேன்."

"முடியாது."

"ஏன் முடியாது?"

"இதோ பாரும்" என்று பஞ்சணையின் அடியிலிருந்து ஒரு கூரிய குறுவாளை எடுத்துக் காட்டிய பலவர்மன், "என் அருகே வந்தால் ஒரு விநாடியில் உம்மைக் கொன்றுவிட என்னால் முடியும். படுக்கையில் படுத்தபடியே பலபேரைக் கொன்றிருக்கிறேன்" என்று சுட்டிக் காட்டினான்.

கூலவாணிகன் முகத்தில் கிலி பெரிதும் படர்ந்தது. தன்னைச் சனியன் திடமாகப் பிடித்துக் கொண்டிருப்பதாக எண்ணினான் சேந்தன். நீண்ட நேரம் யோசித்துவிட்டுப் பஞ்சணையருகில் வந்த சேந்தன, "சரி பலவர்மரே! சொல்லும், நான் என்ன செய்யவேண்டுமென்று. உமது கையில் நான் பலமாகச் சிக்கிக் கொண்டிருக்கிறேன்" என்றான்.

"கூலவாணிகரே, நீர் அறிவாளி" என்று சிலாகித்த பலவர்மன் தனக்கு அவன் செய்ய வேண்டிய அலுவலையும் கூறினான். கூறிவிட்டு, "உம். செய்யும் சத்தியம்" என்றான். பலவர்மன் கையிலும் அடித்து இரண்டாவது சத்தியமும் செய்தான் சேந்தன். கங்கதேவன் கோரிக்கையைவிடப் பயங்கரமாயிருந்தது பலவர்மன் கோரிக்கை. அதைக் கேட்டதாலும், செய்த இரு சத்தியங்களாலும் பிரமை பிடித்துப் பஞ்சணையில் உட்கார்ந்து கொண்டே இருந்தான் சேந்தன் நீண்ட நேரம்.




இரண்டு பரம அயோக்கியர்கள் ஒருவர்மீது ஒருவர் வஞ்சம் தீர்த்துக் கொள்ளவும், முடியுமானால் ஒருவரை யொருவர் அழித்து விடவும் திட்டமிட்டுத் தன்னை நயத்தாலும் பயத்தாலும் தம் பக்கம் இழுக்க முற்பட்டு ஆளுக்கொரு சத்தியமும் செய்யச் சொன்னதாலும், அந்தச் சத்தியத்தில் ஏதாவதொன்றைச் செய்யப் புகுந்தாலும் தன் உயிர் தனது உடலில் அரை விநாடி கூடத் தங்காது என்ற நினைப்பாலும் அடியோடு பிரமை பிடித்து நீண்ட நேரம் பஞ்சணை முகப்பில் உட்கார்ந்து விட்ட கூலவாணிகன் சேந்தன், பல நாழிகைகள் கழித்து, சோகப் பெருமூச்சொன்றை விட்டு, பஞ்சணை முகப்பைவிட்டு எழுந்திருந்து பலவர்மனை நோக்கினான். கூலவாணிகனிடம் கையடித்துச் சத்தியம் வாங்கிக் கொண்ட சில விநாடிகளுக்கெல்லாம் ஏதும் நடக்காதது போல் பரம நிம்மதியுடன் உறங்கிக் கொண் டிருந்தான் பலவர்மன். அப்படி அவன் உறங்குவதைக் கண்டதும் அவன் நெஞ்சழுத்தத்தையும் அளவிடற்கரிய கொடிய எண்ணங்களையும் நினைத்து தனக்கு ஏற்பட்டது வியப்பா திகைப்பா என்பதை நிர்ணயிக்க முடியாதபடி எண்ணங்கள் அலைமோத நின்ற கூலவாணிகன், 'இந்த இருவரில் அதிக அயோக்கியன் யார்?' என்று தன்னைத்தானே பலமுறை கேட்டுக்கொண்டு விடை காணாததாலும், மேலும் அந்த அறையில் இருக்க மனம் இடங்கொடாததாலும், சற்று தூரத்தே மஞ்சத்தில் கிடந்த தனது மேல் போர்வையை எடுத்துக் கழுத்தைச் சுற்றிப் போர்த்திக் கொண்டு அடிமேலடி எடுத்துவைத்து அந்த அறையினின்றும் வெளிப்போந்தான்.

அறையைவிட்டு வெளியே வந்ததும் அறைக் கதவை ஓசைப்படாமல் சாத்திவிட்டுப் பூனைபோல் நடந்து படிகளில்

இறங்கி, கீழே இருந்த கங்கதேவன் அறையிடம் வந்து சில விநாடிகள் நின்று உற்றுக் கேட்டான். அறையில் அரவம் ஏதுமில்லாததாலும் அறைக்கதவு சாத்தியிருந்ததாலும் கங்க தேவன் படுக்கச் சென்றுவிட்டானென்பதை உணர்ந்து அங்கிருந்து வாயிலுக்கு வந்து கடற்கரையை நோக்கி அதிவேக மாக நடந்தான். கங்கதேவன் விடுதியின் வாயிலில் காவலர் இருவர் இருந்தபோதிலும் அவர்கள் அவன் செல்வதைச் சிறிதும் சட்டை செய்யாமலிருந்தபடியால் கூலவாணிகன் வெகு சீக்கிரம் கடற்கரையை அடைந்து கடல் புறா நிறுத்தப் பட்டிருந்த இடத்துக்கருகில் வந்து சேர்ந்தான். அங்கிருந்த சர்வசகஜமான நிலை குறித்து மிகவும் வியக்கவும் செய்தான் சேந்தன்.

அலைமோதும் கரை முகப்பில் இளையபல்லவனும் காஞ்சனாதேவியும் அக்கம் பக்கத்தில் உட்கார்ந்திருந்ததையும், கண்டியத்தேவனும் அமீரும் இளையபல்லவனிடம் ஏதோ சிரித்துப் பேசிக்கொண்டிருந்ததையும், நால்வரும் கைகளில் பாத்திரங்களை வைத்துக்கொண்டு உணவருந்திக் கொண் டிருந்ததையும் கண்ட கூலவாணிகன் வியப்பு மட்டுமின்றி, தன்னைவிட்டு அவர்கள் உணவருந்துவது பற்றி ஓரளவு கோபமும் அடைந்தான். கடல்புறாவை நோக்கிப் படகொன்று போய்க்கொண்டிருந்ததையும் கவனித்துக் கரையில் சற்று தூரத்தில் இறக்கப்பட்டிருந்த இரண்டொரு பெட்டிகளையும் கவனித்த சேந்தன், நாளை முதல் காஞ்சனாதேவியும் கங்க தேவன் மாளிகையிலேயே தங்குவதற்குத் தேவையான பொருள்கள் கடல் புறாவிலிருந்து கொண்டு வரப்படுகின்றன என்பதையும் உணர்ந்து கொண்டான். கரையிலிருக்கும் நிலைமை தெரியாமல் இளையபல்லவன் சுக வாழ்வுக்கான ஏற்பாடுகளைச் செய்வதையும், அவற்றை நிறைவேற்று வதில் அமீரும் கண்டியத்தேவனும் ஊக்கம் காட்டிச் சிரித்துக் கொண்டு நிற்பதையும் கண்ட கூலவாணிகன், எரிச்சல் தாங்காமல் கோபம் தலைக்கேற அவர்களை அணுகினான்.

விளக்கு ஏதும் கரையில் இல்லாததாலும் தூரத்தே மணலில் நடப்பட்டிருந்த ஒரே ஒரு பந்தத்தின் வெளிச்சம் அரையும் குறையுமாகப் பின்பக்கத்தில் விழுந்திருந்ததாலும், கூலவாணிகன் வரவை முன்னரே புரிந்துகொள்ள முடியாத அந்த நால்வரும் கூலவாணிகன் அருகில் வந்ததும் அதிக ஆச்சரியத்தையே அடைந்தனர். அந்த நால்வரில் கூலவாணிகனை முதலில் கவனித்த இளையபல்லவன், "வாரும் வாரும், கூலவாணிகரே! ஏது இவ்வளவு தூரம்? அதுவும் இந்த வேளையில்?" என்று வினவியதோடு நில்லாமல், "அமீர்! கூலவாணிகருக்கும் சிறிது சிற்றுண்டி கொடு" என்று உத்தரவும் இட்டான்.

அமீர் சிற்றுண்டி வைக்கப்பட்டிருந்த ஒரு பெட்டியை நோக்கிச் சிறிது நகர முற்பட்டதும், "வேண்டாம் நில்லுங்கள். எனக்கு எதுவும் தேவையில்லை" என்று அதிகாரமும் வெறுப்பும் கலந்த குரலில் கூறினான் சேந்தன். அதைக்கேட்ட அமீரின் பெருவிழிகள் வியப்புடன் திரும்பின கூலவாணிகன் மீது. அந்த விழிகளைச் சாதாரண காலத்தில் சந்திக்க அஞ்சும் கூலவாணிகன் அன்று மிகுந்த தைரியத்துடன் சந்தித்ததன்றி, "அமீர், உணவு எதுவும் தேவையில்லை. சொல்வதைக் கேள்" என்று சற்று மரியாதையையும் கைவிட்டு அதட்டலாகப் பேசவும் செய்தான்.

அடுத்த விநாடி அமீரின் விழிகள் மட்டுமின்றி மூவர் விழிகளுங்கூட அவன்மீது ஆச்சரியத்துடன் பதிந்தன. கூல வாணிகனுக்குத் திடீரென ஏற்பட்ட அந்தத் துணிவுக்குக் காரணம் அந்த நால்வரில் யாருக்குமே விளங்காததால் சில விநாடிகள் யாரும் பேசவில்லை. கடைசியில் பேச முற்பட்ட இளையபல்லவன் கேட்டான் சகஜமாக, "சேந்தா! ஏன்? பசிக்கவில்லையா உனக்கு?"

குரலில் இகழ்ச்சியும் வெறுப்பும் கலந்து ஒலிக்கச் சொன்னான் கூலவாணிகன், "இல்லை, பசிக்கவில்லை" என்று.

"கங்கதேவன் மாளிகையில் உணவு பலமோ?" என்று வினவினான் இளையபல்லவன் மீண்டும் கூலவாணிகனின்

வெறுப்பை உடைக்கவும் அவனை சகஜநிலைக்குக் கொண்டு வரவும்.

ஆனால் வணிகன் அப்பொழுதும் மசியவில்லை. "ஆம். நிரம்ப அதிகம்" என்றான் இகழ்ச்சி முன்னிலும் அதிகமாக.

இளையபல்லவன் விழிகள் மட்டுமின்றி, மற்றவர் கண்களும் அவனை ஆராய்ந்தன. மற்றவர்கள் சேந்தனை ஆராய்ந்தார்களே தவிர ஏதும் பேசவில்லை. இளையபல்லவனே தொடர்ந்து கேட்டான், "ஏன் சேந்தா! கங்கதேவன் விசாரணையும் உபசரிப்பும் அதிகம் போலிருக்கிறது," என்று.

அதுவரை நின்றுகொண்டிருந்த கூலவாணிகன் யாரையும் லட்சியம் செய்யாமல் நடந்து சென்று இளையபல்லவனுக் கெதிரில் அநாயாசமாக உட்கார்ந்துகொண்டு, "மிகவும் அதிகம். மிகவும் அதிகம்" என்று கூறினான் எரிச்சலுடன்.

"அப்படியா! மிகவும் மகிழ்ச்சி" என்று கூறிய இளைய பல்லவன், கூலவாணிகன் எரிச்சலை எண்ணி எண்ணி குறுநகை கொண்டான்.

"நீங்கள் மகிழ்ச்சியடைய வேண்டிய விஷயங்கள் நிரம்ப இருக்கின்றன" என்று கூறினான் கூலவாணிகன் அடுத்தபடி.

"நிரம்பவா?" இளையபல்லவன் சிறிது நகைச்சுவையைக் காட்டினான்.

"ஆம் இளையபல்லவரே! இதுவரை கங்கதேவன் உமக்கு மட்டுந்தான் நண்பனென்று நினைத்துக்கொண்டிருந்தீர். இப்பொழுது உம்மைவிட அவன் எனக்குத்தான் நண்பன்" என்ற சேந்தனும் விஷமத்தைக் காட்டினான்.

இதுவரை வாளாவிருந்த அமீரும் சம்பாஷணையில் கலந்துகொண்டு, "இனி நடக்கவிருக்கும் கடற்போர்களில் உனது நட்பைப் பெற விரும்புகிறானோ கங்கதேவன்?" என்றான் இகழ்ச்சியுடன்.

"போர்களில் பலவகை உண்டு அமீர்," என்று கூலவாணிகனும் தன் சாமர்த்தியத்தைக் காட்டியதன்றி, "அவற்றில்.

கடற்போர் ஒன்றுதான் உனக்குத் தெரியும்?" என்று குத்தலாகக் கூறினான்.

"வேறு போர்களில் உமக்குப் பரிச்சயம் போலிருக்கிறது?" என்று அமீர் கேட்டான் கோபத்துடன்.

"ஆம்."

"எந்தப் போரோ அது?"

"கடற்போரைவிடக் கடுமையானது."

"பெயர் இல்லையா அதற்கு?"

"இருக்கிறது. காதல் போர்."

சேந்தன் இந்தக் கடைசிப் பகுதியை விஷமம் மிகவும் ஒலித்த குரலில் கூறினான். அதுவரை அவ்விருவர் சம்பாஷணையைச் சுவைத்துக் கேட்டுக்கொண்டே கையிலிருந்த தட்டின் உணவையும் நாவினால் சுவைத்துக் கொண்டிருந்த இளையபல்லவன் உண்பதைச் சட்டென்று நிறுத்தித் தட்டையும் கீழே வைத்துவிட்டுக் கூலவாணிகனை நோக்கினான்.

"காதல் போரா!" என்று கவலையுடன் வினவவும் செய்தான்.

"ஆம் இளையபல்லவரே!" என்ற வணிகனும் இளைய பல்லவனை அர்த்த புஷ்டியுடன் நோக்கினான்.

தானில்லாத சமயத்தில் கங்கதேவன் மாளிகையில் ஏதோ நடந்திருக்கிறதென்பதைப் புரிந்துகொண்டான் இளைய பல்லவன், கூலவாணிகன் பார்த்த பார்வையிலிருந்து. காஞ்சனாதேவிக்கு அது புரியாததால் அவள் மட்டும் கேட்டாள் வேடிக்கையாக, "கூலவாணிகர் காதல் போரிலும் ஈடுபடுகிறாரா?" என்று.

"இஷ்டப்பட்டு ஈடுபடவில்லை," என்று கூறினான் கூலவாணிகன்.

"வலுவில் வருகிறதாக்கும்?" என்று கூறிய காஞ்சனாதேவி புன்முறுவல் கொண்டாள்.

"ஆம்."

"அப்படியானால் கூலவாணிகனுக்கு அதிர்ஷ்டந்தான்."

"அதிர்ஷ்டத்தைச் சொல்லத் தரமில்லை."

"பெண் ரொம்ப அழகோ?"

"அழகிருப்பதனால்தான் இத்தனை தொல்லையும்."

"காதலைத் தொல்லை என்று சொல்லலாமா கூல வாணிகரே!"

"முழுத்தொல்லை. காதலிப்பவர்களுக்கும் தொல்லை, சுற்றிலும் இருப்பவர்களுக்கும் தொல்லை."

"இந்தக் காதல் போரில் நீர் வெற்றியடைந்தால் மணம் கிடைக்குமே கூலவாணிகரே!"

"வெற்றியடைந்தால் சரிதான். இல்லாவிட்டால் ஓர் எழுத்து சேரும்."

"ஓர் எழுத்தா?"

"ஆம் மணத்துக்கும் மரணத்துக்கும் ஓர் எழுத்துத்தான் வித்தியாசம்."

இப்படி குதர்க்கமாகக் கூலவாணிகன் பதில் சொல்லிக் கொண்டு வந்ததால் சற்றே சினமடைந்த காஞ்சனாதேவி, "அப்படி உமக்கு மரணத்தை விளைவிக்கக்கூடிய அந்த அழகி யார்? எங்கிருக்கிறாள்?" என்று வினவினாள்.

"எதிரேதான் இருக்கிறார்கள்," என்று பணிவுடன் பதில் சொல்லிய கூலவாணிகன் தன் கையைக் காஞ்சனாதேவியை நோக்கி நீட்டியதும் அமீரும் கண்டியத்தேவனும் அவனை சுடுநோக்கு நோக்கினார்கள். கூலவாணிகன் பேச்சில் ஏதோ மர்மமிருப்பதை அறிந்துகொண்ட இளையபல்லவன் அவனை நோக்கித் திட்டமாகக் கேட்டான், "சேந்தா, மாளிகையில் என்ன நடந்தது?" என்று.

அதற்குப் பதில் சொன்ன கூலவாணிகன் குரல் அடியோடு மாறியது. மேலுக்கு அவன் வழக்கம்போல் வேடிக்கையாகப் பேசினாலும் அவன் இதயத்தில் வேதனை

இருப்பதை மற்ற நால்வரும் சில விநாடிகளில் புரிந்து கொண்டார்கள். "காதல் போரின் முதல் கட்டம் நடந்தது இளையபல்லவரே" என்றான் சேந்தன்.

"விளங்கச் சொல்" என்று இளையபல்லவன் உத்தர விட்டான்.

"நீங்கள் காஞ்சனாதேவியுடன் இங்கு வந்து விட்டீர்களா?"

"ஆம்."

"நீங்கள் எதிர்பார்த்தபடி சிறிது நேரத்திற்கெல்லாம் கங்கதேவன் வந்து கதவைத் தட்டினான் காஞ்சனாதேவியைச் சந்திக்க..."

"உன்னைச் சந்தித்தான் நமது திட்டப்படி."

"ஆம்."

"பிறகு?"

"நீங்கள் சொல்லச் சொன்ன பொய்களை ஒன்று விடாமல் சொன்னேன்."

"நம்பினானா?"

"நான் பொய் சொல்லி நம்பாத மனிதன் இனிமேல் பிறந்தால்தானுண்டு."

"சரி, பொய் சொன்னாய். பிறகு?"

"உங்களுக்குத் தெரியாதா இளையபல்லவரே, உலகத்தில் சத்தியமும் அசத்தியமும் அக்கம் பக்கத்தில் இருக்கிறது என்று."

இளையபல்லவன் சற்று யோசித்துவிட்டு, "ஆம் சேந்தா! அதற்கென்ன?" என்று கேட்டான்.

சேந்தன் சொன்னான், "இளையபல்லவரே! உங்களை விட கங்கதேவன் நல்லவன்" என்று.

அமீரின் பெருவிழிகள் சேந்தனை நோக்கிப் பயங்கரமாக உருண்டன. அமீரைக் கையமர்த்திய இளையபல்லவன், "என்னைவிட நல்லவனா கங்கதேவன்?" என்று வினவினான்.

"ஆம். நீங்கள் அசத்தியம் பேசச் சொன்னீர்கள். அவன் சத்தியம் பேசச் சொன்னான். உண்மையைச் சொல்லா விட்டால் ஊட்டியை நெரித்துக் கொன்றுவிடும் பார்வை அவனிடமிருந்தது. அப்படியும் நீங்கள் சொன்ன அசத்திய வார்த்தைகளையே சொன்னேன். ஆனால் கடைசியில் அவன் சத்தியத்தையே விரும்பினான்" என்றான் சேந்தன்.

"அப்படியா!"

"ஆம் இளையபல்லவரே! சத்தியம் செய்யும்படி வற்புறுத்திக் கையிலடிக்கவும் சொன்னான்."

"அப்படியே சத்தியம் செய்தீரா?"

"செய்தேன்."

"என்ன சத்தியம் செய்தீர்?"

"இன்றிலிருந்து ஐந்தாவது நாள் மஞ்சளழகியென்று அவன் நினைத்துக் கொண்டிருக்கும் காஞ்சனாதேவியைத் துறைமுகத்தின் மேற்கோடிக்கு யாருமில்லாத இடத்துக்கு அழைத்து வருவதாக..." இந்த வாசகத்தை அவன் முடிக்க வில்லை. அதுவரை பொறுமையாயிருந்த அமீர் அவனை அப்படியே தூக்கி நிறுத்தினான். காஞ்சனாதேவியும் உணவுத் தட்டைக் கீழே எறிந்து கனல் கக்கும் கண்களுடன் எழுந் திருந்து, "கூலவாணிகரே! என்ன துணிச்சல் உமக்கு இதைக் கூற?" என்று சத்தமும் போட்டாள்.

இளையபல்லவன் மட்டும் உணர்ச்சிகளைக் கைவிட வில்லை. அமீரை நோக்கி, "விடு சேந்தனை அமீர்!" என்று கூறிவிட்டு விடுதலையடைந்த கூலவாணிகனை நோக்கிக் கேட்டான், "பிறகு என்ன நடந்தது?" என்று.

"இதைச் செய்தால் நிரம்பப் பணமும் நகைகளும் தருவதாகச் சொல்லிவிட்டு கங்கதேவன் போய்விட்டான். அடுத்தவன் விழித்தான். என்னை அழைத்தான்" என்றான் கூலவாணிகன்.

"யாரது?"

"பலவர்மன்."

"பலவர்மனா?" இளையபல்லவன் குரலில் ஆச்சரியம் மிதமிஞ்சி ஒலித்தது.

"ஆம் இளையபல்லவரே. நாங்களிருவர் பேசுவதையும் அவன் கேட்டுக்கொண்டே படுத்திருந்தான். அவன் மயக்க மெல்லாம் வெறும் பாசாங்கு" என்று கூறி அவன் தன்னை ஏமாற்றிய முறைகளையும் கூலவாணிகன் விவரித்தான்.

மற்ற நால்வரும் அந்த விவரங்களை வியப்புடன் கேட்டுக் கொண்டிருந்தார்கள். முடிவில் கூலவாணிகன் சொன்னான், "பலவர்மனும் சத்தியம் செய்யச் சொன்னான்" என்று.

"என்ன சத்தியம்?" இளையபல்லவன் குரல் கடுமையுடன் ஒலித்தது.

"இன்னும் இரண்டொரு நாட்களுக்குள் கங்கதேவன் உணவில் விஷத்தைக் கலக்கும்படி கேட்டான் பலவர்மன்" என்றான் கூலவாணிகன் சாதாரணமாக.

இளையபல்லவன் குரல் கடுமையாகியது. "அத்தகைய கடும் விஷம் இருக்கிறதா உன்னிடம்!" என்று வினவினான் அவன்.

"இருக்கிறது."

"நீ என்ன கொலையாளியா, வைத்தியனா?"

"சில சந்தர்ப்பங்களில் இரண்டு தொழிலுக்கும் அதிக வித்தியாசம் இருப்பதில்லை. இருப்பினும் எனக்கு விஷம் தேவையில்லை. பலவர்மனே கொடுப்பதாகச் சொல்லி யிருக்கிறான்."

இதைக்கேட்ட இளையபல்லவன்கூட அசந்து விட்டான். சிறிது நேரத்திற்குப் பின்பு கேட்டான்: "இதற்கும் சத்தியம் செய்தீரா?"

"ஆம்" என்றான் கூலவாணிகன்.

"இரண்டு சத்தியங்களில் எதை நிறைவேற்றப் போகிறீர்?"

"இரண்டையும் நிறைவேற்ற அவசியமில்லை."

"ஏன்?"

"இரண்டு சத்தியங்களும் ஒன்றையொன்று முறித்து விட்டன. ஒரு சத்தியத்தால் கங்கதேவன் வாழ்வின் வளத்தைக் கோரினான். இன்னொரு சத்தியத்தால் அதை அழிக்கக் கோரினான் பலவர்மன். இனி எனக்குப் பொறுப்பில்லை" என்று ஆசுவாசப் பெருமூச்சு விட்டான் கூலவாணிகன்.

நீண்ட நேரம் அந்த ஐவரில் யாரும் பேசவில்லை. கரையில் தாங்கள் எதிர்பார்த்ததைவிட அதிக ஆபத்து சூழ்வதைப் புரிந்து கொண்டதால் அவர்கள் அனைவர் முகத்திலும் கவலை சூழ்ந்து நின்றது. இளையபல்லவன் தீவிர யோசனையில் ஆழ்ந்தான். இருப்பிடத்தைவிட்டு எழுந்தான். அலையோரத்தில் இருமுறை அப்படியும் இப்படியும் நடந்தான். பிறகு ஏதோ முடிவுக்கு வந்து காஞ்சனாதேவிக்கு அருகில் வந்து நின்று, "காஞ்சனா! புறப்படு" என்றான்.

"எதற்கு?" என்று வினவினாள் காஞ்சனாதேவி.

இளையபல்லவன் பதில் சொன்னான். அந்தப் பதில் அமீரையும் கண்டியத்தேவனையும் திகைக்க வைத்தது. சேந்தன் தன் காதுகளை நம்பாமல் வாயைப் பிளந்தான். காஞ்சனாதேவியின் முகம் அச்சத்தால் வியர்த்தது. "இது முறையல்ல" என்று கூவினாள்.

இளையபல்லவன் பதில் சொல்லவில்லை வெளிப்படை யாக. கடல்புறாவை நோக்கினான். கங்கதேவன் மரக்கலங் களையும் நோக்கினான். "வல்லூறை நோக்கிப் புறா பறக்க வேண்டியதுதான். வேறு வழியில்லை" என்றான் முடிவாக.

அந்த முடிவு மேலும் மேலும் மற்றவர்களைத் திகைக்க வைத்தது. அடுத்த விநாடி காஞ்சனாதேவி அங்கு நிற்க வில்லை. வெகுவேகமாக ஓடினாள் கடற்கோரைகளை நோக்கி. "பிடி அவளை" என்ற இளையபல்லவன் குரல் மிக உக்கிரமாக ஒலித்தது.

அத்தியாயம் 23

# காலைப் பிடிக்கும் சமயம்

காஞ்சனாதேவியைப் பற்றி கங்கதேவனும், கங்க தேவனைப் பற்றிப் பலவர்மனும் தீட்டியிருந்த திட்டங்களைச் சேந்தான் விவரிக்கக் கேட்டதும் தீவிர சிந்தனையிலிறங்கிய இளையபல்லவனை நோக்கி நின்ற மற்ற நால்வரும் அவன் காஞ்சனாதேவியைப் புறப்படச் சொன்னதற்கான காரணத்தை உணர்ந்ததும் பெரிதும் திகைத்தே போனார் களென்றால் அதைப்பற்றி வியப்படைய நியாயம் ஏதுமே யில்லை. "இது முறை அல்ல" என்று காஞ்சனாதேவி ஆத்திரப் பட்டுக் கூவியது மிகவும் சரியே என்பதை மற்ற மூவர் முகங் களும் தெள்ளென எடுத்து விளக்கவே செய்தன. இளைய பல்லவன் அத்தகைய மதிகேடான முறைகேடான முடிவைச் சொல்லுவான் என்று அவர்கள் எதிர்பார்க்காததால் அவர்கள் முகத்தில் சினத்தின் சாயையும் தெளிவாகத் தெரிந்தது. காஞ்சனாதேவி எங்கே புறப்படவேண்டும் என்று கேட்டதும், "கங்கதேவனிடம்" என்ற இளையபல்லவன் பதில் புண்ணில் இடப்பட்ட கோலென அந்த நால்வர் மனத்தையும் புண்ணாக்கவே செய்தது. இளையபல்லவன் உண்மையாகத் தான் காமுகனான கங்கதேவனிடம் இரவு ஏறிய அந்தத் தருணத்தில் காஞ்சனாதேவியை அழைத்துச்செல்ல தீர்மானித் திருக்கிறானா என்று அவர்கள் சற்றுச் சந்தேகித்த சமயத்தில் தான் இளையபல்லவன் கடல் புறாவையும் பார்த்து, கங்க தேவன் போர்க்கலங்களையும் பார்த்து, "புறா வல்லூறை நோக்கிப் பறக்கவேண்டியது அவசியம்தான்" என்று கூறினான். எண்ணெய் விட்ட தீயெனக் காஞ்சனாவின் இதயம் எரிந்தது.

அதன் விளைவாகவே அவள் கடற்கோரைகளை நோக்கி ஓடினாள். "பிடி அவளை" என்று இளையபல்லவன் கூறியும்

மற்றவர்கள் கேட்காதிருக்கவே இளையபல்லவனே எழுந் திருந்து ஓடி அவளைப் பிடித்திழுத்துக் கொண்டு வந்து பழைய இடத்தில் தள்ளினான்.

அந்த முரட்டுச் செயலால் மற்ற மூவரும் பிரமை பிடித்து நின்றார்கள். அமீரின் கோபம் தலைக்கு ஏறிக் கொண் டிருந்ததை அவன் திணறியதிலிருந்தும் பெருமூச்சு விட்டதி லிருந்தும் கடைக்கண்ணால் கவனித்த இளையபல்லவன் அதைப் பற்றிச் சிறிதும் லட்சியம் செய்யாமலே உக்கிரத்துடன் கூறினான், "இங்கு நான் தலைவன். என் உத்தரவை மீறுபவர் களைத் தூக்கிலிடவும் எனக்கு அதிகாரம் உண்டு" என்று.

இளையபல்லவன் பிடித்திழுத்து வந்து தள்ளிய வேகத்தில் மணலில் புரண்டதால் சற்றே விலகியும், கடலோரத்து ஈர மணல் ஒட்டியும் கிடந்த ஆடையுடன் சமாளித்து இடக் கையை மணலில் ஊன்றி, சாய்ந்து உட்கார்ந்து கொண்ட காஞ்சனாதேவி தன் அஞ்சன விழிகளில் தீப்பறக்க இளைய பல்லவனை நோக்கினாள். "காக்கத்தான் தலைவன் வேண்டும். அழித்துக் கொள்ள அவரவர்களுக்கே வழி தெரியும்" என்றாள் சீற்றம் பரிபூரணமாகக் குரலில் தொனிக்க.

இளையபல்லவன் கண்கள் கடுமையுடன் அவளையும் நோக்கி அவளுக்குப் பின்னால் காவலர் போல் நின்ற கண்டியத்தேவன், அமீர், சேந்தன் ஆகிய மூவரையும் அளவெடுத்தன. கடைசியில் காஞ்சனாதேவியின்மீது நிலைத்த கண்களில் கருணையில்லையே தவிர, கடுமை பூர்த்தியாக இருந்தது. அவன் வாயிலிருந்து உதிர்ந்த சொற்களும் கடுமை யாகவே இருந்தன. "காஞ்சனா! உன்னை அழித்துக் கொள்ளத் தான் நீ கடற்கோரைகளை நோக்கி ஓடினாய். அவை கால்களில் சிக்கி இருந்தால் என்ன ஆகி இருக்கும்!" என்றான் இளையபல்லவன்.

"கால்களில் சிக்கியிருக்கும்" என்றாள் காஞ்சனாதேவியும் அலட்சியத்துடனும் கோபத்துடனும்.

"அது மட்டுமல்ல, கடற்கோரைகள் நிலத்தில் விளையும் நாட்டுக் கோரைகள் போலல்ல. கடல் மீன்களைப் போல்

சதா உயிருடன் துடிப்பவை. அவற்றில் பல மாமிசப் பட்சிணிகள், மீனோ எதுவோ அகப்பட்டாலும் அப்படியே வளைந்து அவற்றை இறுக்கிக் கொன்று உறிஞ்சிவிடக் கூடியவை. இப்படிப் பல கடல் தாவரங்கள் உண்டு. அவற்றில் இத்தகைய கோரைகளும் ஒரு வகை. அதனால்தான் அவற்றி லிருந்து சிறிது தள்ளிக் கடல் புறாவை நிறுத்தச் சொன்னேன், மாலுமிகள் நீரில் இறங்கும்போது கோரைகள் வசம் சிக்கா திருக்க. அந்தக் கோரைகளை நோக்கி நீ ஓடுகிறாய்! அறிவு இருக்கிறதா உனக்கு?" என்று இளையபல்லவன் மிகுந்த சீற்றத்துடன் பேசினான்.

"கங்கதேவனிடம் என்னை அழைத்துச் செல்ல முடிவு செய்துள்ள உங்கள் அறிவைவிட என் அறிவு குறைந்ததல்ல." காஞ்சனாதேவியின் குரலில் மிகுந்த வெறுப்பு ஒலித்தது.

இளையபல்லவன் அதற்குப் பதில் சொல்லாமலே வேறு விதத்தில் கேள்வி கேட்டான், "கோரையில் சிக்கியிருந்தால் உன் கதி?" என்று.

"உயிர் போயிருக்கும்" என்றாள் காஞ்சனாதேவி.

"தெரிந்துமா அந்த முயற்சியில் இறங்கினாய்!"

"ஆம்."

"உயிரை அத்தனை அற்பமாக மதிக்கிறாயா?"

"சில சமயங்களில் உயிரை வைத்திருப்பதைவிட உயிரைத் துறப்பது சிறந்தது."

"உயிரை விட முடிவு செய்ய நீ யார்?"

"என் உயிரை என்ன செய்வது என்பதைக்கூடத் தீர்மானிக்க எனக்கு உரிமையில்லையா?"

"இல்லை."

"வேறு யாருக்கு அந்த உரிமை?"

"சாதாரண சமயங்களில் கடவுளுக்கு. இந்தச் சமயத்தில் எனக்கு." இதை நிறுத்தியும் திடமாகவும் சொன்ன இளைய பல்லவனை மற்றவர்கள் வியப்புடன் பார்த்தார்கள். இளைய

பல்லவன் மற்றவர்களைச் சில விநாடிகள் வெறித்துப் பார்த்துக்கொண்டே நின்றான். பிறகு முடிவு திட்டமாகத் தொனித்த உறுதியான குரலில் பேசத் தொடங்கினான், "கடாரத்தின் இளவரசியே! கேள், நான் சொன்னதைக் கேட்டதும் உணர்ச்சியின் மிகுதியால் உயிரை மாய்த்துக் கொள்ளக் கடற்கோரைகளை நோக்கி ஓடினாய். அப்படி உயிரை மாய்த்துக்கொள்ள நாகரீக நாடுகளின் சட்ட திட்டங்கள் இடங்கொடுக்கவில்லை. தற்கொலை சட்ட விரோதமாக ராஜ்யங்களாலும், பெரும் பாவமாகச் சாத்திரங் களாலும் கருதப்படுகிறது. அதற்குக் காரணம் உயிரை அழிக்க மனிதனுக்குள்ள சக்தி உயிரை மீட்க அவனுக்கில்லாமைதான். அத்தகைய உயிரைப் போக்கும் சக்தியும் உரிமையும் அதைக் கொடுக்கும் ஆண்டவனுக்குத்தான் உண்டு..." என்று மேலே ஏதோ பேசப்போன இளையபல்லவனை இடைமறித்த காஞ்சனாதேவி, "ஆண்டவனுக்கு அடுத்தபடி அந்த உரிமை உங்களுக்குத்தான் உண்டுபோல் இருக்கிறது?" என்று சீறினாள்.

இளையபல்லவன் ஈட்டி விழிகள் காஞ்சனாதேவியின் காந்த விழிகளைச் சலனமின்றிச் சந்தித்தன. பதிலும் சலன மின்றியும் திடமாகவும் வந்தது. "ஆம்! இந்தப் பணி சம்பந்தப் பட்டவரையில், இந்த மரக்கலங்களுக்கு நான் தலைவனா யிருக்கும் வரையில், என் கீழ் அலுவல் புரிபவர்கள், என் பாதுகாப்பில் இருப்பவர்கள், இவர்களில் யார் உயிரைப் பலி கொடுக்கலாம், யார் உயிரைப் பலி கொடுக்கக் கூடாது என்பதை நிர்ணயிக்கும் உரிமை கடல்புறாவின் தலைவனான எனக்குத்தான் உண்டு. தலைமைப் பதவி அந்த உரிமையை எனக்களிக்கிறது" என்ற இளையபல்லவன் காஞ்சனாதேவி ஒருக்களித்த இடத்திற்குப் பின்னால் மிகுந்த கலக்கத்துடன் நின்ற மற்ற மூவரையும் நோக்கி, "நான் உங்கள் தலைவனா யிருக்கிற வரையில் எந்த விஷயத்தில் தலையிடவும் உங்களுக்கு உரிமையில்லை. முடியுமானால் ஓர் உயிரைக் கூடத் தியாகம் செய்யும் நிலையில் நான் இல்லை. கடல் புறாவிலுள்ள மாலுமிகள் மொத்தம் இருநூறு பேர்தான்

நம்மவர். பிடிபட்டுள்ள இரு மரக்கலங்கள், அதோ நின்றிருக்கும் கங்கதேவன் மரக்கலங்கள் நான்கு, இவற்றை நடத்தும் மாலுமிகள் அனைவரும் கலிங்கத்தவர். அந்த மாலுமி களின் தொகைகளைக் கூட்டினால் மொத்தம் ஆயிரத் தைந்நூறு பேர்களுக்குக் குறைவில்லை. இந்த நிலையில் நம்மவர்களில் ஒருவர் உயிரைத் தியாகம் செய்தாலும், ஒருவர் மரணத்தால் நமது பலவீனம் வெளியானாலும் அனைவரை யும் அழித்துவிட கங்கதேவனுக்கு அரை விநாடிகூட ஆகாது. தவிர இங்கிருந்த தமிழ் சமூகம் என்ன ஆயிற்று என்பதும் தெரியவில்லை. அதோ தூரத்தே தெரியும் நூறு வீடுகளிலிருந்த தமிழர் எங்கே? அனைவரும் கொல்லப்பட்டார்களா? எஞ்சிய வர்கள் உண்டா? இந்த விவரமும் நமக்குத் தெரியாது. தற்சமயம் நாமறிந்தது கங்கதேவன் பலம் நம் பலத்தைவிட ஆறு மடங்கிற்கு மேல் அதிகம் என்பதொன்றுதான்" என்ற இளையபல்லவன் ஆகாயத்தை நோக்கினான்.

இந்த விவரங்களை எதற்காக எடுத்துரைக்கிறான் இளைய பல்லவன் என்பதைத் திட்டமாகத் தெரிந்துகொள்ள முடியாததால் பேசாமலே நின்றார்கள் மற்றவர்கள். இளைய பல்லவனே அந்தக் காரணத்தை விவரித்தான். "ஆகவே, குறைந்த தொகையுள்ள நாம் ஒவ்வொருவரும் நமது உயிரைக் காப்பாற்றிக்கொள்ள முயலவேண்டும். எதிரியை ஆராயும் பொறுப்பை எனக்கு விட்டுவிடுங்கள். சொல்கிறபடி மட்டும் செய்யுங்கள்" என்றான்.

அதுவரை வாளாவிருந்த காஞ்சனாதேவி, "நீங்கள் சொல்வது எதுவாயிருந்தாலும் செய்யத்தான் வேண்டுமா?" என்று கேட்டாள் வெறுப்பும் கோபமும் கலந்த குரலில்.

"ஆம்."

"எதுவாயிருந்தாலுமா?"

"ஆம்."

"என் கண்ணியத்துக்கு... கௌரவத்துக்கு..." விக்கினாள் காஞ்சனாதேவி.

"அதைக் காப்பது என் கடமையென்று உனக்குத் தெரியும். என் உத்தரவு, போக்கு, உனக்கு விபரீதமாகத் தோன்றலாம். விபரீதத்தைச் சரியாக்கும் முறை எனக்குத் தெரியும்" என்ற இளையபல்லவன் மேலும் சொன்னான்: "காஞ்சனா! தமிழகத்தில் பிறந்தவனுக்குப் பெண்கள் கற்பைவிடச் சிறந்தது எதுவுமில்லை. அதைக் காப்பதில் தமிழனுக்குள்ள சிரத்தை உலகத்தில் வேறு யாருக்கும் கிடையாது. கற்புக்கரசி ஒருத்தியின் சிலம்பினால் ஒரு மாநகரம் அழிந்ததைத் தமிழர்கள் கண்டித்துக் கூறவில்லை, பாராட்டினார்கள். அந்த மரபில் தோன்றிய நான் காரண மின்றி உன்னை கங்கதேவனிடம் அழைத்துச் செல்லவில்லை. தவிர காஞ்சனாதேவி..." இந்த இடத்தில் சற்றுப் பேச்சை நிறுத்திய இளையபல்லவனை நோக்கிய காஞ்சனாதேவி, "தவிர?" என்று வினவினாள்.

"பெண்கள் கற்பு அவர்கள் கையில்தானிருக்கிறது. அதைக் காப்பதும் அழிப்பதும் அவர்களைப் பொறுத்தது" என்றான்.

மேற்கொண்டு காஞ்சனாதேவி எதுவும் பேசவில்லை. இளையபல்லவனே சொன்னான்: "காஞ்சனாதேவி, சிலரை வாளால் வெல்லலாம், சிலரை வஞ்சகத்தால் வெல்லலாம். கங்கதேவனை இரண்டினாலும் வென்றால்தான் முடியும். அதற்கு வழி வகுப்பதை எனக்கு விட்டுவிடு" என்று. அத்துடன் மெள்ளக் கையைப் பிடித்து அவளை எழுப்பவும் செய்தான். அவள் எழுந்திருந்ததும் கண்டியத்தேவனையும் அமீரையும் நோக்கி, "தேவரே! அமீர்! காஞ்சனாதேவி இன்று முதல் கங்கதேவனிடம் நட்புரிமை பாராட்டுவது போல் நடிப்பாள். இன்று இவர்களை அறிமுகப்படுத்துகிறேன். இன்று காவலுக்கு நானிருக்கிறேன். நாளை முதல் அமீர் காஞ்சனா தேவியை விட்டு அகல வேண்டாம். அவசியமானால் கங்க தேவனைக் கொன்றும் விடலாம்" என்ற இளையபல்லவன் தேவரை மட்டும் குறிப்பாக நோக்கி, "தேவரே! நாம் கைப்பற்றி யிருக்கும் இரண்டு மரக்கலங்களையும் நான்கு நாட்களுக்குள் எத்தனை பழுது பார்க்க முடியுமோ அத்தனை பழுது பார்த்து

விடுங்கள். இன்றிலிருந்து ஐந்தாம் நாள் அந்த மரக்கலங்கள் கடலோடும். அதற்குண்டான ஏற்பாடுகளை நாளை தொடங்குகிறேன்" என்றான். பிறகு சேந்தனை நோக்கிச் சொன்னான், "சேந்தா! நீ கோழை என்பதை கங்கதேவன் அறிவான்" என்று.

"நானா!" சேந்தன் குரல் கோபத்துடன் ஒலித்தது.

"ஆம். சேந்தா! அதனால் தவறில்லை. கோழையா யிருப்பதிலும் அனுகூலமிருக்கிறது. கங்கதேவன் நீ கோழை யென்று நம்புவதால் உன்மீது அதிகமாகக் கண் வைக்க மாட்டான். ஆகவே நாளை நீ அங்கே செல்," என்று தூர இருந்த விடுதிகளின் கூட்டத்தைக் காட்டினான் இளைய பல்லவன்.

"தமிழர் விடுதிகளுக்கா!"

"ஆம்."

"அங்கு யாரிருக்கிறார்கள்? எத்தனை பேர்? எத்தனை பேர் கொல்லப்பட்டார்கள்? எத்தனை பேர் உயிருடன் இருக்கிறார்கள்? அறிந்து வா."

"கங்கதேவனின் மாலுமிகள் தடுத்தால்?"

"தடுக்காதபடி செய்துகொள்."

"எப்படி முடியும் அது?"

"நாளைக் காலையில் கங்கதேவனைச் சந்தித்து அவனிடம் செய்த சத்தியத்தைக் கண்டிப்பாக நிறைவேற்றுவதாக உறுதி கூறு."

"காஞ்சனாதேவியை ஐந்தாவது நாள்..." மென்று விழுங்கினான் சேந்தன்.

"மேற்குக் கோடிக்கு அழைத்து வருவதாகச் சொல்லி விடு. அதைக் காரணம் காட்டி அவன் பொக்கிஷத்தையும் பார்வை இடு. நாளை முதல் அவனுடன் உலாவு. அவன் மாலுமிகள் நீ கங்கதேவன் கையாளென்று நம்பட்டும்," என்றான் இளைய பல்லவன்.

"நமது மாலுமிகள் என்னைச் சேவலமாக நினைத்தால்?"

"மிக மிக நல்லது."

"இளையபல்லவரே!" என்று ஏதோ சொல்ல முற்பட்ட சேந்தனை நோக்கி, "என்ன சேந்தா!" என்று வினவினான் கடல்புறாவின் தலைவன்.

"பலவர்மனுக்கு நான் செய்த சத்தியம்?"

"அதையும் நிறைவேற்று."

இந்தப் பதிலைக் கேட்ட சேந்தன் வாயைப் பிளந்தான். "என்ன சொல்கிறீர்கள் இளையபல்லவரே?" என்று கூவினான்.

"விஷத்தை வாங்கிக் கொள்" என்றான் இளையபல்லவன்.

"வாங்கிக் கொண்டு?"

"என்னிடம் கொடுத்துவிடு."

"அடுத்த நாள் கங்கதேவன் சாகாவிட்டால்?"

"பலவர்மன் உன்னை ஏதும் செய்யாமல் நான் பார்த்துக் கொள்கிறேன்," என்ற இளையபல்லவன், "வா, காஞ்சனா!" என்று கூறி அவளைக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு கங்கதேவன் மாளிகையை நோக்கி நடந்தான்.

காஞ்சனாதேவி பதிலேதும் சொல்லாமல் அவன் பக்கலில் நடந்தாள். அவள் மனம் வருத்தத்தில் தோய்ந் திருந்தது. அவன் ஒவ்வொருவருக்கும் இட்ட உத்தரவைக் கேட்டதும் ஏதோ பெரும் திட்டத்தை இளையபல்லவன் வகுத்திருக்கிறானென்பதையும் அதில் தாங்கள் வெறும் சதுரங்கக் காய்கள் என்பதையும் புரிந்துகொண்டாள் அவள். அவன் சொன்னதைத் தவறாகப் புரிந்துகொண்டு கோரை களை நோக்கி ஓடிய தன் அவசரத்தைப் பெரிதும் நொந்து கொண்ட கடாரத்துக் கட்டழகி அவனைச் சற்று நெருங்கியே நடந்தாள். அலையோரத்திலிருந்து சிறிது தூரம் வந்து விட்டதால் அந்த இருவரையும் வானத்தின் மெல்லிய

இயற்கையொலி தவிர மற்றபடி இருளே சூழ்ந்து நின்றது. இரவு ஏறியதால் அலைகளின் ஓசை பெரிதாக எழுந்து யார் எது பேசினாலும் கேட்க முடியாதபடி அடித்துக் கொண்டிருந்தது. கரையோரத்திலிருந்து சற்றுத் தள்ளியிருந்த சோலைகளிலிருந்து மலர்களின் நறுமணம் எழுந்து எங்கும் பரவி நின்றது. அந்த மணத்தை சுவாசித்தாள் காஞ்சனாதேவி. "என்ன மணம்!" என்றும் முணுமுணுத்தாள்.

அந்தக் கட்டழகியின் பக்கத்தே நடந்த இளைய பல்லவனுக்கு அத்தனை கடலலைகளின் இரைச்சலிலும் அவள் முணுமுணுத்த சொற்கள் காதில் விழவே, "ஆம் காஞ்சனா! அந்த மணம் தரும் சோலைகள் உலகப் பிரசித்தம். இந்த மாநக்காவரத்தைச் சுற்றிக் கடற்கரையோரமாக இந்தப் புஷ்பச் சோலைகள் இருக்கின்றன. அப்படி இவை தீவின் ஓரமாகச் சூழ்ந்து நிற்பதால் இராஜேந்திர சோழதேவர், இந்தத் தீவைக் கடல்மோகினி என்றும் இந்தச் சோலைகளைப் புஷ்ப ஒட்டியாணமென்றும் அழைத்தார். இந்தப் புஷ்ப ஒட்டியாணம் மிக அபூர்த்தியானது. சிலருக்கு நல்லது. சிலருக்குக் கெடுதல்," என்றான்.

"யாருக்கு நல்லது, யாருக்குக் கெடுதல்?" காஞ்சனாதேவி கேட்டாள் இன்பமான குரலில்.

இளையபல்லவன் இன்பப் புன்முறுவல் பூத்தான். தான் சொன்னதைத் தவறாகப் புரிந்துகொண்டு, சற்று முன்பு தன்னைத் தூக்கியெறிந்து கடற்கோரைகளை நோக்கி ஓடிய காஞ்சனாதேவி எத்தனை சீக்கிரத்தில் இன்ப கீதத்தை உதிர்க்கிறாள் என்று எண்ணிய படைத்தலைவன் 'பெண்களுக்கு க்ஷணச் சித்தம் க்ஷணப் பித்தம்,' என்று தன்னுள் சொல்லிக் கொண்டான்.

கேட்ட கேள்விக்கு அவன் பதில் சொல்லாததைக் கண்ட காஞ்சனாதேவி அவன் கையைப் பற்றிச் சிறிது அழுத்தி, "இந்தப் புஷ்ப ஒட்டியாணம்..." என்றாள்.

"ஆம்."

"யாருக்கு நல்லது என்று கேட்டேனே?"

"கேட்டாய்."

"நீங்கள் பதில் சொல்லவில்லையே?"

"சொல்கிறேன்."

"சொல்லுங்களேன்." காஞ்சனாதேவியின் கை அவன் கரத்தில் சுழன்றது.

"கள்வருக்கும் நல்லது; காதலருக்கும் நல்லது."

"ஏன்?"

"இருவரும் மறைந்துறையப் பார்க்கிறார்கள்."

இதைக்கேட்ட காஞ்சனாதேவி மெல்ல நகைத்து அவன் கையிலிருந்து தன் கையை விடுவித்துக்கொண்டு சற்று தூரத்தே தெரிந்த புஷ்பக் காட்டை நோக்கி ஓடினாள். அந்த இரண்டாம் ஓட்டத்திலும் அவளைத் தொடர்ந்தான் இளைய பல்லவன். இம்முறை முதல் முறையைவிட அதிக வேகமாக ஓடி அவளைப் பிடித்தான். அவள் அவன் கையில் அகப்படாமல் கீழே விழுந்தாள் மணலில். அவன் அவள் பக்கத்தில் உட்கார்ந்தான். காஞ்சனாதேவியின் கண்கள் அவனை அன்பு வழிய நோக்கின.

அந்தப் பார்வையின் பொருளைப் புரிந்துகொண்ட இளையபல்லவன் அந்தக் கண்களைப் பார்க்க மறுத்தான். அவள் கமலப்பாதங்களை நோக்கினான். கடற்கோரையை நோக்கி ஓடிய சமயத்தில் அலைகள் வீசி அவள் ஆடையின் கால் புறங்களை நனைத்திருந்தது. தன் இரு கைகளாலும் அந்த ஆடையின் முனையைப் பிழிந்தான் அவன்.

தலை அவள் முன்னே கவிழ்ந்து கிடந்தது. தன் காலடியில் அந்த மகாவீரன் தலை வணங்கிக் கிடப்பதைக் கண்ட காஞ்சனாதேவி இருப்பிடத்தையும் சூழ்ந்துள்ள ஆபத்தையும் அறவே மறந்து சொன்னாள், "என், காலைத் தொடுகிறீர்களே!" என்று.

இளையபல்லவன் பதிலும் மெல்ல வந்தது "பிடிக்கிறேன் என்று சொல்," என்றான்.

"பெண் காலைப் புருஷன் பிடிக்கலாமா?" என்று அவள் மெல்லக் கேட்டாள்.

"எதற்கும் ஒரு சமயம் உண்டு," என்றான் இளைய பல்லவன்.

"காலைப் பிடிக்கும் சமயமா இது?"

"ஆம் காஞ்சனா!"

அந்தச் சமயத்தில் அவன் உணர்ச்சி வசத்தில் ஏதோ பேசியதாகப் பட்டது அவளுக்கு. ஆனால் மறுநாள் பேராபத்துதான் எழுந்தது அவர்கள் சம்பந்தத்தில். அதற்கு இளையபல்லவனே அடிகோலினான். அதுமட்டுமல்ல, அடுத்த இரண்டு நாட்கள் அவன் நடந்துகொண்ட முறைகள் பெரும் விபரீதமாயிருந்தன.

அடுத்த மூன்றே நாட்கள்! கடல் புறாவில் சம்பந்தப்பட்ட அனைவருமே கங்கதேவன் கைகளில் சிக்கிவிட்டார்கள். காலைப் பிடித்த சமயத்தில் சொன்ன வார்த்தைதான் அது. ஆனால் அது அனைவர் மென்னியையும் பிடிக்கும் மந்திர மாயிற்று.



அத்தியாயம் 24

# உன் தந்தை சிறையில்

காரிருள் சூழ்ந்திருந்ததால் எங்கும் கருமை கடுமையாகத் தட்டிக் கிடந்த சமயத்தில், அடுத்திருந்த புஷ்ப ஒட்டியாணத்திலிருந்த மலர்கள் நறுமணத்தை எழுப்பி மதியை மயக்கிய சந்தர்ப்பத்தில், காஞ்சனாதேவியின் கமலப் பாதங்களைக் கையால் வருடிய வண்ணம், "நாளை நம் கதி எப்படி இருக்குமோ?" என்று கருணாகர பல்லவன் சொன்னபோது காரிகைகளைக் கைக்குள் போட்டுக் கொள்ளக் காதலர்கள் பேசும் அர்த்தமற்ற உணர்ச்சிப் பேச்சு அது என்றே எண்ணினாள் கடாரத்தின் இளவரசி. கங்கதேவனிடம் தன்னை ஒப்படைக்கப் போவதாகக் கருணாகர பல்லவன் சற்று முன்பாக அறிவித்ததையும், பிறகு தன்னை இழுத்து வந்து இன்பமாக ஏதேதோ பேச முற்பட்டதையும் எண்ணிப் பார்த்த காஞ்சனாதேவி, கடல்மோகினியை அணுகியதிலிருந்தே கருணாகர பல்லவன் திடமாக இல்லையென்றும் தன் போக்கையும் திட்டங்களையும் அடிக்கடி மாற்றிக் கொள்கிறானென்றும் தீர்மானித்துக் கொண்டதாலும், அத்தகைய சமயத்தில் அவனுக்குத் தன்னாலான சகல உதவிகளையும் செய்வது அத்தியாவசியமாகையால் கூடியவரையில் அவன் செல்லும் வழியிலேயே தானும் செல்ல உறுதி கொண்டாள். இத்தகைய உறுதிக்கு வந்தாளானாலும் கங்கதேவனையும் கடல் மோகினியில் இருந்த சூழ்நிலையையும் நினைத்தபோது அவளுக்குக் குலை நடுக்கம் எடுக்கவே செய்ததால் அந்த நடுக்கம் இளையபல்லவன் காலை வருடிய அந்தத் தருணத்திலும் லேசாக இருக்கவே செய்தது.

காலை வருடிய கைகள் அந்த நடுக்கத்தை லேசாக உணர்ந்துகொண்டன. அதை நினைத்து மெல்ல நகைக்கவும் செய்தான் இளையபல்லவன். அவன் நகைப்பு அந்த வேளையில் விசித்திரமாயிருக்கவே அவள் கேட்டாள், "எதற்கு நகைக்கிறீர்கள்?" என்று.

"உன் உள்ளத்தைப் பயம் சூழ்ந்திருக்கிறது" என்றான் இளையபல்லவன் மேலும் நகைத்து.

"அதெப்படித் தெரிகிறது உங்களுக்கு?" என்று கேட்டு அன்புடன் அவன் தலைக் குழல்களைக் கோதிவிட்டாள் காஞ்சனாதேவி.

"கால்களில் லேசாக நடுக்கம் இருப்பது கைகளுக்குத் தெரிகிறது" என்றான் இளையபல்லவன்.

அப்பொழுதும் அவள் கோபிக்கவுமில்லை, சிரிக்கவு மில்லை. கருணாகரனைப் பற்றிய ஆழ்ந்த அன்பு, அன்பினால் விளைந்த அனுதாபம் இரண்டும் அவள் உள்ளத்தில் அபரிமிதமாக எழுந்ததால், "அதற்கு நகைப்பானேன்?" என்று கேட்டாள் அவள்.

அதுவரை காலை நோக்கிக் குனிந்திருந்த தலையை நிமிர்த்தி அவள் முகத்தைப் பார்த்தான் அவன். அந்தக் காரிருளிலும் இருளைக் கிழிக்கும் சந்திரன்போல் அவள் முகமிருந்தது. கண்கள் நக்ஷத்திரங்களைப்போல் ஜொலித்துக் கொண்டிருந்தன. உதடுகள் சற்று அகன்றிருந்ததால் உள்ளே யிருந்த முத்துக்கள் நன்கு வெளியே தெரிந்தன. அகன்றிருந்த உதடுகளிலிருந்து ஈரம் செவ்விய உதடுகளுக்கு மெருகையும் சிறிது ஒளியையும் கொடுத்தன. பக்கத்தில் எழும்பிய கன்னக் கதுப்புகளில் உதடுகள் அகன்றதால் குழிகள் விழுந்திருந்தன. அப்படிப் பலவிதத்திலும் தன் உதடுகளை வா வாவென்று அழைத்த அந்த வனப்புத் திட்டுகளை நீண்ட நேரம் ஆராய்ந்த இளையபல்லவன், "காஞ்சனா! உன் முகத்தில் அச்சம் இருக்கிறது" என்றான் கடைசியில்.

கண்கள் கண்களைக் கவர்ந்து நின்ற அந்தச் சமயத்தில் அவள் மிக மெதுவாகப் பேசினாள். "வேறெதை எதிர் பார்க்கிறீர்கள்?" என்று ரகசியமாகக் கேட்டாள்.

அவள் இரு கன்னங்களையும் அவன் தன்னிரு கைகளால் பிடித்துக்கொண்டு எதிரே இருந்த சந்திர பிம்பத்தைத் தன் கண்களால் பருகினான். அந்தப் பிடிப்பில் காதல் அதிக மில்லை. காதல் உணர்ச்சிகளை அவன் திடீரெனக் கைவிட்டு விட்டதை அவள் கன்னத்தில் பதிந்த கைகளின் தன்மை யிலிருந்தே புரிந்துகொண்டாள். அடுத்தபடி அவன் சொன்ன வார்த்தைகள் அவள் அபிப்பிராயத்தை ஊர்ஜிதம் செய்தன. "தைரியத்தை எதிர்பார்க்கிறேன்" என்ற சொற்கள் அவனிட மிருந்து மிக உறுதியுடன் வெளிவந்தன.

"தைரியத்தையா!" அவள் வியப்புடன் கேட்டாள்.

"ஆம் தைரியத்தைத்தான்."

"இந்தச் சூழ்நிலையிலா?"

"ஏன், இந்தச் சூழ்நிலைக்கென்ன?"

"எங்கும் உதவி கிடைக்காத தனித்தீவு. சொல்லியனுப்பி உதவி வரவழைப்பதையும் தடை செய்யும் நெடுங்கடல் சூழ்ந்த பிரதேசம். தவிர, கங்கதேவன்..." என்று மேலே ஏதும் சொல்லாமல் நிறுத்தினாள் அவள்.

"ஒரே ஆண்டில் நீ பெரிதும் மாறிவிட்டாய் காஞ்சனா" என்றும் சொன்னான் அவன் ஏதோ குற்றம் சாட்டும் குரலில்.

"என்ன மாறிவிட்டேன்?" என்று கேட்ட அவள் தலையைக் குனிந்து கொண்டாள்.

"உன் நெஞ்சுத் துணிவு போய்விட்டது" என்றான் இளையபல்லவன்.

"முன்பு அதிகமிருந்ததோ?"

"ஆம்."

"எப்பொழுது?"

“பாலூர்ப் பெருந்துறையில் வாளுடன் நீ என்னை வரவேற்ற திருக்கோலத்தை என்னால் மறக்கமுடியவில்லை காஞ்சனா.”

இதைக் கேட்டதும் அவள் சில விநாடிகள் மௌனம் சாதித்தாள். பிறகு கீழிருந்த மணலை ஒரு கையால் எடுத்து மறுகையில் போட்டுக்கொண்டு சங்கடப்பட்டுக் கொண்டு சொன்னாள், “ஆம்! என்னாலும் மறக்க முடியவில்லை அதை,” என்று.

“நான் மறக்காததற்குக் காரணமுண்டு,” என்ற அவன் குரலில் பெருமிதமும் அன்பும் கலந்து நின்றது.

“நான் மறக்காததற்கும் காரணமுண்டு,” என்றாள் காஞ்சனாதேவி.

“நீ மறக்காததற்கு என்ன காரணம்?”

“உங்கள் காரணத்தை முதலில் சொல்லுங்கள்.”

“அதுவரை பல பெண்களைப் பார்த்திருக்கிறேன். ஆனால் வாளேந்தி என்னைப் பயமுறுத்திய வீராங்கனை யொருத்தியை அன்றுதான் சந்தித்தேன். அந்தக் காட்சி என் மனத்தில் பதிந்துவிட்டது” என்றான் இளையபல்லவன்.

காஞ்சனாதேவி மெல்ல அவன் மீது சாய்ந்தாள். சில விநாடிகள் மௌனமாக இருந்தாள். “அந்த நிகழ்ச்சியை இன்றுவரை நானும் மறக்கவில்லை. அதற்குக் காரணம் சொல்லட்டுமா?” என்று கேட்டாள் அந்த மௌனத்திற்குப் பிறகு.

“சொல் காஞ்சனா!” என்றான் இளையபல்லவன்.

“அந்த வீராங்கனை அந்த இரவுடன் மறைந்துவிட்டாள்” என்றாள் காஞ்சனாதேவி.

“மறைந்துவிட்டாளா!” இளையபல்லவன் குரலில் பேராச்சரியம் இருந்தது.

“ஆம். மறைந்துவிட்டாள்.”

“ஏன்? ஏன் மறைந்துவிட்டாள்?”

"இளையபல்லவரே!"

"என்ன காஞ்சனா?"

"நான் சோழநாடு செல்லக் கலிங்கத்தில் வந்திறங்கிய போது நாட்டைக் காக்கும் பெரும்பணியை ஏற்ற கடாரத்து இளவரசியாக வந்தேன். எந்த ஆபத்தையும் சமாளிக்கும் சக்தியும் உறுதியும் என்னிடமிருந்தது. ஆபத்தை எதிர்பார்த்தும் வந்தேன். மக்கள் நலன் மனத்தில் எழுந்து நின்றது. அது பெரும் உறுதியைத் தந்தது. யாருக்கும் அஞ்சாத நெஞ்சம் படைத்திருந்தேன்..." என்ற காஞ்சனாதேவி பெருமூச் செறிந்தாள்.

இளையபல்லவன் பதில் சொல்லவில்லை. அவளே மேற் கொண்டு சொன்னாள்: "அந்த நிலையில் நீங்கள் வந்தீர்கள். அஞ்சாத அந்த நெஞ்சத்தில் புகுந்தீர்கள். யாரும் என்னைப் பாதுகாக்கத் தேவையில்லை என்றிருந்த நெஞ்சத்தில் என்னைப் பாதுகாக்க ஒருவர் வந்துவிட்டார் என்ற உணர்ச்சி ஏற்பட்டது. அந்த உணர்ச்சிக்குப் பின் ஏதேதோ நான் அறியாத பல உணர்ச்சிகள் என் உடலிலும் உள்ளத்திலும் உலாவத் தொடங்கின. மெள்ள மெள்ள சுய உறுதிகளை, சுயபல நம்பிக்கையை அந்த உணர்ச்சிகள் உடைத்தன. மெள்ள மெள்ள அந்த வீராங்கனை மறைந்தாள். சதா உங்களைச் சிந்திக்கும் ஓர் அடிமை உயிரெடுத்தாள். உங்கள் பக்கத்தில் இப்பொழுது அமர்ந்திருப்பது அந்த அடிமை பழைய வீராங்கனையல்ல. சஞ்சலமும் பயமும் நிறைந்த உள்ளத்தைப் படைத்தவள்."

காஞ்சனாதேவியின் சொற்கள் இளையபல்லவனுக்கு அதைரியத்தை உண்டாக்கவில்லை. பழைய துணிவை அவள் இழந்துவிட்டதைப் பெருமையாகக் கருதினான் அவன். அவள் உள்ளத்தின் அச்சம் முகத்துக்கு எத்தகைய புது அழகைக் கொடுத்திருக்கிறது என்பதையும் எண்ணிப் பார்த்து உவகை கொண்டான். இருப்பினும் அந்தச் சமயத்தில் வேண்டியது பயம் மிகுந்த பார்வையல்ல அவனுக்கு. துணிவு நிறைந்தவள் வேண்டியிருந்தது அந்தச் சூழ்நிலைக்கு. "காஞ்சனா! உன்

உள்ளம் நன்றாகப் புரிகிறது எனக்கு. என் சம்பந்தப்பட்ட வரையில் அந்த அதைரியத்தை, சஞ்சலத்தை வைத்துக்கொள். ஆனால் சற்றுப் பழைய சொரூபத்தையும் வரவழைத்துக் கொள். அடுத்த சில தினங்களில் நாம் கங்கதேவனை வெற்றி கொள்ள வேண்டுமானால் உன் துணிவு மிகமிக முக்கியம்" என்று கூறிய இளையபல்லவன் இடையிலிருந்த ஒரு குறுவாளையும் அவளிடம் கொடுத்து, "வாளேந்திய கை இந்தக் குறுவாளையாவது ஏந்தட்டும். இதை உனக்குத் தற்காப்புக்காகவே கொடுக்கிறேன். இதை உபயோகிக்க அவசியமிருக்காது. உனக்கு எந்த ஆபத்திலும் மறைவில் என் உதவிக்கரம் இருக்கும் என்பதை நினைத்துக்கொள். எது நடந்தாலும் கவலைப்படாதே. வா" என்று கூறி அவளைக் கையைப் பிடித்து எழுப்பி நிற்க வைக்கவும் செய்தான். அவள் இடைக்குள் குறுவாளைச் செருகிக் கொண்டு மேல் தாவணியை அது தெரியாதபடி இழுத்து விட்டுப் போர்த்தினாள்.

அதற்கு மேல் இருவரும் பேசவில்லை. இருவரும் கைகோர்த்துக்கொண்டு கங்கதேவன் மாளிகையை நோக்கி நடந்தார்கள். அதை அணுகியதும் அவள் கையிலிருந்து தன் கையைப் பிரித்துக்கொண்ட இளையபல்லவன் காஞ்சனா தேவியை நோக்கி "காஞ்சனா! நீ என்னிடம் முழுக்க முழுக்கக் காதல் கொண்டிருக்கிறாய் என்பது நினைவிருக்கட்டும்," என்றான்.

"அதை இப்பொழுது நினைவுபடுத்துவானேன்?" என்று கேட்டாள் அவள் விஷமமாக.

"நான் உன்னைக் காதலிக்கவில்லை."

"என்ன?"

"ஆம். உன்னைப் புறக்கணித்து உன்னிடமிருந்து தப்பப் பார்க்கிறேன்."

"அப்படியா?"

"ஆம். ஆனால் நீ என்னை விட மறுக்கிறாய். பின்னால் ஓடி வருகிறாய்."

"யார் சொன்னது?" சற்று சீற்றத்துடன் எழுந்தது காஞ்சனாதேவியின் கேள்வி.

"சேந்தன் சொல்லியிருக்கிறான்..."

"யாரிடம்?"

"கங்கதேவனிடம்."

மெள்ள அப்பொழுதுதான் புரிந்தது காஞ்சனாதேவிக்கு இளையபல்லவனின் தந்திரம். அதை விளக்கியும் சொன்னான் இளையபல்லவன், "ஆம் காஞ்சனா! அப்படித்தான் நான் சேந்தனைச் சலிப்புத் தட்டிவிட்டதாக நினைக்க வேண்டும். என்னால் கைவிடப்பட்ட உன்னிடம் அவன் நெருங்குவதும் நெருங்கிய பின் நீ சொல்வதைக் கேட்பதும் எளிது. இன்றிலிருந்து ஐந்தாவது நாள் அவன் உன்னைச் சந்திக்க முயலுவான். சேந்தன் அழைத்துப் போவான். மறுக்காமல் போ. மீதி எதையும் யோசிக்காதே," என்று.

காஞ்சனாதேவி நன்றாகப் புரிந்து கொண்டாள் இளைய பல்லவன் கங்கதேவனை கவிழ்க்கத் திட்டமிட்டிருப்பதாக. ஆனால் அது என்ன திட்டம் என்று அவளுக்குத் தெளிவாகத் தெரியவில்லையாயினும் இளையபல்லவன் ஆழ்ந்த நெஞ்சத்தை நன்றாக அறிந்திருந்த அவள், அவன் சொற்படி நடக்கவே முடிவு செய்தாள். அவளை அழைத்துக்கொண்டு கங்கதேவன் மாளிகை சேர்ந்த இளையபல்லவன் நேராக கங்க தேவன் அறைக்குச் சென்று தட்டினான். அடுத்த விநாடியே கதவு திறக்கப்பட்டு, கங்கதேவன் வெளியே தலையை நீட்டினான். அவன் பெரிய கன்னக் கதுப்பில் ஆழ்ந்து கிடந்த பயங்கரக் கண்கள் இளையபல்லவனைக் கண்டதும் சிறிது சந்தேகத்துடன் பார்த்ததன்றி, பின்னால் நின்ற காஞ்சனா தேவியைக் கண்டதும் காமத்தையும் அள்ளிக்கொட்டின. காஞ்சனாதேவி மெள்ள நகர்ந்து மாடிப்படியைப் பிடித்துக் கொண்டு நின்றாள்.

கங்கதேவன் இருவரையும் சில விநாடிகள் பார்த்துவிட்டு, "என்ன வேண்டும்?" என்று பொதுவாக முரட்டுத்தனமாகக் கேட்டான்.

"ஓர் உதவி வேண்டும்" என்றான் இளையபல்லவன்.

"என்ன உதவி?" சந்தேகத்துடன் ஒலித்தது கங்கதேவன் குரல்.

"மஞ்சளழகியைத் தெரியும் அல்லவா உங்களுக்கு? இதோ இவளைப் பாருங்கள்" என்றான் குரலில் எரிச்சலுடன் இளையபல்லவன்.

அறை வாயிற்படியைத் தாண்டி வெளியே வந்த கங்க தேவன், "தெரியும். அன்றே உங்கள் மரக்கலத்தின் அறையில்–" என்று இழுத்தான்.

"பார்த்து விட்டீர்கள். கடல்மோகினித் தலைவர் கண் களிலிருந்து எதுதான் தப்பும்?" என்றான் இளையபல்லவன்.

"எதுவும் தப்ப முடியாது. நீங்கள் கடற்கரைக்குப் போனதும் தப்ப முடியாது. இவள் போனதும் தப்ப முடியாது" என்றான் கங்கதேவன்.

"அதுமட்டும் பயனில்லை."

"வேறென்ன செய்யவேண்டும்?"

"இன்னும் நாலைந்து நாட்களுக்கு இவளை இந்த மாளிகையை விட்டு வெளியில் விடாதிருக்கக் காவலருக்கு உத்தரவு பிறப்பிக்க வேண்டும்."

"ஏன்?"

"ஒன்று இவள் உடல்நிலை சரியில்லை. காய்ச்சல் இருக்கிறது. இரண்டாவது..."

"சொல்லுங்கள்."

"நான் போகுமிடங்களுக்கெல்லாம் பெண்கள் என்னைத் தொடர்ந்து வருவது எனக்குப் பிடிக்காது." இளையபல்லவன் இதைத் திட்டமாகச் சொன்னான்.

கங்கதேவனுக்கு இளையபல்லவன் கூறியதெல்லாம் பெரும் திருப்தியாய் இருந்தது. இப்படியொருவன் ஒரு பெண்ணிடம் நடந்துகொண்டால் அவனிடம் எந்தப் பெண்ணுக்கும் கசப்பு ஏற்படுமென்பதை அவன் உணர்ந்து கொண்டதன்றி, அந்தக் கசப்பு தனக்கு எத்தனை அனுகூலம் என்பதையும் புரிந்து கொண்டான். ஆகவே இளைய பல்லவன் கூறியபடி செய்வதாக ஒப்புக்கொண்டான். ஓரளவு நுண்ணறிவும் உள்ள கங்கதேவன் அந்த இரவில் அந்தச் சந்தர்ப்பத்தில் நோய்வாய்ப்பட்டிருக்கும் ஒரு பெண்ணிடம் தன் உணர்ச்சிகளைக் காட்டுவது சரியல்ல என்பதையும் அறிந்து கொண்டதால் அவளை அவள் தந்தையின் அறையில் சேர்த்துவிட்டு வரும்படி இளையபல்லவனிடம் கூறினான். காஞ்சனாதேவியுடன் சென்ற இளையபல்லவன் அவளைப் பலவர்மன் அறையில் விட்டுத் திரும்பினான். அன்றிரவுக்குப் பிறகு இரண்டு நாட்கள் காஞ்சனாதேவி இளையபல்லவ னைப் பார்க்கவேயில்லை. இரண்டு நாளும் அந்த அறைக்கு வந்துபோய்க்கொண்டிருந்தவர்கள் கங்கதேவனும் சேந்தனும் தான். இருவரும் சேர்ந்தே வந்தார்கள், சேர்ந்தே போனார்கள்.

அவர்கள் வந்தபோதெல்லாம் காஞ்சனாதேவியும் பலவர்மனும் அக்கம் பக்கத்து மஞ்சங்களில் படுத்துக் கிடந்தார்கள். காஞ்சனாதேவியை தூரத்திலிருந்தே விசாரித் தான் கங்கதேவன். அவன் பண்பாடு மிக விநோதமாயிருந்தது காஞ்சனாதேவிக்கு. அதற்கு என்ன காரணமென்று அறியாமல் திகைத்த அவளுக்குக் காரணத்தை ஒரு நாளிரவு சேந்தன் சொன்னான். அதைக்கேட்ட காஞ்சனாதேவி பெரிதும் மலைத்தாள். "உண்மையாகவா?" என்று வினவினாள் கவலையுடன்.

அப்பொழுது இரவு மூடியிருந்த சமயம். சேந்தன் மெள்ள அறையைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்து ரகசியமாக விஷயத்தைச் சொன்னான்.

"என்னால் நம்ப முடியவில்லையே" என்றாள் அவள்.

"யாராலும் நம்ப முடியவில்லை" என்றான் சேந்தன்.

"கண்டியத்தேவனும் அமீரும் என்ன செய்கிறார்கள்?"

"அவர்கள் என்ன செய்ய முடியும்?"

"இந்த அக்ரமத்துக்கு ஒப்புக்கொண்டார்களா?"

"ஒப்புக்கொள்ளாமல் என்ன செய்வது?"

"எதிர்ப்பது."

சேந்தன் வருத்தத்துடன் அவளை நோக்கி, "எதிர்த்தும் பார்த்தார்கள், பயனில்லை. இரண்டு நாட்களாக இளைய பல்லவர் அக்கிரமம் அதிகமாய் இருக்கிறது. தாங்க முடியவில்லை. நாமெல்லாம் அதோகதி" என்றான். அத்துடன் சென்ற இரண்டு நாட்களில் நடந்த விபரீதத்தை விளக்கத் தொடங்கிய சேந்தன், "இப்பொழுது தங்கள் தந்தை சிறையிலிருக்கிறார்" என்றும் கூறினான்.



## அத்தியாயம் 25

# ஒப்பந்தம்

புஷ்ப ஒட்டியாணமென்று புகழ் பெற்ற மலர்த் தோட்ட வரிசைக்கருகேயிருந்து இளையபல்லவன் தன்னை அழைத்து வந்து கங்கதேவனுக்கு அறிமுகப்படுத்தி விட்டுச் சென்ற இரவிலிருந்து மூன்றாம் இரவில் சிறிதும் சத்தம் செய்யாமல் திருடன்போல் அறைக்குள் நுழைந்து, "உங்கள் தந்தை சிறையில் இருக்கிறார்" என்பதைச் சேந்தன் அறிவித்தவுடன் திக்பிரமை பிடித்துச் சிறிது நேரம் மஞ்சத்தில் உட்கார்ந்து விட்ட காஞ்சனாதேவி, "சிறையில் இருக்கிறாரா? யார் சிறை செய்தது? எதற்காக?" என்ற கேள்விகளைச் சினத்துடன் விடுவிடு என்று வீசினாள் சில விநாடிகள் கழித்து.

கூலவாணிகன் முகம் குழப்பத்தையும் அச்சத்தையும் மிதமிஞ்சிக் காட்டியதன்றிப் பதில் சொன்ன குரலும் நடுங்கவே செய்தது. "வேறு யார் சிறை செய்ய முடியும்? இளையபல்லவர்தான். அதுவும் இந்தக் கயவன் கங்க தேவனைத் திருப்தி செய்ய" என்ற கூலவாணிகன் திக்கு முக்காடி வார்த்தைகளை உதிர்த்தான்.

காஞ்சனாதேவியின் கருவிழிகள் வியப்பா அச்சமா என்று தெரியாத பார்வையொன்றை வீசின கூலவாணிகன் மீது. "எங்கு சிறை வைக்கப்பட்டிருக்கிறார் என் தந்தை?" என்று வினவினாள் கடாரத்து இளைவரசி. இம்முறை அவள் குரல் உணர்ச்சியற்று இருந்ததையும், ஒரு பெரும் தோரணை மட்டும் அதில் ஊடுருவி நின்றதையும் கவனித்த கூலவாணிகன் அதன் காரணத்தைப் புரிந்துகொள்ள முடியாமல் திணறினாலும், "கடல் புறாவில் இருக்கிறார்" என்று பதில் சொன்னான்.

கடாரத்து இளவரசியின் நாசியிலிருந்து ஆசுவாசப் பெருமூச்சொன்று வந்தது. "வேறு இடத்துக்கு அகற்றப்பட

வில்லையே அவர்?" என்று மட்டும் கேட்டாள் அவள் ஓரளவு சாந்தியுடன்.

"இல்லை" என்று மறுமொழி சொன்ன சேந்தன் அவள் சாந்தியைக் கண்டு வியப்படைந்தான். அந்த சாந்தியை உடைக்கும் எண்ணத்துடன் மற்றொரு விவரமும் சொல்ல முற்பட்டு, "கடல் புறாவிலிருந்தாலும் அவரைக் காவல் புரிவது கங்கதேவன் மாலுமிகள் இருவர். கங்கதேவன் உத்தரவின்றி அவரை யாரும் பார்ப்பதோ பார்த்துப் பேசுவதோ கூடாதென்று இளையபல்லவர் உத்தரவு பிறப்பித்திருக்கிறார்" என்று சேந்தன் காஞ்சனாதேவியின் சாந்திக்குக் காரணம் இல்லையென்பதை வலியுறுத்தும் பார்வையொன்றை அவள்மீது திருப்பினான்.

அதனாலும் மனம் தளராத காஞ்சனாதேவி கேட்டாள், "கடல்புறாவில் கங்கதேவன் ஆட்கள் மட்டும்தானிருக் கிறார்களா?" என்று.

"இல்லை, காவலர் இருவரைத் தவிர மற்றவர் நம்மவர் தான்."

"நம்மவர் எத்தனை பேர் இருப்பார்கள்?"

"பொருள்களைப் பாதுகாக்கத் தேவையான பத்துப் பதினைந்து பேர்."

"மற்றவர்கள்?"

"மற்றவர்களில் சிலர் மலர்த் தோட்டத்தின் முகப்பில் தங்குகிறார்கள். சிலர் கடற்கரையிலேயே தங்குகிறார்கள். இன்னும் சிலர் எட்ட இருக்கும் தமிழர் இல்லங்களில் தங்கிக் காலையில் வேலைக்கு வருகிறார்கள்."

"என்ன வேலை நடக்கிறது இப்பொழுது?"

"கலிங்கத்தின் கப்பல்களிரண்டை நாம் கைப்பற்றினோ மல்லவா? அவையிரண்டும் துரிதமாகச் செப்பனிடப் படுகின்றன. கடல் புறாவின் போர்ப் புண்களும் ஆற்றப் படுகின்றன."

இதைக்கேட்ட காஞ்சனாதேவி சில விநாடிகள் சிந்தனை யிலிறங்கினாள். கங்கதேவன் காவலரிடம் தந்தை சிறை யிலிருந்தாலும் கடல் புறாவில் தமிழர்களும் காவலிருப்பதால் தந்தைக்கு எந்தவித ஆபத்துமில்லை என்பதையும் ஏதோ காரணத்தை முன்னிட்டே இம்மாதிரி நாடகத்தையெல்லாம் இளையபல்லவன் ஆடுகிறானென்பதையும் அவள் தீர்மானித்துக் கொண்டபடியாலும், "அதனால் பாதகமில்லை கூலவாணிகரே" என்று கூறினாள் இறுதியாக.

கூலவாணிகனுக்கு அவள் பதில் விசித்திரமாயிருந்தது. "எதனால் பாதகமில்லை?" என்று கேட்டான் அவன், வியப்பு பரிமளித்த குரலில்.

"தந்தையைக் கடல்புறாவில் சிறை வைத்திருப்பதால்" என்றாள் காஞ்சனாதேவி.

"அதுதான் பாதகமில்லையா? கடாரத்தைக் கொள்ளை யிட்டாலும் பாதகமில்லையா?" கூலவாணிகன் கேட்டான் எரிச்சலுடன்.

காஞ்சனாதேவியின் கண்களில் மெள்ள சினம் உதய மாயிற்று. "என்ன? கடாரத்தைக் கொள்ளையிடப் போகிறார் களா?" என்ற அவள் குரலில் உள்ளக் கொந்தளிப்பின் சாயை தெரிந்தது.

"ஆம் இளவரசி."

"என் தலைநகரையா!"

"அதையேதான்."

"கொள்ளையிடப் போவது யார்?"

"இளையபல்லவரும் கங்கதேவனும்."

"இருவரும் சேர்ந்தா?"

"ஆம். இது கூட்டு முயற்சி."

காஞ்சனாதேவிக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாததால் அவள் செங்கமல இதழ்கள் சில விநாடிகள் திறந்தே நின்றன. பிறகு அந்த இதழ்களிலிருந்து சொற்கள்

உதிர்ந்தபோது காரம் அதில் நிரம்ப இருந்தது. "இந்த முயற்சிக்கு வித்திட்டது யார்?" என்று வினவினாள் அவள் உஷ்ணத்துடன்.

"இளையபல்லவர்" என்று கூறினான் சேந்தன்.

"என்னால் நம்ப முடியவில்லை கூலவாணிகரே! கொள்ளைக் கப்பல்கள் கடாரத் துறைமுகத்தில் நுழைந்தால் மக்கள் நாசமாக்கப்படுவார்களே!" என்றாள் காஞ்சனாதேவி திகிலுடன்.

கூலவாணிகன் அவள் உட்கார்ந்திருந்த பஞ்சணையை நெருங்கி வந்தான். அவளைக் கூர்ந்து நோக்கிய அவன் கண்களில் அச்சம் இருந்தது. "யாரால் நம்ப முடியும் தேவி? இதை இளையபல்லவரே கங்கதேவனிடம் கூறினார். நடந்ததை நடந்தபடி சொல்லுகிறேன். கேட்டு நீங்களே ஒரு முடிவுக்கு வாருங்கள்" என்ற சேந்தன் இரண்டு நாள் கதையை விவரிக்கத் தொடங்கினான்: "தேவி! உங்களை அழைத்துக் கொண்டு கடற்கரையிலிருந்து கிளம்பிய இளையபல்லவர் இங்கு வந்த நள்ளிரவு கங்கதேவன் அறையிலேயே படுத்து உறங்கினார். அவர் திரும்பி வருவாரென்றும் ஏதாவது கட்டளை இடுவாரென்றும் எதிர்பார்த்த கண்டியத்தேவனும், அமீரும், நானும் கடற்கரையிலேயே நீண்ட நேரம் உட்கார்ந் திருந்தோம். இளையபல்லவர் வரவில்லை. விடியற்காலையில் தான் நாங்கள் உறங்கத் துவங்கினோம். நாங்கள் விழித்தபோது இளையபல்லவர் கங்கதேவனுடன் எங்களை நோக்கி வந்தார். அவன் முன்னிலையிலேயே கலிங்கத்தின் மரக்கலங்களைத் துரிதமாகப் பழுது பார்க்கும்படியும் கடல் புறாவின் புண் களையும் ஆற்றும்படியும் உத்தரவிட்டார். கங்கதேவன் அவரை மிகுந்த சந்தேகத்துடன் பார்த்தான். மரக்கலங்களைப் பழுது பார்க்க என்ன அத்தனை அவசரமென்று கேட்டான். பழுதுபட்ட போருக்கு உதவாத மூன்று மரக்கலங்கள் துறைமுகத்தின் பெரும் பாகத்தை அடைத்துக்கொண்டிருப்ப தால் மற்ற நான்கு மரக்கலங்களும் ஒதுங்கிக் கிடக்க வேண்டிய அவசியத்தைச் சுட்டிக் காட்டிய இளையபல்லவர் 'ஏதாவது

ஓர் எதிரி மரக்கலம் வந்து வாயிலை அடைத்து நின்று விட்டால் துறைமுகத்தின் கதி என்ன!' என்று விசாரித்தார். சுற்றுமுற்றும் துறைமுக நிலைமையைப் பார்த்த கங்கதேவன் அதிலுள்ள அபாயத்தை உணர்ந்து கொண்டதால் அதற்கு மேல் அவன் எதுவும் பேசவில்லை. அப்பொழுதுதான் சொன்னார் இளையபல்லவர், 'கங்க தேவரே! கொள்ளை யிலும் பரஸ்பர நம்பிக்கை வேண்டும். இல்லையேல் கூட்டு முயற்சி பலிக்காது' என்று. அதுமட்டுமல்ல, தனது மரக் கலங்களை கங்கதேவன் சொந்த மரக்கலம்போல் பாவித்து எப்பொழுது வேண்டுமானாலும் சென்று பார்க்கலாமென்றும் கூறினார். கங்கதேவன் எப்பொழுது வந்தாலும் மரக்கலத்தைக் காட்டுமாறு கண்டியத்தேவருக்கும் அமீருக்கும் பணித்தார்..."

காஞ்சனாதேவி இடையே ஒரு கேள்வி கேட்டாள், "இருவரும் ஒப்பினார்களா?" என்று.

"அப்பொழுது இருவரும் பதில் சொல்லவில்லை. அன்று நடுப்பகலில் கப்பல்களைப் பழுது பார்க்கும் வேலையை இளையபல்லவர் பார்வையிட வந்தபோது கண்டியத்தேவர் ஆட்சேபணை தெரிவித்தார். கடல் புறாவின் மர்மங்களை எதிரியைப் பார்க்கவிடுவது அபாயமென்று கூறினார். கங்கதேவன் எதிரியல்லவென்பதையும் நண்பனென்பதை யும் வலியுறுத்தினார் இளையபல்லவர். அதுமட்டுமல்ல, அங்கிருந்த என்னை நோக்கி எப்பொழுதும் நான் கங்க தேவனிடம் இருந்து கொண்டு அவன் சொற்படி கேட்க வேண்டுமென்றும் உத்தரவு பிறப்பித்துவிட்டு வெகுவேகமாக எங்கோ போய்விட்டார். அன்று இரவு வரையில் அவரைக் காணவில்லை. கங்கதேவன் பலமுறை அவரைத் தேடினான். காணாததால் கடுங்கோபத்துடன், 'எங்கே உங்கள் தலைவர்?' என்று இரைந்து அமீரையும் கண்டியத்தேவனையும் பார்த்துக் கூவினான். இதை அவன் கடல்புறாவிற்கு அருகிலுள்ள புஷ்ப ஒட்டியாணத்தின் முகப்பில் உட்கார்ந்து உணவருந்திக் கொண்டிருந்த எங்கள் முன்னிலையில் கூவினான். 'ஏன் என்னைத் தேடுகிறீர்கள்?' என்று கேட்டுக்கொண்டே இளைய

பல்லவர் மலர்ச் சோலைக்குள்ளிருந்து வெளியே வந்தார் சர்வ சாதாரணமாக. கங்கதேவன் மிகுந்த சந்தேகத்துடன் அவரை உற்று நோக்கினான். அதை லட்சியம் செய்யாமல் 'ஏதாவது முக்கியமாகப் பேச வேண்டுமா?' என்று வினவினார் இளைய பல்லவர். ஒன்றுமில்லையெனக் கூறிய கங்கதேவன் திரும்பினான் மாளிகையை நோக்கி. அவனைத் தடுத்த இளையபல்லவர் 'நாளை இரவு உங்கள் மாலுமிகளைக் கடற் கரையில் ஒன்று சேருங்கள். எனது மாலுமிகளும் வருவார்கள்' என்றார். கங்கதேவன் பதில் சொல்லாமலே புறப்பட்டான். அவனைத் தொடரும்படியும் என் கண்ணைவிட்டு அவன் அகலக் கூடாதென்றும் இளையபல்லவர் உத்தரவிட்டார். நான் கங்கதேவனைத் தொடர்ந்தேன். அவனை விட்டு அகல வில்லை" என்று விவரித்தான் சேந்தன்.

"ஆம், அகலவில்லை. இருவரும் சேர்ந்துதானே வருகிறீர்கள், போகிறீர்கள்?" என்றாள் காஞ்சனாதேவி.

அவள் மனோநிலை சேந்தனுக்கு நன்றாகப் புரிந்தது. மேற்கொண்டு நடந்த அனைத்தையும் அவள் அறிந்துகொள்ள விரும்புகிறாளென்பதை உணர்ந்துகொண்டான். "பிறகு மாறுபாடான உத்தரவுகள் வந்தன இளவரசி. தமிழர்கள் இல்லங்களையும் அதற்குப் பின்னாலுள்ள காட்டையும் கவனிக்கச் சொன்ன இளையபல்லவர் என்னை கங்க தேவனைப் பிரியவேண்டாமென்று சொன்னதால் அப் பணியை நிறைவேற்றுவது எப்படி என்று கேட்டேன். அந்தப் பணி அவசியமில்லையெனச் சொல்லிவிட்டார். அவர் போக்குக் கண்டியத்தேவருக்கும் அமீருக்கும் அடியோடு புரிய வில்லை. தவிர கடல்புறாவில் இருக்கும் உணவு பெரும் பகுதி தீர்ந்துவிட்டது" என்றான் கூலவாணிகன்.

இதைக் கேட்டதும் துடித்து எழுந்த காஞ்சனாதேவி "அப்படியானால் நம் மாலுமிகளின் கதி? அதிலிருந்த உணவு, கடல் புறா, அது பிடித்த இரு மரக்கலங்கள், இவற்றை நடத்தும் மாலுமிகளுக்குத்தானே போதுமானதாய் இருந்தது?" என்று வினவினாள்.

"ஆம் தேவி! இந்தத் துறைமுகத்தில் இப்பொழுது உணவுப் பஞ்சம் இருக்கிறது. இந்தச் சந்தர்ப்பத்தில் கங்கதேவனுக்கும் அவன் வசமுள்ள ஆயிரத்துக்கு மேற்பட்ட மாலுமிகளுக்கும் நாம் பிடித்த கலிங்க மரக்கலங்களிலுள்ள சிறைவாசிகளுக்கும் நேற்று பெரும் விருந்து வைத்து உணவையும் மதுவையும் வாரி வழங்கிவிட்டார் இளையபல்லவர். அந்தக் கடற்கரை விருந்தை நீங்கள் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை. நாங்கள் பார்த்தோம். எங்கும் மணலில் செருகப்பட்ட பந்தங்கள் எரிந்தன. கங்கதேவரும் இளையபல்லவரும் அக்கம்பக்கத்தில் பெருமஞ்சங்களில் அமர்ந்திருந்தார்கள். ஆயிரத்துக்கு மேற்பட்ட மாலுமிகள், கலிங்கர் மட்டுமல்ல பல நாட்டவர்–" என்று சொல்லிக்கொண்டே போன கூலவாணிகனை இடைமறித்த கடாரத்து இளவரசி, "என்ன! பல நாட்டவரா!" என்று வினவினாள்.

"ஆம், பல நாட்டவர் இருக்கிறார்கள் கங்கதேவனிடம்."

"எந்நாட்டவர்?"

"சுமாராகத்தான் சொல்ல முடியும். ஆயிரத்தில் கலிங்கர் பாதிக்குக் குறைவு. மற்றவர்கள் பாலித் தீவிலும் சொர்ண பூமியிலும் இருப்பவர்கள். நமது பாரத நாட்டின் வடபுறத்தைச் சேர்ந்தவர்களும் இருக்கிறார்கள்."

இதைக்கேட்ட காஞ்சனாதேவி, "சொல்! மேலே சொல்" என்றாள்.

அதைக் கவனியாமலே சொன்னான் சேந்தன், "கடற்கரையில் அந்தப் பந்தங்களின் வெளிச்சத்துக்கு இடையே ஆயிரத்துக்கு மேற்பட்ட மாலுமிகள் உண்டு, குடித்து, பேரிரைச்சல் போட்டுக் கொண்டிருந்த சூழ்நிலையில் எழுந்து அவர்களை நெருங்கிவர உத்தரவிட்ட இளையபல்லவர் பெரும் குரலில் கூவினார், 'உங்களுக்கு இன்று விருந்தளித்தோம் வயிற்றுக்கு. இப்பொழுது கண்ணுக்களிக்கிறோம் விருந்து' என்று. அடுத்த சில விநாடிகளில் அமீரின் காவலில் இருபெரும் பொக்கிஷப் பெட்டிகள் கடல்புறாவிலிருந்து வந்து

அவர்முன் திறக்கப்பட்டன. அவற்றிலிருந்து பெரும் நகைகளை யும் கிரீடங்களையும் பொற்காசுகளையும் கண்ட கங்கதேவன் மாலுமிகள் பல விநாடிகள் பெரிதும் ஸ்தம்பித்தார்கள். பிறகு அவற்றை நோக்கி இரைந்துகொண்டு ஓடிவந்தார்கள். சட்டென்று பெட்டிகளை மூடினார்கள் நம் வீரர்கள். அதனால் எழுந்த கூக்குரலை இளையபல்லவரின் பெருங் குரல் அடக்கியது. 'இம்மாதிரி பல பெட்டிகள் உங்களுக்குக் கிடைக்கும். நானும் உங்கள் தலைவரும் கடாரத்தையே கொள்ளையிடப் போகிறோம். அந்த நகரில் உங்களை விட்டு விடுகிறேன். முடிந்த வரையில் கொள்ளையிடுங்கள்' என்று இரைந்து கூவிய அவர் பெட்டிகளைக் கொண்டு போகுமாறு அமீருக்கு உத்தரவிட்டார். அடுத்தபடி 'முறி எழுதுங்கள், முறி எழுதுங்கள்?' என்ற கூக்குரல் எங்கும் எழுந்தது. கங்கதேவன் கூட்டத்தார் எதிரே உட்கார்ந்து கொள்ளையடிக்கும் பொருளில் யாருக்கு எவ்வளவு சேரவேண்டுமென்ற விதிகளை நிர்ணயித்து முறிகளை எழுதினார்கள். மாலுமிகளுக்குப் பெரிதும் விட்டுக் கொடுத்தார் இளையபல்லவர். அந்த முறியின்படி நமக்குச் சேரவேண்டியது அதிகமில்லை."

இந்தக் கடைசிப் பகுதியை மிகுந்த வருத்தத்துடன் சொன்னான் சேந்தன். காஞ்சனாதேவி மீண்டும் யோசனையில் ஆழ்ந்தாள். கடைசியில் 'இவர் கொள்ளைக் காரர்தானா?' என்றும் நினைத்தாள். அப்படி நினைத்தபோது ஒரு சந்தேகமும் ஏற்படவே கேட்டாள், "இதில் என் தந்தையைச் சிறையிட வேண்டிய காரணமென்ன?" என்று.

சேந்தன் அந்தக் கதையையும் விளக்கினான்: "அந்தக் கஷ்டத்தை ஏன் கேட்கிறீர்கள்? முறி எழுதிய பின்பும் கங்க தேவன் இளையபல்லவரை நம்பவில்லை. 'கடாரம் பெரும் துறைமுகம், காவலுள்ள தலைநகர். என்னிடமுள்ள ஆயிரம் பேர் உங்களிடமுள்ள சுமார் நானூறு பேர், இவர்களைக் கொண்டு நாம் எப்படிக் கைப்பற்ற முடியும்' என்று கேட்டான் அவன். அவன் மாலுமிகளும் அவரைச் சந்தேகத்துடன் நோக்கினார்கள். 'அதற்கும் மருந்து வைத்திருக்கிறேன்' என்ற

இளையபல்லவர் கடல் புறாவிலிருந்து குணவர்மரைக் கொண்டுவரக் கட்டளையிட்டார். முதலில் அமீர் மறுத்தான். பிறகு இளையபல்லவர் கட்டளையை மீறமுடியாமல் கொணர்ந்தான் உங்கள் தந்தையை வாள் உறுவிய காவலர் மத்தியில். அவரைக் கண்டதும் கூவினான் கங்கதேவன் 'குணவர்மர்!' என்று. அவன் குரலில் பயம் ஒலித்தது. இளைய பல்லவர் சொன்னார் அவனுக்கு, 'இவர் யாரென்பதை உங்கள் மாலுமிகளுக்கு அறிவியுங்கள்!' என்று. கங்கதேவன் அறிவித்தான். பிறகு குணவர்மர் கடல் புறாவுக்கு அழைத்துச் செல்லப்பட்டார். அவரைக் காவல் செய்யும் பொறுப்பை யும் இளையபல்லவர் கங்கதேவனிடம் ஒப்படைத்தார். இன்னொரு விபரீதமும் நடந்திருக்கிறது..."

இந்த இடத்தில் அச்சம் பூரணமாகத் தொனித்தது சேந்தன் குரலில்.

"என்ன? சொல் சேந்தா?" என்றாள் காஞ்சனாதேவி.

"கலிங்கத்தின் கப்பல்களை இளையபல்லவர் கைப் பற்றினாரல்லவா?"

"ஆம்."

"அவற்றைக் கடலில் கொண்டு சென்று பாரதத்திலிருந்து வரும் மரக்கலங்களை வேவு பார்க்க ஏற்பாடு செய்திருக்கிறார் இளையபல்லவர்."

"அதனாலென்ன?"

"அவற்றைக் கடலில் செலுத்தும் பொறுப்பை கங்க தேவனிடம் ஒப்படைத்து விட்டார் படைத்தலைவர்."

"அப்படியானால்!" காஞ்சனாதேவியின் குரலில் அச்சம் பெரிதும் ஒலித்தது.

"கங்கதேவனிடம் ஆறு மரக்கலங்கள், நம்மிடம் கடல் புறா மட்டும், அதுவும் அசைய முடியாதபடி கடற்கோரை களை அணுகி நிற்கிறது."

காஞ்சனாதேவி முணுமுணுத்தாள், "அப்படியானால் நம் கதி அதோகதிதான்" என்று.

பதிலுக்கு ஆமோதிக்கும் முறையில் தலையை ஆட்டினான் சேந்தன். "இப்பொழுது இளையபல்லவர் எங்கே?" என்று கேட்டாள் காஞ்சனாதேவி.

"தெரியாது" என்றான் சேந்தன்.

காஞ்சனாதேவி மீண்டும் மஞ்சத்தில் உட்கார்ந்து விட்டாள். இளையபல்லவன் இப்படி எல்லோரையும் பேராபத்தில் இறக்கிவிட்டானே என்று நினைத்துப் பெருமூச் செறிந்தாள். சேந்தனும் பெருமூச்சு விட்டான். ஆனால் அந்த விபரீத ஒப்பந்தத்தை கங்கதேவனிடம் செய்து கொண்ட இளையபல்லவன் மட்டும் சற்றும் கவலையின்றி, தமிழர் இல்லங்களுக்குப் பின்னால் தூரத்தே தெரிந்த தைலகிரியின் அடிவாரத்தைத் தொட்டுக் கொண்டிருந்த மலர்த் தோட்டங் களை நோக்கி நடந்து கொண்டிருந்தான்.



அத்தியாயம் 26

# பதினொரு மாற்றுத் தங்கம்!

கடல்மோகினியென்று பிரசித்தி பெற்ற மாநக்காவரம் தீவின் துறைமுகத்தில் கருணாகர பல்லவன் காலை வைத்து வாரம் ஒன்றுக்கு மேல் ஓடிவிட்டாலும், அவனைச் சேர்ந்தவர்களைச் சூழ்ந்திருந்த ஆபத்து மட்டும் சிறிதும் குறையாமல் நாளுக்கு நாள் வளர்ந்து வந்ததன்றி, அந்த ஆபத்தை வளர்ப்பதற்குத் தேவையான அனைத்தையும் சோழர் படைத்தலைவனே செய்து வந்தான். அவன் செய்கைகளையும் போக்கையும் கவனித்து வந்த கண்டியத் தேவனும் அமீரும் மற்ற மாலுமிகளும் பெரும் பீதியை அடைந்தனர். தங்கள் அனைவரையும் தீர்த்துக்கட்டி அவனையும் அழித்துக்கொள்ள வேண்டுமானால் இளைய பல்லவன் பிரதிதினம் ஏற்படுத்தி வந்த சூழ்நிலையை விட வேறெதுவும் தேவையில்லை என்பதை அவர்கள் புரிந்து கொண்டாலும் அதைப்பற்றி அவனைக் கேட்க யாருக்கும் துணிவில்லாததால் உள்ளுக்குள்ளேயே புழுங்கிக் கொண்டிருந்தார்கள். சேந்தனை விட்டுக் காஞ்சனாதேவி யிடம் நடக்கும் விஷயங்களைத் தெளிவுபடுத்தி இளைய பல்லவ.னை எச்சரிக்கும்படி செய்யலாமென்றாலும் அதற்கும் வழியில்லாது போயிற்று. கண்டியத்தேவனுக்கும் அமீருக்கும் கூலவாணிகன் சேந்தனை விட்டு அவர்கள் காஞ்சனா தேவிக்கு ஒப்பந்த விவரங்களைச் சொல்லச் செய்ததன்றி அடுத்து நடந்த விவரங்களையும் அவ்வப்பொழுது விவரிக்கச் சொல்லியிருந்தும் அந்தத் துறையிலிருந்தும் பயனேதுமில்லாது போயிற்று. கடாரத்தைக் கொள்ளையிட கங்கதேவனிடம் இளையபல்லவன் ஒப்பந்தம் செய்து கொண்டதைப் பற்றிக் கேள்விப்பட்டதும் வெகுண்ட காஞ்சனாதேவி அடுத்த இரு

நாட்களில் நடந்ததைப் பற்றிக் கேட்டதும் தலையிட எண்ணத்தான் செய்தாளென்றாலும் இளையபல்லவனைத் தனிமையில் சந்திப்பதும் பேசுவதும் அறவே முடியாமல் போய்விட்டது அவளுக்கு. ஒப்பந்தம் செய்துகொண்டு முறி எழுதி முடித்த நாளிலிருந்து எப்படி இளையபல்லவன் கடல் புறாவின் பக்கமே வராமல் கங்கதேவன் மாலுமி களிடையிலேயே சுற்றிக்கொண்டிருக்கிறானென்பதையும் அவர்களுடனேயே உண்டு உறங்கிக் கொண்டிருக்கிறான் என்பதையும் சேந்தன் மூலம் அறிந்த காஞ்சனாதேவி ஒருநாள் இரவு கங்கதேவன் மாலுமிகளிருந்த இடத்துக்கே இளைய பல்லவனைத் தேடிச் சென்றாள். அப்படிச் சென்றவள், கங்கதேவன் மாலுமிகளிருந்த இடத்தையும் அங்கிருந்த நிலைமையையும் கண்டு நீண்ட நேரம் பிரமித்துப் பல விநாடிகள் நின்றுவிட்டாள்.

அர்த்த சந்திர வடிவத்திலிருந்த அந்தத் துறைமுகத்தின் கிழக்குக் கோடியில் கடல்புறாவும் அதன் மாலுமிகளும் தங்கியிருந்தார்களென்றால் அதன் மேற்குக் கோடியில் கங்கதேவன் மாலுமிகள் தங்கியிருந்தார்கள். போரிட அணி வகுத்து இருக்கும் இரு நிலப்படைகள் போல தனித்தனியா யிருந்த அந்த இரு கூட்டங்களையும் கண்ணெடுத்துப் பார்த்த கடாரத்து இளவரசி கங்கதேவன் ஆட்கள் கடல் புறாவின் ஆட்களைவிட எத்தனை மடங்கு அதிகமென்பதை அன்று தான் நேரில் பார்த்தாளாகையால், “இவர்களிடமிருந்து நாம் எப்படி மீளப் போகிறோம்” என்ற பெரும் பயம் அவள் இதயத்தைச் சூழ்ந்து கொள்ளவே தயங்கித் தயங்கி நடந்த கால்களுடன் இளையபல்லவன் இருக்குமிடத்தை அடைந்தாள் அவள். சுமார் நூறு பந்தங்கள் பல இடைவெளி களில் எரிந்து கொண்டிருந்ததையும் அந்த இடவெளிகளில் சுமார் ஆயிரத்துக்கு மேற்பட்ட மாலுமிகள் பலப்பல கூட்டங் களாகப் பிரிந்து உட்கார்ந்திருந்ததையும் அத்தகைய கூட்ட மொன்றுக்கு நடுவில் இளையபல்லவன் உட்கார்ந்து மிகவும் குள்ளமாயிருந்த ஒரு மாலுமியுடன் பகடையாடிக் கொண்

டிருந்ததையும், சுற்றிலுமிருந்தவர் மதுவைக் குடித்துக் கொண்டே நகைத்துக் கூச்சல் போட்டுக் கொண்டிருந்த தையும் கவனித்த காஞ்சனாதேவி மிகுந்த அருவருப்புடனேயே இளையபல்லவனிருந்த இடத்தை நாடி அவனுக்குப் பின்னால் நின்றாள். அவன் உட்கார்ந்திருந்த கூட்டம் மட்டும் கடற்கரையின் அலைகளுக்கு வெகு அருகாமையிலும் மற்றக் கூட்டத்தினரை விட்டுச் சற்றுத் தள்ளியுமிருந்ததால், மற்றக் கூட்டங்களைக் காஞ்சனாதேவி கவனித்தாலும் அக்கூட்டங்கள் அவளைக் கவனியாமலே அவள் இளைய பல்லவன் இருந்த இடத்தை அணுக முடிந்தது.

அந்தக் கூட்டத்துக்கு நடுவே ஒரு பெரும் பந்தம் நடப்பட்டு அதன் ஒரு புறத்தில் நாற்சதுரச் சிறு கம்பளம் ஒன்று விரிக்கப்பட்டிருந்தது. பந்தத்துக்கு இருபுறத்திலும் உட்கார்ந்து இளையபல்லவனும் குள்ள மாலுமியும் பகடையாடிக் கொண்டிருந்ததைக் கவனித்துக்கொண்டே இளையபல்லவன் பின்னால் சென்று நின்ற காஞ்சனா தேவியும் சிறிது நேரம் பகடையாட்டத்தைக் கவனித்தாள். இளையபல்லவன், "நான்கு, ஐந்து," என்று பலக்கக் கூவிக் கொண்டு பகடைகளை உருட்டினாலும் அவனுக்கு வெற்றி அதிகமாகக் கிடைக்கவில்லை. எதிரிலிருந்த குள்ளன் பார்வையும் குள்ளநரி போலிருந்ததன்றி அவன் சத்தம் போடாமல் ஏதோ இனிப்புப் பண்டத்தைச் சாப்பிட்டு விட்டவன்போல் நாவை வெளியே நீட்டிநீட்டி உதடுகளைத் துழாவிக்கொண்டே காய்களை உருட்டி அடிக்கடி வெற்றி யடைந்து கொண்டிருந்தான். அவன் வெற்றியடைய அடைய இளையபல்லவன் தனது மடியிலிருந்து பொற்காசுகளைப் பணயத்துக்காகத் தூக்கித் தூக்கிச் சிறு கம்பளத்தின் மீது எறிந்து கொண்டிருந்தான்.

அந்த நாணயங்கள் எறியப்பட்ட சமயங்களிலெல்லாம் மாலுமிகளிடையே பெரும் கரகோஷம் ஏற்பட்டதையும் ஒவ்வொருவர் பார்வையிலும் பொன்னுக்கான வெறி மிதமிஞ்சிப் பரவியதையும் கண்ட காஞ்சனாதேவி அவர்களை

அந்த நிமிஷத்தில் பெரிதும் வெறுத்தாள். அதுமட்டுமின்றி தான் அத்தனை அருகில் பின்னால் வந்து நின்றிருந்தும் அதைச் சிறிதும் கவனியாத அளவுக்குச் சூதாட்டத்தில் இளையபல்லவன் சிந்தை ஆழ்ந்து கிடந்ததை எண்ணிப் பெரும் கோபமும் கொண்டாள். ஒற்றைக் குண்டலம் மட்டுமே அணிந்திருந்த குள்ளனிடம் சூதாடுவதிலிருந்த ஊக்கம் பின்னால் வந்திருப்பவளை உணரக்கூடாத அளவுக்கு இளையபல்லவன் உணர்ச்சியை உறையச் செய்துவிட்டதை எண்ணிக் கோபப் பெருமூச்சும் விட்ட அவள் அந்த இடத்தில் இருக்க இச்சைப்படாமல் திரும்பிச் செல்லக் காலைத் திருப்பினாள். ஆனால் அந்த முயற்சி சிறிதும் பலிக்கவில்லை. அவள் காலைத் திடீரெனப் பற்றிய இளையபல்லவனின் கை அந்தக் காலை ஒரு மடக்கு மடக்கி இழுக்கவே அவள் நிலை தப்பி அவன் பக்கத்திலிருந்த மணலில் விழுந்தாள். அப்படி விழுந்ததும் கலைந்த ஆடைகளைச் சரிப்படுத்திக்கொண்டு, எழுந்திருக்க முயன்ற அந்தக் கட்டழகியைக் கருணாகர பல்லவனின் இடதுகரம் இடையைச் சுற்றிச் சென்று தன் பக்கலில் பலமாக இழுத்துக்கொண்டது. இப்படியொரு பெண்ணின் வரவால் பகடையாட்டம் மட்டுமின்றி சத்தமும் திடீரென நிற்க, மாலுமிகள் காஞ்சனாதேவியை உற்று உற்றுப் பார்த்தனர். கடல் புறாவிலிருந்து அவள் நேரிடையாக கங்கதேவன் மாளிகைக்கு அழைத்துச் செல்லப்பட்டபோது அரைகுறையாகவே அவளைப் பார்த்திருந்த அந்த மாலுமிகள் அவளை வெகு அருகில் பார்த்ததும் பெரும் பிரமிப்பையும் ஓரளவு அச்சத்தையும் அடையவே, சிலர் கைகளில் பிடித் திருந்த குடிக் குவளைகள் பிடித்தபடியே நின்றனர். சிலர் வாயில் குடிக்க வைத்த குவளையை எடுக்காமலே நின்றார்கள். அதுவரை உட்கார்ந்திருந்த மாலுமிகளில் சிலர் எழுந்தும் விட்டார்கள். அதிக வெப்பத்தின் காரணமாக இடுப்பில் மட்டும் வேஷ்டிகளும் சராய்களும் பலவிதமாக அணிந்து அரைநிர்வாணமாக இருந்த அந்த மாலுமிகள் சதா கடலில் திரிந்ததால் இயற்கையுடன் அதிகமாக உறவாடி, திடகாத்திரத்

தைப் பெற்றிருந்ததையும் அவர்கள் கழுத்துக்களிலும் கைகளிலும் சிலர் கால்களிலும்கூட விசித்திரமான பல நாட்டு ஆபரணங்களிருந்ததையும் கவனித்த காஞ்சனாதேவி, ஏதோ விசித்திரப் பிறவிகளைப் பார்க்கும் நகர மங்கையென அவர்களை நோக்கினாள். அத்துடன் தன்னை இழுத்து மணலில் தள்ளி அணைத்த இளையபல்லவனையும் நோக்கிய அவள், அவனும் அரை இறுதியுடன் அந்தப் பண்பற்ற மாலுமிகளைப் போலவே யிருந்ததையும், கழுத்திலும் ஒரு வீரச்சங்கிலி அணிந்திருந்ததையும், அதன் நடுவில் ஒரு பெரும் மாணிக்கம் அந்த இரவின் இருளையும் கிழித்துக் கொண்டு நெருப்புத் துண்டமென ஜொலித்ததையும் கண்டு, 'சந்தேக மில்லை; இவர் முழுக்க முழுக்க கள்வராகிவிட்டார்,' என்று ஒரு முறைக்கு இரு முறையாகத் தனக்குள் சொல்லிக் கொண்டாள். அவள் எண்ணங்கள் சரியென்பதற்கு அடுத்த விநாடியே அத்தாட்சியளித்த இளையபல்லவன், அத்தனை பேர் முன்னிலையிலும் அவளை இடது கையால் முரட்டுத் தனமாக இழுத்து அணைத்துக்கொண்டான். அத்துடன் எதிரே வளைத்துக் காஞ்சனாதேவியின் அழகில் பிரமித்து நின்றவர்களை நோக்கி, "ஏன் வாயடைத்து நிற்கிறீர்கள்? இவள் அழகைப் பார்த்தா? இவளுக்கிணையான அழகி இந்தக் கீழ்த் திசையில் கிடையாது," என்று விரைந்து கூவினான்.

அப்பொழுதும் மாலுமிகளிடை உற்சாகம் பிறக்கவில்லை. அவர்கள் கூச்சலிடவுமில்லை. காஞ்சனாதேவியின் கண்களில் தெரிந்த ஏதோ ஒரு பயங்கர ஒளி அவர்கள் வாயை அடைத்து விட்டிருக்க வேண்டும், கண்களை ஸ்தம்பிக்கச் செய்திருக்க வேண்டும். அவர்களே பேசாமல் சில விநாடிகள் அவர்களைப் பார்த்துக்கொண்டே நின்றார்கள். இளையபல்லவன் அவர்கள் ஸ்தம்பித்த நிலையைக் கண்டு உள்ளூர மகிழ்ந்தாலும் மீண்டும் இரைந்தான், "என்ன நான் சொல்லுவது உங்கள் காதில் விழவில்லை? இவள்தான் கீழ்த் திசையில் சிறந்த அழகி யென்கிறேன். யாராவது மறுத்துச் சொல்ல இஷ்டப் படுகிறீர்களா?" என்று. அது மட்டுமின்றி மறுத்தால் என்ன

ஆகும் என்பதை உணர்த்த இடையில் செருகியிருந்த குறுவா ளொன்றையும் பலவந்தமாகத் தடவினான். அவன் பார்வை யையும் கூச்சலையும் அவன் குறுவாளைத் தடவியதையும் கண்ட மாலுமிகள் மெள்ள சுய நிலை அடைந்தனர். எதிரே உட்கார்ந்திருந்த குள்ளன் தன் சிறு கண்களால் இளைய பல்லவனை ஏறெடுத்து நோக்கி, "இளையபல்லவர் எதைத் தேர்ந்தெடுத்தாலும் அது சிறந்ததாகத்தானிருக்கும்" என்று கூறி அவன் மார்பில் சுடர் விட்ட மாணிக்கத்தையும் விரலால் சுட்டி, காஞ்சனாதேவியையும் சுட்டிக்காட்டினான். இதைக் கேட்ட மற்ற மாலுமிகள் பெரிதாகக் கரகோஷம் செய்தார்கள். பலர் 'ஆம், ஆம்' கொட்டினார்கள்.

இளையபல்லவன் விழிகள் அவர்களை மீண்டும் வட்டமிட்டன. "அந்த மாணிக்கத்துக்கு நான் வைத்திருக்கும் மதிப்பை உங்களுக்குச் சொல்லி இருக்கிறேனல்லவா?" என்று வினவினான் அவன், காரணமாக மார்பில் சுடர்விட்ட மாணிக்கத்தைச் சுட்டிக்காட்டி.

"ஆம் ஆம்" என்று மீண்டும் கூவினார்கள் மாலுமிகள்.

இளையபல்லவன் கூர்விழிகள் அவர்களை மீண்டும் வட்டமிட்டன. அவன் இடதுகை காஞ்சனாதேவியை முரட்டுப் பிடியாக அழுத்தியது. வலதுகை அவள் கன்னத்தைச் செல்லமாகத் தட்டிக் காட்ட, அவன் உதடு களிலிருந்து சொற்கள் நிதானமாக உதிர்ந்தன, "அந்த மாணிக்கத்தை விட இந்த மாணிக்கத்தைப் பெரிதாக நான் மதிக்கிறேன்" என்று.

மாலுமிகள் நொடிப் பொழுதில் உணர்ந்து கொண் டார்கள் அவன் உள்ளத்தை. "புரிகிறது" என்பதற்கு அடையாளமாக அவர்களில் பலர் தலையையும் அசைத் தார்கள். "புரிகிறது" என்று இரைந்தே சொன்னான் குள்ளன்.

"நான் கடல்புறாவைக் கொடுத்துவிடுவேன். நான் கைப் பற்றி இருக்கும் இரு மரக்கலங்களைக் கூடக் கொடுத்து விடுவேன். இந்த மாணிக்கம்— இது உங்கள் அரசர்

கொடுத்தது— இதைக் கூடக் கொடுத்துவிடுவேன். ஆனால்..." என்ற இளையபல்லவன் பேச்சை அரைகுறையாக விட்டான். அந்த அரைகுறைப் பேச்சில் பயங்கர ஒலி பூர்ணமாகப் படர்ந்துநின்றது. அவன் அந்த வார்த்தைகளை அங்கு பேச வேண்டிய அவசியம் காஞ்சனாதேவிக்குப் புரியவில்லை. மாலுமிகளுக்கும் காரணம் புரியவில்லையே தவிர அவன் உக்ரம் நன்றாகப் புரிந்தது. ஆனால் மற்ற மாலுமிகளை விடக் கூர்மையான புத்தியைப் படைத்த பகடையாடிய குள்ளன் மட்டும் கேட்டான், "இதை எதற்காக எங்களுக்குச் சொல் கிறீர்கள்?" என்று.

இளையபல்லவன் விழிகள் அவன் முகத்தில் நிலைத்தன. பிறகு மற்றவர் முகங்களை ஆராய்ந்தான். "வெகு சீக்கிரம் உங்களில் பலர் என்னிடம் மாலுமிகளாக அலுவல் புரியலாம். ஆகவே உங்கள் தலைவனின் நோக்கங்கள், ஆசைகள், உறுதிகள் இவை என்ன என்பதை நீங்கள் புரிந்து கொள்வது நலமல்லவா?" என்று கேட்டு எதிரே குவளையிலிருந்த மதுவைச் சிறிது அருந்திக் குவளையைக் கீழே வைத்தான்.

குள்ளனும் இதரரும் அவனை நோக்கினார்கள். ஏற்கெனவே ஈட்டிகள் போலிருந்த விழிகளின் பயங்கரத்தை உதட்டு மூலையில் வழிந்த மது அதிகப்படுத்திக் காட்டியது. இளையபல்லவன் எத்தனை சகஜமாகவும் வேடிக்கையாகவும் பகடையாட முடியுமோ அத்தனை பயங்கரமாகவும் உறுதி யாகவும், தலைமை வகித்துத் தங்களை நடத்தவும் முடியு மென்பதை அறிந்த அவர்கள் உள்ளூரச் சிறிது அச்சமும் கொண்டார்கள். அப்படி அச்சத்தை ஓரளவு அவர்களிடம் புகவிட்ட இளையபல்லவன் மடியிலிருந்த இரண்டுபிடி தங்க நாணயங்களை எடுத்துக் கம்பளத்தில் வீசிவிட்டுச் சரேலெனக் காஞ்சனாதேவியையும் இழுத்துக்கொண்டு எழுந்திருந்தான். எழுந்து நின்ற தோரணையில் அவர்களை நோக்கி, "இதோ இருக்கும் உங்கள் தலைவன் பகடையில் அதிகப் பொற்காசு களைக் கைப்பற்றி விட்டான். மீதிப் பொற்காசுகளை நீங்கள்

எடுத்துக் கொள்ளுங்கள். அத்தனையும் சொர்ணபூமியின் பொற்காசுகள். பத்தரை மாற்றுத் தங்கம். ஆனால் என் பக்கத்தில் நான் கைப்பற்றி இருப்பது பதினோரு மாற்றுத் தங்கம். இதை யாராவது கைப்பற்ற வந்தால் கொலை நடக்கும். இந்தக் கடல் மோகினியைக் கொளுத்தக்கூட நான் தயங்க மாட்டேன்," என்று பயங்கரக் குரலில் சொன்னான். இதைச் சொன்னவன் அடுத்த விநாடி வெறிச் சிரிப்புச் சிரித்தான். "அடடே, எதற்கு இத்தனை சீற்றம் எனக்கு? கடாரத்தையே கொள்ளையிட என் உதவி தேவை. அப்படியிருக்க எனக்குத் தேவையான இந்த ஒரு பெண்ணுக்குச் சண்டையிட யார் வரப்போகிறார்கள்?" என்று கூறிவிட்டு, "வா மஞ்சளழகி" என்று அவர்கள் காதுபட இரைந்துவிட்டு அவளை இழுத்துக் கொண்டு அந்தக் கூட்டத்தைவிட்டு வெளியே நடந்தான். அப்படி அந்தக் கூட்டத்தைவிட்டு வெளியே நடந்தவன் கூட்டமில்லாத இடத்தை நோக்கிச் செல்லாமல் மற்றக் கூட்டங்களுக்கு இடையே புகுந்து காஞ்சனாதேவியை அணைத்த வண்ணம் சென்றான்.

காஞ்சனாதேவிக்கு வெட்கத்தால் பிராணன் போய்விடும் போலிருந்தது. இரண்டு மூன்று முறை அவனிடமிருந்து திமிறவும் முயன்றாள். அவன் இரும்புக் கரத்திலிருந்து, மீளமுடியாததால் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு உடம்பெல்லாம் நாணத்தால் கூனிக் குறுகச் சென்றாள். இம்மாதிரிப் பத்துப் பதினைந்து கூட்டங்களில் நுழைந்து சென்ற இளையபல்லவன், கடைசியாக கங்கதேவன் மாளிகையை நோக்கி நடக்கலுற்றான். கூட்டத்தை விட்டு இருவரும் அகன்று சிறிது தூரம் வந்ததும் காஞ்சனாதேவி தன்னைத் திமிறி விடுவித்துக் கொண்டு வேகமாக நடக்க முற்பட்டாள். இளையபல்லவனும் அவளை வேகமாகத் தொடர சட்டென்று நின்று திரும்பிய அவள், "என்னைத் தொடர வேண்டாம்," என்று கூவினாள்.

இளையபல்லவன் நகைத்தான். "ஏன்?" நகைப்புக்கிடையே கேட்டான்.

"உங்களை நான் வெறுக்கிறேன்" என்றாள் அவள்.

"அது நல்லது."

"என்ன நல்லது."

"என்னை வெறுப்பது கங்கதேவனுக்குப் பிடிக்கும்."

"இளையபல்லவரே?" காஞ்சனாதேவியின் குரலில் உக்கிரம் நிரம்பியிருந்தது.

"அப்பா! உன் குரலில் என்ன கடுமை!" என்ற இளைய பல்லவன் இளநகை பூத்தான்.

"கடுமையைத் தவிர வேறெதை எதிர்பார்க்கிறீர்கள்?" சீறினாள் அவள்.

"இனிமையை" என்றான் இளையபல்லவன்.

"அது இனி என்னிடமிருந்து கிடைக்காது."

"ஏன்?"

"உமது போக்கு..."

"அதற்கென்ன?"

"வரவரக் கொள்ளைக்காரன் போக்காயிருக்கிறது."

"அகூதாவின் உபதலைவன் வேறெப்படியிருப்பான்?"

"நீங்களே ஒப்புக்கொள்கிறீர்களா?"

"எதை?"

"கொள்ளைக்காரனென்பதை."

"ஆம். ஒப்புக்கொள்கிறேன்!"

காஞ்சனாதேவியின் மார்பு மிதமிஞ்சிய கோபத்தால் எழுந்து எழுந்து தாழ்ந்தது. இருமுறை பெருமூச்சும் விட்டாள் அவள். "நீங்கள் கடாரத்தைக் கொள்ளையிடப் போவது உண்மைதானா?" என்று மிகுந்த சீற்றத்துடன் கேட்டாள் காஞ்சனாதேவி.

"ஆம். அதுதான் உத்தேசம்" என்ற இளையபல்லவன் நகைத்தான்.

"இதை என்னிடம் சொல்ல உங்களுக்கு என்ன துணிச்சல்?" என்று கூவிய அவள், "இளையபல்லவரே! நான் கடாரத்தின்..." ஏதோ சொல்ல முற்பட்டதும் ஒரே தாவில் அவளை நெருங்கி அவளை இழுத்து அவள் அழகிய வாயை அழுந்தப் பொத்திய இளையபல்லவன், "போதும் நிறுத்து" என்று இரைந்தான்.

அவன் செய்கை அவளைப் பெரும் கோபத்திற்குள்ளாக்கியதால் அவள் முகம் குங்குமச் சிவப்பாகச் சிவந்து ஜொலித்தது. அதை நோக்கிய இளையபல்லவன், "நீ பதினொரு மாற்றுத் தங்கம்தான். ஆனால் என் அலுவல்களுக்குக் குறுக்கே வருவதை மட்டும் நான் விரும்பவில்லை. நினைப்பிருக்கட்டும் மஞ்சளழகி" என்று சற்றுக் கோபத்துடன் கூவி மஞ்சளழகி என்ற பெயரை அழுத்தியும் சொன்னான்.

"உண்மை உண்மை" என்று அவர்களுக்குப் பின்னாலிருந்து எழுந்த சொற்கள் அவ்விருவரையும் பிரித்தது. அவர்களுக்குப் பின்னால் புன்சிரிப்புடன் நின்றுகொண்டிருந்தான் கங்கதேவன்.





# கடல் புறா

## 27. கடல் மணலில் கோடுகள் சில...

அத்தியாயம் 27

# கடல் மணலில் கோடுகள் சில...

கடாரத்தைக் கொள்ளையிடக் கருணாகர பல்லவன் திட்டமிட்டிருந்ததை அவன் வாயினாலேயே கேட்டதாலும், தான் கடாரத்தின் இளவரசியென்று சொல்ல முற்பட்டதும் அவன் தன்னை வலிய இழுத்து 'இளவரசி' என்ற பதம் வெளிவருமுன்பே வாயை இறுகப் பொத்தி விட்டதாலும் விளைந்த கோபத்தினால் முகம் சிவக்க உள்ளம் துடிக்கத் திணறிய காஞ்சனாதேவி, 'என் அலுவலில் நீ குறுக்கிடுவதை நான் விரும்பவில்லை' என்று இளையபல்லவன் கூறியதை கங்கதேவன் 'உண்மை, உண்மை,' என்று ஆமோதித்ததும், முதலில் ஏற்பட்ட உள்ளக் கொதிப்பு அதிகமாகியதால் இளையபல்லவன் அவளை விடுவித்ததும் எதிரே நின்ற இருவரையும் அவள் சில விநாடிகள் மாறிமாறிச் சுடுநோக்கு நோக்கினாள். தனது சொந்த நாட்டைக் கொள்ளையிடுவதில் கூட்டுச்சேர்ந்த அந்த இருவரையும் பொசுக்கிவிடும் ஜ்வாலையைக் கக்கிய விழிகளுடன் நோக்கிய காஞ்சனாதேவி அடுத்த விநாடி அவ்விருவரும் நின்ற இடத்தில்கூட நிற்க இஷ்டப் படாமல் மாளிகையை நோக்கி ஓட்டமும் நடையுமாக விரைந்து சென்றாள். அவள் போவதைப் பார்த்துக் கொண்டிருந்த இருவரில் இளையபல்லவனே அவளைப் பார்ப்பதை விட்டு கங்கதேவனை நோக்கினான். கங்கதேவன் கண்கள் இரவு தந்த அந்த இருட்டிலும் அவள் போவதை விழுங்கிக் கொண்டிருந்தன. அவன் நின்ற தோரணையிலிருந்தே அவன் உள்ளத்தில் அலைமோதிக் கொண்டிருந்த காமவெறியைக் கண்ட இளையபல்லவன் அந்தக் கட்டழகிமீது அந்தப் பாதகன் கண்களை நீண்ட நேரம் நிலைக்கவிட விரும்பாமல் அவன் தோளில் இருமுறை கையால் தட்டினான்.

அதனால் சரேலென்று திரும்பி இளையபல்லவனை நோக்கிய கங்கதேவன், "மஞ்சளழகி நல்ல அழகிதான் இளைய பல்லவரே" என்றான் குரலிலும் காம ஒலி அலைபாய.

அவள் அப்படியொன்றும் பிரமாத அழகில்லை என்பதற்கு அறிகுறியாக இடது கையை இருமுறை ஆட்டிய இளையபல்லவன் கங்கதேவனை நோக்கி, "கலிங்கத்தின் கிழக்குத் திசைக் கடற்கரைத் தளபதி இங்குள்ள நாடுகளை அதிகம் சுற்றிப் பார்த்ததில்லை போலிருக்கிறது" என்றான் அலட்சியமாக.

காஞ்சனாதேவியின் அழகை அத்தனை அலட்சியப் படுத்தி இளையபல்லவன் பேசியது கங்கதேவனுக்கு வியப்பாயிருக்கவே, கன்னக் கதுப்புகளின் ஆழத்தில் புதைந்து கிடந்த அவன் கண்கள் அந்த இருட்டில்கூடப் பளிச்சிட்டன. "ஏன் பார்த்ததில்லை? அத்தனை நாடுகளையும் பார்த்திருக் கிறேன் இளையபல்லவரே, ஆனால் இத்தகைய அழகியை நான் பார்த்ததில்லை" என்றான் கங்கதேவன்.

காஞ்சனாதேவியின் அழகைப் பற்றி அந்தக் கயவனுடன் மேற்கொண்டு விவாதிக்க இஷ்டப்படாத இளையபல்லவன் அவன் குணங்களைப் பற்றிய சர்ச்சையில் இறங்கி, "பெண்ணுக்கு உடலழகு மட்டும் பிரயோசனமில்லை கங்க தேவரே! அடக்கம் வேண்டும், சொல்வதைக் கேட்கும் சித்தம் வேண்டும்" என்றான்.

"ஆம் ஆம். அது தேவைதான்" என்று கங்கதேவனும் ஒப்புக்கொண்டான்.

"அந்த இரண்டும் இவளிடம் கிடையாது" என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

"அப்படியொன்றும் அடங்காதவளாகத் தெரிய வில்லையே?" என்று காஞ்சனாதேவிக்குப் பரிந்து பேசினான் கங்கதேவன்.

"அடங்காதவளாகத் தெரியவில்லையா! நன்றாகச் சொன்னீர்கள். உடல் நலமில்லாதவள் இவள். அறையை

விட்டு வெளியே போகக்கூடாதெனச் சேந்தன் சொல்கிறான். கேட்காமல் இரவில், இந்தச் சில்லென்ற காற்றில் வெளி வருகிறாள். நான் மாலுமிகளுடன் பகடையாடிக் கொண் டிருக்கும் இடத்தில் வந்து வெட்கமின்றி நிற்கிறாள். திரும்ப அழைத்துக் கொண்டு மாளிகையில் சேர்க்க வந்தால் சீறி ஏதேதோ உளறுகிறாள்..." என்ற இளையபல்லவன் வெறுப்புடன் ஓர் 'உம்'மும் கொட்டினான்.

இளையபல்லவனிடமிருந்து உதிர்ந்த வெறுப்புச் சொற்கள் கங்கதேவன் காதில் அமுதமென விழுந்தன. காஞ்சனா தேவியிடம் கடல்புறாவின் தலைவனுக்கு ஏற்பட்டிருந்த வெறுப்பினால் தான் அடையக்கூடிய பலனை எண்ணிப் பார்த்துப் பெரும் ஆனந்தமடைந்தான் கலிங்கத்தின் கடற் படைத் தலைவன். ஆகவே சொன்னான், "சில பெண்கள் இப்படித்தான் நடந்து கொள்வார்கள். நாம்தான் பொறுக்க வேண்டும்" என்று.

பொறுமையைப் பற்றி கங்கதேவன் தனக்குப் போதிக்க முற்பட்டது இளையபல்லவனுக்கு வினோதமாயிருந்தாலும் தனது உள்ளக் கருத்தை வெளிக்குக் காட்டாமல், "நமது பொறுமைக்கும் ஓர் எல்லையுண்டல்லவா?" என்றான்.

"என்ன அப்படிப் பொறுக்காதபடி மஞ்சளழகி கேட்டு விட்டாள் உங்களை?" என்று வினவினான் கங்கதேவன்.

"அவள் கேட்டது உங்கள் காதில் விழவில்லையா?"

"அவள் பேசியபோது நான் எங்கேயிருந்தேன்?"

"எங்களுக்குப் பின்னால்தான் நின்றிருந்தீர்களே?"

கங்கதேவன் வியப்பின் வசப்பட்டு வினவினான், "என்ன! நான் நின்றதை இத்தனை இருளில் உங்களால் பார்க்க முடிந்ததா? அதுவும் நீங்களிருந்த நிலையில்" என்று.

"கண் பார்க்க வேண்டுமா? கால் நடைச் சத்தத்திலிருந்து அறியமுடியாதா?" என்று கேட்டான் இளையபல்லவன்.

அவன் கண்ணுக்கும் காதுக்கும் இருந்த சக்தியை எண்ணிப்பார்த்த கங்கதேவன் சோழர் படைத்தலைவனிடம்

மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்துகொள்ள வேண்டிய அவசியத்தைப் புரிந்துகொண்டதால், "முடியும் முடியும்" என்றான். அதைத் தொடர்ந்து, "இருப்பினும் நீங்கள் அத்தனை முரட்டுத்தனமாக அவளை இழுத்து வாயைப் பொத்த வேண்டாம்" என்று சொன்னான்.

இதைச் சொன்ன கங்கதேவன் குரலில் ஏதோ சந்தேகம் ஒலிப்பதைக் கண்ட இளையபல்லவன் காஞ்சனாதேவி சொல்ல வந்ததை எத்தனை தூரம் அவன் ஊகித்திருப்பான் என்பதை அறிய விரும்பி அவன் முகத்தில் தன் கண்களைப் பதியவிட்டான். கங்கதேவன் முகத்திலிருந்து எதையும் கண்டு பிடிக்க முடியாததால் அலுப்புச் சொட்டும் பெருமூச் சொன்றை வெளியிட்ட இளையபல்லவன், "வாய் அதிக மானால் மூடுவதைத் தவிர வேறு வழியென்ன இருக்கிறது?" என்று வினவினான்.

"அப்படியென்ன சொல்ல வந்துவிட்டாள் அவள். 'நான் கடாரத்தில்...' என்று ஏதோ ஆரம்பித்தாள். நீங்கள் தடுத்து விட்டீர்கள். வாசகத்தை முடிக்க விட்டிருந்தாலென்ன?" என்று வினவிய கங்கதேவன் குரலில் சந்தேகம் மண்டிக் கிடந்தது.

கங்கதேவன் ஏதோ சந்தேகப்படுகிறானென்பதை உணர்ந்துகொண்ட இளையபல்லவன் உள்ளூரச் சிறிது சஞ்சலப்பட்டாலும் வெளிக்குப் பரம அலட்சியத்துடன் பேசத் தொடங்கி, "வாசகத்தை முடிக்காவிட்டாலென்னவா? எத்தனை தடவை கேட்பது அந்தப் பிரதாபத்தை?" என்றான்.

"பிரதாபமா!" வியப்பிருந்தது கங்கதேவன் குரலில்.

"இதுகூடப் புரியவில்லையா உங்களுக்கு?"

"எது?"

"மஞ்சளழகிக்கும் கடாரத்துக்குமுள்ள சம்பந்தம்."

"என்ன சம்பந்தத்தைச் சொல்கிறீர்கள்?"

"மஞ்சளழகி பலவர்மன் வளர்ப்புச் செல்வியல்லவா?"

"ஆம்."

"பலவர்மன் கடாரத்து மன்னன் குணவர்மனுக்கு ஒன்றுவிட்ட சகோதரன்."

"அது தெரியும்."

"அப்படியானால் கடாரம் அவள் பெரிய தகப்பன் சொத்தல்லவா?"

"ஆம், ஆம்."

"ஆகையால் கடாரம் அவர்களுடையதாம். அதைக் கொள்ளையிடுவதை இவள் அனுமதிக்க மாட்டாளாம். இதை நான் பகடையாடிக் கொண்டிருக்கையில் மாலுமிகள் முன்பு சொன்னாள். அதனால் மாளிகைக்குப் போகச் சொன்னேன். அவள் மறுக்கவே பலவந்தமாக இழுத்து வந்தேன். மீண்டும் இங்கு அந்தப் புலம்பலைத் துவங்கினாள். வாயை மூடாமல் என்ன செய்வது கங்கதேவரே? கடாரத்தை நாம் கொள்ளை யிடாதிருக்க முடியுமா? மாலுமிகள் ஒப்புவார்களா?" என்று சடசடவென்று கோபத்துடன் சொற்களைக் கொட்டினான் இளையபல்லவன்.

கங்கதேவன் சிந்தனையில் பல விநாடிகள் ஆழ்ந்தான். இளையபல்லவன் போக்கு அவனுக்குப் பெரும் வியப்பை மட்டுமின்றிப் பயத்தையும் விளைவித்தது. கடாரத்தைக் கொள்ளையிடும் ஆசையைச் சுமார் நாலைந்து நாட்களாகவே அவன் மாலுமிகளிடம் ஊட்டிவிட்டதன்றித் தன்னிடமும் ஒப்பந்தம் செய்து முறியெழுதிய பின்பு அவர்களை அந்தப் பாதையிலிருந்து திருப்புவது முடியாத காரியம் என்பதை அவன் உணர்ந்திருந்தான். கலிங்கத்தின் கடற்படைத் தளபதிப் போர்வையில் கொள்ளைத் தொழிலில் தானும் ஈடுபட்டு மாலுமிகளையும் அவன் ஈடுபடுத்தி இருந்ததாலும், கடாரத்தின் சிறப்பைப்பற்றி அவர்கள் ஏற்கெனவே கேள்விப் பட்டிருந்ததாலும் கொள்ளைத் தொழிலில் நிகரற்ற அகூதாவின் உபதலைவனே இவ்விஷயத்தில் அவர்களை உற்சாகப்படுத்தி இருப்பதாலும் கடாரத்தை நோக்கிச் செல்வதைத் தான் தடுக்க முடியாதென்பதை கங்கதேவன்

சந்தேகமற உணர்ந்து கொண்டான். அலைகள் பெரிதாக எழுவதால் உட்புகுவது எளிதல்லாத கடாரத்தின் துறைமுகத்தைக் கைப்பற்றுவது அத்தனை எளிதல்ல என்பதையும் இவன் உணர்ந்திருந்ததால் அத்தனை பயங்கரப் படையெடுப்புக்கு இளையபல்லவன் எந்தத் துணிவுடன் அடிகோலுகிறான் என்பது புரியாததால் இதில் ஏதோ சூதிருக்கிறது என்பதை மட்டும் அவன் அறிந்து கொண்டான். இருப்பினும் அது என்ன என்று புரியாததாலும் மாலுமிகள் முன்பு தானும் ஒப்பந்தத்துக்கு உடன்பட்டு விட்டதாலும் மேலுக்கு, "ஆம் ஆம். கடாரத்தை நாம் எப்படிக் கொள்ளையிடாதிருக்க முடியும்?" என்று சொன்னான் சங்கடத்துடன். "இருப்பினும்..." என்று ஏதோ ஆரம்பிக்கவும் செய்தான்.

"இருப்பினும்? என்ன கங்கதேவரே?" என்று வினவினான் இளையபல்லவன் குரலில் சிறிது ஆத்திரத்தைக் காட்டி.

"கடாரத்தை அணுகுவது எளிதா?" என்று கேட்டான் கங்கதேவன்.

"அல்ல."

"ஆகையால் சிந்தித்து அந்த வேலையைச் செய்ய வேண்டாமா?"

"சிந்தித்துதான் குணவர்வமனைச் சிறையிலடைத்திருக்கிறோம். அவனைக் கொன்று விடுவதாகச் சொன்னால் கடார மக்கள் தாமே பணிகிறார்கள்."

"பணிய மறுத்தால்?"

இளையபல்லவன் இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லாமல் மௌனமாய் இருந்தான். அவன் மௌனத்தைத் தன் இஷ்டத்துக்குத் திருப்ப எத்தனித்த கங்கதேவன், "இதைப் பற்றிச் சிறிது யோசிப்பது நல்லது" என்றான்.

இளையபல்லவன் தனது கண்களைத் திருப்பினான் கங்கதேவன்மீது. "நம்மிடமிருப்பவர்களைப் பற்றி உங்களுக்குத் தெரியுமல்லலவா?" என்று வினவவும் செய்தான்.

"மாலுமிகளைப் பற்றித்தானே?"

"ஆம் கங்கதேவரே! இவர்கள் ஒழுங்கான சட்ட திட்டங் களுக்குப் பணியும் அரசாங்கக் கடற்படை மாலுமிகளல்ல..."

"ஆம்."

"இவர்களுக்கு நாம் ஊதியம் அளிப்பதில்லை."

"கொள்ளையில் பங்கு தருகிறோமே, அதென்ன?"

"அது பங்கு, ஊதியமல்ல. இரண்டுக்கும் வித்தியாசம் இருக்கிறது. அப்படியே அரசாங்க மாலுமிகளுக்கும் இந்த மாலுமிகளுக்கும் வித்தியாசமுண்டு. கொள்ளையிடத் தூண்டிப் பிறகு நாம் பின்வாங்கினால் நாமிருவரும் சின்னா பின்னமாகக் கிழித்தெறியப்படுவோம். இந்த உடலைக் கடற் கரைக் கழுகுகளுக்குச் சமர்ப்பிக்க நான் இஷ்டப்படவில்லை" என்ற இளையபல்லவன் தன் உடம்பைக் கையால் தட்டியும் காட்டினான்.

இளையபல்லவன் பேச்சு, வெறியனான கங்கதேவனையும் சிறிது நடுங்க வைத்தது. கொள்ளைக்காரர்கள் தலைவர் களுக்கெதிராகத் திரும்பிய பல சந்தர்ப்பங்களைப் பற்றிப் பல கொடிய கதைகளை அவன் கேட்டிருந்தபடியால் கடற் காற்றையும் மீறி அவன் உடல் லேசாக வியர்த்தது. "ஆம் ஆம். வேறு வழியில்லை. கடாரத்தைக் கொள்ளையிட வேண்டியதுதான். ஆனால் அந்தப் படையெடுப்பை நடத்தும் பொறுப்பு உங்களுடையது" என்றான் கங்கதேவன்.

இளையபல்லவன் இதழ்களில் இளநகை அரும்பியது. கங்கதேவன் கள்ளத்தனத்தை அவன் பூரணமாகப் புரிந்து கொண்டான். கடாரத்தின் பலத்தை முன்னிட்டும், அது ஸ்ரீவிஜயத்தின் ஒரு பகுதியென்ற காரணத்தாலும் அதை அணுக கங்கதேவன் அஞ்சுகிறான் என்பதை உணர்ந்து கொண்ட இளையபல்லவன் ஒருவேளை படையெடுப்பு தோல்வியுற்று மரக்கலங்கள் திரும்பக் கடல்மோகினிக்கு ஓடி வந்தால் மாலுமிகளின் சீற்றத்துக்குத் தன்னை இலக்காக்க கங்கதேவன் திட்டமிடுகிறானெனத் தீர்மானித்துக்

கொண்டான். ஆகையால் உள்ளூர நகைத்துக் கொண்ட இளையபல்லவன் சொன்னான்: "இந்தப் பெரும் பொறுப்பை எனக்களிக்க முயல்வது உங்கள் பெருந்தன்மையைக் காட்டுகிறது. இதை நீங்களே மாலுமிகள் முன்பு சொல்லி விடுங்கள்" என்று.

கங்கதேவன் உள்ளம் பெரும் பூரிப்படைந்தது. தான் விரித்த வலையில் இளையபல்லவன் விழுந்துவிட்டதைத் தனக்கேற்பட்ட பெரும் வெற்றியாகக் கருதினான் கலிங்கத்தின் கடற்படைத் தலைவன். தங்கள் வசமுள்ள மரக்கலங்களைக் கொண்டு கடாரத்தைப் பிடிப்பதென்பது பகற்கனவென்பதை அறிந்திருந்த கங்கதேவன் அந்தப் பொறுப்பை இளைய பல்லவன் மீது கட்டிவிட்டால் படையெடுப்புத் தோல்வி அடைந்து திரும்புமென்பதையும், பிறகு இளையபல்லவன் கதி அதோகதி என்பதையும் மனதுக்குள் எண்ணிப்பார்த்து இளையபல்லவன் ஒழிந்தானென்றே தீர்மானித்தான். ஆகவே அந்த மகிழ்ச்சியுடன் இளையபல்லவன் அன்று வரை கண்டு பிடிக்க முயன்று கொண்டிருந்த ஒரு முக்கிய ரகசியத்தையும் சொல்லத் துவங்கி, "இளையபல்லவரே! நீர் எனது நண்பராகி விட்டீர். பெரும் பொறுப்பையும் ஏற்கத் தீர்மானித்து விட்டீர். ஆகையால் நான் உம்மிடம் ஒரு விஷயத்தை மறைக்க விரும்பவில்லை" என்றான்.

"என்ன விஷயம் நண்பரே?"

"எனது வாழ்க்கை ரகசியம் ஒன்று."

"வாழ்க்கை ரகசியமா?"

"ஆம். பலவர்மன் சுரவேகத்தில் ஏதோ உளறியதாகக் கூறினீர்களல்லவா?"

"ஆம்."

"என்னைப் பற்றி..."

"வசைச் சொற்களை உதிர்த்தான்."

"காரணம் தெரியுமா?"

"சொல்லுங்கள்."

"என்னிடம் அச்சம் அவனுக்கு. அந்த அயோக்கியன் என் சகோதரியைக் கவர்ந்து சென்றவன். அவனைக் கொல்ல நீண்ட நாளாகக் காத்திருக்கிறேன்."

இளையபல்லவன் எண்ணங்கள் அக்ஷயமுனையை நோக்கி ஓடின. 'அகூதாவின் சகோதரியை ஜெயவர்மன் கவர்ந்தான். இவன் சகோதரியைப் பலவர்மன் கவர்ந்திருக் கிறானா? என்ன வடிகட்டின அயோக்கியர்கள் இருவரும்!' என்று தனக்குள் சொல்லிக்கொண்ட இளையபல்லவன், "அத்தனை கயவரா அக்ஷயமுனைத் தலைவர்?" என்றான் குரலில் வியப்பைக் காட்டி.

"அதோ அந்த நீலவானத்தின்மீது ஆணையாகச் சொல்கிறேன். இவன் பரம அயோக்கியன். இவனை இரண்டு நாட்களுக்குள் கொல்லாமல் விடமாட்டேன். அது மட்டு மல்ல, அதோ போனாளே அவன் மகள். என் சகோதரிக்கு அவன் செய்த கதியை அவள் விஷயத்தில் நானும் செய்தே தீருவேன்" என்று உக்கிரத்துடன் சீறிய கங்கதேவன் கையால் ஆகாயத்தைப் பயங்கரமாகச் சுட்டியும் காட்டினான்.

இளையபல்லவன் முகத்தில் எந்தவித உணர்ச்சியுமில்லை. "அவசரப்படாதீர்கள். இன்னும் ஒரு வாரம் பொறுங்கள். உங்கள் வஞ்சகத்தைத் தீர்த்துக் கொள்ளலாம்" என்றான் உணர்ச்சியற்ற குரலில்.

"ஒரு வாரம் எதற்கு?" கங்கதேவன் குரல் இருளில் பயங்கரமாக ஒலித்தது.

"ஒரு வாரம் மட்டும் வேறு முக்கிய அலுவல்களை நீங்கள் கவனிக்க வேண்டும். இன்னும் இரண்டு நாட்களில் நான் கைப்பற்றிய கலிங்கத்தின் மரக்கலங்கள் பழுது பார்க்கப் பட்டுவிடும். இப்பொழுதே அநேகமாக வேலை முடிந்து விட்டது. அவையிரண்டையும் உங்களைச் சேர்ந்த கலிங்கத்தின் மாலுமிகள் செலுத்திக்கொண்டு வேவு பார்க்கக் கடலில் ஓடட்டும்..." என்று சொல்லிக்கொண்டே போனவனை இடைமறித்த கங்கதேவன், "அவற்றில்

கலிங்கத்தின் மாலுமிகள் ஏன் செல்லவேண்டும்?" என்று வினவினான்.

"கலிங்கத்தின் கப்பல்களை கலிங்க மாலுமிகள் செலுத்துவது பொருத்தம். தவிர வேவு பார்க்கும்போது குறுக்கே கலிங்கத்தின் கலங்கள் வந்தால் உங்கள் மாலுமிகள் அவற்றைக் கலிங்கத்தின் கடற்படையைச் சேர்ந்த மரக்கலங்கள் என்று சொன்னால் நம்பிக்கையாயிருக்கும்" என்றான்.

அவன் சொல்வதில் ஆழ்ந்த காரணம் இருப்பதாகப் புலப்பட்டது கங்கதேவனுக்கு. "ஆம் ஆம். அதுதான் சரி" என்று கூறினான் அவன்.

இளையபல்லவன் மேலும் தொடர்ந்தான்: "அந்த மரக்கலங்கள் சென்றதும் நாம் கடாரத்தின் படையெடுப்புக்கு மற்ற மரக்கலங்களைச் சித்தப்படுத்தலாம். கடல் புறாவும் அதற்குள் பழுதுபார்க்கப்பட்டுவிடும். நாம் படையெடுப்புக்குச் சித்தம் செய்ய ஆரம்பித்ததும் மாலுமிகள் அந்த அலுவலில் மும்முரமாயிருப்பார்கள். அந்தச் சமயம் உங்களுக்கு மிகவும் அனுகூலம்."

இளையபல்லவன் கருத்து சரியென்றே பட்டதால் கங்கதேவன் அதற்கு ஒப்புக்கொள்ளவே இருவரும் பிரிந்தார்கள். மறுநாளிலிருந்து இளையபல்லவன் பகல் வேளைகளில் கலிங்கத்தின் கப்பல்களைப் பழுதுபார்ப்பதைக் கண்டியத்தேவன் அருகிலிருந்தே துரிதப்படுத்தினான். இராக் காலங்களில் கங்கதேவனைச் சேர்ந்த மாலுமிகளின் கூட்டங்களில் கலந்துகொண்டு பொழுதைப் போக்கினான். இரண்டொரு இரவுகளில் அவன் எங்கிருக்கிறானென்று யாருக்குமே தெரியவில்லை. ஒரு குறிப்பிட்ட இரவில் அவனும் காணவில்லை. அமீரும் காணவில்லை. இதை சேந்தனிடமிருந்து அறிந்த கண்டியத்தேவன் ஏதும் விளங்காமல் விழித்தான். நாட்கள் நான்கு ஓடின. கலிங்கத்தின் மரக்கலங்கள் இரண்டும் நன்றாகச் செப்பனிடப்பட்டன. அவகாசமின்மையால் அவற்றின் அடிப்பாகங்களில் பிடித்திருந்த பாசைச் சேற்றையும் ஒட்டியிருந்த கிளிஞ்சல்களையும் கடல் பூச்சிக் கூடுகளை

யும் ஓரளவே சுரண்டியெடுக்க முடிந்தாலும் கடற் பிரயாணத் துக்கு அவை தயாராக நின்றன. கரையில் இழுக்கப்பட்டுத் தைலகிரியைப் பார்த்துக்கொண்டிருந்த அவற்றின் சர்ப்ப முகங்கள் மீண்டும் தண்ணீருக்குள் இழுக்கப்பட்டு அலை யிலிருந்து தலைநீட்டி ஆடும் கடல் நாகங்களைப் போல் காட்சியளித்தன. அவை தயாரான நாளின் இரவிலேயே அவை பயணப்படுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப் பட்டன. உணவுப் பொருள்களும், நீர்க்குடங்களும் சாரிசாரி யாகப் படகுகளில் சென்றன. அவை இரண்டிலும் கங்க தேவனைச் சேர்ந்த கலிங்கத்தின் மாலுமிகள் சுமார் நானூறு பேரும் ஏறிப் பயணப்பட்டனர். அவற்றில் ஏற்கெனவேயிருந்த கலிங்க மாலுமிகள் கரைக்குக் கொண்டு வரப்பட்டுக் காவலில் வைக்கப்பட்டனர்.

தரையிலிருந்த மாலுமிகளின் மிகுந்த ஆரவாரத்துக் கிடையே அந்த இரு மரக்கலங்களும் துறைமுகத்தை விட்டுப் பாய்விரித்து வெளியே நகர்ந்தன. அந்த வைபவத்தைக் கண்டு அமீருடனும் கண்டியத்தேவனுடனும் நின்ற இளையபல்லவன் மிகுந்த மகிழ்ச்சியுடனிருந்தான்.

அவன் மகிழ்ச்சிக்குக் காரணம் அவ்விருவருக்கும் புரிய வில்லை. கடல்புறா கைப்பற்றிய இரு மரக்கலங்களும் கங்கதேவன் மாலுமிகளின் வசமாயின. ஏற்கெனவே உள்ள நான்கு மரக்கலங்களும் கங்கதேவனுக்குச் சொந்தம். ஆகவே தனிப்பட்ட கடற்கோரைக்கருகில் கிடந்த கடல் புறா ஒன்று தான் தங்கள் கைவசம். கங்கதேவன் மரக்கலங்களில் இரண்டு அதை நோக்கி நகர்ந்து நெருங்கினால் கடல் புறா கடற் கோரைகளை நோக்கி நகர்ந்து அதன் அடிப்பாகம் சிக்கிச் செயலற்று எதிரி வசம் அகப்பட்டுக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை என்பதை உணர்ந்த கண்டியத்தேவன் பெரிதும் திகிலடைந்தான்.

அந்தத் திகிலைக் கவனித்த இளையபல்லவன் கண்டியத் தேவனை நோக்கிச் சிரித்துவிட்டு, "புரியவில்லை தேவரே, நமது நிலைமை?" என்று வினவினான்.

"புரிகிறது. நமது நிர்க்கதியான நிலை" என்றான் தேவன் வறண்ட குரலில்.

இளையபல்லவன் அப்பொழுது பதிலேதும் சொல்ல வில்லை. "இரவு வருகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சென்றான்.

இரவு ஏறி ஒரு ஜாமம் கழித்து வந்த இளையபல்லவன் ஒரு பந்தத்தைக் கொண்டு வரச்சொல்லி மணலில் நட்டான். "இதோ ஜாக்கிரதையாகக் கவனியுங்கள்" என்று சொல்லிப் பந்தம் வீசிய வெளிச்சத்தில் மணலில் சில கோடுகளை வரைந்தான். கண்டியத்தேவனும் அமீரும் வியப்பின் எல்லையை அடைந்தார்கள். மணலின் கோடுகளில் பெருங் கதை விரிந்தது. அந்தப் பெருங்கதையில் கங்கதேவன் வாழ்க்கைக் கதையும் கலந்து கிடந்தது. அமீரும் கண்டியத் தேவனும் இளையபல்லவனை நோக்கினார்கள். இளைய பல்லவனும் அவர்களை நோக்கினான். கலந்த ஆறு கண்கள் ஒன்றையொன்று மிக நன்றாகப் புரிந்துகொண்டன. கடைசி யாகப் பேசிய இளையபல்லவன் சொன்னான் அமீரை நோக்கி, "அமீர்! நாளன்றைக்கு இரவில் சேந்தன், காஞ்சனா தேவியை கங்கதேவன் குறிப்பிடும் இடத்துக்கு அழைத்துச் செல்லட்டும்" என்று.

"இந்தத் துறைமுகத்தின் மேற்குக் கோடிதானே!"

"ஆம்."

மேற்கொண்டு மற்ற இருவரும் பேசவில்லை. அவரவர் உள்ளங்கள் எரிமலைகளாயிருந்தன. இளையபல்லவன் மட்டும் எந்த விகாரமுமின்றி எழுந்திருந்து கீழே வரைந்த கோடுகளைக் காலால் அழித்துவிட்டு, கங்கதேவன் மாலுமிகள் இருந்த மேல்திசையை நோக்கிச் சென்றான்.

அத்தியாயம் 28

# மூன்றாம் நாள் இரவு

நாகமுக மரக்கலங்களிரண்டும் கடல்மோகினித் துறைமுகத்திலிருந்து பாய்விரித்துக் கடலோடிய இரவின் இரண்டாம் ஜாமத்தில் கடற்கரை மணலில் இளையபல்லவன் வரைந்து காட்டிய கோடுகள் சொன்ன கதைக்கு விவரணம் தேவையில்லாது போயிற்று, கண்டியத்தேவனுக்கும் அமீருக்கும். கோடுகள் தீர்க்கமாகவும் இடம் விட்டும் தெளிவாக வரையப்பட்டமையாலும், கப்பல்கள் கப்பல் களாகவே வளைத்துக் காட்டப்பட்டபடியாலும் துறைமுகத் தில் மறு நாளைக்கு மறு நாளிரவு எந்தெந்த இடங்களில் எந்தெந்த மரக்கலம் நிற்கவேண்டுமென்பதை இருவரும் புரிந்து கொண்டார்கள். கங்கதேவனைச் சேர்ந்த கலிங்க மாலுமிகள் நானூறு பேரும் நாகமுக மரக்கலங்களில் சென்றுவிட்டாலும், மற்றைய மாலுமிகள் அறுநூற்றுச் சொச்சம் பேர் அறியாமல் கப்பல்களை எப்படி நகர்த்த முடியும் என்பது மட்டும் புரிய வில்லை, அவர்களுக்கு. கடல் புறாவைக் கடற்கோரைகளின் பக்கத்திலிருந்து நேர்கிழக்கில் செலுத்தினால் துறைமுக வாயிலுக்குக் கொண்டு சென்று அடைத்து விடலாமென்பதை மட்டும் புரிந்துகொண்ட அமீர், இளையபல்லவன் சென்ற பின்பு கேட்டான் கண்டியத்தேவனை, "கடல் புறாவை நாம் நகர்த்திவிடலாம் துறைமுக வாயிலுக்கு. ஆனால் அதை அடுத்து நிற்கும் கங்கதேவன் மரக்கலங்கள் இரண்டையும் எப்படிக் கடற்கோரைக்குக் கொண்டு வர முடியும்?" என்று.

கண்டியத்தேவன் சிறிதும் சிந்தியாமலே அமீரை நோக்கி, "அது பிரமாதமில்லை அமீர். அந்த இரண்டிலும் மாலுமிகள் அதிகமில்லாவிட்டால் நம்மில் யாராவது ஒருவர் அந்த

மரக்கலங்களிலுள்ள நங்கூரங்களைத் தூக்கிவிடலாம்" என்றான்.

"தூக்கிவிட்டால்?" ஏதும் விளங்காததால் கேட்டான் அமீர்.

"காற்று திசை மாறி, அலைகள் திசை மாறி, வாரம் ஒன்றாகிறதைக் கவனிக்கவில்லையா அமீர்? அலைகள் இப்பொழுது கோரைகளை நோக்கி வருகின்றன. நங்கூரத்தை எடுத்தால் இரவு ஒரு ஜாமத்திற்குள் இரண்டு மரக்கலங்களும் கோரைகளை நோக்கி நகர்ந்துவிடும்" என்று விளக்கிய கண்டியத்தேவன், "இதை இளையபல்லவர் முன்னரே கவனித் திருக்க வேண்டும். அவர் கண்களிலிருந்து எதுவும் தப்புவ தில்லை" என்று கூறினான்.

அமீர் தன் பெருவிழிகளைக் கடலை நோக்கித் திருப்பினான். கடலின் பெரு அலைகள் உருண்டு வந்து தரையில் சில தாக்கின. சில கோரைகளை நோக்கி உருண்டன. அவற்றின் வேகத்தில், கடல் புறாவை மறைத்து நின்ற கங்கதேவன் மரக்கலங்களிரண்டும் கோரைகளை நோக்கிச் சாய்ந்து சாய்ந்து ஆடிக்கொண்டிருந்தன. அந்தக் காட்சியைக் கண்ட அமீர், இளையபல்லவன் மேலுக்கு அலட்சியமாயிருக் கிறானே யொழிய, கங்கதேவன் மாலுமிகள் மனோநிலை யிலிருந்து காற்று திசை மாறுவது வரை, ஒவ்வொன்றையும் அணு அணுவாகக் கவனித்து வருகிறானென்பதை அறிந்து கொண்டதால் ஆபத்துக்கள் பல சூழ்ந்து இருக்கும் சமயத்திலும் படைத்தலைவன் புத்தி தெளிந்து கிடப்பதை நினைத்துப் பெரும் வியப்படைந்தான். "ஆம். ஆம்! இளைய பல்லவரின் பார்வையிலிருந்து எதுவும் தப்புவதில்லை" என்றும் கூறினான் அமீர்.

அதை ஆமோதித்த கண்டியத்தேவன் சொன்னான், "உண்மைதான் அமீர். ஆனால் இந்தத் திட்டத்தை நாம் நிறை வேற்ற வேண்டுமானால் கங்கதேவன் மாலுமிகள் நம்மைக் கவனிக்காதிருக்க வேண்டும். அறுநூற்றுக்கு மேற்பட்ட மாலுமிகள் கண்களில் எப்படி மண்ணைத் தூவுவது?" என்று.

"அதற்கு இளையபல்லவர் ஏற்பாடு செய்வார். நாம் நமது கடமையைச் செய்வோம்" என்றான் அமீர்.

கங்கதேவனுடைய மற்றைய நாட்டு மாலுமிகளுடைய கண்கள் தங்கள்மீது திரும்பாதிருக்க இளையபல்லவன் ஏதாவது வழி வகுப்பானென்ற நம்பிக்கை கண்டியத் தேவனுக்கு இருந்தது. இருப்பினும் அதை எப்படிச் செய்வான் என்பது அவனுக்குத் தெரியாததால் மிகுந்த கவலையுடனேயே அன்றிரவு மணலில் படுத்து உறங்கினான் கண்டியத்தேவன். பக்கத்தில் படுத்திருந்த அமீருக்கு அந்தக் கவலையோடு மற்றொரு கவலையும் இருந்தது. அதைப் பற்றிக் கண்டியத் தேவனைக் கேட்கவும் கேட்டான் அவன், "தேவரே! கங்கதேவன் குறிப்பிடும் இடத்துக்கு நாளன்றைக்குக் காஞ்சனாதேவியை அழைத்துச செல்லும்படி சேந்தனுக்குச் சொல்லுமாறு உத்தரவிட்டிருக்கிறாரே இளையபல்லவர்?" என்று.

"ஆம்." கண்டியத்தேவன் குரலிலும் கவலையிருந்தது.

"இத்தனை நாள் காஞ்சனாதேவியைக் காவல் புரிய என்னை நியமித்திருந்தார்!" என்றான் அமீர்.

"அப்படியா?"

"ஆம்."

"அதனால்தான் ஒவ்வோர் இரவும் நீ காணவில்லையா?"

"ஆம்."

"அப்படியானால் நீ இன்றிரவு இங்கு படுத்திருக்கிறாயே?"

"இரண்டு நாள் முன்பிருந்தே காவல் நீங்கிவிட்டது."

"ஏன்?"

"காரணம் தெரியாது. காவல் போதும், இனி நான் பார்த்துக் கொள்கிறேன் என்று இளையபல்லவர் கூறி விட்டார்."

"சேந்தனையும் இந்தப் பக்கம் காணோமே. அவன் எங்கே?"

"தெரியாது."

"ஒருவேளை கங்கதேவன் மாளிகையிலிருக்கிறானோ?"

"இல்லை."

"பின் எங்கே போகிறான்?"

"ஒரே ஒருமுறை இரவில் அவன் தமிழர் இல்லங்களுக்குப் பின்புறம் இருக்கும் மலைக்காட்டுப் பகுதிகளை நோக்கிச் சென்றான்."

"அதைப்பற்றி அவனை விசாரிக்கவில்லையா?"

"விசாரித்தேன். அவன் சரியாகப் பதில் சொல்லவில்லை."

கண்டியத்தேவன் புரிந்துகொண்டான், இளையபல்லவன் ஒவ்வொருவருக்கும் இடும் உத்தரவிலும் ஏதோ மர்மமிருக்கிற தென்று. உத்தரவுகள் தனித்தனியாக ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு துறையில் பிறப்பிக்கப்படுவதையும் ஒருவருக்கிடும் உத்தரவு மற்றவருக்குத் தெரியாமல் வைக்கப்படுவதையும் அறிந்த கண்டியத்தேவன் மறுநாளைக்கு மறுநாளிரவில் ஏதோ பெரிய முடிவு ஏற்படப்போகிறது என்பதை உணர்ந்து கொண்டான். அது என்ன முடிவு, எவ்வகைப்பட்டது என்பதை அறிய அவனால் முடியவில்லை. யாரிடமிருந்தும் காஞ்சனாதேவியைக் காக்கவல்ல அமீரின் குறுவாளின் பாதுகாப்பிலிருந்து கடாரத்து இளவரசியைப் பிரித்ததன்றி யாரையும் காக்க முடியாத சேந்தன் துணையுடன் கங்கதேவன் குறிப்பிடும் இடத்துக்கு அவளை அனுப்ப ஏன் திட்ட மிட்டான் இளையபல்லவன் என்பதும் புரியவில்லை கண்டியத்தேவனுக்கு. கண்டியத்தேவனுக்கென்ன, மறுநாள் அந்த உத்தரவைக் கண்டியத்தேவன் சேந்தனிடம் கூறியபோது அவனுக்கும் விளங்கவில்லை. உண்மையில் அதைக்கேட்ட சேந்தன் நடுங்கினான். அந்த நடுக்கத்துடனேயே விரைந்து காஞ்சனாதேவியின் இருப்பிடத்தையும் அடைந்தான்.

கங்கதேவன் மாளிகையின் மாடியறையிலிருந்த காஞ்சனா தேவி பலவர்மன் பஞ்சணையில் ஓர் ஓரத்தில் முகத்தில்

கவலை வியாபிக்க உட்கார்ந்திருந்த தருணத்தில் அவளை அடைந்த சேந்தன் பேச நா எழாமல் பல விநாடிகள் நின்று காஞ்சனாதேவியையும் பலவர்மனையும் மாறிமாறிப் பார்த்தான். பஞ்சணையில் பலவர்மன் கண்கள் மூடிக் கிடந்தான். உயர்ந்து உயர்ந்து தாழ்ந்த மார்பு அவன் தூங்கு கிறானென்பதை வலியுறுத்தியும் நம்பாத கூலவாணிகன், "பலவர்மரே! பலவர்மரே!" என்று இருமுறை அழைத்தான்.

கூச்சலிட வேண்டாமென்று வாயைப் பொத்திக் காட்டிய காஞ்சனாதேவி, "சிறிய தந்தை உறங்குகிறார்" என்று மெள்ளச் சொல்லவும் செய்தாள்.

அவள் சொற்களைக் கூட நம்பவில்லை கூலவாணிகன். "உங்களுக்குத் தெரியாது. அவர் தூங்குவதாகப் பாசாங்கு செய்வார்" என்று அழுத்திச் சொல்லவும் சொன்னான்.

அவன் நம்பிக்கையைக் கண்ட காஞ்சனாதேவி அத்தனை கவலையிலும் இளநகை கொண்டாள். "கூலவாணிகரே, எல்லாவற்றிலும் அவநம்பிக்கை கொண்டால் வாழ்வை நடத்த முடியாது" என்றும் மெள்ளச் சொன்னாள்.

"எந்தக் காரணத்தைக் கொண்டும் நம்ப முடியாத பேர்வழிகள் இருக்கிறார்கள்" என்றான் சேந்தன்.

காஞ்சனாதேவியின் சந்திர முகத்தைக் கவலை மேகம் மீண்டும் கவ்வியது. "உண்மைதான் கூலவாணிகரே! நாம் யாரை நம்பி வாழ்கிறோமோ அவர்களே சில சமயங்களில் நமக்குத் துரோகம் செய்கிறார்கள்..." என்று மேலும் ஏதோ சொல்லப் போன காஞ்சனாதேவியை இடைமறித்த சேந்தன், "யாரைச் சொல்கிறீர்கள் தேவி! இளையபல்லவரைத்தானே!" என்று வினவினான்.

"ஆம் கூலவாணிகரே." இந்தப் பதிலைத் தொடர்ந்து சோகப் பெருமூச்சொன்றும் கிளம்பியது காஞ்சனாதேவி யிடமிருந்து.

"உங்களுக்கு என்ன துரோகம் செய்தார் அவர்?" என்று வினவினான் கூலவாணிகன். ஏற்கெனவே இளைய

பல்லவனிடம் அவநம்பிக்கையுடன் இருக்கும் காஞ்சனாதேவி யிடம் இளையபல்லவன் உத்தரவை எப்படித் தெரிவிப்பது என்றும் கலங்கினான்.

காஞ்சனாதேவி நேர்முகமாகப் பதில் சொல்லவில்லை. சுற்றி வளைத்துப் பேசினாள். பேசினாளென்றும் சொல்ல லாம், உள்ள உணர்ச்சிகளை வெளியே கொட்டினாளென்றும் சொல்லலாம். பெருமூச்சொன்றை விட்டுக் கேட்டாள் காஞ்சனாதேவி, "மஞ்சளழகியைப் பற்றிச் சொன்னீர் களல்லவா நீங்கள்?" என்று.

கூலவாணிகன் முகத்தில் குழப்பக் குறி உலாவியது. "ஆம்" என்று மென்று விழுங்கினான் அவன்.

"அவள் மீது இளையபல்லவருக்கு ஆழ்ந்த காதலிருக்க வேண்டும்," என்ற காஞ்சனாதேவி கூலவாணிகளைக் கூர்ந்து நோக்கினாள்.

கூலவாணிகன் சங்கடம் பதின்மடங்காயிற்று. "இளைய பல்லவர் சொன்னாரா அப்படி?" என்று தந்திரமாகத் தப்பித்துக் கொள்ளப் பார்த்தான் கூலவாணிகன்.

"இல்லை, அவர் சொல்லவில்லை. அவளிடம் தனக்குக் காதல் ஏதுமில்லை என்று ஆணையிடுகிறார்."

"பின் என்ன? சரியாகப் போய்விட்டது?"

"என்ன சரியாகப் போய்விட்டது?"

"மஞ்சளழகியைக் காதலிக்கவில்லை என்பது."

"எப்படிச் சரியாகப் போகும்?"

"அவர்தான் ஆணையிட்டு விட்டாரே?"

"இந்த விஷயத்தில் ஆண் பிள்ளைகளின் ஆணையை நம்பக்கூடாது."

"ஏன் நம்பக்கூடாது?"

"காதல் என்று வரும்போது..."

"உம்?"

"ஆயிரம் பொய்ச் சத்தியம் செய்வது ஆண்களுக்கு இயற்கை."

"இதில் இயற்கை வேறா?" கூலவாணிகன் குரலில் இகழ்ச்சி ஒலித்தது.

"ஆம். காதல் சம்பந்தப்பட்ட வரையில் நீர் வாணிபத்தில் சொல்லும் பொய்யைவிட அதிகப் பொய்யை இளைய பல்லவரைப் போன்றவர்கள் சொல்வார்கள்" என்றாள் காஞ்சனாதேவி.

"நானும் பொய்யனா?"

"சந்தேகமென்ன? நீர் வணிகரல்லவா?"

"வணிகரென்றால் பொய் சொல்ல வேண்டுமா?"

"அது கலக்காமல் வாணிபம் ஏது?"

கூலவாணிகன் மேற்கொண்டு அது விஷயமாக தர்க்கம் செய்யப் பிரியப்படாமல் மெள்ள தான் வந்த அலுவலைப் பிரஸ்தாபிக்க முற்பட்டு, "தேவி! இந்த வீண் விவாதம் எதற்கு? இளையபல்லவர் தங்களிடம்தான் பற்றுதல் கொண்டிருக் கிறார் என்று பாலூர்ப் பெருந்துறையிலிருந்தே நாங்களறி வோம். மஞ்சளழகி பாவம்..." என்று ஆரம்பித்ததும் காஞ்சனா தேவி குறுக்கிட்டு, "என்ன பாவம் அவளுக்கு?" என்று சீறினாள்.

பெண்களின் பொறாமையை எண்ணி வியந்த கூல வாணிகன், "அவள் தாயற்றவள்... தந்தையும் அறியாதவள்" என்று சப்பைக்கட்டுக் கட்டினான்.

"அதனாலென்ன? காதலர் இருக்கிறார். மணமுடித்துக் கொள்ளவும் தயாராயிருந்தார்."

"அவர் காதல் ஒரு நாடகம். மணம் செய்ய ஒப்புக் கொண்டது ராஜ தந்திரம்."

இதைக் கேட்டதும் சீறிப் பஞ்சணையைவிட்டு எழுந்தாள் காஞ்சனாதேவி. "அந்த நாடகமும் ராஜதந்திரமும் அவளுடன் நிற்கவில்லை கூலவாணிகரே," என்றாள் மிகுந்த கோபத்துடன்.

"வேறு எங்கு நடக்கிறது?"

"என்னிடமும் நடக்கிறது."

"இருக்காது. அங்கே அக்ஷயமுனையைக் கைப்பற்ற அந்த நாடகம் நடத்தினார்..."

"கடாரத்தைக் கைப்பற்ற இங்கு நடக்கிறது இந்த நாடகம். ஆனால் கூலவாணிகரே, ஒன்று மட்டும் சொல்லுவேன். நான் மஞ்சளழகியல்ல. என்னிடம் உங்கள் தலைவர் நாடகம் பலிக்காது. போய்ச் சொல்லுங்கள் அவரிடம், காதலைக்கூட இழப்பேன், கடாரத்தை இழக்கமாட்டேன் என்று. என் மனத்தை வேண்டுமானாலும் முறித்துக் கொள்ளுவேன். என் மக்களைக் கைவிட மாட்டேனென்று சொல்லும் படைத் தலைவரிடம்" என்று மிகுந்த ஆவேசத்துடன் பேசிய காஞ்சனாதேவி அறையில் இரண்டு மூன்று முறை பெண்புலி போல் உலாவினாள்.

அவள் சினத்தையும் உலாவலிலிருந்த உக்கிரத்தையும் கண்ட கூலவாணிகன் அவள் உண்மையில் ஆளப்பிறந்தவள் என்பதைச் சந்தேகமற உணர்ந்து கொண்டான். அத்தகைய அரசியிடம் இளையபல்லவன் இட்டுள்ள விபரீத உத்தரவை எப்படித் தெரிவிப்பதென்று அறியாமல் திருதிருவென விழித்தான் கூலவாணிகன். உலாவலைச் சற்றே நிறுத்தி அவன் தயக்கத்தையும் குழப்பத்தையும் கவனித்த காஞ்சனாதேவி தன் சினத்தை அடக்கிக்கொண்டு, "என்ன கூலவாணிகரே! என்ன யோசிக்கிறீர்?" என்று வினவினாள்.

"ஒரு முக்கிய விஷயம் சொல்ல வந்தேன்..." என்று துவங்கிய கூலவாணிகன் பயத்தால் தயங்கினான்.

"என்ன விஷயம்?" காஞ்சனாதேவியின் கேள்வி சந்தேகக் குரலில் எழுந்தது.

"இப்பொழுதுதான் கேள்விப்பட்டேன்..."

"யாரிடமிருந்து?"

"கண்டியத்தேவரிடமிருந்து."

"என்ன கேள்விப்பட்டீர்?"

"உத்தரவை."

"இளையபல்லவர் உத்தரவையா?" இகழ்ச்சி நிரம்பி நின்றது காஞ்சனாதேவியின் குரலில்.

"ஆம்."

"சொல்லும், என்ன உத்தரவு?"

"சொல்லத்தான் பயமாயிருக்கிறது."

"பயப்படாமல் சொல்லும்."

"நாளை வரையில் கவலையில்லை... ஆனால் அதற்கு அடுத்தநாள்..." என்று குளறிய கூலவாணிகன் அவள் முகத்தைக் கூர்ந்து நோக்கிவிட்டு, "தேவி! மனத்தை அலட்டிக் கொள்ளாதீர்கள். இளையபல்லவர் எந்த உத்தரவையும் யோசித்துத்தான் இடுவார்" என்றும் கூறினான்.

ஏதோ தான் அடியோடு விரும்பாத உத்தரவை இளைய பல்லவன் பிறப்பித்திருக்கிறான் என்பதையும் அதைச் சொல்லவும் கூலவாணிகன் அஞ்சுகிறான் என்பதையும் புரிந்துகொண்ட காஞ்சனாதேவி தன் உணர்ச்சிகளைப் பூரணமாக அடக்கிக்கொண்டு இதயத்தையும் இரும்பாகச் செய்து கொண்டு, "சுற்றி வளைக்க வேண்டாம். சொல்லுங்கள். என்ன உத்தரவு?" என்று வினவினாள் சுவையற்ற குரலில்.

கூலவாணிகனும் தன்னை உறுதிப்படுத்திக்கொண்டு சொன்னான் உணர்ச்சி சிறிதுமற்ற குரலில், "நாளைன்றைக்கு இரவு கங்கதேவன் குறிப்பிடுமிடத்திற்குத் தங்களை அழைத்துச் செல்ல உத்தரவிட்டிருக்கிறார் இளையபல்லவர்" என்று.

இதைக்கேட்ட காஞ்சனாதேவி உணர்ச்சி வசப்பட்டு இரையவில்லை. நின்ற இடத்திலேயே சிலையென நின்றாள். அவள் கமலமுகத்திலிருந்த சிவப்பு அடியோடு மறைந்து விட்டதால் முகம் வெளுத்துப் பளிங்குக் கல்லாகக் காட்சி யளித்தது. கண்களில் கவலையில்லை, வருத்தமில்லை, கோபமில்லை, கம்பீரம் மிதமிஞ்சி இருந்தது. நீரோட்டமுள்ள

உதடுகள் வறண்டதால் ஒருமுறை மடித்துப் பிரித்தாள் அவற்றைக் கடாரத்துக் கட்டழகி. "இதுதான் உத்தரவா? இன்னும் ஏதாவது கூறினாரா இளையபல்லவர்?" என்று சொற்கள் திடமாக அவள் உதடுகளிலிருந்து உதிர்ந்தன.

"வேறெதுவும் சொன்னதாகத் தெரியவில்லை. கண்டியத் தேவர் சொன்னதை அப்படியே சொன்னேன் நான்" என்றான் கூலவாணிகனும்.

இருவரிடமும் அடுத்த நிமிடம் மௌனம் நிலவியது. இருவர் நிலையும் பெரும் சங்கடமானது என்பதை அவ்விருவரும் புரிந்துகொண்டார்கள். கயவனும் இட அஞ்சும் உத்தரவை சோழர் படைத்தலைவரும் நற்குலத்தில் பிறந்த வருமான இளையபல்லவர் எப்படி இடத் துணிந்தார் என்று எண்ணித் திகைத்து நின்றாள் காஞ்சனாதேவி. மௌனத்தைப் பல விநாடிகளுக்குப் பிறகே கலைத்த அவள் கேட்டாள், "இந்த உத்தரவுக்கு நான் பணிய மறுத்தால்?" என்று.

சேந்தன் நேரடியாகப் பதில் சொல்லவில்லை. "இளைய பல்லவரைச் சேர்ந்த யாவரும் அவர் உத்தரவுக்குப் பணிய மறுப்பதில்லை?" என்றான் அவன்.

காஞ்சனாதேவி சில விநாடி யோசித்துவிட்டுக் கேட்டாள், "இந்த உத்தரவை அமீரோ கண்டியத்தேவரோ ஆட்சேபிக்க வில்லையா?" என்று.

"இல்லை."

"ஏன்?"

"இளையபல்லவர் முறைகேடான எதையும் செய்ய மாட்டார் என்ற உறுதி அவர்களுக்கிருக்கிறது."

"இது முறைகேடான அலுவலல்லவா?"

"அலுவலின் முடிவைப் பொறுத்தது."

"முடிவு சரியாயிருக்குமென்று எப்படிச் சொல்ல முடியும்?"

"எதுவும் நம்பிக்கையைப் பொறுத்தது. நீங்களே சற்று முன்பு சொன்னீர்கள், எல்லாவற்றிலும் அவநம்பிக்கை கொண்டால் வாழ்க்கை பலனளிக்காது என்று."

இளையபல்லவனிடம் அனைவருக்கும் இருந்த நம்பிக்கையை எண்ணி வியந்தாள் காஞ்சனாதேவி. அவள் இதயத்திலும், அத்தனை பொறாமையிலும் கோபத்திலும், அந்த விபரீதமான உத்தரவைக் கேட்ட பின்புகூட நம்பிக்கை அடியோடு மறையவில்லை என்பதை நினைத்துப் பேராச்சரியப்பட்டாள் அவள். பெண்களின் அளவற்ற நம்பிக்கையே அவர்கள் அழிவுக்குக் காரணம் என்பதைத் திரும்பத் திரும்பத் தனக்குள் சொல்லி எச்சரித்துக் கொண்டாள். அத்துடன் வேறொரு விஷயமும் அவள் நினைப்புக்கு வந்தது. 'எங்கு போனாலென்ன? தற்காத்துக் கொள்ளத் திறனில்லையா எனக்கு? இளையபல்லவரே என்னைக் காத்துக்கொள்ள அளித்திருக்கிறாரே ஒரு குறுவாள். இளையபல்லவர் கரம் என்னைக் காக்கவில்லையேல் இருக்கிறது குறுவாள்,' என்று பலமுறை தன்னைத் தேற்றிக் கொண்ட காஞ்சனாதேவி இளையபல்லவன் உத்தரவுக்குப் பணிந்து நிகழ்வனவற்றைக் கவனிக்க உறுதி பூண்டாள். ஆகவே இளையபல்லவன் இஷ்டப்படி சேந்தனை மறுநாளைக்கு மறுநாளிரவு தொடரவும் ஒப்புக்கொண்டாள். இதனால் பெரும் பாரம் இறங்கிய சேந்தன் ஆசுவாசப் பெமூச்சு விட்டு அறையை விட்டு வெளியே நடந்தான்.

மறு நாளைக்கு மறு நாளிரவு காஞ்சனாதேவி துறைமுகத்தின் மேற்குக் கோடியில் காட்டு முகப்பிலிருந்த மணற்பரப்பில் அவனைச் சந்திக்கக் கூறியிருப்பதாக கங்க தேவனிடம் சொல்லிவிட்டான் சேந்தன். சந்தோஷத்தில் கங்க தேவன் சேந்தன் முதுகில் அறைந்த அறை அந்த முதுகின் ஒரு பாகத்தைச் சின்னஞ்சிறிய கவசம்போல் எழும்பச் செய்திருந்தது.

அன்றைக்கு மறுநாளும் அதற்கு அடுத்த நாளும் அந்தத் துறைமுகம் மேலுக்குக் கோலாகலமாகக் காட்சியளித்தது.

ஆனால் புண்ணில் ஊடே செல்லும் பெரும் புற்றைப்போல் பெரும் விபரீதம் ஊடுருவிக்கொண்டு இருந்தது அந்தத் துறைமுகத்தை. கண்டியத்தேவனும் அமீரும் சேந்தனும் மிகுந்த கவலையுடன் அந்த இரவின் வரவை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். கங்கதேவன் மறுநாளும் அதற்கு மறுநாளும் பெரும் மகிழ்ச்சியில் இருந்தான். இளையபல்லவன் மனோ நிலை என்ன என்பதை யாராலும் கண்டுபிடிக்க முடியவில்லை. அவன் பழையபடி கங்கதேவன் மாலுமிகளுடன் பகடையாடிப் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தான். இப்படிப் பலரும் பலவித உணர்ச்சிகளை எதிர்நோக்கிக் கொண்டிருந்த அந்த இரவும் மெல்ல மெல்ல நெருங்கியது. அன்று நேரவிருந்த விபரீதத்தைப் பார்க்க இஷ்டப்பட்டவன் போல் பிறைச் சந்திரனும் மெள்ள மெள்ள நீலவானில் உருவெடுத்தான்.



அத்தியாயம் 29

# இடையே விழுந்த பந்தம்

ஐந்து இந்திரியங்களால் பாதிக்கப்படும் மனித இதயம் போல, ஐந்து இடங்களில் ஐந்து விதமாகப் பிரிந்து கிடந்த மாநக்காவரத்தின் அந்தப் பயங்கர இரவில் நீலவானில் தலை நீட்டிய நான்காம் பிறைமதி எட்டு நாழிகை நேரம் அந்தத் தீவின் பகுதிகளில் தனது கண்களைச் செலுத்திவிட்டு அடுத்து நேர இருந்த கோரத்தைக் காண இஷ்டப்படாமல் மெள்ள மெள்ள மறையத் தொடங்கினான். அந்தத் தீவின்மீது கண் களை ஓடவிட்ட அந்த எட்டு நாழிகைகளில் அந்தத் தீவின் ஐந்து பகுதிகளிலும் ஐந்து விதமான அலுவல்கள் நடந்து கொண்டிருந்ததையும் ஐந்து விதமான உணர்ச்சிகள் கொந்தளித்துக் கொண்டிருந்ததையும் கண்ட அந்த வான்மதியின் சித்தம்கூடச் சிறிது குழம்பி விட்டதற்கறிகுறி யாக அதன் வதனத்தை தன்னந்தனிச் சிறு மேகமொன்று சில விநாடிகள் மறைத்துச் சென்றது.

அர்த்த சந்திர வடிவத்திலிருந்த அந்தத் தீவுத் துறைமுகத் தின் தெற்குக் கோடியில் ஆடி நின்ற கடல்புறாவை நோக்கி மிக மெதுவாக ஒரு படகு நகர்ந்து சென்று கொண்டிருந்தது. அதைக் கரையிலிருந்து கண்டியத்தேவனும் அமீரும் கவனித்துக் கொண்டிருந்துவிட்டு, அது கடல் புறாவை அணுகியதும் வடபுறத்தை நோக்கி அவர்கள் இருவரும் நடந்து கங்கதேவன் மரக்கலங்கள் இரண்டிருந்த இடத்துக்கருகில் வந்து கரையில் உட்கார்ந்து கொண்டனர். துறைமுகத்தின் தெற்குக்கோடியின் முதற்பகுதியில் படகொன்று கடல் புறாவை நோக்கிச் சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் கடல் புறாவைச் சற்று அடுத்தாற்போல் லேசாக வடக்கே தள்ளி நின்றிருந்த கங்கதேவன் மரக்கலங்களிலிருந்த மாலுமிகள்

படகுகளில் தடதடவென இறங்கிக் கண்டியத்தேவனும் அமீருமிருந்த இடத்திற்கே வந்து இறங்கி வடக்குப் பகுதியை நோக்கிக் கூச்சலிட்டுக்கொண்டு கோலாகலத்துடன் நடந்தனர். இதைக் கவனித்த கண்டியத்தேவன் கண்களிலும் அமீரின் கண்களிலும் பெரும் திருப்தி நிலவியதைப் பார்த்த வான்மதி தீவின் மூன்றாம் பகுதியை நோக்கினான். ஓட்டியாணம்போல் காளத்தி நதியிலிருந்து கிளம்பி வடக்கே தைலகிரியின் அடிவாரம்வரை துறைமுகத்தை வளைத்துக் கிடந்த புஷ்ப ஓட்டியாணத்தின் காட்டுக்குள்ளே கும்பல் கும்பலாக மனிதர் நடமாட்டம் தெரிந்தது. அந்த நடமாட்டத்தில் அதிக அரவ மில்லாதிருப்பதையும் கவனித்த வான்மதிக்கு அதற்குக் காரணம் புரியாவிட்டாலும் பக்கத்திலிருந்த தாரகைகளுக்குப் புரிந்து விட்டதாதலால் அவை கண்களைப் பளிச்பளிச் சென்று சிமிட்டின.

துறைமுகத்தின் நான்காம் பகுதியான வடகோடிக் கடலோரம் மிகுந்த அமர்க்களத்துடன் காட்சியளித்தது. பல நாட்டு மாலுமிகளும் தங்கள் மரக்கலங்களை விட்டு அங்கு அதிவிரைவில் கூட முற்பட்டனர். சீக்கிரம் வர இருந்த இருட்டைக் கிழிக்க மணலில் பந்தங்கள் பல ஊன்றப்பட்டன. இடம் விட்டு இடம் விட்டு, சுமார் இரண்டு நாழிகைக்குள் அந்த இடத்தில் பிரிந்து பிரிந்து கூடிவிட்ட மாலுமிகளில் சிலர் குடிக்கத் தொடங்கினார்கள். சிலர் கம்பளங்களை விரித்துப் பகடையாடத் தொடங்கினார்கள். பாலிக்குள்ளன், பகடையை வெகுவேகமாக உருட்டிக்கொண்டிருந்தவன் தன்னை நோக்கி வந்த இளையபல்லவனை நோக்கியதும், "வாருங்கள் தலைவரே! வாருங்கள்! பொற்காசுகளைக் கொட்டுங்கள்" என்றான். இளையபல்லவன் கம்பளத்தின் முகப்பில் உட்கார்ந்துகொண்டு தனது கச்சையில் தொங்கிக் கொண்டிருந்த ஒரு பையை எடுத்து பொன்நாணயங்களைக் கொட்டினான். பகடையாடவும் உட்கார்ந்தான். ஆனால் ஆட்டம் துவங்கிய சில விநாடிகளுக்குள்ளாகவே இளைய பல்லவன் புத்தி அந்த இடத்திலில்லை என்பதையும், அவன்

பகடையை அலட்சியமாக உருட்டுவதையும், அடிக்கடி தோற்றதையும் கண்ட பாலித்தீவின் குள்ள மாலுமி, “இளைய பல்லவர் மனநிலை சரியாயில்லாவிட்டால் ஆட்டத்தை நிறுத்துவோம்” என்று அனுதாபத்துடன் கூறினான். ஒரு விநாடி தன் கண்களைக் குள்ளனை நோக்கி உயர்த்திய இளையபல்லவன், “ஆம் ஆம்! என் மனநிலை சரியில்லை. நீங்கள் ஆடுங்கள். நான் பார்க்கிறேன்” என்று கூறி, பக்கத்திலிருந்த மாலுமியொருவனைத் தனக்குப் பதில் ஆடும்படி பணித்தான். பகடையாட்டம் பலமாகத் துவங்கியது. மாலுமிகள் கூச்சலும் வெறி ஒலிகளும் அந்தப் பகுதியைப் பிளந்து கொண்டிருந்தன.

துறைமுகத்தின் ஐந்தாம் பகுதியான காட்டையடுத்த வடகோடி மணற்பகுதியில் மட்டும் ஆரவாரம் எதுவுமில்லை. பயங்கரமான அமைதி அங்கு நிலவிக் கிடந்தது. அந்தப் பகுதியை நோக்கி கங்கதேவன் மிகுந்த உற்சாகத்துடன் நடந்து கொண்டிருந்தான். அவன் அணிந்திருந்த உடையின் மேன்மையையும், நடையிலிருந்த உறுதியையும் வெறியையும் கவனித்த வான்மதி அடுத்துவரும் காட்சியைக் காண இஷ்டப் படாதவன்போல் தன் கண்களை மெள்ள மெள்ளக் குறைத்துக்கொள்ளத் தொடங்கினான். அவன் கலை குறையக் குறைய பெரிய மனிதர்கள் செல்வாக்குக் குறைந்ததும் சிறிய மனிதன் துள்ளுவதைப்போல நட்சத்திரக் கூட்டங்கள் மிகப் பெருமையுடன் தங்கள் சிற்றொளியை வீசத்தொடங்கின. அதன் விளைவாக வான்மதி மறைந்த பின்பும் தெரிந்த அற்ப வெளிச்சம் நல்ல இருளைவிடப் பயங்கரமாகக் காட்சியளித்த தானாலும் வடகோடி மணற்பரப்பை அடைந்து கொண்டிருந்த கங்கதேவன் எண்ணங்களைவிட அதிகப் பயங்கர முள்ளவையாக இல்லை.

வடகோடி மணற்பரப்பை நோக்கி நடந்து சென்ற கங்க தேவன் மனத்திலிருந்தது, அவன் எதிர்பார்த்த காதல் பூர்த்தியினாலேற்பட்ட மகிழ்ச்சியா அல்லது பழிவாங்க அவன் கொண்டிருந்த எண்ணத்தினாலேற்பட்ட பதற்றமா என்பது

அவனுக்கே திட்டமாகப் புரியவில்லை. கயவனான கங்க தேவன் அன்று அந்தச் சமயத்தில், அந்த இடத்தில், மஞ்சளழகி யென்று அவன் நினைத்துக்கொண்டிருந்த காஞ்சனா தேவியைச் சந்தேகத்துக்கிடமின்றி எதிர்பார்த்தான். இளைய பல்லவனுக்கு அவனிடமிருந்த அசிரத்தையும் கூலவாணிகன் எப்படியும் அந்த இரவில் மஞ்சளழகியை அழைத்து வருவதாகக் கூறியிருந்த உறுதியும் அவன் மனத்துக்குள் பூரணத் திருப்தியை அளித்திருந்தது. எப்படியும் அன்று தன் இச்சையைப் பூர்த்தி செய்துகொண்டு பழியையும் தீர்த்துக் கொள்வதென அவன் முடிவு செய்துகொண்டு சுற்றுமுற்றும் நோக்கினான். சற்று தூரத்திலிருந்த தமிழர் இல்லங்கள் காலியாகவும் அரவமின்றியும் கிடந்தன. அதிலிருந்த தமிழர் பலர் தன்னால் கொல்லப்பட்டதையும், மீதிப் பேர் மறைந்து விட்டதையும் எண்ணி, தமிழரைக் கொன்றும் துரத்தியும் விட்டதை எண்ணிப் பெருமையும் கொண்டான் கங்கதேவன். அதில் தங்கியிருந்த இளையபல்லவன் மாலுமிகளில் சிலரும் கடற்கரையோரம் போய்விட்டதையும் எண்ணிய அவன், அந்த இடத்தில் தனக்கு எவ்விதத் தலையீடும் இருக்காதென்ற முடிவுக்கும் வந்தான். கடற்கரையோரத்தில் மாலுமிகள் கூச்சலிட்டுச் சூதாடிக் கொண்டிருந்ததையும், மற்றொரு கோடியில் மரக்கலங்கள் கேட்பாரற்று ஆடிக்கொண்டிருந்த தையும் கண்ட கங்கதேவன், 'இப்படி சகல விதத்திலும் என் கையில் சிக்கிக்கொண்டிருக்கும் இந்த இளையபல்லவனும் ஒரு திறமை மிகுந்த தலைவனா? இல்லை இல்லை! ஒரு நாளுமிருக்க முடியாது' என்று தனக்குள் சொல்லிக் கொண்டான். இப்படி சகல விதத்திலும் தன் நிலைமை திடப்பட்டுக் கிடந்ததை எண்ணிப் பேருவகை கொண்ட கங்கதேவன், நிர்மானுஷ்யமாய் இருந்த அந்த மணற்பரப்பில் உட்கார்ந்து கொண்டு தன் மாளிகையிருந்த இடத்தை நோக்கினான். மாளிகையை நோக்கிய புறக்கண்கள் அகக் கண்களையும் திறந்துவிடவே கங்கதேவன் அங்கு படுத்துக் கிடந்த பலவர்மனைக் கண்டான். அந்த அகக்கண்கள்

கங்கதேவன் சீற்றத்தைப் பெரிதும் தூண்டிவிடவே, அவன் உதடுகள் மெல்ல நடுங்கின. பற்கள் ஒன்றையொன்று கடித்துக் கொண்டன. "பலவர்மா! அன்று என்னைக் கட்டிப் போட்டு என் எதிரில் என் தங்கையைத் தூக்கிச் சென்றாயே என் மனம் பதறப் பதற, இன்று உன் மகள் ஆகும் கதியைப் பார்" என்ற சொற்கள் யாருமற்ற அந்த இடத்தில் சற்று இரைந்தே உதிர்ந்தன. ஆனால் அடுத்த விநாடி அந்தச் சீற்றம் மறைந்தது. காஞ்சனாதேவியின் எழில் முகம் எழுந்தது அவன் இதயத்திலே. அவள் கனியிதழ்ப் புன்முறுவல் அவன் இதயத்தை நோக்கிப் பிரிந்தது. கெட்ட எண்ணமே நிரம்பிய கங்கதேவன் மனங்கூட அந்த மங்கை நல்லாளிடம் தான் கொண்ட நோக்கம் எத்தனை கெடுதல் என்பதை உணர்ந்து கொள்ளவே துன்பச் சாயை ஒன்று அவன் முகத்தில் படர்ந்தது.

எப்பேர்ப்பட்ட துஷ்டனுடைய மனமும் தனிமையில் உண்மைகளை உணர்த்தவே செய்கிறது. ஆனால் அந்த உண்மைகளும் அவற்றால் ஏற்பட்ட உணர்வுகளும் துஷ்டர்கள் மனத்தில் நீடித்து நிற்பதில்லை. அடிக்கடி ஏற்படும் வெறி, நல்ல உணர்ச்சிகளைச் சிதற அடித்துவிடுகிறது. அப்படி கங்கதேவனின் நல்ல உணர்ச்சிகளும் வெகு சீக்கிரம் சிதறின. அப்படி அவையாகச் சிதறாவிட்டாலும் அவற்றைச் சிதற அடிக்கும் மோகனாகார உருவத்துடன் சற்று தூரத்தே காஞ்சனாதேவி நடந்தாள் சேந்தன் பின்தொடர. அவர்கள் இருவரையும் தூரத்தில் பார்த்த உடனேயே எழுந்துவிட்ட கங்கதேவன் அவர்கள் அருகில் வந்ததும் "மஞ்சளழகி! வா. உனக்காகத்தான் காத்திருக்கிறேன்" என்று குதூகலத்துடன் வரவேற்கவும் செய்தான்.

காஞ்சனாதேவி அவன் உற்சாகத்தில் சிறிதும் பங்கு கொள்ளவில்லை. நாற்புறமும் ஒருமுறை பார்த்தாள். அந்தப் பார்வையைத் தவறாகப் பொருள் செய்துகொண்ட கங்க தேவன், "அச்சத்துக்கு இடமில்லை மஞ்சளழகி! இங்கு யாருமில்லை. நாமிருவர்தாம் இருக்கிறோம்" என்று கூறியவன்,

"ஓகோ! அப்படியா!" என்று சொல்லிக் கூலவாணிகனை நோக்கி, "இனி நீர் போகலாம்" என்றான்.

கூலவாணிகன் முகத்தில் ஏதோ புதுவித ஒளியொன்று பரவியது. அவன் காஞ்சனாதேவியை நோக்கினான். "உத்தரவுப்படி செய்யுங்கள் கூலவாணிகரே!" என்றாள் காஞ்சனாதேவி வறண்ட குரலில்.

அவள் யார் உத்தரவைக் குறிப்பிடுகிறாளென்பது புரிய வில்லை சேந்தனுக்கு. அவளை கங்கதேவன் சொல்லு மிடத்துக்கு அழைத்துச் சென்றுவிட்டுக் காட்டுக்குள் போய் விடும்படி இளையபல்லவன் இட்ட உத்தரவைச் சொல்லு கிறாளா, அல்லது கங்கதேவன் தன்னைச் சென்றுவிடும்படி கூறுகிறானே அதைச் சொல்லுகிறாளா என்பது புரியா விட்டாலும் இரண்டு உத்தரவுகளின் விளைவும் ஒன்று தானென்ற நினைப்பால் சேந்தன் வந்த வழியே திரும்பிச் சிறிது தூரம் சென்று மீண்டும் மேற்புறம் திரும்பிக் காட்டை நோக்கி வெகு வேகமாக நடந்தான். அவன் திரும்பிச் சென்ற உடனேயே அவனைப் பற்றிக் கவலைப்படுவதை விட்ட கங்கதேவன், காஞ்சனாதேவியை நோக்கி, "மஞ்சளழகி! உட்கார் இப்படி," என்று கூறி ஓர் இடத்தைக் காட்டி அதற்குப் பக்கத்தில் தானும் உட்கார்ந்து கொண்டான்.

காஞ்சனாதேவி அவன் உட்கார்ந்த பின்பும் நின்று கொண்டே இருக்கவே கங்கதேவன் அவளை நோக்கி, "வெட்கப்படுகிறாயா மஞ்சளழகி!" என்று வினவினான்.

காஞ்சனாதேவியின் பதிலில் இகழ்ச்சி மண்டிக் கிடந்தது. "வெட்கம் பெண்களுக்கு யாரிடம் ஏற்படும் தெரியுமோ கங்கதேவரே?" என்று வினவினாள் அவள்.

"ஏன் தெரியாது? யாரைக் காதலிக்கிறார்களோ அந்த மனிதனிடம்" என்ற கங்கதேவன் பெருமையுடன் நோக்கினான்.

"அதை நீங்கள் புரிந்துகொண்டது எனக்கு மகிழ்ச்சி யளிக்கிறது" என்றாள் அவள் மீண்டும் இகழ்ச்சியுடன்.

"அத்தனை புரிந்து கொள்ளாமல் உன்னை இங்கு வரவழைப்பேனா?"

"மாட்டீர்கள் மாட்டீர்கள்."

"இப்பொழுது உனக்குத் தெரிகிறதல்லவா?"

"எது?"

"என் விவேகம்?"

"உங்கள் விவேகமா!"

"ஆம் மஞ்சளழகி! உன்னை நான் இங்கு வரவழைக்கு முன்பு உன்னை இளையபல்லவன் வெறுப்பதை அறிந்து கொண்டேன்."

"யார் சொன்னது அப்படி உங்களுக்கு?"

"முதலில் கூலவாணிகன் சொன்னான். பிறகு இளைய பல்லவனே சொன்னான்."

காஞ்சனாதேவியின் கருவிழிகளில் சீற்றம் தெரிந்தது. "இளையபல்லவரே சொன்னாரா!" என்று சீற்றத்துடன் கேட்கவும் செய்தாள் அவள்.

"ஆம் மஞ்சளழகி. அது மட்டுமல்ல. உன்னைப் பிடிக்காததற்குக் காரணமும் சொன்னான் அவன்."

"என்ன காரணம்?"

"நீ அவனை விடாமல் சுற்றுகிறாயாம்."

"நானா?"

"ஆம்."

"ஆகவே?"

"அப்படிச் சுற்றும் பெண்களை அவனுக்குப் பிடிப்பதில்லையாம்."

"அப்படியா சமாசாரம்?"

காஞ்சனாதேவியின் குரலில் கோபம் பொங்கியது. அதைக் கவனித்த கங்கதேவன் அவளைச் சமாதானப்படுத்த

முயன்று, "நிற்காதே! உட்கார். மேலும் விஷயம் சொல்கிறேன்" என்றான்.

அவன் காட்டிய இடத்தை விட்டுச் சற்றுத் தள்ளி உட்கார்ந்த காஞ்சனாதேவி, "என்ன விஷயம்?" என்று வினவினாள். .

"உன்னை நான் அடைவதில் அவனுக்கு ஆட்சேபணை யில்லை என்பதையும் நான் புரிந்துகொண்டேன்..." என்று மெள்ள இழுத்த கங்கதேவன் அவளைக் காமம் சொட்டும் கண்களால் நோக்கினான்.

அந்தப் பார்வை அவள் சீற்றத்தை ஆயிரம் மடங்கு அதிகப்படுத்தவே கேட்டாள் அவள், "இதையும் அவரே சொன்னாரா? உங்கள் ஊகமா?" என்று.

"ஊகம்தான். ஊகிக்கும் சக்தி எனக்கு அதிகம் உண்டு," என்ற கங்கதேவன் அவளைச் சற்று நெருங்கினான்.

அவள் தள்ளி உட்கார்ந்து கொண்டாள். "ஊகிக்கும் சக்தி உங்களுக்கு அதிகமோ?" என்று வெறுப்புடன் வினவவும் செய்தாள்.

"ஆம்" என்றான் கங்கதேவன்.

"அப்படியானால் நான் யார்?" என்று கேட்டாள் அவள்.

"இதற்கு ஊகமெதற்கு? நீ மஞ்சளழகி. பலவர்மன் வளர்ப்பு மகள்" என்ற கங்கதேவன் சரேலென்று அவள் கையைப் பற்றினான்.

விநாடி நேரத்தில் அவன் கையை உதறி எழுந்து தள்ளி நின்றுகொண்ட காஞ்சனாதேவி, "நான் ஏன் இங்கு வந்தேன் என்பதை ஊகிக்க முடியுமா உன்னால்?" என்று சீறினாள்.

அவள் 'உன்னால்' என்று மரியாதையைக் கைவிட்டுப் பேசியதைக்கூடக் காமவெறியில் கவனிக்காத கங்கதேவன், "என் இஷ்டத்துக்கிணங்கி வந்தாய்" என்று கூறினான்.

காஞ்சனாதேவியின் குரல் பயங்கரமாக ஒலித்தது. "இல்லையடா முட்டாள். இளையபல்லவர் உத்தரவுப்படி

வந்தேன்” என்ற அவள் பின்னுக்கு நகர்ந்தாள் இரண்டடி, பயங்கரமாக முன்னேறிய கங்கதேவனிடமிருந்து தப்ப.

“மிகவும் நல்லது! மிகவும் நல்லது! அவனே உன்னை என்னிடம் ஒப்படைத்துவிட்டான். ஒப்படைக்கா விட்டால் தானென்ன? உன்னைப் பலவந்தமாக நான் ஏற்றுக் கொண்டிருப்பேன். உன் தந்தை பலவர்மன் எனக்குச் செய்த அநீதிக்குப் பழி வாங்கி இருப்பேன். அது மட்டுமல்ல, இந்தத் திமிர் பிடித்த இளையபல்லவனை இத்தனை நாள் அழித்து மிருப்பேன்” என்று கூறிக்கொண்டே காஞ்சனாதேவியைப் பயங்கரமாக நெருங்கினான் கங்கதேவன்.

அவன் இரண்டடி எடுத்து வைத்ததும், “பதரே! நில். இன்னும் ஓர் அடி எடுத்து வைத்தால் உன்னைக் கொன்று விடுவேன்” என்று கூவிய காஞ்சனாதேவி தன் உடல் பூராவும் போர்த்திக் கொண்டிருந்த சீலையைத் திடீரென்று எடுத்து அவன் முகத்தில் விசிறினாள். முகத்தின்மீதும் தலைமீதும் விழுந்த போர்வையை நீக்கி அவளை நோக்கிய கங்கதேவன் கண்கள் பிரமித்தன. அவள் கையிலிருந்த நீண்ட வாளின் முனை அவன் கண்களை நோக்கிக் கொண்டிருந்தது. கங்கதேவன் கண்களில் அச்சமில்லை. பிரமிப்பே மேன் மேலும் விரிந்தது. இப்படியொரு பெண், வாளும் கையுமாகத் தன்னை வரவேற்பாளென்பதை எதிர்பாராத அவன் பல விநாடிகளுக்குப் பிறகு பெரிதாக அந்தக் கடற்கரையே அதிரும் படியாக நகைத்தான்.

“நீ நகைக்கச் சமயமல்ல இது” என்ற காஞ்சனாதேவியின் சொற்கள் நிதானமாக உதிர்ந்தன.

கங்கதேவன் சிரிப்பு திடீரென உறைந்தது. அவன் முகத்தில் பயம் உலாவியது. “வேறு எதற்குச் சமயம்?” என்று வினவினான் கங்கதேவன்.

“ஆண்டவனை நினைக்க.”

“ஏன்?”

"உன்னைக் கொல்லப் போகிறேன்." இதை மிக நிதானமாகச் சொன்னாள் காஞ்சனாதேவி. அவள் சொற்களே கங்கதேவனை நடுங்க வைத்திருக்க வேண்டும். ஆனால் அதை விட நடுங்க வைத்தது மற்றொரு நிகழ்ச்சி. காஞ்சனாதேவி அவனைக் கொல்லத் தீர்மானித்திருப்பதாகச் சொல்லி முடித்ததும் அவர்கள் இருவருக்குமிடையே ஒரு பந்தம் வந்து மணலில் ஊன்றி நின்றது.

இருவரும் கலவரப்பட்டுத் திரும்பினார்கள். உணர்ச்சிகள் அடியோடு வறண்டுபோன முகத்துடன் இளையபல்லவன் பந்தம் வந்த திசையில் நின்றுகொண்டிருந்தான். அவனுக்குப் பின்னால் பாலிக்குள்ளனும் மற்ற மாலுமிகளும் நின்று கொண்டிருந்தார்கள். இளையபல்லவன் முகத்தையும் அவர்கள் முகங்களையும் நோக்கிய கங்கதேவன் இதயத்தில் பெரும் கிலி எழுந்தது.



அத்தியாயம் 30

# மரண மன்னிப்பு!

கல்லைவிடக் கடினமான உணர்ச்சி வறண்ட முகத்துடன் பந்தத்திற்கு அப்பால் நின்ற இளையபல்லவன் இதயத்திலோடிய எண்ணங்களை கங்கதேவனால் முழுதும் புரிந்துகொள்ள முடியாவிட்டாலும், இளையபல்லவனுக்குப் பின்னால் நின்ற மாலுமிகளின் முகபாவங்களிலிருந்து அவர்கள் மனப்போக்கைப் புரிந்துகொண்டதால் கலிங்கத்தின் கடற்படைத் தலைவன் இதயத்தில் பிரமிப்பும் திகிலும் ஒருங்கே கலந்து எழுந்தது. தன் செய்கையை மாலுமிகள் சிறிதும் ஆதரிக்கவில்லை என்பதை வெறுப்பு நிலவிய அவர்கள் பார்வையிலிருந்தே புரிந்துகொண்ட கங்கதேவன், எத்தனையோ பெண்களைத் தான் பிடித்துக் கெடுத்த சமயங்களில் சிறிதும் சிரத்தை காட்டாத மாலுமிகள் இந்த ஒரு பெண்ணின் விஷயத்தில் எதற்காக வெறுப்புக் கொண் டிருக்கிறார்கள் என்பது புரியாமல் திணறினான். அதுவும் இளையபல்லவனைப் பின்பற்றி அந்த இடத்திற்கு அவர்கள் ஏன் வரவேண்டும் என்பதும் விளங்கவில்லை அவனுக்கு. அதுமட்டுமல்ல, தன்னிடம் இஷ்டப்பட்டு பலவர்மன் மகளை அனுப்பியவனும், அவளிடமுள்ள வெறுப்பைத் தன்னிடமே அறிவித்தவனுமான இளையபல்லவன், எதற்காக இடையே பந்தத்தை வீசியெறிந்து உணர்ச்சியற்ற மரம்போல் நிற்கிறா னென்பதையும் கங்கதேவனால் அறிந்துகொள்ள முடிய வில்லை. இத்தனையும் அவனுக்குப் பிரமிப்பாய் இருந்த தாலும் அவற்றுக்குச் சரியான விடை காண முடியாததாலும் அவன் இதயத்தில் கோபம் மேலிடவே, உதடுகள் துடிக்கக் கண்கள் உருண்டு சீறக் கேட்டான், "யார் இங்கு வரச் சொன்னது?" என்று. மாலுமிகள் யாரும் பதில் சொல்ல வில்லை அந்தக் கேள்விக்கு. பாலிக் குள்ளன் உதடுகள் மட்டும்

ஏதோ பேச முற்பட்டுச் சட்டென்று நின்றுவிட்டது. இளைய பல்லவனின் உணர்ச்சியற்ற குரலே பதில் சொல்ல எழுந்தது, "இங்கு வர யார் அனுமதியும் தேவையில்லை எங்களுக்கு" என்று.

அதைக் கேட்டதும் மெள்ள அதுவரை காட்டிய பொறுமையை இழக்க முற்பட்ட கங்கதேவன், "இந்தத் தீவுக்கு நான் தலைவன்..." என்று துவங்கினான் பதட்டத்துடன்.

"இந்தத் தீவை யாரும் சாஸனம் செய்யவில்லை உனக்கு" என்று பதில் சொன்ன இளையபல்லவன் குரல் வறண்டு கிடந்தாலும், அந்த வறட்சியிலேயே ஒரு பயங்கரம் இருந்தது.

மரியாதையை அடியுடன் கைவிட்டு இளையபல்லவன் பேச முற்பட்டதைக் கண்ட கங்கதேவன், "இந்தத் தீவை நான் கைப்பற்றி இருக்கிறேன் என்பதை நீ உணரவில்லையா?" என்று வினவினான் கோபம் துள்ளித் தெறித்த குரலில்.

"நீ தனிப்படக் கைப்பற்றவில்லை. இதோ எனது பின்னால் நிற்கும் மாலுமிகள் தயவால் கைப்பற்றி இருக் கிறாய்?" என்றான் இளையபல்லவன் சர்வசாதாரணமாக.

"அதனாலென்ன?"

"அவர்களுக்குப் பாதகமான எந்தக் காரியத்தைச் செய்தாலும் அவர்கள் விரும்ப மாட்டார்கள்."

"அவர்களுக்குப் பாதகமான எந்தக் காரியம் இப்பொழுது நடந்திருக்கிறது?"

"நீ இப்பொழுது செய்ய முற்பட்ட காரியம்."

"அதனால் அவர்களுக்கென்ன நஷ்டம்?"

"என் மனக்கஷ்டம் அவர்கள் நலனுக்கும் பெரு நஷ்டம்."

கங்கதேவன் பொறுமையை அடியோடு இழந்தான். "உன் மனக்கஷ்டத்தால் யாருக்கும் நஷ்டமில்லை. உனக்குத்தான் கேடு இப்பொழுது நீ துவங்கி இருக்கும் தலையீட்டினால்" என்று சீறினான் அவன்.

இளையபல்லவன் இதழ்கள் கோபத்தால் மடிந்தன. "மாலுமிகள் அப்படி நினைக்கவில்லை" என்றான் கோபத்தை லேசாகக் குரலில் காட்டி.

"ஏன் மாலுமிகளுக்கு உன்னிடம் அத்தனை அக்கறை?" என்று கங்கதேவன் இரைந்தான்.

"என்னால் லாபமிருக்கிறது அவர்களுக்கு?" என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

"என்ன லாபம்?" என்று சீறினான் கங்கதேவன்.

"உன் தலைமையில் அவர்கள் அடையாத லாபத்தை அடையப் போகிறார்கள். கடாரத்துக்கு அவர்களை அழைத்துச் செல்லப் போகிறேன். கடாரத்தின் செல்வப் பெருக்கை அவர்கள் அறிவார்கள். அங்குள்ள பொற் குவியல், விலை உயர்ந்த மணிக்குவியல்கள், இவற்றை இழக்க மாலுமிகள் விரும்பவில்லை" என்று விளக்கினான் இளைய பல்லவன்.

இதைக்கேட்ட கங்கதேவன் தன் சீறும் விழிகளை மாலுமிகளை நோக்கி ஓடவிட்டான். அவர்கள் பார்த்த பார்வை அவன் நம்பிக்கையையும் தைரியத்தையும் ஆட வைத்தது. இளையபல்லவன் ஏதோ ஆசை காட்டி அவர்களைச் சரிப்படுத்தியிருக்கிறான் என்பதையும், தன் செய்கையை அவர்கள் ரசிக்கவில்லை என்பதையும் புரிந்து கொண்ட கங்கதேவன் கோபம் அத்துமீறவே, "அட முட்டாள்களா! அவன் வார்த்தையை நம்பாதீர்கள். கடாரத்தைக் கொள்ளையிடுவது அத்தனை சுலபமல்ல. அதன் துறைமுகத்தில் புகுவதே கஷ்டம். புகுந்தாலும் அரண்களை மீறி நகருக்குள் புகுவது அதைவிடக் கஷ்டம். அதற்குத் திறமை வாய்ந்த கட்டுப்பாடுள்ள கடற்படை வேண்டும். கொள்ளைக் காரர்களான உங்களால் முடியாது" என்று கூவினான்.

கோபத்தின் வேகத்தில் சந்தர்ப்பம் அறியாமல் அவன் பேசிய பேச்சு, கொள்ளைக்காரர்களின் உணர்ச்சிகளைத் தூண்டிவிடவே அவர்களிடை மிகுந்த சலசலப்பு ஏற்பட்டது.

அந்த வாய்ப்பை நன்றாக உபயோகப்படுத்திக் கொண்ட இளையபல்லவன், "கங்கதேவா! நமது மாலுமிகளை நிந்திக்கவும் முற்பட்டுவிட்டாய் நீ அகந்தையால். இந்தக் கொள்ளைக்காரர் உதவியில்லாமல் நீ இந்த மாநக்காவரத் தைப் பிடித்திருக்க முடியுமா? அவர்கள் வீரத்தில் உனக்குச் சந்தேகமிருந்தால் நீ ஏன் அவர்களை உன்னுடன் சேர்த்துக் கொள்ளவேண்டும்?" என்று கேட்டான் மீண்டும் உணர்ச்சி களை அடக்கிக் கொண்டு நிதானமாக.

"அதைப்பற்றிக் கேட்க நீ யார்?" என்று வினவினான் கங்கதேவன் ஆத்திரத்துடன்.

"உன் பங்காளி."

"பங்காளியா?"

"ஆம். கடாரப் படையெடுப்பில் நீயும் நானும் கூட்டுச் சேர்ந்ததை மறந்துவிட்டாயா? இப்பொழுது நீ பின் வாங்கினால் நஷ்டம் எனக்கு உண்டு."

இதைக் கேட்டதும் என்ன செய்வதென்றறியாமல் திணறிய கங்கதேவன் அந்தச் சமயம் தப்பித்துக்கொள்ளத் தீர்மானித்து, "இந்த விஷயங்களை நாளைக் காலையில் பேசிக்கொள்வோம்" என்றான்.

"முடியாது. இப்பொழுதே தீர்மானிக்க வேண்டும்" என்ற இளையபல்லவன் குரலில் உறுதி பூரணமாக இருந்தது.

"நல்லது, கடாரத்தின் படையெடுப்பை நடத்துவோம்" என்று கூறிவிட்டு, கங்கதேவன் மெள்ள நகர ஆரம்பித்தான்.

"நில்! நடத்துவதாக ஆணையிடு" என்றான் இளைய பல்லவன் குரலில் அதிகாரத்தைக் காட்டி.

கங்கதேவன் தன் மார்பில் கையை வைத்து ஆணை யிட்டான். அதற்குப் பின்பும் விடாத இளையபல்லவன், "அந்தப் பெண்ணை இனி அணுகுவதில்லை என்றும் ஆணை இடு" என்றான்.

கங்கதேவன் கண்களில் சீற்றம் மண்டியது. "அதற்கும் கடாரத்துக்கும் என்ன சம்பந்தம்?" என்று இரைந்தான்.

"சம்பந்தமிருக்கிறது கங்கதேவா! இந்தப் பெண் எனக்குரியவள்..." என்ற இளையபல்லவன் பாலிக்குள்ளனை நோக்கி, "மாலுமி! நீ சொல்!" என்றான்.

பாலிக்குள்ளன் மெள்ளப் பின்னாலிருந்து பந்தத்தை நோக்கி வந்தான். "ஆம் தலைவரே! இந்தப் பெண் இவருக் குரியவள்" என்று மரியாதையும் கடுமையும் கலந்த குரலில் தன் கருத்தை வெளியிட்டான்.

"எப்படித் தெரியும் உனக்கு?" என்ற கங்கதேவன் அவனை நோக்கிப் பயங்கரமாக ஓர் அடியும் எடுத்து வைத்தான்.

"அவள் பதினோரு மாற்றுத் தங்கம்" என்றான் பாலிக் குள்ளன் கிலியுடன்.

"என்ன உளறுகிறாய்?" கங்கதேவன் குரலில் ஒலி அதிகரித்தது.

"இளையபல்லவர் இவளை உயிராக நேசிக்கிறார். பத்தரை மாற்றுத் தங்கத்தை எத்தனை வேண்டுமானாலும் இழப்பார். ஆனால் இந்தப் பதினோரு மாற்றுத் தங்கத்தைத் தொட்டால் அவனைக் கொன்று விடுவதாகப் பலமுறை சொல்லியிருக் கிறார்" என்ற பாலிக்குள்ளன், "அது மட்டுமல்ல..." என்று இழுத்தான்.

"வேறென்ன?" வெறியும் அதிகாரமும் கலந்திருந்தது கங்கதேவன் குரலில்.

"உங்கள் காம இச்சைக்காகக் கடாரத்தின் திட்டம் பாதிக்கப்படுவதை மாலுமிகள் விரும்பவில்லை. ஆகவே, நீங்கள் அந்தப் பெண்ணை அணுகாதிருப்பது நல்லது." இதைச் சொன்ன பாலிக்குள்ளன் குரல் திட்டமாக மட்டுமல்ல, எச்சரிக்கும் முறையிலும் இருந்தது.

கங்கதேவன் அறிவு மட்டும் அப்பொழுது கூர்மையா யிருந்திருந்தால் மாலுமிகளை இளையபல்லவன் கொள்ளை ஆசை காட்டி மித்ரபேதம் செய்துவிட்டதை உணர்ந்து கொண்டு சமயத்துக்குத் தக்கபடி நடந்து கொண்டிருப்பான்.

ஆனால் அப்பொழுதிருந்த கோபத்தால் நிலைகுலைந்த அவன் புத்தியில் வெறி பெரிதும் எழுந்ததால், "இவளை விடாவிட்டால் என்ன செய்து விடுவீர்கள்?" என்று சீறினான்.

இளையபல்லவன் குரல் மிக நிதானமாக இடையே புகுந்தது. "அவர்கள் ஏதும் செய்ய மாட்டார்கள்" என்று கூறினான் இளையபல்லவன்.

"வேறு யார் செய்வார்கள்? என்ன செய்வார்கள்?" என்று கூறிய கங்கதேவன் இளையபல்லவன்மீது பயங்கரமாகக் கண்களை நாட்டினான்.

இளையபல்லவன் பதிலில் கடுமை பலமாக இருந்தது. அதில் மரண ஒலி ஊடுருவி நின்றது. "நான் செய்வேன். உன்னைக் கொன்றுவிடுவேன்" என்றான் இளையபல்லவன்.

"நீயா!" வெறிச் சிரிப்பு ஒன்று கங்கதேவனிடமிருந்து பெரிதாகக் கிளம்பி அந்தப் பகுதியின் நிம்மதியைக் கலைத்தது.

"ஆம். நானேதான்!" இளையபல்லவன் குரலில் சாந்தி யிருந்தது.

கங்கதேவன் பொறுமை காற்றில் பறந்தது. அது மட்டு மல்ல, தன் ஆகிருதியையும் இளையபல்லவன் ஆகிருதியையும் நினைத்த அவன் இளையபல்லவனைக் கொல்வது நொடிப் பொழுதுகூட ஆகாதெனத் தீர்மானித்ததால் திடீரென ஒரு முடிவுக்கும் வந்தான். ஏதாவதொரு காரணத்தை வைத்து இளையபல்லவனைக் கொன்றுவிட்டால் மாலுமிகள் தனக்கு அடங்கி விடுவார்களென்று நினைத்ததால் கனல் பறக்கும் கண்களுடன் இளையபல்லவனை நோக்கிய கங்கதேவன், "என் வாளுக்கு இரையானவர்கள் பலர். அந்தப் பட்டியலில் நீயும் சேராதே இளையபல்லவா! இன்னும் அவகாசம் தருகிறேன். ஓடி விடு, உன்னுடன் இந்த முட்டாள்களையும் அழைத்துச் செல்" என்று கூவினான்.

இளையபல்லவன் பதிலும் தெளிவாக வந்தது. "கங்க தேவா! நமக்குள் நான் சண்டையை விரும்பவில்லை. இனிமேல் அந்தப் பெண்ணை அணுகுவதில்லையென

ஆணையிடு. தவிர, நீ இப்பொழுது அவளிடம் நடந்து கொண்டதற்கு அவள் காலில் விழுந்து மன்னிப்புக் கேள். உன்னைக் கொல்லாமல் விடுகிறேன்" என்றான் படைத் தலைவன்.

கங்கதேவன் பதிலுக்குப் பெரிதாக நகைத்தான். "மண்டி யிட்டு நான் மன்னிப்புக் கேட்க வேண்டுமா இந்த மணல் தரையில்? அதைவிட உன்னை இந்த மண்ணைக் கவ்வச் செய்கிறேன்" என்று கூறிக்கொண்டு சரேலெனத் தன் வாளை உருவினான்.

இளையபல்லவன் கண்கள் விநாடி நேரத்தில் காஞ்சனா தேவியை நோக்கி ஏதோ சைகை செய்யவே அவள் தன் கையிலிருந்த வாளைப் படைத்தலைவனை நோக்கி எறிந்தாள், அதன் பிடியை வலது கையால் வெகு லாகவமாகக் கைப்பற்றி இடது கையால் அதன் கூர்மையையும் சோதித்த இளைய பல்லவன், "கங்கதேவா! உன் பிடிவாதத்தினால் நீ இந்தச் சண்டையை என்மீது சுமத்துகிறாய். இதன் விளைவுக்கு நான் பொறுப்பாளியல்ல" என்று கூறிக்கொண்டு பாலிக்குள்ளனை நோக்கி, "மாலுமி! எல்லோரையும் வளையமாக இடம் விட்டு நிற்கச் சொல். வீரர்கள் முறைப்படி இந்தத் தகராறை நாங்கள் தீர்த்துக் கொள்கிறோம்" என்று கூறவே, மாலுமிகளிடையே உற்சாகம் அதிகரித்தது. உயிரைப் பற்றி அதிகமாக எப்பொழுதும் லட்சியம் செய்யாத அந்தக் கொள்ளைக் காரர்கள் விநாடி நேரத்தில் வளையமாக நின்றார்கள். இரண்டு மூன்று பந்தங்கள் பல இடங்களில் நடப்பட்டன. ஏற்பாடுகள் முடிந்ததும் முடியாததுமாகத் திடீரென கங்க தேவன் தன் வாளை வீசிக்கொண்டு இளையபல்லவன்மீது பாய்ந்து விட்டான்.

பெரிய ராட்சதன் போல் உருவம் படைத்த கங்கதேவன் தன் பெருவாளை உருவிக் கன வேகமாகப் பாய்ந்ததும் இளையபல்லவன் அந்த வேகத்திலேயே மணலில் விழுந்து விடுவானென எதிர்பார்த்த மாலுமிகள் அடுத்தகணம் ஏமாந்தே போனார்கள். அவன் பாய்ந்த வேகத்திலிருந்து தப்ப

இளையபல்லவன் சரேலென ஒருபுறம் நகர்ந்து கொள்ளவே கங்கதேவன் தனது வேகத்தில் பல அடிகள் நீள ஓடி மணலில் விழ இருந்தான். பிறகு தள்ளாடிச் சமாளித்துக் கொண்டு திரும்பினான். அவன் திண்டாட்டத்தைக் கண்ட மாலுமிகள் சரேலென நகைத்தார்கள் பெரிதாக. அத்துடன், அந்தச் சந்தர்ப்பத்தில் கங்கதேவன் முதுகுப்புறத்தில் இளைய பல்லவன் தன் வாளை ஏன் பாய்ச்சவில்லை என்பது புரியாமலும் வியப்படைந்தார்கள். எந்த விரோதியிடமும் அதர்ம யுத்தத்தை ஆயுளில் செய்திராத இளையபல்லவன், கங்கதேவன் நிதானித்துக் கொண்டு திரும்ப அவகாசம் கொடுத்தான். அதுமட்டுமல்லாமல், "கங்கதேவா! நான் உன்னைப் போல் அவசரப்படவில்லை. எதிரியின் அஜாக்கிரதையைப் பயன்படுத்திக் கொள்ளும் பழக்கமும் என்னிடம் கிடையாது. ஆகவே நன்றாக நிதானப்படுத்திக் கொண்டு வா, நான் காத்திருக்கிறேன்" என்று கூறவும் செய்தான்.

மாலுமிகள் நகைத்ததாலும் இளையபல்லவன் சொற்களாலும், கோபத்தாலும், வெட்கத்தாலும் உள்ளம் கொந்தளிக்க நிதானத்தை அடியோடு உதறிவிட்ட கங்கதேவன், மிரண்ட பெரும் காளைபோல் வெகு வேகத்துடன் கத்தியுடன் மீண்டும் பாய்ந்தான், இளையபல்லவன்மீது. இம்முறை இளையபல்லவன் விலகவில்லை. வெகு லாகவத்துடன் கங்கதேவனின் வாளைத் தன் வாளால் தடுத்தான். கங்கதேவன் சீறிச் சீறிப் பாய்ந்தான் மீண்டும் மீண்டும். ஒவ்வொரு முறையும் வேகத்துடன் இறங்கிய கங்கதேவன் வாள் வெகு அலட்சியமாக இளையபல்லவன் வாளால் தடுக்கப்பட்டதைக் கண்ட மாலுமிகள் வியப்பின் எல்லையை அடைந்து பெரும் கூச்சலிட்டனர். வாழ்க்கையையே சூதாக மாற்றிக் கொண்டவர்களும் வீரத்தை யாரிடமும் ரசிப்பவர்களும், யார் சாவதையும் ஒரு பொருட்டாக மதிக்காதவர்களுமான அந்தக் கொள்ளைக் கூட்டத்தார் திரும்பத் திரும்ப இளையபல்லவன் வாள் வீச்சைக் கண்டு ஆனந்தக் கூச்ச

விட்டனர். சிலர், "பலே பலே" என்றார்கள், பலர் கிறீச் கிறீச்சென்று கூச்சலிட்டார்கள். சிலர் கையைத் தட்டி ஆரவாரித்தார்கள். சிலர் இடுப்பை வளைத்துத் தொடைகளில் கைகளை ஊன்றிக் குனிந்து சண்டையை உற்றுப் பார்த்து ஆமோதிக்கும் வகையில் தலைகளை ஆட்டி, "உம். உம்!" என்ற சத்தங்களையும் எழுப்பினார்கள்.

ஏற்கெனவே நிதானமிழந்து போரிட்ட கங்கதேவன் வெறிபிடித்து வெகு வேகத்துடன் வாளை நீட்டி நீட்டிச் சுழற்றிச் சுழற்றிப் பாய்ந்தான் பல கோணங்களிலிருந்து. மணலில் சுற்றிச் சுற்றி வந்து தாக்கினான். ஒவ்வொரு முறையும் அவன் பெருவாள் மிகுந்த வேகத்துடன் இளையபல்லவன் தலைமீது இறங்க முற்பட்டும் இளையபல்லவன் தலையைத் தீண்டவும் முடியவில்லை அந்தப் பெருவாளால். இளைய பல்லவன் வாள் ஏதோ விதவிதமாகச் சுழன்று அந்தப் பெரு வாளை வேறு விழிகளில் திருப்பிவிட்டுக் கொண்டிருந்தது. அத்தனைக்கும் இளையபல்லவன் அதிகமாக இருந்த இடத்தை விட்டு நகரவுமில்லை. உடலை அதிகமாக அலட்டிக் கொள்ளவுமில்லை. வாளை விளையாட்டுக்குச் சுழற்றுபவன் போல் சுழற்றி எதிரியின் தாக்குதலைத் தடுத்துக் கொண் டிருந்தான். அரை நாழிகை இப்படிப் போர் நடந்தும் இருவரும் சளைக்காததைக் கண்டதும் அனைவரும் பிரமித்தனர். இந்தச் சண்டை முடியுமா முடியாதா என்று அவர்கள் சந்தேகப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் இளைய பல்லவன் எதிரியின் வாளைத் தடுத்தவண்ணம் சொன்னான், "கங்கதேவா! கடைசி முறையாகச் சொல்கிறேன். அவளிடம் காலில் விழுந்து மன்னிப்புக் கேள். உன்னைக் கொல்லாமல் விட்டு விடுகிறேன்" என்று.

'கிளாங் கிளாங்' என்று வாள்களின் மோதல்களுக் கிடையே இளையபல்லவன் கூறிய சொற்களைக் கேட்ட கங்கதேவன், "என்னைக் கொல்ல இன்னொருவன் பிறக்க வேண்டும். டேய் முட்டாள்! என்னிடம் நீ மன்னிப்புக் கேட்டாலும் உன்னை இனி விடமாட்டேன். உன்னை ஒழித்து

உன் மாலுமிகளையும் ஒழித்து விடுகிறேன்," என்று கூறிக் கொண்டு அதுவரை ஒரு கையால் பிடித்திருந்த வாளை இரு கைகளாலும் பிடித்து ஓங்கி இளையபல்லவன் தலைமீது இறக்கினான்.

அந்த வாள் மட்டும் அந்த வேகத்தில் வாகன வாரைப் போலிருந்த தூண் கைகளின் பலத்துடன், இளையபல்லவன் தலைமீது இறங்கியிருந்தால் இளையபல்லவன் கதை கடல் மோகினித் தீவிலேயே முடிந்திருக்கும். ஆனால் கங்கதேவன் வலது கையுடன் இடது கையைச் சேர்க்கையிலேயே அவன் நோக்கத்தைப் புரிந்துகொண்ட இளையபல்லவன் சரே லென்று ஒரு புறம் ஒதுங்கி இறங்கிய வாளின் அடியில் தன் வாளைக் கொடுத்து ஒரு சுழற்றுச் சுழற்றவே கங்கதேவன் இரண்டு கைகளும் வேறு மார்க்கத்தில் திரும்பியோடின.

அந்த ஏமாற்றத்துக்குப் பின் தான் சமாளிக்க வேண்டியது சாமான்ய எதிரியல்ல என்பதையும் வெகு சாமர்த்தியமான வாள் வீரனைத் தான் சந்தித்து விட்டதையும் உணர்ந்த கங்கதேவன், ஆத்திரத்தைத் தணித்துக்கொண்டு நிதானத் துடனும் எச்சரிக்கையுடனும் போரிட்டான். எச்சரிக்கை காலந் தாழ்ந்து வரவே பலனற்றுப் போயிற்று. பலமுறை வாளை வெறியுடன் வீசியதால் கை சிறிது களைத்திருந்தது. ஆகவே வாள் வீச்சிலும் வேகம் மெள்ள மெள்ளக் குறைந்தது. கங்கதேவன் வாள் வேகம் குறைந்து விட்டதைத் தன் வாளின் மீது அது மோதிய முறையிலேயே புரிந்துகொண்டுவிட்ட இளையபல்லவன் தன் தாக்குதலைத் துரிதப்படுத்தினான்.

இளையபல்லவன் கங்கதேவன் வாளைத் திருப்பித் திருப்பி தட்டிக்கொண்டு முன்னேறினான். பந்தத்தின் வெளிச்சத்தில் பளீர் பளீரென மின்னல்போல் அதிவேகத் துடன் பாய்ந்த இளையபல்லவன் வாளிலிருந்து தப்ப கங்க தேவன் பலமுறை மாறிமாறிக் குதித்தான். அவன் குதிப்பது மாலுமிகளுக்கு வேடிக்கையாயிருக்கவே அவர்கள் அதற்குச் சரியாகத் தாளம் போட்டார்கள். அந்த எக்காளத்தைக் கண்டு வெறிகொண்டு சரேலென வாள் கொண்டு இளையபல்லவன்

மீது பாய்ந்தான் கங்கதேவன். அடுத்த விநாடி கங்கதேவன் வாள் ஆகாயத்தில் பறந்தது. இளையபல்லவன் கைகளிலிருந்த வாள் கங்கதேவன் இதயத்தில் கண்ணிமைக்கும் நேரத்தில் பாய்ந்து விட்டது.

அந்த மணற்பரப்பில் திடீரெனப் பயங்கர மௌனம் நிலவியது. கங்கதேவன் குப்புற மணலில் விழுந்து கிடந்தான். அவன் தலை காஞ்சனாதேவியின் காலடியில் கிடந்தது. இருமுறை அவன் உடல் சிலிர்த்தது. இருமுறை இருமி இரத்தம் கக்கினான் கங்கதேவன். அவன் உடல் சரேலென செயலற்று நின்றுவிட்டது.

இளையபல்லவன் பழிவாங்கிய பயங்கரத்தைப் பார்த்த மாலுமிகள் திகைத்தனர். இளையபல்லவன் கங்கதேவனைத் திருப்பித் திருப்பிப் போரிட்டதற்குக் காரணம் தெள்ளெனப் புரிந்தது அவர்களுக்கு. காஞ்சனாதேவியிடம் மரண மன்னிப்புக் கேட்கவே அந்தப் பக்கம் கங்கதேவனை இளைய பல்லவன் தந்திரமாகத் திருப்பித் துரத்தி இடம் பார்த்து அவனைக் கொன்றிருக்கிறானென்பதை அறிந்த இளைய பல்லவன் சூட்சுமத்தை உள்ளூர வியந்தாலும், கங்கதேவனின் கோர மரணம் அவர்கள் இதயத்தில் பேரச்சத்தை விளைவித்தது.

இளையபல்லவன் மாலுமிகளை ஒருமுறை திரும்பி நோக்கினான். "கங்கதேவன் பெரிய வீரன். அவனைத் தகுந்த மரியாதைகளுடன் புதைத்துவிடுங்கள்" என்று கூறிவிட்டு, "வா! மஞ்சளழகி" என்று மாளிகையை நோக்கி நடந்தான்.

பெரும் தலைவனொருவனைக் கொன்றுவிட்டு மிக நிதானமாக அவன் நடந்து செல்வதைக் கண்ட பாலிக் குள்ளனும் மற்ற மாலுமிகளும் பிரமிப்படைந்து நின்றனர், படைத்தலைவன் நெஞ்சுரத்தை எண்ணி. அந்தப் பிரமிப்பு நீங்க நீண்ட நேரம் பிடித்தது அவர்களுக்கு. பிரமிப்பு நீங்கிய சமயத்தில், மாலுமிகளைத் திகைப்பு ஆட்கொண்டது. புஷ்ப ஒட்டியாணத்தின் முகப்பில் திடீரெனப் பேராரவாரம்

கிளம்பியது. ஏராளமான பந்தங்கள் காட்டுக்குள்ளிருந்து நகர்ந்து வந்தன. அடுத்த விநாடி பாலிக்குள்ளன் கூவினான், நிற்காதீர்கள்! மரக்கலங்களை நோக்கி ஓடுங்கள்" என்று.

மாலுமிகள் நீர்க் கரையை நோக்கிப் பறந்தார்கள், கங்க தேவன் சடலத்தைத் திரும்பியும் பார்க்காமல். கங்கதேவன் சடலம் நிர்க்கதியாகக் கிடந்தது. அந்த நிர்க்கதியைக் கண்டு விண்மீன்கள் கண்ணைச் சிமிட்டின. கற்புக்கரசிகளைத் தொடுவோரின் கதி நிர்க்கதிதானா என்று அவை கேட்பது போலிருந்தது. ஆனால் அவன் கதி மட்டுமல்ல நிர்க்கதி, தங்கள் கதியும் நிர்க்கதிதானென்பதைப் பாலிக்குள்ளனும் மற்ற மாலுமிகளும் புரிந்து கொண்டார்கள் கடலோரத்தை அண்டியதும். துறைமுகத்தை அடைத்து நின்றிருந்தது கடல் புறா. அதன் கண்களிலிருந்த சிவப்புக் கற்கள் தீபங்களில் பளபளத்து நெருப்பென ஜொலித்தன. "மோசம் போய் விட்டோம்" என்று பாலிக்குள்ளன் கூவினான் பெரிதாக. அவன் குரலில் திகில் இணையற்று மண்டிக் கிடந்தது.



# கடல் புறா

சாண்டில்யன்

31. நீதித்துவியல், உங்களுக்கு!





அத்தியாயம் 31

# நிதிக்குவியல் உங்களுக்கு!

பளபளத்த சிவப்புக் கண்களுடன் கடல்புறா துறைமுக வாயிலை அடைத்து நின்றதைக் கண்ட பாலி நாட்டுக் குள்ள மாலுமி தங்களை இளையபல்லவன் வெகு தந்திரமாக மடக்கி விட்டானென்பதைப் புரிந்துகொண்டான். கடற்கோரைகள் அருகிலிருந்த கடல்புறா வெகு லாகவமாக அதை அடுத் திருந்த கங்கதேவன் மரக்கலங்களிரண்டையும் சுற்றி வந்து துறைமுகத்தை நோக்கிப் போயிருக்க வேண்டுமென்பதைத் தீர்மானித்துக் கொண்ட பாலிக்குள்ளன் அந்த இரண்டு மரக்கலங்களிருந்த இடத்தையும் நோக்கினான். நோக்கியதும் இவன் பிரமிப்பும் முன்னைவிட பன்மடங்கு அதிகமாகவே செய்தது. அந்த மரக்கலங்களிரண்டும் வட திசையிலிருந்து வந்த காற்று வேகத்தில் நகர்ந்து நகர்ந்து கடற்கோரைகளில் சிக்கித் தத்தளிப்பதைக் கண்ட குள்ள மாலுமி, தாங்கள் பகடையாடிக் கொண்டிருந்த சமயத்தில் அந்த இரண்டு மரக் கலங்களின் நங்கூரங்களையும் யாரோ நீக்கி விட்டிருக் கிறார்களென்பதையும் நீக்கியவர்கள் யாராயிருந்தபோதிலும் அவர்கள் இளையபல்லவன் உத்தரவின்மேல்தான் அதைச் செய்திருக்க வேண்டுமென்பதையும் உணர்ந்து கொண்டதால் ஓரளவு சினமும் கொண்டான். கங்கதேவனைச் சேர்ந்த மீதி அறுநூறு மாலுமிகள் நேராகச் சென்று மாளிகையைத் தாக்கினால் இளையபல்லவன் கதி என்ன ஆகும் என்பதையும் யோசித்து மாளிகைமீது கண்களை ஓட்டித் தன்னைச் சுற்றிலும் நின்றிருந்த மாலுமிகளையும் நோக்கினான். இரண்டு இடத்திலும் அவன் நோக்கத்துக்கு ஆதரவான அம்சங்கள் கிடைக்காததால் சோகப் பெருமூச்சு ஒன்றை விட்டான் பாலிக்குள்ளன். காட்டு முகப்பில் தெரிந்த

பந்தங்கள் அந்த இரவின் கருமையைக் கிழித்துக்கொண்டு மாளிகைப் பக்கம் சென்றன. சுமார் இருநூறு பந்தங்களுக்கு மேல் ஊர்வலம் போல் சென்றதைக் கடலோரத்திலிருந்து கவனித்த பாலிக்குள்ளன் அந்தப் பந்தத்தைத் தாங்கிய இருநூறு பேர் யாராயிருக்க முடியும் என்று சிந்தித்துப் பார்த்ததும் பெரும் பிரமை உலாவியது அவன் முகத்தில். கங்கதேவன் அந்தத் தீவைப் பிடித்துத் தமிழர்களைக் கொல்ல முற்பட்டபோது பலர் அவனுக்குத் தப்பிக் காட்டுக்குள் ஓடி விட்டதை நினைத்துப் பார்த்த அவன், அந்த இருநூறு பேரும் கங்கதேவனின் கொலை வெறிக்குத் தப்பிய தமிழர்களாகத் தானிருக்க வேண்டுமென்ற முடிவுக்கு வரவே அவர்களுக்குத் தன்னிடமோ மற்ற மாலுமிகளிடமோ அன்பு லவலேசமும் இருக்கக் காரணமில்லை என்பதை உணர்ந்து கொண்டதால் சிறிது கலங்கவும் செய்தான்.

பந்தங்களேந்திய அந்த இருநூறு பேரும் கூட்டமாக நடந்து வந்து மாளிகையின் பின்புறம் நின்றார்கள். அதே சமயம் துறைமுகத்தை அடைத்திருந்த கடல்புறாவும் தனது ஒரு பக்கத்தைக் கடற்கரையை நோக்கித் திருப்ப அதன் பெரும் இறக்கையொன்று நன்றாக விரிந்து எழுந்தது. இறக்கையின் அடியிலிருந்த பெரும் ஈட்டிகளும் அம்பெறியும் யந்திரங்களும் ஒளிந்திருந்த திருடர்கள்போல் மெல்ல வெளிவந்தன. கடல் புறாவின் தளத்திலும் பெரும் உருளைகள் சுழன்று இரண்டு மூன்று யந்திர வாரைகளையும் ஈட்டி யெறியும் சாதனங்களையும் கடற்கரையை நோக்கித் திருப்பின. இந்த சன்னத்தங்களின் காரணத்தை பாலிக் குள்ளன் நன்றாகப் புரிந்துகொண்டான். தாங்கள் அறுநூறு பேரிருந் தாலும், அத்தனை பேரும் கடல்புறாவின் யந்திரங்களுக்கும் மாளிகை முன்பிருந்த இருநூறு தமிழர்களுக்கும் இடையே சிக்கியிருப்பதாலும், போரிடும் வசதிகளையும் தாங்கள் மரக்கலங்களிலேயே வைத்துவிட்டுப் பகடையாடக் கரைக்கு வந்துவிட்டதாலும், நிராயுதபாணிகளான தங்களை அழிப்பது இளையபல்லவனுக்கு ஒரு பிரமாதமில்லை என்பதையும்

புரிந்துகொண்ட பாலிக்குள்ளன் மற்ற மாலுமிகளை நோக்கி உள்ள நிலையை விளக்கினான். அவன் விளக்குமுன்பே நிலைமையைப் புரிந்துகொண்ட மாலுமிகள் கோபத்தால் கூச்சலிட்டார்கள். "இளையபல்லவனைக் கொல்லவேண்டும், கொல்லவேண்டும்" என்று வெறியில் கூவினார்கள்.

அந்த மாலுமிகளில் நிதானம் தவறாதவனும் மரக் கலங்களை நடத்துவதில் யாருக்கும் சளைக்காத திறமை சாலியுமான பாலிக்குள்ளன் அவர்களை நோக்கிக் கையமர்த்திவிட்டுச் சொன்னான்: "இரைவதால் பயனில்லை, அமைதிதான் இப்பொழுது தேவை" என்று.

இதைக்கேட்ட மாலுமியொருவன், "அமைதியாயிருந்து என்ன செய்வதாக உத்தேசம்?" என்று வினவினான் இரைச்சல் போட்டு.

குள்ள மாலுமியின் கண்கள் அந்த மாலுமிமீது பயங்கர மாகத் திரும்பின. "இரைந்தால் என்ன செய்ய முடியும் நீ!" என்று கேட்டான் இகழ்ச்சியுடன் அவன்.

"மாளிகையைத் தவிடுபொடியாக்குவோம்," என்று மற்றொரு மாலுமி கூவினான்.

"அந்தச் சக்தி நமக்கிருந்தால் இரையத் தேவையில்லை" என்றான் பாலிக்குள்ளன் மீண்டும்.

"நாம் அறுநூறு பேர் இருக்கிறோம்." கூட்டத்தின் ஒரு மூலையிலிருந்து எழுந்தது மற்றொரு குரல்.

"ஆம், ஆயுதம் ஏதுமற்ற அறுநூறு பேர் நம்மிடமுள்ள பகடைகள், மதுக் கலயங்கள் இவற்றைக்கொண்டு போரிட முடியாது" என்று சுட்டிக் காட்டிய பாலிக்குள்ளனின் குரலில் வெறுப்பு மண்டிக் கிடந்தது.

"வேறு என்ன செய்வது இப்பொழுது?" மற்றொரு குரல் கூட்டத்தின் இன்னொரு மூலையிலிருந்து எழுந்தது.

பாலிக்குள்ளன், மாலுமிகள் அனைவரையும் மணலில் உட்காரக் கட்டளையிட்டான். அந்த அறுநூறு பேரும்

உட்கார்ந்ததும் அவன் மட்டும் நின்றுகொண்டு பேசினான். "கவனமாகக் கேளுங்கள்! இளையபல்லவன் சோழர் படைத் தலைவனாக இருந்திருக்கலாம். இப்பொழுது அவனும் நம்மைப்போல ஒரு கொள்ளைக்காரன் என்பதை மறக்காதீர்கள். வேண்டுமானால் அவன் நம்மை இப்பொழுது அழித்துவிடலாம். ஆனால் அழித்துவிடுவதில் அவனுக்கும் நஷ்டமிருக்கிறது..." என்று கூறிய பாலிக்குள்ளன் நிதானித் தான். தான் சொன்ன சொற்களின் கருத்து மாலுமிகளின் இதயத்தில் உறையட்டும் என்று சில விநாடிகள் மௌனம் சாதித்தான்.

"நம்மை அழிப்பதில் அவனுக்கென்ன நஷ்டம்?" என்று கேட்டான் ஒரு மாலுமி எழுந்து. "ஆமாம், என்ன நஷ்டம்? என்ன நஷ்டம்?" என்று நாலா பக்கங்களிலுமிருந்து குரல்கள் கிளம்பின.

பாலிக்குள்ளன் அவர்களைக் கூர்ந்து நோக்கிவிட்டுச் சொன்னான்: "இந்தத் துறைமுகத்தில் கடல்புறாவைத் தவிர நான்கு மரக்கலங்கள் இருக்கின்றன. நான் கவனித்த வரை இளையபல்லவனிடம் இருநூறு பேருக்கு மேல் மாலுமிகள் இல்லை. காட்டிலிருந்து கிளம்பியிருக்கும் இரு நூறு தமிழர் களும் மாலுமிகளாயிருந்தாலும் மொத்தம் நானூறு பேர்தான் இருக்கிறார்கள். கடல் புறா போன்ற பெரிய மரக்கலத்தை நடத்தவே இருநூறு பேர் வேண்டும். மற்ற நான்கு மரக் கலங்களை நடத்த மீதியுள்ள இருநூறு பேர் போதாது. அதுவும் போர் என்று வந்தால் மரக்கல மொன்றுக்குக் குறைந்தபட்சம் நூற்றைம்பது மாலுமிகளாவது வேண்டும். அத்தனை ஆள் பலம் இளையபல்லவனிடம் இல்லை..."

இந்த இடத்தில் பாலிக்குள்ளன் சற்றே பேச்சை நிறுத்தினான். அந்தச் சமயத்தில் மாலுமியொருவன் எழுந்திருந்து, "இளையபல்லவர் நம்மையும் அழித்து இந்த நான்கு மரக்கலங்கள் மீதும் கடல்புறாவிலிருந்து தீப்பந்தங்

களை வீசி அவற்றையும் அழித்துவிட்டால் ஆள்பலம் எதற்கு?" என்று வினவினான்.

"இந்த மரக்கலங்களை இளையபல்லவன் ஒரு நாளும் அழிக்கமாட்டான்" என்றான் பாலிக்குள்ளன் திட்டமாக.

"ஏன்?" அதே மாலுமி வினவினான்.

"இளையபல்லவன் முட்டாளல்ல" என்ற பாலிக்குள்ளன், "சிறிதும் சிரமப்படாமல் கிடைக்கும் நான்கு மரக்கலங்களை எந்தக் கடற்படைத் தலைவன் இழப்பான்? நீங்கள் இழப்பீர்களா?" என்றும் வினவினான் கூட்டத்தை நோக்கி.

"மாட்டோம், மாட்டோம்" என்று குரல்கள் பல எழுந்தன.

சொந்தப் பிள்ளை பெண்டுகளிடம் வைக்கும் ஆசையை விட அதிக ஆசையை மரக்கலங்களிடம் வைத்திருந்த மாலுமிகள் தங்களைவிடப் பெரிய மாலுமியான இளைய பல்லவன் ஒருநாளும் கிடைத்த மரக்கலங்களை அழிக்க மாட்டான் என்பதைத் திட்டமாக நம்பினர். அந்த நம்பிக்கை அவர்கள் முகத்தில் உலாவியதை அந்தக் காரிருளிலும் கண்ட பாலிக்குள்ளன், "மாலுமிகளே! நம்மைப்போல் அவனும் ஒரு கடலோடி, கப்பல்களிடம் ஆசையுள்ளவன்! தவிர அவனுக்கு நான்கு போர்க்கப்பல்கள் கொண்ட படை கிடைக்கிறது. அதை அவன் நிச்சயமாக இழக்கமாட்டான். தவிர அவன் கடாரத்துக்கு நம்மை அழைத்துச் செல்வதாக வாக்கு அளித்திருக்கிறான்" என்றும் கூறினான்.

இதைக் கேட்டதும் அந்தக் கொள்ளை மாலுமிகளிடம் திருப்தியைக் குறிக்கும் ஒரு சலசலப்பு ஏற்பட்டது. சிறிது நேரம் மாலுமிகள் ஒருவருக்கொருவர் கசமுசவென்று ஏதோ பேசிக் கொண்டனர். பிறகு ஒரு மாலுமி கேட்டான், "அப்படி யானால் நாம் இப்பொழுது என்ன செய்யவேண்டும்?" என்று.

"நாம் எதுவும் செய்யத் தேவையில்லை. இளைய பல்லவனிடமிருந்து தூது வரும். அதுவரை காத்திருப்போம்"

என்ற பாலிக்குள்ளன் அப்படியே மணல் தரையில் உட்கார்ந்துவிட்டான். அந்தக் காரிருளில், நட்சத்திர வெளிச்சத்தையும் கடல் புறாவின் பந்தங்கள் துறைமுக வாயிலிலிருந்து வீசிய வெளிச்சத்தையும் தவிர வேறு வெளிச்சமில்லாததால் பயங்கரமாகக் காட்சியளித்த அந்த இரவில் கடல் மணலில் உட்கார்ந்திருந்த அந்த அறுநூறு பேருக்கும் ஒரு விநாடி கழிவது ஒரு யுகம் போலிருந்தது. சுமார் மூன்று நாழிகைகள் இப்படிக் கழிந்தன. மாளிகை முன்பிருந்த பந்தங்கள் கீழே நடப்பட்டு எரிந்து கொண் டிருந்ததால் அவற்றைத் தாங்கி வந்த தமிழரும் தரையில் உட்கார்ந்திருக்க வேண்டுமென்ற முடிவுக்கு வந்தான் பாலிக்குள்ளன். துறைமுக வாயிலில் கடல்புறா தன் அழகிய மூக்கைத் திருப்பியும், பக்கப் பலகையில் தீட்டப்பட்டிருந்த அதன் பெயரின் எழுத்துக்கள் ஜொலிக்கவும் ஆடிக் கொண்டிருந்தது.

ஆரம்பத்தில் பிறைமதி காட்சியளித்த எட்டு நாழிகை களும், பிற்பாடு அந்த அறுநூறு பேரும் காத்துக் கிடந்த மூன்று நாழிகைகளும் சேர்ந்து பதினொரு நாழிகைகள் கடந்து பன்னிரண்டாவது நாழிகையும் உட்புகவே நடுநிசி நெருங்கியது. அதே சமயத்தில் அலையோர மணலில் கூடி உட்கார்ந்திருந்த அந்த அறுநூறு மாலுமிகளையும் நோக்கி மாளிகையில் இருந்து ஒரு பந்தம் வந்தது. இளையபல்லவன் யாரோ ஒரு தூதனை அனுப்பி இருக்கிறானென்பதை உணர்ந்துகொண்ட மாலுமிகள் அவனை வரவேற்பதற்குத் தயாராகி எழுந்து நின்றார்கள். அவர்கள் முகப்பில் பாலிக் குள்ளன் நின்றுகொண்டான். பந்தம் வந்த முறையிலிருந்து, வந்துகொண்டிருந்த தூதனுடைய நடை மிக உறுதியா யிருப்பதை உணர்ந்துகொண்ட மாலுமிகள் அத்தனை துணிவுடன் தங்களை நோக்கி வருபவன் யாராயிருக்க முடியுமென்பதை எண்ணி வியந்தனர். அவன் அருகில் வந்து யாரென்பதை அறிந்ததும் அவர்கள் வியப்பு உச்ச நிலையை

அடையவே அந்த அறுநூறு பேரும் மூச்சுப் பேச்சின்றிப் பல விநாடிகள் நின்றுவிட்டனர்.

வந்தவன் இளையபல்லவன்! துணைக்கு மாதிரிக்குக்கூட ஒரு வீரனை அவன் அழைத்துவரவில்லை. பந்தத்தைக்கூட அவனே இடது கையில் ஏந்தி வந்தான். ஆயுதங்கூட ஏதுமணியாமல் வந்திருந்தான். அவன் அப்படித் தன்னந் தனியாக நிராயுதபாணியாக வந்ததை எண்ணி வியப்பினால் வாயடைத்து நின்ற மாலுமிகளை அவன் கண்கள் சில விநாடிகள் ஆராய்ந்தன. "மாலுமிகளே! நான் தனியே வந்திருக் கிறேன். வாளைக்கூட எடுத்துவரவில்லை. என்னை வாளெடுத்துப் போகும்படியும் வீரர்களைத் துணைகொண்டு செல்லும்படியும், நான் யாருக்காகப் போரிட்டேனோ அந்தப் பதினொரு மாற்றுத் தங்கமே சொன்னாள். மற்றவரும் வற்புறுத்தினர். நான் இணங்கவில்லை. அவர்களிடம் நான் சொன்னேன், 'அந்த மாலுமிகள் அறிவாளிகள், நியாயத்தை ஒப்புக்கொள்ளுவார்கள்' என்று. அவர்கள் உங்களை நம்ப வில்லை. ஆனால் எனக்கு உங்களிடம் பூரண நம்பிக்கை இருக்கிறது" என்று உறுதியும் அன்பும் நிரம்பிய குரலில் கூறினான்.

மாலுமிகள் யாரும் பதில் சொல்லவில்லை. முகப்பில் நின்ற குள்ள மாலுமியே கேட்டான், "அத்தனை நம்பிக்கை யிருப்பவர்கள் கடல் புறாவின் ஆயுதங்களை எங்களை நோக்கித் திருப்புவானேன்?" என்று.

"நீங்களனைவரும் பல போர்களைக் கண்டவர்கள். அதிகப் பழக்கமில்லாதவர்களும், வேறு ஒரு தலைவனிடம் பணி புரிந்தவர்களுமான அறுநூறு பேர்களுக்கிடையில், அந்தத் தலைவனின் துராக்கிருதச் செய்கையால் தனிப்படச் சிக்கிக்கொள்ளும் ஒருவன் என்ன செய்வான்? அத்தகைய நிலையில் நீங்கள் என்ன செய்வீர்கள்?" என்று கேட்ட இளையபல்லவன் அவர்களைச் சில விநாடிகள் நோக்கினான். அதற்கு ஏதும் பதில் கிடைக்காது போகவே அவனே மேற் கொண்டு சொன்னான்: "உங்களுக்குப் புரிகிறது என்

நிலைமை. புரிந்துகொள்வீர்கள் என்பது எனக்குத் தெரியும். நான் எடுத்துக்கொண்ட நடவடிக்கைகள் எல்லாம் என்னைக் காத்துக்கொள்ளவே தவிர வேறு நோக்கத்தாலல்ல. நான் யாருக்கும் தீங்கு நினைப்பதில்லை. கங்கதேவனுக்குக்கூடத் தீங்கிழைத்திருக்க மாட்டேன். ஆனால் கங்கதேவன் ஆரம்ப முதல் நம்பிக்கைத் துரோகம் செய்தான். கூட்டுச் சேர்ந்து கொள்ளையிட அவனிடம் ஒப்பந்தம் செய்தேன்! அவன் ஒப்புக்கொண்டான். ஆனால் கூட்டாளி பெண்மீதே கையை வைக்க முயன்றான். நான் அதை அனுமதிக்க முடியுமா? சொல்லுங்கள்."

இப்படிப் பேசிய இளையபல்லவன் சற்று நிதானித்தான். பதிலேதும் கிடைக்காமற் போகவே, "யார் அனுமதிக்க முடியும் அதை? அவனை இருமுறை எச்சரித்தேன், கேட்கவில்லை. ஆகையால் கொன்றேன். அவனைக் கொன்றதால் உங்களுக்கு எந்தவித நஷ்டமுமில்லை. லாபந்தான்" என்றான்.

"என்ன லாபம்?" என்று கேட்டான் பாலிக்குள்ளன்.

"எத்தனை நாளாகக் கங்கதேவனிடம் சேர்ந்திருக்கிறீர்கள்?"

"ஒரு வருஷமாக."

"எத்தனை முறை கொள்ளையடித்திருப்பீர்கள் இந்த ஓர் ஆண்டில்?"

"சுமார் ஐந்து தடவை."

"அந்தக் கொள்ளையில் கிடைத்ததெல்லாம் எங்கே?"

"அந்த மாளிகையில் இருக்கிறது."

"எந்த மாளிகையில்?"

"கங்கதேவன் மாளிகையில்."

"அங்கு ஏனிருக்க வேண்டும்? உங்கள் பங்கை ஏன் உங்களிடம் தரவில்லை?"

இளையபல்லவன் அந்தக் கேள்வியை வீசியதும் பாலிக்குள்ளன் விழித்தான். ஆனால் கூட்டத்தில் முணுமுணுப்பு

ஏற்பட்டது. அந்த முணுமுணுப்பின் காரணத்தை ஊகித்துக் கொண்ட இளையபல்லவன், "அந்தக் கொள்ளை நிதிக் குவியல்கள் ஆறு பெரும் பெட்டிகளில் கங்கதேவன் மாளிகையில் இருக்கின்றன. அவற்றின்மீது கலிங்கத்தின் அரச முத்திரை இருக்கிறது" என்றான்.

மாலுமிகளிடையே கோபக் கூச்சல் எழுந்தது. அந்தக் கூச்சல் இடையே பெரிதாக ஒலித்தது இளையபல்லவன் குரல். "அந்தக் கொள்ளை நிதி அனைத்தும் சரியான சமயத்தில் கலிங்க நாட்டுக்குப் போயிருக்கும். உங்களுக்கு அரைக் காசு கிடைத்திருக்காது."

"நீங்கள் அதை என்ன செய்ய உத்தேசம்?" பாலிக்குள்ளன் கேட்டான்.

"பொழுது விடிந்ததும் அந்தப் பெட்டிகள் அனைத்தையும் கொண்டு வந்து நிதிக்குவியலை உங்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கும்படி கூலவாணிகன் சேந்தனுக்கு உத்தரவிட்டிருக் கிறேன். உங்களுக்கு இஷ்டமிருந்தால் நீங்கள் என் கடற் படையில் பணியாற்றலாம். இல்லையேல் உங்களை அவரவர் நாட்டுக்கு அனுப்பிவிட ஏற்பாடு செய்கிறேன். இன்றைய பொழுதைக் கடற்கரையிலேயே கழியுங்கள்" என்று கூறி விட்டுப் பதிலுக்குக் காத்திராமல் நடந்தான் இளைய பல்லவன்.

அவர்களைத் திரும்பியும் பார்க்காமல் மாளிகையை நோக்கி நடந்த இளையபல்லவன் மாளிகை வாயிலில் பந்தங்களின் மத்தியில் உட்கார்ந்து இருந்த இருநூறு தமிழர்களைப் பார்த்தான். சுமார் இருபது நாட்களுக்கு மேல் காட்டில் வாழ்ந்ததால் மீசை தாடிகள் வளர்ந்து காட்டுமிராண்டிகளைப் போலக் காட்சியளித்த தமிழர்கள் அவனைக் கண்டதும் தலை வணங்கினார்கள். "அதோ அந்தக் கூட்டத்தின்மீது நீங்களாக எதுவும் நடவடிக்கை துவங்க வேண்டாம். அது நகர்ந்தால் என்னை எழுப்புங்கள்" என்று கூறிவிட்டு மாளிகைக்குள் சென்று படிகளில் ஏறி மாடி

யறையில் நுழைந்தான். அங்கு படுத்திருந்த பலவர்மனை நோக்கி, "பலவர்மா! உன் வியாதி குணப்பட்டு நான்கு நாட்களாகிவிட்டது. பஞ்சணையை விட்டு எழுந்திருந்து கீழே போ" என்று உத்தரவிட்டதன்றி அவனைக் கையைப் பிடித்து இழுத்து வந்து அறைக்கு வெளியே அனுப்பினான்.

இளையபல்லவனுக்கு அலுப்பு அபரிமிதமாயிருந்தது. பஞ்சணைமீது ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து சில விநாடிகள் புரண்டான். சில விநாடிகளில் உறக்கம் அவனை ஆட் கொண்டது. உறக்கம் மட்டுமல்ல, ஒரு நாழிகை கழித்து உள்ளே நுழைந்த காஞ்சனாதேவியின் மலர்க் கைகளும் அவனைச் சுற்றி வளைத்து ஆட்கொண்டன. குழந்தைபோல் உறங்கினான் இளையபல்லவன் அலுப்பின் மிகுதியால். காஞ்சனாதேவியின் கருவிழிகள் அவனை அனுதாபத்துடன் பார்த்தன. அணைத்த கைகளில் ஒன்றெழுந்து அவன் தலைமயிரில் நுழைந்து கலைத்து வருடவும் முற்பட்டது.






## அத்தியாயம் 32

# இளவரசியல்ல, சக்கரவர்த்தினி!

கடல்மோகினியில் கால் வைத்த நாளிலிருந்து கவலை வாட்டியதால் நரம்புகள் களைத்துப்போன காரணத்தினாலோ, அந்தக் கவலை கங்கதேவன் மரணத்தோடு தீர்ந்து விட்டதால் இறங்கிய மனப்பாரம் அளித்த சாந்தியினாலோ, காஞ்சனாதேவி இடக்கரம் அணைத்தளித்த அமைதியினாலோ, வலக்கரம் தலையை வருடிய இதத்தினாலோ சொல்ல முடியாது, இளையபல்லவன் அன்றிரவில் ஆழ்ந்து நித்திரை செய்தான். அவன் பக்கத்தை விட்டு அன்றிரவு முழுதும் அகலாமல், விழித்த கண் விநாடி நேரம்கூட மூடாமல் உட்கார்ந்திருந்த காஞ்சனாதேவி அவன் அலுப்பின் காரணத்தை நன்றாகப் புரிந்துகொண்டிருந்தாள். அதை மட்டுமல்ல, இளையபல்லவன் வேண்டுமென்றே திட்டமிட்டு கங்கதேவனை வடக்குக் கோடிக்கு வரவழைத்துக் கொன்றிருக்கிறான் என்பதையும் புரிந்து கொண்டதால் சிறிது குழப்பம் அடைந்தாள் கடாரத்தின் கட்டழகி. காரணமின்றி யாரையும் கொல்லும் சுபாவம் இளையபல்லவனுக்கு இல்லை என்பதை அவள் நன்றாக அறிந்தே இருந்ததால், கருணை வடிவமான கருணாகர பல்லவன் கங்கதேவனைச் சிறை செய்ய இஷ்டப்படாமல் கொன்ற காரணம் என்ன என்பது மட்டும் புரியவில்லை அவளுக்கு. கங்கதேவனைப் பலபடி வளைத்து விட்ட இளையபல்லவனுக்கு அவனைச் சிறை செய்வது ஒரு பிரமாதமில்லை என்பதையும் உணர்ந்திருந்தாள் அவள். அப்பொழுது கங்கதேவன் உயிருடன் இருந்தாலும் அவன் மாலுமிகளிருக்கும் நிர்க்கதியான நிலையில்தான் அவனுமிருப்பான் என்பதையும், ஆகவே அவனைக் கொல்லாமலே கடல்மோகினியை இளையபல்லவன் வசப் படுத்திக்கொண்டிருக்க முடியும் என்பதையும் ஊகித்துக்

# கடல்

32. இளவரசியல்ல,
சக்கரவர்த்தினி




# புறா

சாண்டில்யன்

அத்தியாயம் 32

# இளவரசியல்ல, சக்கரவர்த்தினி!

கடல்மோகினியில் கால் வைத்த நாளிலிருந்து கவலை வாட்டியதால் நரம்புகள் களைத்துப்போன காரணத்தினாலோ, அந்தக் கவலை கங்கதேவன் மரணத்தோடு தீர்ந்து விட்டதால் இறங்கிய மனப்பாரம் அளித்த சாந்தியினாலோ, காஞ்சனாதேவி இடக்கரம் அணைத்தளித்த அமைதியினாலோ, வலக்கரம் தலையை வருடிய இதத்தினாலோ சொல்ல முடியாது, இளையபல்லவன் அன்றிரவில் ஆழ்ந்து நித்திரை செய்தான். அவன் பக்கத்தை விட்டு அன்றிரவு முழுதும் அகலாமல், விழித்த கண் விநாடி நேரம்கூட மூடாமல் உட்கார்ந்திருந்த காஞ்சனாதேவி அவன் அலுப்பின் காரணத்தை நன்றாகப் புரிந்துகொண்டிருந்தாள். அதை மட்டுமல்ல, இளையபல்லவன் வேண்டுமென்றே திட்டமிட்டு கங்கதேவனை வடக்குக் கோடிக்கு வரவழைத்துக் கொன்றிருக்கிறான் என்பதையும் புரிந்து கொண்டதால் சிறிது குழப்பம் அடைந்தாள் கடாரத்தின் கட்டழகி. காரணமின்றி யாரையும் கொல்லும் சுபாவம் இளையபல்லவனுக்கு இல்லை என்பதை அவள் நன்றாக அறிந்தே இருந்ததால், கருணை வடிவமான கருணாகர பல்லவன் கங்கதேவனைச் சிறை செய்ய இஷ்டப்படாமல் கொன்ற காரணம் என்ன என்பது மட்டும் புரியவில்லை அவளுக்கு. கங்கதேவனைப் பலபடி வளைத்து விட்ட இளையபல்லவனுக்கு அவனைச் சிறை செய்வது ஒரு பிரமாதமில்லை என்பதையும் உணர்ந்திருந்தாள் அவள். அப்பொழுது கங்கதேவன் உயிருடன் இருந்தாலும் அவன் மாலுமிகளிருக்கும் நிர்க்கதியான நிலையில்தான் அவனுமிருப்பான் என்பதையும், ஆகவே அவனைக் கொல்லாமலே கடல்மோகினியை இளையபல்லவன் வசப் படுத்திக்கொண்டிருக்க முடியும் என்பதையும் ஊகித்துக்

கொண்ட காஞ்சனாதேவி, 'அப்படியிருக்க இவர் ஏன் கங்கதேவனைக் கொன்றார்!' என்று தன்னைத் தானே இருமுறை கேட்டுக்கொண்டும் விடை காணாது குழம்பினாள். 'ஒருவேளை என்னிடம் அவன் நடந்துகொண்ட முறையின் காரணமாகக் கொன்றிருப்பாரோ?' என்றும் தன்னைக் கேட்டுக்கொண்ட காஞ்சனாதேவி, அந்த நினைப்பின் காரணமாகவே மகிழ்ச்சிக்கும் நாணத்துக்கும் வசப்பட்டாள். இப்படிப் பலவித சிந்தனைகளுடன் அந்த இரவின் மீதி இரண்டு ஜாமங்களைக் கழித்த காஞ்சனாதேவி பொழுது புலர்ந்ததும் இளையபல்லவன் உறங்குவதைக் கண்டு அவனை எழுப்ப இஷ்டப்படாமல் தான் மாத்திரம் வெளியே செல்லப் பஞ்சணையை விட்டு இறங்க முற்பட்டாள்.

ஆனால் அவள் இறங்கவில்லை. திடீரென்று புரண்டு மல்லாந்து படுத்த இளையபல்லவன் தனது வலது கையால் அவள் இடது கையைப் பற்றிப் படுக்கையை விட்டு அவள் நகர முடியாமல் தடுத்தான்.

காஞ்சனாதேவியின் கருவிழிகள் இளையபல்லவனை நன்றாக நோக்கின. அவற்றில் பொய்க்கோபம் துளிர்த்துக் கிடந்தது. "ஓகோ! அப்படியா!" என்ற அவள் சொற்களிலும் போலிக் கோபம் மண்டிக் கிடந்தது.

இளையபல்லவன் கண்களில் மகிழ்ச்சியும் விஷமமும் ததும்பிக் கொண்டிருந்தன. "அப்படியா?" என்று உதடுகளிலிருந்து உதிர்ந்த ஒற்றைச் சொல்லிலும் அந்த விஷமம் நன்றாகத் தொனித்தது.

"உறங்கியது பொய்தானா?" என்று அவள் பவள இதழ்கள் உதிர்த்த சொற்களிலும் அந்தக் காதல் கோபம் சொட்டிக் கொண்டு இருந்தது.

"இல்லை! பொய்யில்லை."

"அப்படியானால் விழித்தது?"

"அதுவும் பொய்யில்லை."

"எப்படி இரண்டும் பொய்யில்லாமல் இருக்க முடியும்?"

"கருணாகரன் பொய் பேசும் பழக்கம் கிடையாது." இதைச் சொன்ன இளையபல்லவன் இதழ்களில் இளநகை அரும்பியது.

காஞ்சனாதேவியின் இதழ்களில் இளநகையும் இன்பத் துடிப்பும் கலந்துலாவின. "நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லை" என்றாள் அவள்.

"ஏன் விளங்கவில்லை? இங்கு நான் வந்து படுத்ததும் உறங்கிவிட்டேன். அது உண்மை. நீ என் பக்கத்தில் உட்கார்ந் திருந்ததுகூட எனக்குத் தெரியாது" என்றான் இளைய பல்லவன்.

"தெரியாதா?" காஞ்சனாதேவியின் கேள்வியில் அவநம்பிக்கை பூரணமாக ஒலித்தது.

"தெரியாது" என்றான் திட்டமாக இளையபல்லவன்.

"தெரியாதென்பதற்கு என்ன அத்தாட்சி?"

"நான் உறங்கியதே அத்தாட்சி."

"அது எப்படி அத்தாட்சியாகும்?"

"நீ பக்கத்தில் உட்கார்ந்திருப்பது தெரிந்தால் எனக்கெப்படி உறக்கம் பிடிக்கும்?"

இந்தப் பதிலைக் கேட்டதும் காஞ்சனாதேவி நாணத்தால் தலை குனிந்துகொண்டாள். "இப்பொழுது தெரிகிறதா நான் பொய் சொல்ல மாட்டேனென்பது" என்றான் இளைய பல்லவன் நகைத்துக்கொண்டே.

"ஆமாம்! சத்தியசந்தர்தான் நீங்கள்" என்றாள் காஞ்சனா தேவி புன்முறுவல் செய்து.

"சந்தேகமென்ன? நான் சத்தியசந்தன்தான்" என்ற இளையபல்லவன் அவள் கையை மேலும் அழுத்திப் பிடித்தான்.

"சென்ற சில நாட்களில் நீங்கள் எங்கே உண்மை சொன்னீர்கள்? எல்லோரிடமும் பொய்யைத் தவிர எதையும் சொல்லவில்லையே!" என்றாள் அவள்.

இளையபல்லவன் கண்கள் அவளை நன்றாக ஏறெடுத்து நோக்கின. "இல்லை காஞ்சனா, நீ சொல்வது தவறு. சென்ற சில தினங்களில்தான் நான் முழுதும் உண்மையைச் சொல்லி யிருக்கிறேன். அதுமட்டுமல்ல, ஒவ்வொருவருக்கும் எது அனுகூலமென்று தோன்றியதோ அந்தக் காரியங்களையும் செய்திருக்கிறேன்" என்றான் இளையபல்லவன்.

"என்னால் நம்ப முடியவில்லை. விளைவுகள் சொல்லும் கதை வேறு" என்றாள் காஞ்சனாதேவி அவனை உற்று நோக்கி.

"விளைவுகளுக்கு நானல்ல பொறுப்பாளி. அவரவர் எண்ணங்களும், செய்கைகளுமே பொறுப்பு. உதாரணமாகப் பார். கங்கதேவன் பழுது பார்க்கப்பட்ட கலிங்க மரக்கலங் களைக் கலிங்கத்தின் மாலுமிகளே நடத்திச் செல்ல வேண்டு மென்று விரும்பினான். அதை அனுமதித்தேன். உன்னைத் தனிமையில் கடல்மோகினித் தீவின் வடக்குக் கோடியில் சந்திக்க விரும்பினான். அதையும் அனுமதித்தேன்..." என்ற இளையபல்லவனை இடைமறித்த காஞ்சனாதேவி கேட்டாள், "அப்படியானால் அவனை ஏன் கொன்றீர்கள்?" என்று.

இளையபல்லவன் சர்வ சாதாரணமாகப் பதில் சொன்னான், "நானாகக் கொல்லவில்லை. கொல்ல அவன் தூண்டினான்."

"அவனா தூண்டினான்?" காஞ்சனாதேவியின் குரலில் சீற்றம் தொனித்தது, இளையபல்லவனே தன்னை வட கோடிக்கு அழைத்துச் செல்லக் கூலவாணிகனுக்கு உத்தர விட்டதை நினைத்து.

"ஆம் காஞ்சனா, பாலிக்குள்ளனும் நானும் பகடையாடிய போது நீ வந்தது நினைப்பில்லை உனக்கு?" என்று வினவினான் இளையபல்லவன்.

"நினைப்பிருக்கிறது."

"அங்கு நான் பாலிக்குள்ளனிடம் சொன்னது நினைப் பிருக்குமே உனக்கு? இந்தப் பதினொரு மாற்றுத் தங்கத்தை

யார் தொட்டாலும் அவனைக் கொன்று விடுவேன் என்று சொன்னேன். அதைச் சொன்னபோது உண்மையைச் சொன்னேன். அந்தச் சத்தியத்தை நிலை நிறுத்தினேன். ஆகையால் நான் சொன்னது பொய்யல்ல பார்."

இதைக் கேட்டதும் காஞ்சனாதேவியின் உள்ளத்தில் ஆனந்தம் கரை புரண்டு ஓடியது. "ஆம். பொய்யில்லை" என்றாள் அவள் மெதுவாக.

இளையபல்லவன் மெள்ள எழுந்து பஞ்சணையில் அவள் பக்கத்தில் உட்கார்ந்து கொண்டான். "பொய்யில்லை காஞ்சனாதேவி, உன்மீது கையை வைத்ததால் அவனைக் கொன்றேன். அதிலும் பொறுமையைக் காட்டியிருக்கிறேன். கடல் புறாவில் முதல் முதலில் உன்மீது அவன் க்ாமக் கண்ணை வீசியபோதே அவனைக் கொன்றிருப்பேன். ஆனால் நமது மரக்கலத்தின் நிலை, மாலுமிகளின் நலன், எனது லட்சியம் இவற்றை முன்னிட்டுப் பொறுத்தேன். என் பொறுமையை கங்கதேவன் பயன்படுத்திக் கொள்ளவில்லை. பொறுமையைப் பலவீனமென்று மதிப்பிட்டான். உன்னைக் கெடுக்கவும் துணிந்தான். வினையறுத்தான்" என்ற இளைய பல்லவனைக் காஞ்சனாதேவியின் விழிகள் பெருமை யுடன் நோக்கின. அவள் உதடுகள் ஒரு சந்தேகத்தையும் கேட்டன.

"உங்கள் லட்சியம் என்றீர்களே, அதென்ன?" என்று அவள் உதடுகளிலிருந்து கேள்வியொன்று உதிர்ந்தது.

இளையபல்லவன் சரேலென பஞ்சணையிலிருந்து எழுந்து, சாளரத்தை நோக்கிச் சென்றான். அதன் மூலம் ஆழ்கடலை நோக்கிவிட்டுச் சற்றுத் திரும்பி, காஞ்சனா தேவியை அருகில் வரும்படி சைகையும் செய்தான். காஞ்சனா தேவியும் கட்டிலை விட்டு இறங்கி அவனிருந்த இடத்தை அடைந்தாள். அவள் இடையை இடது கையால் அணைத் திழுத்த இளையபல்லவன், "காஞ்சனா! அதோ பார், என்ன தெரிகிறது?" என்று வினவினான்.

எதிரே ஆழ்கடல் காலை வேளையின் செங்கிரணங்களில் புத்தொளி பெற்று, பெரும் அலைகளைக் கரையை நோக்கி உருட்டிக்கொண்டிருந்தது. கடல் புறா துறைமுக வாயிலை அடைத்து நின்ற அலையில் எழுந்து தாழ்ந்து தன் மூக்கை எழுப்பியும் தாழ்த்தியும் பார்ப்பவர்கள் அனைவரையும் மயக்கிக் கொண்டிருந்தது. கங்கதேவன் மரக்கலங்களிரண்டும் கோரைகளில் சிக்கித் தத்தளித்துக் கொண்டிருந்தன. கங்க தேவனின் மீதி மரக்கலங்களிரண்டும் கேட்பாரற்று வடதிசையில் ஆடிக்கொண்டிருந்தன. அறுநூறு மாலுமிகளும் கூட்டமாகக் கரையருகே உட்கார்ந்திருந்தார்கள். இந்தக் காட்சியைக் கண்ட காஞ்சனாதேவி பெரும் பிரமிப்பை அடைந்தாள். உண்மை மெள்ள மெள்ள அவள் இதயத்தில் உதயமானாலும் அதை இளையபல்லவன் வாயினாலேயே அறிய விரும்பி அவன் கேள்விக்குச் சாதாரணமாகவே பதில் சொன்னாள்: "ஆழ்கடல் தெரிகிறது" என்று.

இளையபல்லவன் மெள்ளத் தலையை அசைத்தான். "ஆம் காஞ்சனா! ஆழ்கடல்தான். நேற்றுவரை அது கங்கதேவன் வசமிருந்தது. இன்று அது என் வசம்" என்றான்.

"எப்படி உங்கள் வசமாகிவிடும்?" என்று வினவினாள் அவள்.

"இப்பொழுது கடல்மோகினித் தீவு என் வசமிருக்கிறது. கடல்மோகினித் தீவு யார் வசமிருக்கிறதோ அவன் வசமிருக்கும் அந்தக் கடலும். பாரதத்துக்கும் கடாரத்துக்கும் நட்ட நடுவில் இருக்கிறது கடல்மோகினி. இதைத் தாண்டித் தான் கடாரத்துக்கும் பாரதத்துக்கும் செல்லும் மரக்கலங்கள் போகவேண்டும். இந்தத் தீவை ஆள்பவன் அந்த மரக்கலங் களின் சஞ்சாரத்தைத் தடை செய்ய முடியும். இது மிகவும் கேந்திர ஸ்தானம். இது இப்பொழுது என் கையில் இருக்கிறது. கங்கதேவன் மரக்கலங்கள் இரண்டு கடற்கோரையில் தத்தளிக் கின்றன. மற்ற இரண்டு மரக்கலங்களில் மாலுமிகள் இல்லை. அவை இரண்டும், கடற்கரையில் கூடியுள்ள மாலுமிகளும்,

கடல் புறாவின் தயவிலிருக்கிறார்கள்" என்று சுட்டிக் காட்டினான்.

"அவர்கள் அறுநூறு பேர் இருக்கிறார்களே?" என்றாள் காஞ்சனாதேவி.

"ஆயிரம் பேரை அழிக்கும் சக்தி கடல்புறாவிலிருக்கிறது. தவிர இந்த அறுநூறு பேரிடை ஆயுதம் எதுவுமில்லை. அதுமட்டுமல்ல, இந்த மாளிகைக்கு எதிரேயுள்ள இருநூறு தமிழர்கள் அவர்களைக் கொல்லத் துடிக்கிறார்கள்" என்றான் இளையபல்லவன்.

அறுநூறு மாலுமிகளின் நிர்க்கதி நன்றாகப் புரிந்தது காஞ்சனாதேவிக்கு. கங்கதேவன் அனுகூலத்தையெல்லாம் தனக்கு அனுகூலமாக மாற்றிக்கொண்ட இளையபல்லவன் புத்திக்கூர்மையையும் தந்திரத்தையும் நினைத்து வியந்த காஞ்சனாதேவியின் இதயத்தில் அவனைப் பற்றிய காதல் கொள்ளையாக எழுந்தது. அந்தக் காதலால் மயக்கமுற்ற கண்களை அவன்மீது நாட்டி, மற்றுமொரு கேள்வியையும் கேட்டாள் அவள், "வெளியே சென்றிருக்கும் கலிங்க மரக் கலங்கள் இரண்டும் திரும்பி வந்தால் என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று.

"அதில் நானூறு கலிங்க மாலுமிகள் இருக்கிறார்கள் என்கிறாயா?"

"ஆம்."

"நன்றாகக் கடலையும் கடற்கரையையும் கவனி" என்று இளையபல்லவன் தன் கையைச் சுட்டிக் காட்டிச் சொன்னான்: "அதோ பார், கடல்புறா துறைமுகத்தை இப்பொழுது அடைத்து நிற்கிறது. அதை அந்த இடத்தை விட்டு நகர்த்தி, கடற்கோரையில் சிக்கித் தவிக்கும் இரு மரக்கலங்களுக்கு முன்பாக நிறுத்திவிடுவேன். அப்பொழுது கடல் புறா துறைமுகத் தென்திசையிலிருக்கும். கங்கதேவனின் மற்ற இரண்டு மரக்கலங்களும் வடதிசையில் இருக்கும். ஆகவே துறைமுகத்தில் நுழையும் எந்த மரக்கலமும் கடல்

புறாவுக்கும் வடதிசை மரக்கலங்களுக்கும் இடையேயுள்ள வழியில்தான் வரவேண்டும். அந்த இரண்டு மரக்கலங்கள் இந்தத் தமிழர் இருநூறு பேர் வசமிருக்கும். அந்த நிலையில் கலிங்கத்தின் மரக்கலங்கள் உள்ளே நுழைந்தால் அவற்றை அழிப்பது ஒரு விநாடி."

இதைக்கேட்ட காஞ்சனாதேவி பிரமித்தாள். "அப்படி யானால் அவற்றை அழித்துவிடப் போகிறீர்களா?" என்றும் வினவினாள்.

"இல்லை. அழிக்கப் போவதில்லை. அந்த மரக்கலங்கள் எனக்குத் தேவை. கடல்புறாவும் மற்ற ஆறு மரக்கலங்களும் சேர்ந்தால் நல்ல கடற்படையின் ஒரு பிரிவு ஏற்படும். அதைக் கொண்டு இந்த ஜலசந்தியை நான் ஆள முடியும். கலிங்கத்தின் கடல்பலத்தை உடைக்க முடியும். அந்தக் கப்பல்கள் எனக்குத் தேவை" என்றான் இளையபல்லவன்.

"அதிலுள்ள நானூறு பேர் உங்களுடன் சேருவார் களென்று எதிர்பார்க்கிறீர்களா?"

"இல்லை. எதிர்பார்க்கவில்லை. தவிர கலிங்கம் நமக்கு விரோதி. அதன் மாலுமிகளை நம்பி நம் கடற்படையில் சேர்க்க முடியாது. அந்த இரண்டு மரக்கலங்களும் வந்ததும் இந்தத் தீவு பழையபடி இருக்கும். எந்தவிதமான வித்தியாசமும் காணப்பட மாட்டாது. நானூறு மாலுமிகளும் கரைக்கு வந்ததும் அவர்களை வளைக்க ஆயிரம் பேர் இருப்பார்கள். கத்தியின்றி ரத்தமின்றி அவர்கள் சிறைப் படுத்தப்படுவார்கள்."

"ஆயிரம் பேர் ஏது உங்களுக்கு?"

"அதோ உள்ள அறுநூறு மாலுமிகள், கங்கதேவனுக்குப் பயந்து காட்டுக்குள் ஓடிய தமிழர்..." என்று அவன் சொல்லி முடிக்கு முன்பு, "ஆமாம்! காட்டுக்குள் தமிழர் இருப்பது உங்களுக்கு எப்படித் தெரிந்தது?" என்று வினவினாள் காஞ்சனாதேவி.

இளையபல்லவன் அவளை நோக்கித் திரும்பினான். "தேவி! எப்பேர்ப்பட்ட கொடியவனும் ஓர் ஊர் முழுவதையும் அழிக்க முடியாது. தப்பிச் செல்பவர் இருக்கவே இருப்பார்கள். தப்பிச் சென்றால் இங்கு காட்டுப்புறத்தில் தானே இருக்க வேண்டும்? ஆகவே காட்டுப்புறத்தைக் கண்காணிக்க முதலில் சேந்தனை அனுப்பினேன். மனித நடமாட்டம் இருப்பதாகச் சேந்தன் செய்தி கொண்டு வந்தான். பிறகு இரவுகளில் நானே சென்றேன். சிதறிக் கிடந்த தமிழர்களைத் திரட்டினேன். இந்தக் கொள்ளை மாலுமிகள் எதிர்த்தால் அவர்களைச் சமாளிக்க ஆயுதபாணிகளாக வடக்குக் கோடியின் காட்டு முகப்பில் வரும்படி தமிழர்களுக்கு உத்தரவிட்டிருந்தேன். நீதான் பார்த்தாயே அவர்கள் வந்ததை" என்றான்.

"ஆம். பார்த்தேன்" என்றாள் காஞ்சனாதேவி, அவன் ஏற்பாடுகளின் பக்குவத்ஷை நினைத்து.

"ஆனால் சண்டைக்கு அவசியமில்லாது போயிற்று அப்பொழுது. இப்பொழுதும் அவசியமில்லை. அந்த அறுநூறு பேர், கடல்மோகினியின் தமிழர் இருநூறு பேர், கடல்புறா மாலுமிகள் இருநூற்றுச் சொச்சம் பேர். ஆக ஆயிரத்துக்கு மேற்பட்ட தொகையினர், வரப்போகும் கலிங்கத்து மாலுமிகள் நானூறு பேரைச் சிறை செய்வது ஒரு பெரிய காரியமல்ல" என்று விளக்கினான்.

அவன் திட்டத்தை மிக நன்றாகப் புரிந்து கொண்டாள் காஞ்சனாதேவி. அது எத்தனை திடமானது என்பதை அடுத்த நாளே அவள் புரிந்து கொண்டாள். அவளைவிட்டு அந்த அறையிலிருந்து கிளம்பி அன்று காலை கடற்கரையோடு சென்ற இளையபல்லவன் அன்று மாலைதான் மீண்டும் மாளிகைக்குத் திரும்பினானென்றாலும், நீராடி உணவருந்திய வேளை போக மீதி நேரம் முழுவதையும் அந்தச் சாளரத் திலேயே உட்கார்ந்து கழித்த காஞ்சனாதேவி இளைய பல்லவன் நடவடிக்கை ஒவ்வொன்றையும் கவனித்துக் கொண் டிருந்தாள்.

கடற்கரையோரம் சென்ற இளையபல்லவன் அங்கிருந்த படகொன்றில் ஏறி, கடல்புறாவுக்குச் சென்றான். அங்கிருந்து நீண்ட நேரம் கழித்து கடல்புறாவிலிருந்து மீண்டும் கரைக்கு வந்தபோது அங்கிருந்த உடையைக் கண்டு ஸ்நானபானாதி களைப் படைத்தலைவன் கடல்புறாவிலேயே முடித்துக் கொண்டான் என்பதை உணர்ந்து கொண்டாள். கரைக்கு வந்தபோது அவனுடன் அமீரும் வந்ததையும் அமீரிடம் அவன் மாளிகையைச் சுட்டிக்காட்டி ஏதோ உத்தரவிட்டு, கொள்ளைக்கார மாலுமிகள் இருந்த இடத்தை நோக்கிச் சென்றதையும் அவள் கவனித்தாள். சற்று நேரத்திற்கெல்லாம் அமீரும் சேந்தனும் மாளிகையிலிருந்த பணப்பெட்டிகளைப் பலர் தூக்கித் தொடர்ந்து வர, கொள்ளை மாலுமிகளிருந்த இடத்துக்குச் சென்றதையும் கவனித்தாள். அந்தப் பெட்டிகள் ஆறும் திறக்கப்பட்டு அதிலிருந்து நிதிக்குவியல்கள் விநியோகிக்கப்பட்டதையும், அந்தக் கொள்ளை மாலுமிகள் இளையபல்லவனைச் சூழ்ந்து மகிழ்ச்சிக் கூச்சலிட்டதையும் கண்டு, அதன் காரணத்தையும் புரிந்துகொண்டாள்.

அன்று பிற்பகலில் யாரும் தடை செய்யாமல் தமிழர்கள் இருநூறு பேரும் கடற்கரையை அடைந்தார்கள். அங்கிருந்து படகுகளில் ஏறி வடதிசையில் நின்ற கங்கதேவன் மரக்கலங் களை அடைந்தார்கள். கடைசியில் பாலிக்குள்ளன் மட்டும் தனிப் படகொன்றில் சென்று அந்த மரக்கலம் ஒன்றில் ஏறினான். இந்த ஏற்பாடுகளைக் கண்ட காஞ்சனாதேவி கடல் மோகினி திட்டமாக இளையபல்லவன் வசப்பட்டு விட்ட தென்பதையும், இனிமேல் அது தமிழர் தீவாகி விடுமென்பதை யும் தீர்மானித்துக் கொண்டாள்.

அன்று மாலை இளையபல்லவன் மாளிகை வந்த போது மாடியறையில் காஞ்சனாதேவி உணவு பரிமாற அருந்திக்கொண்டே, "இன்னும் நான்கு நாட்களில் வெளியே சென்றிருக்கும் மரக்கலங்களை எதிர்பார்க்கிறேன். அவை வந்ததும் எனது திட்டம் பூர்த்தியாகிறது கடல்மோகினி

சம்பந்தப்பட்டவரை. எனது அடுத்த நோக்கம்..." என்றவன் வார்த்தையை அரைகுறையாக விட்டான்.

"என்ன சொல்லுங்கள்?"

இளையபல்லவன் உணவருந்திய தட்டில் கையைக் கழுவி எழுந்திருந்து வாயையும் கையையும் துடைத்துக்கொண்டான். பிறகு காஞ்சனாதேவியை நோக்கினான். அவன் சொற்கள் உறுதியுடனும் பெருமையுடனும் உதிர்ந்தன. "அடுத்த நோக்கம் ஸ்ரீவிஜயத்தின்மீது. அந்த சாம்ராஜ்ய அரியணையில் உன்னை அடுத்த சித்ரா பௌர்ணமியில் அமர்த்துகிறேன். இப்பொழுது உனக்கிருப்பது கடாரம். நீ அதன் இளவரசி. ஆனால் அடுத்த சித்ரா பௌர்ணமியின்போது நீ கடாரத்தின் கட்டழகி மட்டுமல்ல, ஸ்ரீவிஜயத்தின் ஸ்ரீதேவியாகவும் மாறுவாய். இளவரசியல்ல நீ அப்பொழுது. கீழ்த்திசையின் பெரும் சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினி. இது சத்தியம்" என்ற இளையபல்லவன் அவளை அப்படியே வாரித் தன்னை நோக்கி இழுத்தான். அவன் கண்களில் பெரும் கனவு உலாவிக் கொண்டிருந்தது. அது நனவாகும் திட்டங்கள் உள்ளத்தே உருவாகிக் கொண்டிருந்தன.



# கடல் புறா

சாண்டில்யன்

## 33. மர்மச் சிலை சொன்ன மாயக்கதை



அத்தியாயம் 33

# மர்மச் சீலை சொன்ன மாயக் கதை

கடாரத்துக் கட்டழகியான காஞ்சனாதேவியை ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தினியாகக் கனவுகண்டு மாதங்கள் ஆறு கடந்த பின்பும், அதை நனவாக்கும் செயல் எதிலும் ஈடுபடாமலும் கவலை லவலேசமின்றியும் கடல் புறாவின் தளத்தில் பாய்மரங்களுக்கிடையே கட்டப்பட்டிருந்த கயிற்று ஊஞ்சலில் படுத்து ஆடிக்கிடந்த கருணாகர பல்லவன் வானத்தே ஊர்ந்து கடல்புறாவுடன் ஓடிவந்த முழுமதியைப் பார்த்து, சாந்தப் பெருமூச்சு ஒன்றை விட்டான். பிறகு ஊஞ்சலில் ஆடியபடியே திரும்பி, கடல்புறாவுக்கு அப்புறமும் இப்புறமும் பின்புறமும் ஊர்ந்து வந்த மற்ற நான்கு மரக் கலங்களைக் கண்டு பேருவகையும் எய்தி, அந்த உவகைக்கு அடையாளமாக முகத்தில் மகிழ்ச்சிக் குறியையும் படரவிட்டுக் கொண்டான்.

கடல் புறாவின் சூழ்நிலை மனோரம்மியமாக இருந்தது. மகான்கள் பிறக்கும்போது திக்குகள் நிர்மலமாயிருக்கும். காற்று மெல்ல இன்பமாக வீசும் என்று மகாகவி காளிதாசன் எழுதினான். அந்த மாதிரி யாரோ ஒரு மகான் அந்த இரவிலும் பிறந்திருக்கவேண்டும். அத்தனை நிர்மலமா யிருந்தன திக்குகள். காற்று தேகத்துக்கும் உள்ளத்துக்கும் இன்பமளிக்கும் வகையில் மிக மெதுவாக வீசிக்கொண் டிருந்தது. மென்மையான காற்றினாலும் நிர்மலமான திக்குகளாலும் கடலும் அமைதியுற்றிருந்ததால் கடல் புறா உல்லாசப் படகுபோல் மிக நிதானமாக ஒரே சீராக ஓடிக் கொண்டிருந்தது. அதன் சீரைப் போலத்தான் சென்ற ஆறு மாதங்களில் இளையபல்லவன் வாழ்க்கையும் ஓடிக்கொண் டிருந்தது. அந்த ஆறு மாதங்களில் அவன் பிரசித்தியும் கடல்

புறாவின் புகழும் தூரக் கீழ்த்திசை நாடுகளில் மட்டு மல்லாமல் பாரதத்திலும் பரவிக்கிடந்தது. எட்டாக் கையிலிருந்த சீன நாட்டிலும் கடல்புறாவின் பெயரும் அதன் தலைவன் பெயரும் அடிபட்டன.

சில நாடுகள் அவனைப் பெரிய கடல் வீரனெனக் கொண்டாடின. இன்னும் சில நாடுகள் பயங்கரக் கொள்ளைக்காரனெனக் கூவின. மற்றும் சில நாடுகள் கொள்ளைக்காரனாயிருந்தாலும் நல்ல கொள்கைகளை யுடையவனெனக் கூறின. அவனுக்குக் கிடைத்தவை பலவிதப் பெயர்கள். அந்த மரக்கலத்தின் வேகத்தையும் போரின்போது சுழலும் புது விந்தையையும் அதன் பயங்கர யந்திரங்களைப் பற்றியும் ஆயுதங்களைப் பற்றியும் சிலாகித்துப் பேசாதவர்கள் எந்த நாட்டிலுமில்லை.

அந்த ஆறு மாதங்களில் கடல்புறா பல போர்களைக் கண்டது. பல மரக்கலங்களை மூழ்கடித்தது. சிலவற்றைப் பிடிக்கவும் செய்தது. கடல்மோகினித் தீவுக்கும் அதற்குத் தென்கிழக்கே இருந்த கடாரத்துக்கும் இடையே அடிக்கடி உலாவிய அதன் பார்வையிலிருந்து, பாரதத்திலிருந்து வந்த எந்த மரக்கலமும் தப்ப முடியவில்லையாயினும், அது தாக்கிய மரக்கலங்கள் எல்லாம் கலிங்கத்தின் போர்க்கலங்களாகவே இருந்ததைக் கண்ட மற்றைய நாடுகளுக்கு அதன் காரணத் தைப் புரிந்து கொள்வது ஒரு பிரமாதமான காரியமாகவும் இல்லை. தூரக் கீழ்த்திசை நாடுகளிலும் சின்னஞ் சிறு தீவுகளிலும் வர்த்தகத்தையும் நாகரீகத்தையும் பரப்ப வந்த தமிழர்களைக் கலிங்கம் படுத்திய பாட்டுக்குப் பதில் செய்யவே கடல்புறா அந்தப் பிராந்தியங்களில் நடமாடுகிற தென்பதை உணர்ந்து கொள்வது யாருக்கும் எளிதாயிருக்கவே, கலிங்கத்தின் மரக்கலங்கள் மேற்கொண்டு தனிப்பட அந்தப் பகுதியில் வராமல் கூட்டம் கூட்டமாக வரத் தொடங்கின. ஆனால் அந்தக் கூட்டங்களும் தாக்கப்பட்டு அவற்றின் பொருள்களும் சூறையாடப்பட்டது பெரும் பீதியை அளித்தது கலிங்கத்திற்கு. அதைப்பற்றிய செய்திகள் பல

ஸ்ரீவிஜயத்துக்கும் எட்டவே ஸ்ரீவிஜயச் சக்கரவர்த்தியான ஜெயவர்மன் கடல்புறாவை அழித்து அதன் தலைவனைப் பிடித்துக்கொண்டு வரத் தனது கடற்படைக்கும் கட்டளை யிட்டான். ஆனால் அந்தக் கட்டளை பிறந்த பல மாதங் களுக்குப் பின்பும் கடல்புறாவும் சிக்கவில்லை, அதன் தலைவனும் சிக்கவில்லை ஸ்ரீவிஜயத்தின் கடற்படையின் கைகளில்.

தூரக் கீழ்த்திசையின் பெரிய சாம்ராஜ்யத்தின் கடற் படையும், பாரதத்தின் கலிங்க நாட்டுக் கடற்படையும் சேர்ந்தும் தனது சிறு கப்பல் கூட்டத்தை அணுகவும் முடியா திருப்பதை நினைத்து அந்த இரவில் பெரிதும் திருப்தி யடைந்து ஊஞ்சலில் படுத்துக் கிடந்த இளையபல்லவன் மெள்ளத் தனக்குள் சிரித்துக்கொண்டான். அத்தனை வலிமையைக் கடற்பகுதியில் தான் சம்பாதித்துக் கொண்ட தற்குத் தான் மட்டும் காரணமில்லை என்பதையும் தன் சகாக்களான அமீரும் கண்டியத்தேவனுங்கூடக் காரண மென்பதையும் நினைத்த இளையபல்லவன் அடுத்து வந்த மரக்கலங்கள்மீது மீண்டும் கண்களை ஓட்டினான். அந்த மரக்கலங்களை அவன் பார்ப்பதைச் சற்று தூரத்திலிருந்து கவனித்த கண்டியத்தேவன் அவனை நெருங்கி வந்தான். அந்த மரக்கலங்கள் இரண்டும் மாற்றியமைக்கப்பட்ட நாளிலிருந்து அவை இரண்டின் மீதும் தனிப்பட்ட பிரேமையை இளைய பல்லவன் வைத்திருப்பதை அறிந்தும் அதற்குக் காரணம் மட்டும் புரியாத கண்டியத்தேவன் அதை அன்று கேட்டு விடுவதென்ற தீர்மானத்துடன் இளையபல்லவனை அணுகி, "படைத்தலைவர் கண்கள் அந்த இரண்டு மரக்கலங்களை மட்டும்தான் பல நாட்களாகப் பார்க்கின்றன" என்றான்.

கயிற்று ஊஞ்சலில் சற்று ஒருக்களித்து எழுந்த இளைய பல்லவன் அரைப் படுக்கையும் அரை உட்காரலுமாகச் சாய்ந்த வண்ணம் சொன்னான், "அவை இரண்டும் எனக்கு மிகவும் பிடித்தவை தேவரே" என்று. அதைச் சொன்ன குரலில் இன்பம் மிகவும் துளிர்த்து நின்றது.

"அது எனக்குத் தெரிகிறது படைத்தலைவரே," என்றான் கண்டியத்தேவன் குற்றம் சாட்டும் குரலில்.

"எப்படித் தெரிகிறது தேவரே?" என்று வினவிய இளைய பல்லவன் இதழ்களில் குறுநகை துளிர்த்தது.

"அந்த இரண்டு மரக்கலங்களும் முதல் முதலில் கடல் புறாவினால் கைப்பற்றப்பட்ட கலிங்கத்தின் மரக்கலங்கள்" என்று சுட்டிக் காட்டினான் தேவன்.

"அதனாலென்ன?"

"முதலில் கிடைத்த கடல் பரிசுகள் அவை."

"அதனால் எனக்கு அவற்றின்மீது பிரியம் அதிகம் என்கிறீரா?"

"அதனால் மட்டுமல்ல."

"வேறு எதனால்?"

"மற்ற மரக்கலங்களைவிட அவை இரண்டிலும் அதிக ஆயுதங்களைப் பொருத்தியிருக்கிறீர்கள்."

"உம்."

"தவிர அவற்றை *சர்ப்ப மந்திரங்களாக மாற்ற உத்தர விட்டீர்கள்..."

கண்டியத்தேவன் எதைச் சொல்ல முற்படுகிறான் என்பதை ஊகித்துக் கொண்ட இளையபல்லவன் புன்முறுவலின் சாயை முகம் பூராவும் படர்ந்தது. "சொல்லுங்கள் தேவரே!" என்று ஊக்கினான் மகிழ்ச்சியுடன்.

"கலிங்கத்தின் மரக்கலங்கள் நம்மிடம் சிக்கியபோது அவற்றுக்கு முகங்கள் மட்டுந்தான் சர்ப்பம். மற்றபடி வெறும்

---

* சர்ப்ப மந்திரம் என்பது ஒருவகைக் கப்பல். அதன் அறை ஒரு கோடியிலிருந்து இன்னொரு கோடிவரை நீண்டு இருக்கும். இத்தகைய கப்பல் அரசாங்க பொக்கிஷம், குதிரைகள், பெண்கள் இவர்களை ஏற்றிச் செல்ல ஏற்பட்டவை.– 'யுக்தி கல்பதரு' என்ற நூலின் போஜன் தரும் தகவல், Indian Shipping by R.K. Mukerji.

போர்க்கப்பல்கள். நீங்கள் அவற்றை சர்ப்ப மந்திரங்களாக மாற்றக் கட்டளையிட்டீர்கள். சர்ப்ப மந்திரங்கள் போருக்காக ஏற்பட்டவையல்ல. அரசாங்கப் பொக்கிஷம், மாதர், குதிரைகள் இவற்றை ஏற்றிச் செல்ல ஏற்பட்டவை. ஆனால் இப்பொழுது..."

"பாதகமில்லை, சொல்லுங்கள்."

"அவற்றில் போர்க்கலங்களையும் பொருத்தச் சொன்னீர்கள். பொருத்தியும், கடற்போர் என்று வரும்போது அவற்றைத் தற்காப்புப் போருக்கு மட்டும் ஏவுகிறீர்கள். தாக்குதலைக் கடல் புறாவும் மற்ற இரு மரக்கலங்களுமே நடத்துகின்றன" என்று சுட்டிக் காட்டினான் கண்டியத் தேவன்.

"உண்மைதான் கண்டியத்தேவரே!" என்ற இளைய பல்லவன் கயிற்று ஊஞ்சலிலிருந்து கீழே குதித்து மடமட வென்று கடல்புறாவின் தளத்தில் நடந்து அதன் கீழ்த்திசை ஓரத்துக்கு வந்தான். "தேவரே! இப்பொழுது பாருங்கள், அந்த இரு மரக்கலங்களையும்" என்று அவற்றை நோக்கிக் கையை நீட்டினான்.

அந்த இரு மரக்கலங்களையும் மாற்றியமைத்த கண்டியத் தேவனுக்கு அவற்றின் அமைப்பு அணு அணுவாகத் தெரிந்திருந்தும் இளையபல்லவன் கட்டளையை முன்னிட்டு அவற்றை வேண்டா வெறுப்பாகப் பார்த்தான். அவன் முகத்தில் விரிந்த வெறுப்பைக் கவனிக்காமலே இளைய பல்லவன் கூறினான்: "தேவரே, அந்த இரு மரக்கலங்களும் இரண்டு ராணிகளை ஏற்றிச் செல்லக் கூடியவை. பெரும் பொக்கிஷத்தையும் சாதிப் புரவிகளையும் ஏற்றிச் செல்லக் கூடியவை. தவிர, தனிப்பட எதிர்க்கப்பட்டாலும் போரிட ஆயுத பலமும் உள்ளவை. அந்த இரண்டு மரக்கலங்களும் இரண்டு ராணிகளுக்கு ஏற்பட்டவை. ஒன்று கடாரத்து ராணிக்கு. இன்னொன்று அக்ஷயமுனை ராணிக்கு. அந்த இரண்டு ராணிகளும் இவற்றில் புரவிகளுடனும் பொருள் களுடனும் உல்லாசப் பயணம் செய்வார்கள். நங்கூரம்

பாய்ச்சி நிற்கும் துறைமுகங்களில் தங்கள் புரவிகளிலேயே சஞ்சரிப்பார்கள். அவர்கள் இருவருக்கும் நானளிக்கும் பரிசுகள் இவை. ஆகவே இவற்றைப் பாதுகாக்கிறேன்."

கண்டியத்தேவனுக்கு அப்பொழுதுதான் உண்மை தெரிந்தது! இளையபல்லவன் இதயத்தில் இரு பெண்கள் அமர்ந்திருக்கிறார்கள் என்பதையும், இருவரும் தனக்குக் கிட்டமாட்டார்கள் என்பதையும் புரிந்து கொண்டதன் விளைவாக அவர்களுக்கு இரு பெரும் பரிசுகளைப் படைத் தலைவன் தயார் செய்திருக்கிறானென்பதையும் புரிந்து கொண்ட கண்டியத்தேவன், 'இவர் எண்ணம் அப்படி யானால் இவற்றை ஏன் இத்தனை நாள் அவ்விருவருக்கும் அளிக்கவில்லை?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். தவிர ஆறு மாதங்களில் தனக்குப் புரியாத பல விஷயங்களை அன்று கேட்டுக் கொண்டு விடுவதென்றும் தீர்மானித்துக் கொண்டான். இளையபல்லவன் செய்யும் ஒவ்வொரு காரியத்துக்கும் காரணம் உண்டென்பதை அவன் அக்ஷயமுனையிலிருந்தே உணர்ந்து கொண்டான். அந்த உணர்வு கடல்மோகினியில் உறுதியாயிற்று. கடல்மோகினியில் அவன் கங்கதேவனுடன் நட்புக்கொண்டதும், கைப்பற்றிய கலிங்க மரக்கலங்களை கங்கதேவனின் ஆட்களைக் கொண்டே வெளியே அனுப்பியதும், அந்த இரு மரக்கலங்கள் திரும்பு முன்பாக கங்கதேவனுக்கும் மற்றைய மாலுமிகளுக்கும் மித்ரபேதம் செய்து கங்கதேவனைக் கொன்றதும், பிறகு அந்த இரண்டு மரக்கலங்கள் திரும்பியதும், அவற்றிலிருந்த கலிங்க மாலுமிகள் சிறைப்படுத்தப்பட்டதும் ஒன்றுக்குப் பின் ஒன்றாகத் தொடர்ச்சியாகக் கோத்துப் பார்த்தபோது எத்தனை முன் யோசனையுடன் இளையபல்லவன் நடந்து கொண்டிருக்கிறானென்பதைப் புரிந்துகொண்டான் கண்டியத் தேவன். ஆனால் இப்படிச் சிறைபிடித்த கலிங்க மாலுமிகள் நானூறு பேருக்கும் ஒரு மரக்கலத்தை இலவசமாகக் கொடுத்து அவர்கள் நாட்டுக்குத் திரும்ப ஏன் அனுமதித்தான் என்பது புரியாமலிருக்கவே அதைப் பற்றி அவன் கேட்டான்.

கண்டியத்தேவன் விடுத்த சந்தேக வினாவுக்கு இளைய பல்லவன் மிகச் சாந்தமாகப் பதில் சொன்னான், "எல்லோரை யும் தீர்த்துக்கட்ட தமிழர்கள் அரக்கர்களல்ல. தவிர, தமிழர்கள் அதிகமில்லாத கடல்மோகினியில் நானூறு கலிங்க மாலுமிகளை விட்டு வைப்பது நாமில்லாத சமயத்தில் அவர்கள் தயவில் தமிழர்களை விட்டுவைப்பதாகும். ஆகவே கங்கதேவன் மரக்கலங்களில் ஒன்றை அவர்களுக்கு அளித்து அவர்களை அவர்கள் நாட்டுக்கு அனுப்பினேன். இன்னொரு மரக்கலம் ஆயுத பலத்துடன் சதா கடல்மோகினியைக் காத்து நிற்கிறது. கடல்புறாவும் மற்ற நான்கு மரக்கலங்களும் கடலில் உலாவுகின்றன, கலிங்கத்தின் கடல் பலத்தை முறிக்கவும் தமிழர் மரக்கலங்களைப் பாதுகாக்கவும்."

கண்டியத்தேவனுக்கு இளையபல்லவன் இதயம் நன்றாகப் புரிந்தது. சென்ற ஆறு மாதங்களாக யாரிடமும் திறக்காத தன் இதயத்தை அந்த இரவில், முழுமதி வாரித் தெளித்த அமுத நிலவில், ஆழ்கடலின் மத்தியில், நன்றாகத் திறந்து கண்டியத்தேவனுக்குக் காட்டினான் இளையபல்லவன். மேலும் சொன்னான்: "தேவரே! கடல்மோகினியை நான் கைப்பற்றியதும் காஞ்சனாதேவியையும் குணவர்மனையும் பலவர்மனையும் ஏன் கடாரத்துக்குக் கொண்டுபோய் விட்டேனென்பதைப் பற்றி அமீர் பலமுறை கேட்டான். நான் பதில் சொல்லவில்லை. உமக்குச் சொல்லுகிறேன். இப்பொழுது குணவர்மன் கடாரத்தின் அரியணையிலிருக் கிறான். அவன் நாடுவிட்டுச் சென்று வருஷம் ஒன்றுக்கு மேலாகிவிட்டது. நீண்ட நாள் நாடு துறந்து மன்னன் இருந்து விட்டால் மன்னனுக்கும் மக்களுக்குமுள்ள நல்லுறவு போய் விடும். படைத்தலைவர்கள் என்ன திறமைசாலிகளானாலும் மன்னனில்லாத நாட்டைக் காக்கமுடியாது. ஆகையால் தான் அவர்களை நாடு சேர்ப்பித்தேன். பிறகு பல தடவை கடாரத்துக்கு அருகில் சென்றதும் நான் கடாரத்தின் துறைமுகத்துக்குள் செல்லவில்லை. அதற்குக் காரணம் உண்டு. சோழ நாட்டுக் கடற்கொள்ளைக்காரனுடன் உறவு

கொண்டவன் குணவர்மன் என்ற சாக்கில் ஸ்ரீவிஜயத்தின் சக்கரவர்த்தி அவரைத் தாக்க முற்பட்டால் நாம் அவரையோ கடாரத்தையோ காத்திருக்க முடியாது. ஆகையால் அவர்களை நாட்டில் சேர்த்ததோடு நின்றுவிட்டேன். அக்கம் பக்கத்திலும் எதிர்ப்புறத்திலும் பல ஊர்களுக்குச் சென்றேன். பல இடங்களில் சோழர் கொடியை நாட்டினோம். பல போர்களை வென்றோம்."

இந்த விவரத்தைக் கேட்ட கண்டியத்தேவன் ஏதும் பேசாமலிருந்தான் பல விநாடிகள். பிறகு கேட்டான், "அப்படி யானால் இப்பொழுது ஏன் கடாரத்துக்குப் போகிறோம்?" என்று.

இளையபல்லவன் கண்கள் தேவன் கண்களைச் சந்தித்தன. பிறகு "உமக்கு விளங்கவில்லையா தேவரே?" என்ற சொற்கள் அவன் உதடுகளிலிருந்து நிதானமாக உதிர்ந்தன.

"எது?" தேவன் ஏதும் புரியாமல் விழித்தான்.

அவனைத் தன்னுடன் வரும்படி சைகை செய்து தனது அறைக்கு அழைத்துச் சென்ற இளையபல்லவன் அவனை உட்காரச் சொல்லிவிட்டு அமீரையும் அழைத்துவர மாலுமி யொருவனை அனுப்பினான். அமீர் வந்ததும், கண்டியத் தேவன் கேட்ட சந்தேகங்களையும் தான் சொன்ன பதில்களை யும் விளக்கமாகச் சொல்லிவிட்டு, "அமீர்! நாம் மீண்டும் இரண்டாம் முறையாகக் கடாரம் செல்லுகிறோம். நாம் இம்முறை செல்வதற்கும் ஆறு மாதத்திற்கு முன்பு சென்ற தற்கும் வித்தியாசம் உண்டு. இந்த ஆறு மாத இடைக்காலத்தில் நாம் பெரிதும் வலுத்துவிட்டோம். ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தை நேரிடையாக எதிர்க்கும் காலம் வந்துவிட்டது" என்று கூறி அவனையும் அமரச் சொன்னான். பிறகு அறையின் மூலை யிலிருந்த பெட்டியிலிருந்து பெரும் சீலையொன்றைக் கொண்டுவந்து அவர்கள் முன்னிலையில் விரித்தான். "இது நமது ஆறுமாத கால சாதனை. கடல்மோகினியில் நாம் தளமமைத்தது வீண்போகவில்லை" என்று கையால் அந்தச் சீலையின் பல பகுதிகளைச் சுட்டிக் காட்டினான்.

அந்தச் சிலையைக் கண்ட அமீரும் கண்டியத்தேவனும் பெரும் பிரமிப்பை அடைந்தார்கள். அந்தச் சிலையை அவன் அத்தனை நாள் யாரிடமும் காட்டவில்லை. அவர்களிடம் காட்டியபோது அந்த மர்மச் சிலை சொன்ன மாயக் கதை அவர்கள் மனக்கண்களைப் பெரிதும் திறந்துவிட்டது. மர்மச் சிலை விரிந்தது உலகத்தின் அந்தக் கோடியிலும். ஆறு மாத சாதனை அற்புத சாதனை என்று உணர்ந்த அந்த இரு பெரும் கடல் வீரரும் கருணாகர பல்லவனைப் பெருமையும் பிரமிப்பும் நிரம்பிய கண்களால் நோக்கினர்.

இளையபல்லவன் திருப்தியுடன் தலையை அசைத்தான். "இன்னும் ஆறே மாதங்கள்! ஸ்ரீவிஜயம் வீழ்ச்சியடையும். கடல் புறாவின் கீர்த்தி எங்கும் பாடப்படும்" என்றும் கூறினான், திருப்தி அவன் குரலில் நன்றாகப் பிரதிபலிக்க. ஆனால் அதே சமயத்தில் அவன் திட்டங்களுக்கு இடையூறாகக் கடாரத்தின் மற்றொரு துறைமுகத்தில் காலை வைத்துக் கொண் டிருந்தான்.



அத்தியாயம் 34

# தாய்நாட்டு மண்ணும் காற்றும்

கடல்புறாவின் தலைவனான கருணாகர பல்லவன் தனது அறையின் விளக்கொளியில் விரித்த மர்மச் சீலையைக் கண்டதும் அமீரும் கண்டியத்தேவனும் பெரும் பிரமிப்பின் வசப்பட்டார்களென்றால், அதற்குக் காரணம் இருக்கவே செய்தது. அவன் பெட்டியில் அத்தனை நாள் ரகசியமாக யாருக்கும் தெரியாமல் வைத்துக் காப்பாற்றி அன்று விரித்தது ஒரு வெண்பட்டுச் சீலை. அதில் செம்பருத்தியிலிருந்து காய்ச்சி எடுத்த சிவப்பு மையினால் பல இடங்களில் புள்ளிகளை வைத்திருந்தான் இளையபல்லவன். அந்தப் புள்ளிகளுக்கு இருபக்கங்களிலும் நீண்டும் வளைந்தும் சென்ற கோடுகள் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்துக்குள்ளடங்கிய நாடுகளின் எல்லைகளைக் குறித்தன. அந்தக் கோடுகளுக்குள் அடங்கி நின்ற புள்ளிகள் சென்ற ஆறுமாத காலத்தில் தாங்கள் விஜயம் செய்த பல இடங்களையும், நகரங்களையும் குறிக்கின்றன என்பதைப் புரிந்துகொண்ட அமீரும் கண்டியத்தேவனும், இளையபல்லவன் தீர்க்காலோசனையையும், அவன் முன்கூட்டி இட்ட திட்டங்களின் திட்டத்தையும் எண்ணிப் பெரும் வியப்புக்குள்ளாயினர்.

அந்தச் சீலையில் அக்கம் பக்கத்திலிருந்த இரண்டு கோடுகளுக்கு இடையே இருந்தது கடாரத்துக்கும் சொர்ணத் தீவுக்குமிடையே திகழ்ந்த கடல் பிராந்தியமென்பதையும், கோடுகளுக்கு அப்பால் உள்ளடங்கித் தெரிந்த புள்ளிகள் பல ஊர்களைக் குறிக்கின்றன என்பதையும் புரிந்துகொண்ட அமீரும் கண்டியத்தேவனும் அந்தப் புள்ளிகள் இருந்த இடங்களைக் கண்டு, ஸ்ரீவிஜயம் எத்தனை ஜாக்கிரதையாகச் சூழப்பட்டிருக்கிறது என்பதை எண்ணி ஆச்சரியத்தின் வசப்

பட்டனர். அவர்களின் அந்த மர்மச் சிலையைப் பார்த்த பார்வையிலிருந்தும் அவர்கள் முகங்களில் விரிந்த வியப்புக் குறியிலிருந்தும் அவர்கள் ஸ்ரீவிஜயத்தின் நிலைமையை ஓரளவு புரிந்துகொண்டு விட்டார்கள் என்பதை உணர்ந்துகொண்ட இளையபல்லவன் மீண்டும் தனது அறைக் கோடிக்குச் சென்று பெட்டியைத் திறந்து கோழியின் வெண்ணிற இறகு ஒன்றை எடுத்துக்கொண்டு வந்தான். அந்த இறகைக் கொண்டு, சென்ற ஆறுமாத சாதனையை விளக்கவும் முற்பட்டு, "அமீர்! தேவரே! உங்களுக்கு ஓரளவு நிலைமை புரிகிறதென்று நினைக்கிறேன். இருப்பினும் சற்று விளக்கமாகக் கூறுகிறேன்" என்று சொல்லி, "இதோ பாருங்கள், மொத்தம் ஒன்பது புள்ளிகள் இருபுறத்திலும் அடங்கிக் கிடக்கின்றன. அதாவது கடாரத்தின் கடற்கரையோரத்திற்குள் வடக்கி லிருந்து தெற்காக ஐந்து புள்ளிகளும் சொர்ண பூமிக்குள் நான்கு புள்ளிகளும் தெரிகின்றனவல்லவா!" என வினவினான்.

"ஆம் தெரிகிறது" என்றான் அமீர் சிலையிலிருந்து கண்ணை எடுக்காமலும் தலை நிமிர்ந்து இளையபல்லவனைப் பார்க்காமலும்.

"புள்ளிகள் ஒவ்வொன்றும் ஒரு பிராந்தியத்தைக் குறிக்கும். இதன்படி கடாரத்தின் ஐந்து பிராந்தியங்களுக்கும் சொர்ணத் தீவில் நான்கு பிராந்தியங்களுக்கும் நாம் விஜயம் செய்திருக் கிறோம்" என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

"ஆம். விஜயம் செய்திருக்கிறோம்" என்றான் கண்டியத் தேவன் உணர்ச்சி மிகுந்த குரலில். அவன் குரலில் உணர்ச்சி தொனித்ததற்குக் காரணம் இருந்தது. விஜயம் செய்த பிராந்தியங்களில் இளையபல்லவன் சாதாரணமாக விஜயம் செய்யவில்லை என்பதையும், ஒவ்வொரு கடற்போருக்குப் பின்பே விஜயம் செய்திருக்கிறான் என்பதையும் கண்டியத் தேவன் உணர்ந்திருந்ததாலும், அந்த விஜயங்களின் பலனை யும் அவன் அறிந்திருந்ததாலும் அவன் குரலில் சற்றே நெகிழ்ச்சி தெரிந்தது.

அந்த நெகிழ்ச்சியைக் காதில் வாங்கிய இளையபல்லவன் முகத்தில் மகிழ்ச்சிக் குறி பரவியது. "ஆம் தேவரே! நாம் இந்த ஒவ்வோர் இடத்தையும் ஒவ்வொரு கடற்போருக்குப் பின்புதான் அடைந்திருக்கிறோம்" என்று கூறிய அவன் குரலிலும் அந்த மகிழ்ச்சி இருந்தது.

அமீரும் அந்த மகிழ்ச்சியில் கலந்துகொண்டு, "அது மட்டு மல்ல இளையபல்லவரே! ஒவ்வோர் இடத்தையும் அடைந்த போது வெறும் கையுடன் அடையவில்லை" என்றான் உற்சாகம் குரலில் ததும்ப.

"இல்லை அமீர், வெறும் கையுடன் போகவில்லை நாம். கைப்பற்றிய மரக்கலங்களுடன் சென்றோம்" என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

"அது மாத்திரமா? அந்த மரக்கலங்களை அந்த இடங் களுக்குப் பரிசாகவும் தந்தோம். நாம் கைப்பற்றிய மரக் கலங்கள் இன்று நம்மிடமிருந்தால் பெரும் கடற்படை நம் வசமிருக்கும்," என்ற கண்டியத்தேவன் குரலில் வருத்தம் தொனித்தது.

அந்த வருத்தத்தில் பங்குகொள்ள மறுத்த இளைய பல்லவன், "தேவரே! அந்த மரக்கலங்கள் நமது வசமிருந்தால் நாம் என்ன செய்திருக்க முடியும்?" என்று வினவினான்.

"இன்று ஸ்ரீவிஜயத்தை அதிக பலத்துடன் எதிர்க்கலாம்" என்றான் கண்டியத்தேவன்.

"உமது படைபலம் பெருகுவதை ஜெயவர்மன் பார்த்துக் கொண்டு வாளாவிருப்பானென்று நினைக்கிறீரா?" இதைக் கேட்ட இளையபல்லவன் குரலில் வியப்பு இருந்தது.

"இல்லாமல் என்ன செய்வான்?" கண்டியத்தேவன் தங்கள் பலத்திலுள்ள பெருமை குரலில் தொனிக்கக் கேட்டான்.

"நன்றாக யோசித்துப் பாரும். தமிழகம் ஸ்ரீவிஜயத்தின் விரோதி. தற்பொழுது தமிழர்களின் கடற்படையொன்று உருவாகிறது ஸ்ரீவிஜயத்தின் அருகே. அதற்கு மேலும் மேலும்

மரக்கலங்கள் கிடைத்து வருகின்றன. இத்தகைய நிலைமையில் ஸ்ரீவிஜயத்தின் சக்கரவர்த்தி கையைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருக்க முடியாது; நான் சக்கரவர்த்தியாய் இருந்தால் முதலில் என் படையை மாநக்காவரத்தின்மீது ஏவி அதை அழித்துவிடுவேன். அதைத்தான் ஜெயவர்மனும் செய் திருப்பான்" என்றான் இளையபல்லவன்.

"அதை இப்பொழுது ஏன் செய்யக் கூடாது?" என்று அமீர் வினவினான்.

"நம் சாதனை என்னுடன் சதா இருக்கும் உங்களுக்கே புரியவில்லையே, அவனுக்கு எப்படிப் புரியும்? அமீர்! ஜெய வர்மனுக்கு அணுகி வரும் ஆபத்தின் பயங்கரம் இன்னும் புரியவில்லை. நமது படையை ஒரு கடற்படையாக அவன் மதிக்கவில்லை. இது ஒரு கொள்ளைக் கூட்டம் என்றுதான் நினைக்கிறான். ஆகவே என்னைக் கைப்பற்றிக் கடல் புறாவை அழிப்பவர்களுக்கு வெகுமதியளிப்பதாகவும் பறைசாற்றி இருக்கிறான்" என்று விளக்கினான் இளையபல்லவன்.

"ஆம், உண்மை" என்று ஒப்புக்கொண்டான் அமீர்.

இளையபல்லவன் மேலும் விளக்கினான்: "கடல்மோகினி யைத் தளமாகக் கொண்ட பிறகு சென்ற ஆறு மாதங்களில் பன்னிரண்டு முறை கடற்போரில் நாம் ஈடுபட்டோம். கலிங்கத்தின் மரக்கலங்கள் பலவற்றைத் தாக்கினோம். கொள்ளையிட்டோம். சிலவற்றை அழித்தோம். சிலவற்றைக் கைப்பற்றினோம். கைப்பற்றிய மரக்கலங்களை அருகிலிருந்த தமிழர் நகரங்களுக்குச் செலுத்திச் சென்றோம். அந்த மரக் கலங்களை தமிழர்களுக்குப் பரிசாகவும் கொடுத்தோம். அவற்றைப் பதனப்படுத்திப் போரிடும் சன்னதத்திலும் வைத்தோம். முடிவு என்ன தெரியுமா? நன்றாகக் கவனியுங்கள் இந்தப் பட்டுச் சீலையை! இந்தப் புள்ளிகள் ஒவ்வொன்றும் தமிழர் பாசறை. இப்படி ஐந்து பாசறைகள் கடாரத்தின் மேற்குத் தரையிலும், நான்கு பாசறைகள் சொர்ணத்தீவின் கிழக்குக் கரையோரமாகவும் அமைந்திருக்கின்றன. இந்தப் பாசறைகளுக்கு, கப்பல் தளங்களுக்கு இடையே உள்ளது

ஸ்ரீவிஜயத்தின் கடல் பகுதி. ஆகவே ஸ்ரீவிஜயத்தின் கடற்பகுதி இன்று நமது பிடியிலிருக்கிறது. நன்றாகப் புள்ளிகளை உற்றுப் பாருங்கள். இதோ, மாயிருதிங்கம், இலங்கசோகம், மாப்பாப் பாளம், மாவிளம்பகம், தலைத்தக்கோலம் இவையனைத்தும் கடாரத்தின் ஓரத்திலிருக்கின்றன. சொர்ணத்தீவின் பகுதியில் அக்ஷயமுனை, பண்ணை, மலையூர் இந்த மூன்றும் இருக் கின்றன. நான்காவது புள்ளிதான் ஸ்ரீவிஜயம். சீலையின் நிலையை நன்றாகப் பார்த்தால் புரிந்துகொள்வீர்கள், ஸ்ரீவிஜயத்தின் மீது தமிழர் கடற்படையின் எட்டு வேல்கள் திரும்பியிருக்கின்றன என்று. இன்று ஸ்ரீவிஜயத்தின் கடல் பிராந்தியம் இந்த முக்கிய ஜலசந்தி நமது கையில் இருக் கின்றது. தமிழர் இடங்கள் விட்டு விட்டும் பரவிக் கிடப்பதால் அவற்றின் பலம் எதிரிக்குத் தெரியவில்லை. ஆனால் போர் என்று ஏற்படும்போது கலிங்கத்தாலோ வேறு எந்த நாட்டாலோ எந்தவித உதவியும் ஸ்ரீவிஜயத்துக்குக் கிடையாது. நமது காவலைத் தாண்டி ஸ்ரீவிஜய ஜலசந்திக்குள் எந்த மரக்கலமும் நுழைய முடியாது."

இதைச் சொன்ன இளையபல்லவன் சற்று நிதானித்தான். திடீரென அவன் பேச்சை நிறுத்திவிடவே அமீரும் கண்டியத் தேவனும் சீலையிலிருந்து தலையை நிமிர்த்தி அவனை நோக்கி னார்கள். இளையபல்லவன் முகத்தில் பரிபூரண திருப்தி நிலவிக் கிடந்தது. அவன் எழுந்து கையைப் பின்புறம் கட்டிக் கொண்டு சில விநாடிகள் அந்த அறையில் அப்புறமும் இப்புறமும் உலாவினான். பிறகு மகிழ்ச்சியுடன் அவ்விருவரை யும் நோக்கி, "இப்பொழுது உங்களுக்குப் புரிகிறது என்று நினைக்கிறேன்" என்றான்.

"புரிகிறது தலைவரே" என்று இருவரும் ஏககாலத்தில் கூவினார்கள்.

இளையபல்லவன் அந்த இருவரின் ஏகோபித்த ஆமோதிப்பால் உவகை கொண்டான். மீண்டும் அவர்கள்மீது கண்களை நிலைக்கவிட்டான் சில வீநாடிகள். பிறகு தனது அறையின் சாளரத்தின் மூலம் தெரிந்த கடல்நீரைச் சுட்டிக்

காட்டி, "தேவரே! நீர் சுங்க அதிகாரி. தவிர மரக்கல நிர்மாண நுணுக்கங்களை நன்றாக அறிந்தவர். அமீர் ஏற்கெனவே மாலுமியாகப் பணியாற்றியவன். அகூதாவினிடம் மாலுமியா யிருந்தவன். கடலில் மீண்டும் சஞ்சரிப்பதற்காகக் கலிங்கத்தில் தன் வர்க்கத்தையே விட்டு வந்தவன். ஆனால் நான் ஏன் இந்தக் கடலுக்கு வந்தேன் என்பது எனக்கே தெரியவில்லை. நான் தரையில் படைகளை நடத்திச் செல்பவன். கடல் போரையும் மரக்கல அமைப்பு முறைகளையும் அடியோடு அறியாதவன். இருப்பினும் கடல் என்னை இழுத்தது, இப்பொழுதல்ல தேவரே! ஆரம்பத்திலேயே இழுத்தது. தரை மார்க்கமாகக் கலிங்கம் வர வசதியிருக்க, என்ன காரணத் தினாலோ வீரராஜேந்திரதேவர் புகாரிலிருந்து என்னை மரக் கலத்தில் அனுப்பி வைத்தார். அவர் கைராசி என்னைக் கடல் கொள்ளைக்காரனாகவே ஆக்கிவிட்டது. நிலத்திலிருந்து நீரில் இறங்கிவிட்டேன். தரைப் போர் போய் கடல் போரில் ஈடு பட்டேன். தாய்நாடு விட்டு எங்கோ வந்துவிட்டேன்; எதற்கோ போராடுகிறேன். விதியின் விளையாட்டென்றால் இப்படித் தான் இருக்குமா தேவரே?" என்ற இளையபல்லவன் மேலும் சொன்னான்: "ஆம் தேவரே! விதியின் விளையாட்டுதானிது. இல்லையேல் கலிங்கத்துடன் சமாதானம் பேசவந்தவன் கடல் கொள்ளைக்காரனாக மாறுவானேன்? ஸ்ரீவிஜயத்தை முறி யடிக்கத் திட்டம் போடுவானேன்? தமிழகத்திலிருந்து இங்கு வருவானேன்?" என்று.

இந்த இடத்தில் தலையை நிமிர்ந்து அறையின் உச்சியைப் பார்த்த இளையபல்லவன் பெருமூச்சு விட்டான். மேற் கொண்டு பல விநாடிகள் அவன் பேசவுமில்லை. அவன் உள்ளத்தின் வேட்கை கண்டியத்தேவனுக்கு நன்றாகப் புரிந்து விட்டது. படைத்தலைவன் தமிழகத்தை நினைத்துக்கொண்டு விட்டானென்பதை உணர்ந்து கொண்ட கண்டியத்தேவன் இளையபல்லவனிடமிருந்து எழுந்த பெருமூச்சை நினைத்து வியப்பின் வசப்பட்டான். 'தூரக்கிழக்கில் கடல் போரில் நிகரற்றவனென்று பெயர் பெற்றிருக்கிறார். கடல்மோகினி

யைச் சொந்தமாக்கிக் கொண்டார். ஒன்பது பெரும் கடல் தளங்களை அமைத்து ஸ்ரீவிஜயத்தின் கடல் வாயிலையே அடைத்துவிட்டார். இத்தனை சாதனைகளைச் செய்தவர் எதற்காக ஊரை நினைத்துப் பெருமூச்சு விடுகிறார்?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான். அவன் உள்ளூரக் கேட்டுக்கொண்ட வினாக்களைப் பகிரங்கமாகவே தொடுத்தான் அமீர். "தாய் நாட்டிலிருந்து வந்ததால் உங்கள் புகழ் ஒன்றும் குறைந்துவிடவில்லையே?" என வினவினான்.

இளையபல்லவன் அமீரை நோக்கித் திரும்பினான். "இல்லை அமீர். குறைந்துவிடவில்லை" என்று சோகத்துடன் சொன்னான்.

"உங்களுக்கு என்ன குறை இப்பொழுது? செல்வத்தில் குறைவா? புகழில் குறைவா? நிலபுலத்தில் குறைவா?" என்று வினவினான் அமீர்.

"எதிலும் குறைவில்லை" என்றான் இளையபல்லவன்.

"வேறு என்னதான் குறை?"

"தாய்நாட்டில் இல்லாத குறைதான்."

"இங்கில்லாதது தமிழகத்தில் என்ன இருக்கிறது?"

இளையபல்லவன் முகத்தில் விசனமும் இன்பமும் கலந்துலாவின. "நான் சொன்னாலும் உனக்குப் புரியாது அமீர். இருப்பினும் சொல்கிறேன் கேள். எங்கள் தமிழ்நாடு உன் அரபு நாட்டைப்போல் பாலைவனமல்ல. பெண்ணையும் பொன்னியும் வைகையும் தாமிரபரணியும் பாயும் நாடு. பொதிகை மலையும் உதயகிரியும் உள்ள நாடு. அதன் மண் வாசனையும், காற்றின் இன்பமும் உனக்குத் தெரியாது. இந்த மாதிரி ஆயிரம் கடல்மோகினித் தீவுகளையும், ஏன் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தையுமே எனக்குச் சாசனம் செய்தாலும் எனக்கு இங்கு இருப்புக் கொள்ளாது. தமிழ் மண்ணில் இருப்பு வேண்டும் எனக்கு. அதுதான் விருப்பு. மற்ற மண் எனக்கு வெறுப்பு. அந்தச் சுகத்தை நீ அறியமாட்டாய்" என்றான். இதைச் சொன்ன இளையபல்லவன் வேறு திக்கில் தனது

தலையைத் திருப்பிக்கொண்டான். அதற்குக் காரணமும் அமீருக்குத் தெரிந்தது. தூரக்கிழக்கில் யார் பெயரைக் கேட்டால் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யம் நடுங்குகிறதோ அப்பேர்ப் பட்ட இளையபல்லவன் தாய்நாட்டை நினைத்து உருகுவதை யும், அதைப்பற்றி அவன் பேசியபோது அவன் குரல் தழுதழுத்ததையும், கண்களில்கூட நீர் திரண்டதையும் கண்ட அமீர் வியப்புடன் கண்டியத்தேவனை நோக்கினான்..

கண்டியத்தேவன் முகத்தில் சோகம் படர்ந்து கிடந்தது. அதிகமாக மேற்கொண்டு எதுவும் பேச வேண்டாமென்று சைகையும் காட்டினான் தேவன் அமீரை நோக்கி. சில விநாடிகள் மௌனம் நிலவியது அந்த அறையில். திடீரென்று சோகமும் அன்பும் கலந்த குரலில் கேட்டான் இளைய பல்லவன் அவர்களை நோக்கித் திரும்பாமலே, "அமீர்! பாரதத்தில் இராமாயணம் என்ற நூல் இருக்கிறது தெரியுமா உனக்கு?" என்று.

"கேள்விப்பட்டிருக்கிறேன்" என்றான் அமீர், அந்த நூலைப்பற்றி எதற்குப் பிரஸ்தாபம் என்பதை அறியாமல்.

"அதன் கதாநாயகன் இராமன் சொல்கிறான்: 'எந்த தேசத்திலும் மனைவிமார்கள் அகப்படுவார்கள். பந்துக்கள் அகப்படுவார்கள். ஆனால் சகோதரன் கிடைக்கும் நாட்டை மட்டும் நான் கண்டதில்லை' என்று. அது தாய்நாட்டுக்கும் பொருந்தும். ஆயிரம் நாடுகள் கிடைக்கலாம் நமக்கு. ஆனால் அவை அனைத்தும் தாய்நாடாகாது" என்றான் இளைய பல்லவன். அப்படிச் சொல்லிக்கொண்டே ஒரு புறத்திலிருந்த திசை காட்டும் கருவியை எடுத்து நோக்கினான். நோக்கி விட்டுப் பரபரப்புடன் சாளரத்தை நோக்கி ஓடி வெளியே தலையை நீட்டிக் காற்றை நன்றாக முகர்ந்து இழுத்து, "அமீர், இதோ தாய்நாட்டின் காற்று வருகிறது. என்ன இன்பம்! இன்பம்!" என்று கூவினான் மெய்மறந்து.

பிறகு திரும்பிய படைத்தலைவன் பல விநாடிகள் கழித்து அவர்கள் இருவருக்கும் வெளியே செல்ல விடையளித்தான். இருவரும் சென்றதும் தனது பஞ்சணையில் மல்லாந்து

விழுந்தான். அவன் வாழ்வின் முக்கிய கட்டங்களெல்லாம் அவன் மனக்கண் முன்பு வலம் வந்தன. கலிங்கம் வந்தது. காஞ்சனா வந்தாள். மஞ்சளழகி வந்தாள். சொர்ண பூமியும் வந்தது. ஆனால் தொண்டை மண்டலமும், சோழ மண்டலமும், பாண்டிய நாடும், சேரர் ஊரும் அவன் மனத்தை ஆக்ரமித்துக்கொண்டன. 'சீக்கிரம் ஸ்ரீவிஜயத்தைச் சீர்படுத்திக் காஞ்சனாதேவிக்கு அளித்துவிட்டுத் தாய்நாடு திரும்புகிறேன். கடாரத்தில் காலை வைத்ததும் போருக்கு ஏற்பாடு செய்கிறேன்' என்று தன் மார்புமீது கையை வைத்துப் பிரதிக்ஞையும் செய்தான் படைத்தலைவன்.

அடுத்து நான்கு நாட்களில் கடல் புறா கடாரத்தை அடைந்தது. ஆனால் பிரதிக்ஞைக்குப் பிரதிகூலம் காத்திருந்தது அங்கே. கடல்புறா கடாரத்தின் துறைமுகத்தில் நங்கூரம் பாய்ச்சியதும் வந்தது அழைப்பு. அழைத்தவனைப் பார்க்க விரைந்தான் படைத்தலைவன் படகுமூலம் துறையை எய்தி. ஆனால் அவனுக்காக அரண்மனையில் காத்திருந்த மனிதனைக் கண்டதும் பேரதிர்ச்சி ஏற்பட்டது படைத் தலைவனுக்கு. அவன் உத்தரவு அந்த அதிர்ச்சியை உச்ச நிலைக்குக் கொண்டு சென்றது. "உன்னைச் சிறைசெய்யக் கட்டளை எனக்கு" என்று மிக நிதானமாக அறிவித்தான் இளையபல்லவனை அழைத்தவன்.



அத்தியாயம் 35

# வீரராஜேந்திரர் பிரதிநிதி

•

*கனவு காண்பது மனத்தின் இயற்கை, கனவை உடைப்பது விதியின் இயற்கை. வாழ்வின் போக்கு இது. இதிலிருந்து யாருமே தப்பமுடிவதில்லை. இளையபல்லவன் மட்டும் எப்படித் தப்புவான்?*

தன் இதயத்தில் இடம் கொண்ட இரு பெண்களில் ஒருத்திக்கு அக்ஷயமுனையை அளித்த இளையபல்லவன், இன்னொருத்திக்கு ஸ்ரீவிஜயத்தை அளிக்கத் தீர்மானித்து அதற்கான திட்டங்களையும் வகுத்து உறுதிப்படுத்திக் கொண்டு மாநக்காவரத்திலிருந்து இரண்டாம் முறையாகக் கடாரத்தின் துறைமுகத்தில் நுழைந்தபோது பெரும் திருப்தி யுடனும் அலட்சியமாகவும் நுழைந்தான். தமிழர்கள் சங்க காலம் முதல் அறிந்த கடாரத்தின் சிறப்பையும் இயற்கைக் காவலையும் கூட அசட்டை செய்தவண்ணம் அவன் கடல் புறாகூட மிகுந்த கர்வத்துடன்தான் தலையைத் தூக்கிக் கொண்டு கடாரத்தின் முரட்டு அலைகள்மீது தவழ்ந்து சென்றது. பார்வைக்கு மிக இன்பமாகக் காட்சிகளைத் தரும் கடாரத் துறைமுகத்தில் கடல் மட்டும் மற்றவர்களைச் சுலபத்தில் உட்புக முடியாத வண்ணம் திணற அடிக்கும் முரட்டு அலைகளை உடையதாயினும், தன் கடல்புறாவை அந்த அலைகள் எந்தவிதத்திலும் புரட்டியோ, சாய்க்கவோ முடியாதென்ற பெருமையுடன் தளத்தில் நின்றவாறே கடாரத் துறைமுகத்தை நோக்கிய இளையபல்லவன், 'கடாரமென்ன, ஸ்ரீவிஜயமும் என்னைத் தடைசெய்ய முடியாது. என் இதய ராணிக்கு ஸ்ரீவிஜயத்தின் சாம்ராஜ்ய அரியணை இடம் கொடுத்தே ஆகவேண்டும்' என்று கனவும் கண்டான். அவன் அப்படிச் சிந்தித்த காலத்தில் கடாரத்தின் துறைமுக

அலைகள் மலைபோல் எழுந்து கடல்புறாவை நோக்கி வந்தன. பெரிதாகத் தாக்கிக் கப்பலை ஆட்டவும் செய்தன. எதற்கு? அவன் கனவை உடைக்கவா?

காரணம் என்னவோ தெரியாது. ஆனால், அந்த முரட்டு அலைகள் மீண்டும் மீண்டும் எழுந்து எழுந்து அவன் கண் முன்னால் உருண்டு உருண்டு பயங்கரமாக வந்தன. உருண்டு வந்த அந்த நீர்மலைகளைக் கண்டதும் வேறொரு கனவும் எழுந்தது இளையபல்லவன் இதயத்திலே. இராஜேந்திர சோழ தேவரின் பெருங் கடற் படையெடுப்பு அவன் மனக்கண்ணில் விரிந்தது. 'அவருடைய மரக்கலங்களையும் இந்த முரட்டு அலைகள் பெரும்பாடு படுத்தியிருக்க வேண்டும்' என்று நினைத்த சோழர் படைத்தலைவன், 'தொடு கடல் காவல் கடுமுரட் கடாரமும்' என்று இராஜேந்திர சோழ தேவர் தஞ்சை இராசராசேச்சுரத்துக் கர்ப்பக்கிருகத்தில், தென்புறத்தி லுள்ள இரண்டாம் பட்டைக் கல்வெட்டில் படைத்த சாஸனத்தை நினைத்து ஓரளவு புன்முறுவலும் கொண்டான். அந்த சாஸனத்தின் நினைப்பாலும், இராஜேந்திர சோழதேவர் தூரக்கிழக்கில் அடைந்த கடல் வெற்றிகளை நினைத்த களி வெறியாலும், கடல்புறாவின் தளத்தில் நின்று அந்தப் பழைய சாஸனப் பிருதுகளில் கண்ட நான்கு அடிகளைப் பெரும் குரலெடுத்துப் பாடவும் செய்தான் படைத்தலைவன்.

> "கலைத்தக்கோர் புகழ் தலைத்தக் கோலமும்
> திதமாவல்வினை மாதமா லிங்கமும் கலாமுதிரக்
> கடுந்திறல் இலாமுரி தேசமும் தெனக்க வார்பொழில்
> மானக்காவரமும் தொடுகடல் காவல் கடுமுரட் கடாரமும்..."

என்ற கல்வெட்டு வரிகளைப் பெருங்குரலெடுத்து இசைத்த இளையபல்லவன் அந்தக் கல்வெட்டுகள் குறித்த ஊர்கள் இராஜேந்திரர் காலத்துக்குப் பிறகு கலிங்கத்தின் வசப் பட்டாலும், தன் முயற்சியால் மீண்டும் தமிழ்க்கொடி அவ்விடங்களிலும் சோழர் பிருதுகளில் கண்ட மற்ற இடங் களிலும் பறப்பதை நினைத்து உவகை கொண்டு சற்று வாய்விட்டு நகைக்கவும் செய்தான். 'கடாரத்தின் முரட்டு

அலைகளை எப்படிக் கடல்புறா லட்சியம் செய்யாமல் எதிர்த்துச் செல்கின்றதோ அப்படி நானும் ஸ்ரீவிஜயத்தை எதிர்த்துச் செல்வேன்' என்ற தீர்மானத்துடன் காஞ்சனா தேவியைச் சக்கரவர்த்தினியாகவே கனவு கண்ட இளைய பல்லவனை நோக்கி, கடாரத்தைக் காவல் செய்யும் தொடு கடலும் முரட்டு அலைகளும் நகைத்திருக்க வேண்டும். இல்லாவிடில் அவன் கனவை உடைக்க ஒருவன் காத்திருப்பானா கடாரத்தின் அரச மாளிகையில்? அதுவும் சிறை செய்யப் போவதாகத்தான் கூறுவானா?

இப்படி எதுவும் நேருமென்பதைச் சிறிதளவும் நினைக் காமல் தன் கனவுகளிலேயே லயித்து, கடாரத் துறைமுகத்தில் கடல்புறாவைச் செலுத்திய இளையபல்லவன் மரக்கலத் தாரைகள் இரண்டாம் முறையாகக் கடாரத்தின் துறைமுகத் தில் சப்தித்தன. ஆனால், முதல் முறை அவன் அங்கு வந்த போதிருந்த குதூகலமும் வரவேற்பும் கடல்புறாவுக்கும் அவன் மரக்கலங்களுக்கும் அன்று கிடைக்கவில்லை. காஞ்சனா தேவியை முதன்முறை கடாரத்துக்கு அழைத்து வந்து தான் மட்டும் பின்வாங்கி வேறு திசை சென்று சில தினங்களுக்குப் பின் அவளைப் பார்க்க வந்தபோது அவன் தாரைகள் சப்திக்கவே செய்தன. அந்தத் தாரைகளைக் கேட்டதும் கடாரத்தின் மக்கள் திரள் திரளாக ஓடி வந்தார்கள் நீர்க் கரைக்கு. இளையபல்லவன் கடல்புறாவிலிருந்து படகில் இறங்கிக் கரைக்கு வந்ததும் மங்கல வாத்தியங்கள் முழங்கின. அவன் மீதும் அவன் இருபுறமும் வந்த கண்டியத்தேவன், அமீர் இருவர் மீதும் பூமலர்கள் கொள்ளையாகத் தூவப் பட்டன. ஏதோ பேரரசனை அழைக்கும் மக்களைப்போல் கடாரத்தின் மக்கள் ஆர்ப்பாட்டம் செய்தார்கள். அதுமட்டு மல்ல, அரச மாளிகையின் வாயிலிலேயே காஞ்சனாதேவி மாலையும் கையுமாகக் காத்திருந்தாள். அவள் அவனுக்கு அன்று எல்லோர் எதிரிலும் மாலையிடவில்லைதான். மாலையைச் சிறுமியொருத்தியிடம் கொடுத்து அணிவித்ததும் உண்மைதான். ஆனால் அவள் பங்கயக் கண்கள் அவனுக்கு

மாலை சூட்டத்தான் செய்தன. அதை அவனும் அறிந்தான். அவளும் அறிந்தாள். ஆனால் மற்றவர்கள் அறியவில்லை. தன்னைக் காத்த மாவீரனுக்குத் தங்கள் இளவரசி செலுத்தும் தனி மரியாதை அதுவென்றே மக்கள் நினைத்தனர். குணவர்மனும் அப்படித்தான் நினைத்தான். அதன் விளைவாக இளையபல்லவனைக் கைலாகு கொடுத்து அரண்மனைக்குள் அழைத்துச் சென்றான்.

அந்த முறை இளையபல்லவன் கடாரத்தில் தங்கியது ஒரே நாள்தான். சில நாட்களாவது தங்கிப்போகவேண்டு மென்று வற்புறுத்திய குணவர்மனுக்கும் காஞ்சனாதேவிக்கும் அவன் சிறிதும் இடம் கொடுக்கவில்லை. தான் அங்கு தங்குவதால் கடாரத்துக்குள்ள ஆபத்தை விளக்கினான். "குணவர்மரே! உங்களை ஒரு கடற்கொள்ளைக்காரன் விடுவிப்பது தவறாகாது. அவனுக்கு நீங்கள் நன்றி காட்டுவதும் தவறாகாது. ஆனால் கொள்ளைப் படையை இங்கு தங்க விடுவது ஜெயவர்மன் இதன்மீது படையெடுக்கக் காரணம் கொடுக்கும். கொள்ளைப் படையை அழிக்க சாம்ராஜ் யாதிபதி முற்பட்டால் அது நியாயமென மற்ற நாடுகளால் கருதப்படும். ஆகவே சொல்கிறேன் குணவர்மரே! இங்கு வரும் சமயம் எனக்குத் தெரியும்" என்று கூறினான் இளைய பல்லவன்.

"சமயம் எப்பொழுது வரும்?" என்று துக்கம் தொண்டையை அடைக்க வினவினாள் காஞ்சனாதேவி.

"நான் இந்தக் கடல் நாடுகளில் காலை ஊன்றியதும் வருவேன்" என்றான் இளையபல்லவன்.

அப்படிச் சொல்லிச் சென்றவன் அன்று முதல் மெள்ள மெள்ள மலாக்கா ஜலசந்தி என்று தற்காலத்தில் அழைக்கப் படும் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யக் கடற்பகுதி நாடுகளில் பல இடங்களில் தனது கால்களை ஊன்றினான். அப்படி ஊன்றி முடித்து இனி ஸ்ரீவிஜயத்தை எதிர்க்கலாம் என்று உறுதி கொண்டு கனவு கண்டு வந்தவன், கடாரத்தின் சூழ்நிலையில்

பெரும் வித்தியாசமிருப்பதைத் தனது தாரைகள் ஊதப்பட்ட உடனேயே புரிந்துகொண்டான். கடல்புறாவின் தளத்தில் நின்ற வண்ணமே நாற்புறமும் நோக்கிய இளையபல்லவன், துறைமுகத்தில் ஐந்தாறு பெரும் போர்க்கலங்கள் நிற்பதையும், அவற்றில் சோழர் கொடிகள் பறப்பதையும் கண்டான். கடாரத்தின் கடற்கரையிலும் சோழ நாட்டு வீரர்கள் காவல் புரிவதையும் கண்டான். சோழ நாட்டிலிருந்து யாரோ ஒரு பெரும் கடற்படைத்தலைவர் வந்திருக்க வேண்டுமென்பது அவனுக்குப் புரிந்ததென்றாலும் அத்தனை கெடுபிடிக்கும் காவலுக்கும் காரணமென்ன என்பது மட்டும் புரியவில்லை. யார் வந்திருந்தாலும் தான் சோழ நாட்டுக் கடலாதிக்கத் துக்குப் புரிந்திருக்கும் சேவைக்குத் தனக்குப் பாராட்டுதல் கிடைக்குமே தவிர, வேறு எந்தவித இடையூறும் கிடைக்கக் காரணமில்லை என்ற நினைப்பில் அவன் மாற்றுடை அணியப் புறப்பட்டதுமே அவன் அறைக்குள் வந்த கண்டியத் தேவன் சோழர் கொடியுடன் ஒரு படகு கரையிலிருந்து கடல் புறாவை நோக்கி வருகிறதென்று அறிவித்தான். "சரி யாரா யிருந்தாலும் இங்கு அழைத்துவா!" என உத்தரவிட்ட இளைய பல்லவன் தன்னை நன்றாக அலங்கரித்துக் கொள்வதில் முனைந்தான். சோழநாட்டிலிருந்து வந்துள்ள கடற்படைத் தலைவர், யாராயிருந்தாலும் அவர் அந்தஸ்து தனது அந்தஸ்தை மீறியதல்ல என்பதை உணர்ந்து விலையுயர்ந்த ஆடைகளையும் ஆபரணங்களையும் அணிந்தான் இளையபல்லவன். ஆங்காங்கு பெரும் சரிகைப் பட்டையுள்ள அங்கியையும் அரபு நாட்டுச் சராயையும் அணிந்துகொண்டு ஒரு காதில் பச்சைக்கல் தொங்கிய பெரும் வளைந்த குண்டலத்தையும், மார்பில் அந்தப் பழைய நெருப்புத்துண்ட சிவப்புக்கல் ஆரத்தையும் அணிந்தான். கச்சையில் நவரத்ன சகிதமான குறுவாளைச் செருகிக்கொண்டு, கச்சையில் விலை மதிக்க முடியாத கற்களிழைத்த பிடியை உடைய நீண்ட வாளொன்றையும் அணிந்து நெற்றியில் திலகம் தீட்டிப் புறப்படத் தயாரானான். அவன் அலங்காரம் முடிவதற்கும்

கண்டியத்தேவன் படகில் வந்தவனை அழைத்து வருவதற்கும் நேரம் சரியாயிருந்தது.

வந்தவனை ஏறெடுத்து நோக்கினான் இளையபல்லவன். வந்தவன் நெற்றியில் அவன் சோழ நாட்டவன் என்பது எழுதி ஒட்டி இருந்தது. அந்த முகத்தில் சோழநாட்டு விஷமம் துளிர் விட்டுக் கொண்டிருந்தது. அவன் வணக்கத்திலும் சற்று ஏளனம் தொனித்ததாகப் பட்டது படைத்தலைவனுக்கு. அதைக் கண்டதால் உள்ளூரக் கோபப்படாமல் தமிழ னொருவனைக் கண்டுவிட்டோம் என்ற உவகையால், "யார் நீ? என்ன செய்தி?" என்று அதிகாரத்துடன் வினவிய படைத் தலைவன் குரலில் அதட்டலுடன் மகிழ்ச்சியும் தெரிந்தது.

சோழ நாட்டான் அதைக் கவனித்திருக்க வேண்டும். அவன் பதில் அதைத் தெரியப்படுத்தியது. "நீங்கள் என்னைக் கண்டு மகிழ்வதற்கு நியாயமிருக்கிறது. தமிழன் தமிழனைக் கண்டு மகிழ்வதில் அர்த்தமுண்டு. ஆனால் நான் கொண்டுவரும் செய்தி மகிழ்ச்சியை அளிக்க வல்லதல்ல" என்றான் சோழ நாட்டவன்.

"செய்தியைச் சொல்" என்றான் படைத்தலைவன் வியப்பு விரவிய குரலில்.

"உங்களைக் கையுடன் அழைத்து வர உத்தரவு" என்றான் அந்த வீரன்.

"எனக்கு உத்தரவா! யார் அந்த உத்தரவை இட்டது?" என்று வினவினான் இளையபல்லவன் வியப்புடன் ஆச்சரியம் கலக்க.

"எங்கள் தலைவர்."

"யாரவர்?"

"சொர்ணபூமிக் கடல் பிராந்தியங்களுக்குச் சோழ மன்னரால் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டவர்."

"அவர் பெயர்?"

"சொல்ல உத்தரவில்லை?"

"நான் வர மறுத்தால்?"

"உங்களைப் பலவந்தமாக அழைத்து வரும்படி உத்தரவு."

இதைக்கேட்ட இளையபல்லவன் பெரிதாக நகைத்தான். "உங்கள் தலைவருக்குச் சித்தப் பிரமையா?" என்றும் வினவினான்.

"நேரில் சந்திக்கும்போது நீங்களே புரிந்து கொள்வீர்கள்" என்றான் சோழ நாட்டான் விஷமத்துடன்.

"என்ன புரிந்து கொள்வேன்?"

"சித்தப் பிரமை யாருக்கேற்பட்டாலும் அவருக்கு ஏற்படா தென்பதை."

"என்னைச் சிறை செய்ய முடியுமென்று நினைப்பதே சித்தப்பிரமையைக் குறிக்கவில்லையா?"

"இல்லை."

"ஏன்?"

பதிலுக்கு வந்த வீரன் தனது கச்சையிலிருந்து ஒரு மோதிரத்தை எடுத்து இளையபல்லவன் முன்பு நீட்டி, "இதற்கு நீங்கள் பணிவீர்களென்று திட்டமாகச் சொன்னார் தலைவர்" என்றான்.

இளையபல்லவன் அந்த மோதிரத்தைக் கண்டதும் பிரமித்துப் போனான் சில விநாடிகள். பிறகு தலையை அதை நோக்கி நன்றாகத் தாழ்த்தினான். மோதிரத்தைக் கையில் வாங்கிக் கண்களிலும் ஒற்றிக் கொண்டான். வீரராஜேந்திர சோழ தேவரின் முத்திரை மோதிரம் அது. தமிழன் எந்த இடத்திலிருந்தாலும் அதற்குத் தலைவணங்கக் கடமைப் பட்டவனென்பதை உணர்ந்த இளையபல்லவன் சிறிதும் ஆலசியம் செய்யாமல் சோழ நாட்டானுடன் புறப்பட்டான். உடன் வருவதாகச் சொன்ன கண்டியத்தேவனையும் அமீரையும்கூட வேண்டாமென்று தடுத்துவிட்டுத் தான் மட்டும் படகில் இறங்கி, சோழ நாட்டானுடன் கரை சேர்ந்தான். கரையிலிறங்கியதும் வெகு வேகமாகக் கடார

நகரத்துக்குள் நுழைந்த இளையபல்லவன் முந்திய முறை போல் அந்த நகரத்தின் சிறப்புக்கள் மீது கண்களை ஓட்டவே யில்லை. அதன் மாளிகைகளின் பொன் மகுடங்களைக் கூட அவன் கண்கள் நாடவில்லை. வலைஞர் வீதி, வணிகர் வீதிகளின் சிறப்பு அபாரம்தான். ஆனால், கண் இருப்பவன் தானே அவற்றைப் பார்க்க முடியும்?

அன்று, இளையபல்லவன் புத்தியில் பல எண்ணங்கள் தாண்டவமாடியதால் கண்கள் பார்வையிழந்து கிடந்தன. அந்த இரண்டு வீதிகளைத் தாண்டியதைக்கூட அறியாமல் இராசவீதி புகுந்த இளையபல்லவன் அரண்மனைக்கு வந்த பின்பே சுயஉணர்வு பெற்றான். அதன் படிகளை அடைந்ததும் சட்டென்று ஒரு விநாடி நின்றான். இந்த இடத்தில்தான் பல மாதங்களுக்கு முன்பு காஞ்சனாதேவி அவனை வரவேற்க மாலையும் கையுமாக நின்றாள். இன்று அந்தப் படியை நோக்கினான். அது வெறிச்சென்றிருந்தது அவன் கண்களுக்கு. அதனால் சில விநாடிகள் நின்று பெருமூச்செறிந்த இளையபல்லவன், படிகளில் ஏறி மாளிகைக்குள் நுழைந்தான். பல கட்டுக்காவல்களைத் தாண்டி இளையபல்லவனை அழைத்துச் சென்ற அந்தச் சோழநாட்டு வீரன், குணவர்மன் அறைக்கு வந்ததும் வெளியே நிற்கும்படி இளையபல்லவனிடம் கூறிவிட்டு உள்ளே சென்றான்.

சோழ நாட்டு வீரன் அந்த அரண்மனைக்குத் தன்னை அழைத்து வந்ததே பெரும் வியப்பாயிருந்தது இளைய பல்லவனுக்கு. அயல்நாட்டுத் தூதுவர்கள் தங்கும் விடுதி அந்த அரண்மனையிலிருந்து நாலைந்து மாளிகைகள் தள்ளி இருந்தது. 'அங்கே அழைத்துப் போகாமல் இங்கழைத்து வந்ததன்றிக் குணவர்மன் ஆஸ்தான அறை வாயிலில் நிற்க வைத்துவிட்டானே இவன்? ஒருவேளை குணவர்மனே எனக்கு உத்தரவு போடப் போகிறானா? சோழ நாட்டுத் தூரக்கிழக்கு அதிபர் என்னை நேரில் பார்க்க விரும்ப வில்லையா?' என்று தன்னைத்தானே பலமுறை கேட்டுக்

கொண்ட இளையபல்லவன் உள்ளே சென்றவன் வரட்டும் எனக் காத்திருந்தான்.

சில விநாடிகள் கழித்து வெளியே வந்த சோழ நாட்டு வீரன் உள்ளே செல்லும்படி சைகை செய்தான் இளைய பல்லவனை நோக்கி. இளையபல்லவன் தன் ஆடைகளைச் சரிப்படுத்திக்கொண்டு உள்ளே சென்றான். விசாலமான அந்த அறையின் ஒரு மூலையில் சோழநாட்டுத் தூதர் தலைகுனிந்து ஓலையில் ஏதோ எழுதிக்கொண்டிருந்தார். நீண்ட நேரம் அவர் தலை நிமிரவேயில்லை. பிறகு தலைநிமிர்ந்து அவனை நோக்கியதும் இளையபல்லவன் தலை சுழலும் நிலைக்கு வந்தது. தான் காண்பது கனவா என்று பிரமித்து அப்படியே கல்லாய் சமைந்துவிட்டான் சோழர் படைத்தலைவன். தான் அடியோடு சொப்பனத்திலும் நினைக்காதவர் அங்கு எப்படி வந்தார், ஏன் வந்தார் என்பதை நினைத்துப் பேராச்சரியமும் பிரமிப்பும் அடைந்த அவன் மனம் ஸ்தம்பித்துக் கிடந்தது. தலையைத் தூக்கி அவனை மிகுந்த கம்பீரத்துடன் நோக்கியவர் வேறு யாருமல்ல. அவன் அந்தரங்கத் தோழரும் சோழ நாட்டு இளவரசனுமான அநபாயன்தான்.

பாலூர்ப் பெருந்துறையில் விபரீத நிலைமையில் பிரிந்த அநபாயர் ஒன்றே முக்கால் ஆண்டுகளுக்குப் பிறகு தன்னைக் கடாரத்தில் சந்திப்பார் என்பதை இளையபல்லவன் எப்படி எதிர்பார்க்க முடியும்? எதிர்பார்க்காத சந்திப்பு அவன் உணர்ச்சிகளைப் புரட்டி இழுத்தது. நட்பு உள்ளத்தே குமுறி எழுந்தது. "அநபாயரே! இளவரசே!" என்று கூவிக்கொண்டு அவரை நோக்கி விரைந்தான் இளையபல்லவன்.

அவன் நாலடி எடுத்து வைத்ததும், "நில் அப்படியே கருணாகரா!" என்ற அநபாயனின் உக்கிரக் குரல் இளைய பல்லவன் காலுக்குச் சட்டென்று தடை போட்டது.

"என்ன இது! என்ன இளவரசே! நான் உங்கள் நண்பனல்லவா?" என்று குமுறினான் இளையபல்லவன்.

"நண்பன்தான் கருணாகரா! ஆனால் நான் இங்கு நட்புரிமை பாராட்ட வரவில்லை. வீரராஜேந்திர

தேவர் பணியை நிறைவேற்ற வந்திருக்கிறேன்" என்றான் அநபாயன்.

"என்ன பணி அது?" சற்றுக் கடுமைப்பட்டது இளைய பல்லவன் குரல்.

"சொர்ணபூமியில் நீதியை நிலைநிறுத்துவது" என்றான் இளவரசன்.

"அதற்காக?"

"உன்னைச் சிறை செய்ய வேண்டியிருக்கிறது?"

"ஏன்?" இந்தக் கேள்வியை மிகுந்த கோபத்துடன் கேட்டான் இளையபல்லவன்.

"நீ நீதிக்குப் புறம்பானவன், கொள்ளைக்காரன்" என்ற சொற்களைப் பெரும் உறுதியுடன் உதிர்த்தான் வீர ராஜேந்திரரின் பிரதிநிதியான அநபாயன்.

அத்தியாயம் 36

# ஏடும் பொருளும்

கடாரத்தின் எழில்மிகு அரண்மனையில் அநபாயனான குலோத்துங்க தேவன் சோழ சாம்ராஜ்யப் பிரதிநிதியாக வந்து உட்கார்ந்திருந்ததே இளையபல்லவனுக்குப் பெரும் பிரமிப்பா யிருந்ததென்றால், அதைவிடப் பிரமிப்பை அளித்தன அநபாயனின் சுடுசொற்கள். வீரராஜேந்திர சோழ சாம்ராஜ்ய பீடத்தில் அமர வேண்டிய இளவரசனான அநபாயனை, சதா போரும் கொள்ளையும் நிகழும் அபாயமான சொர்ணத் தீவின் கடல் பிராந்தியத்திற்குச் சோழ மன்னன் அனுப்புவார் என்பதைக் கனவில்கூட கருணாகர பல்லவன் கருதவில்லை. அந்தச் சந்தேகம் கருணாகர பல்லவனுக்கு மட்டுமல்ல, தற்கால சரித்திர ஆசிரியர்கள் பலருக்கும் உண்டு.

பேராசிரியர் ஆர்.ஸி. மஜூம்தார் 'ஸ்வர்ணத் தீபம்' என்ற நூலின் முதல் பாகத்தில் கி.பி. 1062-வது வருஷத்திற்குப் பிறகு குலோத்துங்க தேவன் கடாரத்தில் வீரராஜேந்திரன் பிரதிநிதி யாகப் பணியாற்றியதாகவும், சோழநாட்டுத் தூதனாக கி.பி. 1067-ல் சீனத்துக்கும் சோழத் தூதராகச் சென்றதாகவும் கூறுகிறார். பேராசிரியர் பி.டி. ஸ்ரீநிவாசய்யங்கார் அவர்களும் டாக்டர் எஸ். கிருஷ்ணசாமி ஐயங்கார் அவர்களும், அவ்விதமே அபிப்பிராயப்படுகிறார்கள். இதைப் பற்றிச் சீன நாட்டில் ஸாங் வம்ச சரித்திர ஏடுகளிலும் குறிப்புகள் காணப் படுகின்றன. "1067-ல் சூளியனிடமிருந்து (சோழனிடமிருந்து) ஒரு தூதன் சீன ராஜசபைக்கு வந்தான். அவன் பெயர் தி-ஹூவா-கியா-லோ" என்ற குறிப்பு அந்த ஏடுகளில் இருக்கிறது. தி-ஹூவா-கியா-லோ என்ற சொற்கள் தேவ-குலோ என்ற சொற்களின் விகாரமாயிருக்க வேண்டும் என்றும், ஆகவே குலோத்துங்க தேவன் 1067-ல் சீனாவிலும் அதற்கு முன்பு

கடாரத்திலும் இருந்திருக்க வேண்டுமென்றும் மேற்சொன்ன பேராசிரியர்கள் கருதுகிறார்கள். அது தவறு, குலோத்துங்கன் தூரக்கிழக்கு செல்லப் பிரமேயமேயில்லை என்று கூறுவோரும் உண்டு.

ஆனால் பெருவாரியான ஆசிரியர்கள் குலோத்துங்கன் வீரராஜேந்திரன் பிரதிநிதியாகச் சென்று ஸ்ரீவிஜயத்தின் அரியணைப் போட்டிச் சச்சரவைத் தீர்த்து வைத்தானென்று நம்புவதாலும், அதற்குச் சீன சரித்திர ஏடுகளையே அத்தாட்சி காட்டுவதாலும், சோழ சாம்ராஜ்ய செல்வாக்கு கடல் கடந்து ஜொலித்தது உண்மையாகையாலும், குலோத்துங்கன் ஸ்ரீவிஜயத்திலும் சீனத்திலும் பணியாற்றினான் என்றே இக்கதை சம்பந்தப்பட்டவரை கொள்வோம். அத்தகைய சோழ சாம்ராஜ்ய விஸ்தரிப்பை நினைக்க நமக்குப் பெருமை யும் பிரமிப்பும் ஏற்படுகிறது. நமது நாட்டு இளவலொருவன் தற்கால வசதிகளில்லாத அக்காலத்தில் கடாரத்தில், அங்குள்ள மன்னர்களுக்கும் உத்தரவிடும் நிலையில் அமர்ந் திருந்தான் என்பதை நினைக்க நமக்குப் பெரும் பிரமை ஏற்படுவதில் என்ன வியப்பிருக்கிறது? ஆகவே அன்று இளைய பல்லவன் குலோத்துங்கனைக் குணவர்மன் அரண்மனையில் கண்டதும் அவனுக்கு ஏற்பட்ட பிரமிப்பு எத்தன்மையதா யிருக்கும்?

அளவிட முடியாத பிரமிப்பையே அடைந்தான் இளைய பல்லவன் அநபாயனைக் கண்டதுமே. அநபாயனின் துணிவைப் பற்றி இளையபல்லவனுக்கு என்றும் எந்தவித சந்தேகமும் இருந்ததில்லை. ஆனால் இன்னும் கலிங்கத்துக் கப்பல்களின் தொந்தரவு கடல்களில் இருந்துகொண்டிருக்கக் கேவலம் ஐந்தாறு போர்க்கலங்களுடன் குலோத்துங்கன் கடாரத்துக்கு வந்து சேருவானென்றோ, அவற்றைக் கொண்டு அந்தப் பிராந்தியத்தில் அமைதியை நிலைநிறுத்த எண்ண மிடுவானென்றோ அவன் கனவிலும் நினைக்கவில்லை. அப்படி வந்தவன் தன் ஆருயிர்த் தோழனாதலால் அவன் தன் சந்திப்பைப் பெரிதும் விரும்புவானென்றே நினைத்திருந்த

இளையபல்லவன் அவன் தன்மீது சீறுவானென்று எண்ணாத தால், "நீ நீதிக்குப் புறம்பானவன், கொள்ளைக்காரன்" என்று உக்கிரத்துடன் அவன் கூறியதும் அதிர்ச்சியுற்று நின்ற இடத்திலேயே நின்றுவிட்டான்.

ஆனால் அந்த அதிர்ச்சி அதிக நேரம் நிலைக்கவில்லை. பாலூர்ப் பெருந்துறையிலிருந்து தப்பிய பிறகு அபாயத்துடன் சதா தோழமை கொண்ட கருணாகர பல்லவன் சில விநாடி களுக்குள் அந்த அதிர்ச்சியை உதறிவிட்டு மெல்ல நகைக்கவும் செய்தான். அந்த நகைப்பொலி குணவர்மன் அரண்மனை யின் அந்த அறைச் சுவர்களில் மோதி எதிரொலி செய்யவே தன் கூரிய விழிகளால் இளையபல்லவனை நோக்கிய அநபாயன், "நகைக்கும் கட்டமா இது கருணாகரா?" என்று வினவினான் அதிகாரம் பூரணமாகத் தொனித்த குரலில்.

இளையபல்லவன் விழிகள் நிர்ப்பயமாக குலோத்துங்கள் விழிகளுடன் கலந்தன. "அநபாயரே! சென்ற முக்கால் ஆண்டு களாக எனக்கு இத்தகைய கட்டங்களே கிடைத்திருக்கின்றன, நகைப்பதற்கு" என்றும் கூறி மெள்ளப் புன்முறுவலும் செய்தான்.

அநபாயன் விழிகளில் எந்தவித மாறுதலும் இல்லை. முகத்தில்கூட லவலேசமும் எந்தவித உணர்ச்சியையும் காட்ட வில்லை அவன். சொற்களிலும் உணர்ச்சியேதும் துளிர் விடாமலே கேட்டான், "அப்படியா!" என்று.

"ஆம்!" கருணாகரன் பதிலில் அலட்சியம் இருந்தது.

அந்த அலட்சியத்தைக் கவனிக்கத் தவறாத குலோத்துங்கன், "கொள்ளைக்காரனுக்கு இருக்க வேண்டிய நெஞ்சுறுதி இருக்கிறது" என்றான்.

"நெஞ்சுறுதி இல்லாமல் கொள்ளைக்காரனாக முடியாது" என்று சுட்டிக் காட்டிய இளையபல்லவன் குரலில் விஷமம் இருந்தது.

அந்த விஷம ஒலியையும் கவனித்த அநபாயன், "அந்த நெஞ்சுறுதியைச் சட்டத்தை ஒட்டி நீ உபயோகித்திருந்தால்

சோழ நாட்டுக்கும் பெரும் லாபம் ஏற்பட்டிருக்குமே கருணாகரா?" என்றான்.

"அப்படியா!" இளையபல்லவன் குரலில் சந்தேகம் ஒலித்தது.

"ஏன்? சந்தேகமாயிருக்கிறதா உனக்கு?"

"இல்லை, இல்லை. சந்தேகமில்லை."

"எதில் சந்தேகமில்லை?"

"சட்டப்படி நடந்திருந்தால் என்ன ஏற்பட்டிருக்கு மென்பதில் சந்தேகமில்லை."

"என்ன ஏற்பட்டிருக்கும்?"

"முதலில் நீங்கள் பாலூரைவிட்டுத் தப்பி இருக்க மாட்டீர்கள். அப்படித் தப்பியிருந்தாலும் கடாரத்துக்கு வந்திருக்க மாட்டீர்கள். அப்படியே வந்தாலும் இந்த அரண்மனையில் இத்தனை சௌக்கியமாக அமர்ந்து கொண்டு பேசியிருக்க மாட்டீர்கள்" என்று இளையபல்லவன் சொன்னான் குரலில் வெறுப்புத் துலங்க.

அந்த வெறுப்புக்குப் பின்பும் அநபாயன் மசியவில்லை. "நீ சொல்வது எனக்கு விளங்கவில்லை" என்றான் சர்வ சாதாரணமாக.

இளையபல்லவன் இரண்டடியில் அநபாயனுக்கெதிரில் அருகில் வந்து நின்றுகொண்டான். பிறகு வெறுப்பும் கசப்பும் விஷமமும் கலந்த குரலில் சொன்னான்: "விளங்கச் சொல் கிறேன், கேளுங்கள் அநபாயரே! பாலூர்ப் பெருந்துறையில் கலிங்கத்துப் பீமன் உங்களைச் சிறையிட்டான். தமிழர்களைச் சித்திரவதை செய்தான். அங்கு நீங்களும் நானும் சட்டப்படி நடக்கவில்லை. கலிங்கத்தின் சட்டப்படி காரியம் நடந் திருந்தால் நம்மிருவர் தலையும் வெட்டுப் பாறையில் உருண்டிருக்கும். சட்டத்தை மீறினோம், திருட்டுத்தனமாகத் தப்பினோம். அங்கும் தப்ப கொள்ளைக்காரன் உதவி தேவையாயிருந்தது உங்களுக்கு. தப்பிப் புகார் சென்றீர்கள், வீரராஜேந்திர சோழ தேவரைச் சந்தித்தீர்கள். குணவர்மருக்கு

உதவியளிப்பதாக உறுதி கூறியும் அனுப்பினீர்கள். ஆனால் அந்தக் குணவர்மர் கலிங்கத்தின் போர்க்கப்பல் ஒன்றில் சிறைப்பட்டுக் கிடந்தார் தனது மகளுடன். அவர்களைச் சட்டம் காப்பாற்றவில்லை. நீதிக்குப் புறம்பில்லாத சோழ நாட்டுக் கடற்படைத் தலைவர்கள் காப்பாற்றவில்லை. ஒரு கொள்ளைக்காரன் காப்பாற்றினான். அவன் யார் தெரியுமா? இவன்."

இதைச் சொன்ன இளையபல்லவன் தனது மார்பை முஷ்டியால் குத்திக் காட்டினான். குத்திக் காட்டி மேலும் சொன்னான்: "அநபாயரே! இன்னும் கேளுங்கள்! இராஜேந்திர சோழ தேவர் காலத்தில் வாணிபம் செய்ய இந்தத் தீவுக்குக் குடியேறிய தமிழர்கள் ஸ்ரீவிஜயத்தின் அதிகாரிகளால் அடைந்துள்ள துன்பத்துக்கு அளவில்லை. கலிங்கம் ஸ்ரீவிஜயத்திடம், அதாவது ஸ்ரீவிஜயத்தின் அதிபதி ஜெயவர்மனிடம் நட்புக் கொண்டிருக்கிறது. சோழ நாட்டையும் தமிழர்களையும் விரோதிகளாகப் பாவிக்கிறது. ஆகவே தமிழர்கள் அடைந்துள்ள துன்பத்துக்கு அளவில்லை. அதைத் துடைக்கத் தீர்மானித்தவனும் ஒரு கொள்ளைக்காரன். அதற்காகத் தளம் தேடினான். அக்ஷயமுனையில் அதை அமைக்க முயன்றான். முடியவில்லை. பிறகு மாநக்காவரத்தில் அமைத்தான். அந்தத் தளத்தை நோக்கிச் சென்றபோதிருந்த நிலை உங்களுக்குத் தெரியாது அநபாயரே! அங்கிருந்த தமிழர்கள் சிலர் கொல்லப்பட்டார்கள். சிலர் காட்டுக்குள் ஓடிவிட்டார்கள். அது கலிங்கத்தின் கடற்படைத் தலைவன் ஒருவன் கையிலிருந்தது. அதை இவனிடமிருந்து மீட்கவும், அவன் கையிலிருந்து நீங்கள் அபயம் கொடுத்து அனுப்பிக் குணவர்மரைக் காக்கவும் ஒரு கொள்ளைக்காரனே தேவையா யிருந்தது. அது மட்டுமல்ல. நீங்கள் இங்கு ஐந்தாறு மரக் கலங்களுடன் தங்கு தடையின்றிக் கடலில் ராஜபவனி வந்திருக்கிறீர்களே, அது எப்படி?"

இந்தக் கேள்வியை மிகப் பலமாக வீசினான் இளைய பல்லவன். அநபாயன் மிக நிதானமாகவே கேட்டான்,

"அதுவும் கொள்ளைக்காரன் தயவினால்தான் போலிருக்கிறது" என்று.

"சந்தேகம் வேண்டாம் அநபாயரே! அந்தக் கொள்ளைக் காரன் சென்ற ஆறு மாதங்களில் திரும்பத் திரும்ப இந்தக் கடல் பகுதிகளில் உலாவி, கலிங்கத்தின் பெரும் மரக்கலங்கள் பலவற்றைக் கைப்பற்றியிராவிட்டால் உங்கள் ஐந்நூறு மரக் கலங்களும் இங்கு வந்திருக்க முடியாது. இப்பொழுது இந்தக் கடல் பிராந்தியத்தில் உலாவக் கலிங்கத்தின் போர்க்கலங்கள் நடுங்குகின்றன. காரணம் நீதிக்குப் புறம்பில்லாத நீங்களல்ல. சோழ மன்னரின் நீதிக் கப்பல்களுமல்ல, நீதிக்குப் புறம்பான நான், எனது கடல்புறா, எனது காஞ்சனை, எனது மஞ்சளழகி...!" என்று சொல்லிக்கொண்டே போன இளைய பல்லவனை இடைமறித்த அநபாயன், "இரு இரு! ஏதோ பெண்களின் பெயர்களைச் சொல்கிறாயே?" என்று வினவினான்.

"என் மரக்கலங்கள் இரண்டின் பெயர்கள்."

"பெண்களின் பெயர்களை ஏன் சூட்ட வேண்டும் அவற்றுக்கு?"

"கொள்ளைக்காரனால் காக்கப்பட்ட இரு பெண்கள் அவர்கள்."

அநபாயன் முகத்தில் சிந்தனைக்குறி லேசாகப் படர்ந்தது. "கொள்ளைக்காரன் பல நல்ல காரியங்களைப் புரிந்திருக் கிறதாகத் தெரிகிறது" என்றும் கூறி மெள்ளப் புன்முறுவல் செய்தான் அநபாயன்.

இளையபல்லவன் உள்ளம் குமுறிக் கொண்டிருந்ததால் அவன் குலோத்துங்கனின் குறுநகையைக் கவனிக்கவில்லை. தன்னை இரு கைகளால் தழுவவேண்டிய உயிர்த் தோழன், தான் சோழநாட்டுக்கும் தமிழ் மக்களுக்கும் செய்த சேவைக்கு நன்றி தெரிவிக்க வேண்டிய ராஜப்பிரதிநிதி தன்னை நிற்க வைத்துப் பேசியதாலும் தன்னைக் கொள்ளைக்காரனாகக் கருதி இழிவாக உரையாடியதாலும் கோபத்தின் வசப்

பட்டிருந்த இளையபல்லவன், அநபாயனின் முகமாறுதலைக் கவனியாமல் அந்த அறைக் கூரையை நோக்கியவண்ணம், "கொள்ளைக்காரனால்தான் இங்கு நல்ல காரியங்களைச் செய்யமுடியும்?" என்றான்.

"ஏனப்படி?"

"இங்கு சட்டத்தின் பொருளும் நீதியின் பொருளும் தடம் மாறிக் கிடக்கின்றன. ஸ்ரீவிஜய சாம்ராஜ்ய சட்டத்தின் கீழ் அக்ஷயமுனை ஆளப்பட்டதைக் கண்டேன். இலங்காசோகம், இலாமுரிதேசம், மாபப்பாளம், மலையூர் இந்த இடங்களில் ஸ்ரீவிஜய சட்டத்தின் கீழ் தமிழர் நிலையைக் கண்டேன். சட்டத்துக்கு இங்கு பொருள் வேறு என்பதைப் புரிந்து கொண்டேன். ஆகவே அதற்கு மாறுபட்டேன். கொள்ளைக் காரனானேன், அதில் பெருமையடைகிறேன்."

மிகத் திட்டவட்டமான குரலில் பேசினான் இளைய பல்லவன். அநபாயன் முதன் முதலாக வாய்விட்டு நகைத்தான். பிறகு, "கொள்ளைக்காரா! அறைக்கதவைச் சாத்திவிட்டு வா" என்றும் உத்தரவிட்டான் நகைப்பின் ஊடே. அந்த நகைப்பையும் அந்த நகைப்பினூடே ஒலித்த அன்பையும் கவனித்த இளையபல்லவன் சற்று வியப்புடன் சரேலென்று குலோத்துங்கன்மீது தனது கண்களை நாட்டினான். குலோத்துங்கன் முகத்தில் தவழ்ந்திருந்த குறுநகை முகம் பூராவும் விரிந்தது. "சொன்னபடி செய் கருணாகரா?" என்ற சொற்களில் நட்புத் தொனித்தது.

ஏதும் புரியாமல் குலோத்துங்கன் சொன்னபடி அறைக் கதவைச் சாத்திவிட்டுத் திரும்பிய இளையபல்லவனை அநபாயன் தனக்கெதிரே இருந்த ஆசனத்தில் அமரச் சொல்லி அவன் இரு கைகளையும் இறுக்கிப் பிடித்துக் கொண்டு அவன் முகத்தை உற்று நோக்கினான் பல விநாடிகள். பிறகு மெள்ளப் புன்முறுவல் கொண்டு, "கருணாகரா! சோழ நாட்டில் சொல்வது சரியாகத்தானிருக்கிறது. ஒற்றைக் காதில் அந்தக் குண்டலம், முகத்தில் தொங்கும் அந்தப் பயங்கர முடி, மார்பில் ஊசலாடும் அந்தச் சிவப்புக் கல் ஆரம்,

சாட்சாத் கொள்ளைக்காரன் போலவே காட்சியளிக்கிறாய்" என்றான் அநபாயன்.

நண்பனின் கைகளுக்குள் பிணைந்து கிடந்த தன் கைகளை எடுக்காமலே, "என்னைப் பற்றிச் சோழ நாட்டில் அத்தனை கேவலமாகவா பேசுகிறார்கள்?" என்று வினவினான் இளையபல்லவன் துயரத்துடன்.

"மக்கள் உன்னைப் பற்றிப் பெருமையுடன் பேசுகிறார்கள். மன்னர் மட்டும்..." என்று சொற்களைப் பூர்த்தி செய்யாமல் விட்டான் அநபாயன்.

"மன்னர் மட்டும்!"

"உன்னை வெறுக்கிறார் பலர் முன்னிலையில்."

"அப்படியா!"

"ஆம். தனிமையில் அவரும் மக்களுடன் சேர்ந்து கொள்கிறார்."

"அதாவது..."

"உன்னை மன்னர் புகழ்வதற்கு அளவே இல்லை."

"அதனால்தான் என்னைச் சிறை செய்ய உங்களை அனுப்பி இருக்கிறாரா?" இளையபல்லவனுடைய இந்தக் கேள்வியில் வெறுப்பே கலந்து கிடந்தது.

அதைக் கவனித்த குலோத்துங்கன், "கருணாகரா! மன்னர் நிலைமை மிகவும் சங்கடமானது. கலிங்கத்துக்கும் நமக்கும் இன்னும் போரில்லை. ஸ்ரீவிஜயத்துக்கும் நமக்கும்கூடப் போரில்லை. இரண்டு நாடுகளும் உன்னைப் பற்றி எதிர்த்து வீரராஜேந்திரரிடம் தூதுவர்களை அனுப்பியிருக்கின்றன. அரசுகளின் வேண்டுகோளை மன்னர் புறக்கணிக்க முடியாது. ஆகையால்தான் உன்னைச் சிறை செய்ய என்னை அனுப்பி யிருக்கிறார். உன்னைச் சிறை செய்ய அவர் மறுத்தால் கலிங்கத்திலுள்ள தமிழர்களைக் கொன்று விடுவதாக அனந்த வர்மனும், பீமனும் பயமுறுத்தியும் இருக்கிறார்கள். ஆகையால் தான் மன்னர் என்னை அனுப்பியிருக்கிறார். இரு அவர் பத்திரத்தைக் காட்டுகிறேன்" என்று கூறிவிட்டு அந்த அறைக்

கோடிக்குச் சென்று தனது பேழை ஒன்றிலிருந்து பெரும் செப்பேடு ஒன்றை எடுத்து வந்து நீட்டினான் இளைய பல்லவனிடம்.

அந்தச் செப்பேட்டை வாங்கிப் படித்தான் இளைய பல்லவன். அதன் வாசகம் சிறியதாகத்தானிருந்தது. ஆனால் பலவித வியாக்கியானங்களுக்கு இடங் கொடுத்தது. "ஸ்வஸ்திஸ்ரீ திருவளர திரள்புயத்திரு நிலவலையந்தன் மணிப் பூணென" என்ற பிரசஸ்தியுடன் துவங்கிய அந்தச் செப்புப் பட்டயம், "கடாரத்தின் அரியணைப் போட்டியை விசாரித்துத் தக்கவரை அரசபீடத்தில் அமர்த்தவும், கடற் கொள்ளைக் காரனான கருணாகரனைச் சமயம் பார்த்துச் சிறைபிடித்துச் சோழ நாட்டுக்குக் காவலுடன் அனுப்பவும் சோழர் பிரதிநிதி இளவல் அநபாயனுக்கு அளிக்கும் கட்டளை. எழுதினன் ஊர்க்கரணத்தான் வடுகன் பாக்கர நென். இவை என் எழுத்து" என்ற வரிகளைத் தாங்கி நின்றது. அதன் அடியில் அரச முத்திரை இருந்தது.

பட்டயத்தைப் பலமுறை படித்த இளையபல்லவன் அதை மீண்டும் அநபாயனிடம் கொடுத்தான். அநபாயன் கேட்டான், "பட்டயத்தைப் படித்தாயல்லவா?" என்று.

"படித்தேன்."

"என்ன புரிந்து கொண்டாய்?"

"புரிந்தது சொற்பம். புரியாதது பல."

"புரியாதது எது?"

"கடாரத்தின் அரியணையில் யார் அமர வேண்டும் என்று திட்டமாகக் குறிப்பிடவில்லை. தவிர என்னைச் சமயம் பார்த்துச் சிறை செய்யச் சொல்லி இருக்கும் காரணமும் புரியவில்லை."

அநபாயன் மஞ்சத்திலிருந்து எழுந்தான். இளவரசன் எழுந்ததால் இளையபல்லவனும் எழுந்து நின்றான். இரண்டு நண்பர்களும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு நீண்ட நேரம் நின்றனர். "அதில்தான் வீரராஜேந்திரனின் இணையற்ற

விவேகமும் ராஜதந்திரமும் அடங்கியிருக்கிறது கருணாகரா! விளக்குகிறேன் கேள். இப்படி உட்கார்" என்று மஞ்சத்தை விட்டுத் தரையில் நன்றாக உட்கார்ந்து கொண்டான். இளைய பல்லவனும் அவனுக்கு அருகில் உட்கார்ந்தான்.

அப்படி அக்கம்பக்கத்தில் பல இடங்களில் தரையில் உட்கார்ந்த அந்த நண்பர்கள் இருவரும் பழைய அந்நியோந் நியத்தில் திளைத்தார்கள். அப்படி உட்கார்ந்த குலோத்துங்கன் வீரராஜேந்திரன் செப்பேட்டின் பொருளை விளக்கினான். பொருள் விளங்க விளங்கப் பெரும் ஆச்சரியத்துக்குள்ளான இளையபல்லவன், இருவருக்குமிருந்த ஏற்றத்தாழ்வுகளை அறவே மறந்து, "நண்பனே! உன்னைப் பெறவும் வீரராஜேந்திர ரைப் பெறவும் தமிழகம் என்ன தவம் செய்தது?" என்று கூறி அநபாயனை அணைத்துக் கொண்டான்.

மகிழ்ச்சியுடன் நகைத்தான் அநபாயன். அந்த அறைச் சுவர்கள் அந்த நகைப்பொலியை ஆமோதிப்பனபோல் எதிரொலி கிளப்பின.



அத்தியாயம் 37

# மோதிரக்கை

சோழ சாம்ராஜ்யத்தின் தூரக்கிழக்குத் தூதனாக வந்துள்ள குலோத்துங்கதேவன் செப்பேட்டின் பொருளை விளக்கி அறையின் சுவர்கள் எதிரொலிக்கச் சிரித்தும்கூட, அந்தச் சிரிப்பில் கலந்து கொள்ளாத கருணாகர பல்லவன் வியப்பின் வசப்பட்டுப் பல விநாடிகள் வாயடைத்தே உட்கார்ந்திருந்தான்., முழந்தாள்களைக் கட்டிக்கொண்டு தரையில் அநபாயன் அருகில் உட்கார்ந்திருந்த சமயத்தில் இளையபல்லவனுக்கு நியாயமாக அவனும் அநபாயனும் அதேமாதிரி அக்கம்பக்கத்தில் உட்கார்ந்திருந்த போர்ப் பாசறைகள் நினைவுக்கு வந்திருக்க வேண்டும். அவர்கள் அப்படிச் சாதாரண மனிதர்களாக உட்கார்ந்த இடங்கள் பல. அப்படித் தரையில் உட்கார்ந்தது அவர்கள் இருவருக்கும் பெரும் உவகையை அளித்ததும் உண்டு. வேங்கி நாட்டிலும் ஒருமுறை அப்படித் தரையில் உட்கார்ந்தபோது இளைய பல்லவன் கேட்டான் அநபாயனை, "ஏன் தரையில் உட்காருகிறீர்கள்?" என்று. "தரையில் என்று சொல்லாதே. மண்ணில் என்று சொல்" என வந்தது அநபாயன் பதில். "என்ன வித்தியாசம் இரண்டுக்கும்?" என்று வினவினான் இளையபல்லவன். "வேங்கி நாட்டு மண்ணில் சோழன் போய் உட்கார்ந்துவிட்டான் என்றால் அந்த நாட்டைப் பிடித்து விட்டானென்று பொருள்" என விளக்கினான் அநபாயன். பிற நாடுகளை வெற்றி கொள்வதில் அநபாயனுக்கிருந்த ஆர்வத்தை அன்று புரிந்துகொண்ட இளையபல்லவன் அதற்குப் பின்பு அந்தக் கேள்வியைக் கேட்டது கிடையாது. மஞ்சத்தில் உட்காருவதை விட மண்ணில் உட்காருவதை அத்தனை பெருமையாக அவனும் நினைத்தான். அப்படி


கடல்
புறா
37. மோதிரக்-கை

அவ்விருவரும் உட்கார்ந்த இடங்கள் பலப்பல. அந்த நினைப்புகள் மட்டும் இளையபல்லவனுக்கு அன்று வந்திருந்தால் கடாரத்தின் தரையில் ஏன் உட்கார்ந்தான் குலோத்துங்கன் என்பதற்கு ஒரு காரணமும் கற்பித்திருப்பான். ஆனால் இளையபல்லவன் நினைப்பெல்லாம் பிரமிப்பா யிருந்தது. செப்பேட்டையும் வீரராஜேந்திரன் தந்திரத்தையும் விட்டு அவன் நினைப்பு வேறு இடங்களுக்குத் தாவ மறுத்தது. குலோத்துங்கன் பொருள் விளக்கம் அத்தனை விசேஷமாய் இருந்தது. பொருளை விளக்குமுன்பு பட்டயத்தை மீண்டும் படிக்குமாறு தான் குலோத்துங்கன் இளையபல்லவனுக்குக் கூறினாலும் இளையபல்லவனுக்கு பொருளேதும் திட்டமாக விளங்காததால், "நீங்கள் விளக்குங்கள் அநபாயரே!" என்று கேட்டான் அவன் ஆரம்பத்தில்.

பொருளை விளக்கத் துவங்கிய அநபாயன், "கருணாகரா! குணவர்மன் என்னுடன் புகாருக்கு வந்தது உனக்கு நினைப்பிருக்கிறதல்லவா?" என்று வினவினான்.

"அதை எப்படி மறக்க முடியும்?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"ஆம். மறக்க முடியாத நிகழ்ச்சிதான் அது. பாலூர்ப் பெருந்துறையில் எத்தனை கஷ்டப்பட்டுத் தப்பினோம்! அங்கிருந்து நான் குணவர்மனையும், உன் இன்னொரு கப்பலுக்குப் பெயர் வைத்திருக்கிறாயே காஞ்சனை, அந்தப் பெயருடைய பெண்ணையும் அழைத்துக் கொண்டு சோழ நாடு சேர்ந்தேன், வீரராஜேந்திரரிடம் அவர்களை அறிமுகப் படுத்த முயன்றேன். பல மாதங்கள் அவர்களைப் பார்க்கவும் மறுத்தார் மன்னர். ஏற்கெனவே கலிங்கத்துடன் சச்சரவிருக்க, அந்தச் சச்சரவை தூரக்கிழக்கு நாடுகளுக்கும் விஸ்தரிக்க அவர் இஷ்டப்படவில்லை. பல மாதங்கள் கழித்து உன்னைப் பற்றிய செய்திகள் வணிகர் மூலம் சோழ நாட்டுக்குக் கிடைத்தன. ஸ்ரீவிஜயத்தின் தீவுகளில் தமிழர் துன்புறுத்தப் படுவதாகவும் அவர்களை இளையபல்லவன் என்ற ஒரு கொள்ளைக்காரன் காப்பாற்றுவதாகவும் மன்னர் காதில்

விழுந்தது. வீரராஜேந்திரரின் புத்திக்கூர்மையைப் பற்றி உனக்கு நான் சொல்லத் தேவையில்லை. அந்தக் கொள்ளைக் காரன் யாரென்று புரிந்துகொள்வது ஒரு கஷ்டமில்லை அவருக்கு. அப்பொழுதும் அவர் குணவர்மனுக்கு இடம் கொடுக்கவில்லை. ஓராண்டுக்குப் பின்னர் அந்தக் கொள்ளைக்காரனைப் பற்றிக் கலிங்கத் தூதரும் பெரும் குற்றச்சாட்டுக்களைச் சோழ மன்னரிடம் சமர்ப்பித்தார்கள். அதைச் சாக்காக வைத்துக்கொண்டு வீரராஜேந்திரர் ஸ்ரீவிஜயத் தூதரை வரவழைத்தார். தூதரிடம் மன்னர் என்ன கேட்டார் தெரியுமா?" என்று வினவினான் குலோத்துங்கன்.

"என்ன வினவினார்?" இளையபல்லவன் கேள்வியில் விஷயத்தை அறிந்துகொள்ளும் துடிப்பு ஒலித்தது.

"அந்தக் கொள்ளைக்காரன் ஏன் புரட்சிக்காரனாயிருக்கக்கூடாது?" என்று ஸ்ரீவிஜயத் தூதரை வினவினார். ஜெயவர்மனுக்கும் குணவர்மனுக்கும் ஸ்ரீவிஜய அரியணைப் போட்டி இருப்பதாகத் தமக்குக் கேள்வியென்றும், ஜெயவர்மன் ஆட்சிக்கொடுமையாலேயே கொள்ளைக் காரனை மக்கள் ஆதரிப்பதாகவும் தமக்குச் செய்தி கிடைத் திருப்பதாகவும் கூறினார். அதுமட்டுமல்ல, தூரக்கிழக்கில் ஸ்ரீவிஜயத்தில் சரியான ஆட்சியிருந்தாலொழிய கொள்ளைக் காரனைச் சிறைசெய்யத் தாம் தமது கடற்படையை அனுப்புவதில் அர்த்தமில்லையென்றும் கூறினார். முதலில் ஆட்சேபித்தார் ஸ்ரீவிஜயத்தூதர். பிறகு ஆட்சி தகராறையும் வீரராஜேந்திரரே விசாரிக்கலாமென ஒப்புக் கொண்டார். அதற்குப் பின்புதான் குணவர்மரையும் அவர் பெண்ணையும் மரக்கலமொன்றில் தக்க துணையுடன் அனுப்பினோம். அவர்களைக் கலிங்கப் போர்க்கலம் சிறை செய்ய நீ மீட்டாய்..." என்ற குலோத்துங்கன் சிறிது நிதானித்தான்.

"மேலே சொல்லுங்கள்" என்ற இளையபல்லவன் முழுக் கதையையும் கேட்கக் காதைத் தீட்டிக்கொண்டான்.

அநபாயன் மேலே சொன்னான். "பிறகும் சில மாதங்கள் தாமதித்தார் வீரராஜேந்திரர். திடீரென்று ஒருநாள் எனக்கு அழைப்பு வந்தது. அவர் ஆஸ்தான அறையில் ஸ்ரீவிஜயத் தூதர் நின்றிருந்தார். சோழ மன்னர் முகத்தில் கோபம் சுடர் விட்டுக் கொண்டிருந்தது. நான் சென்றதும் 'அநபாயா, கடாரத்துக்குப் பயணப்படு. அந்தக் கொள்ளைக்காரன் இளையபல்லவனைச் சிறைபிடித்து இங்கு அனுப்பு. அவனுக்குத் தக்க தண்டனை விதிக்காவிட்டால் சோழ நாட்டு நீதி தர்மம் எல்லாம் குலைந்துவிடும்' என்று சீறினார் மன்னர். ஸ்ரீவிஜயத் தூதரும் அவருடன் கலந்துகொண்டு 'என் அரசாங்கம் சீக்கிரம் இந்தக் கொள்ளைக்காரனிடமிருந்து பாதுகாப்பை விரும்புகிறது. தவிர இவனை அழித்தால் சோழர் கௌரவமும் கடாரத்தில் நிலைக்கும்' என்றார் உதடுகள் துடிக்க. அந்தச் சமயத்தில் கையில் வைத்திருந்த செப்பேட்டை என்னிடம் நீட்டிய சோழர் பெருமான், ஸ்ரீவிஜய அரியணைப் போட்டியைப் பற்றி விசாரிக்கவும் கொள்ளைக்காரனைப் பிடிக்கவும் இதோ உனக்கு அதிகாரம் என்றும் கூறினார். அதை வாங்கிக்கொண்டு நான் அரண்மனையில் எனது அறைக்குத் திரும்பினேன். மறுநாள் முதற்கொண்டு என் பயணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் பலமாக நடந்தன. போர்க்கலங்கள் தயாராயின. நானும் பயணப்படச் சித்தமானேன். என் மரக்கலத்துக்கும் மன்னரே என்னுடன் வந்தார். நான் என் அறைக்குள் நுழைந்ததும் உடன் நுழைந்த அவர், 'அநபாயா! நீண்ட தூரம் பிரயாணம் செய்கிறாய். சோழ சாம்ராஜ்யக் கொடி தூரக்கிழக்கில் முன்போல் பறக்க ஆண்டவன் உனக்குத் துணை செய்யட்டும்' என்றார். எனக்கு ஏதும் புரியவில்லை. 'என்ன சொல்கிறீர்கள்?' என்று வினவினேன் நான். 'பட்டயம் விளக்கும் அநபாயா! பொருளை மட்டும் சரியாகப் புரிந்து கொள். ஸ்ரீவிஜயத்தின் அசரபீடத்தில் தக்கவரை அமர்த்த வேண்டுமென்றால் பீடத்துக்குத் தக்கவரை என்றல்ல பொருள். நமக்குத் தக்கவரை என்று பொருள். சோழமண்டலத்துக்கு யார் பணிந்து

நிற்பாரோ, தமிழர்கள் வாணிபத்துக்கு யாரால் தடையில்லையோ அவர்தான் நமக்குத் தக்கவர்' என்றார் மன்னர். 'அப்படியா?' என்று வியந்தேன் நான். 'அது மட்டுமல்ல, கொள்ளைக்காரனைச் சமயம் பார்த்துச் சிறை செய்யும்படிதான் உத்தரவிட்டிருக்கிறேன்' என்றும் சொன்னார் மன்னர். அதன் பொருளையும் விளக்கினார். 'எந்தச் சமயத்தில் அவனைச் சிறை செய்தால் தமிழர் பாதுகாப்புக்கு நஷ்டமில்லையோ அந்தச் சமயம் பார்த்துச் சிறை செய். அவனால் கூடியவரை நன்மை தமிழர்களுக்கு ஏற்பட்டு இருக்கிறது என்பதையும் நினைப்பில் வைத்துக் கொள்' என்றார். எனக்கு வியப்புத் தாங்கவில்லை கருணாகரா! அவர் எண்ணம் எனக்குப் புரிந்தது. இருப்பினும் கேட்டேன் நான், 'கொள்ளைக்காரனை ஆதரிக்கிறீர்களே' என்று. 'ஜெயவர்மனையும் பீமனையும்விட இளையபல்லவன் பெரிய கொள்ளைக்காரனல்ல' என்று கூறிவிட்டு மன்னர் கப்பலை விட்டுச் சென்றார்."

இத்துடன் பேச்சை நிறுத்திய அநபாயன், "இப்பொழுது வீரராஜேந்திரரைப் பற்றி என்ன நினைக்கிறாய் கருணாகரா" என்று வினவினான். அந்தச் சமயத்தில்தான் இளையபல்லவன் தன் நண்பனின் இரு கைகளையும் பிடித்துக் கொண்டு, "உங்களையும் வீரராஜேந்திரரையும் பெறத் தமிழகம் என்ன தவம் செய்தது?" என்று கூவினான்.

பிறகு அந்தச் செப்பேட்டையும், அநபாயனையும், வீரராஜேந்திரரின் விளக்கத்தையும் எண்ணி எண்ணிப் பூரித்துப் பூரித்துப் பிரமித்து நீண்ட நேரம் ஏதும் பேசாமல் உட்கார்ந்து விட்டான் இளையபல்லவன். அவன் பேச முற்பட்டபோது அவன் குரல் உணர்ச்சியின் மிகுதியால் லேசாக நடுங்கியது. "இப்பொழுது எனக்கு உத்தரவு இடுங்கள் அநபாயரே!" என்று வினவினான் இளையபல்லவன்.

அநபாயன் இளையபல்லவனைப் பாராமல் தலையைக் குனிந்துகொண்டே சொன்னான்: "என்ன உத்தரவிடுவதென்று

எனக்குப் புரியவில்லை கருணாகரா! ஆனால் ஒன்று நிச்சயம். உன்னைத் தற்சமயம் சிறையில் தள்ளுவதைத் தவிர வேறு வழியில்லை" என்று.

"சமயம் பார்த்துத்தானே சிறைபிடிக்கச் சொல்லி இருக்கிறார் மன்னவர்?" என்று வினவினான் இளைய பல்லவன்.

"ஆம்."

"இப்பொழுது என்னைச் சிறை செய்வதில் தமிழர்களுக்கு நஷ்டம் இருக்கிறதே."

"ஆம். அதுவும் எனக்குத் தெரியும்."

"அப்படியிருக்க ஏன் சிறைபிடிக்க முயலுகிறார்கள்?"

"கருணாகரா! பட்டயத்தின் பகுதிகள் இரண்டு. ஸ்ரீவிஜய அரியணையில் குணவர்மனை அமர்த்துவது ஒன்று. உன்னைச் சிறை செய்வது இரண்டு. நான் புறப்பட்டபோது உன்னைத் தேடிவர நான் உத்தேசிக்கவில்லை. நீயாக இங்கு வந்து விட்டாய். இந்தச் சந்தர்ப்பத்தில் நான் உன்னைச் சிறை செய்யாவிட்டால் என் நீதியைப் பற்றிச் சந்தேகம் ஏற்படும். ஜெயவர்மன் என் விசாரணைக்கு ஒப்புக்கொள்ள மாட்டான். என்னை எதிர்க்க முற்பட்டாலும் முற்படுவான். அப்பொழுது நானும் கொள்ளைக்காரனாக மாறுவதைத் தவிர வேறு வழியில்லை" என்று விளக்கினான் அநபாயன்.

அநபாயன் நிலை நன்றாகப் புரிந்தது இளைய பல்லவனுக்கு. கலிங்கத்துக்கும் ஸ்ரீவிஜயத்துக்கும் நம்பிக்கை உண்டாக்குவதற்காகவாவது அநபாயர் தன்னைச் சிறைசெய்ய வேண்டும் என்று உணர்ந்தான் கருணாகர பல்லவன். அதை வாய்விட்டும் சொன்னான், "ஆம் ஆம், வேறு வழி யில்லை உங்களுக்கு. என்னைச் சிறை செய்யத்தான் வேண்டும்" என்று.

குலோத்துங்கனுடைய குறுநகை சொட்டிய விழிகள் இளையபல்லவனை ஏறெடுத்து நோக்கின. "என் நிலைமை

மிகவும் தர்மசங்கடமானது" என்றான் அவன் சற்று சிந்தனை முகத்தில் உலாவ.

"என்ன தர்மசங்கடம் இல்லை." சங்கடத்துடன் எழுந்தது இளையபல்லவன் கேள்வி.

"உன்னை இப்பொழுது சிறை செய்வதை வீரராஜேந்திரர் விரும்பமாட்டார். சிறை செய்வதால் இடைஞ்சல்களும் இருக்கின்றன. நீ சிக்கிவிட்டால் தமிழர்கள் பலத்தில் பாதி இந்தப் பிராந்தியத்தில் ஒதுங்கிவிடும். உன்னிடமுள்ள பயத்தினாலும் உன்னை நான் பிடிப்பேனென்ற எண்ணத்தினாலும்தான் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதி நான் இங்கு வருவதை ஆட்சேபிக்கவில்லை. உன்னை நான் சிறை செய்து அடுத்த மரக்கலத்தில் சோழ நாடு அனுப்பிவிட்டால் என்னைச் சிறை செய்ய ஜெயவர்மன் தயங்கமாட்டான். என்னிடமோ ஆறு போர்க்கலங்கள் இருக்கின்றன. அவற்றைக் கொண்டு ஸ்ரீவிஜயத்தின் பெரும் கடற்படையை முறியடிக்க முடியாது. உன்னைச் சிறையிட்டால் தமிழருக்கு நஷ்டம். சிறை செய்யாவிட்டால் ஜெயவர்மனுடன் பேச முடியாது. அதனால் குணவர்மனுக்கு நஷ்டம். நீ இந்தச் சமயத்தில் இங்கு வந்தது பெரும் உபத்திரவம் எனக்கு" என்று கூறிய குலோத்துங்கன், திடீரென எழுந்திருந்து அந்த அறைச் சாளரத்தை நோக்கிச் சென்று வெளியே சில விநாடிகள் நோக்கினான். பிறகு திரும்பி, "உன்னைச் சிறை செய்யத் தீர்மானித்து விட்டேன் கருணாகரா" என்று கூறினான். இதைச் சொன்ன குரலில் உறுதி இருந்தது. அவன் ஏதோ முடிவுக்கு வந்துவிட்டான் என்று புரிந்துகொண்ட இளைய பல்லவன் அந்த முடிவு என்ன என்பதை அறிய விரும்பி, "சிறை செய்ய உத்தரவிடுங்கள் அநபாயரே! குட்டுப் பட்டாலும் மோதிரக் கையால் குட்டுப்படுகிறேன்" என்றான்.

"மோதிரக் கையால் குட்டுப்படுகிறாயா?" என்று வினவினான் குலோத்துங்கன்.

"நான் சிறைப்பட்டாலும் குலோத்துங்கன் கையால்தான் சிறைப்படுகிறேன்" என்று விளக்கினான் இளையபல்லவன்.

குலோத்துங்கன் முகத்தில் புன்முறுவல் அரும்பியது. "எது மோதிரக்கை என்பதுதான் கேள்வி கருணாகரா, யார் குட்டுப்படப் போகிறார்கள் என்பதும் கேள்வி" என்றான் அநபாயன்.

"உங்களதுதான் மோதிரக் கை, குட்டுப்படப் போவது நான்தான்" என்றான் இளையபல்லவன்.

"உன் கை ஏன் மோதிரக் கையாக இருக்கக் கூடாது? நான் ஏன் குட்டுப்படக் கூடாது?"

"அப்படி நினைப்பது ராஜ துரோகம்."

"அரசனே குட்டுப்பட விரும்பினால்?"

இந்தக் கேள்வி பெரும் வியப்பை அளித்தது இளைய பல்லவனுக்கு. அரசன் ஆள வேண்டியதே தவிர, ஆட்பட வேண்டியது இல்லை என்று உறுதியாக நம்பிய இளைய பல்லவன், "அந்த விருப்பத்தை யாரும் நிறைவேற்ற முடியாது" என்றான்.

"நிறைவேற்றும்படி உத்தரவிட்டால்?"

"உத்தரவை மீறத்தான் வேண்டியிருக்கும்?"

"நான் உத்தரவிட்டு இதுவரை மீறியவர்கள் யாரும் பிழைத்ததில்லை."

"நான் உயிர் துறக்கச் சித்தமாயிருக்கிறேன்."

இதைக் கேட்டதும் அநபாயன் இளையபல்லவனை நெருங்கி வந்து அவன் இரு தோள்களின் மீதும் கையை வைத்து, "உன் நட்பும் ராஜ விசுவாசமும் புரிகிறது எனக்கு கருணாகரா! ஆனால் சில சந்தர்ப்பங்களில் நாம் வெளி உலகத்தை முன்னிட்டு, நாட்டு நன்மையை முன்னிட்டு, சிறிது மாறுபட்டு நடக்க வேண்டியிருக்கிறது. ஆகவே உன் கைதான் இப்பொழுது மோதிரக் கை. நினைவு வைத்துக் கொள்" என்றான்.

இளையபல்லவனுக்கு என்ன பதில் சொல்வதென்று புரியாததால் அவன் பெரிதும் குழம்பினான். அப்படிக்

குழம்பி நின்ற இளையபல்லவன் கண்களைக் கூர்ந்து நோக்கிய அநபாயன், "கருணாகரா! லட்சக்கணக்கான தமிழர்களுடைய நன்மை, சோழ சாம்ராஜ்யத்தின் செல்வாக்கு எல்லாம் இப்பொழுது நமதிருவர் கைகளிலும் ஒப்படைக்கப் பட்டிருக்கிறது. அதை நிறைவேற்றும் வழிகள் எல்லாமே உத்தமமானவை. நிறைவேற்றுபவரில் யார் பெரியவர் யார் சிறியவர் என்பதல்ல கேள்வி. முறைகளும் இரண்டாம் பட்சம். விளைவை முன்னிட்டுத்தான் நாம் சாதன உபாயங்களை எண்ணிப் பார்க்க வேண்டும்" என்றான்.

அதற்கு மேல் ஏதும் சொல்ல முடியாத இளையபல்லவன், "உத்தரவிடுங்கள் இளவரசே" என்றான்.

உத்தரவை உதிர்க்கத் தொடங்கிய குலோத்துங்கன் "கருணாகரா! உன்னைச் சிறை செய்து காவலில் வைத்து விடுகிறேன். ஆனால் காவலில் இருந்து தப்பிச் செல்வது உனக்கு ஒரு பிரமாதமில்லை என்பது எனக்குத் தெரியும்" என்றான்.

புரிகிறது என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்தான் கருணாகரன். குலோத்துங்கனின் அடுத்த உத்தரவு அவனுக்கு அதிர்ச்சியை அளித்தது. "தப்பியதும் நீ கடல்மோகினிக்குச் செல்ல வேண்டாம்..." என்று இழுத்தான் அநபாயன்.

"வேறெங்கு செல்ல வேண்டும்?" என்று வினவினான் இளையபல்லவன்.

"அக்ஷயமுனைக்குச் செல்." திட்டமாக வந்தது பதில்.

இளையபல்லவன் அதிர்ச்சி அவன் குரலில் நன்றாகத் தெரிந்தது. "அக்ஷயமுனைக்கா? எதற்கு?" என்றான் இளைய பல்லவன்.

"காரணம் பிறகு உனக்கே தெரியும். ஸ்ரீவிஜயத்தில் நடக்கும் செயல்களை உனக்கு அவ்வப்பொழுது அறிவிக் கிறேன்" என்றான்.

அக்ஷயமுனை என்றதும் ஏதேதோ யோசனைகள் இளைய பல்லவன் இதயத்தில் எழுந்து தாண்டவமாடவே, "வேண்டாம் அநபாயரே! வேறு எங்காவது செல்ல என்னைப் பணியுங்கள்" என்று கெஞ்சினான்.

அதற்கு இசையவில்லை அநபாயன். அந்த உத்தரவை வலியுறுத்திய மற்றொரு உத்தரவும் இட்டான். அந்த உத்தரவு இளையபல்லவனை அடியோடு அசர வைத்தது. "முடியாது. என்னால் முடியாது. நிச்சயமாக முடியாது" என்று குழம்பிக் கலங்கிக் கலவரத்துடன் கூவினான் இளையபல்லவன். அதுமட்டுமல்ல, மோதிரக் கையின் குட்டு தன் தலைமேல் பலமாக விழுந்துவிட்டதையும் உணர்ந்தான்.



அத்தியாயம் 38

# குலோத்துங்கன் உத்தரவு

அக்ஷயமுனைக்குச் செல்லும்படி இடப்பட்ட முதல் உத்தரவைக் கேட்டதுமே திகிலடைந்த இளையபல்லவன், இரண்டாவது உத்தரவைக் கேட்டதும் பெரும் குழப்பத்துக்கும் கலவரத்துக்கும் உள்ளாகி, "முடியாது. என்னால் முடியாது, நிச்சயமாக முடியாது" என்று கூவினானென்றால், அதற்கு அரசியல் காரணங்களைவிட சொந்தக் காரணங்கள் அதிக மென்பதை உணர்ந்திருந்த குலோத்துங்கன், மெள்ள இளநகை பூத்தான். தான் கூவியதும் குலோத்துங்கன் முகத்தில் பரவிய உணர்ச்சிகளையும், உணர்ச்சிகளைத் தொடர்ந்து இதழ்களில் விரிந்த இளநகையையும் கண்ட இளையபல்லவன், "இளவரசருக்கு இது விளையாட்டாயிருக்கலாம். ஆனால் என் வரையில் இது..." என்று பேச முற்பட்டதும் அவன் சொற்களை இடையில் வெட்டிய அநபாயன், "பெரும் வினை போலிருக்கிறது" என்று வாசகத்தைப் பூர்த்தி செய்தான்.

குழப்பம் அப்பொழுதும் தணியாத பார்வையொன்றைக் குலோத்துங்கன் மீது செலுத்திய இளையபல்லவன், "சந்தேக மில்லை அநபாயரே! பெரும் வினைதான் இது" என்று பதில் கூறினான்.

ஏதும் விளங்காத பார்வையொன்று குலோத்துங்கன் கண்களில் விரிந்தது. "இதில் வினை என்ன இருக்கிறது? மனோபீஷ்டம் நிறைவேற்ற மார்க்கம் தானே இருக்கிறது!" என்று வினவினான் பொய் வியப்புத் தொனித்த குரலில்.

"மனோபீஷ்டமா!" என்ற இளையபல்லவன் குரலில் சங்கடம் பரிபூரணமாக ஒலித்தது.

"ஆமாம். உனக்கு அனுகூலத்தைத்தானே சொல்கிறேன்" என்று கேட்டான் குலோத்துங்கன், அப்பொழுதும் அந்தப் பழைய பொய் வியப்புத் தொனித்த குரலில்.

"நீங்கள் இடும் உத்தரவு எனக்கு அனுகூலமென்று நினைக்கிறீர்களா!" பழைய சங்கடம் அப்பொழுதுமிருந்தது இளைய பல்லவன் குரலில்.

"ஏன் அனுகூலமில்லாமலென்ன?" என்று மீண்டும் வினவினான் குலோத்துங்கன்.

"என்னை அக்ஷயமுனைக்குப் போகச் சொல்கிறீர்கள்" என்று இழுத்தான் இளையபல்லவன்.

"ஆமாம்."

"அங்கு செல்வதில் எனக்குச் சில கஷ்டங்கள் இருக்கின்றன."

"அப்படியா!"

"ஆம்."

"சோழ நாட்டு நன்மைக்கு உகந்ததானால் கஷ்டங்களை நாம் அனுபவித்துத்தானே ஆகவேண்டும்?"

"அதில் சந்தேகமில்லை. அதை முன்னிட்டுத்தான் அங்கு போக ஒப்புக்கொள்கிறேன். ஆனால்..."

"ஆனாலென்ன?"

இளையபல்லவன் பதில் சொல்லு முன்பு சற்றுக் குழம்பினான். "காஞ்சனாதேவியையும் அழைத்துப் போகச் சொல்கிறீர்களே?" என்று கூறி மென்று விழுங்கினான்.

குலோத்துங்கன் குழம்பி நின்ற கருணாகர பல்லவனை நோக்கி மீண்டும் குறுநகையொன்றை உதிர்த்தான். "கரும்பு தின்னக் கசப்பாக இருக்கிறதா கருணாகரா?" என்று வினவினான் குரலில் சிரிப்பொலி லேசாக விளையாட.

"உம்! உம்! கரும்புதான்" என்று கருணாகர பல்லவன் உறுமினான்.

"அதற்குள் கசந்து விட்டதா உனக்கு?" என்று கேட்டு மெல்ல நகைத்தான் அநபாயன்.

"எது?" இளையபல்லவனின் குரலில் கோபம் துளிர்த்தது.

"கரும்பு."

"ஆம் ஆம். கரும்புதான்!"

"ஏன் காஞ்சனாதேவி அழகாயில்லையா?"

"இல்லையென்று யார் சொன்னது?"

"அப்படியானால் அவளை அழைத்துச் செல்ல ஏன் ஆட்சேபணை உனக்கு?"

"அழைத்துச் செல்லும்படி சொல்லவில்லையே நீங்கள்?"

"பின் என்ன சொன்னேன்?"

"அபகரித்துச் செல்லும்படி அல்லவா சொல்கிறீர்கள்?"

"அதில் உனக்கென்ன கஷ்டம்?"

"உலகம் என்ன நினைக்கும் என்னைப்பற்றி?"

"சரியாகத்தான் நினைக்கும்."

"நீங்கள் சொல்வது விளங்கவில்லை."

"விளங்காததற்கு என்ன இருக்கிறது இதில்? கொள்ளைக் காரன் தன் தொழிலைச் செய்துவிட்டானென்று சொல்லும்" என்று கூறி விஷமமாக நகைத்த அநபாயன் இளைய பல்லவனை அணுகி, "அது மட்டுமல்ல கருணாகரா! காஞ்சனாதேவிக்கும் இதில் ஆட்சேபணை இருக்காதென்று நினைக்கிறேன்" என்று ரகசியமாகக் கூறினான்.

குலோத்துங்கன் முகத்திலும் பேச்சிலுமிருந்த விஷமத்தைக் கவனித்த இளையபல்லவன் எரிச்சல் உச்சஸ்தாயிக்குப் போகவே, "அநபாயரே! சோழ நாட்டு இளவலாகிய நீங்கள் பேச வேண்டிய பேச்சல்ல இது" என்று கோபத்துடன் கூறவும் செய்தான்.

"சோழ நாட்டு இளவல் பேச வேண்டிய பேச்சுத்தான் இது" என்று மீண்டும் கூறி நகைத்தான் அநபாயன்.

"அப்படியா!"

"ஆம். சோழ நாட்டு இளவல் உண்மையைத் தவிர வேறு எதைப் பேச முடியும்?"

"எது உண்மை அநபாயரே?"

"நீ கடத்திக்கொண்டு போவதைவிட காஞ்சனாதேவிக்கு மகிழ்ச்சி தரக்கூடிய சம்பவம் உலகத்தில் ஏதுமில்லையென்பது" என்று சுட்டிக்காட்டினான் அநபாயன்.

"நீங்கள் கடாரத்து இளவரசியைத் தவறாக எடை போட்டிருக்கிறீர்கள்" என்றான் இளையபல்லவன் கோபம் குரலை விட்டு அகலாமலே.

அநபாயன் விழிகளில் சிரிப்பு உதிர்ந்தது. "சரியாகத்தான் எடை போட்டிருக்கிறேன் கருணாகரா! மிகச் சரியாக எடை போட்டிருக்கிறேன். உன் நண்பனுக்கு அத்தனை புத்திக் கூர்மையில்லை என்று நினைக்காதே. காஞ்சனாதேவியையும் உன்னையும் பாலூர்ப் பெருந்துறையில் பார்த்திருக்கிறேன். உன்னைக் கண்டபோதெல்லாம் அவள் மெழுகென உருகியதைக் கவனித்துமிருக்கிறேன். அனந்தவர்மன் நீதி மண்டபத்தில் நீயும் சேந்தனும் விசாரிக்கப்பட்டபோது அங்கிருந்து உங்களைத் தப்புவிக்க நான் திட்டமிட்டேன். நினைப்பு இருக்கிறதா உனக்கு...?" என்று வினவினான் இளநகை உதடுகளில் அரும்ப.

"இருக்கிறது." வறண்ட குரலில் வந்தது இளையபல்லவன் பதில்.

"திட்டமிட்ட சமயத்தில் என்னுடைய நீதிமண்டபத்துக்கு யார் வரமுடியும் என்று கேட்டேன். நான் வருகிறேன் என்று எழுந்தாள் காஞ்சனாதேவி. அப்படி எழுந்தபோது அவள் துடிப்பைப் பார்த்தேன், நீங்கள் வேண்டாம் அங்கு அபாயம் மிகுதி என்று தடுக்க முயன்றேன். உயிர் போவதாயிருந்தாலும் வரத்தான் வருவேன் என்றாள் கடாரத்து இளவரசி. அவளை அழைத்து வந்து உன்னை மீட்டேன். பிறகு கோதாவரிக் கரைக் குடிகளில் நிகழ்ந்தனவற்றை அமீரிடமிருந்து தெரிந்து கொண்டேன் விவரமாக. அந்த நிகழ்ச்சியை நான் விவரிப்பது பண்பாட்டுக்கு விரோதம்... உம்..." என்று நிறுத்தினான் அநபாயன்.

இளையபல்லவன் பதிலேதும் சொல்லாமல் சிலையென நின்றிருந்தான். அநபாயனே மேற்கொண்டு சொன்னான், "பிறகு காஞ்சனாதேவியைத் தஞ்சை அரண்மனையிலும் பார்த்தேன். உன் பெயர் அரசர் முன்பு சொல்லப்பட்ட சமயங்களிலெல்லாம் அவள் கண்களில் புத்தொளி சுடர் விட்டது. முகத்தில் உன்னைப்பற்றித் தெரிந்து கொள்ள ஆவல் மிதமிஞ்சி இருந்தது. கருணாகரா! இன்னும் நான் என்ன சொல்ல?" என்று.

இளையபல்லவன் மௌனமே சாதித்தான். திடீரென குலோத்துங்கன் பேச்சை மாற்ற, "ஒன்று கேட்க மறந்து விட்டேன் உன்னை. கடல் மோகினியைக் கலிங்கத் தலைவன் ஒருவன் கையிலிருந்து மீட்டதாகக் கூறினாயே, அவன் இப்போது கடல்மோகினியில் தமிழர் கையிலிருக்கிறானா?" என்று வினவினான்.

"இல்லை." திட்டமாக வந்தது இளையபல்லவன் பதில்.

"பின் எங்கே அவன்?"

"அவனைக் கொன்றுவிட்டேன்."

"ஏன் ஏதாவது கலகம் செய்தானா?"

"கலகம் செய்யவில்லை..."

"உன்மீது கையை வைக்க முயன்றானா?" என்று அநபாயன் சிரித்தான்.

"என்ன சிரிக்கிறீர்கள்?" கோபத்துடன் எழுந்தது இளைய பல்லவன் கேள்வி.

"இல்லை இல்லை. அவன் காஞ்சனாதேவி மீது..." என்று துவங்கிய குலோத்துங்கனை, "நில்லுங்கள்" என்ற இளைய பல்லவன் சுடுகுரல் தடுத்தது.

அதைக்கேட்ட குலோத்துங்கன் சிறிது வாய்விட்டே நகைத்தான். பிறகு இளையபல்லவனை நோக்கி, "காஞ்சனா தேவிக்காக நீ அவனைக் கொன்றதாக இங்கு யாரும் நம்ப வில்லை. நீ ஏதோ தந்திரம் செய்து அவனைக் கொன்று கடல்மோகினியைக் கைப்பற்றவே அந்த நாடகம் ஆடியதாக

எல்லோரும் நம்புகிறார்கள். எல்லோரும் வேறு, உன் நண்பன் வேறல்லவா? அந்தக் கதையைக் கேட்டதும் நான் புரிந்து கொண்டேன், காஞ்சனாதேவிக்காக அந்தக் கொலை நடந்திருக்கிறதென்று. ஆகவே என் திட்டத்தில் உனக்குக் கஷ்டமில்லை. காஞ்சனாதேவிக்கு நீ சைகை செய்தால் போதும். உன்னுடன் ஓடத் தயாராயிருக்கிறாள். பெண்களின் குணமே அப்படி. அவர்கள் என்ன காரணத்தாலோ நல்லவர்களை விரும்புவதில்லை. கொள்ளைக்காரர்கள், காமுகர்கள், இப்படிப்பட்ட அயோக்கியர்களையே விரும்புகிறார்கள்" என்று கூறித் தனது நகைச்சுவையைக் காட்டினான் சோழ நாட்டு இளவல்.

அந்த நகைச்சுவை வேப்பங்காயாயிருந்தது இளைய பல்லவனுக்கு. "என்னைப்பற்றி இன்னும் என்ன அவதூறு கூறப்போகிறீர்கள் இளவரசே?" என்று வினவினான் இளைய பல்லவன் சற்றே கோபத்துடன்.

"இதில் அவதூறு ஏதுமில்லை. நான் ஏற்கெனவே சொன்னபடி உண்மைதான் இது. தவிர, உனக்கு உதவத்தானே நான் இத்தனையும் செய்கிறேன்?" என்றான் பழையபடி மெல்ல நகைத்து.

"இது உதவியா?"

"உதவியில்லாமலென்ன! நீ காஞ்சனாதேவியை விரும்புகிறாய். அவளும் உன்னை விரும்புகிறாள். நீங்கள் தனித்துச் செல்ல உதவி செய்கிறேன். நண்பனிடமிருந்து இதைவிட என்ன எதிர்பார்க்கிறாய்?"

"என்னை உங்களுக்குத் தெரியாதா அநபாயரே!"

"நன்றாகத் தெரியும்."

"நீதிக்கும் தர்மத்துக்கும் புறம்பான எதையும் நான் செய்ய இஷ்டப்படவில்லை."

"கொள்ளைக்காரன் நீதியையும் தர்மத்தையும் பற்றிப் பேசினால் யாரும் ஒப்புக்கொள்ள மாட்டார்கள். அப்படியே இருக்கட்டும். நீதிக்குப் புறம்பாகவோ தர்மத்துக்குப்

புறம்பாகவோ நான் எதையும் உன்னைச் செய்யச் சொல்ல வில்லையே!"

"காஞ்சனாதேவியை அபகரித்துச் செல்வது எதில் சேர்ந்தது? நீதியிலா, தர்மத்திலா?"

"இரண்டிலும் .சேர்ந்தது. க்ஷத்திரியர்களுக்கு ராக்ஷஸ விவாகம் அனுமதிக்கப்பட்டிருக்கிறது. நீ காஞ்சனாதேவியைத் தூக்கிச் சென்றால் அது க்ஷத்திரிய தர்மத்துக்குப் புறம்பான தல்ல. நீதிக்கும் அப்பாற்பட்டதல்ல."

இளையபல்லவனுக்கு என்ன பதில் சொல்லுவதென்று தெரியாததால் சில விநாடிகள் திணறினான். பிறகு மெள்ளத் தன்னைச் சமாளித்துக்கொண்டு, "காஞ்சனாதேவியை அபகரித்துச் செல்வதானால் அக்ஷயமுனைக்கு ஏன் செல்ல வேண்டும்? திரும்ப மாநக்காவரத்துக்கே சென்றுவிட்டா லென்ன?" என்று வினவினான்.

குலோத்துங்கன் இளையபல்லவனைக் கூர்ந்து நோக்கி விட்டுக் கூறினான், "நமது திட்டத்துக்கு அது உகந்ததல்ல" என்று.

"என்னை நீங்கள் சிறையிட்டு நான் அதிலிருந்து தப்பி இளவரசியையும் கடத்திச் சென்றால் என்னைப் பிடிப்பவருக்கு வெகுமதி தருவதாகப் பறைசாற்ற எண்ணு கிறீர்கள்..." என்று கூறி நிதானித்தான் இளையபல்லவன்.

"ஆம்" என்றான் குலோத்துங்கன்.

"அப்பொழுது ஸ்ரீவிஜய மன்னர் பிரகடனத்துக்கும் உங்கள் பிரகடனத்துக்கும் வித்தியாசமிருக்காது.

"ஆம்."

"நீங்கள் இதை ஒரு பொது அஸ்திவாரமாக வைத்துக் கொண்டு ஸ்ரீவிஜய மன்னருடன் அரியணைப் போட்டியைப் பற்றிப் பேச முடியும்."

"ஆம்."

"ஆக நான் எங்கு சென்றாலென்ன உங்களுக்கு?" இந்தக் கேள்வியைச் சற்று வேகத்துடன் கேட்டான் இளையபல்லவன்.

அநபாயன் சற்றுப் பின்வாங்கிச் சென்று தனது மஞ்சத்தில் அமர்ந்தான். பிறகு சில விநாடிகள் இளைய பல்லவன் முகத்தை ஆராய்ந்துவிட்டுக் கேட்டான், "அக்ஷய முனைக்குப் போவதில் உனக்கென்ன கஷ்டம்?" என்று.

"அதனாலென்ன லாபம் உங்கள் திட்டத்துக்கு?" என்று வினவினான் இளையபல்லவன்.

"அக்ஷயமுனை இன்றும் கொள்ளைக்காரர்களுக்குப் புகலிடமாக இருக்கிறது. நீ சூளூக்களை முறியடித்து விட்டாலும் அவர்கள் பலம் முழுவதும் போகவில்லை. இன்னும் அவர்கள் நடமாட்டம் அக்ஷயமுனையில் இருக்கிறது. ஆகவே கொள்ளைக்காரர்கள் இருப்பிடத்துக்குக் கொள்ளைக்காரன் போவதுதான் பொதுமக்கள் நம்பக் கூடியது."

"கொள்ளைக்காரன் ஏற்கெனவே பிடித்துள்ள இடத்துக்குப் போனால் நம்பமாட்டார்களாக்கும்?"

"நம்புவார்கள். ஆனால் கடல் மோகினி இந்த ஜலசந்தி யிலிருந்து அதிக தூரம் இருக்கிறது. அக்ஷயமுனை அக்கரை யில் இருக்கிறது. நான் இக்கரையிலும் நீ அக்கரையிலும் இருப்பது இந்த ஸ்ரீவிஜய கடல் பகுதியைக் காப்பதற்கு உதவும். ஒருவேளை போர் ஏற்பட்டாலும் இருபுறத்திலும் ஸ்ரீவிஜயம் நெருக்கப்படும்" என்று சுட்டிக் காட்டினான் அநபாயன்.

அநபாயன் திட்டத்தைக் கேட்ட இளையபல்லவன் பிரமித்தான். அந்தப் பகுதிக்குப் புதிதாக வந்திருந்த அநபாயன் அதைப்பற்றி எத்தனை விவரங்களை அறிந்திருந்தானென்பதை எண்ணி வியந்தான். சென்ற ஒன்றரை முக்கால் ஆண்டுகளில் இங்கு நடந்துள்ள சகல விவரங்களையும் அநபாயன் அறிந் திருக்கிறானென்பதைப் புரிந்துகொண்டதால் சோழ சாம்ராஜ்ய அரியணையில் உட்காரக் குலோத்துங்கன் எத்தனைத் தகுதியைப் பெற்றிருக்கிறான் என்பதையும் உணர்ந்து அதிக ஆச்சரியத்துக்குள்ளானான். ஆனால் அவனுக்குத் தன் வாழ்வின் ஒரு முக்கிய விஷயம் மட்டும்

தெரியவில்லை என்பதை அறிந்ததால் அதை எப்படிச் சொல்வதெனத் தெரியாமல் விழித்தான். அந்தச் சமயத்தில் தங்கு தடையின்றி எழுந்தது குலோத்துங்கன் குரல் பலமாக, "கருணாகரா, உன்னை இப்பொழுது சிறை செய்வதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை. நண்பன் என்பதற்காக உன்னை நான் மன்னிக்க முடியாது. ஆகவே புறப்படு சேவைக்கு" என்ற குலோத்துங்கன் வெகு வேகமாக நடந்து சென்று அறைக் கதவைத் திறந்து, "யாரங்கே?" என்று கூவினான். அவன் குரலைக் கேட்டதும் விரைந்த இரு காவலாளிகளைப் பார்த்து, "இங்கு அறைக்குள் உள்ள கொள்ளைக்காரனைக் காவலில் வையுங்கள். என் அனுமதியின்றி அவனை யாரும் பார்க்கக் கூடாதென்றும் திட்டம் செய்யுங்கள். இந்த உத்தரவு குணவர்மருக்குத் தெரியப்படுத்தப்படட்டும்" என்று கூறி விடுவிடுவென்று உள்ளே வந்து, "செல்" என்று இளைய பல்லவனுக்கு உத்தரவிட்டான். கதவை நோக்கி வெகு வேகமாகச் சென்ற இளையபல்லவனைக் குறுக்கே நின்று ஒரு விநாடி தடுத்த இளவரசன் கையைப் பிடித்து "மரியாதையாக, மெள்ள நட" என்று இரைந்து பிறகு சட்டென்று அவனை நெருங்கிக் காதுக்கருகில் ஏதோ சொல்லிவிட்டு விலகினான்.

அதைக் கேட்டதும் விவரிக்க இயலாத பிரமிப்பு இளைய பல்லவன் முகத்தில் விரிந்தது. ஏதோ சொல்ல உதடுகளைத் திறந்தான். அதற்குள் உள்ளே நுழைந்த காவலர் அவனை இருபுறத்திலும் நெருங்கிக் கைகளைப் பற்றிக் கொண்டார்கள். பேச வழியின்றி, பரிதாபம் கலந்த பார்வையை அநபாயன் மீது நாட்டினான் இளையபல்லவன். குலோத்துங்கன் முகத்தில் பரிதாபம் சிறிதும் இல்லை. ஏன், எந்தவித உணர்ச்சியும் தெரியவில்லை. ஆனால் இளையபல்லவனுடன் காவலர் சென்ற அறைக்கதவு சாத்தப்பட்டவுடன் மகிழ்ச்சி யுடன் பெரிதாக நகைத்து மஞ்சத்தில் தொப்பென்று விழுந்தான், சோழ சாம்ராஜ்யத்தின் பிற்காலச் சக்கரவர்த்தி.

அத்தியாயம் 39

# வெற்றி யாருக்கு?

இளையபல்லவனைச் சிறை செய்யக் காவலர் நெருங்கு முன்பே அவன் காதுக்கருகே குலோத்துங்க தேவன் சொன்ன ரகசிய வார்த்தைகளைக் கேட்டதும் இளையபல்லவன் பிரமிப்புக்கும் கலவரத்துக்கும் உள்ளாகவும் காரணமிருந்தது. அவற்றைச் சொன்ன அநபாயன் பெரிதாக நகைத்து மஞ்சத்தில் தொப்பென்று விழுந்ததற்கும் காரணமிருந்தது. அப்படித் தொப்பென்று விழுந்த அநபாயன், இளைய பல்லவன் சென்ற நீண்ட நேரத்துக்குப் பின்பும் மீண்டும் நகைத்துக்கொண்டே இருந்தான்.

ஆனால் காவலர்களுக்கிடையே சென்ற இளைய பல்லவன் அப்படி நகைக்கும் நிலையில் அடியோடு இல்லை. அவன் சித்தப் பிரமிப்பு விவரிக்க இயலாத அளவு விரிந்து அவனைக் கனவில் சிக்கி விட்டவன் போல் அடித்திருந்தது. ஏதோ கனவில் நடப்பவன்போல் காவலருக்கிடையில் நடந்து சென்றவன் அரண்மனைக் காவல் கூடமொன்றில் தனியே விடப்பட்ட பின்பும் சுமார் இரண்டு மூன்று நாழிகைகள் மட்டும் கனவிலிருப்பவன் போலவே நாற்புறமும் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். "அக்ஷயமுனைக்குச் சென்றால் உனக்கென்ன நஷ்டம்? அங்கு மஞ்சளழகியுமிருக்கிறாள். ஒரு பெண்ணுக்கு இரண்டு பெண்களாயிற்று. போய் வா. உனக்கு யோக காலம் இப்பொழுது" என்ற வார்த்தைகளைத்தான் அநபாயன் இளையபல்லவன் காதில் ஓதி இருந்தான். தன் வாழ்வின் அந்தப் பகுதியை அநபாயன் அறிந்திருக்க வழி யில்லை என நினைத்திருந்த இளையபல்லவனுக்கு அந்த வார்த்தைகளைக் கேட்டதும் பேரதிர்ச்சியே ஏற்பட்டது. அதிர்ச்சி மட்டுமல்ல, வியப்பும், வியப்பினால் ஏற்பட்ட



# 39. வெற்றி யாருக்கு?

பிரமிப்பும், அங்கு செல்வதனால் ஏற்படக்கூடிய விளைவையும் எண்ணிப் பார்த்ததால் உண்டான பயமுங்கூட சோழர் படைத்தலைவன் இதயத்தில் வலம் வந்தன. "மஞ்சளழகியைப் பற்றி யார் சொல்லி இருப்பார்கள் இளவரசருக்கு?" என்று பலமுறை திரும்பத் திரும்ப எண்ணிப் பார்த்தும் விடை கிடைக்காத இளையபல்லவனுக்கு அத்தனை பிரமிப்பிலும் இணையிலாக் கௌரவ புத்தியும் ஏற்பட்டது அநபாயனிடத்திலே. 'என்னைப் பிரிந்தது முதல் இளவரசர் என்னைப் பற்றியே நினைத்திருக்க வேண்டும். இல்லாவிடில் என் வாழ்வைப் பற்றிய ஒவ்வொரு நுணுக்கத்தையும் விசாரித்து அறிந்திருப்பாரா' என்று நினைத்துப் பார்த்து இளவரசனுடைய அந்தரங்க நட்பைப் பெற்றது பற்றி அத்தனை பிரமிப்பிலும் ஓரளவு ஆனந்தமும் அடைந்தான் இளைய பல்லவன்.

அந்த ஆனந்தம் அதிக நேரம் நிலைக்கவில்லை இளைய பல்லவன் இதயத்திலே. மஞ்சளழகியை மீண்டும் நெருங்குவதால் தனக்குண்டாகக்கூடிய மனக்கிளர்ச்சியை அவன் அறிந்தே இருந்தான். அவளை அந்தக் காவற் கூடத்தில் நினைத்த சமயத்தில்கூட அவள் எழில் முகமும், மயக்கும் விழிகளும், மஞ்சள் நிறத் தேகமும் அவன் கண்களுக்கெதிரே விரிந்தன. அந்தத் தோற்றத்திலிருந்து சிந்தையை விடுவித்துக் கொள்ள, காவற் கூடத்தின் சாளரத்தை நெருங்கி வெளியே பார்த்தவன் மென்மேலும் பிரமிப்பே அடைந்தான். அரண்மனையின் அந்தக் காவற்கூடம் அரண்மனையின் கோடியில் ஒருபுறமாக அமைக்கப்பட்டிருந்ததால் அதை அடுத்திருந்தது அரண்மனை நந்தவனம். அந்த நந்தவனத்துக்குக் குறுக்கே சாளரத்தின் பார்வையில் ஓடியது ஒரு குறுகிய பாதை. அந்தப் பாதையின் கோடியைக் கடலலைகள் தொட்டுக் கொண்டிருந்தன. பாதையின் இரு புறங்களிலும் நந்தவனத்தின் மலர்மரங்களின் கிளைகள் தரையைத் தொட்டுக்கொண்டு இருந்தன. சில கிளைகள் பூங்கொத்துக் களைக் காற்றில் அசைத்துத் தரையைப் பெருக்கியும்

கொண்டிருந்தன. அந்தக் காட்சியைக் கண்ட இளைய பல்லவன் அசந்து போனான். கடாரத்தின் அந்த அரண் மனையை நிர்மாணித்தவன் யாராயிருந்தாலும் அவன் பெரிய ரசிகன் என்பதைத் தீர்மானித்துக்கொண்ட இளையபல்லவன், தான் பல தெருக்களைத் தாண்டி அரண்மனைக்கு வந்தாலும் கடாரத்தின் கடற்கரை லேசாக வளைந்திருப்பதால்தான் அதன் ஒரு கோடியில் அரண்மனையை அத்தனை சிறப்பாக அமைக்க முடிந்தது என்றும் முடிவு செய்தான். அரண்மனைக் காவற் கூடத்திலிருந்து கடலுக்கு அழைத்துச் சென்ற அந்தக் குறுகிய பாதை எத்தனை அழகாயிருந்தது? தாழ்ந்த மலர்க் கிளைகளும் பாதையின் கோடியில் மோதிய கடலலைகளும் என்ன அற்புதக் காட்சியை அளித்தன.

அதுவும் அப்பொழுது காலை நேரம். கடலைக் கதிரவன் கிரணங்கள் தொட்டுவிட்ட வேளை. அந்தக் கிரணங்கள்தான் என்ன அழகை அந்த அலைகளுக்கு அளித்திருந்தது! இவற்றை யெல்லாம் கண்டு உள்ளம் பிரமித்துக் கிடந்த அந்த நேரத்திலும் வியக்கவே செய்தான் இளையபல்லவன். அந்த வியப்பு உணர்ச்சியோடு நிற்கவில்லை சிந்தனையின் ஊர்வலம். அந்தக் குறுகிய பாதையின் கோடியில் நடந்து கொண்டிருந்த ஒரு பெண்ணையும் அவன் கண்கள் கண்டன. கண்கள்தாம் கண்டனவா அல்லது சித்தத்தின் பிரமையா அது? அவனுக்கே விளங்கவில்லை.

ஆனால் அந்த அலைகள் காலில் தொட நின்றிருந்தாள் மஞ்சளழகி. பின்புறத்தில்தான் அந்த உருவத்தை அவனால் பார்க்க முடிந்தது. பக்கம் எதுவாயிருந்தால்தானென்ன, அடையாளம் கண்டுபிடிக்கக் கண்களுக்குத்தான் சக்தி யில்லையா? அல்லது கருத்துக்குத்தான் பலமில்லையா? இரண்டும் இருந்தது. அது மஞ்சளழகிதான். சந்தேகமில்லை. அவள் நின்ற தோரணை, வெய்யிலில் பொன்னைப் போல் பளபளத்த மஞ்சள் நிறம், உருண்ட அந்தக் கால்களின் அழகு, அவள் காலில் கட்டியிருந்த அந்த நடனச் சலங்கை எல்லாமே அவளை மஞ்சளழகியென நிரூபித்ததால் அவன் அக்ஷய

முனைக்கே சென்றுவிட்டான். அக்ஷயமுனையின் அழகிய மணற்பரப்பிலே முழுமதி எழுந்தான். நடன மண்டபத்திலே தேவதையெனத் தோன்றினாள் மஞ்சளழகி. அவள் காலைத் தட்டித் தட்டி ஆடினாள், கொள்ளையரும் ஆடினர்! மீண்டும் அந்தப் பழைய நடன நிகழ்ச்சி அவன் மனக்கண் முன் எழுந்தது. அவ்ன் எத்தனை நாழிகைகள் அப்படி நின்றிருந் தானோ அவனுக்கே தெரியாது. மஞ்சளழகியின் கால்களில் அலைகள் தாக்குவதையே அவன் கண்கள் பார்த்துக் கொண்டிருந்தன. அவள், அன்று புனலாடித் தன் பக்கத்தில் கடற்கரையில் அமர்ந்து சொன்ன சொற்கள் அந்தச் சந்தர்ப்பத்தில் அவன் காதுகளில் ஒலித்தன. "நீங்களும் இந்த அலைகளைப் போலத்தான். என்னைத் தொட்டு விட்டுச் சென்று விடுவீர்கள்" என்ற சொற்களை மஞ்சளழகி மீண்டும் சொல்வது போன்ற பிரமை ஏற்பட்டது அவனுக்கு.

அந்தக் காட்சிகள் மனத்திலெழ எழ அவனுக்குக் கடாரத்தின் சிந்தனையும் காஞ்சனாதேவியின் நினைப்பும் அறவே அகன்றுவிட்டன. 'ஒரு பெரும் சாம்ராஜ்யாதிபதியின் மகளாகிய மஞ்சளழகி எத்தனை அநாதை!' என்று எண்ணிப் பெருமூச்சு விட்டான் ஒரு விநாடி. அவன் இதயத்தில் பரிதாபமும் அழகும் நிரம்பிய மஞ்சளழகியின் முகம் எழுந்தது. ஆகவே கண்கள் அந்தப் பாதைக் கோடியில் நின்ற அவள் உருவத்திலேயே திளைத்தன. "இவள் எப்படி இங்கு வந்தாள்?" என்று திரும்பத் திரும்பப் பல விநாடிகள் யோசித்தும் கருணாகர பல்லவனுக்குப் பதிலேதும் கிடைக்க வில்லை. பாதைக் கோடியில் நின்ற அந்தப் பாவையும் லேசில் திரும்பித் தன் மலர்முகத்தைக் காட்டி அவனை மகிழ்விப்பதா யில்லை. அவள் நின்ற இடத்திலிருந்து அலை ஓரமே பக்கவாட்டில் நகர்ந்தாள். பத்தடிகள் அவள் நடந்ததால் பாதையின் பக்க மரங்கள் அவளைத் தன் கண்களிலிருந்து மறைத்துவிடும் என்பதை எண்ணிய இளையபல்லவன், "இரு மஞ்சளழகி! இரு!" என்று கூவினான். ஆனால் அவன் கூச்சல்

அந்தப் பாவையின் காதுகளில் விழவில்லை. மெள்ள அவள் நடந்து மரங்களுக்கிடையே மறைந்துவிட்டாள்.

மஞ்சளழகியின் எழிலுருவம் மறைந்ததும் சாளரத்தை விட்டுத் திரும்பிய இளையபல்லவன் அந்த அறையிலிருந்த ஒரு மஞ்சத்தில் படுத்துக்கொண்டு கண்களை மூட எண்ணினான். ஆனால் கண்களை மூடுவதும் பிரம்மப் பிரயத்தனமாய் இருந்தது. அவன் வாழ்க்கையில் மறக்க விரும்பிய காட்சிகளெல்லாம் அவன் புத்தியில் வலம் வரத் தொடங்கின. சிக்கலான வாழ்க்கையுள்ளவனுக்கு நிம்மதி இல்லை என்ற வேதாந்தத்தின் உட்கருத்து அந்தச் சமயத்தில் அவனுக்கு நன்றாக விளங்கியது. "என்ன வாழ்க்கை இது! சே! சே! சிறிதும் நிம்மதி இல்லை" என்று தனக்குள்ளேயே அலுத்துக் கொண்டான். பிறகு மீண்டும் எழுந்திருந்து அறையில் சில விநாடிகள் நடமாடினான். பிறகு இரு கைகளையும் பலமாகத் தட்டி, "யாரங்கே?" என்று விளித்தான். அந்த அழைப்பின் விளைவாகக் கதவைத் திறந்து கொண்டு வந்த காவலனை நோக்கி, "நான் சோழ நாட்டு இளவரசரைக் காணவேண்டும் உடனடியாக" என்று கூறினான்.

காவலன் பதில் சட்டென்று கிடைத்தது. "இளவரசர் இப்பொழுது யாரையும் பார்க்கப் பிரியப்படவில்லை" என்றான் திட்டமாக.

"ஏன்?" கோபத்துடன் கேட்டான் இளையபல்லவன்.

"மந்திராலோசனையிலிருக்கிறார்?" என்று வந்தது பதில்.

"யாருடன் மந்திராலோசனையிலிருக்கிறார்?"

"படைத் தலைவர்களுடன்."

சிறிது நேரம் யோசித்தான் இளையபல்லவன். "அப்படியானால் குணவர்மரை நான் பார்க்க வேண்டும்" என்றான் அடுத்தபடியாக.

"அதுவும் முடியாது."

"ஏன்?"

"அவரும் மந்திராலோசனையிலிருக்கிறார்."

"என்ன எல்லோருக்கும் மந்திராலோசனை இப்பொழுது?" என்று சீறினான் படைத்தலைவன்.

"அதைக் கேட்க எனக்கு அதிகாரமில்லை. தங்களுக்கும் அதிகாரமில்லையென நினைக்கிறேன்" என்ற காவலன் பதில் பணிவாகவே வந்தது. ஆனால் அவன் குரலில் சிறிது ஏளனமும் கலந்திருந்தது.

இளையபல்லவன் கோபம் மெள்ள மெள்ள ஏறிக் கொண்டிருந்தது. "சரி அப்படியானால் காஞ்சனாதேவியிடம் என் வரவை அறிவித்து வா" என்றான் ஓரளவு கோபத்தைத் தணித்துக்கொண்டு.

"யாரைச் சொல்கிறீர்கள்? இளவரசியாரையா?" என்ற காவலன் பயத்துடன் அந்தக் கேள்வியைத் தொடுத்தான்.

"ஆம் இளவரசியாரைத்தான்" என்றான் இளைய பல்லவன்.

காவலன் முகத்தில் வியப்பு மறைந்தது. "ஒன்று உங்களுக்கு சித்தப் பிரமையாயிருக்க வேண்டும். அல்லது எனக்குச் சித்தப் பிரமையாயிருக்க வேண்டும்" என்றான் காவலன்.

இளையபல்லவன் கண்கள் காவலன் முகத்தை நன்றாக ஊடுருவி ஓரளவு நிதானத்துக்கும் வந்துவிட்ட இளைய பல்லவன் கேட்டான், "இதில் சித்தப் பிரமைக்கு என்ன இருக்கிறது!" என்று.

"கடாரத்தின் இளவரசியாரை நான் எப்படி அணுகுவது செய்தி சொல்ல?" என்று வினவினான் காவலன்.

"ஏன் அணுகமுடியாது?"

"முதலில் அந்தப்புரம் எங்கிருக்கிறதென்று நான் கேட்டு அறிய வேண்டும். பிறகு தேவியாரைப் பார்க்க வேண்டும். இதெல்லாம் நடக்கிற காரியமா?"

இதைக்கேட்ட பின்புதான் மெள்ள மெள்ள இளைய பல்லவன் இதயத்தில் சந்தேகம் சிறிது உதயமாயிற்று. அந்தச் சந்தேகத்தின் விளைவாகக் கேட்டான், "நீ இந்த ஊர்தானே?" என்று.

"இல்லை." மிகத் தெளிவாக வந்தது காவலன் பதில்.

"அப்படியானால் நீ...?" என்று மீண்டும் துவங்கிய கேள்வியை இளையபல்லவன் முடிக்கும் முன்னதாகவே இடைமறித்த காவலன், "நான் சோழ நாட்டவன்" என்றான்.

உண்மை நன்றாகப் பளிச்சிட்டது, இளையபல்லவன் புத்தியில். 'அநபாயர் வேண்டுமென்றே தனது காவல னொருவனை என்னைக் காக்கப் பணித்திருக்கிறார். கடாரத்தின் பணிமக்களாயிருந்தால் இளையபல்லவன் சொற்படி கேட்பார்களென்பது அநபாயருக்கா தெரியாது! நல்லது. உமது சாமர்த்தியத்தை என்னிடமே காட்டுகிறீர் இளவரசே! இருக்கட்டும் இருக்கட்டும்!' என்று உள்ளூரச் சொல்லிக்கொண்ட இளையபல்லவன், காவலனை நோக்கி, "நான் யாரென்பது உனக்குத் தெரியுமா!" என்று வினவினான்.

"தங்கள் பெயர் இந்தப் பிராந்தியங்களில் பிரசித்தமென்று நான்கு நாட்களுக்கு முன்பே தெரியும்" என்றான் காவலன்.

"நான்கு நாட்களுக்கு முன்பா!" என்று வியப்புடன் வினவினான் இளையபல்லவன்.

"ஆம்."

"அப்படியானால் நீங்கள் வந்து நான்கு நாட்கள்தான் ஆகின்றனவா?"

"ஆம்."

"இங்கு மக்கள் என்ன பேசிக்கொள்கிறார்கள் என்னைப் பற்றி?"

"தமிழர்களைக் காக்கும் வீரர் என்று சொல்கிறார்கள்."

"நீ அதை நம்புகிறாயா?"

"நம்பாதிருக்க எனக்குக் காரணமில்லை. உயிரைப் பணயம் வைத்துப் பாலூரில் நீங்கள் அநபாயர் தப்ப வசதி செய்ததாகச் சோழர் நாட்டில் பேசிக்கொள்கிறார்கள்."

"நல்லது. அப்படியானால் உன் இளவரசருக்கு உதவிய எனக்கு நீ ஓர் உதவி செய்ய முடியுமா?"

"இளவரசர் உத்தரவுக்கு மாறுபடாத எதையும் செய்கிறேன்."

இதைக் கேட்டதும் மெள்ள காவலனை நெருங்கிய இளையபல்லவன், "வீரனே! துறைமுகத்தில் கடல் புறா என்னும் மரக்கலம் இருக்கிறது.. அதில் என் நண்பன் அமீர் என்று ஒருவனிருக்கிறான். அவனை இங்கு வரச் சொல்ல முடியுமா?" என்று கேட்டான்.

"அவர் இங்கு வந்து என்ன செய்யப் போகிறார்?" என்று வினவினான் காவலன்.

"அவனுடன் சில விஷயங்கள் பேச வேண்டும் நான்."

"தங்களிடமும் யாரும் பேசக் கூடாதென்று பணித் திருக்கிறார் இளவரசர். ஆனால் ஒரு விலக்கு மட்டும் உண்டு" என்றான் காவலன்.

இளையபல்லவன் இதயத்தில் நம்பிக்கை துளிர்விட்டது. "என்ன அது?" என்று வினவினான் படைத்தலைவன்.

"வேண்டுமானால் இன்றிரவு உங்களை இளவரசர் சந்திப்பார்" என்றான் காவலன்.

இளையபல்லவன் மேற்கொண்டு ஏதும் பேசவில்லை. அந்தக் காவற் கூடத்தில் அன்றைய பொழுதைக் கழிப்பதைத் தவிர வேறு வழியில்லை என்பதைப் புரிந்து கொண்டான். ஆகவே காவலனை வெளியே போகச் சொல்லிவிட்டு அன்றையப் பொழுதை மெள்ள மெள்ளக் கழித்தான். பகலில் கொண்டுவரப்பட்ட உணவையும் மாலைக்குச் சற்று முன்பு கொண்டுவரப்பட்ட சிற்றுண்டியையும் அவன் அறவே தொடவில்லை. அநபாயன் போட்ட திட்டத்தை மாற்றாமல் தன் இஷ்டப்படி நிறைவேற்ற முடிவு செய்திருப்பதை நினைத்துப் பெரிதும் வெகுண்டான் அவன். "என்னைவிட இந்தக் கடல் பிராந்தியத்தின் மர்மங்கள் தெரியுமா இவருக்கு? என் வழியில் விட்டால் இன்னும் ஆறே மாதங்களில் ஸ்ரீவிஜயத்தை நானே பணிய வைத்து விடுவேனே! எனக்குக் கொள்ளைக்காரனெனும் பெயரைச் சோழ அரசாங்க

பூர்வமாக ஏற்படுத்தி, முடிந்தால் சமாதானமாகவும் முடியா விட்டால் போராலும் ஸ்ரீவிஜயப் பிரச்சினையைத் தீர்க்க முடிவு செய்திருக்கிறீர்களல்லவா அநபாயரே! இருக்கட்டும்! உமது திட்டம் நிறைவேறுவதை நான் பார்த்துவிடுகிறேன்" என்று உள்ளுக்குள்ளேயே குமுறிய இளையபல்லவன் குலோத்துங்கன் திட்டத்தை முறியடிக்க ஒரு வழியையும் ஏற்படுத்திக் கொண்டான்.

'நான் இந்த இடத்திலிருந்து காஞ்சனாதேவியை அபகரித்துக்கொண்டு உங்களிஷ்டப்படி தப்பிச் சென்றா லல்லவா நீங்கள் இடும் திட்டம் பலிக்கும்? இந்தக் காவற் கூடத்தை விட்டு நான் நகராவிட்டால் என்ன செய்வீர்? ஒன்று என்னைச் சிறையில் வைத்து ஜெயவர்மனுடன் சமாதானம் பேச வேண்டும். அல்லது என்னைத் துணை கொண்டு அவனுடன் போராட வேண்டும். இரண்டாலும் ஆபத்திருக்கிறது அநபாயரே! அந்த ஆபத்தை எப்படிச் சமாளிப்பீர் பார்க்கலாம். இந்த ஒருமுறை நான் உமது கட்டளையை நிறைவேற்றப் போவதில்லை. ஏன் நிறைவேற்ற வேண்டும்? சோழ நாடு சம்பந்தப்பட்டவரை நான் ஒரு கொள்ளைக்காரன். அப்படி இருக்க அரச ஆக்ஞை என்னை எப்படிக் கட்டுப்படுத்தும்? கட்டுப்படுத்தாது. ஒருக்காலும் கட்டுப்படுத்தாது,' என்று சொல்லிக் கொண்டே இளைய பல்லவன் மெள்ளச் சிரித்தான். 'காஞ்சனாதேவி, மஞ்சளழகி இருவரும் கடாரத்திலிருக்க நான் காஞ்சனாதேவியை மட்டும் தூக்கிச் செல்வானேன்?' என்று தன்னைக் கேட்டுக் கொண்டான். ஒருவேளை தான் கண்டது பகற் கனவா யிருக்குமோ என்ற யோசனைகூடத் தோன்றியது அவனுக்கு. சூரிய வெளிச்சத்தில் கனவு காண முடியாதென்ற முடிவுக்கு வந்த அவன் மஞ்சளழகி அந்த அரண்மனையில் தானிருக்கிறா ளென்பதைத் தீர்மானித்துக் கொண்டதன்றி அங்கு அவள் வரவேண்டிய அவசியத்தையும் அறிய முடிவு செய்தான். ஆகவே கடாரத்தை விட்டு நகருவதில்லை என்று தீர்மானித்துக்கொண்ட இளையபல்லவன் மாலைப்

பொழுதையும் இரவையும்கூட மகிழ்ச்சியுடன் வரவேற்றான். இரவு அந்தக் காவற் கூடத்திலும் ராஜோபசாரம் நடந்தது அவனுக்கு. பணிமக்கள் உணவும் பாலும் பழமும் கொண்டு வந்து வைத்தார்கள். அவற்றை அவன் உண்டபின் அந்த அறை மூலையில் அகிற் புகையையும் போட்டார்கள். அகிற் புகை அளித்த சுகந்தத்தை நாசியில் நன்றாக இழுத்துப் பஞ்சணையில் படுத்த இளையபல்லவன், தான் செய்த முடிவின் விளைவாகப் பரமதிருப்தியுடன் உறங்கினான். கண்களை விழித்தபோது வெற்றியளித்த மகிழ்ச்சியுடன் விழித்தான். விழித்த பின்புதான் புரிந்துகொண்டான் தான் அடைந்தது வெற்றியல்ல என்பதை. பஞ்சணையில் அவனருகே உட்கார்ந்திருந்தாள் காஞ்சனாதேவி. “வேண்டாம். எழுந்திருக்காதீர்கள்” என்று உதிர்ந்தன அவள் உதடுகளி லிருந்து இனிய சொற்கள். அவள் மலர்க்கரம் அவன் நுதலை லேசாகத் தடவியது!



அத்தியாயம் 40

# உண்மையைச் சொல்

பஞ்சணை முகப்பில் உட்கார்ந்திருந்த கடாரத்து அஞ்சுகம் எழுந்திருக்க முயன்ற தன்னை, "வேண்டாம் எழுந் திருக்காதீர்கள்" என்று கூறியதன்றி, தன் கையால் மெல்ல நுதலைத் தடவியதும், தன்னை அநபாயன் ஏமாற்றி விட்டா னென்பதைப் புரிந்துகொண்ட இளையபல்லவன் பெரும் பிரமிப்படைந்து சுற்றுமுற்றும் தன் கண்களைச் சுழல விட்டான். கொஞ்ச நஞ்சமிருந்த சந்தேகத்தையும் கண்கள் தீர்த்து வைத்தன. அறையின் மரத்தூண்களிலிருந்தும் அமைப்பிலிருந்தும் தானிருப்பது கடாரத்தின் காவற் கூடமல்ல என்பதையும், கடல் புறாவின் தனது சொந்த அறையே என்பதையும் உணர்ந்து கொண்டான் இளைய பல்லவன். ஒரே சீராகச் சென்று கொண்டிருந்த மரக் கலத்தின் ஆட்டமும் கொஞ்ச நஞ்சமிருந்த சந்தேகத்தைத் தீர்த்து வைத்தது படைத்தலைவனுக்கு. ஏதோ தந்திரத்தால் அநபாயன் தன்னைக் கடல் புறாவுக்கு அனுப்பிவிட்டதைச் சந்தேகமற உணர்ந்து கொண்டதும் கோபத்தின் வசப்பட்ட இளையபல்லவன் காஞ்சனாதேவியின் கையை அகற்றி யெறிந்து பஞ்சணையிலிருந்து எழுந்திருக்க முயன்ற போது தான் அவனுக்கு முழு உண்மை புலப்பட்டது. தலை பெரும் பாறைபோல் கனத்ததால் எழுந்திருக்க முடியாமல் மீண்டும் பஞ்சணைத் தலையணையில் தலையைத் தொப்பென்று போட்ட இளையபல்லவன் முகத்தில் கோபத்தின் சாயை உச்சஸ்தாயியை அடைந்தது. அந்தக் கோபத்தைக் கவனித்த காஞ்சனாதேவி துயரம் தோய்ந்த புன்முறுவலொன்றை வெளியிட்டு, "எழுந்திருக்க முயலாதீர்கள். உங்கள் உடல்நிலை சரியாகவில்லை," என்று அவனைத் தடுத்துப் படுக்க வைத்துத்

தலையை லேசாக அழுத்தவும் செய்தாள். அத்துடன் இடது கையை அவன் உடலுக்குக் குறுக்கே கொடுத்து அவன் கன்னத்தோடு தன் கன்னத்தையும் வைத்து இழைத்தாள். சாதாரண சமயமாயிருந்தால் அந்த இன்பச் சூழ்நிலையில் மெய்மறந்திருக்கக் கூடிய இளையபல்லவன் அன்று உள்ளே எழுந்திருந்த கோபாக்கினியால் அவள் கையை எடுத்து அப்புறம் எறிந்தான். அதற்கும் கடாரத்துக் கட்டழகி மசியாமல் கன்னத்தை இழைத்துக்கொண்டே கேட்டாள், "ஏன் என்னிடம் இத்தனை கோபம்?" என்று.

இளையபல்லவன் அவள் தலையைத் தூக்கிவிட்டுச் சரியாக உட்கார அவளைக் கட்டாயப்படுத்தினான். அதன் விளைவாக எழுந்து உட்கார்ந்த காஞ்சனாதேவியை இளைய பல்லவன் சுடுவிழிகள் நோக்கின. "நீ எப்பொழுது வந்தாய் இங்கே?" என்ற அவன் கேள்வியிலும் அதிக உஷ்ணம் இருந்தது.

அந்த உஷ்ணக் கேள்விகூடக் காஞ்சனாதேவியின் புன்முறுவலை மாற்றவில்லை.

"இன்று விடியற்காலையில் வந்தேன்," என்று சர்வ சாதாரணமாகச் சொன்னாள் அவள்.

இளையபல்லவன் விழிகள் அவள் முகத்தை நன்றாக ஆராய்ந்தன. "யார் தூண்டுதலின் மீது வந்தாய்?" என்ற மற்றொரு கேள்வி எழுந்தது அந்த ஆராய்ச்சியைத் தொடர்ந்து.

இந்தக் கேள்வி காஞ்சனாதேவியின் முகத்திலும் சினத்தின் சாயையை மெல்லப் பரப்பவே அவள் சொன்னாள், "யார் தூண்டுதலும் எனக்குத் தேவையில்லை" என்று.

"அநபாயர் அனுப்பவில்லையா உன்னை இங்கு?" என்று சீறினான் இளையபல்லவன்.

காஞ்சனாதேவியின் சீற்றம் முன்னைவிட அதிகப்படவே அவள் சொன்னாள், "நீங்கள் மயக்கமாகப் படுத்திருப்ப

தாகத்தான் கேள்விப்பட்டேன். உங்களுக்குச் சித்தப் பிரமை யும் ஏற்பட்டிருப்பது எனக்குத் தெரியாது" என்று.

பெண்ணின் கோபத்துக்கு முன் ஆண் மகன் கோபம், என்ன செய்ய முடியும். ஆகவே சற்றுக் கோபத்தை அடக்கிக் கொண்ட இளையபல்லவன், அநபாயன் ஏதோ பெரும் நாடகமாடியிருக்கிறான் என்பதைப் புரிந்துகொண்டு, அதன் முழு விவரத்தையும் ஆராயத் தீர்மானித்து, "ஆமாம் காஞ்சனா, நான் மயக்கமாய் இருப்பதாக யார் சொன்னது உனக்கு?" என்று வினவினான் குரலில் சாந்தத்தை வர வழைத்துக்கொண்டு.

அந்தக் குரல் அவள் இதயத்தைத் தொடவே அவள் உள்ளத்தில் எழுந்த கோபமும் மறைந்தது. ஆகவே சொன்னாள் அவள், "என் தந்தைதான் சொன்னார்," என்று.

"உன் தந்தையா?" என்று சற்றே சந்தேகம் மண்டிய குரலில் கேட்டான் இளையபல்லவன்.

"பார்த்தீர்களா? மீண்டும் சந்தேகம் உங்களுக்கு நான் சொல்வதில்," என்றாள் காஞ்சனாதேவி.

"இல்லை. இல்லை. உன் தந்தையா சொன்னார் என்று கேட்டேன்," என்று சங்கடப்பட்டுக் கேட்டான் இளைய பல்லவன்.

"ஆம்."

"அவருக்கு யார் சொன்னது?"

"அதை நிதானித்துக் கேட்கக் கூட எனக்கு அவகாச மில்லை."

"அத்தனை அவசரமாக வந்துவிட்டாயா?"

"ஆம்," என்று சொன்ன காஞ்சனாதேவி அவனைத் தன் அழகிய கண்களில் அன்பு ததும்ப நோக்கினாள். அத்துடன் சொன்னாள், "பெண் உள்ளம் உங்களுக்கு எங்கு புரியப் போகிறது? கல்நெஞ்சம் உங்களுக்கு," என்று.

"எனக்கா? கல்நெஞ்சமா?" என்று வினவினான் இளைய பல்லவன் வியப்பு குரலில் ஒலிக்க.

"ஆம்; சந்தேகமென்ன?"

"எப்படித் தெரிந்து கொண்டாய் அதை?"

"நீங்கள் எப்பொழுது கடாரம் வந்தீர்கள்?"

"நேற்றுக் காலையில்?"

"எத்தனை மாதம் கழித்து?"

"ஆறு மாதங்களுக்குப் பிறகு."

"ஆறு மாதங்களுக்குப் பிறகு வருகிறீர்கள் கடாரத்துக்கு. அதுவும் வெகு காலையில் வருகிறீர்கள். வந்து அன்றிரவு வரை என்னை வந்து பார்க்கக்கூடத் தோன்றவில்லை உங்களுக்கு. இன்று விடிவதற்கு நான்கு நாழிகைகளுக்கு முன்பு என் தந்தை என்னை எழுப்பி நீங்கள் திடீரென நேற்றிரவு அரண்மனையில் மயக்கமாகி விட்டதாகவும் உங்களை அமீரும் வேறு இருவரும் மரக்கலத்துக்கு எடுத்துப்போய் விட்டதாகவும் கூறுகிறார். இதைக்கேட்ட என் மனம் என்ன பாடுபட்டிருக்கும்? என் உடல் தங்கியிருக்குமா அரண மனையில்?" என்று விடுவிடு என்று பேசிச் சற்றே நிறுத்திய காஞ்சனாதேவி, "உம். உம்... உங்களுக்கெங்கே தெரியப் போகிறது என் மனோநிலை? நீங்கள் மயக்கமுற்றிருப்பதைக் கேட்டதும் ஓடோடி வந்தேன். என் தந்தை தடுத்தும் கேட்காமல் ஓடி வந்தேன். துறைமுகமடைந்து அங்குள்ள படகொன்றில் ஏறி மரக்கலம் வந்தேன் இளையபல்லவரே" என்று கூறி அவனைப் பார்த்தாள் தன் கருவிழிகளால்.

இளையபல்லவன் புத்தியில் மெள்ள மெள்ள அநபாயன் திட்டம் புரியலாயிற்று. எதற்கும் அதைப்பற்றி முழுதும் தெரிந்துகொள்ள இஷ்டப்பட்டு, "உன் மீது நான் கோபித்தது தவறுதான் காஞ்சனா" என்று கூறிவிட்டுத் தலையை நகர்த்தி அவள் மலர்க்காலின் அருகே சாய்த்துக் கொண்டான்.

அவள் கை அவன் தலையை லேசாக வருடிக் கொடுத்தது. அந்தக் கையைத் தலையிலிருந்து எடுத்துத் தன் கையில்

இறுகப் பிடித்துக் கொண்டான் இளையபல்லவன். பிறகு அழைத்தான் அவளை, "காஞ்சனா?" என்று.

"உம்..." அந்தச் சப்தமே பதிலாக வந்தது காஞ்சனாதேவி யிடமிருந்து.

"நான் நேற்றுக் காலையில் வந்தேனல்லவா?"

"ஆமாம்."

"பகல் பூராவும் எங்கிருந்தேனென்று நீ ஏன் விசாரிக்க வில்லை?"

"கடல் புறாவின் தாரைகள் ஊதப்பட்ட அரை நாழிகைக்குப் பிறகு தந்தையை விசாரித்தேன். நீங்கள் இளவரசருடன் அந்தரங்க ஆலோசனையில் இருப்பதாகச் சொன்னார்."

"காவலர் யாரையும் விசாரிக்கவில்லையா?"

"விசாரித்தேன், இரண்டொருவரை. அவர்களுக்குத் தகவல் ஏதும் தெரியவில்லை. நீங்கள் இளவரசருடன் இருப்பதாகவே தெரிவித்தார்கள். பிறகு இளவரசரையும் பார்த்தேன்."

இதைக் கேட்டதும் துடித்து எழுந்திருக்க முற்பட்டு மீண்டும் பஞ்சணையில் விழுந்த இளையபல்லவன், "என்ன! இளவரசரைப் பார்த்தாயா?" என்று பெருவியப்புடன் வினவினான்.

காஞ்சனாதேவியின் கண்கள் அவன் கண்களைச் சந்திக்க சக்தியற்றதாயின. அவள் தலையைத் தாழ்த்திக் கொண்டு சொன்னாள்: "ஆம் வெட்கத்தையும் விட்டுத்தான் போய் அவரைப் பார்த்தேன்."

"எப்பொழுது பார்த்தாய்?"

"நீங்கள் வந்து சில நாழிகைகள் பொறுத்திருந்தேன். உதய காலமும் வந்துவிட்டது, ஆகவே நானே போனேன் அவரிடம். என்னைப் பார்த்ததும் உண்மையில் அநபாயர் ஆச்சரியப் பட்டிருக்க வேண்டும். அந்தப்புரத்தில் இருக்க வேண்டிய

இளவரசி காவலேதும் இல்லாமல், முன்னறிவிப்பு இல்லாமல் வந்தது பற்றி அப்படி ஏதும் ஆச்சரியப்படவில்லை அவர். சாதாரணமாக வரவேற்றார். பேசினார். பிறகு உங்களைப் பற்றி அவரே சொன்னார்..."

"அவரே சொன்னாரா? என்ன சொன்னார்?"

"அத்தனை நேரம் வரை நீங்கள் அங்குதான் இருந்த தாகவும் அப்பொழுதுதான் கடற்கரையோரம் போனதாகவும் சொன்னார்?"

"அவ்வளவுதான் சொன்னாரா?"

"இல்லை. நீங்கள் நீராடச் சென்றதாகவும் சொன்னார். மற்றும் ஏதேதோ சொன்னார்..." இந்த இடத்தில் காஞ்சனா தேவி வார்த்தைகளை விழுங்கினாள்.

"சொல், என்ன சொன்னார் சொல்," என்று துடிப்புடன் ஊக்கினான் இளையபல்லவன்.

"மஞ்சளழகி யாரென்று விசாரித்தார்."

"அப்படியா?"

"ஆம். நான் எனக்குத் தெரிந்ததைச் சொன்னேன். பிறகு அவர் மஞ்சளழகி எப்படி இருப்பாளென்று விவரித்தார். அவள் உடை, கால் சதங்கை எல்லாவற்றையும் பற்றிக் கூறினார். இதையெல்லாம் பலவர்மரிடமிருந்து அறிந்த தாகவும் கூறினார். மஞ்சளழகியின் கால்களும் பொன்னிற மஞ்சளாமே?" இதைச் சொன்ன காஞ்சனாதேவியின் குரலில் பொறாமை நிரம்பிக் கிடந்தது.

இளையபல்லவனுக்குச் சகலமும் புரிந்துவிட்டது. "அதற்காகத்தான் நீயும் மஞ்சளழகி போல் கால்களுக்கு மஞ்சள் பூசி சதங்கையணிந்து கடல் நீராட ஓடினாயா!" என்று வினவினான் கோபத்துடன்.

காஞ்சனாதேவிக்கு ஏற்பட்ட வியப்பில் அவள் இளைய பல்லவன் குரலில் ஒலித்த கோபத்தைக்கூடக் கவனிக்க வில்லை. "நான் ஓடினது உங்களுக்குத் தெரியுமா?" என்று வியப்பு குரலில் பெரிதும் பிரதிபலிக்கக் கேட்டாள் அவள்.

"தெரியாமலென்ன? உன் கோலத்தைப் பார்க்கவும் பார்த்தேன்."

"எங்கு?"

"கடல் அலைகளுக்கருகில்."

"பார்த்தீர்களா?"

"பார்த்தேன். நந்தவனக் குறுக்குப் பாதை ஓரத்தில் அளித்த காட்சியை."

"பார்த்துமா என்னை அழைக்கவில்லை நீங்கள்? எங்கு ஒளிந்து கொண்டிருந்தீர்கள்? அந்தக் கோலத்தில் என்னைப் பார்க்க ஆசையாய் இருந்ததா உங்களுக்கு? அப்படியானால் மஞ்சளழகியிடம் உங்களுக்கு-" என்று குழைந்தாள் காஞ்சனா தேவி. இளையபல்லவன் தன்னை மறைந்து நின்று பார்த்து ரசித்திருக்க வேண்டும் என்ற நினைப்பு அவளுக்குப் பேரின்பத்தை அளித்தது. அந்த இன்பத்தில் மஞ்சளழகி யின் அழகு தன் அழகைவிட அத்தனை உயர்ந்ததா என்ற எண்ணமும் பொறாமையும் கலந்து உறவாடின. அந்த உணர்ச்சிகள் பலவும் அவள் முகத்திலும் தாண்டவ மாடின.

அவை எதையும் கவனிக்கும் நிலையில் இல்லை இளைய பல்லவன். அநபாயன் மனித உணர்ச்சிகளை எத்தனை தூரம் புரிந்துகொண்டிருக்கிறான் என்பதை உணர்ந்ததால் பெரும் வியப்பும் அவன் தன்னையும் காஞ்சனாதேவி உட்பட எல்லோரையும் கைப்பாவைகளாக்கிக் கொண்டு விட்டானே என்பதால் ஏற்பட்ட கோபமும் அவன் உள்ளத்தே கலந்து எழுந்து கொண்டிருந்தன. ஆகவே அவன் காஞ்சனாதேவி கேட்க முற்பட்ட பொறாமைக் கேள்விக்குப் பதில் கூறாமல், "நந்தவனத்தை அடுத்து நிற்கும் அறை எது, காவற் கூடமா?" என்று வினவினான்.

காஞ்சனாதேவி கலகலவென நகைத்தாள். "உங்கள் கேள்வி நன்றாயிருக்கிறது!" என்று அந்த நகைப்பின் ஊடே கேலியாகவும் பேசினாள்.

"என்ன விசித்திரம் இதில்?" என்று கேட்டான் இளைய பல்லவன்.

அந்தப்புர நந்தவனத்துக்கருகில் காவற் கூடத்தை யாராவது அமைப்பார்களா? ஒருவேளை உங்கள் நாட்டில் அப்படிப் பழக்கமா?" என்று வினவினாள் காஞ்சனாதேவி கேலிக் குரலை மாற்றாமலே.

இளையபல்லவன் அவள் குத்தலாகக் கேட்ட கேள்வியை அசட்டை செய்தே பேசத் தொடங்கி, "அப்படியானால் அதை அடுத்திருக்கும் அறை யாருடையது?" என்று வினவினான்.

"சாதாரணமாக அந்தப்புரப் பணிசெய்யும் பெண்கள் விடுதி அது. அங்கு தோட்டத்தை அடுத்திருக்கும் அறை, அந்தப்புர மகளிர் நீராட்டத்துக்குப் பிறகு ஆடை புனையும் அறை" என்றாள் காஞ்சனாதேவி.

"இப்பொழுதும் அது பணி மக்களிடம்தான் இருக்கிறதா?"

"இல்லை. அநபாயர் வந்ததிலிருந்து அவர் வீரர்கள் அங்கு தங்குகிறார்கள்."

இளையபல்லவன் சில விநாடிகள் சிந்தனையில் இறங்கினான். பல விஷயங்கள் அவனுக்கு வெட்ட வெளிச்சமாகி விட்டன. தன்னை எப்படியும் கடாரத்திலிருந்து கிளப்பி விட அநபாயன் சகல ஏற்பாடுகளையும் செய்துவிட்டானென்பதையும் உணர்ந்துகொண்டான் இளையபல்லவன். பிறகு மீண்டும் ஒரு கேள்வி கேட்டான் காஞ்சனாதேவியை, "நான் மயக்கமுற்றது உனது தந்தைக்கு எப்படித் தெரியும்?" என்று.

"அநபாயரே அவரிடம் சொன்னாராம்" என்றாள் காஞ்சனாதேவி.

"குணவர்மரை அத்தனை விடியற்காலையில் இளவரசர் எழுப்பினாரா?"

"ஆம், காவலனை விட்டு அழைத்து வரச்சொல்லி விஷயத்தைக் கூறினாராம்."

"என்ன அவ்வளவு அவசரமாம் அவருக்கு?"

"அரண்மனையில் உங்களுக்கு நேர்ந்த விபத்தை என் தந்தைக்குத் தெரிவிக்க வேண்டியது தன் கடமையென்று கூறினாராம்."

"ஓகோ!" என்று கூறிக்கொண்ட இளையபல்லவன் மேற் கொண்டு ஏதும் கேட்கவில்லை. பல விநாடிகள் மௌனம் சாதித்தான். பிறகு காஞ்சனாதேவியை நோக்கி, "காஞ்சனா, நீ போய் அமீரை அழைத்துவா" என்றான்.

அவன் குரலில் கண்டிப்பு இருந்ததைக் கவனித்த காஞ்சனாதேவி பஞ்சணையைவிட்டு எழுந்திருந்து வெளியே சென்றாள். அடுத்த சில விநாடிகளுக்கெல்லாம் உள்ளே நுழைந்த அமீரின் முகம் மகிழ்ச்சியால் விகசித்தது. "இப்பொழுதுதான் எனக்கு உயிர் வந்தது இளையபல்லவரே!" என்று மகிழ்ச்சி துலங்கக் கூறிப் பெருமூச்சும் விட்டான்.

"அருகே வா அமீர்!" என்று தீனமான குரலில் அழைத்தான் இளையபல்லவன்.

அமீர் அருகே வந்தான். இளையபல்லவன் பஞ்சணை யில் தன் பக்கத்தில் உட்காரும்படி சைகை செய்தான். அமீர் சற்றுத் தயங்கிவிட்டு உட்கார்ந்தான். "அமீர் எத்தனை நாழிகை களாக நான் மயக்கமாயிருக்கிறேன்? எப்பொழுது மயக்க மடைந்தேன்?" என்று வினவினான் சாவதானமாக.

"எப்பொழுது மயக்கமுற்றீர்களோ தெரியாது. இளவரசரிடமிருந்து தகவல் வந்து அரண்மனை சென்றேன். நீங்கள் மயக்கத்துடன் படுத்திருந்தீர்கள். சேந்தன் மரக்கலத்தில் இருந்தான். ஆகவே இங்கு கொண்டு வந்தேன் உங்களுக்குச் சிகிச்சை செய்ய" என்றான்.

"எந்த இடத்திலிருந்து கொண்டு வந்தாய்?"

"அரண்மனையிலிருந்துதான்."

"அரண்மனையில் எங்கிருந்து?"

"அநபாயர் அறையிலிருந்து. உங்கள் பஞ்சணைகள் அக்கம் பக்கத்தில் இருந்தன."

"அரண்மனையிலேயே எனக்கு ஏன் சிகிச்சை நடக்கவில்லை?"

"எனக்கெப்படித் தெரியும்?" என்றான் அமீர்.

அடுத்த விநாடி அமீர் பெரிதாக அலறினான். "விடுங்கள் இளையபல்லவரே! விடுங்கள்!" என்ற அமீரின் பயங்கர ஒலி அந்த அறை பூராவும் பரவியது. இளையபல்லவன் இரு கைகளும் அமீரின் கழுத்தை நெரித்துக் கொண்டிருந்தன. "சொல்! உண்மையைச் சொல்" என்ற சீற்றம் மிகுந்த இளைய பல்லவன் குரலொலிகள் அமீரின் பயங்கர ஒலிகளுடன் இணைந்து அந்த அறையின் அமைதியைச் சரேலென ஊடுருவின.



அத்தியாயம் 41

# புதுக் கதை

பெரிய சரீரத்தையும் நன்றாகப் புடைத்த கதுப்புக் கன்னங்களையும், சிவப்பு ரேகைகள் ஓடியதால் பயங்கரமா யிருந்த பெரு விழிகளையும் பெற்று சாட்சாத் ராட்சதன் போலிருந்த அமீர், "விடுங்கள் இளையபல்லவரே விடுங்கள்" என்று அலறிய போது, அந்த அலறலில் பயத்துடன் ஓரளவு வியப்பும் கலந்திருந்தது. இளையபல்லவன் வாள் சுழற்றுவதில் இணையற்றவன் என்பதை அமீர் அறிந்திருந்தானானாலும், படைத்தலைவனின் மெல்லிய கைகளுக்குத் தன் பெருங் கழுத்தை நெரிப்பதற்கும் தன்னை அசையவிடாமல் திணற அடிப்பதற்குமான வலிமை இருக்குமென்பதை அன்றுவரை அறியாததால் வியப்பின் ஒலி, பயத்தின் ஒலியைவிடச் சற்று அதிகமாக ஓங்கி நின்றது அரபு நாட்டான் அலறலில். வெகு தந்திரமாகத் தன்னை அருகில் உட்காரச் சொல்லிக் குனியவும் கூறிச் சரேலென இளையபல்லவன், தன் மென்னியைப் பிடித்துவிட்டவுடன் விடுவிடுத்துக் கொண்டு எழுந்திருக்க முயன்றும் முடியாத அமீருக்கு, "விடுங்கள் விடுங்கள்" என்று அலறுவதைத் தவிர வேறு வழியில்லாது போயிற்று. அத்தனை அலறலுக்கும் மசியாத இளையபல்லவன், "உண்மையைச் சொல்" என்ற வார்த்தைகளை ஒரு முறைக்கு இரு முறையாகத் திருப்பினான். பஞ்சணையை விட்டு அவனால் தலையைக் கிளப்ப முடியவில்லை. ஆனால் படுத்தவாறே இரும்புப் பிடியில் அமீரைத் திணற வைத்து வேலினும் கூர்மையான தன் விழிகளை அரபு நாட்டான் பெருவிழிகளுடன் உறவாட விட்டான் படைத்தலைவன். "உண்மையைச் சொல்" என்ற வார்த்தைகள் உதடுகளிலிருந்து உதிர்ந்தபோது மிகுந்த கடுமையுடன் உதிர்ந்தன.

இளையபல்லவனின் பார்வையிலிருந்த கண்டிப்பையும் சொற்களிலிருந்த கடுமையையும் கவனித்த அமீர் தன்னால் பேச முடியவில்லை என்பதைக் குறிப்பிடத் தன் ஒரு கையால் நெஞ்சுக் குழியைத் தொட்டுக் காட்டினான். அந்தக் குறிப்பை உணர்ந்த இளையபல்லவனும் மெள்ளத் தன் பிடியைத் தளர்த்தித் தொண்டையிலிருந்து சொற்கள் லேசாக வர வழி விடவே, சற்று சிரமத்துடன் கூறினான் அமீர், "நடந்ததைச் சொல்கிறேன். விட்டுவிடுங்கள்" என்று. இளையபல்லவன் தன் கைகளிரண்டையும் அமீரின் கழுத்திலிருந்து நீக்கி விட்டுத் தலை மிகவும் கனத்ததால் அதன்மீது ஒரு கையை வைத்து அழுத்திக்கொண்டு, "சொல் அமீர்" என்று உத்தர விட்டான்.

அமீர் சற்றுத் தன்னைச் சரிப்படுத்திக் கொள்ளப் பஞ்சணையில் ஒருமுறை லேசாக அசைந்து உட்கார்ந்தான். பிறகு இரு கைகளாலும் தொண்டையைச் சிறிது தடவிப் பிடித்துவிட்டுக் கொண்டான். அத்துடன், "அப்பா! என்ன முரட்டுக் கைகள் உங்களுக்கு!" என்று ஆச்சரியத்துடன் சொல்லவும் செய்தான்.

இளையபல்லவன் இதழ்களில் மெல்லப் புன்னகை உதயமாயிற்று. "முரடர்களுக்கு முரட்டுத்தனம்தான் புரியும் அமீர்" என்று சுட்டியும் காட்டினான் படைத்தலைவன்.

புரிகிறது என்பதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்த அமீர் இளையபல்லவனை நோக்கி, "நான் அநபாயரை நேற்று இருமுறை சந்தித்தேன்..." என்று கூறிவிட்டு மேலே விஷயத்தைச் சொல்லத் தயங்கினான்.

அந்தத் தயக்கத்தைக் கவனித்த இளையபல்லவன் அதன் காரணத்தையும் ஊகித்துக் கொண்டானானாலும் தன் ஊகத்தைப் பற்றி ஏதும் சொல்லாமல், "இரு முறையா!" என்று ஆச்சரியத்துடன் கேள்வியொன்றை வீசினான்.

"ஆம். இருமுறை!" என்றான் அமீர் மேலும் தயக்கத்துடன்.

"இருமுறை வந்தும் என்னை ஏன் சந்திக்கவில்லை?" என்று வினவினான் இளையபல்லவன்.

"இரண்டாம் முறை சந்தித்தேன்" என்று இழுத்தான் அமீர்.

அந்த இரண்டாம் முறை எதுவென்பது இளையபல்லவனுக்கு நன்றாகப் புரிந்தே இருந்தபடியால், "நான் மயக்கமாயிருந்தபோது சந்தித்தது இரண்டாம் முறையா?" என்று வினவினான்.

"ஆம்." அமீரின் பதில் சட்டென்று வந்தது இம்முறை.

"அப்பொழுது நான் அநபாயர் அறையில் அவர் பஞ்சணைக்குப் பக்கத்தில் உள்ள பஞ்சணையில் படுத்திருந்தேனா?"

"ஆம்."

"நீயே பார்த்தாயா?"

"ஆம், என் இரு கண்களாலும் பார்த்தேன்."

"பிறகு இரண்டு மாலுமிகளை வரவழைத்து என்னைத் தூக்கிக்கொண்டு இங்கு வந்துவிட்டாய். அப்படித்தானே?"

இதற்கு அமீர் சொன்ன பதில் பெரு வியப்பை அளித்தது இளையபல்லவனுக்கு. "இல்லை" என்று பதில் கூறினான் அமீர்.

இளையபல்லவன் இமைகள் ஆச்சரியத்தால் நுதலின் மேற்புறத்தை நோக்கி எழுந்தன. "இல்லையா! என்ன இல்லை?" என்ற கேள்வியிலும் வியப்பின் ஒலி நன்றாகத் தெரிந்தது.

"மாலுமிகளை வரவழைத்து நான் தங்களைத் தூக்கிக் கொண்டு வந்ததாகக் குறிப்பிட்டீர்களே, அது இல்லை" என்று கூறினான் அமீர்.

"அப்படியானால் மாலுமிகள்..." என்று கேட்க முயன்ற இளையபல்லவன் சொற்களை இடையிலேயே வெட்டிய

அமீர், "மாலுமிகளை நான் வரவழைக்கத் தேவையில்லை, என்னுடன் இருவரை அழைத்துக்கொண்டே வந்திருந்தேன்" என்றான்.

உண்மை மெள்ள மெள்ள விரிந்தது இளையபல்லவன் புத்தியில். "முன்னேற்பாட்டுடனேயே அநபாயரைச் சந்தித்தாயா?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"ஆம்."

"நான் மயக்கமாயிருப்பேனென்று உனக்கு முன்கூட்டித் தெரியுமா?"

"தெரியும்."

"இளவரசர் அறையிலிருப்பேனென்பதும் தெரியும். மயக்கமாயிருப்பேனென்பதும் தெரியும்?"

"ஆம் தெரியும்" என்றான் சற்றுச் சங்கடத்துடன் அமீர்.

"எப்படித் தெரியும்?" இளையபல்லவன் கேள்வியில் கோபத்தின் சாயை பூரணமாகத் தெரிந்தது.

அமீரின் பெருவிழிகள் சிறிது சங்கடத்துடன் இளைய பல்லவனை நோக்கின. பிறகு தயங்கித் தயங்கி உதிர்ந்தன அமீரின் பெரு உதடுகளிலிருந்து சொற்கள். "முதல் தடவை நான் அநபாயரைச் சந்தித்தேன் அல்லவா?" என்று வினவினான் தயக்கத்துடன் அமீர்.

"ஆமாம், சந்தித்தாய்" என்றான் இளையபல்லவன் விஷயத்தை ஊகித்துக்கொண்ட தோரணையில்.

"அப்பொழுதே தீர்மானமாயிற்று..." என்று அமீர் தயங்கினான்.

"எது?"

"நீங்கள் மயக்கமடைய வேண்டுமென்பது."

"அப்படியா?"

"ஆம்."

"யார் செய்தது அந்தத் தீர்மானத்தை?"

"அநபாயர்."

இளையபல்லவன் பார்வையில் திடீரென உஷ்ணத்தின் ஒளி பளிச்சிட்டது. "அதற்கு நீ உதவினாய்?" என்ற இளைய பல்லவன் குரலில் பெரும் சீற்றமிருந்தது.

"ஆம்" என்று ஒப்புக்கொண்ட அமீர் மெள்ள பஞ்சணை முகப்பில் இருந்து எழுந்து நின்றுகொண்டு இளைய பல்லவனை நோக்க இஷ்டம் இல்லாமல் கூரைமீது கண்களைத் துழாவ விட்டான்.

"எப்படி உதவினாய்?" என்று எழுந்தது இளையபல்லவன் கேள்வி மீண்டும் சீற்றத்துடன்.

அமீர் தனது இரு கைகளையும் பின்னால் கட்டிக் கொண்டு சிறிது நேரம் அந்த அறையில் உலாவினான். பிறகு மெள்ளப் பதில் சொல்லத் துவங்கி, "முதலில் அநபாயர் கடாரம் வந்திருப்பதே எனக்குத் தெரியாது. இங்குள்ள சோழநாட்டுக் கப்பல்களைப் பார்த்ததும் யாரோ சோழ நாட்டுப் பிரமுகர் வந்திருப்பதாகத்தான் எண்ணினேன். குணவர்மனின் அரண்மனை சென்ற பின்புதான் இளவரசர் வந்திருப்பது எனக்குத் தெரியும்" என்றான்.

இதற்கு இளையபல்லவன் பதிலேதும் சொல்லவில்லை. அமீரே மேற்கொண்டு சொன்னான்: "அநபாயரைக் கண்டதும் எனக்குப் பெரும் வியப்பாயிருந்தது. எதையும் ஊகிக்கும் திறன் வாய்ந்த அநபாயர் என் வியப்பை விநாடி நேரத்தில் ஊகித்தார். ஆகவே தாம் ஸ்ரீவிஜயம் வந்துள்ள காரணத்தை நான் கேட்காமலே விளக்கினார். தமது திட்டங்களுக்கு சோழநாட்டு அபிலாஷைகளும் நிறைவேற வேண்டுமானால் உங்களை அக்ஷயமுனைக்கு அழைத்துச் செல்ல வேண்டு மென்றும் கூறினார். அவர் உத்தரவுக்கு நீங்கள் மாறுதல் சொல்ல மாட்டீர்களென்று கூறினேன். நீங்களிருவரும் சந்தித்த போது நடந்த விஷயங்களை விவரித்தார் அவர். அப்புறம்..." இந்த இடத்தில் சற்று நிதானித்தான் அமீர்.

"உம் சொல்" என்றான் இளையபல்லவன், முழு உண்மையை அறிய விரும்பி.

"அநபாயர் என் உதவியை நாடினார்."

"என்ன உதவியை நாடினார்?"

"உங்களை இஷ்டவிரோதமாகவாவது அக்ஷயமுனைக்குக் கொண்டு செல்ல வேண்டுமென்றார்."

"அதற்கு இருவரும் வழிவகுத்தீர்களாக்கும்?"

"இருவரும் என்று சொல்வது தவறு. அநபாயரே வழியைச் சொன்னார்."

"என்ன வழியோ?"

"உங்களுக்குச் சில மணி நேரம் மயக்கம் தர மருந்து ஏதாவது இருக்கிறதா என்று வினவினார்."

இதைக்கேட்ட இளையபல்லவன் விழிகளில் கோபத்துடன் வியப்பும் ஒளிவிட்டது. "உன்னை ஏன் கேட்டார் அவர்? நீ என்ன வைத்தியனா?" என்று கேட்ட கேள்வியில் வியப்பு ஒலித்தது.

அமீரின் முகத்தில் மெள்ள உவகை விரிந்தது. அதில் பெருமையும் கலந்திருந்தது. "நான் அரபு நாட்டான் என்பதை மறந்துவிட்டீர்கள் போலிருக்கிறது?" என்றான் அமீர் குரலில் விஷமம் லேசாகத் துளிக்க.

"அரபு நாட்டுக்கும் நீ வைத்தியனாவதற்கும் என்ன சம்பந்தம்?"

"அரபுநாட்டில் வளர்ந்திருக்கும் வைத்தியம் வேறெந்த நாட்டிலும் கிடையாது."

"ஓகோ!"

"ஆம், இளையபல்லவரே! மயக்க மருந்துகள், வசிய மருந்துகள், இதர விஷசாதி மூலிகைகள் எல்லாம் அரபு நாட்டில் மிக அதிகம். அங்குள்ள ஒவ்வொருவருக்கும் இந்த மூலிகைகளைப் பற்றி ஓரளவு தெரியும்."

"நீயும் அதில் வல்லவனா?"

"வல்லவன் என்ற சொல் மிகவும் பொருந்தும்."

"அப்படியா?"

"வியாதியை அகற்றும் வைத்தியத்தில் எனக்கு அவ்வளவு பரிச்சயமில்லை" என்ற அமீர், விஷமமாகப் புன்முறுவல் செய்தான்.

"வியாதியைக் கொடுக்கும் வைத்தியத்தில் நீ நிபுணன் போலிருக்கிறது?" என்று வினவினான் இளையபல்லவன் இகழ்ச்சியுடன்.

"ஆம் இளையபல்லவரே! அரை நிமிஷத்தில் தீர்த்து விடக்கூடிய விஷத்திலிருந்து அரை நிமிஷம்வரை மயக்கம் தரும் விஷம் வரையில் கையிலிருக்கிறது" என்றான் அமீர் குதூகலத்துடன்.

"அதில் எதை எனக்குக் கொடுத்திருக்கிறாய்?"

"உங்களுக்குக் கொடுத்திருக்கிறது மிக அற்ப வஸ்து."

"அப்படியா?"

"ஆம். இன்னும் இரண்டே நாட்களில் உங்கள் பூரண வலு திரும்பிவிடும்."

"இதுதான் அற்ப வஸ்துவா?"

"ஆம்."

"அதை எப்படி எனக்குக் கொடுத்தாய்? பாலில் கலந்தா?"

"இல்லை."

"வேறெப்படி?"

இந்தக் கேள்விக்கு உடனடியாகப் பதில் சொல்ல முடியாத அமீர் சற்று யோசித்தான். பிறகு சொன்னான்: "எதையும் உணவில் கலக்கக் கூடாதென்று அநபாயரே சொன்னார்" என்று.

"அது உனக்குச் சம்மதமில்லை போலிருக்கிறது!" இளைய பல்லவன் கேள்வியில் இகழ்ச்சி நன்றாக ஒலித்தது.

"எனக்குச் சம்மதம். வயிற்றுக்குள் செலுத்தும் விஷத்தை மாற்றுக் கொடுக்காமல் அகற்ற முடியாது. ஆனால்..." என்ற அமீர் மீண்டும் தயங்கினான்.

"சொல்." இளையபல்லவன் உத்தரவு திடமாக வெளி வந்தது.

"காற்றில் சுவாசிக்கப்படும் விஷத்தைக் காற்றே அகற்றி விடுகிறது" என்றான் அமீர்.

இளையபல்லவன் இதயத்தில் உண்மை பூரணமாகப் பளிச்சிட்டது. "அப்படியானால்—" என்று ஏதோ சொல்லத் துவங்கினான்.

"நீங்கள் சுவாசித்தது, ஆனந்தப்பட்டு உள்ளே இழுத்தது, அகிற்புகை மட்டுமல்ல..." என்றான் அமீர் இடைமறித்து.

"என்ன?"

"ஆம். அதில் அகிற்பொடியுடன் வேறொரு பொடியும் கலந்திருந்தது."

உண்மையை வெளிப்படுத்திய அமீர் தலையைக் குனிந்து கொண்டான். அதுவரை இளையபல்லவன் முகத்தி லிருந்த வியப்பு மறைந்தது. கோபம்கூட மறைந்துவிட்டது. மெள்ள மெள்ளப் பூரணமாக வெறுப்பும் கசப்பும் உதயமாயின. இளையபல்லவன் முகபாவம் மாறிவிட்டதைக் கவனித்தான் அமீர். அதற்குக் காரணமும் அவனுக்கு வெட்ட வெளிச்சமாகத் தெரிந்தது. அநபாயன் உத்தரவுக்குக் கட்டுப்பட்டு உடந்தையாயிருந்து தன்னைக் கடல் புறாவுக்குக் கொண்டு வந்துவிட்டதை இளையபல்லவன் விரும்பவில்லை என்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்டான் அமீர். இருப்பினும் பூரணத் திட்டத்தை வெட்ட வெளிச்சமாக்கி

விடத் தீர்மானித்த அந்த அரபு நாட்டு மாலுமி, “உங்கள் அறையில் அகிற்புகையுடன் அதன் மணத்தைக் கெடுக்காத மயக்கப்பொடியைப் போட்டு விடுவதாகவும் கூறினார் அநபாயர். மயக்கமடைந்ததும் உங்களைத் தன் அறைக்கே கொணர்ந்து விடுவதாகவும் அங்கிருந்து உங்களைக் கடல் புறாவுக்குக் கொண்டு சென்று அக்ஷயமுனைக்கு மரக்கலத்தைச் செலுத்தவும் உத்தர விட்டார் இளவரசர். அதன்படிதான் சகலமும் நடந்தது” என்றான்.

இளையபல்லவன் அதற்குமேல் சிந்தனையில் ஆழ்ந்தான். ஏதேதோ எண்ணங்கள் அவன் புத்தியில் வலம் வந்தன. அவற்றின் காரணமாகப் பல விநாடிகள் மௌனமே சாதித்த இளையபல்லவன் கடைசியில் கேட்டான், “ஒரு சந்தேகம் அமீர்” என்று.

அமீரின் நிலை பெரிதும் சங்கடமாயிருந்தது. இளையபல்லவன் என்ன கேட்கப் போகிறான் என்பதை முன்கூட்டி ஊகித்துக் கொண்டான் அவன். ஆகவே படைத் தலைவன், “அமீர்! நீ யாருக்கு உபதலைவன்?” என்று வினவியது எந்த விதத்திலும் வியப்பை அளிக்கவில்லை அவனுக்கு.

“உங்களுக்குத்தான்” என்று சர்வ சாதாரணமாகவே பதில் சொன்னான் அமீர்.

“தலைவனுக்கெதிராக உபதலைவன் சதிசெய்வது கடல் பிராந்தியத்தில் அனுமதிக்கப்படுகிறதா?” என்று இரண்டாவது கேள்வியையும் வீசினான் படைத்தலைவன்.

“இல்லை.” அமீரின் பதிலில் உறுதி இருந்தது.

“சதி செய்வதற்குத் தண்டனை...”

“என்னவென்பது எனக்குத் தெரியும். கப்பல் மரத் தண்டிலேயே கட்டித் தூக்கிலிடுவார்கள்.”

இளையபல்லவனின் அடுத்த கேள்வி பயங்கரமாயிருந்தது. "உனக்கு அந்தத் தண்டனையை விதித்தாலென்ன?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"விதித்தால் ஏற்கத் தயாராயிருக்கிறேன்." அமீரின் பதிலில் சந்தேகம் ஏதுமில்லை.

"தயாராயிருக்கிறாயா?"

"ஆம்."

"உயிரின் மீது உனக்கு ஆசையில்லையா?"

"எப்பொழுதும் அதை ஒரு பொருட்டாக நான் கருதிய தில்லை."

அமீர் இதை மிகத் திடமாகச் சொன்னான். அத்துடன் மேலும் கூறினான், "உங்களை அறியுமுன்பே நான் அநபாயரை அறிவேன். கலிங்கத்தில் அவர் என்னைக் காப்பாற்றிய முறைகள் பல. தன் உயிரைக்கூட லட்சியம் செய்யாமல் பலமுறை காத்திருக்கிறார். வாணிபத்தில் எத்தனையோ முறை உதவியிருக்கிறார். அவர் கட்டளைக்குப் படியாத அமீர் உயிர்வாழத் தகுதியற்றவன். அவர் கட்டளையின் விளைவாக இந்த உயிர் போகுமானால் அதைப்பற்றி எனக்குப் பெருமைதான் இளையபல்லவரே" என்று.

அமீரின் சொற்கள் மிகுந்த உணர்ச்சியுடன் உதிர்ந்தன. அவன் உணர்ச்சியையும் உறுதியையும் கண்ட இளைய பல்லவன் பெரும் பிரமிப்பு அடைந்தான். "என்னைத் தூக்கி விடுவதானால் இடலாம்" என்று பட்டென்று முகத்தில் அடித்தாற்போல் கூறிவிட்டு அமீர் வெளியே சென்றது அளவிட முடியாத ஆச்சரியத்தையும் அளித்தது அவனுக்கு.

அடுத்த இரண்டு நாட்கள் காஞ்சனாதேவி, கண்டியத் தேவன் இருவரைத் தவிர வேறு யாருடனும் பேசாமலும் சிந்தனையிலுமே கழித்தான் இளையபல்லவன். ஆனால் மூன்றாவது நாள் கடல் புறாவின் தளத்துக்கு உலாவ

வந்தபோது இளையபல்லவன் பழைய இளையபல்லவ னாகவே காட்சியளித்தான். பழைய கதையை அறவே மறந்துவிட்டதாகத் தோன்றியது அனைவருக்கும். ஆனால் அமீரின் மனத்தில் மட்டும் பெரும் சந்தேகம் எழுந்திருந்தது. இளையபல்லவன் எதையும் மறக்கக் கூடியவனல்ல என்பதையும் அவன் மனத்தில் ஏதோ யோசனை உருவாயிருக்க வேண்டுமென்றும் சந்தேகித்தான் அமீர். அந்தச் சந்தேகம் ஊர்ஜிதமாவதற்கு வேண்டிய அறிகுறிகள் மெள்ள மெள்ளத் தோன்றவும் தொடங்கின. பழைய கதை போய் புதுக்கதை பிறந்துவிட்டதை உணர்ந்த அமீர் என்ன செய்வது என்றறியாமல் திணறினான்.



அத்தியாயம் 42

# இலக்கியமும் இலக்கணமும்

அரபு நாட்டு அமீர் சோழநாட்டு இளவலுக்குக் கொடுத்துதவிய மயக்கப் பொடியின் மகத்துவத்தால் இரண்டு நாள் படுக்கையிலேயே இருக்கவேண்டிய அவசியம் இளைய பல்லவனுக்கு ஏற்பட்டது ஒரு விஷயத்தில் அவனுக்கு அனுகூலமாகவே இருந்தது. தலை சதா லேசாகக் கனத்துக் கொண்டிருந்ததால் எழுந்திருந்து சுதந்திரமாக நடப்பதற்கு இடைஞ்சலாய் இருந்ததே யொழிய அந்தக் கனத்தைத் தவிர வேறு தொந்தரவு ஏதுமில்லாததால், அவன் தனது நிலைமை யைப் பற்றியும் தான் மேற்கொண்டு நடந்துகொள்ள வேண்டிய முறைகளைப் பற்றியும் நன்றாகச் சிந்திக்க அவகாசம் கிடைத்தது அந்த இரண்டு நாட்களிலும். அந்த இரண்டு நாளும் அநபாயன் புத்தித் திறமையையும், யாருக்கும் ஏமாறாத தன்னையே ஏமாற்றிவிட்ட அவனது தந்திரத்தையும் தனது சொந்த மாலுமிகளைக்கூடத் தன் மீதே திருப்பிவிடும் அவனது இணையற்ற சக்தியையும் நினைத்துத் திரும்பத் திரும்ப வியப்புக்குள்ளானான் சோழர் படைத்தலைவன். தான் இழுத்த கோட்டை எந்த நாளிலும் தாண்டியிராத அமீர்கூட அநபாயன் உத்தரவை நிறைவேற்றத் தன் உயிரை யும் கொடுக்கத் துணிந்திருப்பதை நினைக்க நினைக்க அவன் புத்தியில் உதயமான ஆச்சரியம் எல்லை கடந்தது. தன்னை மயக்கமுறச் செய்து மரக்கலத்துக்கு அனுப்பிவிட்டதில் பங்கு அமீருக்கு மட்டும்தானா, அந்தப் பணியில் கண்டியத் தேவனுக்கும் பங்கு உண்டா என்று எண்ணிய இளைய பல்லவன் அதைப்பற்றி அறியவும் தீர்மானித்தான். அப்படி அறிய எண்ணியும் அதற்காகக் கண்டியத்தேவனை அழைக்காமல், அவன் தன்னைப் பார்க்க வந்த சமயத்தில் சர்வ சாதாரணமாகப் பேச்சுக் கொடுத்து அவனுக்கும் தன்

நிலைக்கும் எந்தச் சம்பந்தமுமில்லை என்பதைப் புரிந்து கொண்ட இளையபல்லவன் இதயத்தில் சாந்தியும் ஓரளவு ஏற்பட்டது. கண்டியத்தேவனுக்கோ மற்ற மாலுமிகளுக்கோ கடாரத்து அரண்மனையில் நடந்தது எதுவும் தெரியாது என்பதை அறிந்துகொண்டதால் தன் திட்டங்கள் அடியோடு தவிடு பொடியாகவில்லை என்பதைப் புரிந்துகொண்டான் இளையபல்லவன். இளையபல்லவனின் இந்த அறிவுக்குக் கண்டியத்தேவன் பேச்சே காரணமாயிருந்தது. அமீர் சென்ற பல நாழிகைகள் கழித்து இளையபல்லவனைக் காண வந்த கண்டியத்தேவன் இளையபல்லவன் சுரணையடைந்ததைப் பற்றி மகிழ்ச்சி தெரிவித்தான். "நீங்களிருந்த நிலை கண்டு மிகவும் பயந்துவிட்டேன் படைத்தலைவரே!" என்று துவங்கினான் அவன் பேச்சை.

"அத்தனை மோசமாகவா இருந்தேன் நான்?" என்று வினவினான் இளையபல்லவன் தன் நிலைக்குக் காரணம் தெரியாதவன் போல.

"மிகவும் மோசமாயிருந்தீர்கள். நீங்கள் உயிருடனிருக் கிறீர்களா அல்லவா என்பதுகூடச் சந்தேகமாயிருந்தது" என்று விளக்கினான் கண்டியத்தேவன்.

"பிரேதம் போல் கிடந்தேனா?" என்று வினவினான் இளையபல்லவன்.

"அப்படித்தான் இருந்தீர்கள் பார்வைக்கு."

"அப்படியானால் என்னை ஏன் கரைக்கு எடுத்துச் சென்று சிகிச்சை செய்யவில்லை?"

கண்டியத்தேவனின் கண்கள் ஒரு விநாடி இளைய பல்லவனை நோக்கின. "செய்யவேண்டுமென்றுதான் நான் சொன்னேன்" என்று மெள்ள அவன் உதடுகள் சொற்களை யும் உதிர்த்தன.

இளையபல்லவனின் விழிகள் சர்வ சாதாரணமாகவே நோக்கின தேவனை. "அதற்கு யாரும் ஒப்புக்கொள்ளவில்லை போலிருக்கிறது?" என்று வினவவும் செய்தான்.

கண்டியத்தேவன் உறுதி நிரம்பிய குரலில் சொன்னான், "எல்லோரும் ஒப்புக்கொண்டார்கள். காஞ்சனாதேவிகூட வற்புறுத்தினார்கள். ஆனால் ஒருவன் மட்டும் அதற்கு இணங்கவில்லை" என்று.

அது யாரென்பது இளையபல்லவனுக்குத் தெளிவாகத் தெரிந்திருந்த போதிலும் விஷயம் கண்டியத்தேவன் வாயினாலேயே வரட்டும் என்பதற்காக, "யாரது?" என்று கேட்டான்.

"அமீர்." பளிச்சென்று வந்தது தேவனின் பதில்.

"அமீரா?" இளையபல்லவன் மேலுக்கு வியப்பைக் காட்டினான்.

"அமீர்தான். தங்கள் மயக்கம் லேசானதென்றும் சீக்கிரம் சரியாகிவிடுமென்றும் கூறினான்."

"நீங்கள் எல்லோரும் ஒப்புக்கொண்டீர்களாக்கும்?"

"இல்லை, ஒப்புக்கொள்ளவில்லை. நீங்களிருந்த நிலை எனக்குப் பயமாயிருந்தது. எனக்கு மட்டுமல்ல, காஞ்சனா தேவிக்கும் பயமாயிருந்தது. திரும்பத் தன்னுடன் அரண் மனைக்கு உங்களை அனுப்பும்படி கூறினார்கள். அமீர் இணங்கவில்லை. உங்கள் உயிருக்கு, தான் பொறுப்பாளி என்றான். நான் அப்பொழுதும் நம்பவில்லை. சேந்தனை அழைத்து உங்கள் நாடியைப் பார்க்கச் சொன்னேன். நாடி ஒரே சீராகப் பலமாக இருப்பதாகவும் உயிருக்கு ஏதும் ஹானி இல்லையென்றும் சொன்னான் சேந்தன்."

"பிறகு?"

"அமீர் மரக்கலத்தின் நங்கூரத்தை எடுத்துக் கடலோடும் படி கூறினான்."

இளையபல்லவன் சற்று மௌனம் சாதித்துவிட்டுக் கேட்டான், "மரக்கலத்தைக் கடலில் செலுத்த யார் உத்தரவு தேவை?" என்று.

"உங்கள் உத்தரவு." திட்டமாக வந்தது கண்டியத்தேவன் பதில்.

"நானில்லாவிட்டால்?"

"என் உத்தரவு தேவை."

"நீங்கள் உத்தரவிட்டீர்களா?"

"ஆம். உத்தரவிட்டேன்."

"ஏனிட்டீர்கள் உத்தரவை?"

"அநபாயர் நம்மை அக்ஷயமுனை செல்லும்படி இட்டுள்ள உத்தரவை எழுத்து மூலம் காட்டினான் அமீர். அரச கட்டளைக்குப் படியாமல் நான் என்ன செய்யமுடியும்? நீங்களாயிருந்தால் மட்டும் என்ன செய்திருப்பீர்கள்?" என்று வினவினான் கண்டியத்தேவன்.

தேவனின் நிலை நன்றாகப் புரிந்தது இளைய பல்லவனுக்கு. இளவரசன் உத்தரவை மீறி, கடாரத்தின் துறைமுகத்தில் நங்கூரம் பாய்ச்சி நின்றுகொண்டு இருந்தால் தேவனையும் மற்ற மாலுமிகளையும் அநபாயன் சிறைசெய்து இருப்பான் என்பதிலோ கடல்புறாவையும் அதன் துணை மரக்கலங்களையும் கைப்பற்ற குணவர்மனுக்கு உத்தரவிடுவா னென்பதிலோ சிறிதும் சந்தேகமில்லை இளையபல்லவனுக்கு. அப்படி உத்தரவிடும் பட்சத்தில், வீரராஜேந்திர சோழ தேவரால் தூரக்கிழக்குப் பிரதிநிதியாகவும் ஸ்ரீவிஜய அரியணைப் போட்டியின் முடிவு காணவும் அனுப்பப் பட்டுள்ள குலோத்துங்கதேவன் இஷ்டத்துக்கு விரோதமாகக் குணவர்மன்கூட நடக்க முடியாதென்றும் உணர்ந்து கொண்ட இளையபல்லவன், தலையணையிலேயே தலையை அசைத்து, "ஆம், தேவரே! இளவரசர் உத்தரவுக்கு எதிராக நாம் எதையும் செய்ய முடியாது" என்று ஒப்புக்கொண்டான். அத்துடன் அவனைச் செல்லுமாறும் கூறினான்.

அன்றையப் பகல் பொழுது உடல்நிலை சிறிது கஷ்டமா யிருந்தாலும் மாலையில் தலைக்கனம் சற்றுக் குறையவே இளையபல்லவன் தலையைப் பலமுறை தலையணையில் புரட்டினான். அமீரும் கண்டியத்தேவனும் வந்து சென்ற சமயங்கள் தவிர மற்ற சமயங்களில் காஞ்சனாதேவி இளைய

பல்லவன் பஞ்சணை முகப்பிலேயே உட்கார்ந்திருந்தாள். அன்று முழுதும் உணவை அறவே வெறுத்த படைத்தலைவனுக்குக் காஞ்சனாதேவியே குவளையில் சிறிது பாலைக் காய்ச்சிக் கொண்டுவந்து உதட்டில் வைத்து மெள்ள மெள்ளப் புகட்டினாள். காதலர் பிரிவினையில் கசக்கும் பால் அன்று காஞ்சனாதேவியின் உபசாரத்தில் பெரிதும் இனித்தது படைத் தலைவனுக்கு. அன்று காஞ்சனாதேவி பஞ்சணையிலிருந்து எழுந்து இருமுறைதான் தனது அறைக்குச் சென்றாள். காலையில் நீராட ஒருமுறை சென்றாள். மாலையில் மாற்றுடை அணிந்து தலைவாரி வர ஒருமுறை சென்றாள். மாலையில் மீண்டும் அவள் உள்ளே நுழைந்த போது மஞ்சள் நிறப் பட்டாடை புனைந்திருந்தாள். வ்ாரி முடித்திருந்த தலையின் முற்பகுதியிலும் மஞ்சள் நிறக் கல்லொன்று பதிக்கப்பட்டிருந்த சுட்டியொன்றைக் கட்டித் தொங்க விட்டிருந்தாள். அன்று வாரி முடித்த தலையில் மூன்று சின்னஞ்சிறு பின்னல்கள் முகத்தின் பக்கங்களிலிருந்தும் நடுவகிட்டிலிருந்தும் கிளம்பிப் பின் சென்று முடி குழலில் மறைந்திருப்பதைப் பார்த்த இளையபல்லவன் புன்முறுவல் கொண்டான்.

அன்று மாலை காஞ்சனாதேவி தனது எழிலெல்லாம் அசைந்து அசைந்து, பற்பல கனவுகளை அள்ளித் தெளிக்க அறைக்குள் வந்து, அங்கிருந்த விளக்கை முதன் முதலில் ஏற்றினாள். ஏற்றித் திரியையும் நன்றாகத் தூண்டினாள். இருள் கவியத் தொடங்கிவிட்ட அந்தச் சமயத்தில் கடல் புறாவின் தனது அறைக்குள் வந்த மஞ்சள் நிற மாடப்புறாவைக் கண்ட படைத்தலைவன் அவளை விழுங்கி விடுவதுபோல் பார்த்தான். அழகுகள் அசங்க வந்த காஞ்சனாதேவி விளக்கருகில் நின்ற தோரணையும் விளக்கைக் கொளுத்தித் திரியைத் தூண்டிய தோரணையும் கூட இளையபல்லவன் கண்களுக்குப் பேரானந்தமாக இருந்தது. தூண்டிய விளக்கின் ஒளி அவள் மஞ்சள் நிற ஆடையைப் பொன் போல் அடித்தது. தலைச்சுட்டியிலிருந்த மஞ்சள் நிறக் கல் வேறு

பெரும் மஞ்சள் ஒளியைக் கிளப்பியது. இப்படிப் பலபடி ஒளிவிட்ட அந்த மஞ்சள் சிலையைக் கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்த இளையபல்லவனை மெல்ல மெல்ல அணுகிய அந்தச் சிலை அவன் தலையில் தன் கையை வைத்துப் பரிசோதித்து அவன் உடல் நிலையை, அப்பொழுதும் அவன் இமை கொட்டாமல் தன்னைப் பார்ப்பதைக் கண்டு புன்முறுவல் கொண்டு, "என்ன அப்படிப் பார்க்கிறீர்கள் என்னை!" என்று வினவவும் செய்தது.

இளையபல்லவன் அவள் கையைத் தன் கையால் பிடித்துக்கொண்டான். மெள்ள அவளை இழுத்துப் பஞ்சணை முகப்பிலும் உட்கார வைத்துக்கொண்டான். "ஆமாம் காஞ்சனா! என் தலையைத் தொட்டுப் பார்த்தாயே எப்படி இருக்கிறது? சுடுகிறதா?" என்று விசாரித்தான்.

"இல்லை, சுடவில்லை. ஏன் கேட்கிறீர்கள்? உங்களுக்கு சுரம் இருக்கிறதுபோல் தோன்றுகிறதா?" என்று வினவினாள் காஞ்சனாதேவி கவலையுடன்.

"ஆம். அப்படித்தான் தோன்றுகிறது" என்றான் இளைய பல்லவன்.

"குளிர்கிறதா?"

"இல்லை. குளிர்விட்டு எத்தனையோ நாளாகிறது."

இதைக்கேட்ட காஞ்சனாதேவி பொய்க் கோபத்தை முகத்தில் காட்டி, "அதைக் கேட்கவில்லை நான்" என்றாள். அவள் இதழ்கள் அந்தப் பொய்க்கோபத்தில் அழகாக மடிந்து, உதயமாக இருந்த புன்முறுவலை மறைத்தது.

"வேறெதைக் கேட்கிறாய்?"

"சுரம் சம்பந்தமான குளிரை."

"அதுவும் ஒருவித சுரம் என்றுதான் இலக்கிய கர்த்தாக்கள் சொல்கிறார்கள்."

"நான் உங்களுடன் இலக்கியம் பேச வரவில்லை." காஞ்சனாதேவியின் பொய்க்கோபம் பலமாகத் தொனித்தது குரலில்.

இளையபல்லவன் அவள் கையைத் தன் கையால் நன்றாக அழுத்தினான். "நீ இலக்கியம் பேச வேண்டியதில்லை காஞ்சனா" என்று முணுமுணுக்கவும் செய்தான்.

"ஏன் பேச வேண்டாம்?" இப்படியொரு குறுக்குக் கேள்வியை வீசினாள் காஞ்சனாதேவி.

"இலக்கியம் இலக்கியத்தைப் பேசுமா?" என்று வினவினான் இளையபல்லவன் புன்முறுவல் கொண்டு.

"என்ன சொல்கிறீர்கள்?"

"நீ இலக்கியம் பேசத் தேவையில்லை காஞ்சனா, நீயே இலக்கியம். உன்னைப் பற்றித்தான் கவிகள் பாடுவார்கள்."

"நல்ல இலக்கணம் இது?"

"இலக்கியத்துக்கு இலக்கணம் தேவையல்லவா?"

"ஆம் ஆம். தேவைதான்." காஞ்சனாதேவியின் பேச்சில் இன்பமிருந்தது.

அதைக் கவனித்த இளையபல்லவன் சொன்னான், "காஞ்சனா, ஒன்று தெரியுமா உனக்கு!" என்று.

"என்ன?"

"இலக்கணத்திலிருந்து இலக்கியம் பிறக்கவில்லை."

"அப்படியா?"

"ஆம். இலக்கியத்திலிருந்துதான் இலக்கணம் பிறந்திருக்கிறது" என்ற இளையபல்லவன், கனவுலகத்தில் சஞ்சரித்துக் கொண்டே சொன்னான்: "காஞ்சனா! ஜீவராசிகளுக்கு அடிப்படையானவை உணர்ச்சிகள். அந்த உணர்ச்சிகள் அழகைக் கண்டு, சோகத்தைக் கண்டு உற்சாகத்தைக் கண்டு கொந்தளிக்கின்றன. அந்தக் கொந்தளிப்பு கவிதையாகச் சொற்களில் மலர்கிறது. ஆகையால்தான் மலையழகு, மலரழகு, நதியழகு, கடலழகு எல்லாம் கவிதைகளாக வடித்திருக்கின்றன. இத்தனையும் சேர்ந்த பெண்ணழகைப்பற்றி வடித்துள்ள கவிதைகள் அனந்தம்."

இளையபல்லவன் சொற்கள் காஞ்சனாதேவியைக் கனவுலகத்துக்கு இழுத்தன. "சொல்லுங்கள்" என்ற சொல் மிக மிருதுவாக உதிர்ந்தது அவள் அழகிய இதழ்களிலிருந்து. "சொல்வதற்கு அதிகமில்லை காஞ்சனா! உணர்வதற்குத்தான் நிரம்ப இருக்கிறது. உன்னைப் போன்ற அழகிகள் கவிகளின் இலக்கியம். உன் அழகு கவிதையைத் தூண்டும் அழகு" என்றான் இளையபல்லவன்.

"நீங்கள் கவி ஏதும் புனையவில்லையே, இலக்கியம் கண்ணெதிரே இருந்தும்!"

"சுரமிருப்பவன் எப்படிக் கவி பாடுவான்?"

"என்ன சுரம் உங்களுக்கு?"

"காமாலை."

"காமாலையா!"

"ஆம்."

காஞ்சனாதேவியின் முகத்தில் கவலை படர்ந்தது. இளையபல்லவன் கண்களை உற்று நோக்கினாள் அவள். "கண்களில் மஞ்சள் தெரியவில்லையே?"

"ஆனால் என் கண்களுக்கு எல்லாம் மஞ்சளாகத் தெரிகிறது" என்றான் இளையபல்லவன்.

"அப்படியா!" கவலை காஞ்சனாதேவியின் முகத்தில் பெரிதும் விரிந்தது.

"ஆம். உன் கைகள் மஞ்சளாகத் தெரிகின்றன. உன் வெண்மையான உடைகூட மஞ்சளாகத் தெரிகிறது!"

காஞ்சனாதேவி புரிந்து கொண்டாள்.

"ஊஹூம்! அப்படியா விஷயம்" என்றாள் விஷமத்துடன்.

"என்ன சொல்கிறாய் காஞ்சனா!"

"உங்களுக்கு எல்லாமே கொஞ்ச நாட்களாக மஞ்சளாகத் தான் தெரிகிறது!"

"கொஞ்ச நாட்களாக என்றால்!"

"அக்ஷயமுனைக்குச் சென்று வந்த நாட்களாக."

"என்ன விசேஷம் அங்கே?"

"நீங்கள் பெயர் சூட்டினீர்களல்லவா?"

"யாருக்கு?"

"அவளுக்குத்தான்."

"அவளுக்கா?"

"ஆகா! ஒன்றும் புரியவில்லை உங்களுக்கு! மஞ்சளழகி யென்று பெயர் சூட்டியது நீங்கள்தானே?"

இளையபல்லவன் முகத்தில் மெள்ள சந்தேகக்குறி உதயமாயிற்று. "இதை யார் சொன்னது உனக்கு. அமீரா?" என்று வினவினான்.

காஞ்சனாதேவி வியப்பின் எல்லையை அணுகினாள். "ஆம், அமீர்தான்! உங்களுக்கு என்ன சோதிடம் கூடத் தெரியுமா? நீங்கள் கவிக்கு இலக்கணம் வகுப்பவர் என்று மட்டுந்தான் நினைத்தேன்!" என்றாள் கடாரத்துக் கட்டழகி.

இளையபல்லவன் சில விநாடிகள் யோசித்தான். "வேறு என்ன சொன்னான் அமீர்!" என்று வினவினான்.

"நீங்கள் அக்ஷயமுனைக்குச் செல்ல அஞ்சுவதாகவும் கூறினான்."

"ஏன்?"

"காரணம் உங்களுக்குத் தெரியாதா?"

"தெரியவில்லை எனக்கு."

"அங்கு மஞ்சளழகி இருக்கிறாள். நானும் அங்கு வருகிறேன். இலக்கணத்தை எந்த இலக்கியத்துக்கு வகுப்பீர்கள்?"

"இதையும் அமீரே சொன்னானா?"

"இந்தச் சொற்களை உபயோகிக்கவில்லை. கருத்து அதுதான்."

இளையபல்லவன் பல விநாடிகள் சிந்தனையில் ஆழ்ந்து விட்டான். அதைக் கவனித்த காஞ்சனாதேவியின் கருத்தில் இன்பமும் கவலையும் கலந்து தாண்டவமாடின. 'உண்மையில் இவர் மஞ்சளழகியைத்தான் விரும்புகிறாரா? என்னை இலக்கியமென்றும் தாம் இலக்கணம் வகுப்பதாகவும் சொல்வதெல்லாம் வெறும் புரட்டா?' என்று தன்னைத் தானே கேட்டுக்கொண்டாள். அந்தக் கேள்வியின் விளைவாகவோ என்னவோ மெள்ள அவன் கையைத் தன் கையால் பற்றினாள் காஞ்சனாதேவி. அந்தப் பிடிப்பு ஏதோ பெரும் ஆதரவைத் தேடுவதைப் போலிருந்தது படைத்தலைவனுக்கு. அவள் வடிவழகை ஒருமுறை கண்களால் பருகினான். அவன் கைகள் அவளை நோக்கி எழுந்தன. "இலக்கியமே! வா இப்படி!" என்று அவன் உதடுகள் அழைத்தன.

"எதற்கு? இலக்கணம் வகுக்கவா?" என்று முணுமுணுத்தாள் காஞ்சனாதேவி.

"ஆம்."

"மஞ்சளழகிக்கா? எனக்கா?"

"சொல்கிறேன், வா."

இலக்கியம் நெருங்கியது. இலக்கணக் கண்கள் இலக்கிய ஆராய்ச்சியில் ஈடுபட்டன. வேறொரு ஆராய்ச்சியும் நடந்து கொண்டிருந்தது அந்த அறையில். தளத்துப் புறத்திலிருந்த அந்த அறைச் சாளரத்தின் கதவு லேசாகத் திறக்கப்பட்டு அதன் மூலமாகக் கண்ணொன்று இந்த நாடகத்தைக் கவனித்துக் கொண்டிருந்தது.

அத்தியாயம் 43

# பேழையும் திட்டமும்

சற்று முன்பே விளக்கு ஏற்றப்பட்ட அந்த மாலை நேரத்தில் இளையபல்லவன் கண்கள் எதிரே சாய்ந்து வந்த எழில் இலக்கியத்தை மட்டும் ஆராய்ந்திருந்தால் அவன் திட்டங்கள் எந்தத் திக்கில் போயிருக்கும், எப்படி மாறி யிருக்கும் என்பதைச் சொல்ல முடியாது. ஆனால் அந்த எழிலுடன் அவன் கண்கள் தன் தலைப்பக்கத்தே தூரத்தி லிருந்த தளத்துப் புறச் சாளரம் மெல்லத் திறந்ததையும், அதில் தோன்றிய ஒரு கண் தன் நிலையைக் கவனித்ததையும் கூட ஆராய்ந்தன. அப்படி அந்த ஒற்றைக் கண்ணைத் தன் கண்கள் காண முடிந்தது, தனக்கு எந்த ஆபத்திலும் உதவி வந்த அதிர்ஷ்டமே என்பதைச் சந்தேகமறப் புரிந்து கொண்டான் அவன் அந்தச் சில விநாடிகளில். வாழ்க்கையில் தான் எந்தச் சமயத்திலும் விடாது கைப்பிடித்து வந்த ரசிகத் தன்மையும் கலை உணர்ச்சியும் அந்த மாலையில் தனக்கு எத்தனை சுலபமாக, எத்தனை பெரிய உதவியை அளித்திருக்கிறதென்று நினைத்து அதைப் பற்றிய மகிழ்ச்சியும் கொண்டான் சோழ நாட்டுப் படைத்தலைவன். அவன் பஞ்சணையில் கால்மாட்டுக்கெதிரே எழுந்தவுடன் முகம் காணத் தான் மாட்டி வைத்திருந்த அழகிய சீனத்துத் தகளியொன்றில் தனக்குப் பின்னாலிருந்த சாளரமும் அந்த ஒற்றைக் கண்ணும் தெரிந்ததைக் கண்ட இளையபல்லவன் அந்தத் தகளியில் முழுக் கண்ணையும் ஓட்டாமல் அரைவாசியே அதை ஆராய்ந்தான். எதிரே தன் கைகளில் சிக்கி நின்ற எழில்மிகு மடந்தையைப் பார்த்தும், அவள் அழகு மிதமிஞ்சிச் சுடர் விட்டும், அவள் கண்கள் இணையிலாக் காதலைக் கொட்டி யும், இளையபல்லவன் அதை மேலுக்குக் கவனித்தானே யொழிய அவன் கண்களின் முக்கியப் பார்வை பின்னா

லிருந்த சாளரத்தின் மேலேயே இருந்தது. அதன் விளைவாக, காஞ்சனாதேவியின் தோள்களை அழுத்திப் பிடித்திருந்த கைகள் மேலே செயலெதிலும் இறங்காமல் உணர்ச்சியற்றிருக்கவே, அதற்குக் காரணத்தை உள்ளபடி அறியாத கடாரத்தின் இளவரசி, அவன் தன் அழகைக் கண்டு பிரமித்துச் செயலற்று இருக்கிறானென்று நினைத்துக் காமப் புன்முறுவல் கோட்டினாள் அவனை நோக்கி. அத்துடன் செம்பவள உதடுகளையும் அசைத்து, “என்ன, அப்படிப் பிரமித்து விட்டீர்கள்?” என்றும் வினவினாள் கொஞ்சும் சொற்களில்.

இளையபல்லவன் சற்றே அதிர்ச்சியடைந்ததற்கான அறிகுறி அவன் முகத்தில் விநாடி நேரம் தோன்றி மறைந்தது. “உம். உம்! என்ன கேட்டாய்?” என்று சொற்கள் ஆசையுடனும் அதிர்ச்சியுடனும் உதிர்ந்தன.

காஞ்சனாதேவியின் பார்வை மேலும் கனிந்தது. அவள் உடலும் அவனை நோக்கித் தாழ்ந்தது. “பிரமித்து விட்டீர்களே என்று கேட்டேன்” என்றாள் அவள் காதல் சொட்டிய ஒலியில் சொற்களைக் கூட்டி.

“பிரமிக்காமல் என்ன செய்ய முடியும் காஞ்சனா?” என்ற இளையபல்லவன் கேள்வியில் விபரீதத் தொனி இருந்தது.

காமம், உணர்ச்சிகளுக்குப் பெரிதும் திரை போடுகிறது. அது சில சமயங்களில் உலோகத் திரையாகவும் இருக்கிறது. அந்தத் திரை செய்யும் எதிரொலி பொய்யை மெய்யைப் போல் காட்டுகிறது. ஆகவே இளையபல்லவன் சொற்களில் ஒலித்த விபரீத ஒலிக்குத் தவறான அர்த்தமே செய்து கொண்ட காஞ்சனாதேவி தன் கண்களால் அவன் முகத்தை ஆசையுடன் துழாவினாள். “பிரமிக்காமல் இருக்க முடியாதா?” என்றும் கேட்டாள்.

“முடியாது.” இளையபல்லவன் இந்த ஒரு சொல்லைத் தான் பதிலாகச் சொன்னான். அது எத்தனையோ ஆனந்தத்தை அளித்தது காஞ்சனாதேவிக்கு.

“முடியாதா? ஓகோ!” என்றாள் அவள் காதலும் விஷமமும் கலந்த உணர்ச்சிகள் முகத்தில் விளையாட.

“முடியாது.” மறுபடியும் அதே பதில் வந்தது இளைய பல்லவனிடமிருந்து.

“ஏன் முடியாதாம்?”

“நிகழ்ச்சிகள் அப்படி ஏற்படுகின்றன.”

“எங்கு?”

“கடல் புறாவில்.”

இதை அடுத்து அவன் காதுக்கருகில் குனிந்த காஞ்சனா தேவி, “கடல் புறாவிலா, கடல் புறாவின் இந்த அறையிலா?” என்று வினவினாள் ரகசியமாக.

“இந்த அறையில்தான்” என்ற இளையபல்லவன் அவள் முதுகைத் தடவிக் கொடுத்தான். அவள் எழுந்திருக்காமல் பிடிக்கவும் செய்தான். அது பெரும் அனுகூலமாயிருந்தது இளையபல்லவனுக்குச் சாளரத்தைக் கவனிக்க. அவள் முதுகுப் பக்கத்தின் மூலம் நன்றாக அவன் கண்கள் சாளரத்தின் பகுதியில் ஏற்பட்ட ஒவ்வோர் அசைவையும் கவனித்தன. ஆகவே அவன் மார்பு மீதிருந்த காஞ்சனாதேவி அவன் பார்வையைத் தடுக்கும் வகையில் எழுந்திருக்க முயன்றபோது அவன் கைகள் அவளை இறுகப் பிடித்து எழுந்திருக்கவொட்டாமல் செய்தன.

காஞ்சனாதேவியின் உடலில் இன்ப உணர்ச்சிகள் வெகு வேகமாக ஓடத் தொடங்கின. “ஊஹூம். இது சரியல்ல” என்றாள் காஞ்சனாதேவி.

“எது சரியல்ல?”

“இந்த நிலை.”

“ஏன்? இதற்கென்ன?”

“யாராவது பார்த்தால் என்ன நினைப்பார்கள்?”

“இப்பொழுது யாரும் பார்க்கவில்லையென்பது என்ன நிச்சயம்?”

இந்தக் கடைசி வார்த்தைகளை மிக ரகசியமாக அவள் காதில் படும்படியாகத்தான் சொன்னான் கடல் புறாவின் தலைவன். ஆனால் அதைக் கேட்டதும் தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு எழுந்திருந்த காஞ்சனாதேவி, "யார்? யார் பார்க்கிறார்கள்?" என்று வெட்கம் முகத்தைச் சிவப்பாக அடிக்க வினவினாள்.

இளையபல்லவன் இதழ்களில் இளநகை கூடியது. "யார் பார்த்தால் நமக்கென்ன?" என்று வினவினான்.

"என்ன அப்படிக் கேட்கிறீர்கள்?" என்று கோபிப்பவள் போல் கேட்டாள்.

"கேட்பதற்கு ஆதாரமிருக்கிறது" என்றான் இளைய பல்லவன் மெல்ல நகைத்து.

"என்ன ஆதாரமோ?"

"இலக்கிய ஆதாரம்."

"என்ன சமீபத்தில் ஒரே அடியாக இலக்கியத்தில் இறங்கி விட்டீர்கள்?"

"அத்தனை உதவுகிறது இலக்கியம்."

"இப்பொழுது உதவியிருக்கிறதா?"

"ஆம். உதவியிருக்கிறது."

"எப்படி?"

"தன்னையே உதவியிருக்கிறது. நீயே இலக்கியமென்று நான் சொல்லவில்லையா!"

இதைக்கேட்ட காஞ்சனாதேவி புன்முறுவல் கொண்டாள். "ஆமாம், சொன்னீர்கள், சொன்னீர்கள். இன்னமும் சொன்னீர்கள்" என்று இதழ்களை மெல்ல விரித்துக் கூறினாள்.

"இன்னமும் சொல்லத்தான் சொல்வேன்" என்று இளைய பல்லவனும் பதில் சொன்னான்.

"என்ன சொல்வீர்கள்?"

"இலக்கியம் சொல்வதை."

"இலக்கியம் என்ன சொல்கிறது?"

"காதலுக்கு கண்ணில்லை என்று."

"அப்படியா!"

"ஆம். அதனால் என்ன ஏற்படுகிறது?"

"தெரியவில்லை. 'இந்த இலக்கியத்தில் நீங்கள்தான் கெட்டிக்காரரர். சொல்லுங்கள்" என்றாள் காஞ்சனாதேவி விஷமமாக.

"காதலுக்கு கண்ணில்லை என்றால் காதலர்களுக்கும் கண்ணில்லை என்பது பொருள்" என்று இளையபல்லவன் பொருளை விளக்கினான்.

"நன்றாயிருக்கிறது வியாக்கியானம்!" என்றாள் காஞ்சனாதேவி.

"அது மட்டுமல்ல. காதலர்களுக்கு கண்ணில்லாததால் அவர்கள் தங்களைத் தவிர வேறெதையும், வேறு யாரையும் கவனிக்க முடியாது. ஆனால் மற்றவர்கள் அவர்களைக் கவனிக்க முடியும்?" என்றான் இளையபல்லவன். இதை அறை முழுவதும் எதிரொலிக்க இரைந்தே சொன்னான்.

"எதற்காக இதைச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள் காஞ்சனாதேவி.

"நான் முன் சொன்னதை நிரூபிக்க."

"என்ன சொன்னீர்கள்?"

"நம்மை யாரும் பார்க்கவில்லையென்பது என்ன நிச்சயம் என்று கேட்டேனல்லவா?"

"ஆமாம் கேட்டீர்கள்."

"பார்த்திருக்கலாம் என்பதை நிரூபிக்க இலக்கியச் சான்று காட்டினேன்."

காஞ்சனாதேவி நகைத்தாள். "பாதகமில்லை. எதற்கும் இலக்கியம் வைத்திருக்கிறீர்கள்" என்றாள் நகைப்பின் ஊடே.

"எங்கள் இலக்கியத்தில் இது நிரம்ப உண்டு" என்றான் இளையபல்லவன்.

"எது?"

"காதல்."

"உங்கள் இலக்கியத்தில் இதுதான் முழுக்க முழுக்க இருக்கிறதாக்கும்."

"மனித உணர்ச்சியில் பிரதான உணர்ச்சி இன்பம். அதற்கு முக்கிய இடம் கொடுப்பதுதான் நல்ல இலக்கியத்துக்கு அடையாளம். இல்லையேல்..." இந்த இடத்தில் சட்டென்று நிறுத்திய இளையபல்லவன், அந்த ஒற்றைக் கண் தகளியிலிருந்து அகன்று விட்டதையும் சாளரமும் மூடப்பட்டு விட்டதையும் கவனித்தான். அதன் விளைவாக அறுந்து போன இலக்கிய விமரிசனத்தைக் காஞ்சனாதேவியே தொடர்ந்தாள், "இல்லையேல்? என்ன சொல்லுங்களேன்" என்று.

இளையபல்லவன் கைகள் அவள் உடலை மீண்டும் உயர்த்தி அவள் கண்களை ஆராய்ந்தன. "இல்லையேல் இலக்கியம் வறட்டு இலக்கியம். சுவையற்றது, எங்கும் சுனையோ சோலையோ அற்ற பாலைவனம் போன்றது" என்று கூறிய அவன் அவள் எழிலைக் கண்களால் பருகினான்.

காஞ்சனாதேவி நகைத்தாள், முத்துப் பற்கள் பவள இதழ்களுக்கிடையே ஒளிவிட. "உங்களுக்கு வேதாந்தத்தில் நம்பிக்கையில்லை போலிருக்கிறது?" என்றும் கேட்டாள்.

"ஏனில்லை? நன்றாக இருக்கிறது" என்றான் இளைய பல்லவன்.

"அந்த வேதாந்தத்திலும் நீங்கள் சொன்ன அந்தப் பிரதான ரசம் இருக்கிறதாக்கும்?" என்று வினவினாள் காஞ்சனாதேவி.

"வெளிப்படையாக இல்லை. ஊடுருவி நிற்கிறது."

"அப்படி யாரும் சொல்லி நான் கேள்விப்பட்டதில்லை."

"இதுதான் உண்மை காஞ்சனா. வேதாந்தம் வறட்டுப் பாலைவனமல்ல. அறிவு, இன்பம் இரண்டும் கலந்தது

வேதாந்தம். இல்லையேல் பெரிய வேதாந்திகள், முற்றுந் துறந்த முனிவர்கள் எழுதிய பேரிலக்கியங்களில் இன்பம் பிரதான இடம் பெற்றிருக்குமா?" என்று வினவினான்.

"வேதாந்திகளின் நூல்களில் இன்பத்துக்குப் பிரதானமா?"

"வான்மீகரும், வியாசரும், சுகரும் எழுதிய நூல்களை நீ படித்ததில்லை. தமிழ் முனிவர் வகுத்த குறளில் காமத்துப்பால் என ஒரு பகுதியே தனித்துப் பிரித்துவிடப்பட்டிருக்கிறது" என்ற இளையபல்லவன் அத்துடன் அந்தச் சர்ச்சையை முடித்துக்கொண்டு, "காஞ்சனா நேரமாகிறது? எனக்குக் கொஞ்சம் உணவு கொண்டு வா" என்று கூறினான்.

அவன் குரலில் ஒலித்த வேட்கையைக் கவனித்த காஞ்சனாதேவி மிகுந்த மகிழ்ச்சியுடன் பஞ்சணையிலிருந்து எழுந்து பக்கத்திலிருந்த தனது அறைக்குச் சென்றாள். அவள் சென்றதும் மீண்டும் தகளியை நோக்கித் தீவிர சிந்தனையில் இறங்கிய இளையபல்லவன் அக்ஷயமுனைக்கு எப்படியும் தன்னைக் கொண்டு போக மட்டுமின்றி, தனது நடவடிக்கை ஒவ்வொன்றையும் கண்காணிக்க அநபாயன் ஏற்பாடு செய் திருக்கிறான் என்பதைப் புரிந்து கொண்டான். தான் மட்டும் மிகுந்த நிதானத்துடனும் ஆழ்ந்த யோசனையுடனும் நடந்து கொள்ளாவிட்டால், தான் நிச்சயமாக அக்ஷயமுனைக்குப் போக வேண்டியிருக்குமென்பதைத் தீர்மானித்தும் கொண்டான். அப்படி அக்ஷயமுனையைத் தான் அடைந்து விடும் பட்சத்தில் நீண்ட நாட்களாக ஸ்ரீவிஜயத்தைப் பணிய வைக்கத் தான் செய்துள்ள ஏற்பாடுகள் பயனற்றுப் போகும் என்பதையும் உணர்ந்து கொண்டான் கடல் புறாவின் தலைவன். 'கடல் புறாவின் உண்மைச் சக்தியையும் என் சக்தியையும் அறியாததாலேயே அநபாயர் என்னை அகற்றவும் ஸ்ரீவிஜயத்துடன் சமாதானம் நாடவும் ஏற்பாடு செய்கிறார். ஆனால் ஸ்ரீவிஜயம் எந்தச் சமாதானத்துக்கும் தயாரா யில்லை என்பது இவருக்குத் தெரியாது. ஆனால் சீக்கிரமே புரிந்து கொள்வார்' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான்.

ஆனால் அநபாயர் புரிந்து கொண்டபின் ஏற்படக் கூடிய நிலைமை மிகவும் பயங்கரமாயிருந்தது அவனுக்கு நினைக்கக் கூட. 'அநபாயர் அழைத்து வந்திருக்கும் ஐந்தாறு மரக்கலங்கள் ஸ்ரீவிஜயத்தை எதிர்க்க முடியாது. எதிர்த்தாலும் முறியடிக்கப் படுவது நிச்சயம். அப்படியிருக்க, அநபாயர் எந்தத் தைரியத்தில் என்னை மூட்டை கட்டி அனுப்பி விட்டார்?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். இத்தனை யிலும் ஒரு விஷயம் மட்டும் அவனுக்கு ஆறுதலை அளித்தது. அநபாயனின் புத்திக்கூர்மையும் எந்த நிலையையும் எடை போடும் திறமையும் இணையற்றது என்ற உணர்வு பெரும் ஆறுதலாயிருந்தது அவனுக்கு. ஆகவே எப்படியும் வெகு சீக்கிரம் விஷயத்தை அநபாயன் புரிந்து கொண்டு தனது உதவியை நாடுவான் என்று தீர்மானித்துக் கொண்டான் இளையபல்லவன்.

இருப்பினும் ஒரு விஷயம் மட்டும் அவனுக்குக் கசப்பை அளிக்கவே செய்தது. நீண்ட காலம் பிரயத்தனம் செய்து கலிங்கத்தின் கடல் பலத்தை ஒடுக்கி ஸ்ரீவிஜயத்துக்கும் பாடம் கற்பிக்கும் நிலைமை ஏற்படுத்திய சமயத்தில், தாழியை உடைக்க அநபாயர் முற்பட்டது அவனுக்குப் பெரும் துன்பத்தை அளித்தது. அவன் மனக்கண்ணில் ஏற்கெனவே ஸ்ரீவிஜயத் தலைநகர் பிடிபட்டுவிட்ட கனவு மலர்ந்தது. சுவர்ணத் தீவின் கிழக்குப் புறத்திலும் கடாரத்தின் மேற்குப் புறத்திலும் ஏழு தமிழ் அரண்களைச் சிருஷ்டித்து விட்டுச் சொர்ண பூமி ஜலசந்தியில் தன் ஆதிக்கத்தை ஏற்படுத்தி யுள்ளான். இந்தச் சமயத்தில் ஸ்ரீவிஜயத் தலைநகர் மீது தாவுவது எத்தனை பயனளிக்கும் என்று எண்ணிய அவன் துன்பப் பெருமூச்சு விட்டான். இதற்கிடையில் எழுந்தது அக்ஷயமுனையின் அழகிய கடலோரம். மஞ்சளழகியும் கடலலைகளில் நடந்து வந்தாள், அவளை நினைக்க நினைக்க விவரிக்க இயலாத ஏக்கம் அவன் மனத்தில் விரிந்தது. அந்த ஏக்கத்தின் ஊடே ஒரு யோசனையும் பிறந்தது. அந்த யோசனை பெரும் சாந்தியை அளித்திருக்கவேண்டும் இளைய

பல்லவனுக்கு. அவன் முகத்தில் என்றுமில்லாத அமைதி நிலவியது. அவன் உதடுகள் குறுநகை கொண்டன. சில விநாடிகளில் பழைய இளையபல்லவனாகி விட்டான் அவன்.

ஆகவே உணவு எடுத்துக்கொண்டு காஞ்சனாதேவி வந்தபோது மிகவும் சகஜமாகச் சிரித்துப் பேசினான். அவளை அந்தப் பக்கத்து அறையிலேயே தங்கச் சொன்னதன்றி, "உன் அறைக்கும் என் அறைக்கும் இடையே உள்ள கதவைத் தாழிட்டுவிடு காஞ்சனா! நீ வருவதானால்கூடத் தளத்துப் பக்கமிருக்கும் ரகசியக் கதவு மூலம் வா" என்றான்.

"ஏன் அப்படி வரவேண்டும்? ஏனிதைத் தாழிட வேண்டும்?" என்று கேட்டாள் காஞ்சனாதேவி.

"தாழிடாவிட்டால் இது ஒரே அறை-" என்றான் இளைய பல்லவன்.

"ஆம்."

"மற்றவர்கள் என்ன நினைப்பார்கள்?"

இதைக்கேட்ட இளையபல்லவன் வாய்விட்டு நகைத்தான். தான் சற்று முன்பு கேட்ட அதே கேள்வியை அவன் சந்தர்ப்பம் பார்த்துத் திருப்பியதைக் கவனித்த காஞ்சனாதேவியும் நகைத்தாள். இந்த இன்ப நகைப்புடன் தான் கொண்டு வந்திருந்த பாலையும் அவன் வாயில் மெல்ல மெல்ல ஊற்றினாள். அவன் குழந்தைபோல் அருந்தினான். அதைக் குடித்ததும், "ஏன், வேறு ஏதும் உணவில்லையா?" என்று கேட்டான்.

"இருக்கிறது. அமீர் கொடுக்க வேண்டாமென்று சொன்னார். இந்த நிலையில் அதிக உணவு கொடுத்தால் வயிற்றில் தங்காதாம்."

"சரி, சரி, அவன் சொல்வது சரியாகத்தானிருக்கும்."

"என்ன அப்படித் திட்டமாகச் சொல்கிறீர்கள்!"

"என் உடல் நிலை அவனுக்குத்தான் நன்றாகத் தெரியும்."

"என்னை விடவா?"

"தற்சமயம் அப்படி."

இந்தப் பேச்சுக்குக் காரணம் புரியவில்லை காஞ்சனா தேவிக்கு. இளையபல்லவன் ஏதோ வேடிக்கையாகப் பேசுவதாகவே நினைத்தாள். ஆகவே சிறிது நேரத்திற்கெல்லாம் சந்துஷ்டியுடன் தனது அறைக்குச் சென்றாள்.

இளையபல்லவன் அன்றிரவு நிம்மதியாகத் தூங்கினான். மறுநாளும் சர்வசகஜமாகக் கழித்தான். மறுநாள் இரவே அவன் தலைக்கனம் பூராவும் இறங்கி விட்டதால் தன் அறையில் எழுந்து நடமாடினான். மூன்றாவது நாள் மாலை தளத்துக்கு வந்த இளையபல்லவன் தளம் பூராவும் உலவி, கடல் புறாவை அணு அணுவாகக் கவனித்தான். பிறகு திடீரென எதையோ நினைத்துக்கொண்டு நடுப் பாய்மரத் தண்டின் மீது தாவித் தொத்தி மேலே ஏறிச் சென்றான். சென்றவன் நீண்ட நேரம் அந்தப் பாய்மரத்தண்டின் உச்சிக்குச் சற்றுக் கீழேயிருந்த மரத்தண்டில் நீண்ட நேரம் சாய்ந்து நின்றான். அவன் முகத்தில் திடீரெனப் பூரண திருப்தி நிலவிற்று. அந்தத் திருப்தியுடன் வெகு வேகமாகக் கீழே இறங்கி வந்து தனது அறைக்குச் சென்றான். சென்றவன் சாளரக் கதவை உட்புறம் மூடித் தாழிட்டான். பிறகு தன் பெரும் மரப் பெட்டியைத் திறந்து அதிலிருந்த பேழை யொன்றை எடுத்துக் கொண்டான். அத்துடன் கீழே உட்கார்ந்து உளி, சில ஊசிகள், மரத்துண்டுகள் இவற்றைக் கொண்டு ஏதோ மும்முர வேலையில் இறங்கினான். "இது பலித்தால் என் திட்டமும் பலித்தது" என்று அவன் உதடுகள் முணுமுணுத்தன. கைகள் துரிதமாக வேலையில் இறங்கின.

அத்தியாயம் 44

# தவறு, திருத்தம், விளைவு!

கூடல் புறாவின் முகப்பில் இருந்த தனது அறையின் பெரு மரப்பெட்டியைத் திறந்து அதிலிருந்த பேழையொன்றை எடுத்து அதன் உட்புறத்தைச் சிற்றுளியாலும் சின்னஞ்சிறு ஊசிகளாலும் மெல்லிய ரம்பத்தாலும் செப்பனிடத் தொடங்கிய இளையபல்லவன் அந்த அலுவலில் பாதி இரவைக் கழித்தான். தன் அறையின் மரத்தரையில் சப்பளம் போட்டு உட்கார்ந்தும், சில சமயங்களில் மண்டியிட்டு உட்கார்ந்தும் ஏதேதோ பேழையின் உட்புறத்தைப் பழுது பார்த்து முடுக்கிக் கொண்டிருந்த இளையபல்லவன் பாதி இரவு ஓடியதும் வேலை முடியவே அந்தப் பேழையிலிருந்த வஸ்துவைப் பலமுறை திருப்பியும் ஆட்டியும் பார்த்தான். அதன் விளைவாக அவன் முகத்தில் பூரண திருப்தி ஏற்படவே பேழையைப் பழையபடி பத்திரப்படுத்திவிட்டுப் பஞ்சணை யில் வந்து தொப்பென்று விழுந்து கவலை தீர்ந்து விட்டதற் கான பெருமூச்சொன்றையும் விட்டு, உறங்கக் கண்களை மூடினான். மனத்தில் இருந்த பெரும் சுமையொன்று இறங்கி விட்டதால் அன்றிரவு நன்றாகத் தூங்கினான் இளைய பல்லவன். அந்தத் தூக்கத்தின் விளைவாகக் காலையில் எழுந்திருந்தபோது உடலும் புத்தியும் மிகச் சுறுசுறுப்பாக இருக்கவே, விடியற்காலைப் பனியைக்கூட அதிகமாகக் கவனிக்காமல் தளத்துக்கு வந்து தளத்தில் உலாவினான். இரண்டொரு சமயம் கடல் புறாவின் பக்கப் பலகை மீது குனிந்து கீழே மடிந்து கிடந்த அதன் இறக்கையையும், இறக்கையின்மீது வாரியடித்து வழிந்தோடி மரக்கலத்தின் வேகத்தைக் காட்டிய கடல் நீரின் பிளவையும் கவனித்தான். பிறகு தளத்தின் ஒரு கோடிக்குச் சென்று ஆங்காங்கு பணி

புரிந்து கொண்டிருந்த மாலுமிகளிடம் வேடிக்கையாகப் பேசிக்கொண்டு காலத்தை ஓட்டினான். ஒருசமயம் கடல் புறாவின் மற்றொரு கோடியில் சுக்கானைப் பிடித்து உட்கார்ந்து கொண்டிருந்த கூலவாணிகன் சேந்தனிடம் போய் அவன் பக்கத்திலமர்ந்து கடல் புறாவின் புடைத்த பாய்களைக் கவனித்து மகிழ்ந்தான்.

படைத்தலைவன் வந்து பக்கத்தில் உட்கார்ந்தது பெரும் திருப்தியாயிருந்தது கூலவாணிகனுக்கு. அதை அவன் வாய்விட்டுப் பாராட்டவும் முற்பட்டு, "வெகு சீக்கிரம் குணமடைந்து விட்டீர்கள் படைத்தலைவரே," என்று கூறினான் சேந்தன்.

பதிலுக்கு இளையபல்லவன் மெல்ல நகைத்துவிட்டுக் கேட்டான், "ஏன் சேந்தா! நான் குணமடைந்து விட்டது அத்தனை வியப்பாயிருக்கிறதா உனக்கு?" என்று.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையை . முதலில் அசைத்த சேந்தன், "உங்களை அமீர் கடல் புறாவுக்குக் கொண்டு வந்தபோது பார்த்ததும் உண்மையில் பயந்தே விட்டேன்" என்று கூறினான்.

"அத்தனை மோசமாகவா இருந்தேன்?" இளையபல்லவன் வேடிக்கையாகக் கேட்டான்.

"ஆம். பார்ப்பதற்கு உயிருடனிருப்பதாகவே தெரிய வில்லை."

"பிறகு ஏதாவது மருந்து கொடுத்தாயா?"

"இல்லை. அமீர் வேண்டாமென்று சொல்லிவிட்டான். அது மட்டுமல்ல, ஒரு விஷயம் எனக்குப் புரியவும் இல்லை."

"என்ன புரியவில்லை உனக்கு?"

"நீங்கள் பெரு மயக்கத்திலிருந்தீர்கள். ஆனால் உங்கள் நாடி ஒரே சீராகப் பலமாக அடித்துக் கொண்டிருந்தது. மயக்கப்பட்டிருக்கும் யாருக்கும் நாடி லேசாக இருக்கும். பலவீனமாகவும் தெரியும். உங்கள் கதை விசித்திரம்" என்ற சேந்தன் இளையபல்லவனை நோக்கினான்.

அவன் சொற்களில் எத்தனை உண்மையிருந்த தென்பதைப் புரிந்துகொண்ட இளையபல்லவன், "ஆம் சேந்தா! என் கதையே ஒரு விசித்திரம். இன்னும் என்னென்ன விசித்திரம் நடக்கப் போகிறதோ?" என்று சொல்லி நகைத்தான்.

சேந்தனும் மெல்ல நகைத்தான். அதற்குக் காரணத்தை அறியாத இளையபல்லவன், "சேந்தா! ஏன் நகைக்கிறாய்?" என்று வினவினான்.

"இன்னும் என்ன விசித்திரம் நடக்கப் போகிறதோ என்றீர்களே, அதை நினைத்துச் சிரித்தேன்" என்றான் கூலவாணிகன்.

"அதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது?" என்று மற்றுமொரு கேள்வியை வீசினான் இளையபல்லவன்.

"இப்பொழுது அக்ஷயமுனையை நோக்கி ஓடுகிறது கடல் புறா" என்றான் சேந்தன்.

"ஆம்."

"அங்கு பெரிய தொந்தரவு இருக்கிறதே உங்களுக்கு?"

"என்ன தொந்தரவு அங்கே? பலவர்மன்கூட இல்லையே?"

"பலவர்மன் இல்லாவிட்டாலென்ன? மஞ்சளழகி இல்லையா?"

"அவள் இருந்தால் நமக்கென்ன?"

"நமக்கு என்று சொல்லாதீர்கள் பொதுப்படையாக."

"எனக்கு என்று சொல்ல வேண்டுமா?"

"ஆமாம். மஞ்சளழகி இருக்கிற இடத்தில் காஞ்சனா தேவியும் சேர்ந்தால் உங்கள் கதி- விசித்திரம்தான்- சந்தேகமே யில்லை."

இளையபல்லவன் மெல்ல நகைத்தான். "ஆமாம் சேந்தா! பெரும் தொல்லைதான் எனக்கு. அக்ஷயமுனைக்குப் போகாம

லிருந்துவிட்டால் என்ன!" என்று கேட்ட இளையபல்லவன் பாய்மரங்களை நோக்கினான்.

கூலவாணிகன் அக்கம்பக்கத்தில் பார்த்துவிட்டுச் சொன்னான், "அதுதான் முடியாது" என்று.

இளையபல்லவன் மேலுக்கு வியப்பைக் காட்டி, "ஏன் முடியாது சேந்தா?" என்று வினவினான்.

"கடல் புறாவில் இருப்பவர்கள் யாரும் நீங்கள் சொல்வதைக் கேட்கமாட்டார்கள்" என்று ரகசியம் சொன்னான் சேந்தன்.

"நான் உங்கள் தலைவனல்லவா?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"தலைவர்தான், அதை யாரும் மறுக்கவில்லை..." என்று இழுத்தான் சேந்தன்.

"பின்?"

"தலைவராயிருந்தாலும் தற்சமயம் உங்கள் சொல்லை யாரும் கேட்கமாட்டார்கள்."

"ஏன்?"

"அமீர் எல்லோரையும் தன் வழிக்குத் திருப்பியிருக் கிறான்."

"எப்படி?"

"உங்களைக் கடாரத்து அரண்மனையிலிருந்து கொண்டு வந்தானா?"

"எனக்கு எப்படித் தெரியும்?"

"சரி, சரி, தெரியாது. கொண்டு வந்தான்."

"உம்."

"உங்களை அக்ரமந்திரத்தில் படுக்க வைத்தான். படுக்க வைத்ததும் உங்களுக்குச் சிகிச்சை தேவையில்லை யென்றான்."

"அதற்கு எல்லோரும் ஒப்புக் கொண்டார்களா?"

"இல்லை. கண்டியத்தேவன் ஒப்புக் கொள்ளவில்லை. என்னை அழைத்துப் பரிசோதிக்கச் செய்தார். உயிருக்கு ஏதும் ஹானி இல்லையென்றேன் நான். பிறகுதான் அவரும் திருப்தி யடைந்தார்."

இளையபல்லவன் சில விநாடிகள் ஏதும் பேசவில்லை. பிறகு கேட்டான், "அடுத்தபடி என்ன செய்தான் அமீர்?" என்று.

கூலவாணிகன் தங்கு தடையின்றிப் பதில் சொன்னான். "மாலுமிகளைத் தளத்தில் கூட்டிக் கண்டியத்தேவருக்கெதிரில் அநபாயர் உத்தரவைப் படித்துக் காட்டினான். எல்லோரும் தலைதாழ்த்தி அந்த உத்தரவை ஏற்றார்கள். அந்தச் சமயத்தில்தான் காஞ்சனாதேவி விரைந்து படகொன்றில் வந்தார்கள். அவர்களை உங்களுக்குப் பணிவிடை செய்ய அனுப்பினான் அமீர். பிறகு நங்கூரமெடுத்தோம். நமது மற்ற மரக்கலங்களுக்கும் உத்தரவிடப்பட்டது, கடல் புறாவைத் தொடர்ந்து வர. கடல் புறாவின் சுக்கானைத் திருப்பி, அக்ஷய முனைக்குக் கப்பல் ஓட ஏற்பாடு செய்தான் அமீர். அதுதான் இப்பொழுது நடந்து கொண்டிருக்கிறது" என்று சேந்தன் நடந்ததை நடந்தபடி விளக்கினான். மீண்டும் ஏதோ யோசித்தான். அவன் முகத்தில் லேசாகப் பயம் உதய மாவதைக் கண்ட இளையபல்லவன் கேட்டான், "ஏதாவது விஷயத்தை ஒளித்திருக்கிறாயா சேந்தா?" என்று.

"ஒரு விஷயமிருக்கிறது. ஆனால் சொல்லத்தான் பயமா யிருக்கிறது" என்று இழுத்தான் சேந்தன். இழுத்த குரலில் பயத்தின் ஒலி பூரணமாக இருந்தது.

"நானிருக்கப் பயமேன் உனக்கு?" என்று இளைய பல்லவன் அவனுக்குத் தைரியமூட்டினான்.

அந்தத் தைரிய வார்த்தைகள் ஏதும் பயனளிக்கவில்லை. "உங்கள்பாடே திண்டாட்டம். இதில் எனக்கு நீங்கள் என்ன உதவ முடியும்?" என்று கேட்டான் கூலவாணிகன்.

இளையபல்லவன் முகத்தில் குறுநகையின் சாயல் விரிந்தது. "அஞ்சாதே, சொல் சேந்தா" என்று கூறினான் இளையபல்லவன்.

இதைக்கேட்ட சேந்தன், "இளையபல்லவரே! நாமிருவரும் பேசுவதாகவே தெரியவேண்டாம். நேராகப் பாருங்கள். என்னைப் பார்க்காதீர்கள்" என்று எச்சரித்துவிட்டுப் பாய்மரங்களைப் பார்த்த வண்ணம், "அமீரைப் பற்றி உங்கள் அபிப்பிராயத்தை நான் மாற்ற முடியாது. இருப்பினும் அவனிடம் எச்சரிக்கையாயிருங்கள்" என்று கூறினான்.

சேந்தன் பேச்சு எந்தவித வியப்பையும் இளையபல்லவ னுக்கு அளிக்கவில்லையாயினும் அவன் மேலுக்குக் குரலில் வியப்பைக் காட்டி, "நம் அமீரிடமா?" என்று கேட்டான்.

"ஆமாம், நம் அமீரிடம்தான்" என்ற சேந்தன், 'நம்' என்ற சொல்லை அளவுக்கதிகமாக அழுத்தித் தனது வெறுப்பைத் தெரிவித்தான்.

"அமீரிடம் எதற்கு எச்சரிக்கையாயிருக்க வேண்டும்?"

"அவன் உங்களைக் கண்காணிக்கிறான்."

"என்ன! என்னைக் கண்காணிக்கிறானா?"

"ஆம், இளையபல்லவரே."

"நீயே பார்த்தாயா?"

"ஆம்."

"என்ன செய்தான் அவன்?"

"நேற்றைக்கு முந்திய நாள் இரவு..." என்று துவங்கிய சேந்தன் நிதானித்தான்.

"சொல் சேந்தா" என்று இளையபல்லவன் ஊக்கவே, "நேற்றைக்கு முந்திய நாள் இரவு உங்கள் அறையை நோக்கி நடந்தான் அமீர்..." என்று துவங்கினான்.

"நடந்து?"

"அறைப் பக்கம் வந்ததும் அப்புறமும் இப்புறமும் திருடன் போல் பார்த்தான். பிறகு உங்கள் அறையில் தளத்துப்புறம் ஒரு சாளரம் இருக்கிறதே, அதை மெள்ளத் திறந்தான்."

"திறந்து என்ன செய்தான்?"

"திறந்து அறையைத் தன் கண்ணால் நீண்ட நேரம் ஆராய்ந்தான்."

இளையபல்லவன் பதிலேதும் சொல்லவில்லை. தலையை மட்டும் ஆட்டினான். சேந்தனே மேற்கொண்டு பேசினான். "அமீரின் போக்கு மிகவும் விசித்திரமாயிருக்கிறது இளைய பல்லவரே. அதுவும் கடாரத்து அரண்மனையில் இருந்து தங்களை எடுத்து வந்த நாட்களாக விசித்திரமாக நடந்து கொள்கிறான். அவன் உங்களிடம் திடபக்தியுள்ள பழைய அமீரல்ல. ஆகவே எச்சரிக்கையாயிருங்கள். தவிர..." சற்று நிறுத்தினான் பேச்சை இந்த இடத்தில்.

"தவிர?"

"நான் சொன்னதை மட்டும் அவனிடம் சொல்லி விடாதீர்கள். என் கழுத்தை நெரித்து விடுவான் அமீர்" என்று கூறினான் சேந்தன். அந்தக் குரலில் பயத்தின் ஒலி ஊடுருவி யிருந்தது. முகத்திலும் பயத்தின் சாயை திடீரெனப் படர்ந்தது. கடல் புறாவின் மற்றொரு பகுதியிலிருந்து அமீர் தங்களிருவரையும் நோக்கி நடந்து வருவதைச் சேந்தன் கவனித்தான். அதனால் அவன் தேகமும் லேசாக நடுங்கியது. "அதோ அவன் வருகிறான்" என்று பிசாசைக் கண்டு நடுங்குபவன்போல் நடுங்கிக்கொண்டே உளறினான்.

இளையபல்லவன் இடதுகை பயப்பட வேண்டாமென்று சேந்தன் தொடையைப் பலமாக அழுத்தியது. தங்களை நோக்கி வந்த பிறகு வேறு திசையில் திரும்ப முயன்ற அமீரை, "அமீர்! வா இப்படி!" என்று இளையபல்லவனே வலுவில் அழைத்தான்.

அமீர் மீண்டும் அவர்களை நோக்கி நடந்து வந்தான். "உட்கார் இப்படி" என்று சற்று நகர்ந்து தன் பக்கத்தில் அமர

அவனுக்கு இடமும் அளித்தான் இளையபல்லவன். அமீரின் கண்களில் சலனமிருந்தது. ஒரு விநாடி இளையபல்லவனைச் சந்தேகத்துடன் நோக்கினான் அவன். "என்மேல் உங்களுக்குக் கோபமல்லவா இருக்கவேண்டும்?" என்று வினவவும் செய்தான்.

இளையபல்லவன் அமீரின் முதுகை அன்புடன் தட்டிக் கொடுத்தான். "உளறாதே அமீர்! உன்னிடம் எதற்குக் கோபம் எனக்கு?" என்றும் கேட்டான்.

"உங்களை இஷ்ட விரோதமாக அக்ஷயமுனை அழைத்துப் போகிறேனே" என்றான் அமீர் அலுப்புடன்.

"நம் இஷ்டப்படி நாம் எந்தக் காரியங்களைச் செய்ய முடிகிறது?" என்றான் இளையபல்லவன்.

"ஆம். செய்ய முடிவதில்லை படைத்தலைவரே! உமது ஆணை எதையும் மீற எனக்கு இஷ்டமில்லை. ஆனால் உங்கள் ஆணையையும் மீறிய ஆணை பிறந்துவிட்டது. அதை நான் நிறைவேற்ற வேண்டியவனாயிருக்கிறேன்" என்றான் அமீர்.

இளையபல்லவன் பதில் கூறியபோது அவன் குரலில் வருத்தமிருந்தது. "அந்தப் பொறுப்பு உனக்கு மட்டும்தானா?" என்று வினவினான் இளையபல்லவன் துன்பம் தொனித்த குரலில்.

"என்ன சொல்கிறீர்கள்?" அமீரின் கேள்வியில் வியப்பு இருந்தது.

"அநபாயரின் உத்தரவு உன்னைவிட என்னைத்தான் கட்டுப்படுத்தும். நீயாவது அரபு நாட்டவன். நானோ தமிழன். எங்கள் இளவரசர் கட்டளையை நான் எப்படி மீற முடியும்?"

"பின் உங்களுக்கு..."

"அக்ஷயமுனை செல்ல இஷ்டமில்லைதான். இருப்பினும் அநபாயர் கட்டளை அரச கட்டளை. அதற்கு எந்தப் பிரஜையும் கீழ்ப்படிய வேண்டியவன். அப்படி இருக்க சோழர் படைத்தலைவனான நான் மட்டும் மீற முடியுமா?"

இளையபல்லவன் பேச்சு பெரும் புதிராயிருந்தது அமீருக்கு. இரண்டு நாட்களுக்கு முன்பு, "உன்னை ஏன் தூக்கி லிடக் கூடாது" என்று கேட்ட இளையபல்லவன் அடியோடு சுவடு மாறிப் பேசுவதைக் கண்டு உள்ளூர வியப்பும் சந்தேகமும் ஒருங்கே அடைந்தான் அமீர். அவன் உள்ளத்தில் எழுந்த சந்தேகம் இளையபல்லவனுக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஆகவே சொன்னான் படைத்தலைவன், "அமீர்! என் பேச்சு உனக்கு வியப்பாயிருக்கும். மதிமயங்கியிருந்த சமயத்தில் உன்னை ஏதேதோ சொன்னேன். சித்தம் தெளிந்ததும் உன் நிலைமை— உன் நிலைமை என்ன, என் நிலைமைகூட— எனக்குப் புரிந்துவிட்டது. சோழ சாம்ராஜ்யக் கொடியைத் தூரக்கிழக்கில் நாட்ட வந்த நானே சாம்ராஜ்யாதி பதியின் தூதரின் கட்டளைக்கு மாறாக நடந்தால் மற்றவர்கள் என்ன செய்யமாட்டார்கள்? நான் அநபாயர் இஷ்டத்துக்குப் பணிந்துதானாக வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன். அக்ஷயமுனைக்குச் செல்வதில் எனக்கு சொந்தக் கஷ்டங்கள் இருக்கின்றன. ஆனால் நான் அவற்றை எப்படிக் கவனிக்க முடியும்? சாம்ராஜ்ய நன்மை, தமிழர் பெருமை இவைதான் முன்னணியில் வைக்க வேண்டியவை."

இளையபல்லவன் பேச்சைக் கேட்ட அமீர் சாந்திப் பெருமூச்சு விட்டான். "இப்பொழுதுதான் என் மனம் நிம்மதி யடைந்தது, இளையபல்லவரே" என்றும் கூறி இளைய பல்லவன் கைகளை எடுத்துக் கண்களில் ஒற்றிக் கொண்டான். இளையபல்லவன் தன் கையால் அமீரின் பெரும் முதுகைத் தட்டிக் கொடுத்து, "சே! சே! இதென்ன அமீர்! பெரும் சதுரங்கத்தில் நாம் வெறும் காய்கள். இதில் நாம் செய்யும் குற்றம் எதுவுமில்லை. உன் நடத்தை எனக்குக் கஷ்டமாகத் தானிருந்தது. ஆனால் கடமையை முன்னிட்டு நான் அதை மறந்துவிட்டேன். போய் உன் அலுவலைக் கவனி" என்றான்.

அத்துடன் அமீர் சென்றான். இளையபல்லவன் பேச்சினால் பெரும் ஆறுதல் ஏற்பட்டிருந்தது அமீருக்கு. இருப்பினும் அமீரின் கூரிய புத்தி இளையபல்லவன் போக்கில்

ஏதோ புரிந்துகொள்ள முடியாத அம்சம் ஒன்று இருப்பதாக அறிவுறுத்தியது. ஆனால் அது என்னவென்பது புரியவில்லை அமீருக்கு. தவிர, அடுத்த இரண்டு நாட்களில் கொஞ்ச நஞ்ச மிருந்த சந்தேகமும் நீங்கிவிட்டது அமீருக்கு. கடல் புறாவை ஆசையுடன் அக்ஷயமுனை மார்க்கத்தில் இளையபல்லவனே செலுத்தினான். கண்டியத்தேவனும் தானும் செய்த தவறைக் கூட இளையபல்லவன் திருத்தியது கொஞ்ச நஞ்சமிருந்த சந்தேகத்தைக்கூடத் துடைத்துவிட்டது. அவர்கள் செய்த தவறை ஆறாவது நாள் இரவில் இளையபல்லவன் கண்டு பிடித்தான். அமீரையும் கண்டியத்தேவனையும் அழைத்து எச்சரித்தான். அந்த எச்சரிக்கை சரியென்று முதலில் புலப்பட வில்லை அவ்விருவருக்கும். பிறகு இளையபல்லவன் நிரூபித்த பின்தான் இருவரும் தவறை உணர்ந்தார்கள். தவறு துரிதமாகத் திருத்தப்பட்டது. ஆனால் அந்தத் திருத்தத்தின் விளைவு என்ன என்பதைக் கண்டியத்தேவனோ அமீரோ கடல் புறாவிலும் பின் வந்த மரக்கலங்களிலும் இருந்த மாலுமிகளோ யாரும் அறியவில்லை. அறிந்தது இளையபல்லவனைத் தவிர வேறொருவன். அவனுக்குக் கடல் புறாவிடம் தொடர்பு அற்றுப் போயிற்று. அவன் திகைத்தான். திண்டாடினான். பயனில்லை, விளைந்தது விளைந்துவிட்டது. விளைவு பயங்கரமாயிருந்தது. எண்ணிப் பார்ப்பதற்கும் பயங்கரமான விளைவு அது!

அத்தியாயம் 45

# வானத்தே பறவைகள்

•

அந்தப் பயங்கர விளைவு கடாரத்தை விட்டுப் புறப்பட்ட எட்டாவது நாள் இரவில்தான் புலப்பட்டது, கடல் புறா மாலுமிகளுக்கு. அது புலப்பட்டபோது பரிகாரத்திற்கு வழி ஏதுமில்லாது போகவே கடல் புறாவிலும் மற்ற மரக்கலங் களிலுமிருந்தவர்கள் பெரும் திகைப்பையே அடைந்தார்கள். ஆனால் அந்த விளைவும் திகைப்பும் ஏற்படுவதற்கு முந்திய நாட்கள் மிக இன்பமாகவும் குதூகலமாகவும் கழிந்தன கடல் புறாவிலும் மற்ற மரக்கலங்களிலும். முக்கியமாகக் கடல் புறாவிலும் அதன் தலைவனுக்கும் அமீருக்குங்கூட உள்ளூரப் புண்கள் ஆறியிருக்க வேண்டும். பழையபடி இருவரும் மிகுந்த நட்புடனும் சகஜத்துடனும் நடந்து கொண்டார்கள்.

கடாரத்திலிருந்து புறப்பட்ட மூன்றாவது நாளே மயக்கம் அடியோடு நீங்கி, சுயநிலை அடைந்துவிட்ட இளைய பல்லவன் நல்ல ஆகாரம் உண்டதாலும், காஞ்சனாதேவியின் பணிவிடையாலும், நான்காவது நாள் காலையிலேயே பூரண சக்தியைத் திரும்பப் பெற்றுவிட்டான். சுக்கானைப் பிடித் திருந்த சேந்தனுடன் பேசிய சமயத்தில் அவன் பார்வை யிலிருந்த தெளிவையும் பேச்சிலிருந்த உறுதியையும் கவனித்த அமீர், தான் படைத்தலைவனுக்கு அளித்த விஷப் புகை அவன் உடலிலிருந்து அடியோடு அகன்று விட்டதை உணர்ந்து பெரிதும் சாந்தியடைந்தான். அந்தச் சாந்தி அடுத்த நாள் பெருமகிழ்ச்சியையும் அமீருக்கு அளித்தது. இளைய பல்லவன் கடாரத்துச் சம்பவத்தை அடியோடு மறந்து விட்டதை எண்ணிப் பெருமகிழ்ச்சி கொண்டான் அவன். ஆகவே ஐந்தாவது நாள் இரவில் இளையபல்லவன் காஞ்சனா தேவியையும் நடுப் பாய்மரத்தண்டில் ஏறவிட்டுத் தானும்

அதில் ஏறிச் சென்றதைக் கண்டும் காணாதவன்போல் சிரித்துக்கொண்டே வேறு புறம் சென்றான். காஞ்சனா தேவியின் மையலில் இளையபல்லவன் அடியோடு மூழ்கி விட்டதாகவே தீர்மானித்த அமீர், காஞ்சனாதேவி பாய்மரத் தண்டில் ஏறுவதைத் தடுக்க கண்டியத்தேவன் முயன்ற போது அவனை இடைமறித்து, "தேவரே! நீர் எதற்காகத் தலையிடுகிறீர்?" என்று தேவனைக் கையைப் பிடித்து நிறுத்தினான்.

கையைப் பிடித்துத் தன்னை நிறுத்திய அமீரை ஆச்சரியத் துடன் பார்த்த கண்டியத்தேவன், "என்ன அமீர்? ஏன் தடுக்கிறாய் என்னை?" என்று வினவினான்.

அமீரின் பெரு உதடுகள் விஷமத்துடனும் சங்கடத் துடனும் அசைந்தன. "காஞ்சனாதேவிக்கும் இளைய பல்லவருக்கும் உள்ள உறவுமுறை உமக்குத் தெரியாதா தேவரே?" என்று வினவினான் அமீர் லேசாகப் புன்முறுவலும் செய்து.

"தெரியும் அமீர்." கண்டியத்தேவன் குரலில் கோபமே இருந்தது.

"தெரிந்திருந்தும் எதற்காகப் போகிறீர் அவர்களைத் தடுக்க?"

"பாய்மரத் தண்டில் காஞ்சனாதேவி ஏறுவது அபாய மல்லவா?"

"அபாயமிருந்தாலென்ன? உதவுவதற்குத்தான் இளைய பல்லவர் இருக்கிறாரே?"

"என்ன வேண்டிக் கிடக்கிறது இது?" என்று அலுத்துக் கொண்டான் கண்டியத்தேவன்.

"உமக்கேன்ய்யா இந்தத் தொல்லை? காதல் உச்சிக்குப் போகிறதே!" என்றான் அமீர்.

"வேறு இடமில்லை போலிருக்கிறது?"

"இல்லாமலென்ன? சில சமயங்களில் இருவரையும் பக்கப் பலகைகளுக்கு அருகே பார்க்கலாம், சில சமயங்களில் சுக்கான் பிடிக்கும் சேந்தனுக்கு அருகே பார்க்கலாம்..." என்ற அமீரை இடைமறித்த கண்டியத்தேவன், "அங்கெல்லாம் அபாயமில்லை. பாய்மரத் தண்டு வழக்கமாக ஏறும் மாலுமிகளுக்கே வழுக்கும், அரண்மனையில் வளர்ந்த இளவரசிக்கு என்ன செய்யாது? எங்காவது விழுந்து கால் ஊனமானால் அநபாயர் நம்மைச் சும்மா விடமாட்டார்" என்றான்.

இதைக்கேட்ட அமீர் சிரித்துக்கொண்டு, "நம்மைச் சும்மா விடாமல் என்ன செய்வது? நாமா ஏறச் சொன்னோம் பாய்மரத்தில்?" என்று கூறிக்கொண்டே அகன்றான் அவ்விடத்தை விட்டு.

அப்பொழுதும் கண்டியத்தேவன் விடவில்லை. விடுவிடு என்று நடுப் பாய்மரத்தண்டு இருந்த இடத்துக்குச் சென்றான். அப்பொழுதுதான் கடாரத்து இளவரசி இரண்டு முழ உயரத்தில் ஏறி இடையே இருந்த இரும்பு வளையத்தில் காலை ஊன்றிக்கொண்டு நின்றிருந்தாள். அவள் தலை கீழே குனிந்து இளையபல்லவனைப் பார்த்தது. இளைய பல்லவன் கைகள் அவள் இடுப்பைப் பிடித்து மேலே தூக்கிவிட முயன்று கொண்டிருந்தன. அந்தச் சமயத்தில் அருகே சென்ற கண்டியத்தேவன் அவர்களிருவரையும் சில விநாடிகள் பார்த்துக்கொண்டு நின்றான். பிறகு குரலில் சலிப்புத் தட்டக் கேட்டான், "காஞ்சனாதேவிக்கு ஏன் இத்தனை கஷ்டம்?" என்று.

இளையபல்லவன் அவனைத் திரும்பிப் பார்க்காமல் காஞ்சனாதேவியை அடுத்த வளையத்தில் ஏற்றிவிட முயன்று கொண்டே, "இதில் கஷ்டமென்ன இருக்கிறது?" என்று வினவினான்.

"பாய்மரம் மாலுமிகளுக்கே வழுக்கும்..." கண்டியத்தேவன் குரலில் எச்சரிக்கை இருந்தது.

"ஆமாம்." திரும்பிப் பாராமலே பதில் சொன்னான் இளையபல்லவன்.

"அப்படியிருக்க காஞ்சனாதேவிக்கு..."

"கஷ்டமாயிற்றே என்று சொல்கிறாயா?"

"ஆமாம்."

"கஷ்டமென்று தெரிந்துதான் இன்று காலையில் இந்த வளையங்களை நடுப் பாய்மரத்தண்டில் பொருத்தினேன்."

இதைக்கேட்ட கண்டியத்தேவன் ஆச்சரியத்துடன் பாய்மரத் தண்டில் கண்களை ஓடவிட்டான். அடியிலிருந்து உச்சிக்குச் சற்றுக் கீழேயிருந்த மரத்தட்டு வரை வரிசையாக ஆறு இரும்பு வளையங்கள் அமைக்கப்பட்டிருந்ததைக் கண்ட கண்டியத்தேவன் அவற்றில் அதிகக் கஷ்டமில்லாமல் யாரும் ஏறிவிட முடியுமென்பதை அறிந்தான். ஆகவே சொன்னான்: "முன்னேற்பாடு செய்திருக்கிறீர்கள்" என்று.

"முன்னேற்பாடில்லாமல் எந்தக் காரியத்திலும் நான் இறங்குவதில்லை என்பது உமக்குத் தெரியாதா?" என்று இளையபல்லவன் வினவினான், அடுத்த வளையத்துக்கு காஞ்சனாதேவியைத் தூக்கிவிட்டுக் கொண்டே.

ஆமென்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்த கண்டியத் தேவன் அப்புறமும் சற்றுத் தயங்கியதல்லாமல், தயக்கத்துடன் கேட்கவும் செய்தான், "இதில் ஏற வேண்டிய அவசிய மென்ன?" என்று.

"காஞ்சனாதேவி கடலழகைக் காண விரும்புகிறாள்" என்றான் இளையபல்லவன்.

"கீழே பக்கப் பலகையில் சாய்ந்து பார்த்தாலே தெரியுமே?"

"தெரியும். ஆனால் மேலேயிருந்து சுற்றிலும் நீண்ட தூரம் கண்ணை ஓட்டுவதுபோல் பக்கப் பலகையிலிருந்து பார்க்க முடியுமா?"

"முடியாது."

"அதனால்தான் காஞ்சனாதேவி உயரே செல்ல விரும்பு கிறாள்" என்று கூறிய இளையபல்லவன், கண்டியத்தேவ னுடன் அதற்குமேல் பேசாமல் மேற்கொண்டு காஞ்சனா தேவியைப் பாய்மரத் தண்டில் ஏற்றுவதில் முனைந்தான். ஒரு வளையத்தில் அவள் கால்களை ஊன்றியதும், தான் கீழ் வளையத்திலிருந்து அவளைத் த்ழுவிய வண்ணம் அடுத்த வளையத்திலேறி அதற்கு மேலிருந்த வளையத்தில் அவளை ஏற்றி, மெள்ள மெள்ள எல்லா வளையங்களையும் தாண்டி மரத்தட்டிற்கு வந்தான். மரத்தட்டில் நின்றபடி பாய்மரத் தண்டில் சாய்ந்து கொண்ட காஞ்சனாதேவி எதிரே விரிந்த காட்சியைக் கண்டு அதன் வனப்பில் மனதைப் பறி கொடுத்தாள்.

இரவு அப்பொழுதுதான் புகுந்திருந்தது. கீழேயிருந்த மரக்கலத்தில் பந்தங்களும் விளக்குகளும் ஜாஜ்வல்யமாக எரிந்து கொண்டிருந்தன. அந்தக் காட்சியைக் கண்ட இரவு களில் ரசித்திருக்கும் காஞ்சனாதேவிக்கு, அந்த உச்சி மரத் தட்டிலிருந்து தெரிந்த அற்புதக் காட்சி பெரும் பிரமிப்பா யிருந்தது. மதியொளி அடியோடு இல்லாததால் எங்கும் இருள் மண்டிக் கிடந்தது. அந்த இருளில்கூட, கடலலைகள் நெடுந் தூரம் மட்டும் கறுப்புத் தூண்களாக மெல்ல உருண்டு கொண்டிருந்தன. ஆகாயம் தனது கறுப்புக் கம்பளியைப் பிரமாதமாக விரித்திருந்தது. அதில் விசிறி எறியப்பட்ட வைரங்கள்போல் நக்ஷத்திரங்கள் ஜொலித்துக் கொண் டிருந்தன. நக்ஷத்திர வைரங்களாலான அந்த வானக் கம்பளம் கடலன்னையைச் சுற்றிலும் தொட்டுப் போர்த்தியிருந்தது. அதன் விளைவாக தொடுவானத்தருகே நக்ஷத்திரங்களை முத்தமிடக் கடலலைகள் முயன்று கொண்டிருந்தன. எல்லாம் தெளிவாகத் தெரியவில்லை காஞ்சனாவின் கண்களுக்கு. இருளின் விளைவாக அரைகுறையாகத்தான் தெரிந்தன. அந்த அரைகுறையே பேரின்பம் தந்தது கடாரத்துக் கட்டழகிக்கு.

பாய் காற்றில் ஆடியதால் அது பிணைக்கப்பட்டிருந்த பாய்மரத்தண்டும் லேசாக ஆடியது. அதன் மீது சாய்ந்திருந்த

காஞ்சனாதேவியும் அத்துடன் ஆடினாள். இடதுகையால் அவளைத் தாங்கிப் பிடித்திருந்த இளையபல்லவனும் ஆடினான். என்ன இன்ப ஊஞ்சலாட்டம் அது! இயற்கையின் மென்மைக் கரங்கள் ஆட்டும் அந்த இன்ப ஊஞ்சலை வாழ்க்கையில் அந்த இடத்தில் தவிர வேறு எந்த இடத்திலும் காணமுடியாதென்று காஞ்சனாதேவி நினைத்தாள். இடையில் அழுந்திக் கிடந்த இளையபல்லவன் கரமும் எதிரே விரிந்த கடலும், வீசிய மென்காற்றும் ஊஞ்சலாட்டமும் எல்லாமே அவளைச் சொர்க்கலோகத்துக்கு இழுத்துச் சென்று கொண் டிருந்தன. அந்த ஆட்டம் மரத்தின் ஆட்டமல்ல, காதலர் மனத்தின் ஆட்டம் என்பதைப் புரிந்து கொண்டாள் காஞ்சனாதேவி. மெல்லிய சிரிப்பு ஒன்றும் அவள் உதடு களிலிருந்து மிக இன்பமாக உதிர்ந்தது.

இளையபல்லவன் அவள் முகத்தை உற்று நோக்கினான். அந்த இருட்டில் அவள் கண்கள் நக்ஷத்திரங்கள் போல் ஜொலித்துக் கொண்டிருந்தன. நெற்றிச் சுட்டியில் சுடர் விட்டுக் கொண்டிருந்த வைரத்தைவிட அந்த எழிலில் அவன் மெய்மறந்தான் சில விநாடிகள். பிறகு கேட்டான், “ஏன் சிரிக்கிறாய் காஞ்சனா?” என்று.

“இந்த ஊஞ்சலாட்டம்..” என்று சம்பந்தமில்லாமல் பதில் சொன்னாள் காஞ்சனாதேவி.

“அதற்கென்ன?”

“இதற்கிணையான இன்பத்தை நான் கண்டதில்லை.”

“கடலில் சஞ்சரிக்காத யாருமே கண்டிருக்க முடியாது?”

“கடலில் கவர்ச்சி...”

“அத்தன்மையது. அதை ஒருமுறை அனுபவித்துவிட்டால் தரையில் வாழ யாரும் இஷ்டப்பட மாட்டார்கள். அமீர் இந்த வாழ்க்கைக்காகத்தானே பாலூர்ப் பெருந்துறையிலிருந்த தன் வாணிபத்தை ஏறக் கட்டிவிட்டான்?”

அந்தப் பழைய சம்பவம் காஞ்சனாதேவிக்கும் நினை விருந்தது. அந்தச் சமயத்தில் அது தங்களுக்காக அமீர் செய்யும்

பெரும் தியாகம் என்று எண்ணினாள் அவள். 'ஆனால் இந்த ஊஞ்சலாட்டம், இந்த மகிழ்ச்சி, இயற்கை தரும் இந்த இன்பம், இதற்கு ஓர் அரசையே வழங்கலாமே' என்று தனக்குள் சொல்லிக் கொண்டாள் காஞ்சனாதேவி.

அவள் பதில் சொல்லாததைக் கண்ட இளையபல்லவன், "என்ன யோசிக்கிறாய் காஞ்சனா? நான் சொன்னதில் தவறு ஏதேனுமிருக்கிறதா?" என்று கேட்டான்.

"இல்லை. ஏதுமில்லை." இன்பமாக உதிர்ந்தது காஞ்சனாவின் பதில்.

"இந்த இன்பம் இணையற்றது காஞ்சனா. இதன் மகிமை-" என்று ஏதோ சொல்ல முயன்ற இளையபல்லவனை இடை மறித்த காஞ்சனா, "இளையபல்லவரைக் கூடப் பொய்யராக அடித்துவிட்டது" என்று கூறிக் கலகலவென நகைத்தாள்.

அந்த நகைப்பை அள்ளிச் சென்ற காற்று கூட நகைத்த தாகத் தோன்றியது இளையபல்லவனுக்கு. "என்ன! என்னைப் பொய்யனாக அடித்துவிட்டதா?" என்று வினவினான் வியப்புடன்.

"ஆம்."

"நான் எப்பொழுது பொய் சொன்னேன்?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"இப்பொழுதுதான்."

"இப்பொழுதுதானென்றால்?"

"சில நிமிஷங்களுக்கு முன்பு."

"யாரிடம் பொய் சொன்னேன்?"

"கண்டியத்தேவரிடம்."

"என்ன பொய் சொன்னேன்?"

"நான் இந்த உச்சிக்கு வர விரும்புவதாகச் சொல்ல வில்லையா?"

"ஆமாம். சொன்னேன்."

"நானா விரும்பினேன்?"

"விரும்பாவிட்டால் மாட்டேனென்று சொல்வது தானே?"

காஞ்சனாதேவி மீண்டும் நகைத்துவிட்டுச் சொன்னாள்: "நன்றாயிருக்கிறது உங்கள் பேச்சு. நீங்கள் தானே சொன்னீர்கள் பாய்மரத்தண்டின் உச்சிக்கு வா, சொர்க்கத்தைக் காண்பாய் என்றெல்லாம்?"

"சொன்னது வாஸ்தவம். நீ முடியாதென்று மறுத்து விடுவதுதானே?" என்ற இளையபல்லவன் கரம் அவள் இடுப்பில் அழுந்தியது.

"மறுக்கக்கூடிய தோரணையிலா இருந்தது உங்கள் விளக்கமும் வீம்பும்?" என்ற காஞ்சனாதேவியின் குரல் பெரிதும் குழைந்தது.

அந்தக் குழைவுக் குரல் இளையபல்லவனைப் பெரிதும் கனிய வைத்தது. அவன் அவளை நெருங்கிச் சாய்ந்தான். அவளும் அவனை நோக்கிச் சாய்ந்தாள். பாய்மரத்தண்டில் சாய்ந்து கிடந்த அந்த இரு காதலர்களும் இயற்கையின் ஊஞ்சலாட்டத்தில் திளைத்து மௌனமாயினர். அவர்களின் இதயங்களிரண்டும் வானப் பறவைகள் போலே நெடுந்தூரக் கனவில் சிறகடித்து நெடுந்தூரம் பறந்தன.

அப்படி நீண்ட நேரம் நின்றிருந்த அந்த இருவரில் இளையபல்லவனுக்கு அருகே எங்கிருந்தோ பறந்து வந்த சிறு பறவையொன்று அவன் தோளில் உட்கார்ந்தது. அதைக் கண்டு பெரிதும் வியந்த இளையபல்லவன், "காஞ்சனா! இதோ பார்!" என்று கூவினான்.

காஞ்சனாதேவி அதைப் பார்த்தாள். "ஏது இது? எங்கிருந்து வந்தது?"

"கடலில் நீண்ட தூரம் பறக்கும் சிறு பறவை இனத்தைச் சேர்ந்தது இது," என்று விளக்கினான் இளையபல்லவன்.

"நீண்ட தூரமென்றால் காதக் கணக்கில் பறக்குமா?"

"ஆம். மூன்று காதங்களுக்குமேல் பறக்கும். இது பறக்கும் காலமும் உண்டு."

"எப்பொழுது பறக்கும்?"

"காற்று திசை மாறும்போது பறக்கும்."

"அப்படியானால் காற்று திசை மாறுமா?"

"ஆம் நாளைக்குள் மாறும்."

இதைச் சொன்ன இளையபல்லவன் முகத்தில் பெரும் திருப்தி ஏற்பட்டதைக் கண்ட காஞ்சனாதேவி அதற்குக் காரணம் புரியாமல் விழித்தாள். "காற்று மாறினால் நமக்கு அனுகூலமா?" என்று வினவினாள்.

"ஆம்."

"அதனால் என்ன பயன்?"

"சீக்கிரம் நாம் சேரவேண்டிய இடத்தை அடையலாம்."

"அக்ஷயமுனைதானே" என்று வினவினாள் காஞ்சனா தேவி.

"அப்படித்தான் வைத்துக் கொள்ளேன்" என்றான் இளையபல்லவன்.

அவன் பேச்சு விசித்திரமாயிருந்தது காஞ்சனாதேவிக்கு. அவன் உள்ளத்தின் ஆழத்தில் ஏதோ யோசனை உலாவுகிற தென்று புரிந்து கொண்டாள் அவள். இருப்பினும் அது என்னவென்று கண்டுபிடிக்க முடியவில்லை அவளால். ஆகவே, "என்ன புதிர் போடுகிறீர்கள்?" என்று கேட்டாள் அவள்.

"கடல் சஞ்சாரத்தில் எது எப்படியாகுமென்று திட்டமாகச் சொல்ல முடியாது காஞ்சனா. இதோ இப்பொழுது அடிக்கிறது இன்பக் காற்று. இதே துன்பக் காற்றாக மாறினாலும் மாறலாம். வாழ்க்கையைப் போலத் தான் கடலும் நிலையற்றது, எப்படியும் மாறும் தன்மை யுள்ளது" என்றன் இளையபல்லவன் சகஜமாக.

அவன் தத்துவம் பேசுவது போலிருந்தாலும் அது தத்துவமல்ல என்பதைப் புரிந்துகொண்டாள் அவள்.

“ஏதாவது மாற்றத்தை எதிர்பார்க்கிறீர்களா?” என்று வினவினாள்.

“ஆம்.”

“என்ன மாற்றம்?”

“இந்த மாதிரிப் பறவைகள் பல, நாளை முதல் கடல் புறாவுக்குக் குறுக்கே பறந்து வரும்.”

“அந்தக் காட்சி இன்பமாயிருக்குமே.”

“இருக்கும். ஆனால் அதைத் தொடர்ந்து மூன்றாம் நாள் வானம் கறுக்கும்.”

“மழை பெய்யுமா?”

“பெய்தாலும் பெய்யும். இல்லாவிட்டாலும் இல்லை. ஆனாலும் நாளை இரவு முதலே நக்ஷத்திரங்களைக் காண முடியாது.”

அப்படி இரவில் கறுத்த வானத்தையும் ஊடே பறந்து வரும் சிறு பறவைகளையும் எண்ணிப் பார்த்த காஞ்சனா தேவி அதுவும் கண்ணைக் கவரும் காட்சிதானென்று நினைத்தாள். “அந்தப் பறவைகளில் இரண்டை எனக்குப் பிடித்துத் தருவீர்களா?” என்றும் கேட்டாள்.

பிடித்துத் தருவதாக ஒப்புக்கொண்டு அதற்காக மறுநாள் பாய்மரத்தண்டிலும் ஏறி இரண்டு பறவைகளைப் பிடித்துக் கொண்டும் வந்தான். வந்ததும் பறவைகளைக் காஞ்சனா தேவியிடம் கொடுத்துவிட்டு, “அமீர்! கண்டியத்தேவரே!” என்று கூவினான் பெரிதாக.

அந்தக் கூச்சலைக் கேட்ட அமீரும், கண்டியத்தேவனும் இரைக்க இரைக்க ஓடிவந்தார்கள். அவர்களை நோக்கித் தீவிழி விழித்த இளையபல்லவன், “நீங்கள் மாலுமிகள்தானா?” என்று சீறினான்.

“என்ன நேர்ந்துவிட்டது இப்பொழுது” என்று மிரண்டு வினவினான் அமீர்.

“கடல் புறா திசை மாறிப் போகிறது. அக்ஷயமுனை மார்க்கம் இதல்ல” என்று கூறினான் இளையபல்லவன். இதைக்கேட்ட இருவரும் அசைவற்று திகைத்து நின்றனர்.

ஏற்பட்ட தவறைச் சுட்டிக் காட்டினான் இளைய பல்லவன். தவற்றை அறிந்த இருவரும் அதைத் திருத்த வெகு வேகமாக விரைந்தார்கள். அவர்கள் விரைந்ததும் இளைய பல்லவன் மட்டும் விரையவில்லை. காஞ்சனாதேவியை அணுகி, “பறவைகள் எப்படி இருக்கின்றன?” என்று கேட்டான்.



அத்தியாயம் 46

# பறவைகள் அளித்த கற்பனை

கடாரத்திலிருந்து கடல் புறா புறப்பட்ட ஐந்தாவது நாளிரவில், அதன் நடுப் பாய்மரத்தண்டின் உச்சியில் இயற்கை சுற்றிலும் விரித்திருந்த கருமையின் சூழ்நிலையில், இன்ப ஊஞ்சலாட்டத்தில், உள்ளத்தையெல்லாம் கொள்ளை போகவிட்டுச் சொக்கிக் கிடந்த காஞ்சனாதேவிக்கு இளைய பல்லவன் தோளிலே வந்து உட்கார்ந்த சின்னஞ்சிறு பறவையும் அதைப்பற்றி அவன் சொன்ன தகவல்களும் விவரிப்பதற்கும் அப்பாற்பட்ட இன்பத்தை அளிக்கவே, அவள் பேசும் சக்தியைக்கூட நீண்ட நேரம் இழந்து கிடந்தாள். அப்படி இயற்கையின் வனப்பில் நெஞ்சத்தை நெகிழவிட்டுக் கிடந்த கடாரத்தின் அஞ்சுகத்தை மெள்ளக் கீழே இறக்கிக் கொண்டு வந்த இளையபல்லவன், கீழே வந்த பின்பும் அவள் பேசும் சக்தியை இழந்து கிடந்ததைக் கண்டு மெல்ல நகைத்தான்.

அந்த நகைப்பில் இயற்கையளித்த மயக்கத்திலிருந்து சற்று விடுபட்ட காஞ்சனாதேவி, "ஏன் நகைக்கிறீர்கள்?" என்று வினவினாள்.

"ஒரேயடியாகப் பேசா மடந்தையாகி விட்டாயே என்பதை நினைக்க நகைப்பு வந்தது," என்ற இளையபல்லவன் அவளை இடையைப் பற்றி அழைத்துக்கொண்டு தனது அறையை நோக்கி நடக்க முற்பட்டான்.

காஞ்சனாதேவியின் கால்கள் அறைப் பக்கம் போக இஷ்டப்படாமல் சத்தியாகிரகம் செய்யவே அவளை நோக்கிய இளையபல்லவன், "ஏன் காஞ்சனா! அறைக்குப் போக வேண்டாமா?" என்று வினவினான் வியப்புடன்.

இடையை அவன் கையிலிருந்து விடுவிக்காமலே மரக் கலத்தின் பக்கப் பலகையை நோக்கித் திரும்பிய காஞ்சனா தேவி, "அறையில் என்ன இருக்கிறது?" என்று கேட்டாள்.

அவள் இடை தன் கையை வேறு பக்கம் இழுப்பதைக் கண்டதுமே அவ்வள் நோக்கத்தைப் புரிந்துகொண்ட இளைய பல்லவன் அவள் சொற்களைக் கேட்டதும் இயற்கை அவளை எத்தனை தூரம் ஆட்கொண்டிருக்கிறதென்பதைப் புரிந்து கொண்டாலும் ஏதுமறியாதவனைப்போல், "என்ன! அறையில் என்ன இருக்கிறதா!" என்று மேலுக்கு வியப்பைக் காட்டி ஒரு கேள்வியையும் கேட்டு வைத்தான்.

"ஆம். அறையில் என்ன இருக்கிறது?" என்று திட்ட வட்டமாகக் கேள்வியைத் திருப்பினாள் காஞ்சனாதேவி.

"என்ன இல்லை அறையில்?" என்று தானும் ஒரு கேள்வியை வீசினான் இளையபல்லவன்.

"இந்த வானம் இருக்கிறதா?" நக்ஷத்திரங்களைத் தாங்கி நின்ற வானத்தைக் காட்டிக் கேட்டாள் காஞ்சனாதேவி.

"வானம் அங்கு எப்படியிருக்கும்? கூரை மறைக்கிறதே?"

"உங்கள் அறைக் கூரை என்ன லட்சணம்?"

"கூரை மரப் பலகைகளில் சித்திர வேலையைப் பார்க்க வில்லையா நீ?"

"இந்த வானக் கூரையின் சித்திர வேலையைப் பாருங்கள். அப்பப்பா! எத்தனை கோடுகள்! எத்தனை வைரக் கொத்துக்கள்! உங்கள் அறைக் கூரை இதைவிடச் சிறந்ததா?"

இளையபல்லவன் வானத்தின்மீது சில விநாடிகள் கண்களை ஓட்டினான். பிறகு ஏதும் பேசாமல் காஞ்சனா தேவியுடன் மரக்கலத்தின் பக்கப் பலகையை அடைந்தான். காஞ்சனாதேவி அதில் நன்றாகச் சாய்ந்து கொண்டு தலையை அண்ணாந்து கொண்டு மெல்ல வீசிக் கொண்டிருந்த இன்பமான காற்றை நாசியால் நுகர்ந்து நன்றாக இழுத்தாள். அவள் கண்கள் பாதி மூடிக்கிடந்தன. அப்பொழுதும் ஓரிரு

பறவைகள் நடுப் பாய்மரத்தண்டில் எங்கிருந்தோ வந்து உட்கார்ந்தன. உட்கார்ந்தது மட்டுமல்ல, அவளை நோக்கவும் செய்தன.

"பார்த்தீர்களா! அதோ, அந்தப் பறவைகள் மீண்டும் வந்திருக்கின்றன" என்று தன் கையால் சுட்டிக்காட்டினாள் காஞ்சனாதேவி நடுப் பாய்மரத்தண்டை.

அதுவரை அவள் எதிரே நின்றிருந்த இளையபல்லவனும் பக்கப் பலகையில் சாய்ந்துகொண்டு அந்தப் பறவைகளை நோக்கினான். "ஆம். மீண்டும் வந்திருக்கின்றன," என்று ஏதோ யோசனையுடன் சொன்னான்.

"இந்தப் பறவைகள் கடாரத்தில் கிடையாது" என்றாள் அவள்.

"கிடையாது." இளையபல்லவனின் இந்தப் பதிலிலும் ஆழ்ந்த யோசனை தெரிந்தது.

"வேறு எங்கிருந்து வருகின்றன இவை?"

"சொர்ணத் தீவிலிருந்து!"

"அப்படியானால் நாம் அக்ஷயமுனையைக் கிட்டி விட்டோமா?"

"இல்லை."

"அக்ஷயமுனைக்கும் நமக்கும் இப்பொழுது எத்தனை தூரமிருக்கும்?"

"இந்தப் பறவைகள் வருவதிலிருந்து மூன்று காதத்துக்குள் இருக்கவேண்டும்."

அவன் பேச்சில் உண்மையில்லைபோல் தோன்றியது காஞ்சனாதேவிக்கு. தான் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் அனாயாசமாகவும் அலட்சியமாகவும் வந்தது போல் தோன்றியது கடாரத்து இளவரசிக்கு. ஆகவே கோபத்துடன் சொன்னாள் அவள், "இங்கு நிற்பது உங்களுக்கு இஷ்டமில்லையென்றால் அறைக்கே போய்விடலாம்" என்று.

"இஷ்டமில்லையென்று யார் சொன்னது காஞ்சனா!" என்று சமாதானப்படுத்த முயன்றான் இளையபல்லவன்.

ஆனால் காஞ்சனாதேவி சமாதானமடையவில்லை. "இஷ்டமில்லையென்று வாயால் சொல்லவேண்டியதில்லை" என்றாள் அவள், கோபம் ததும்பிய விழிகளை அவன் மீது நாட்டி.

"வேறு எப்படி உணர்த்தினேன்?"

"குரலே சொல்லுகிறதே."

"அப்படி எதையும் குரலில் நான் காட்டவில்லையே?"

காஞ்சனாதேவி மேற்கொண்டு பேச விரும்பாமல் சரேலென்று கிளம்பி விடுவிடு என்று அக்ரமந்திரத்தை நோக்கி நடந்தாள். "காஞ்சனா! இரு இரு," என்று இருமுறை இளைய பல்லவன் விளித்ததைக்கூட அவள் லட்சியம் செய்யாமல் விரைந்து சென்றாள். அவள் போவதைப் பார்த்துக் கொண்டு பக்கப் பலகையிலேயே சாய்ந்து நின்றான் படைத்தலைவன். அவள் கோபத்துடன் நடந்து சென்றதால் அவள் பின்னழகு எத்தனை கவர்ச்சிகளை அள்ளித் தெளித்தன என்பதைப் படைத்தலைவன் கண்கள் கண்டாலும் அவன் உள்ளம் மட்டும் அந்த அழகில் லயிக்கவில்லை. அவள் அழகையும் அணுகவிடாத முக்கிய யோசனைகள் பல அவன் உள்ளத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருந்ததால், அவன் பக்கப் பலகையில் நின்றவண்ணம் பல திசைகளில் தலையைத் திருப்பி மெல்ல வந்து கொண்டிருந்த கடற்காற்றை நாசியால் நுகர்ந்தான். பிறகு புடைத்திருந்த பெரும் பாய்களைக் கவனித்தான். அந்த நடுப் பாய்மரத்தண்டில் அப்பொழுதும் உட்கார்ந்திருந்த இரு சின்னஞ்சிறு பறவைகளைக் கவனித்தான்.

அந்தப் பறவைகளிரண்டும் தமிழகத்தில் சாதாரணமாகக் காணப்படும் மைனாவைப் போலவே இருந்தாலும் மைனாவின் நீள உடல் அவற்றுக்கில்லை. உடல் உருண்டு குண்டாகக் கடற் சங்குகள் போல் இருந்தன. பல வர்ணக் கடல் சங்குகளைப் போலவே அந்தப் பட்சிகளிலும் பல

வர்ணங்களுண்டு என்பதை அறிந்திருந்த இளையபல்லவன், அவை ஒன்றுக்கொன்று மூக்குகளால் குத்தி விளையாடிக் கொண்டிருந்ததைச் சிறிது நேரம் பார்த்துவிட்டு அறையை நோக்கி நடந்தான். அக்ரமந்திரத்துக்குள் நுழைந்ததும் உக்கிர மாகப் பஞ்சணையில் உட்கார்ந்திருந்த காஞ்சனாதேவியைக் கண்ட இளையபல்லவன் அவளை மெல்ல அணுகி, "தேவியின் கோபம் சாந்தப்படவில்லை போல் தெரிகிறது" என்றான்.

அந்தக் கேள்விக்குக் கடாரத்து இளவரசி பதில் ஏதும் சொல்லவில்லை. பஞ்சணையிலிருந்து சட்டென்று எழுந் திருந்த காஞ்சனாதேவி தனது அறைக்குள் செல்ல இரண்டடி எடுத்து வைத்தாள்.

"அந்தக் கதவு மறு புறத்திருந்து தாழிட்டிருக்கிறதே, நினைப்பில்லையா உனக்கு?" என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

இரு அறைகளுக்குமிருந்த இடைக்கதவைத் தாழிட்டுத் தன்னை தள்த்தில் பக்கமிருந்த சிறு வாயில் வழியாக வெளியே போய்வர இளையபல்லவன் பணித்திருந்ததை அப்பொழுது தான் உணர்ந்த காஞ்சனாதேவி சட்டென்று மறுபுறம் திரும்பி அறையின் பிரதானக் கதவை நோக்கிச் செல்ல முயன்றாள். அவள் கதவை அடையுமுன்பே அந்தக் கதவை அடைந்து அதைச் சாத்திக் கொண்டு நின்ற இளையபல்லவன், "காஞ்சனா! என்ன கோபம் இது? காரணமில்லாத கோபம்?" என்று கெஞ்சினான்.

"காரணம் இருக்கிற கோபம்தான்." முரட்டுத்தனமாக உதிர்ந்தது அவள் இதழ்களிலிருந்து சொற்கள்.

"என்ன காரணமோ?"

"நீங்கள் அறைக்கு வர ஏன் இத்தனை நேரம்?"

"பக்கப் பலகையில் சாய்ந்திருந்தேன்..."

"இயற்கையழகை ரசித்துக் கொண்டு."

"இல்லை, இல்லை."

"ஆம், ஆம்."

"அதற்காக நிற்கவில்லை காஞ்சனா."

"வேறெதற்கு? பறவைகளைப் பார்க்கவா?"

"ஆம்" என்ற சொல் தவறி வந்துவிட்டது இளைய பல்லவன் வாயிலிருந்து. அவ்வளவுதான், காஞ்சனா எரிமலையானாள். "ஏன் அந்தப் பறவைகளை நான் பார்க்கக் கூடாதோ? நீங்கள் பார்த்தால்தான் புதுப் புதுக் கற்பனைகள் உதிக்குமோ?" என்று விடுவிடு எனச் சொற்களைக் கொட்டிய காஞ்சனாதேவி அவனருகே வந்து, "தயவு செய்து வழியை விடுங்கள்" என்றாள்.

அவள் இரு தோள்களையும் இறுகப் பிடித்தான் இளைய பல்லவன். "இப்படி வா காஞ்சனா. உனக்குச் சில உண்மைகளைச் சொல்கிறேன்," என்று அவளை அழைத்துக் கொண்டு போய் பஞ்சணையில் தனது பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு கூறினான், "காஞ்சனா, நீ சொன்னதில் உண்மையிருக்கிறது" என்று.

"என்ன உண்மை?" காஞ்சனாவின் குரலில் அப்பொழுதும் கடுப்பு இருந்தது.

"பறவைகளைப் பார்க்கும்போது புதுப் புதுக் கற்பனைகள் எனக்கு உதிக்குமோ என்று கேட்டாயல்லவா?"

"ஆம் கேட்டேன்."

"உண்மையில் புதுப் புதுக் கற்பனைகள் எனக்கு உதிக்கும்."

"எனக்கு உதிக்காதோ?"

"எனக்கு உதிக்கும் அளவுக்கு உனக்கு உதிக்காது."

"ஏன்? என் அறிவு..."

"சேச்சே! உன் அறிவைப்பற்றி நான் குறை சொல்லவில்லை."

"வேறெதைப் பற்றியாம்?"

"அனுபவத்தைப் பற்றி. உன்னைவிட எனக்குக் கடல் பயணத்தில் அனுபவம் அதிகம். ஒப்புக்கொள்கிறாயா இல்லையா?"

"உம்! உம்!" அரைகுறை மனத்தோடு ஒப்புக்கொள்வதற்கு அறிகுறியாக அந்த இரண்டு 'உம்'களையும் வெளியிட்டாள் காஞ்சனாதேவி.

"ஆகவே கேள். இந்தப் பறவைகள் பல புதுக் கற்பனைகளை எனக்கு அளிக்க முடியும். உனக்கே தெரியும். எனக்குப் பறவைகள் அளிக்கக்கூடிய கற்பனைகளும் உண்மைகளும் அதிகம்" என்று உணர்த்தினான் இளையபல்லவன்.

"எப்படி எனக்குத் தெரியும்?" என்று வினவினாள் காஞ்சனாதேவி.

"நன்றாகச் சிந்தித்துப் பார்."

"சிந்தித்துப் பார்த்தேன், புரியவில்லை. நீங்களே சொல்லுங்கள்."

இளையபல்லவன் பஞ்சணையில் உட்கார்ந்தபடி அறையின் மரத்தரையை நோக்கிக்கொண்டு சொன்னான் "காஞ்சனா! உன் நினைப்பைக் கடந்த காலத்துக்கு ஓட்டு' என்று.

"கடந்த காலமா?"

"ஆம்! பாலூர்ப் பெருந்துறையில் நாம் சந்தித்த காலத்துக்கு." அவள் எண்ணங்கள் அந்தக் காலத்துக்குப் பின்நோக்கி ஓடின. அவள் பாலூர்ப் பெருந்துறை வெளிநாட்டுப் பிரமுகர் வீதியிலுள்ள அந்த மாடியறையை நினைத்தாள். அதனால் உடல் புல்லரிக்க, "ஆம்! ஓர் அறையில் வந்து குதித்தீர்கள் திருடன்போல்" என்றாள்.

"திருடன்போல்தான். எதையும் திருடவில்லை" என்றான் இளையபல்லவன்.

"ஏன் திருடவில்லை? என் இதயத்தைத் திருடினீர்கள்," என்ற காஞ்சனாதேவி இன்பப் புன்முறுவல் கொண்டாள்.

"அப்படியானால் நீயும் திருடிதான். என் இதயத்தை நீ மட்டும் திருடவில்லையா?" என்ற இளையபல்லவன், "அது கிடக்கட்டும் காஞ்சனா! நானும் நீயும் உன் தந்தையும் உட்கார்ந்திருந்தபோது அறைச் சாளரத்தில் வந்து உட்கார்ந்ததே ஒரு பறவை..." என்று மேலும் ஏதோ சொல்லப் போனவனை இடைமறித்த காஞ்சனாதேவி, "ஆமாம், வெண் புறா வந்தது! எத்தனை அழகு அது!" என்றாள்.

"ஆம் காஞ்சனா, மிக அழகிய வெண்புறா அது. உனக்கு அதன் அழகு மட்டும்தான் தெரிந்தது. ஆனால் என் அறிவு அத்துடன் திருப்தியடையவில்லை."

"ஆம், ஆம், நினைப்பிலிருக்கிறது. நீங்கள்தான் அது தூதுப் புறா என்று கண்டுபிடித்தீர்கள்."

"என் கற்பனை உன் கற்பனைக்கு அப்பாலும் ஓடியது அந்தப் புறாவைக் கண்டதும். அதன் உடலிலிருந்து அநபாயரின் தூதுச் செய்தியை எடுக்கவில்லை நான்?"

"ஆம் எடுத்தீர்கள்."

"பிறகு அன்றிரவு..."

"உங்கள் அறையை நோக்கி அந்த வெண்புறா ஓடி வந்தது..."

"தவறு."

"என்ன தவறு?"

"ஓடி வந்தவை இரண்டு வெண்புறாக்கள். நீயும் அன்றிரவு வெண்பட்டுத்தான் கட்டியிருந்தாய்."

"நன்றாய் இருக்கிறது! கற்பனை அளவு மீறிப் போகிறது."

"நான்தான் சொன்னேனே பறவைகளைக் கண்டால் என் கற்பனை அதிகமாகுமென்று. அந்தத் தூதுப் புறா கொடுத்தது ஒரு வீட்டுப் புறாவை. அந்த வீட்டுப்புறாவின் நினைப்பி லிருந்து எழுந்தது கடல் புறா."

பழைய நினைவுகள் காஞ்சனாதேவியின் சிந்தனையில் வலம் வந்தன. அவன் தன்னை வீட்டுப் புறாவென்றும்

மறுநாள் மரக்கலத்தில் செல்ல இருந்ததால் கடல்புறா வென்றும் அமீர் விடுதியின் தனி அறையில் தாங்களிருவரும் தனித்திருந்த இரவில் கூறியிருந்தது நன்றாக நினைப்பில் சுழன்றது அவளுக்கு. அந்த நினைப்பினாலேயே அவன் அந்த மரக்கலத்துக்குக் கடல்புறாவெனப் பெயர் சூட்டினானென்ப தையும் உணர்ந்திருந்தாள் அவள். ஆகவே முணுமுணுத்தாள், "ஆம் ஆம்! பறவைகள் உங்களுக்கு அளவற்ற கற்பனைகளை அளிக்கின்றன" என்று.

இளையபல்லவன் அவளை இறுக அணைத்துக்கொண்டு "இன்னும் பார் காஞ்சனா, இந்தப் பறவைகள் எனக்களித் துள்ள கற்பனையின் விளைவை? நாளை முதல் இன்று பார்த்ததுபோல் பலப்பல வர்ணங்களில் பலப்பல பறவைகள் தளத்தில் குறுக்கும் நெடுக்கும் பறக்கும். சின்னஞ்சிறு குண்டு குண்டு பறவைகள், எல்லாவற்றுக்கும் மஞ்சள் மூக்கு, ஆனால் உடலோ மஞ்சள் நிறம், மேகவர்ணம், வெள்ளை வர்ணம், வெள்ளையில் கறுப்புத் திட்டுகள், இப்படிப் பல வகையா யிருக்கும் அவை பறக்கும் தளத்தில் என் கற்பனையும் அவற்றுடன் பறந்து பறந்து சுழலும். விளைவைப் பார்! பார் காஞ்சனா!" என்று உணர்ச்சி மிகுதியுடன் கூவினான் இளையபல்லவன்.

பறவைகளை நினைத்து ஏன் இத்தனை கூச்சல் போடுகிறான் படைத்தலைவன் என்பது புரியவில்லை காஞ்சனாதேவிக்கு. அவனை அதிகம் வற்புறுத்திக் கேட்க இஷ்டப்படாத காஞ்சனாதேவி அவனுக்கு உணவளித்துத் தானும் உண்டு தன் அறைக்குச் சென்றாள்.

மறுநாள் பொழுது புலர்ந்ததும் கண்ணை விழித்த காஞ்சனாதேவியின் முகம் பெரும் தாமரையென மலர்ந்தது. அவள் அறைச் சாளரத்தில் சின்னஞ்சிறு பறவைகள் இரண்டு உட்கார்ந்து அவளை உற்றுப் பார்த்தன.

"உங்களைக் கண்டால் அவருக்குக் கற்பனை ஓடுமா?" என்று அவற்றை நோக்கி வாய்விட்டே கேட்டாள் காஞ்சனா தேவி.

அவை இரண்டும் அவள் கேள்வியைப் புரிந்து கொண்டனபோல் தலையை ஆட்டின. அவற்றின் அழகில் மெய்மறந்த காஞ்சனாதேவி பஞ்சணையை விட்டு எழுந் திருந்து அவற்றைப் பிடிக்கச் சென்றாள். அவள் எழுந்து இரண்டடி வைத்ததும் அவை அறையின் குறுக்கே பாய்ந்து அறையில் சுற்றலாயின. விர்விர்ரென்று சுற்றிய அந்தப் பறவை களைக் கண்டு ஆனந்தத்துடன் அறைக்கதவைத் திறந்து தளத்துக்கு வந்த காஞ்சனாதேவி அங்கு எழுந்த காட்சியைக் கண்டு பிரமித்தாள். நூற்றுக்கணக்கான பறவைகள் தளத்தில் பறந்து கொண்டிருந்தன. குறுக்கும் நெடுக்கும் நடந்து கொண் டிருந்த மாலுமிகளின் தலைகளின்மீது கூட இரண்டொன்று உட்கார்ந்தது.

இவற்றையெல்லாம் கண்டு பிரமித்தவண்ணம் தளத்திலேயே ஒரு மாலுமியை நீர் கொண்டு வரச் சொல்லிப் பல் துலக்கி முகம் கழுவிய காஞ்சனாதேவி நீண்ட நேரம் காலை உணவைக்கூட அருந்தவில்லை. அவளை இளைய பல்லவனே வந்து அழைத்துப் போய் வலுக்கட்டாயமாக ஒரு குவளை கஞ்சியைக் குடிக்க வைத்தான். "பறவைகளைப் பார்த்தீர்களா?" என்று கேட்டாள் காஞ்சனாதேவி அந்த நவதானியக் கஞ்சியைக் குடிப்பதைப் பாதியில் நிறுத்தி.

"பார்த்தேன்."

"உங்கள் கற்பனை?"

"அதிகரித்திருக்கிறது."

"எத்தனை தூரம்?"

"மாலையில் தெரியும்." இந்தப் பதிலைத் திட்டமாகத் தெரிவித்தான் இளையபல்லவன். அந்தக் குரலிலிருந்த உறுதியின் காரணம் அப்பொழுது புரியவில்லை அவளுக்கு. ஏன், மாலையில்கூடப் புரியவில்லை. புரிய இரண்டு நாட்கள் பிடித்தன. ஆனால் அன்று மாலை நேரத்தில் இளைய பல்லவன் கற்பனை ரகசியம் புரியாவிட்டாலும், மாலையில் அவன் சொன்னபடி பறவைகள் அதிகமாக வந்தன.

அந்த நேரத்தில் தளத்தின் பக்கப் பலகையில் நின்று கொண்டிருந்த இளையபல்லவனை நோக்கிய காஞ்சனாதேவி பாய்மரத்தண்டில் தொத்திக் கொண்டிருந்த பறவைகளைக் காட்டி, "அந்தப் பறவைகளில் இரண்டை எனக்குப் பிடித்துத் தருவீர்களா?" என்று வினவினாள்.

"இதோ பிடித்துக்கொண்டு வருகிறேன்," என்று சொல்லி விட்டு நடுப் பாய்மரத்தண்டில் ஏறிப்போன இளையபல்லவன் இரண்டு பறவைகளைப் பிடித்துக்கொண்டு வானத்தை ஒரு விநாடி ஆராய்ந்துவிட்டு கிடுகிடுவென்று கீழே இறங்கி வந்ததும் காஞ்சனாதேவியின் கைகளில் பறவைகளைத் திணித்துவிட்டு, "அமீர்! தேவரே!" என்று படபடப்புடன் இரைந்தான்.

அவன் கூச்சலைக் கேட்டு ஓடிவந்த அந்த இருவரையும் மிகுந்த உக்கிரத்துடன் நோக்கிய இளையபல்லவன், "நீங்கள் மாலுமிகள் தானே? உங்களுக்கு மரக்கலம் செலுத்திப் பழக்கமுண்டா?" என்று சீறினான்.

"இளையபல்லவரே!" அமீர், தேவன் இருவர் குரலும் ஏககாலத்தில் கோபத்துடன் எழுந்தன.

அவர்கள் கோபத்தை லட்சியம் செய்யாத இளைய பல்லவன், "கோபித்துப் பயனில்லை. கப்பல் திசை மாறிப் போகிறது. அக்ஷயமுனைக்குப் போகவில்லை" என்றான்.

"என்ன?"

"இப்பொழுதுதான் நடுப் பாய்மரத்தண்டின் உச்சியிலேறி காஞ்சனாதேவிக்குப் பறவைகள் பிடித்து வருகிறேன்."

"அதனாலென்ன?" அமீரின் கேள்வியில் குழப்ப மிருந்தது.

"அதனால்தான் துருவ நக்ஷத்திரத்தைப் பார்க்க முடிந்தது. அக்ஷயமுனைக்குப் போக வேண்டுமானால் துருவ நக்ஷத்திரம் கடல்புறாவின் பின்பக்கத்தில் இருக்க வேண்டும். இடப் பக்கத்திலிருக்கிறது."

அதைக்கேட்ட அமீர் பிரமிப்படைந்து, "இதோ பார்க்கிறேன்" என்று கூறி நடுப் பாய்மரத்தண்டில் ஏறப் போனான்.

"அங்கு போய் பயனில்லை. மேகங்கள் நக்ஷத்திரத்தை மறைத்துவிட்டன," என்ற இளையபல்லவன் குரலில் வெறுப்பு இருந்தது.

"இப்பொழுது என்ன செய்வது?" என்று கண்டியத்தேவன் கேட்டான்.

"என் அறையிலுள்ள பேழையை எடுத்துத் திசை காட்டும் கருவியைப் பார்த்துத் திசையைச் சரி செய்யுங்கள்" என்று உத்தரவிட்டான் இளையபல்லவன். அமீரும் கண்டியத் தேவனும் விரைந்தனர் படைத்தலைவன் அறையை நோக்கி. அவர்கள் போவதைப் பார்த்துவிட்டுத் திருப்திக்கு அறிகுறியாகத் தலையை அசைத்த இளையபல்லவன் காஞ்சனா தேவியிடம் நெருங்கி, "பறவைகள் எப்படி இருக்கின்றன?" என்று வினவினான்.

"எனக்கு ஏதுமே விளங்கவில்லை" என்றாள் காஞ்சனா தேவி.

"விளங்காமலென்ன? பறவைகள் எனக்குக் கற்பனை யளித்தன" என்றான் இளையபல்லவன்.

"இன்னும் விளங்கவில்லை" என்றாள் காஞ்சனாதேவி.

"இரண்டு நாளில் விளங்கும்" என்று இளையபல்லவன் கூறினான். இரண்டு நாளில் விளங்கத்தான் செய்தது. ஆனால் எத்தனை பயங்கர விளக்கம் அது! பறவைகள் அளித்த கற்பனையின் விளைவு அப்படியா இருக்க வேண்டும்?

அத்தியாயம் 47

# முதலை வாய்க்குள்ளே...!

பறவைகள் தனக்களித்த கற்பனையின் விளைவு இரண்டு நாட்களில் தெரியுமென இளையபல்லவன் கூறியபோது, அவன் சொற்களில் புதைந்து கிடந்த முழு உண்மை காஞ்சனா தேவிக்கு விளங்கவில்லையானாலும், அது விளங்கியபோது அவள், படைத்தலைவன் எத்தனை சூட்சுமமாக வேலை செய்திருக்கிறானென்பதை நினைத்துப் பெரிதும் வியந்தாள். அவள் மட்டுமல்ல, அமீரும், கண்டியத்தேவனும் கூட வியக்கவே செய்தார்கள். ஆனால் அவர்கள் வியப்பில் பெரும் ஆத்திரமும் ஏமாற்றமும் கலந்திருந்தன. திசை காட்டும் கருவிகளைப் பார்த்து மரக்கலத்தின் திசையைச் சரிசெய்யும் படி படைத்தலைவன் கூறியதும் அதை நிறைவேற்ற அமீரும் கண்டியத்தேவனும் விரைந்த சமயத்தில் அவர்களுக்குத் தோன்றாத உண்மைகள் இரண்டு நாட்கள் கழித்தே தோன்றின. தோன்றின சமயத்திலோ நிகழ்ந்துவிட்ட தவறைத் திருத்த மார்க்கமில்லாது போயிற்று அவ்விருவருக்கும். ஆனால் இரண்டு நாட்களுக்குப் பிறகு ஏற்படவிருந்த விளைவை உணராமல் திசை காட்டும் கருவிப் பேழையைப் பார்க்கச் சென்ற சமயத்தில் அமீருக்கும் கண்டியத்தேவனுக்கும் இருந்த பரபரப்பில் அவர்கள் இருவரும் இளையபல்லவன் காட்டிய அசிரத்தையைப் பற்றியும் அலட்சியத்தைப் பற்றியும் இம்மியளவு கூடச் சிந்தித்தார்களில்லை. கூரிய புத்தியுடைய அமீர் கூட அதைப்பற்றிச் சிறிதும் சிந்தியாமலே படைத் தலைவன் அறையை நோக்கி விரைந்தான், பேழையைப் பார்த்துக் கப்பல் திசையை அறிந்துகொள்ள.

இளையபல்லவன் உத்தரவுப்படி அக்ரமந்திரத்துக்குள் நுழைந்து அங்கிருந்த பெரும் பெட்டியைத் திறந்து பேழையை

எடுத்து அதனுள்ளிருந்த திசை காட்டும் கருவியைக் கண்டு பெரும் குழப்பமடைந்த அமீர் அந்தக் குழப்பத்துடனேயே, "இதோ பாருங்கள் தேவரே!" என்று தேவனிடம் திசை காட்டும் கருவியை நீட்டினான்.

பேழையைக் கையில் வாங்கி இரண்டு மூன்று முறை அதிலிருந்த முள்ளைப் பல திசைகளில் திருப்பிப் பார்த்த கண்டியத்தேவன் முகத்திலும் குழப்பமிருந்தது. "விசித்திரமா யிருக்கிறது அமீர்!" என்றான் கண்டியத்தேவன், குரலிலும் குழப்பம் துலங்க.

அமீர் மீண்டும் திசை காட்டும் கருவியைக் கையில் வாங்கி அதன் காந்தமுள்ளைக் கவனித்தான் பல விநாடிகள். பிறகு சொன்னான், "ஆம் தேவரே! விசித்திரமாகத்தானிருக் கிறது" என்று.

"கடாரத்திலிருந்து தென்மேற்கில் இருக்கிறது அக்ஷய முனை" என்று இழுத்தான் கண்டியத்தேவன்.

"ஆம்." அமீரின் சொல் உயிரின்றி வெளிவந்தது.

"தென்மேற்கு செல்லத்தான் சுக்கானைத் திருப்பிக் கொடுத்தேன் சேந்தனிடம்" என்று மீண்டும் கூறினான் கண்டியத்தேவன்.

"பாய்களையும் அதற்கு வேண்டிய முறையில்தான் நானும் விரிக்கச் சொன்னேன்" என்றான் அமீர்.

"அப்படியிருக்க இது இத்தனை தூரம் திசை மாறி ஓடவேண்டிய காரணம்?" கண்டியத்தேவன் குரலில் சந்தேகம் இருந்தது.

"அதுதான் எனக்கும் புரியவில்லை" என்று அமீர் கண்டியத்தேவனை ஏறிட்டு நோக்கினான்.

அந்த நோக்கிலிருந்த கேள்வி கண்டியத்தேவனுக்கு நன்றாகப் புரிந்தது. இருப்பினும் அதை வாயால் சொல்ல அவன் இஷ்டப்படவில்லை. "அமீர்!" என்ற எச்சரிக்கைக் குரலொன்றை மட்டும் கொடுத்தான் தேவன்.

ஆனால் அந்த எச்சரிக்கையையும் மீறித் துணிவை வரவழைத்துக் கொண்ட அமீர், "ஏன் வாய்விட்டுத்தான் பேசுவோமே, அவர்தான் இங்கில்லையே" என்று துவங்கி னான்.

"இருந்தாலும் படைத்தலைவரைச் சந்தேகிப்பது தவறல்லவா?" என்றான் கண்டியத்தேவன்.

"தவறுதான். இருந்தாலும் இந்தத் திசை மாற்றம் ஏற்பட்டு இரண்டு நாட்கள் ஆகியிருக்க வேண்டுமே. இதுவரை அவர் ஏன் நம்மை எச்சரிக்கவில்லை?" என்று கேட்டான் அமீர்.

"நேற்றுதான் துருவ நக்ஷத்திரத்தைக் கவனித்தாரோ என்னமோ?" என்று படைத்தலைவனை ஆதரிக்கும் முறையில் பேசினான் கண்டியத்தேவன்.

அப்படியிருந்தாலும் இருக்குமென அமீர் நினைத்தா னானாலும் இதில் தனக்கு விளங்காத ஏதோ சூட்சுமம் இருப்பதாகத் தோன்றியது அமீருக்கு. "என்னவோ தேவரே! எனக்குச் சந்தேகமாகத்தானிருக்கிறது" என்றான் அமீர்.

"எதில் சந்தேகம்?" கண்டியத்தேவன் ஏதும் புரியாமல் கேட்டான்.

"நாம் உண்மையில் திசைதான் மாறியிருக்கிறோமா என்பதில்."

"அதில் சந்தேகத்துக்குக் காரணமில்லையே. திசை காட்டும் கருவிதான் திட்டமாக வடக்கை எதிர்ப்புறம் தள்ளிக் காட்டுகிறதே. கருவிகூட இளையபல்லவருடன் சேர்ந்தா சதி செய்யும்?"

கண்டியத்தேவனின் இந்தக் கேள்வி நியாயமாகத்தான் பட்டது அந்தச் சமயத்தில் அமீருக்கு. ஆகவே அவன் கடைசியில் தேவனுடன் தளத்துக்கு மீண்டபோது தவறைச் சரி செய்யும் தீர்மானத்துடனேயே வந்தான். அக்ரமந்திரத்தி லிருந்து வெளிவந்த அவ்விருவரையும் ஓரக்கண்ணால் கவனித்தும் கவனிக்காதவன் போலவே பக்கப் பலகையில்

சாய்ந்து கொண்டு காஞ்சனாதேவியுடன் பேசிக்கொண்டிருந்த இளையபல்லவனை அமீரே நெருங்கி, "படைத் தலைவரே! பேழையைப் பார்த்தோம் நானும் தேவரும்" என்றான்.

"நான் ஒருவேளை..." என்று சந்தேகப்படுபவன் போல் துவங்கினான் இளையபல்லவன்.

"இல்லை இல்லை. நீங்கள் சொன்னதில் தவறில்லை" என்று குறுக்கே புகுந்து சொன்னான் அமீரின் பக்கத்தில் நின்றுகொண்டிருந்த கண்டியத்தேவன்.

"எனக்கே சிறிது சந்தேகமாகத்தானிருந்தது முதலில்" என்றான் இளையபல்லவன் மீண்டும், தளத்தில் வந்து கொண்டிருந்த காற்றை முகர்ந்து.

"அப்படியா?" அமீரின் கேள்வியில் சந்தேகம் தொனித்தது.

இளையபல்லவன் அமீரைப் பார்க்காமல் வானத்தைப் பார்த்துக்கொண்டு சொன்னான்: "நான் காஞ்சனாதேவிக்குப் பறவைகளைப் பிடிக்க உச்சி மரத்துக்கு ஏறியபோது தற்செயலாகத்தான் துருவ நட்சத்திரத்தைப் பார்த்தேன். நான் பார்த்துக்கொண்டே இருக்கையில் மேகங்கள் அதன்மீது ஊர்ந்துவிட்டன. இருப்பினும் திட்டமாக அந்த நட்சத்திரம் பக்கவாட்டிலிருந்ததாகத் தோன்றிற்று. எதற்கும் திசை காட்டும் கருவியைப் பார்த்துவிடுவது நல்லதென்று தோன்றியது எனக்கு" என்று.

அமீர் இதற்குப் பதிலேதும் சொல்லவில்லை. "அப்படியானால் திசையை மாற்றிவிடட்டுமா?" என்று கேட்டான்.

"உனக்குச் சரியென்று தோன்றுவதைச் செய், அமீர்" என்றான் இளையபல்லவன்.

"உங்கள் உத்தரவு..." அமீர் ஏதோ சொல்ல முற்பட்டான்.

"என் உத்தரவுப்படி காரியங்கள் நடப்பதானால் இந்த மரக்கலம் அக்ஷயமுனை போகாது. ஆனால் என்

உத்தரவையும் மீறிய உத்தரவு உனக்கிடப்பட்டிருக்கிறதே அமீர். அதன்படி நடந்துகொள். நான் ஏதாவது சொல்லி அதன்படி நீங்கள் நடந்து தவறு ஏற்பட்டால் பொறுப்பு என்மேல் விழும். பொறுப்பை நான் ஏற்கத் தயாரில்லை" என்று திட்டவட்டமாகச் சொன்னான் இளைய பல்லவன்.

அமீரும் கண்டியத்தேவனும் என்ன சொல்வதென்றறியாமல் ஸ்தம்பித்து நின்றார்கள். அநபாயரின் உத்தரவை நிறைவேற்றுவதில் இளையபல்லவனுக்கு அடியோடு இஷ்டமில்லை என்பதை அவர்கள் ஆரம்பத்திலிருந்தே அறிந்து இருந்தபடியால் இளையபல்லவன் மனக்கசப்பு அவர்களுக்குப் புரிந்தேயிருந்தது. அதைப் புரிந்துகொண்டதால் பேசச் சக்தியற்று நின்ற தன் இரு உபதலைவர்களையும் நோக்கிய இளையபல்லவன் சொன்னான், "அமீர்! தேவரே! கடலோட்டம் உங்களுக்குப் புதிதல்ல. இருப்பினும் அநபாயர் உத்தரவை நிறைவேற்றுவதிலிருந்த மும்முரத்தில் நீங்களிருவரும் சுக்கானையும் பாய்களையும் தவிர வேறெதையும் கவனிக்கவில்லை. இந்தப் பறவைகளின் வருகை, காற்றின் திசை மாற்றத்தைக் கூறுகிறதென்பது உங்களுக்குப் புதிதா? வடமேற்குப் பருவக் காற்று இரண்டு நாட்களாகவே துவங்கி விட்டது. ஆகையால் பாய்கள் அளவுக்கதிகமாகப் புடைத்துத் தென்கிழக்குத் திசையில் அளவுக்கதிகமாக மரக்கலத்தை ஓட்டிவிட்டது. நாம் அக்ஷயமுனைப் பாதையை விட்டு வேறெங்கோ போகிறோம். இதையெல்லாம் மாலுமிகளாகிய நீங்கள் ஏன் கவனிக்கவில்லை?" என்று.

படைத்தலைவன் சொன்ன வார்த்தைகளில் உண்மை பெரிதும் ததும்பி நின்றதை இருவரும் கவனிக்கவே செய்தார்கள். பறவைகள் வருவது காற்றின் திசைமாற்றத்தைக் குறிக்குமென்றாலும் அந்த திசை மாற்றத்தால் இரண்டு நாள் ஓட்டத்தில் மரக்கலம் அதிகமாகக் கடற் சுவட்டை மாற்றியிருக்க முடியாதென்பது மட்டும் அவ்விருவருக்கும்

புரிந்திருந்தது. ஆகவே இருவரும் சற்று விழித்துக்கொண்டு நின்றார்கள். அந்த விழிப்பின் காரணத்தைப் புரிந்துகொண்ட இளையபல்லவன் மேலும் சொன்னான்: "எனக்கே சந்தேக மாகத்தானிருந்தது அமீர். இரண்டு நாள் காற்று மாற்றத்தில் கப்பல் அப்படி •அதிகம் பாதையைவிட்டு விலக முடியாதே என்று நினைத்தேன். ஆனால் துருவ நக்ஷத்திரம் திட்டமாக அறிவித்தது வழி தவறிவிட்டோம் என்று. ஆகையால்தான் எதற்கும் திசை காட்டும் கருவியைப் பார்க்கச் சொன்னேன்" என்று.

இந்த விளக்கத்துக்குப் பின் அமீருக்கும் கண்டியத் தேவனுக்கும் சந்தேகம் அடியோடு நீங்கிவிட்டதால் இருவரும் நேர்ந்துவிட்ட தவறைச் சரிசெய்யச் சென்றுவிட்டார்கள். அமீர் சுக்கானைத் திருப்பச் சென்றான். கண்டியத்தேவன் மாலுமிகளை விளித்து நடுப் பாயையும், மரக்கலத்தின் இடது பக்கத்திலிருந்த இரு பாய்களையும் இறக்க உத்தரவிட்டான். அடுத்த நான்கு நாழிகைகளுக்குள் கடல் புறா அதன் வலப் பக்கத்திலிருந்த இரண்டே பாய்களை மட்டும் புடைத்துக் கொண்டு ஓடியதாலும், கீழறையில் துடுப்புத் துழாவுவோர் துடுப்புக்களைப் பலமாக இழுத்ததாலும் சுக்கான் மாற்றிப் பிடிக்கப்பட்டதாலும் கடல் புறாவின் மூக்கு மீண்டும் திசை மாறித் திரும்பியது.

அன்றிரவு பூராவும் மேற்குப் பக்கமே ஓடிக்கொண் டிருந்த கடல் புறாவின் திசையை மறுநாள் அமீர் மெள்ளத் தெற்கு நோக்கித் திருப்பினான். திசை காட்டும் கருவியை முதல் நாளிரவும் அன்று காலையும் பலமுறை தளத்திலேயே கொண்டுவந்து பார்த்த அமீர் தான் மரக்கலத்தைச் செலுத்தும் திசை சரிதானென்றும், முதலில் ஏதோ தவறு தான் நேர்ந்திருந்ததென்றும் தீர்மானித்தான். அன்று பூராவும் வானம் மூடிக் கிடந்தது. காற்று மெள்ள மெள்ள வலுத்து மேகங்கள் கூட்டம் கூட்டமாக வந்து கொண் டிருந்தன. விட்டு விட்டுச் சிறு சிறு தூறலும் போட்டது. அந்தத் தூறலிலும் இளையபல்லவன் தளத்துக்கு வந்து

கடல் புறாவின் திசையைக் கவனித்துக் கொண்டும் மாலுமிகளுக்குக் கண்டியத்தேவனும் அமீரும் இட்டுக்கொண்டிருந்த உத்தரவுகளைப் பார்த்துக்கொண்டும் தளத்தில் உலாவினான்.

அவன் அப்படி உலாவிக் கொண்டிருந்த சமயத்தில் கடல் புறாவுக்குப் பின்னால் வந்து கொண்டிருந்த மரக்கலத்திலிருந்து சங்கு ஒன்று பெரிதாக ஊதப்படவே அமீரும் கண்டியத்தேவனும் கடல் புறாவின் பின்பகுதிக்கு ஓடி வந்தார்கள். அந்த மரக்கலத்தின் தளத்தில் நின்ற ஒருவன் இரு கைகளாலும் ஏதோ சைகை செய்தான். அந்தச் சைகையைக் கவனித்த அமீர், "எதற்காக அந்தப் பாலிக்குள்ளன் கையை வீசுகிறான்?" என்று விசாரித்தான் தேவனை.

கண்டியத்தேவன் பாலிக்குள்ளன் கையாட்டத்தைச் சில விநாடிகள் கவனித்துவிட்டு, "நாம் மரக்கலத்தின் திசை மாற்றியதைப் பற்றி ஏதோ சொல்கிறான்" என்றான்.

"என்ன சொல்கிறான்?" என்று அமீர் கேட்டான்.

"திசையை ஏன் மாற்றிவிட்டீர்கள் என்று கேட்கிறான்," என்று விளக்கினான் தேவன்.

"அதைக் கேட்பதற்கு இவன் யார்? கடல் புறாவைத் தொடர்ந்து வரச் சொல்லுங்கள்," என்று கூறிய அமீர், அந்த இடத்தை விட்டுத் தன் அலுவலைக் கவனிக்கச் சென்றான். அவன் கூறியபடியே பாலிக்குள்ளனை நோக்கிப் பதில் சைகை செய்த கண்டியத்தேவன் விடுவிடு என்று பாய்களை நோக்கி நடந்தான்.

அங்கு நடந்த அத்தனையையும் கவனிக்காதவன் போல் உலாவிக் கொண்டிருந்த இளையபல்லவன் கடல் புறாவின் பின்பகுதிக்குச் சென்று பின்னால் வந்த மரக்கலத்தை நோக்கினான். இளையபல்லவனைக் கண்டதும் பாலிக்குள்ளன் பலமாகக் கைகளை ஆட்டினான். மேற்புறமும்

கீழ்ப்புறமும் கைகளை ஆட்டி, ஏதோ ஆட்சேபித்தான். அந்தச் சைகைகளுக்கு எந்தப் பதில் சைகையையும் காட்டாமல் புன்முறுவலுடன் நின்றுகொண்டிருந்த இளையபல்லவன் திடீரெனத் திரும்பினான். அவன்மீது மோதிவிடுபவள்போல் காஞ்சனாதேவி நின்றுகொண்டிருந்தாள்.

வானம் பன்னீர் தெளித்துக் கொண்டிருந்தது. அந்தத் தூறலில் சில காஞ்சனாதேவியின் முகத்தில் முத்துக்களென மின்னின. இளையபல்லவன் அந்தத் தூறல் அவள் முகத்துக்குச் சூட்டிய முத்துக்களைக் கையால் துடைத்து, "இந்தத் தூறலில் ஏனிங்கு வந்தாய்?" என்று வினவினான்.

அவள் அதற்கு நேரடியாகப் பதில் சொல்லவில்லை. "அந்தப் பாலிக்குள்ளன் எதற்குக் கையாட்டுகிறான்?" என்று விசாரித்தாள்.

"மரக்கலத்தின் திசையை மாற்றியதை ஆட்சேபிக்கிறான்."

"ஏன்?"

"அவனைத்தான் கேட்க வேண்டும்?"

"எப்பொழுது கேட்கலாம்?"

"அவன் இங்கு வரும்போது."

"எப்பொழுது வருவான்?"

"இரண்டு நாட்களில்."

"எல்லாம் இரண்டு நாட்களிலா?"

"ஆம்."

ஏதும் விளங்கவில்லை காஞ்சனாதேவிக்கு. ஆனால் இரண்டு நாள் கழித்து மீண்டும் சைகைகளைப் பலமாகச் செய்து கடல்புறாவின் ஓட்டத்தைத் தளர்த்தச் சொல்லித் தனது மரக்கலத்திலிருந்து ஒரு படகில் வந்த பாலிக்குள்ளன் அமீரையும் கண்டியத்தேவனையும் சுடுவிழிகளால் நோக்கினான். "நீங்கள் இப்பொழுது இருக்குமிடம் தெரியுமா?" என்று உஷ்ணத்துடன் கேட்டான்.

"எங்கிருக்கிறோம்?" என்று மிகுந்த உஷ்ணத்துடன் எழுந்தது அமீரின் கேள்வி. அவன் பெருவிழிகள் பயங்கரமாக உருண்டன.

அந்த விழிகளை அறவே லட்சியம் செய்யாத பாலிக்குள்ளன், "முதலையின் வாய்க்குள் இருக்கிறீர்கள்" என்றான்.

"விளங்கவில்லை எனக்கு" என்றான் அமீர், உஷ்ணம் சிறிதும் தணியாத குரலில்.

"இன்னும் அரை காதத்தில் மலையூர் இருக்கிறது," என்று பெரும் வெடியை எடுத்து வீசினான் பாலிக்குள்ளன்.



## அத்தியாயம் 48

# அபயம்

கடல் புறா திசை திருப்பப்பட்ட இரண்டாவது நாள் அதாவது கடாரத்திலிருந்து கடல் புறா கிளம்பிய எட்டாவது நாள். பெரும் பிரயத்தனப்பட்டுக் கடல் புறாவின் தளத்துக்கு வந்து சுடுவிழிகளுடன் அமீரையும் மற்றவர்களையும் நோக்கி, "நீங்கள் முதலையின் வாய்க்குள் இருக்கிறீர்கள். மலையூர் இன்னும் அரைக்காத தூரத்திலிருக்கிறது" என்று பாலிக் குள்ளன் பெருவெடியை எடுத்து வீசியதும் தளத்தில் அவனைச் சுற்றி நின்றிருந்த அனைவருமே பெரும் திகைப்புக் குள்ளானார்கள். தனது மரக்கலத்திலிருந்து கடல் புறாவி லிருந்த பலருக்கும் சைகை செய்து கொண்டு இருந்ததால், பாலிக்குள்ளன் போக்கைப் பற்றிக் கடல்புறாவிலிருந்த பலரும் சென்ற இரண்டு நாட்களாகவே வியப்புக்குள்ளாகியிருந் தார்கள். ஆகவே மூன்றாவது நாள் காலையில் அபாய காலத்தில் ஊதும் தாரைகளை எடுத்து ஊதிக் கடல்புறாவின் வேகத்தைத் தளர்த்தச் சொல்லி அதன் தளத்துக்கு வந்த பாலிக்குள்ளனைப் பார்க்கக் கடல் புறாவின் மாலுமிகள் மட்டுமின்றி காஞ்சனாதேவியும் கூடத் தளத்தில் கூடினார்கள். கூடின அனைவருக்கும் அவன் சொன்ன சேதி திகைப்பைத் தந்ததென்றாலும், திகைப்பைவிடக் கோபத்தை அதிகமாக அடைந்திருந்த அமீர், பாலிக்குள்ளனை நோக்கி, "மலையூர் அருகிலிருக்கிறதா! என்ன உளறுகிறாய்? அக்ஷயமுனை அருகி லிருக்கிறதென்று சொல்" எனக் கூவினான் தனது பெரு விழிகளை உக்கிரத்துடன் உருட்டி.

அமீரின் ராட்சத விழிகளுக்கோ, உக்கிரச் சொற்களுக்கோ பாலிக்குள்ளன் மசிந்ததாகத் தெரியவில்லை. "நான் சொல்லலாம் உங்களைத் திருப்தி செய்ய அக்ஷயமுனை அருகி

லிருக்கிறதென்று. ஆனால் அக்ஷயமுனை வராது இந்த இடத்துக்கு" என்று குரலில் இகழ்ச்சி துலங்கக் கூறினான் பாலி நாட்டு மாலுமி.

அமீரின் கோபம் பன்மடங்கு அதிகமாகவே, அவன் மீண்டும் ஏதோ சொல்லப் போனான் பாலித் தீவின் மாலுமியை நோக்கி. ஆனால் அமீருக்கு முந்திக்கொண்ட கண்டியத்தேவன் அமீரைப் பேசாமலிருக்கும்படி சைகை செய்து, "மாலுமி! நாம் அக்ஷயமுனையை விட்டு வெகுதூரம் வந்துவிட்டோம் என்று கூறுகிறாயா?" என்று நிதானமாகவே வினவினான் அதுவரை இருந்த திகைப்பைச் சற்று உதறிக் கொண்டு.

"ஆம்." திட்டமாக வந்தது பாலிக்குள்ளன் பதில்.

"நாம் இப்பொழுதிருப்பது...?" என்று மேலும் ஏதோ கேட்கப்போன கண்டியத்தேவனை இடைமறித்த பாலிக் குள்ளன், "சொர்ணத்தீவு கிழக்குக்கரையின் சரி மத்தியபாகம். பூமியின் மத்தியபாகம் என்று கூட இதைச் சொல்கிறார்கள்" என்று விளக்கினான்.

"இது எப்படி உனக்குத் தெரிந்தது?" என்று விசாரித்தான் கண்டியத்தேவன்.

"இதற்கு ஆராய்ச்சி வேறு தேவையா!" என்ற பாலிக் குள்ளன் பதிலில் இகழ்ச்சி தொனித்தது.

இதைக் கேட்டதும் அமீரின் கோபம் உச்சநிலைக்குப் போகவே, "ஆராய்ச்சி தேவையில்லை இவருக்கு. சோதிடத்தால் கண்டுபிடித்தார்" என்று இரைந்தான்.

பாலிக்குள்ளன் மேலும் இகழ்ச்சி துலங்கவே பேசினான், "ஆராய்ச்சியும் தேவையில்லை; சோதிடமும் தேவையில்லை. மாலுமிகளுக்கு வேண்டிய சாதாரண அறிவு இருந்தால் போதும்" என்று.

இதற்குப் பிறகு அமீருக்கும், பாலிக்குள்ளனுக்கும் சச்சரவு முற்றும் போலாகிவிடவே, "மாலுமி, மரியாதையுடன் பேசு.

கேட்பதற்கு மட்டும் பதில் சொல். அமீர், நீ சற்றுச் சும்மாயிரு" என்று இருவரையும் அடக்கிவிட்டு, "மாலுமி! எந்த ஆதாரத்தை வைத்துக்கொண்டு நாம் திசை மாறி வேறு இடத்திற்கு வந்துவிட்டதாகச் சொல்கிறாய்?" என்று வினவினான் கண்டியத்தேவன்.

"தேவரே! இரண்டு நாட்களுக்கு முன்பு வரை கடல் புறா தென்மேற்குத் திசை நோக்கி ஓடிக்கொண்டிருந்தது. கடாரத்திலிருந்து நேராகத் தென்மேற்கில் சென்றால் அக்ஷய முனையைத் தொட்டுவிடுவோம். ஆனால் திடீரெனக் கடல் புறாவின் திசை மாறியது. அரை நாள் மேற்கே சென்றது. பிறகு திடீரெனத் தெற்கே திரும்பியது. காரணம் எனக்குப் புலப்படவில்லை. புலப்படவைக்க என்னாலான வரை முயன்றேன். என் சைகைகளை யாரும் லட்சியம் செய்ய வில்லை. விஷயம் முற்றுமுன்பு கடல் புறாவை நிறுத்தவே இன்று அபாயத் தாரைகளை ஊதினேன்" என்று விவரித்தான் பாலிக்குள்ளன். கண்டியத்தேவன் பாலிக்குள்ளனைக் கூர்ந்து நோக்கினான். பாலிக்குள்ளன் முகத்திலிருந்த உறுதி தேவனுக்கும் சிறிது சந்தேகத்தைக் கொடுத்தது. இருப்பினும் திசை காட்டும் கருவியைத் தானே பார்த்திருந்ததால் சிறிது தைரியத்துடன் பாலிக்குள்ளனை நோக்கி, "தவறு மாலுமி! முதலில் கடல் புறா திசை மாறிச் சென்றது. ஆகையால்தான் திருத்தினேன்" என்றான்.

"திசை மாறிச் சென்றதை எப்படி அறிந்தீர்கள்!" என்று வினவினான் பாலிக்குள்ளன்.

"திசை காட்டும் கருவியால் அறிந்தேன்" என்றான் கண்டியத்தேவன்.

அதுவரையில் கையில் வைத்திருந்த சிறு பேழையைக் கண்டியத்தேவனிடம் நீட்டிய பாலிக்குள்ளன், "இதோ இருக்கிறது திசை காட்டும் கருவி, என்ன சொல்கிறது இது?" என்று கேட்டான்.

அந்தக் கருவியை நோக்கிப் பல தலைகள் குவிந்தன. கண்டியத்தேவன், அமீர், காஞ்சனாதேவி இன்னும் பல

மாலுமிகள் அனைவரும் அதைக் காணக் குவிந்தனர். எல்லோரும் காணமுடியவில்லைதான். ஆனால் கண்டவர் திகைத்தனர். அதைப் பார்த்த மறுவிநாடி அமீரும் கண்டியத் தேவனும் ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டனர். "இதன்படி..." என்று இழுத்தான் அமீர் மறுகணம்.

"மாலுமி சொல்வது சரியாயிருக்க வேண்டும்" என்று வாசகத்தைப் பூர்த்தி செய்தான் கண்டியத்தேவன்.

ஒருகணமே ஏதோ யோசித்த அமீர் திடீரெனத் தன்னைச் சுற்றி நின்றவர்களை விலக்கிக்கொண்டு அக்ரமந்திரத்தை நோக்கி ஓடினான். வெகு வேகமாக அந்த அறையின் கதவைத் திறந்து உள்ளே நோக்கினான். உள்ளே இளையபல்லவன் இல்லை. அதைப்பற்றி அதிகம் கவலைப்படாத அமீர், படைத் தலைவன் மரப்பெட்டியைத் திறந்து அதிலிருந்த பேழையை எடுத்து நோக்கினான். மறுவிநாடி அத்துடன் ஓடிவந்தான் தளத்துக்கு. அவன் எங்கு ஓடியிருக்கிறான் என்பதை ஊகித்துக் கொண்ட கண்டியத்தேவன் அவன் வரும்வரை பொறுத் திருந்து அவன் வந்ததும் அவன் கையிலிருந்த பேழையை வாங்கி நோக்கினான். இரண்டு பேழைகளையும் இரண்டு கைகளில் வைத்துக்கொண்டு மாறிமாறிப் பார்த்த கண்டியத் தேவன் கடைசியாக ஒரு முடிவுக்கு வந்து, "மாலுமி! இதைப்பார்," என்று கூறி இளையபல்லவனின் பேழையைப் பாலிக்குள்ளனிடம் கொடுத்தான்.

அதை வாங்கிப் பார்த்த பாலிக்குள்ளன் சில விநாடிகள் குழம்பினான். பிறகு தனது பேழையையும் வாங்கி இரண்டை யும் மாறிமாறிப் பார்த்தான். "ஆச்சரியமாயிருக்கிறது," என்று கடைசியில் கூறவும் செய்தான்.

"ஆம் மாலுமி!" என்றான் தேவன்.

"மனிதர்கள் வித்தியாசப்படலாம். ஆனால் இந்த முட்கள் வித்தியாசப்படக் காரணமில்லையே!" என்று குழப்பத்துடன் கூறினான் பாலிக்குள்ளன்.

"உன் பேழையிலிருக்கும் முள் காந்த ஊசிதானா!" என்று இகழ்ச்சியுடன் வினவினான் அமீர், தான் வெற்றி கொண்டு விட்ட பெருமிதத்தால்.

பாலிக்குள்ளன் அந்த இகழ்ச்சியை லட்சியம் செய்ய வில்லை. தன்னைச் சுற்றியிருந்த மாலுமிகளை விலக்கிக் கொண்டு கடல் புறாவின் பக்கப் பலகையோரம் சென்று கீழிருந்த கடலலைகளை உற்று நோக்கினான். பிறகு காற்றைச் சுவாசித்துப் பார்த்தான். பிறகு திரும்பி வந்து கண்டியத் தேவனை நோக்கி, "தேவரே! பாலித்தீவு மிகச் சிறியது. எங்களுக்கு அதிக நிலமில்லாத காரணத்தால் கடலே எங்கள் நாடு. பாலி மாலுமிகளுக்குப் புரியாத கடல் பிராந்தியம் எதுவும் தூரக்கிழக்கில் கிடையாது. நன்றாகப் பாருங்கள். இப்பொழுது நடுக்கடலில் இருக்கிறோம். இங்கு ஏன் அலை அபரிமிதமாயிருக்கிறது?" என்று வினவினான்.

"காற்றினாலிருக்கலாம்" என்றான் அமீர், கடல் விவகாரங் களில் தனது புலமையைக் காட்டி.

"வடமேற்குப் பருவக் காற்றுதான் வீசுகிறது. அது அலை எழுப்பும் பலமான காற்றல்ல. பாருங்கள்" என்று தன் தோளிலிருந்த துண்டை எடுத்துக் காற்றில் நீட்டினான். துண்டு மெல்லப் படபடவென்று அடித்தது.

பாலிக்குள்ளன் சொல்வதைக் கண்டியத்தேவன் ஆமோதித்தான். "உண்மை மாலுமி, காற்றின் வேகத்தாலல்ல இந்தப் பெரிய அலைகள் கிளம்புவது," என்று ஒப்புக் கொண்டான்.

"கடலாழம் குறைவாயிருக்கிற இடத்தில் காற்று மென்மை யாலேயே பெரிய அலைகள் கிளம்பும்" என்று சுட்டிக் காட்டினான் பாலிக்குள்ளன்.

"ஆம்." அதையும் ஒப்புக்கொண்டான் தேவன்.

"இந்தப் பிராந்தியத்தில் அதிக ஆழமில்லாத கடல் பகுதி எது தெரியுமா?" பாலிக்குள்ளன் இந்தக் கேள்வியைக்

கண்டியத்தேவனை நோக்கித்தான் கேட்டான். ஆனால் அமீரையும் ஒரு கண்ணால் நோக்கினான்.

"எது?" அமீரின் சொற்களில் சீற்றமிருந்தது.

"சொர்ணத்தீவின் கிழக்குக் கரைக்கும், பொற்கிரிஸே என்று அரபு நாட்டார் அழைக்கும் கடாரத்தின் மேற்குப் பகுதிக்கும் இடையேயுள்ள குறுகிய ஜலசந்தி." பாலிக்குள்ளன் இதை விளக்கிவிட்டு மீண்டும் குழப்பத்துடன் கையிலிருந்த இரண்டு திசை காட்டும் கருவிகளையும் நோக்கினான். அடுத்த விநாடி அவன் பெரிதாக நகைத்தான் பைத்தியம் பிடித்தவன் போல்.

அந்தச் சந்தர்ப்பத்தில் அவன் நகைத்தது எல்லோருக்கும் கசப்பாகத்தானிருந்தது. அதனால் வெகுண்ட மாலுமிகளுக்கு இன்னும் அதிகக் கசப்பைக் கொடுக்கக்கூடிய உண்மையை எடுத்துச் சொன்னான் பாலிக்குள்ளன் நகைப்பினூடே. "யாரோ உங்களை நன்றாக ஏமாற்றிவிட்டார்கள். ஆகாகா! என்ன திறமை! என்ன திறமை! நானே ஏமாந்து விட்டேனே இத்தனை நேரம்!" என்று வியப்புடன் கூவினான் பாலிக் குள்ளன்.

அவனை மாலுமிகள் சூழ்ந்துகொண்டார்கள். "ஏமாற்றி விட்டார்களா! யார் ஏமாற்றி விட்டார்கள்? எப்படி?" என்று பல குரல்கள் கிளம்பின ஏககாலத்தில். அந்தக் கூச்சலுடன் வடமேற்குப் பருவக்காற்றின் மெல்லிய ஊதலும் சேர்ந்து அவர்களைப் பரிகசித்தது. அந்தக் காலையில் மேகங்கள் வானத்தில் மண்டிக் கிடந்ததால் நாழிகைகள் ஆறு ஆகியும் கதிரவன் தலைகாட்டவில்லை. இருண்ட அவர்கள் சூழ்நிலையை அதிக இருட்டாக அடிக்க இஷ்டப்பட்டன போல் மேகங்கள் மேலும் மேலும் எங்கிருந்தோ ஊர்ந்து வந்தன.

அந்த மேகங்களையும் உற்று நோக்கி, மாலுமிகளையும் நோக்கிய பாலிக்குள்ளன் சொன்னான்: "ஆம். உங்களை யாரோ ஏமாற்றியிருக்கிறார்கள். இந்த திசை காட்டும்

கருவியின் முள் சரியாக ஆடவில்லை. இதோ பாருங்கள் தேவரே!" என்று இரண்டு கருவிகளையும் ஒருமுறை ஆட்டிக் காட்டினான்.

பாலிக்குள்ளன் கையிலிருந்த திசைக்கருவியின் முள் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிவரை ஆடியதையும் இளைய பல்லவன் பேழையின் முள் சிறிதளவே அசைந்ததையும், அதன் வட நுனி ஒரு குறிப்பிட்ட இடத்தைவிட்டு அதிகம் அசையாததையும் கண்ட கண்டியத்தேவன் மனத்தில் மட்டு மல்ல, அமீரின் மனத்திலும் பெரும் சந்தேகம் எழுந்தது. அந்தச் சந்தேகத்தைப் பாலிக்குள்ளனே தீர்த்து வைத்தான். தன் திசைக் கருவியைக் கண்டியத்தேவனிடம் கொடுத்துவிட்டு இளையபல்லவன் திசைக் கருவியைத் தன் கையாலேயே பிரிக்க ஆரம்பித்த பாலிக்குள்ளன், காந்த முள்ளைத் தாங்கி நின்ற நடுக்கம்பியை முக்கால் பாகம் மறைத்து நின்ற சிறு பலகையை நீக்கிக் கருவியின் அடிப்பாகத்தைக் காட்டினான் கண்டியத்தேவனிடம்.

திசை காட்டும் கருவியின் நடுக்கம்பி நன்றாக உள்ளே வளைக்கப்பட்டிருந்தது. அந்த வளைவு தெரியாதிருக்க அதைச் சுற்றித் துணியும் திணிக்கப்பட்டிருந்தது. காந்த முள் மட்டும் தெரியும்படியும் நடுக்கம்பியின் வளைவு தெரியாதிருக்கும் படியும் அதன் மேலே சிறு பலகை சாமர்த்தியமாகப் பொருத்தப்பட்டிருந்தது. எந்தத் தூரத்துக்கு வளைக்கப் பட்டால் காந்த முள் வடதிசையை வேறுபுறத்தில் காட்டுமோ அதுவரை நடுக்கம்பி வளைக்கப்பட்டிருந்ததையும் தவிர, முள் அதிகமாகத் திரும்ப முடியாதபடி குறுக்கிலும் ஒரு கம்பி பிணைக்கப்பட்டு அதன் கீழ்ப்பாகத்தை லேசாகத் தொட்டுக் கொண்டிருந்ததையும் கவனித்த கண்டியத்தேவனும் அமீரும் தங்களை இளையபல்லவன் அடியோடு ஏமாற்றி விட்டா னென்பதைப் புரிந்துகொண்டனர்.

காஞ்சனாதேவிக்கும் நிலைமை வெட்ட வெளிச்சமாகி விட்டது. அது மட்டுமல்ல, சூழ்ந்து நின்ற மாலுமிகள் முகங்களில் எள்ளும் கொள்ளும் வெடித்துக் கொண்

டிருந்ததைக் கண்டு காஞ்சனாதேவி ஓரளவு அஞ்சவும் செய்தாள். இளையபல்லவன் அவர்களை வேண்டுமென்றே திசையை மாற்றி, ஸ்ரீவிஜயத்தின் எல்லைக்குள் கொண்டு வந்து விட்டதை அவர்கள் உணர்ந்துகொண்டுவிட்டதையும், அதனால் அவர்கள் பெரிதும் வெகுண்டிருப்பதையும் கண்டு, அந்த மனநிலையில் அவர்கள் இளையபல்லவனை எதுவும் செய்யக்கூடும் என்பதை உணர்ந்திருந்தாள். அந்த பயம் அவளுக்கு மட்டுமல்ல, கண்டியத்தேவனுக்கும் அமீருக்கும் கூட இருந்தது. அநபாயன் உத்தரவை நிறைவேற்ற இளைய பல்லவன் தலைமையை அவர்கள் சட்டை செய்யாதிருந் தாலும் இளையபல்லவனிடம் அவர்கள் இருவருக்குமிருந்த அன்பு எல்லை கடந்தது. ஆகவே மாலுமிகளைச் சமாதானம் செய்ய முயன்ற அவ்விருவரில் கண்டியத்தேவனே பேச்சைத் துவங்கி, "மாலுமிகளே! இதை விசாரித்துப் பார்ப்போம். நீங்கள் உங்கள் அலுவல்களைக் கவனியுங்கள்" என்றான்.

"எது எங்கள் அலுவல்?" மூர்க்கம் ததும்பிய குரலில் கேட்டான் ஒரு மாலுமி.

"சுக்கானைப் பிடித்தல், பாய்களைச் சரியாக இயக்குதல், துடுப்புக்களைத் துழாவுதல்" என்று கோபத்துடன் விளக்கினான் அமீர்.

"இத்தனையும் செய்து..."

"முதலை வாய்க்குள் நுழைய வேண்டும்" என்று இன்னொரு மாலுமி முடித்தான்.

"அபாயத்தைப் பற்றிப் பயப்படும் கோழைகளா நீங்கள்?" என்று சீறினான் அமீர்.

"தெரிந்து வரும் அபாயம் வேறு. மூடத்தனத்தால் சம்பாதித்துக் கொள்ளும் அபாயம் வேறு" என்று கூவினான் மற்றொரு மாலுமி.

"மலையூர் போவோம். காத்திருக்கிறது, இந்த அத்தனை மரக்கலங்களுக்கும் அழிவு" என்று இரைந்தான் இன்னொரு மாலுமி.

“அவசரப்படாதீர்கள். விசாரிப்போம், இந்த இடத்துக்கு நாம் ஏன் வந்தோம் என்பதை” என்று சாந்தப்படுத்த முயன்ற கண்டியத்தேவனை நோக்கி, “ஏன் வந்தோமா? திசையைத் திருப்பினோம், வந்தோம்” என்று கூறினான் ஒரு மாலுமி.

அடுத்தப்படி பல குரல்கள் எழுந்து அந்தச் சூழ்நிலையையே குழப்பின. இருந்தாற்போலிருந்து ஒரு மாலுமி ஒரு புதுக் கதையைக் கிளப்பி, “இளையபல்லவர் உத்தரவில்லாமல் ஏன் திசையைத் திருப்பச் சொன்னீர்கள்? உங்களையும் அமீரையும் யார் இந்தக் கடல் புறாவுக்குத் தலைவர்களாக நியமித்தார்கள்?” என்று கூவினான்.

“ஆம்! ஆம்! யார் நியமித்தது?” என்று பல குரல்கள் கிளம்பின.

“மாலுமிகளே! பொறுங்கள். ஆத்திரத்தால் தவறை நாம் திருத்த முடியாது. இந்தத் திசை காட்டும் கருவியால்தான் நாம் ஏமாந்தோம். இதைக் கெடுத்தது யார், ஏன் கெடுத்தார்கள் என்பதை ஆராய்வோம்” என்றான் கண்டியத்தேவன்.

“அதற்கு ஆராய்ச்சி அவசியமில்லை. மலையூரில் மரணம் காத்திருக்கிறது. ஜெயவர்மன் கடற்படை எந்த நேரத்திலும் நம்மை நோக்கி வரலாம்” என்று மாலுமிகள் பெரும் கூக்குரல்களை எழுப்பினார்கள். பிறகு கண்டியத்தேவனையும் அமீரையும் நோக்கி நெருங்கவும் தொடங்கினார்கள். சில விநாடிகள் மட்டும் அவர்களை அடக்குவாரில்லாதிருந்தால் கண்டியத்தேவன், அமீர் இருவரின் கதி என்னவாயிருக்குமென்று ஊகிக்க முடியாது. அமீர் அந்தச் சந்தர்ப்பத்திலும் கோபமாக நகைத்துத் தன்னை நோக்கி வந்த மாலுமிகளைப் பலி வாங்க இடையிலிருந்த குறுவாள்களில் ஒன்றை எடுத்து உயர்த்தினான். அந்த விநாடியில்...

“நில்!” என்ற சொல் அந்தக் கூட்டத்தை மிகுந்த அதிகாரத்துடன் ஊடுருவியது. மாலுமிகள் சட்டென்று நின்றார்கள். அமீரின் உயர்ந்த கை உயர்ந்தபடி நின்றது. அனைவர் கண்களும் சொல் வந்த திசையை நோக்கின. கடல்புறாவின்

நடுப் பாய்மரத்தண்டில் சாய்ந்த வண்ணம் இளையபல்லவன் நின்று கொண்டிருந்தான். அவனை நோக்கி நகர்ந்தது கூட்டம். அதற்கு முன்பு அவனை நோக்கிப் பாய்ந்த காஞ்சனாதேவி அவனுக்கு முன்பு நின்று மறைத்து அவன் மார்பில் சாய்ந்தாள்.

இளையபல்லவன் கைகள், அவள் தோள்களைத் தடவிக் கொடுத்துத் தைரியம் ஊட்டின. அணுகி வந்த மாலுமிகளை நோக்கிய இளையபல்லவன், "நம்மை நாமே அழித்துக் கொள்ள அவசியமில்லை. அதற்கு மலையூரில் இருக்கிறது ஸ்ரீவிஜயத்தின் கடற்படை" என்றான் சர்வ நிதானமாக. மாலுமிகள் ஏதோ சொல்ல வாயெடுத்தார்கள். அவர்களைப் பேச வேண்டாமென்று ஒரு கையை உயர்த்தித் தடுத்த இளையபல்லவன், "இங்கு வந்ததற்குக் கண்டியத்தேவனோ அமீரோ பொறுப்பல்ல. நான்தான் பொறுப்பாளி" என்று கூறினான்.

அவன் கண்கள் அவர்களைக் கவர்ந்து நின்றன. சில விநாடிகள் கடல்புறாவின் தளத்தில் மௌனம் நிலவியது. "அஞ்சவேண்டாம், உங்களை வெற்றிப் பாதையில் நான் அழைத்துச் செல்கிறேன். இன்னும் இரண்டு நாட்களில், மலையூர் நம் கைக்கு மாறும்" என்று உறுதி கூறி அபயமும் அளித்தான் படைத்தலைவன்.

கடல் புறா

சாண்டில்யன்

அத்தியாயம் 49

# ஆபத்தை வெற்றி கொள்வது எது?

பாலிக்குள்ளன் அளித்த விளக்கத்தால் விவரிக்க இயலாத கொடுமைகளை விளைவிக்க ஜெயவர்மனின் ஆதிக்க எல்லைக்குள் தாங்கள் புகுந்துவிட்டதை உணர்ந்ததால் ஏற்பட்ட திகைப்பினாலும், அந்தத் திகைப்பின் விளைவாக ஏற்பட்ட கொதிப்பாலும், கொடூரப் பார்வை வீசிய கண் களுடனும் துடித்த உதடுகளுடன் இளையபல்லவனை நெருங்கி வந்த கடல்புறாவின் மாலுமிகள், அவன் தீட்சண்யமான கண்களின் சக்திக்குக் கட்டுப்பட்டுச் சில விநாடிகள் செயலிழந்து, வந்த வேகம் தடைப்பட்டு நின்றனர். அபாயமான அந்த ஜலசந்திக்குள் கடல்புறா நுழைந்ததற்கு அமீரும் கண்டியத்தேவனுமே காரணமென்று எண்ணி அவர்களைத் தாக்கச் சென்ற மாலுமிகள் இளையபல்லவன் விடுத்த "நில்!" என்ற ஒற்றைச் சொல்லின் வேகத்தாலேயே வேகம் தடைப்பட்டுத் திரும்பினார்களென்றால், அந்த இடத்திற்கு மரக்கலத்தைக் கொண்டு வந்ததற்குத் தானே பொறுப்பாளியென்று இளையபல்லவன் ஒப்புக்கொண்டதும் என்ன செய்வதென்று அறியாமல் திகைத்தனர். சில மாலுமி களின் உள்ளங்களில் கோபம் அதிகப்பட்டது. இன்னும் சிலர் உள்ளங்களில் அந்த நிலையிலும் படைத்தலைவன் காட்டிய அசட்டையும், நிதானமும் வியப்பை விளைவித்தது. ஆனால் கோபம் கொண்டவர்களும் துடித்தெழுந்து படைத் தலைவனை நெருங்கவில்லை. வியப்பு அடைந்தவர்களும் முகங்களில் அதற்கான குறியெதையும் காட்டவில்லை. பொதுவான ஒரு பிரமை அனைவரையும் கவர்ந்திருந்தது. இளையபல்லவனின் காந்தக் கண்களில் அபரிமித சக்தியை அந்த மாலுமிகள் அனைவருமே அந்தச் சில விநாடிகளில் உணர்ந்து கொண்டனர்.






காஞ்சனா தேவியின்
இடையை இரு
கைகளாலும் பிடித்து

அவளைச் சிறு
பறவையைப் போல்
உயரத் தூக்கினான்.

மாலுமிகள் இளையபல்லவனை என்ன செய்துவிடுவார்களோ, ஏது செய்துவிடுவார்களோ என்று பயத்தால் முன்னதாக ஓடிவந்து திரும்பி, அவன் மார்பில் விழுந்து அவனைத் தன் உடலால் மறைத்துக் கைகளை அகல விரித்து மாலுமிகளைத் தடை செய்ய முயன்ற காஞ்சனாதேவி அந்தச் சமயத்தில் அவன் காட்டிய நெஞ்சுத் துணிவைப் பெரிதும் வியந்தாள். அவன் நெஞ்சுத் துணிவைப் பற்றிக் கடாரத்து இளவரசிக்கு என்றுமே சந்தேகமிருந்ததில்லை. ஆனால் கடல் புறாவையும் அவன் எதைச் சொன்னாலும் கேட்கவல்ல மாலுமிகளையும் துணையாகப் பெற்றுச் சாகஸ காரியங்கள் பலவற்றைச் செய்த பழைய நிலைகளுக்கும், சொந்த மாலுமிகளே எதிரிகளாகிவிட்ட அந்தத் தன்னந்தனியான நிலைக்கும் இருந்த பெரும் மாறுபாடு காஞ்சனாதேவிக்குப் புரிந்திருந்தது. ஆகவே அவள் இதயத்தில் பெரிதும் திகிலே குடிகொண்டிருந்தது. அவள் இதயத்தில் மட்டுமல்ல திகில் குடிபுகுந்தது, கோபங் கொண்ட மாலுமிகள் கூட்டம் தங்களை விட்டு இளையபல்லவனை நோக்கித் திரும்பியதும் அவர்களைப் பின்பற்றி வந்து அவர்களுக்குப் பின்னால் நின்றிருந்த அமீர், கண்டியத்தேவன் இருவர் மனங்களிலும் ஓரளவு அச்சம் ஏற்பட்டிருந்தது. அவசியமான அபாயத்துக்கு அஞ்சாத மாலுமிகள் அனாவசியமான அபாயத்தில் இழுத்து விடப்படும்போது மரக்கலத் தலைவர்களின் கொலைக்குக் காரணமாயிருந்த கதைகள் பல அந்தப் பிராந்தியத்தில் உலாவிக் கொண்டிருந்ததை அவ்விருவரும் அறிந்தே இருந்தார்கள். அது மட்டுமல்ல, கடல் புறாவின் மாலுமிகள் எந்த ஒரு நாட்டையும் சேர்ந்தவர்கள் அல்ல. தமிழர்கள், அக்ஷயமுனையைச் சேர்ந்தர்வர்கள், அரபு, சீன நாட்டினர், பாலித் தீவினர் ஆகிய பலர் கடல் புறாவிலும் மற்ற மரக் கலங்களிலும் இருந்தனர். இவர்களில் பெரும்பாலோர் தமிழர் களென்றாலும் மற்றவர்கள் தொகையும் அப்படி யொன்றும் அற்ப சொற்பமானதல்ல. மாலுமிகள் கூட்டம் ஒரு கதம்பக் கூட்டம். தேசபக்தியாலேயோ, இன உணர்ச்சியாலேயோ

ஒன்றுபட்ட கூட்டமல்ல அது. பொருள் வேட்கையாலும், கடல் ஓட்டத்தில் இருந்த பிரியத்தாலும் இளையபல்லவன் தலைமையிலிருந்த பெரும் பிரமையாலும் ஒன்றுபட்டவர்கள். இத்தகைய கூட்டத்தின் பிரதான அஸ்திவாரம் இளைய பல்லவன் திறமை. அது மட்டும் அகன்றுவிட்டால் அபாயம். இதை அமீரும் கண்டியத்தேவனும் திட்டமாக உணர்ந்து இருந்ததால் அந்தச் சில விநாடிகளில் அவர்கள் மனங்கள் பல திசைகளில் இழுபட்டுக் கிடந்தன. இளையபல்லவனுக்கு ஏதாவது ஆபத்து வருமானால் முதல் பலியாக யாரையாவது கொடுத்துவிடத் தீர்மானித்த அமீர் தனது இடுப்புக் கச்சையில் தயாராகக் கையை வைத்திருந்தான். அவசியமானால் கடல் புறாவையே தீர்த்துவிடக்கூடிய பயங்கரத் திட்டமொன்று கண்டியத்தேவன் இதயத்தில் உருவாகிக்கொண்டிருந்தது. ஆனால் அவ்விருவர் ஏற்பாடு எதற்கும் அவசியமில்லாது போயிற்று இரண்டொரு நாழிகைகளுக்குள்.

இளையபல்லவன் கண்கள் எதிரேயிருந்த கூட்டத்தை நன்றாக ஆராய்ந்தன. "உங்களை வெற்றிப் பாதையில் நான் அழைத்துச் செல்கிறேன். இன்னும் இரண்டு நாட்களில் மலையூர் நம் கைகளுக்கு மாறும்" என்ற சொற்கள் மிக உறுதி யுடன் உதிர்ந்தன அவன் உதடுகளிலிருந்து. அவன் குரல் மிகத் தெளிவாக, இன்பமாக, ஆனால் விவரிக்க இயலாத பெரும் சக்தியுடன் ஊடுருவிச் சென்றது அந்தக் கூட்டத்தை. அதைக் கேட்டதால் அசைவற்றுத் தேங்கி நின்றுவிட்ட மாலுமிகள் கூட்டத்தில் ஒருவன்கூடச் சில விநாடிகள் பேசவேயில்லை. ஒருவன் மட்டும் துணிவு கொண்டு பேச்சைத் துவங்கினான், ஆதியில் ஏற்பட்ட பிரமையை உதறிக்கொண்டு. அவன் பாலிக்குள்ளன்!

உருவத்தில் குள்ளனாயிருந்தாலும், கடலோடுவதில் பெரும் பிரக்யாதி பெற்றிருந்த பாலி நாட்டு மாலுமி, "கடல் புறாவின் தலைவர் கூறும் உறுதியை மட்டும் நம்பி நாம் இந்த அபாயத்துக்குள் நுழைய முடியுமா?" என்று வினவினான்.

இளையபல்லவன் தன்மீது சாய்ந்திருந்த காஞ்சனா தேவியின் இரண்டு தோள்களையும் தன் கைகளால் பற்றிக் கொண்டும் நடுப் பாய்மரத்தண்டில் சாய்ந்த நிலையைச் சிறிதும் அகற்றாமலும் கேட்டான், "நாம் என்று யாரைச் சொல்கிறாய் மாலுமி?" என்று.

பாலிக்குள்ளன் மனம் சிறிது சஞ்சலப்பட்டது. இளைய பல்லவனின் நிதானமும் அலட்சியமும் ஓரளவு பயத்தைக் கூட அளித்தது அவனுக்கு. இருப்பினும் தைரியத்தை வர வழைத்துக்கொண்டு, "நாம் என்று பொதுவாக மாலுமிகளைச் சொன்னேன்" என்று கூறினான்.

இளையபல்லவன் குரல் மிகச் சாதாரணமாகச் சந்தேகம் கேட்பதுபோல் எழுந்தது. "உன் மாலுமிகளையா, என் மாலுமிகளையா?" என்று வினவினான் இளையபல்லவன்.

பாலிக்குள்ளன் சஞ்சலம் அதிகரித்தது. "அப்படி இரண்டு பிரிவு இருக்கிறதா நமக்குள்?" என்று வினவினான் அவன்.

"ஆம் மாலுமி! கலிங்கத்துக் கப்பல் ஒன்றையும் கங்க தேவன் மாலுமிகள் சிலரையும் உன் அதிகாரத்துக்குட் படுத்தினேன் அல்லவா?" என்றான் இளையபல்லவன்.

"உட்படுத்தினீர்கள். ஆனால் இந்தப் பிரிவைச் சேர்ந்த எல்லா மரக்கலங்களுக்கும் தாங்கள்தானே முதல் தலைவர்?" என்று மீண்டும் கேட்டான் பாலிக்குள்ளன்.

இளையபல்லவன் இதழ்களில் புன்முறுவல் விரிந்தது. "இல்லை" என்று ஒரே சொல்லில் பதிலும் சொன்னான் படைத்தலைவன்.

"இல்லையா!" பாலிக்குள்ளன் குரலில் வியப்பு ஒலித்தது.

"இல்லை. கடல் புறாவுக்கே நான் தலைவனில்லை. அப்படியிருக்க, மற்ற மரக்கலங்களுக்கு எப்படித் தலைவனா யிருக்க முடியும்?" என்று வினவினான் இளையபல்லவன்.

"இது உண்மையா?"

"சந்தேகமிருந்தால் அமீரையும் தேவரையும் கேட்டுப் பார்."

பாலிக்குள்ளன் தலை மெள்ளப் பின்னால் திரும்ப, கூட்டத்தின் விளிம்பில் இருந்த அமீரையும் தேவரையும் அவன் கண்கள் நோக்கின. மாலுமிகள் சிலரும் அவர்களை நோக்கினார்கள். அந்த நோக்கில் பயங்கரம் இருந்தது. அதிக நேரம் அவர்களை உணர்ச்சி வசப்படுத்தாத இளைய பல்லவன், "அவர்கள்மீது கோபம் வேண்டாம். அவர்கள் எந்தத் தவறையும் செய்யவில்லை," என்றான்.

பாலிக்குள்ளன் மீண்டும் இளையபல்லவனை நோக்கி, "உங்கள் தலைமையைப் பறித்தது இவர்கள்தானே? உங்கள் சொற்களில் அந்தப் பொருள் தொனித்ததே!" என்றான்.

"பறித்தது இவர்கள்தான். இருப்பினும் பொறுப்பு இவர்களுடையது அல்ல." இளையபல்லவன் சொற்கள் புதிர் போட்டன.

அந்தப் புதிருக்கு விடை காணச் சொன்னான் பாலிக் குள்ளன், "எங்களுக்கு விளங்கவில்லை" என்று.

"இவர்கள் கருவிகள். என் தலைமையைப் பறித்தது..."

"எது?"

"ஓர் ஓலை."

"ஓலையா?"

"ஆம்."

"அதற்கு நீங்கள் ஏன் பணிந்தீர்கள்?"

"நானும் பணிய மறுக்க முடியாத இடத்திலிருந்து வந்தது."

விஷயம் மற்ற மாலுமிகளுக்கு விளங்கினாலும், பாலிக் குள்ளனுக்கு விளங்கவில்லை. ஓலையுடன் வந்த அமீர் அதைக் கடல் புறாவின் மாலுமிகளுக்கு மட்டுமே படித்துக் காட்டியதால், மற்ற மரக்கலங்களிலிருந்த மாலுமிகள் அதை அறியவில்லை. வழக்கப்படி கடல்புறாவைத் தொடர்ந்து தங்கள் மரக்கலங்களைச் செலுத்தினார்கள். அதனால் விஷயம் விளங்காத பாலிக்குள்ளனுக்கு விஷயத்தை விளக்கினான் இளையபல்லவன்.

இளையபல்லவன் விளக்கத்தைக் கேட்ட பாலிக்குள்ளன் பல விநாடிகள் அசைவற்று நின்றான். பிறகு கேட்டான்: "உங்கள் நாட்டு இளவரசருக்கு நீங்கள் காட்டும் பணிவு இதுதானா?" என்று.

"ஏன்? பணியாமல் நான் என்ன செய்துவிட்டேன்?" என்று வினவினான் இளையபல்லவன்.

"அக்ஷயமுனை செல்லவேண்டிய மரக்கலத்தை ஸ்ரீவிஜயத்தின் வாயிலுக்குக் கொண்டுவந்து விட்டீர்களே?" என்று கேட்டான் பாலிக்குள்ளன்.

"நான் கொண்டுவரவில்லையே" என்றான் இளைய பல்லவன்.

அதுவரை பொறுத்திருந்த அமீர் மாலுமி கூட்டத்தின் எல்லையில் இருந்து கூவினான்: "படைத்தலைவரே! இது நியாயமல்ல" என்று.

"எது நியாயமல்ல" இளையபல்லவன் கேள்வி சர்வ சாதாரணமாக எழுந்தது.

"மரக்கலத்தின் திசையை நீங்கள்தானே மாற்றிச் சொன்னீர்கள்?" என்று சீறினான் அமீர்.

"நான் எங்கு மாற்றச் சொன்னேன்?"

"துருவ நக்ஷத்திரமிருக்கும் நிலைபற்றி நீங்கள் சொல்ல வில்லையா?"

"சொன்னேன்."

"பிறகு திசை காட்டும் கருவியைப் பார்க்கச் சொல்ல வில்லையா?"

"சொன்னேன்."

"திசை காட்டும் கருவியைக் கெடுத்தது யார்?"

"நான்தான்?"

"ஏனப்படிச் செய்தீர்கள்?"

"திசை காட்டும் கருவி அகூதாவால் எனக்களிக்கப் பட்டது. அதை நான் எது வேண்டுமானாலும் செய்வேன்."

இளையபல்லவன் இப்படிக் குழந்தைத்தனமாகவும் மூர்க்கத்தனமாகவும் பேசியது அமீருக்கு மட்டுமல்ல, காஞ்சனாதேவிக்குக்கூட வேடிக்கையாய் இருந்தது. பாலிக் குள்ளனுக்குக் கோபமே வந்தது. "உங்கள் சொந்தச் சொத்தா யிருந்தாலும் அதைக் கெடுக்கவேண்டிய அவசியமென்ன?" என்று கேட்டான் சினத்துடன்.

"திசை காட்டும் கருவி மரக்கலத் தலைவனுக்குத்தான் தேவை. தலைமைப் பதவி போய்விட்ட பிறகு திசை காட்டும் கருவி எதற்கு எனக்கு?" என்று வினவினான் இளைய பல்லவன்.

இளையபல்லவன் மெள்ள மெள்ளத் தங்களை ஆபத்தில் இறக்கிக்கொண்டிருப்பதை உணர்ந்த அமீரும் கண்டியத் தேவனும் வியப்புடன் படைத்தலைவனை நோக்கினர். அவர்கள் பார்வையைக் கவனித்தும் கவனிக்காதவன் போலக் கூறினான் இளையபல்லவன் மாலுமிகளை நோக்கி, "என் நாட்டினிடம் எனக்குள்ள பற்றைவிட அதிகப் பற்று இளவரசரான அநபாயருக்குக்கூட இருக்க முடியாது. ஆனால் கடலின் சட்டதிட்டங்கள், ஒழுக்க முறைகள் வேறு. கப்பல் தலைவன் கப்பலைக் காதலிக்கிறான். அதுவும் இந்தக் கடல் புறா என் இதயம் போன்றது. அதை என்னைத் தவிர இன்னொருவர் எத்தனை நண்பராயிருந்தாலும் எப்படி நான் ஆட்கொள்ள விட முடியும்? கூடாத விஷயத்தில் அமீரும் கண்டியத்தேவரும் நுழைந்தார்கள். அந்த முயற்சியை உடைப்பது என் கடமையாயிற்று. அது மட்டுமல்ல, எந்த லட்சியத்துடன் நான் கிட்டத்தட்ட இரண்டு வருஷங்களாக வாழ்ந்து வருகின்றேனோ அந்த லட்சியத்தை முன்னிட்டும் கடல்புறா இந்த இடத்திற்கு வரவேண்டியதாயிற்று. அக்ஷய முனைக்கு இது சென்றிருந்தால் லட்சியம் ஈடேறாது. இத்தனையும் யோசித்துத்தான் அமீரையும் கண்டியத் தேவரையும் மீறி இந்த ஜலசந்திக்குக் கடல்புறாவைக் கொண்டு வந்தேன்" என்றான்.

"என்ன லட்சியம் அது?" என்று கேட்டான் பாலிக் குள்ளன்.

"ஸ்ரீவிஜயத்தின் அரியணையில் அதற்கு உரிமையுடைய வரை அமர்த்துவது" என்ற இளையபல்லவன் குரல், ஏதோ பெரும் ஆணையை இடுவது போல் சப்தித்தது.

"யாரது உரிமையுடையவர்?" என்று கேட்டான் ஒரு மாலுமி.

"இவர்!" என்று கூவிய இளையபல்லவன் தன்மீது சாய்ந்திருந்த காஞ்சனாதேவியின் இடையை இரு கைகளாலும் பிடித்து அவளைச் சிறு பறவையைப்போல் உயரத் தூக்கிக் காட்டினான். அவளைப் பிறகு கீழே இறக்கி விட்டு மேலும் மாலுமிகளை நோக்கிச் சொன்னான்: "இளவரசர் நம்மை அக்ஷயமுனையில் இருத்தித் தாம் கடாரத்தில் இருந்து கொண்டு ஜெயவர்மனிடம் சமாதானப் பேச்சுப் பேச முயல்கிறார். ஆனால் ஜெயவர்மன் குணம் உங்களுக்குத் தெரியும். அவன் கலிங்கத்தின் நண்பன். தமிழர்களின் விரோதி. ஒருநாளும் எந்த ஏற்பாட்டுக்கும் இணங்க மாட்டான். இணங்குவதாகப் பாசாங்கு செய்து காலம் கடத்துவான். அப்படிக் கிடைக்கும் அவகாசத்தில் தன் கடற்படையைப் பலப்படுத்திவிடுவான். அவன் படையில் ஒரு பகுதி கலிங்க மரக்கலங்கள். அவற்றில் பலவற்றை நாம் அழித்துவிட்டோம். இப்பொழுது ஸ்ரீவிஜயத்தின் கடற்படை சிறிது பலவீனப்பட்டிருக்கிறது. ஸ்ரீவிஜயத்தின் பலத்தை இப்பொழுது உடைக்காவிட்டால் எப்பொழுதும் உடைக்க முடியாது. ஜெயவர்மனுக்கு அவகாசம் தருவது அபாயம். இது இளவரசருக்குத் தெரியாது. ஆகவே அவரையும் மீறி, இஷ்ட விரோதமாக நாம் ஸ்ரீவிஜயத்துடன் கைகலக்க வேண்டி யிருக்கிறது. ஆகையால்தான் உங்களை இங்கு அழைத்து வந்தேன்..."

இங்கு சற்று நிதானித்த இளையபல்லவன் மாலுமிகளைக் கூர்ந்து நோக்கினான். அவர்கள் முகங்களில் குழப்பம்

இருந்தது. பாலிக்குள்ளன் முகத்தில் மட்டும் குழப்பம் இல்லை. சந்தேகமே விரிந்தது. "தலைவரே! ஸ்ரீவிஜயத்தின் கடற்படையின் பலம் உங்களுக்குத் தெரியுமா?" என்று வினவினான்.

"தெரியும். சுமார் நூறு மரக்கலங்கள் இருக்கின்றன" என்று சொன்னான் படைத்தலைவன்.

"நம்மிடமிருப்பது ஐந்து மரக்கலங்கள்தான்..."

"ஆம்."

"அவற்றில் இரண்டு உல்லாசப் பயணத்துக்கு ஏற்பட்டவை. இரண்டுக்கும் பெண்களின் பெயர்கள்..."

"ஆம், காஞ்சனா ஒன்று, மஞ்சளழகி ஒன்று."

"மூன்று ஆண்மரக்கலங்களையும், இரண்டு பெண் மரக்கலங்களையும் வைத்துக்கொண்டு ஸ்ரீவிஜயத்தின் பெரும் படையைச் சமாளிக்க முடியுமென்று நினைக்கிறீர்களா?"

பாலிக்குள்ளனின் இந்தக் கேள்வி மற்ற மாலுமிகளிடையும் அச்சத்தை உண்டாக்கவே, "ஆம், எப்படி முடியும்? ஒரே நாளில் நமது மரக்கலங்கள் அழிந்து போகும்" என்று குரல்கள் கிளம்பின.

இளையபல்லவன் அவர்களைக் கூர்ந்து நோக்கினான். "எத்தனை மரக்கலங்களை வைத்துக்கொண்டு அக்ஷய முனையை வென்றோம்? எத்தனை மரக்கலங்களையும் வீரர்களையும் வைத்துக்கொண்டு மாநக்காவரத்தைக் கைப்பற்றினோம்" என்று வினவவும் செய்தான்.

"அந்த இடங்களில் நிலைமை வேறு" என்றான் பாலிக்குள்ளன்.

"நிலைமை எல்லா இடங்களிலும் ஒன்றுதான் மாலுமி, நமது பலம் குறைவு; எதிரி பலம் அதிகம். நமது ஆபத்து அதிகம், எதிரிக்கு ஆபத்தே இல்லை. ஆனால் முடிவுகள் நமக்கு அனுகூலம்? ஏன்? ஆபத்து ஆள் பலத்தால் மட்டும் சமாளிக்கப்படுவதில்லை. அறிவு பலத்தால்தான் பெரும்பாலும் சமாளிக்கப்படுகிறது. எதிரியின் மனோபாவம்,

அவனைச் சேர்ந்தவர்களின் சக்தி, ஆசாபாசங்கள் இவற்றை எடை போடுவதிலும், அவற்றுக்கு மாற்றுக் கண்டுபிடித்து சமயத்தில் தாக்குவதாலுமே பெரும் வெற்றிகள் நமக்குக் கிடைத்திருக்கின்றன. அந்த அறிவு இன்னும் எனக்கு மழுங்கி விடவில்லை. அதை நம்பி வர இஷ்டமிருந்தால் உங்களை வெற்றிக்கு அழைத்துச் செல்ல நான் தயார். இல்லையேல் உங்கள் இஷ்டப்படி எதையும் செய்யலாம். நீங்கள் ஒரு முடிவுக்கு வர இரண்டு நாழிகைகள் அவகாசம் தருகிறேன்" என்று கூறிய இளையபல்லவன் அதற்கு மேல் அங்கு நிற்காமல் திடீரெனக் காஞ்சனாதேவியை நோக்கி, "தேவி! வா! உன் பறவைகள் எப்படியிருக்கின்றன, பார்ப்போம்" என்று அவளைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு அக்ரமந்திரத்தை நோக்கி நடந்தான்.

காஞ்சனாதேவியின் இதயத்தில் அச்சம் பரவிக் கிடந்தது. அவள் கனவில் நடப்பவள் போல் நடந்து சென்றாள். அக்ரமந்திரத்தில் படைத்தலைவன் அவனது பஞ்சணையில் உட்கார்ந்து பறவைகளைப் பிடித்து விளையாடியதைக் கூட அவளால் ரசிக்க முடியவில்லை. 'இன்னும் இரண்டே நாழிகைகள்! மாலுமிகள் என்ன முடிவைச் சொல்வார்களோ இவரைப்பற்றி? இவர் பேராபத்தில் அவர்களை இழுத்து வந்து விட்டாரே!' என்று மனம் கிலிவசப்படத் தவித்துக் கொண் டிருந்தாள். இரண்டு நாழிகைகளும் ஓடிவிட்டன. மாலுமி களுக்குள் ஏதோ ஒரு முடிவு ஏற்பட்டுவிட்டதென்பது, அவர்கள் அறையை நோக்கி வந்தபோது ஏற்பட்ட தடதட வென்ற காலடிச் சத்தத்திலிருந்து தெரிந்தது. அக்ரமந்திரத்தின் கதவு முரட்டுத்தனமாகப் படேரென்று திறக்கப்பட்டது. பாலிக்குள்ளன் தலையை உள்ளே நீட்டினான் முதலில். அவனுக்குப் பின்னால் எழுந்தன மற்ற மாலுமிகளின் தலைகள்.

அத்தியாயம் 50

# கனவின் படிகள்

காஞ்சனாதேவியைக் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு அக்ரமந்திரத்துக்குள் நுழைந்த இளையபல்லவன் அறைக் கதவை இடது கையால் சாத்திவிட்டுப் பஞ்சணையை நோக்கி நகர முற்பட்டதைக் கண்டதும் கடாரத்துக் கட்டழகி, "இருங்கள் கதவைத் தாழிட்டு விடுகிறேன்" என்று கூறிக் கதவை நோக்கித் திரும்பினாள்.

"வேண்டாம் வா. திறந்தே இருக்கட்டும்" என்று கூறிய இளையபல்லவன் அக்ரமந்திரத்திலிருந்த தனது பஞ்சணை யில் உட்கார்ந்துகொண்டு சில விநாடிகள் ஏதோ யோசித்து விட்டு, "பறவைகளை எங்கே வைத்திருக்கிறாய்?" என்று வினவினான்.

காஞ்சனாதேவி அதற்குப் பதில் சொல்லவில்லை. பறவை களைப் பற்றிய சிந்தனையைவிட இளையபல்லவனுக்கு ஏற்படவிருந்த ஆபத்தைப்பற்றிய சிந்தனையிலேயே திளைத் திருந்த அவள், "மாலுமிகள் ஒருவேளை..." என்று கூறி வாசகத்தை முடிக்காமல் தயங்கிக்கொண்டே நின்றாள்.

"என்ன ஒருவேளை?" என்று அலட்சியமாக எழுந்தது இளையபல்லவன் கேள்வி.

"உங்கள் சொல்லை ஏற்காவிட்டால்?"

கவலையுடன் கேட்டாள் காஞ்சனாதேவி.

"ஏற்காவிட்டால் போகட்டும்?"

"ஏற்காவிட்டால் உங்களை எதிர்க்க வரமாட்டார்களா?"

"வரலாம்."

"வந்தால் ஆபத்தில்லையா?"

"ஆபத்துத்தான்."

"அதற்காகத்தான் தாழிடட்டுமா என்று கேட்கிறேன்." இந்தக் கேள்வியைச் சற்று கோபத்துடனேயே கேட்டாள் காஞ்சனாதேவி.

இளையபல்லவன் மெள்ள நகைத்தான். "இந்தச் சிறு மரக்கதவும் தாழும் நம்மை மாலுமிகளின் கூட்டத்திலிருந்து காத்துவிடுமென்று நினைக்கிறாயா காஞ்சனா?" என்று கேட்ட இளையபல்லவன் தாழிடுவதில் எந்த அர்த்தமும் இல்லை என்பதை விளக்கினான்.

காஞ்சனாதேவிக்கும் தான் செய்யப் புகுந்த ஏற்பாடு எத்தனை அற்பமானது என்பது புரிந்ததால் கதவைத் தாழிடாமலே அவனை நோக்கி வந்தாள். அவன் மேற் கொண்டு மாலுமிகளைப் பற்றிய சிந்தனை ஏதுமில்லாமல், "அந்தப் பறவைகளைப் போய் எடுத்து வா காஞ்சனா" என்றான்.

இதைக்கேட்ட காஞ்சனாதேவி அர்த்தமேதும் புரியாமல் அவனை ஒரு விநாடி நோக்கினாள். பிறகு இரண்டு அறை களுக்குமிடையிலிருந்த கதவை நோக்கி நடந்தாள். இளைய பல்லவன் விழிகள் அவளை ஆச்சரியத்துடன் நோக்கின. "என்ன காஞ்சனா! இடைக்கதவு திறந்தா இருக்கிறது?" என்றும் வினவினான் வியப்புடன்.

கதவை நெருங்கிய காஞ்சனாதேவி திரும்பி, "ஆம்," என்றாள்.

"இடைக் கதவைத் தாழிட்டு வைக்கச் சொன்னேனே?" என்று வினவினான் படைத்தலைவன்.

"ஆம். சொன்னீர்கள்."

"சொன்னதைச் செய்ய இஷ்டமில்லை போலிருக்கிறது."

"இஷ்டமிருந்தது, முதல்நாள் தாழிட்டும் வைத்தேன். ஆனால் அடுத்த மரக்கலத்திலிருந்து அபாயத் தாரை ஊதப்பட்டதும் திறந்துவிட்டேன்."

அவள் மனோபாவம் நன்றாகப் புரிந்தது அவனுக்கு. அபாயத் தாரை ஊதப்படுவதற்கு முன்பே இடைக் கதவை

அவள் திறந்திருக்க வேண்டுமென்றும், அமீருடைய போக்கு அவளுக்குப் பெரும் சந்தேகத்தை அளித்திருக்க வேண்டு மென்றும் தீர்மானித்த இளையபல்லவன் அதற்கு மேல் ஏதும் கேட்காதிருக்கவே காஞ்சனாதேவி தனது அறைக்குச் சென்று பறவைகள் இரண்டையும் கொண்டு வந்தாள். அந்தப் பட்சிகள் ஒவ்வொன்றின் காலொன்றில் சிறு நூலைக் கட்டியிருந்ததைக் கவனித்த இளையபல்லவன், "இவற்றைக் கட்டிப் போட்டிருந்தாயா காஞ்சனா?" என்று வினவினான்.

"ஆம். இல்லாவிட்டால் பறந்து போகாதா?" என்று வினவினாள் அவள்.

"பறக்காது. இதோ பார்" என்ற இளையபல்லவன், அவற்றின் கால்களிலிருந்து நூலை அவிழ்த்து விட்டு அவற்றைப் பஞ்சணைமேல் விட்டான். இரண்டு பறவைகளும் அவனை உற்று உற்று நோக்கின. பிறகு மஞ்சள் அலகுகளை ஆட்டின. அடுத்தபடி தத்தித் தத்திப் பஞ்சணையில் ஓடின. பிறகு பறந்து இரண்டு மரக் கம்பங்களில் உட்கார்ந்து கொண்டன.

"பறக்கின்றன, பறக்கின்றன" என்று கூவினாள் காஞ்சனா தேவி.

"பறக்காது. இதோ பார்" என்ற இளையபல்லவன் பஞ்சணையிலிருந்து எழுந்து சென்று தூண்களிலிருந்து அவற்றை எடுத்து வந்து மீண்டும் பஞ்சணையில் விட்டான். அவை பஞ்சணையில் தத்தித் தாவி விளையாடின.

அவை விளையாடியது மனத்தைக் கவரும்படியாகத் தானிருந்தது. வேறு சமயமாயிருந்தால் அந்த விளையாட்டைப் பெரிதும் ரசித்திருப்பாள் கடாரத்தின் இளவரசி. ஆனால் அந்தச் சந்தர்ப்பத்தில் அவள் எண்ணமெல்லாம் அக்ரமந்திரத் துக்குப் புறம்பேயிருந்த தளத்திலும், தளத்திலிருந்த மாலுமிகள் மீதும் நிலைத்திருந்ததால் அவள் அந்த விளையாட்டைப் பார்க்கக் கூட விரும்பாமல் பஞ்சணை மீது உட்கார்ந்து பெருமூச்சு விட்டாள். இளையபல்லவன் அவள் பெரு

மூச்சைக் கூட லட்சியம் செய்யாமல் பறவைகளுடன் விளையாடிக் கொண்டிருந்தான். விளையாட்டில் நாழிகைகள் இரண்டு ஓடிவிட்டது கூட இளையபல்லவனுக்குத் தெரிய வில்லை. ஆனால், அந்த நாழிகைகள் இரண்டின் ஒவ்வொரு விநாடியும் காஞ்சனாதேவிக்கு ஒவ்வொரு யுகமாக நகர்ந்தது. அந்த யுகம் முடியும் தருவாயில் மாலுமிகள் தடதடவென வரும் சத்தமும் கேட்டது. கதவும் டாலெனத் திறக்கப்பட்டது. பாலிக்குள்ளனும் மற்ற மாலுமிகளும் தலைகளை உள்ளே நீட்டினர்.

கதவு திறந்ததையோ மாலுமிகள் வந்ததையோ கவனிக்காமல் பறவைகளைக் கவனித்துக் கொண்டிருந்த இளையபல்லவனை, "மாலுமிகள் வந்துவிட்டார்கள்" என்று கூறி இந்த உலகத்துக்குக் கொண்டுவர முயன்றாள், காஞ்சனா தேவி.

அவள் கூறியதை வாங்கிக்கொண்டதற்கு அறிகுறியாகத் தலையை அசைத்த இளையபல்லவன் பறவைகளை விட்டுக் கண்களை அகற்றாமலே, "வாருங்கள் உள்ளே" என்று இரைந்து அழைத்தான் மாலுமிகளை.

பாலிக்குள்ளன் முன்னே வர அவனைத் தொடர்ந்து மாலுமிகள் ஐந்தாறுபேர் வந்தனர். அவர்கள் பஞ்சணைக்குச் சிறிது தூரத்தில் வந்து நின்றதும் பறவைகளிலிருந்து பார்வையை அவர்கள்மீது திருப்பினான் படைத்தலைவன். அவர்களுக்கு மிகவும் தள்ளிப் பின்னால் நின்று கொண் டிருந்தனர் அமீரும் கண்டியத்தேவனும். அவர்கள்மீது மட்டும் ஒரு விநாடி பார்வையை நிலைநாட்டிய இளையபல்லவன் கடைசியில் பாலிக்குள்ளனை நோக்கி, "என்ன மாலுமி! என்ன முடிவு செய்தீர்கள்?" என்று வினவினான்.

"எங்களை அபாயத்துக்குள் அழைத்துக்கொண்டு வந்து விட்டது நீங்கள்..." என்று துவங்கிய பாலிக்குள்ளன் குரல் வறண்டு கிடந்தது.

"தயங்க வேண்டாம். சொல்லு மாலுமி?" என்று ஊக்கினான் படைத்தலைவன் சர்வசகஜமான குரலில்.

"அபாயத்துக்குள் புகுத்தியவர்தான் அதிலிருந்து எங்களை மீட்கவும் வழி காண வேண்டும்" என்றான் பாலிக்குள்ளன்.

இளையபல்லவன் இதற்கு உடனடியாகப் பதில் சொல்லவில்லை. சிறிது நேரம் மாலுமிகளின் முகங்களை ஊன்றிக் கவனித்தான். 'பிறகு திட்டமாகச் சொன்னான், "அந்த உறுதியை நான் அளிக்க முடியாது" என்று.

இந்தப் பதில் பாலிக்குள்ளன் முகத்தில் மட்டுமின்றி காஞ்சனாதேவியின் முகத்திலும் அச்சத்தை விளைவித்தது. காஞ்சனாதேவி ஏதும் சொல்லாவிட்டாலும் பாலிக்குள்ளன் சற்றுக் கோபத்துடன் சொன்னான், "இது நியாயமல்ல" என்று.

"எது நியாயமல்ல?" அதிகாரத் தொனியில், அதட்டும் குரலில் எழுந்தது இளையபல்லவன் கேள்வி.

"அபாயத்தில் இழுத்துவிடும் ஒரு தலைவர் அதிலிருந்து தமது மாலுமிகளை மீட்க மறுப்பது." பாலிக்குள்ளன் பதிலில் கோபம் சிறிதும் தணியாமல் தொனித்தது.

இதைக்கேட்ட இளையபல்லவன் பஞ்சணை முகப்பில் நகர்ந்து உட்கார்ந்து ஒரு காலைக் கீழே தொங்கவிட்டுக் கொண்டான். அத்துடன் சொன்னான்: "மாலுமிகளின் கடமையை மாலுமிகள் செய்தால் தலைவன் அவன் கடமையைச் செய்ய முடியும்" என்று.

"மாலுமிகள் எங்கு கடமை தவறினார்கள்?"

"தலைவன் உத்தரவுக்கு மேல் இன்னொரு உத்தரவு உண்டு என்று நினைத்தபோது, அந்த உத்தரவுக்குப் பணிய முற்பட்டபோது."

இதைக் கேட்டுக்கொண்டு மற்ற மாலுமிகளுக்குப் பின்னால் நின்ற அமீர் சிறிது சங்கடத்துடன் அசைந்தான். அதைக் கவனித்தும் கவனிக்காதவன்போல் இளையபல்லவன் பாலிக்குள்ளனை நோக்கி, "மாலுமி, மரக்கலம் எப்படியோ அப்படித்தான் மாலுமிகளும். மரக்கலத்தின் துடுப்புகளும், பாய்களும், சுக்கானும், சிறுசிறு உருளைகளும் எப்படித் தங்கள்

தங்கள் அலுவல்களைச் சரியாகச் செய்தால் எப்படி மரக்கலம் பழுது இன்றி ஓடுகின்றதோ அப்படி மாலுமி ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் பணிகளைக் கேள்விகள் கேட்காமலும் தலைவன் சொற்படி கேட்டும் நடந்து கொண்டால் மரக் கலத்தின் இயக்கம், போர் முறைகள் எல்லாம் திட்டமாகவும் வெற்றிகரமாகவும் நடக்கும். ஒரு மரக்கலத்துக்கு இரண்டு தலைவர்கள் இருக்க முடியாது. கரையில் ஒரு தலைவனும் கடலில் ஒரு தலைவனும் ஒரே மரக்கலத்தின் மாலுமிகளுக் கிருந்தால் கப்பல் சம்பந்தப்பட்டவரை காரியம் சரிவர நடக்காது. ஆகவே உங்களுக்கு என்மேல் நம்பிக்கை வேண்டும். அந்த நம்பிக்கை இருக்கிறதென்ற நினைப்பு எனக்குப் பலமூட்டும். என் சித்தத்துக்குச் சிந்தனை செய்ய சக்தியும் கொடுக்கும்" என்றான்.

"நாங்கள் உங்களிடம் நம்பிக்கை வைக்கவில்லை என்று யார் சொன்னது?" என்று வினவினான் பாலிக்குள்ளன்.

"அபாயத்தைக் கண்டு நீங்கள் அடைந்துள்ள கிலியே அதற்கு அத்தாட்சி" என்று கூறினான் இளையபல்லவன்.

"கிலி அடைவது நம்பிக்கையின்மையை எப்படிக் குறிக்கும்?" என்று கேட்டான் பாலிக்குள்ளன்.

இளையபல்லவன் பஞ்சணையை விட்டு எழுந்து மாலுமி களின் அருகில் வந்து நின்றுகொண்டான். பிறகு தனது அறையின் கூரையை நோக்கிக் கையை உயர்த்திக் கேட்டான், "இந்தக் கடல்புறாவை உங்களைவிட நான் குறைவாகவா நேசிக்கிறேன்?" என்று. மேலும் தொடர்ந்த படைத்தலைவன், "அது மட்டுமல்ல, உங்கள் உயிரைவிட என் உயிர் அற்பமானது? அதை நான் குறைவாக மதிப்பிடுவேனா? அதைக் குறைத்து மதிப்பிட்டாலும் இதோ இருக்கிறார்களே கடாரத்து இளவரசி, இவர் என் உயிரைவிடப் பன்மடங்கு எனக்கும் ஸ்ரீவிஜயத்துக்கும் அரிதல்லவா? அவர்களை ஏன் இந்த ஆபத்துக்கு இழுத்து வந்தேன்? அன்புக் குறைவாகவா? இவர்களிருக்கட்டும். அமீரிடமும் தேவரிடமும் எனக்கு அன்பு

குறைவா? இல்லை, உயிரினும் பன்மடங்கு அதிகமாக நேசிக்கும் சோழ நாட்டு இளவலும் என் நண்பருமான அநபாயரை வெறுத்து விட்டேனா? இல்லை இல்லை. இத்தனை பேர் மீதும் என் உயிரை வைத்திருக்கிறேன். இவர்கள்மீது மட்டுமல்ல, இந்தக் கடற்படையைச் சேர்ந்த ஒவ்வொரு மாலுமியின் உயிரும் சிறந்தது எனக்கு. இருப்பினும் இந்த அபாயத்தில் ஏன் இழுத்து வந்தேன்? காரணம் பெரும் கடமை. அநபாயரையும் மீறிச் செய்யவேண்டிய காரியம் இருக்கிறது. மலையூரைக் கைப்பற்ற இதுதான் சமயம். உண்மையில் மாநக்கவாரத்தை விட்டு நான் மலையூர் வரவே கிளம்பினேன். இடையே காஞ்சனாதேவியைக் காணும் ஆசையால்தான் கடாரத்துக்குச் சென்றேன். ஆனால் அங்கு நிகழ்ந்தன நான் சற்றும் எதிர்பாராத விளைவுகள். உயிர் நண்பரே என்னை மீறி அலுவல் புரியத் திட்டமிட்டார். மற்றொரு நண்பன் அமீர் என்னை ஏமாற்றினான். இன்னும் சிறிது காலம் இருந்தால் நான் அவர்கள் இஷ்டப்படி நடந்து கொண்டிருப்பேன். ஆனால் சமயம் இது மலையூரைத் தாக்க. அங்கு ஸ்ரீவிஜயத்தின் கடற்படை தற்சமயம் இல்லை. இருப்பவை நான்கைந்து மரக்கலங்கள் ஜம்பிநதி முகத்துவாரத்தில். அவற்றைத் தகர்த்து நதிக்குள் நுழைந்து விட்டால் பழமெனக் காத்திருக்கிறது மலையூர் நம் கையில் விழ. அங்கும் ஆபத்திருக்கலாம். ஆனால் அது சமாளிக்கக் கூடிய ஆபத்தாக இருக்கும்" என்றான்.

"மலையூர் நிலை உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்று கேட்டான் பாலிக்குள்ளன்.

"மாநக்காவரத்தை நான் மாதக் கணக்கில் தளமாகக் கொண்டது வீணாகவில்லை. அங்கு வரும் வணிகர்கள் ஒவ்வொருவரிடமிருந்தும் ஸ்ரீவிஜய நிலைமையைத் தெரிந்து கொண்டிருக்கிறேன். ஸ்ரீவிஜயத்தின் போர் மரக்கலங்களின் பாகுபாடு, இருப்பிடங்கள் எல்லாவற்றையும் அறிந்து இருக்கிறேன். ஆகவே செல் உன் மரக்கலத்துக்கு. மாலுமி, பாய்களை ஏற்றாதே. மீதி அரைக்காத தூரத்தைத் துடுப்பு

களைக் கொண்டு அடைவோம். நமது மரக்கலங்கள் ஐம்பி நதி முகத்துவாரத்தை இருள் கவிந்த நீண்ட நேரத்துக்குப் பின்னரே அடையவேண்டும். போய் வா, உம். நீங்களும் செல்லுங்கள். உங்கள் அலுவல்களைக் கவனியுங்கள்" என்று முடிவு கட்டினான் இளையபல்லவன், பாலிக்குள்ளனையும் மற்ற மாலுமிகளையும் நோக்கி.

இளையபல்லவன் உணர்ச்சி வேகத்தில் பேசப்பேசப் பிரமை பிடித்து நின்ற மாலுமிகள் அவன் பார்வையாலும் சொற்களில் ஊடுருவிய உணர்ச்சி வேகத்தாலும் உந்தப்பட்டு வேறு எதுவும் பேசாமல் திரும்பித் தடதடவெனத் தளத்துக்கு ஓடினார்கள். பாலிக்குள்ளன் ஒரு விநாடி ஏதோ யோசித்துக் கொண்டு நின்றான். பிறகு அவனும் திரும்பி வெளியே வேகமாகச் சென்றான். மீதி அந்த அறையில் இருந்தவர்கள் இளையபல்லவனைத் தவிர மூன்றே பேர். அமீர், கண்டியத் தேவன், காஞ்சனாதேவி.

அமீரும் கண்டியத்தேவனும் என்ன பேசுவதென்றறி யாமல் நின்றார்கள். என்ன காரணத்தாலோ அமீரிடம் பெரு விழிகளில் நீர் திரண்டது. அதைக் கண்ட இளையபல்லவன் மனமும் நெகிழவே அவன் இரண்டே எட்டில் அமீரிடம் சென்று அவனைத் தழுவிக்கொண்டான். அமீர் திடீரெனத் தன் பெரிய தலையை இளையபல்லவன் தோளில் புதைத்துக் கொண்டு விம்மிவிம்மிக் குழந்தைபோல் அழ ஆரம்பித்தான். இளையபல்லவன் அந்த ராட்சதக் குழந்தையைத் தடவிக் கொடுத்துக்கொண்டு உள்ளம் உருகச் சொன்னான், "அமீர்! உன்னிடம் நான் உயிரையே வைத்திருக்கிறேன். ஆனால் நான் என்ன செய்யட்டும்? உனக்கு அநபாயரிடம் இருக்கும் பக்தி எனக்குத் தெரியும். ஆகவே உன்னையும் ஏமாற்றுவது அவசிய மாகிறது. நாம் சுமார் இரண்டு வருஷ காலம் தோளுக்குத் தோள் நின்று பல அபாயங்களைச் சமாளித்தோம். கடல் புறா செய்யவேண்டிய அமானுஷ்யமான காரியங்கள் இன்னும் சில இருக்கின்றன. இன்னும் சில நாட்கள் நான் தலைவனாயிருக்கிறேன். ஸ்ரீவிஜயம் பணியட்டும். பிறகு நான்

உனக்குப் பணிகிறேன். நீ எதைச் சொன்னாலும் கேட்கிறேன்" என்றான்.

அமீரின் குலுங்கல் அதிகமாயிற்று. அவனை ஒரு கையால் தடவிக் கொடுத்த இளையபல்லவன் இன்னொரு கையை நீட்டிக் கண்டியத்தேவன் கையைப் பற்றினான். கண்டியத் தேவன் கையும் அவன் கையில் ஆதரவை நாடிப் புதைந்தது. இப்படி நின்ற அந்த மூன்று உயிர்த் தோழர்களையும் கண்ட காஞ்சனாதேவி கண்களிலும் நீர் திரண்டது. இந்தச் சோக நிலை சாதாரண நிலைக்கு மாறப் பல நிமிடங்கள் பிடித்தன. சுயநிலை மெள்ள நிலவியதும் சற்று இளையபல்லவனை விட்டு விலகிய அமீர், "வாரும் தேவரே! தளத்துக்குச் செல்வோம்" என்று தேவனை அழைத்தான்.

"தளத்தில் என்ன செய்ய?" என்று எழுந்தது இளைய பல்லவன் குரல்.

இளையபல்லவர் உத்தரவை நிறைவேற்ற" என்ற அமீர் அத்தனை சோகத்திலும் புன்முறுவல் பூத்தான்.

இளையபல்லவன் இதழ்களில் பெருமிதப் புன்னகை விரிந்தது. தனது உபதலைவர்கள் இருவரும் ஒருவர் பின்னொருவராக வெளியே சென்றதைக் கண்டு கொண்டு பெருமகிழ்ச்சியுடன் நின்ற இளையபல்லவன் அவர்கள் சென்றதும் காஞ்சனாதேவியை நெருங்கினான்.

பஞ்சணையில் பலவீனத்துடன் அமர்ந்திருந்தாள் காஞ்சனாதேவி. அவள் கண்களில் நீர் தளும்பிக் கொண்டிருந்தது. அதைக் கண்ட இளையபல்லவன் கேட்டான், "நீ எதற்காக அழுகிறாய்!" என்று.

"நீங்கள்..." என்று துவங்கிய காஞ்சனாதேவி சட்டென்று பேச்சை நிறுத்திக் கொண்டாள்.

"ஏன் நிறுத்தி விட்டாய்? சொல்" என்றான் இளைய பல்லவன்.

நீர் தளும்பிய கண்களில் மட்டுமின்றி முகம் பூராவுமே வெட்கத்தின் சாயை படர்ந்தது. "ஊஹூம், மாட்டேன்" என்றாள் காஞ்சனாதேவி.

"என்ன மாட்டேன்?"

"சொல்ல மாட்டேன்."

"எதை?"

"என் அழுகைக்குப் பரிகாரம்."

"பரிகாரமா?"

"ஆம். அமீர் அழுதபொழுது என்ன செய்தீர்கள்?"

இளையபல்லவன் வாய்விட்டு நகைத்தான். "அந்த முரடனை அணைத்ததையா சொல்கிறாய் காஞ்சனா? அவன் உள்ளம் உன் உடலைவிட எத்தனை மென்மையானது தெரியுமா?" என்று வினவவும் செய்தான் படைத்தலைவன்.

"சரி சரி. அமீரையே கட்டிக் கொள்ளுங்கள்" என்ற காஞ்சனாதேவி நகைத்தாள் பெரிதாக. அந்தச் சமயத்தில் பஞ்சணையில் கத்திக் கொண்டிருந்த இரு பறவைகளி லொன்று பறந்து அவள் தலைமேல் உட்கார்ந்தது. அந்தக் காட்சி இளையபல்லவன் இதயத்தை அப்படியே இழுத்தது. இன்னொரு பறவையையும் எடுத்து அவள் தலை மீது உட்கார வைத்துப் படைத்தலைவன் அவளை விழுங்கி விடுவதுபோல் பார்த்தான். கடாரத்தின் அஞ்சுகத்துக்கும் அந்தக் கடற் பறவைகளுக்குமிருந்த தாரதம்மியம் அதிகம். காஞ்சனா தேவியின் எழில் பறவைகளின் அழகைவிட ஆயிரம் மடங்கு அதிகமாகத் தெரிந்தது.

"ஸ்ரீவிஜயத்தின் கிரீடத்தை நீ தரிக்கும்போது, இந்தப் பறவைகளில் ஒன்றை அதன்மீது கண்டிப்பாக உட்கார வைக்கிறேன்" என்றான் இளையபல்லவன், அவள் தோள் களைத் தன்னிரு கைகளால் வருடிக் கொண்டே.

"இப்பொழுதே ஸ்ரீவிஜயத்தை வெற்றி கொண்டதாக அர்த்தமா? பெரும் கனவு காண்கிறீர்களே" என்றாள் காஞ்சனாதேவி இளையபல்லவனைப் பார்த்துப் பெருமை யுடன்.

"வெறும் கனவல்ல காஞ்சனா அது. திட்டத்துடன் ஏற்பட்டுள்ள கனவு. அதன் முதற்படி இன்றிரவில் உனக்கும்

தெரியும், மற்றவர்களுக்கும் தெரியும்" என்று கூறிய இளைய பல்லவன் பஞ்சணையிலிருந்து எழுந்து தளத்தை நோக்கிச் சென்றான். அவன் சொன்னது பெரும் பிரமிப்பாயிருந்தது காஞ்சனாதேவிக்கு. 'ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தை வெற்றி கொள்வதை சர்வுசகஜமாகச் சொல்லிவிட்டாரே படைத் தலைவர்?' என்பதை எண்ண அவள் பெரிதும் வியப்படைந்தாள். அவள் கனவின் படிகளும் கனவாகவே முடிந்துவிட்டால் என்ன செய்வது என்று ஏங்கினாள் அவள். ஜெயவர்மனை அவள் நன்கு அறிந்திருந்தாள். சாணை பிடித்த அவனது அறிவுக்கெதிரில் இளையபல்லவனின் அபாரமான அறிவு மோதினாலும் ஸ்ரீவிஜயத்தின் பலமெங்கே, இளைய பல்லவனுடைய சிறு படையின் பலமெங்கே! என்று எண்ண எண்ணத் திகைத்தாள் அவள். இரவில் தோன்றியது இளைய பல்லவன் கனவின் முதல் படி. அது அனுகூலமாகத் தானிருந்தது. ஆனால் அதைத் தொடர்ந்த அடுத்த இரண்டு படிகள் இளையபல்லவன் ஆபத்தை உச்சநிலைக்குக் கொண்டு போயின.



அத்தியாயம் 51

# முதல் மோதல்

ஸ்ரீவிஜயத்தைக் கைப்பற்றி விடுவதாகத் தான் கூறியது வெறும் கனவல்லவென்றும், அதற்காகவே ஏற்கெனவே திட்டமிட்டிருப்பதாகவும் காஞ்சனாதேவியிடம் கூறிவிட்டுக் கடல் புறாவின் தளத்துக்கு வந்த இளையபல்லவன், அங்கு தனது கட்டளைகளை மிக மும்முரமாக அமீரும், கண்டியத் தேவனும் மற்ற மாலுமிகளும் நிறைவேற்றிக் கொண்டிருப்ப தைக் கண்டு பேருவகை கொண்டான். அவர்கள் மட்டுமல்ல, கடல் புறாவிலிருந்து நூலேணியில் இறங்கிய பாலிக்குள்ளனும் படகொன்றில் தனது மரக்கலத்தை நோக்கி விரைந்து கொண் டிருந்ததையும் கவனித்த படைத்தலைவன் திருப்திக்கு அறிகுறி யாகத் தலையை ஒருமுறை ஆட்டிக்கொண்டான். கடல் புறாவின் தளம் அல்லோல கல்லோலப்பட்டுக் கொண் டிருந்தது. ஒருபுறத்தில் கண்டியத்தேவன் மாலுமிகளைப் பாய்மரங்களில் ஏறிப் பாய்களை அவிழ்க்க ஏவிக் கொண் டிருந்தான். மற்றொரு புறத்தில் அமீர் போர்க் கருவிகளை இயக்கும் உருளைகளைச் சரி பார்க்க மாலுமிகளுக்கு உத்தரவிட்டு, சுக்கான் பிடித்திருந்த சேந்தனை நோக்கி ஓடினான்.

கண்டியத்தேவன் உத்தரவை நிறைவேற்றச் சில மாலுமிகள் கனவேகத்தில் பாய்மரங்களில் ஏறிக் கொண் டிருந்ததையும் அமீரின் உத்தரவுகளை நிறைவேற்ற உருளை களை அடைத்திருந்த குறுக்குக் கட்டைகளைப் பெரும் சம்மட்டிகளைக் கொண்டு மற்றும் சில மாலுமிகள் கழற்ற முயன்று கொண்டிருந்ததையும் கண்ட இளையபல்லவன் சுக்கானைப் பிடித்திருந்த சேந்தனிடம் சென்றான். சேந்தன் சுக்கானைத் திருப்பாமல் நடுப்புறத்தில் பிடித்து, பாய்கள்



'உங்கள் இதயம்தான்.'

அவிழ்க்கப்பட்டதும் கப்பல் ஒருநிலையில் ஆடும்படி செய்ய முனைந்து கொண்டிருந்தான். அவனை அடுத்து நின்ற அமீர் பக்கத்திலும் பின்னாலும் வந்து நான்கு மரக்கலங்களையும் நோக்கி, கைகளை ஆட்டியும் விரித்தும் விரலால் பாய்களைக் குறிப்பிட்டும் ஏதோ சைகைகளைச் செய்து கொண்டிருந்தான். அவன் சைகைகள் பலன் அளிக்கத் தொடங்கிவிட்டதை, மற்ற மரக்கலங்களின் மாலுமிகள் பாய்களை இறக்க முற்பட்டதி லிருந்தே புரிந்துகொண்ட படைத்தலைவன், தன் திட்டப்படி காரியங்கள் நிறைவேறுவது குறித்து மகிழ்ச்சி அடைந்தவனாய் அவ்விடத்தை விட்டு அகன்று நூலேணி இருக்குமிடம் வந்து தனக்கு ஒரு படகை இறக்கும்படி மாலுமிகளுக்கு உத்தர விட்டான். அவன் உத்தரவுப்படி படகொன்று இறக்கப்படவே, நூலேணியில் இறங்கி அதில் ஏறிக்கொண்டு இரண்டு மாலுமிகளை விட்டுப் படகைத் துழாவச் சொல்லிப் பக்கத்தில் சற்றுத் தள்ளி நின்றிருந்த 'காஞ்சனா'வை நோக்கிச் சென்றான்.

'காஞ்சனா'வின் பாய்ச்சீலைகள் துரிதமாக இறக்கப்பட்டு முடிந்த சமயத்தில் அந்த மரக்கலத்தை அடைந்த இளைய பல்லவன் அதில் ஏறி மரக்கலம் முழுவதையும் ஒருமுறை சுற்றிப் பார்த்தான். பிறகு அதன் தலைவனிடம் அடுத்து என்ன செய்யவேண்டும் என்பதைப்பற்றி விளக்கிவிட்டு அதிலிருந்து கிளம்பி 'மஞ்சளழகி'க்குச் சென்றான். இப்படி ஒவ்வொரு கப்பலாக நான்கு மரக்கலங்களுக்கும் சென்று மீண்டும் கடல் புறாவுக்கு இளையபல்லவன் வந்தபோது உச்சிவேளை தாண்டி ஐந்து நாழிகைகளும் ஓடிவிட்டன. காலை முதல் அவன் நீராடாமலும் உணவருந்தாமலும் மற்ற மரக்கலங்களுக்குப் போய்க் கொண்டிருந்ததால் தானும் உணவருந்தாமல் தவித்துக் கொண்டிருந்த காஞ்சனாதேவி அவன் மீண்டும் அக்ரமந்திரத்துக்குள் நுழைந்தபோது, "நீங்கள் இன்னும் சாப்பிடவில்லையே" என்றாள் கவலையுடன்.

"சாப்பாடு அவசியமில்லை காஞ்சனா?" என்றான் பதிலுக்கு இளையபல்லவன் குதூகலத்துடன்.

"ஏன்? வயிறு நிரம்பிக் கிடக்கிறதா?" என்று வினவினாள் காஞ்சனாதேவி.

"ஆம்."

"சாப்பிடாமலேயா?"

"ஆம்."

"அது எப்படி சாத்தியம்?"

"மனம் நிரம்பிக் கிடக்கிறது மகிழ்ச்சியால்."

"அதனால்?"

"வயிறு நிரம்பியது போலத்தான். பசியே தெரியவில்லை எனக்கு."

"அத்தனை மகிழ்ச்சிக்குக் காரணம் என்னவோ?"

"கடல் புறாவிலிருந்த கலக்கம் நீங்கியது. மறுபடியும் இதன் மாலுமிகளும் உபதலைவர்களும் முன்போலவே இயங்கு கிறார்கள். காஞ்சனையும் அப்படி... மஞ்சளழகியும்..." என்று வேகமாகச் சொல்லிக் கொண்டு போன இளையபல்லவனை இடைமறித்த காஞ்சனாதேவி, "அடிமைகளைப் பற்றிக் கேள்வி யென்ன?" என்றாள் சிரித்துக்கொண்டு.

இளையபல்லவனுக்கு அந்தச் சமயத்திலிருந்த உணர்ச்சி வேகத்தில், உற்சாகத்தில் அவள் என்ன சொல்கிறாளென்பது விளங்கவில்லையாகையால், "அடிமைகளா? யார் அடிமைகள்?" என்று வினவினான்.

"நீங்கள் குறிப்பிட்டீர்களே, அந்த இருவர்தான்," என்றாள் காஞ்சனாதேவி.

"நான் குறிப்பிட்டேனா?"

"ஆம். காஞ்சனாதேவி, மஞ்சளழகி என்று குறிப்பிட வில்லை?"

"ஆம். மரக்கலங்களைக் குறிப்பிட்டேன்."

"மரக்கலங்களாயிருந்தாலும், மனிதக் கலங்களாயிருந் தாலும் உங்களிஷ்டப்படிதானே அவை இயங்க முடியும்?" என்ற காஞ்சனாதேவி நகைத்தாள்.

அப்போதுதான் விஷயத்தைப் புரிந்துகொண்ட இளைய பல்லவனும், அந்தச் சமயத்திலிருந்த உற்சாகத்தில் வேடிக்கை யாகப் பேசத் துவங்கி, "அவர்களிருவரும் ராணிகள். அவர்கள் எப்படி எனக்கு அடிமையாக முடியும்? நான் என்ன ராஜாவா?" என்று கூறிச் சிரித்தான்.

"ஏனில்லை? ராணிகளுக்குப் புருஷனானால் ராஜா தானே!" என்ற காஞ்சனாதேவி புன்முறுவல் பூத்தாள்.

"திருமணத்தால் ராஜாவாக நான் விரும்பவில்லை. அப்படி அரசனாகுபவன் அடிமையைவிடக் கேவலம்" என்ற இளையபல்லவன் திடீரெனப் பஞ்சணையில் தொப்பென உட்கார்ந்து, "ஆமாம் காஞ்சனா! ராணிகள் என்று சொல் கிறாயே அதற்கென்ன அர்த்தம்? ஒரு ராணியிடம், அடிமைத் தொழில் புரிவதே கஷ்டம். இரண்டு ராணிகளிடம் அகப்பட்டுக் கொண்டால் தீர்ந்தான் மனிதன். அது கிடக்கட்டும், நீதான் ராணி. மஞ்சளழகி எப்படி அரசி யாவாள்?" என்று விசாரித்தான்.

காஞ்சனாதேவியின் வதனத்தில் மந்தகாசம் விரிந்தது. "என்னைச் சக்கரவர்த்தினியாகச் சபதம் செய்திருக்கிறீர்க ளல்லவா!" என்று கேட்டாள் அவள் எல்லையில்லா உவகையுடன்.

"ஆம்." குதூகலத்துடன் சொன்னான் இளையபல்லவன்.

"அவளை என்னவாக்கச் சபதம் செய்திருக்கிறீர்களோ? ஒருவேளை ராணியாக்கச் சபதம் செய்திருக்கலாம்..."

"நாடு ஏது ராணியாக்க?"

"நாட்டைவிடப் பெரிது இருக்கிறதே!"

"எது? உலகமா?"

"உலகத்தைவிடப் பெரிது?"

"அப்படியொன்று இருக்கிறதா? ஆம் ஆம், சொர்க்கம்."

"சொர்க்கத்தைவிடப் பெரிது."

"அதைவிடப் பெரிது எது?"

"இருக்கிறது. உங்கள் இதயம். அதற்கு அவளை ராணியாக்குவீர்கள்?" இதைச் சொன்ன காஞ்சனாதேவியின் குரலில் அதிருப்தி மண்டிக் கிடந்தது. பொறாமையும் ஊடுருவி நின்றது.

அதைக் கவனிக்கவே செய்த இளையபல்லவன் ஆறுதல் கலந்த பெருமூச்சொன்றை விட்டான். "அப்பாடா?" என்று வாய்விட்டும் அந்த ஆறுதலைக் குறிப்பிட்டான்.

காஞ்சனாதேவியின் பொறாமை சிறிது கோபத்தையும் ஊட்டியது. ஆகவே கேட்டாள், "என்ன அப்பாடா?" என்று கோபத்தைக் குரலில் காட்டி.

"நல்ல வேளை, தப்பினேன்" என்றான் இளையபல்லவன், மெல்ல நகைத்து.

"எதிலிருந்து தப்பினீர்கள்? யாரிடமிருந்து தப்பினீர்கள்? என்னிடம் இருந்தா?" என்று படபடவெனச் சொற்களைக் கொட்டினாள் காஞ்சனாதேவி.

"ஆம் தேவி" என்றான் இளையபல்லவன், மேலும் நகைத்து. அவன் நகைப்பு அவள் கோபத்தை அதிகப் படுத்தியது. அவள் கண்களில் சீற்றம் நன்றாகத் தெரிந்தது. அதைக் கண்ட இளையபல்லவன் மேலும் நகைத்துவிட்டுச் சொன்னான்: "காஞ்சனா! உனக்கும் மஞ்சளழகிக்கும் இடையேயுள்ள தூரம் மிக அதிகம். அவள் அக்ஷயமுனையில் இருக்கிறாள். நீ மலையூருக்கு அருகில் இருக்கிறாய். இப்படியிருக்கையிலே உனக்கு அவள்மீது வெறுப்பு இருக்கிறது. அநபாயர் திட்டப்படி நாம் அக்ஷயமுனை போயிருந்தால் என் கதி என்னவாயிருக்கும்?" என்று.

"என்னவாயிருக்கும்?" என்று சீறிய காஞ்சனாதேவி பஞ்சணையை விட்டுப் பட்டென்று எழுந்தாள்.

"நான்கு வேல்களுக்கிடையிலிருக்கும் கைதி போல இருக்கும்."

"எது நான்கு வேல்கள்?" ஏதோ கேட்கவேண்டு மென்பதற்காகக் கேட்டாள் காஞ்சனாதேவி.

அவள் கையைப் பிடித்து இருந்த இடத்திலேயே நிறுத்திய இளையபல்லவன் தனது வலதுகை விரலொன்றால் அவள் கண்களிரண்டையும் சுட்டிக் காட்டி, "இதோ இருக்கின்றன இரண்டு வேல்கள்," என்றான் அன்புடன்.

அந்த அன்பு சாதாரண சமயத்தில் காஞ்சனாதேவிக்குக் கரும்பாயிருந்திருக்கும். ஆனால் அவள் அந்தச் சமயத்தில் தன் கண்களுக்கு அவன் சொன்ன உவமையைக் கவனிக்க வில்லை. அதே உவமையைத்தானே மஞ்சளழகியின் கண்களுக்கும் சொன்னான் என்ற கோபமே இதயத்தில் எழுந்து நின்றது. அதை வாய்விட்டும் கேட்டாள் அவள், "மற்ற இரண்டு வேல்கள் மஞ்சளழகியின் திருவிழிகளாக்கும்" என்று.

இளையபல்லவன் திணறினான். அந்தச் சமயத்தில் அவன் எண்ணமெல்லாம் மஞ்சளழகியின் மீது திரும்பியது. அவன் உள்ளத்தில் அவள் உருவம் எழுந்து நின்றது. நின்ற உருவம் சும்மா இருக்கவில்லை. சலங்கை கட்டிய கால்களைக் கொண்டு அவன் இதயத்தில் ஆடியது. அழகிய பெருவிழிகள் அவன் இதயத்திலிருந்து கூர்ந்து நோக்கின. அந்த மஞ்சள் நிற முகத்தில் சோகம் பூரணமாகப் பரவிக் கிடந்தது. "மஞ்சளழகிக்கும் ஸ்ரீவிஜயத்தின் அரியணையில் உட்காரச் சொந்தமுண்டு. அவளும் சக்கரவர்த்தினியாக வேண்டியவள். ஆனால் அவள் துர்பாக்கியசாலி. தந்தையால் ஒப்புக் கொள்ளப்படாதவள். பாவம்! அதிர்ஷ்டமற்றவள்! அவளுக்கு அரசுமில்லை நானுமில்லை" என்று உள்ளூரச் சொல்லிக் கொண்ட இளையபல்லவனின் சிந்தனை மஞ்சளழகியை நோக்கி ஓடிக்கொண்டிருந்தது. அலையோரத்தில் உட்கார்ந்த அந்த நாளில், 'நீங்களும் அந்த அலையைப் போலத்தான், என்னைத் தொட்டுவிட்டுப் போய்விடுவீர்கள்' என்று மஞ்சளழகி சொன்னதை எண்ணிப் பார்த்தான். 'அவள் சொன்னது உண்மையாகத்தான் போய்விட்டது. தொட்டு விட்டு வந்துவிட்டேன். ஆனால் நல்ல வேளை நிலைமை

மிஞ்சுமுன் விலகிவிட்டேன்' என்று தன்னைச் சமாதானப் படுத்தியும் கொண்டான். என்ன சமாதானம் படுத்திக் கொண்டும் அவன் நெஞ்சம் சமாதானப்படவில்லை.

முகபாவத்திலிருந்து இளையபல்லவன் மனோநிலையைப் புரிந்துகொண்ட காஞ்சனாதேவி என்ன செய்வதென் றறியாமல் நின்ற இடத்திலேயே நின்றாள். 'எதற்காக இந்தப் பேச்சைக் கிளப்பினோம்? பெண் புத்தி சின்ன புத்தியென்பது சரியாகப் போய்விட்டது' என்று தன்னைத்தானே கடிந்தும் கொண்டாள் கடாரத்துக் கட்டழகி. அவள் மனநிலையை இளையபல்லவன் தவறாகப் புரிந்துகொண்டான். அவள் மஞ்சளழகியின்மீது பூரா வெறுப்புக் கொண்டுவிட்டதாகத் தோன்றியது அவனுக்கு. ஆகவே அவன் பேச்சை அடியோடு மாற்ற முற்பட்டு, "காஞ்சனா! அவகாசமில்லை. சீக்கிரம் உணவை எடுத்து வை. நான் நீராடிவிட்டு வருகிறேன். என் உபதலைவர்கள் வந்துவிடுவார்கள்" என்று கூறிவிட்டுத் தளத்துக்குச் சென்றுவிட்டான் மீண்டும்.

தளத்தின் ஒரு மூலையிலிருந்த மரக் குடங்களால் கடல்நீரை மொண்டு இரு மாலுமிகள் ஊற்ற நீண்ட நேரம் நீராடிய இளையபல்லவன் அங்கேயே உடல் துவட்டிக் கொண்டு அறைக்கு வந்தான். வந்து இடுப்பில் ஒரு துணியை மட்டும் கட்டிக்கொண்டு உணவருந்த உட்கார்ந்தான். காஞ்சனாதேவி உணவருந்திக்கொண்டே அவனைப் பார்த்தாள். அவன் தேகம் பாதி உடையின்றியிருந்ததால் விசாலமான மார்பையும், பணைத்த தோள்களையும் கண்ட காஞ்சனாதேவி அவன் அங்கங்களில் புருஷத்தன்மை முழுக்க முழுக்கப் பொலிவுறுவதைக் கண்டு வியந்தாள். மார்பிலாடிய பெரும் ஒற்றைக்கல் ரத்தினமும் காதிலிருந்த ஒற்றைக் குண்டலமும், முகத்தில் தொங்கிய சுருட்டை மயிரிழைகளும் அவன் கொள்ளைக்காரனென்பதை பறைசாற்றியும் அவள் மனம் அவனையே நாடி நின்றது.

ஆழ்ந்த சிந்தனையில் இருந்தபடியால் பேசாமலே இருவரும் உணவருந்தி முடித்தனர். அதற்குப் பிறகு சீக்கிரம்

புது உடை புனைந்து வருமாறு காஞ்சனாதேவியிடம் கூறிய இளையபல்லவன் தானும் உடையணிவதில் முனைந்தான்.

ஒரு நாழிகை சென்றது. காஞ்சனாதேவி புத்தாடை புனைந்து இரண்டொரு ஆபரணங்களை மட்டுமே அணிந்து இடைக் கதவைத் திறந்து கொண்டு மோகனாகாரமாக இளையபல்லவனிருந்த அறைக்குள் நுழைந்தவள் பிரமித்துப் பல விநாடிகள் நின்றுவிட்டாள். இளையபல்லவன் போர்க் கோலத்திலிருந்தான்!

அவன் உடை படாடோபமாயிருந்தது. கால் சராயின் விலை மதிக்க முடியாததாயிருந்தது. மேலே தரித்த அங்கியும் விலை உயர்ந்ததாயிருந்ததை அங்கியின் கைப்புறங்கள் காட்டின. மார்பை மட்டும் சிறு இரும்புக் கவசமொன்று மறைத்திருந்தது. இடைக்கச்சையில் குறுவாளொன்றையும், நீண்ட வாளொன்றையும் பொருத்தியிருந்தான் படைத் தலைவன். நெற்றியில் பளிச்சென திலகமும் இட்டிருந்தான். அந்தக் கோலத்தைப் பார்த்த காஞ்சனாதேவி பிரமித்துப் பல விநாடிகள் நின்றாள். பிறகு மெள்ள பிரமிப்பை உதறி, "என்ன, போர்க்கோலத்திலிருக்கிறீர்களே!" என்று வினவவும் செய்தாள் தட்டுத் தடுமாறி.

"போர் காத்திருக்கிறது ஜம்பி நதியின் வாயிலில்! ஆகவே போருக்குத் தயாராயிருக்கிறேன்," என்ற இளையபல்லவன் புன்முறுவல் கொண்டான். அதே சமயத்தில் அக்ரமந்திரத்தின் தளக்கதவு திறக்கப்பட்டு அமீர், கண்டியத்தேவன், பாலிக் குள்ளன் ஆகியோரும் மற்ற மூன்று மரக்கலங்களின் உப தலைவர்களும் உள்ளே நுழைந்தார்கள். அவர்களுள் ஒவ்வொருவரும் போருக்குச் சன்னத்தமாக வந்திருந்ததைக் கவனித்த காஞ்சனாதேவி ஏதும் பேசாமல் பஞ்சணையில் உட்கார்ந்து கொண்டாள். அனைவரும் அமர்ந்த பின் அவர்களை ஒருமுறை தன் கண்களால் ஆராய்ந்து விட்டுத் திருப்திக்கறிகுறியாக "நல்லது, உபதலைவர்களே! நல்லது!" என்றும் கூறிப் பஞ்சணையில் தானும் அமர்ந்தான் இளையபல்லவன்.

"உங்கள் உத்தரவுப்படி வந்துவிட்டோம்" என்றான் பாலிக்குள்ளன்.

"இப்பொழுது மஞ்சள் வெயில் வந்துவிட்டதா?" என்று வினவினான் இளையபல்லவன்.

"இல்லை" என்றான் அமீர்.

"சரி. மஞ்சள் வெயில் புறப்பட்டதும் மரக்கலங்கள் துடுப்புகளால் துழாவப்பட்டு நகரட்டும். அப்பொழுது கிளம்பினால் ஜம்பி நதி முகத்துவாரத்தை இரவு புகுந்த முதல் ஜாம முடிவில் அடைவோம். அங்கு ஸ்ரீவிஜயத்தின் மரக்கலங்களுடன் நமது முதல் போர் துவங்கும்" என்று இளையபல்லவன் மேலும் கூறத் தொடங்கி, "அமீர்! தேவரே! உபதலைவர்களே! நாம் மிகுந்த எச்சரிக்கையுடன் போராடினால் வெற்றியை இரண்டு நாட்களில் அடையலாம். உற்றுக் கேளுங்கள், சொல்லும் எதையும் மறக்காதீர்கள். ஜாக்கிரதை! இதுதான் நமது முதல் மோதல் ஸ்ரீவிஜயத்துடன் நேருக்கு நேராக" என்றான். அத்துடன் தனது திட்டத்தையும் அணு அணுவாக விவரிக்கத் தொடங்கினான்.



அத்தியாயம் 52

# ஒரு மாறுதல்

சொர்ணத் தீவின் குறுகிய ஜலசந்தியில், ஜம்பிநதியின் முகத்துவாரத்தில், ஸ்ரீவிஜயத்துடன் ஏற்படப் போகும் முதல் மோதலையும், அதை வெற்றிகரமாக முடிக்கும் வழிகளையும் விளக்க முற்பட்ட இளையபல்லவன், தனது வலதுகை ஆள்காட்டி விரலாலேயே சைகை செய்து கொண்டு பேசத் தொடங்கி, "உபதலைவர்களே! சொர்ணத் தீவின் நதிகளில் பெரும்பாலானவை முரட்டு நதிகள், பெரும் வேகத்துடன் கடலில் கலப்பவை. ஆகவே நாம் நதிக்குள் முன்னேறித் தாக்குவது சிறிது சிரமம்" என்று சுட்டிக்காட்டி, அவர்களனைவரையும் ஒருமுறை உற்று நோக்கினான்.

மற்றவர்களுக்கு ஏதும் புரியாவிட்டாலும் அகூதாவிடம் இளையபல்லவனுக்கு முன்பே பழகிய காரணத்தால் அமீர் மட்டும் தலையை அசைத்து, "இளையபல்லவரே! ஜம்பி நதியின் வேகம் அதிகம். ஆகவே முகத்துவாரத்தை முழுதும் அடைத்து எதிரி மரக்கலங்கள் நிற்க முடியாது. இரு கரைகளுக்கருகில்தான் நிற்க முடியும்" என்று கூறினான்.

இளையபல்லவன், "ஆம் அமீர்! அதைத்தான் உணர்த்த வந்தேன்" என்று ஆமோதித்துவிட்டு மற்றவர்களை நோக்கி, "ஜம்பி நதி முகத்துவாரத்தைக் குறுக்கே மரக்கலங்கள் அடைத்து நிற்க முடியாது. தவிர ஜம்பி நதி முகத்துவாரம் மரக்கலங்கள் நிற்பதற்கு வசதியான துறைமுகம் அல்ல. மரக் கலங்களை நிறுத்த வேண்டுமானால் நதிக்குள் அரைகாதம் செலுத்தி மலையூர் முன்புதான் நிறுத்த வேண்டும். மலையூர், முகத்துவாரத்திலிருந்து அரைகாதம் உள்ளேயிருக்கிற தென்பதையும் அதை அடைய நதிக்குள் மரக்கலங்கள் பயணம் செய்ய வேண்டுமென்பதையும் நான் கூறத் தேவை

# கடல்புறா

## 52. ஒரு மாறுதல்



யில்லை. ஆனால் ஸ்ரீவிஜயத்தின் கடற்படையைச் சேர்ந்த மரக்கலங்கள் சதா நம்மைத் தேடித் திரிவதால் அவற்றை மலையூருக்கெதிரே நிறுத்தமாட்டான் ஜெயவர்மன். ஜல சந்தியில் ஜம்பியின் முகத்துவாரத்தில்தான் நம்மை எதிர்பார்ப்பான். அது மட்டுமல்ல, மலையூருக்கருகில் அவன் மரக்கலங்களிருக்கும் போது நாம் ஜம்பியின் கடல் வாயிலை அடைந்துவிட்டால் ஸ்ரீவிஜயத்தின் போர்க்கப்பல்கள் நம்மை மீறி வெளியே கடலுக்குள் போக முடியாது என்பதும் ஜெயவர்மனுக்குத் தெரியும்" என்று கூறினான்.

உபதலைவர்கள் அனைவரும் தங்கள் தலைவன் பேச்சை உற்றுக் கேட்டுக்கொண்டிருந்ததால் அவர்கள் யாரும் பதில் சொல்லவில்லை. இளையபல்லவனே மேலும் சொன்னான்: "ஆகவே என் ஊகம் சரியானால் ஸ்ரீவிஜயத்தின் போர்க் கப்பல்கள் நான்கு அல்லது ஐந்து ஜம்பி நதியின் முகத்துவாரத் தின் இரு கரைகளிலும் மலையூர்நதி மார்க்கத்தைப் பாதுகாத்து நிற்கலாம். பக்கத்துக்கு இரண்டாகவோ மூன்றும் இரண்டுமாகவோ நிற்கலாம். எனக்குக் கிடைத்துள்ள செய்தி சரியானால் அதிகப் போர்க் கப்பல்கள் அங்கு இல்லை. இந்த நான்கு ஐந்து போர்க்கப்பல்களைச் சமாளிப்பதையும் சுலப மென்று நினைக்க வேண்டாம். சென்ற ஆறுமாதங்களாகவே சீனத்து வாண மருந்துகளை ஜெயவர்மன் வாங்கிச் சேகரிப்ப தாகக் கேள்வி எனக்கு. வாண மருந்துகளின் சேமிப்பு என்றால் தீயை வீசுவது என்று பொருள். அதற்கு ஜெயவர்மன் என்ன ஏற்பாடு செய்திருக்கிறானோ, எத்தகைய பொறிகளை அமைத் திருக்கிறானோ நமக்குத் தெரியாது. ஆகவே மிகவும் எச்சரிக்கையுடனும் அதிகக் கால தாமதம் செய்யாமலும் நாம் எதிரிக் கப்பல்களை அழித்துவிட வேண்டும். அந்தப் பணிக்கு வழிகாட்ட முதலில் எனது தலைமையில் கடல் புறா செல்லும்..."

இந்த இடத்தில் திடீரென அமீரும் கண்டியத்தேவனும் மட்டுமின்றி, பாலிக்குள்ளனும் குறுக்கிட்டுப் பேசினார்கள். "கூடாது கூடாது. நமது மரக்கலங்களில் அதிக சக்தி வாய்ந்தது

கடல் புறா. அது செயலற்றுவிட்டால் மற்றக் கப்பல்களை நசுக்குவது எளிது" என்றான் அமீர்.

"தவிர ஆபத்தில் தலைவர் முதலில் தலையிடுவது தவறு. தலைவருக்கு ஆபத்து நேரிட்டால் நிலைமையைச் சமாளிக்க அப்புறம் யாரிருக்கிறார்?" என்றான் கண்டியத்தேவன்.

"போதாக்குறைக்கு நம்மிடமிருக்கும் இரு மரக்கலங்கள் சர்ப்ப மந்திரங்கள், உல்லாசப் பயணத்துக்கே உபயோக முள்ளவை. அவற்றில் பெரும்பாலும் விலை மதிக்க முடியாத பலப்பல வர்த்தகப் பொருள்கள் இருக்கின்றன" என்றான் பாலிக்குள்ளன்.

இளையபல்லவன் இந்த ஆட்சேபணைகளைக் கேட்டுப் புன்முறுவல் கொண்டான். "நீங்கள் படும் கவலைகள் எதற்கும் அர்த்தமில்லை உபதலைவர்களே! கடல் புறா, முதலில் செல்லும், ஆனால் போரிடாது!" என்று கூறவும் செய்தான்.

"போரிடாதா!" வாயைப் பிளந்தது பிளந்தபடி இருந்தான் பாலிக்குள்ளன்.

"போரிடாது. ஏனென்றால் நாம் மலையூர் போரில் மாநக்காவரத்துக்கு நேர்மாறாக நடந்து கொள்வோம்" என்று பாலிக்குள்ளனை நோக்கிக் கூறிய படைத்தலைவன், "அமீர், நினைப்பிருக்கிறதா உனக்கு? கடல் மோகினியை அடையும் போது, எப்படி அடைந்தோம்?" என்று அமீரை வினவினான்.

"நினைப்பிருக்கிறது படைத்தலைவரே! கடல் புறாவின் எல்லா விளக்குகளையும் பந்தங்களையும் பட்டப் பகல் போல் எரியவிட்டுக் கொண்டு அடைந்தோம்" என்றான் அமீர்.

"இங்கு நாம் அதைச் செய்யப் போவதில்லை. இங்கு எந்த மரக்கலங்களிலும் விளக்கிருக்காது. கிருஷ்ணபட்ச மாகையால் இருளும் மண்டிக் கிடக்கும். தவிர, வடமேற்குப் பருவக்காற்றின் மேகங்களும் நட்சத்திரங்களை மறைத்துவிடும். அந்த இருளில் கடல் புறாவை நான் துடுப்புகளைக் கொண்டு துழாவி ஜம்பி நதியின், முகத்துவாரத்துக்குள் நுழைவேன்.

நுழையும் தருவாயில் மிகுந்த வேகத்துடன் நுழைந்து விடுவேன்" என்றான்.

வேகமாக நுழையும் மர்மம் அமீருக்கும் கண்டியத் தேவனுக்கும் பாலிக்குள்ளனுக்கும் தெளிவாகத் தெரிந்திருந் தாலும், புதிதாக வந்திருந்த இரு உபதலைவர்களுக்குப் புரியாததால் அவர்களில் ஒருவன் கேட்டான், "தலைவரே! துடுப்புகளைக் கொண்டு மட்டும் வேகமாக முகத்துவாரத்தில் மரக்கலத்தை எப்படிச் செலுத்த முடியும்?" என்று.

"முதல் ஜாம முடிவில் நாம் முகத்துவாரத்தை அடைவோம்" என்றான் இளையபல்லவன்.

"ஆம்."

"அப்பொழுது அலைமாறும் சமயம். பேரலைகள் பெரு வேகத்துடன் நதிக்குள் புகும் சமயம் அது. அந்த அலைகள் எழும் சமயம் பார்த்து மரக்கலத்தை இயக்கினால் பாய்கட்கு ஓடும் வேகத்தைவிட அதிக வேகத்தில் மரக்கலம் உள்ளே நுழைந்துவிடும்."

இந்த விளக்கத்தைக் கேட்டதும், "ஆச்சரியம்! ஆச்சரியம்! தலைவர் அனைத்தையும் யோசித்திருக்கிறார்" என்று குரலில் வியப்பு மண்டக் கூவினான் அந்த உபதலைவன்.

"இதில் வியப்பு ஏதுமில்லை உபதலைவரே? இன்னும் சில நாட்கள் இந்தக் கடல் புறங்களில் பழகினால், கடலின் நோட்டம், அலைகள் மாறும் சமயம், காற்று திசை மாறும் சந்தர்ப்பங்கள் எல்லாவற்றையும் நீங்களும் அறிந்து கொள்வீர்கள்" என்று கூறிய இளையபல்லவன் மேற்கொண்டு தனது திட்டத்தை விவரித்தான். "முதல் ஜாம முடிவில் நல்ல இருளில் அலை வேகமாக எழும் சமயத்தில் கடல் புறாவை நான் முகத்துவாரத்துக்குள் வெகு வேகமாகக் கொண்டு போவேன். நான் முகத்துவாரத்தை அடையும் வரையில் அங்குள்ள மரக்கலங்களுக்கு நமது வருகை தெரியாது. அதற்கு வடமேற்கு பருவக் காற்று அளிக்கும் மேகங்களின் உதவி இருக்கிறது. தவிர மலையூர், துறைமுக நகரமல்லவாதலால்

இங்கு கலங்கரைவிளக்கம் வீசும் வெளிச்சமும் கிடையாது. நான் கடல் புறாவை முகத்துவாரத்துக்குள் செலுத்திய பிறகு தான் இரு கரைகளிலும் நிற்கும் எதிரிக் கப்பல்கள் இதைக் காண முடியும். கண்டவுடன் அதைத் தாக்க இருபுறங்களி லிருந்தும் ஒன்றுசேர முற்படும். அவற்றை ஒன்றுசேர விடுங்கள்..."

இந்தச் சமயத்தில் கண்டியத்தேவன் இடைமறித்து, "என்ன! ஒன்றுசேர விடுவதா?" என்று வினவினான் வியப்புடன்.

"ஆம்." திட்டமாக வந்தது இளையபல்லவன் பதில்.

"அவை ஒன்று சேர்ந்தால் நாங்கள் உங்களை அணுக முடியாதே. இடையே கப்பல்கள் உங்களை அடைத்துவிடுமே" என்று மீண்டும் வினவினான் தேவன்.

"ஆம். அடைத்துவிட வேண்டும்" என்றான் படைத் தலைவன்.

"அது எப்படி நமக்கு அனுகூலம்? கடல் புறாவையும் மற்ற மரக்கலங்களையும் இரண்டாகப் பிரித்துவிடுவது பலவீனமல்லவா நமது படைக்கு?" என்று வினவினான் கண்டியத்தேவன் மறுபடியும்.

"எப்படி அனுகூலமா! கேளுங்கள். ஜம்பி நதி முகத்துவாரத்தில் அலைவேகம் அதிகம் என்று சொன்னேன். நான் உள்ளே நுழையும் சமயத்தில் இருகரையிலும் உள்ள எதிரிக் கப்பல்களின் வெளிச்சம் கடல் புறாவின் மீது வீசும். அப்பொழுதுதான் அம் மரக்கலங்களின் தளங்களில் காவல் புரியும் வீரர்கள் விழித்துக் கொள்வார்கள். உடனே அபாய தாரைகள் ஊதப்படும். மரக்கலங்கள் வேகமாக என்னைத் துரத்தி அழிக்க ஒன்றுபட இயக்கப்படும். இருகரைகளிலும் உள்ள நான்கு மரக்கலங்கள் துறைமுகத்தை அடைக்கும்போது அவையும் திடமாக நிற்க முடியாது. அலைவேகம் அவற்றை என்னை நோக்கித் தள்ளும். நான் கடல் புறாவின் ஆயுதங்களை அவற்றின்மீது திருப்புவேன். அதே சமயத்தில்

பாலி மாலுமியின் மரக்கலமும் மற்றொன்றும் அவற்றைப் பின்புறம் தாக்கும் சமயத்தில் காஞ்சனாவும், மஞ்சளழகியும் பின்புறக் கடைசியில் இருக்க வேண்டும். அவை இரண்டை யும் அமீரும் கண்டியத்தேவனும் பாதுகாப்பார்கள்..." என்ற இளையபல்லவனை மேற்கொண்டு பேசவிடாத அமீரும் கண்டியத்தேவனும் ஏககாலத்தில் ஆசனங்களை விட்டு எழுந்து, "இளையபல்லவரே!" என்று ஆட்சேபணைக் கூச்சலைக் கிளப்பினார்கள்.

இளையபல்லவன் அனுதாபத்துடன் அவ்விருவரையும் பார்த்தான். பிறகு உறுதியுடன் சொன்னான்: "அமீர்! தேவரே! சென்ற ஒன்றரை ஆண்டுகளுக்கு மேல் நான் உங்களை முன்னணியில் நிறுத்தியே போரிட்டிருக்கிறேன். ஆகையால் உங்கள் துணிவையோ திறமையையோ நான் சந்தேகிப்ப தாக எண்ண வேண்டாம். நாம் மலையூர் செல்லும்போது காஞ்சனாவிலும் மஞ்சளழகியிலுமுள்ள அபூர்வப் பொருள்கள் அனைத்தும் நமக்குத் தேவை. அவை வெகு ஜாக்கிரதையாகக் காப்பாற்றப்பட வேண்டும். அப்படி அடியோடு அந்த இரு மரக்கலங்களும் தப்பவும் முடியாது. ஒருவேளை அவை தாக்கப்பட்டால், அனுபவமுள்ள இரு தலைவர்கள் அவற்றைப் பாதுகாக்க வேண்டியிருக்க வேண்டும். ஆகவே அமீர் காஞ்சனாதேவியையும், தேவர் மஞ்சளழகியையும் காக்கட்டும்" என்று.

அஃதற்கு மேல் யாரும் ஏதும் சொல்லாமலிருக்கவே மீதித் திட்டத்தையும் விளக்கினான் இளையபல்லவன். "எதிரி மரக் கலங்கள் இணைந்தவுடன் அலைகளில் நடமாடும்போது நான் அவற்றை நதிக்குள்ளிருந்தும், நீங்கள் கடல் பகுதியில் இருந்தும் தாக்க வேண்டும். அப்படித் தாக்கினால் அந்த மரக்கலங்களை அழிக்கத்தான் முடியும், கைப்பற்ற முடியாது; அவற்றின் தலைவர்கள் சரணடைந்தாலொழிய. ஆனால் அவர்கள் சரணடைவதற்கு வழியுமிருக்காது. அலைவேகம் மிகுதி. ஆகவே, நமது தாக்குதலின் வேகமும் மிகுதி. அநேகமாக அந்த நான்கு மரக்கலங்களையும் கொளுத்தி விடுவோம். அவற்றி

லுள்ள மாலுமிகள் நதியில் விழுந்து நீந்தித் தப்ப முயன்றால் யாரும் அவர்களைக் கொல்ல வேண்டாம். தப்புவதைத் தடை செய்யவும் வேண்டாம். அவர்கள் தப்பிச் செல்வதில் நமக்கு அனுகூலமிருக்கிறது. மரக்கலங்கள் எரியும்போதே, அழிந்துவிடு முன்பாகவே, நமது மரக்கலங்கள் எல்லாம் நதிக்குள் வந்துவிட வேண்டும். எதிரி மரக்கலங்கள், சரியாகத் தீக்கு இரை யாகாமல் அடிமரம் வெடித்து மூழ்கிவிட்டால் முகத்துவாரம் தடைப்படலாம். தடைப்பட்டால் நீங்கள் கடற்புறத்திலும் நான் நதிப்புறத்திலும் இருப்பேன். ஜாக்கிரதை. ஆனால் எதற்கும் கவலைப்படாதீர்கள். செல்லுங்கள்."

இத்துடன் தனது பேச்சு முடிந்து விட்டதற்கறிகுறியாக இளையபல்லவன் தனது இருப்பிடத்தை விட்டு எழுந்து நின்றான். அதற்குமேல் ஏதும் பேசாத உபதலைவர்கள் இளையபல்லவன் கட்டளையை நிறைவேற்ற சென்றார்கள். அவன் போர்த் திட்டம் எல்லோருக்கும் புரிந்திருந்தாலும், இரு உல்லாசக் கப்பல்களை அவன் ஏன் காப்பாற்றச் சொன்னான்? அவற்றிலிருந்த விலையுயர்ந்த வைரங்கள், மாணிக்கங்கள், தங்க நகைகள், பட்டுப் பீதாம்பரங்கள் இவற்றில் ஏற்பட்டுள்ள ஆசையா, என்று அதற்குக் காரணம் புரியாமல் திணறினார்கள். ஆனால் அவற்றையெல்லாம் யோசிக்க அவகாசமில்லை யாருக்கும். மற்ற உபதலைவர்கள் அவரவர் மரக்கலங்களுக்குச் சென்றார்கள். அமீரும் கண்டியத் தேவனும் காஞ்சனாவையும் மஞ்சளழகியையும் நோக்கிப் படகில் விரைந்தார்கள்.

அடுத்த ஒரு நாழிகைக்குள் எல்லா மரக்கலங்களும் துடுப்புப் பெற்று அசைந்தன. மரக்கலங்களின் தளங்களில் அதனதன் தலைவர்கள் மிகத் துரிதமாக உத்தரவுகளைப் பிறப்பித்தார்கள். கதிரவன் மறைய முற்பட்டு எங்கும் மஞ்சள் வெய்யில் வீசியதும் மரக்கலங்கள் மெள்ள மெள்ள முன்னேற முற்பட்டன. பாய்கள் ஏதுமின்றித் துடுப்புக்களால் மட்டுமே துழாவப்பட்டதால் மரக்கலங்கள் அலைகளில் ஊர்ந்தே சென்றன. அலைகள் ஆரம்பத்தில் மிக நிதானமாக

இருந்ததால் மரக்கலங்களின் வேகமும் பரம நிதானமாக இருந்தது.

அப்படி நிதானமாகத் தனது பெரும் மூக்கை மலையூரை நோக்கித் தூக்கித் தூக்கித் தூரத்தே தெரிந்த மலையூரின் மலைக்கோட்டையைத் தனது அழகிய கண்களால் ஆராய்ந்து ஆராய்ந்து சிந்திப்பதுபோல் கடல் புறா மிதந்து நிதானமாகவும் அதே சமயத்தில் திடத்துடனும் நகர்ந்தது. அதன் இறக்கை களின் அடியிலிருந்து துழாவிய துடுப்புகளும் ஒரே சீராகச் சர்ரென்ற ஒலியுடன் நீரைத் துழாவின. அதன் தளத்தில் நின்ற இளையபல்லவன் எதிரே தூரத்தே தெரிந்த மலைக் கோட்டையை மட்டும் கண்டான். முகத்துவாரம் அரைக் காதமிருந்ததால் கண்ணுக்குப் புலப்படவில்லை. அடுத்த அரை ஜாமத்தில் இருள் நன்றாகக் கவிந்தது. மலைக்கோட்டை உச்சியிலிருந்த ஒரு தீபம் மட்டும் மினுக் மினுக்கென்று எரிந்தது. இளையபல்லவன் உத்தரவுப்படி கடல் புறாவிலும் மற்ற மரக்கலங்களிலும் விளக்குகளோ பந்தங்களோ கொளுத்தப்படவில்லை. கருமை தட்டிக் கிடந்த அந்த இருளிலேயே தளத்தில் நடந்தும் ஓடியும் இளையபல்லவன் உத்தரவுகளைப் பிறப்பித்துக் கொண்டிருந்தான். மெள்ள முதல் ஜாமமும் நகர்ந்து கொண்டிருந்தது. அது முடிவடையும் தருவாயில் ஜம்பியின் முகத்துவாரமும் நெருங்கியது. அத்தனை இருளிலும் நன்றாகப் பார்த்தும் சக்தி வாய்ந்த தனது கண்களால் முகத்துவாரத்தையும் நோக்கி, கீழே எழுந்து கொண்டிருந்த அலைகளையும் நோக்கிய இளையபல்லவன் வெகு வேகமாகச் சேந்தனிருந்த இடம் சென்று, "சேந்தா! சுக்கானை இப்படிக் கொடு" என்று வாங்கிக் கொண்டான்.

"ஏன் இளையபல்லவரே? சுக்கானைப் பிடிக்க..." என்று ஏதோ துவங்கிய சேந்தனைச் சட்டென்று இடைமறித்த இளையபல்லவன், "எதுவும் பேசாதே. சுக்கானை நான் பார்த்துக் கொள்கிறேன். நீ என் அறைக்குச் சென்று காஞ்சனாதேவியை அறையை விட்டு நகர வேண்டாமென்று சொல். உம், செல்" என்று கடுமையுடன் உத்தரவிட்டான்.

வெகு வேகமாக அக்ரமந்திரத்தை நோக்கி ஓடிய சேந்தன் அதன் முகப்பிலேயே காஞ்சனாதேவி நின்று கொண்டிருப்பதைக் கண்டு "தேவி! தேவி! உள்ளே செல்லுங்கள். நீங்கள் வெளியே வரக்கூடாது" என்றான்.

"ஏன்?" கோபத்துடன் கேட்டாள் காஞ்சனாதேவி.

"இளையபல்லவர் உத்தரவு."

"நான் கீழ்ப்படியும் உத்தேசமில்லை அதற்கு..." என்று மேலும் எதோ சொல்லப் போன காஞ்சனாதேவி திடீரென அதற்குப் பணிந்தாள், இஷ்டத்துடனல்ல, இஷ்டவிரோதமாக. கடல் புறா திடீரென மேலெழுந்து விர்ரென்று அக்ர மந்திரத்தை ஒரு சாய்ப்புச் சாய்க்கக் காஞ்சனாதேவி வெகு வேகமாக அறைக்குள் போய் விழுந்தாள். அடுத்த விநாடி சேந்தனும் அவளருகில் வந்து விழுந்தான். கடல் புறா கடலில் பெரும் அலைகளில் சிக்கி ஜம்பி நதியின் பிரவாகத்துக்குள் அம்புபோல் பாய்ந்து சென்றது. அடுத்த அரை நாழிகைக்குள் ஸ்ரீவிஜயத்தின் கடற்படையுடன் முதன் முதலாக மோதினான் கருணாகர பல்லவன். போர் துவங்கியது, மும்முரமாக. ஆனால் அவன் வகுத்த திட்டப்படி மோதல் நடக்கவில்லை. அவனும் எதிர்பாராத ஒரு பெரும் மாறுதல் இருந்தது. அந்த மாறுதல் எதற்கும் அஞ்சாத கருணாகர பல்லவனுக்கும் அச்சத்தைத் தந்தது.

அத்தியாயம் 53

# விஜயசந்திரன்

கடற்புறமெங்கும் மையிருள் கவிந்து கருமை தட்டிக் கிடந்ததால் ஜம்பிநதி கடலில் கலப்பதுகூடச் சரியாகத் தெரிய வில்லை. இருகரைகளிலும் சற்றுத் தள்ளியிருந்த மீனவர் குடிசைகளில் தெரிந்த சிறு விளக்கொளிகளே ஜம்பிநதி முகத்துவாரம் இருக்குமிடத்தை லேசாகத் தெரியப்படுத்தின. சாதாரண கண்களுக்குத்தான் இந்த ஊகம் தேவையா யிருந்ததே யொழிய, பல சந்தர்ப்பங்களில் இருளில் மரக் கலத்தைச் செலுத்தியிருக்கும் இளையபல்லவனுடைய கூர்மையான விழிகளுக்கு அந்த இருளையும் துழாவும் திறமை யிருந்ததால் ஊகம் எதுவும் அவனுக்குத் தேவையில்லாது போயிற்று. அகூதாவிடம் இணையற்ற பயிற்சி பெற்றிருந்த இளையபல்லவன்மீது வீசிய காற்றும் அது மெள்ள மெள்ளப் பெரிதாகிக் கொண்டிருந்ததைக் கீழே நீரைத் தொட்டுக் கொண்டிருந்த சுக்கானை அடிப்பாக அசைவின் இறுக்கமும் விளக்கவே, சுக்கானை பலமாகப் பிடித்து ஒரு குறிப்பிட்ட நெட்டில் நிலைக்க வைத்தான் கடல் புறாவின் தலைவன். நன்றாகப் பழக்கப்பட்ட பட்சியானது, வளர்ப்பவன் இஷ்டப்படி ஆடுவது போல கடல் புறா இளையபல்லவன் இஷ்டப்படி இயங்க ஆரம்பித்தது.

வடமேற்குப் பருவக்காற்று திடீரெனப் பெரு வேகத்துடன் வீசத் தொடங்கியதும் அலைகள் பெரிதாக எழுந்து ஜம்பி நதிக்குப் பிரவேசிக்க முற்படவே, இளையபல்லவன் சுக்கானை ஒரு திருப்புத் திருப்பி எதிரேயிருந்த முகத்துவாரத்தை உற்றுப் பார்த்தான். நக்ஷத்திரங்களும் மறைந்து கிடந்ததால் சரேலெனத் தெரிந்த அந்த எதிர்ப்பகுதியில் எது முகத்துவாரம் என்பதை அலைகள் புரண்டு எழுந்து உருண்டதிலிருந்தே

''சீக்கிரம்!
பந்தங்களைக்
கொளுத்துகள்
எரியம்புகள்
தயாராகட்டும்.''



புரிந்துகொண்ட இளையபல்லவன், சரேலெனச் சுக்கானை ஒரு புறமாகத் திருப்பவே, கடல் புறா வெகு வேகமாகத் தனது மூக்கை முகத்துவாரத்தை நோக்கித் திருப்பியது. அடுத்தபடி மலையென எழும்பி இரண்டு அலைகள் கடல் புறாவை நீண்ட தூரம் மேலே எழுப்பிய முகத்துவாரத்தை நோக்கி உருட்டின. முகத்துவாரத்துக்கு அருகில் வந்தும் கூட எதிரி மரக்கலங்கள் எதுவும் இருக்கும் அறிகுறி தெரியாது போகவே சிறிது குழப்பமடைந்த இளையபல்லவன் மேற் கொண்டு யோசனை செய்யவோ தாமதிக்கவோ அவகாச மில்லாதபடி அலைகள் அடித்துவிடவே கடல் புறாவை முகத்துவாரத்தில் செலுத்தும் பணியில் மட்டும் ஈடுபட்டான் இளையபல்லவன். மேலும் மேலும் பின்புறத்தில் மலையென எழுந்த அலைகளில் கடல் புறா தவழ்ந்து செல்லச் சுக்கானை இரு கைகளால் பலமாய்ப் பிடித்துக் கொண்டிருந்தான். மலையென எழுந்த அலைகள் முகத்துவாரத்துக்கு வெகு அருகில் கடல் புறாவை உந்தித் தள்ளிக் கொண்டு வந்த பின்புதான், எதிரி மரக்கலங்கள் நிற்கும் இடங்களைக் காண முடிந்தது, படைத்தலைவனால். அவை நின்ற நிலையைப் பார்த்துச் சிறிது அச்சமடைந்த படைத்தலைவன் வேறு யோசனை செய்யும் முன்பாகவே அடுத்த ஓர் அலை கடல் புறாவை ஜம்பி நதியின் முகத்துவாரத்துக்குள் இழுத்துச் சென்றுவிட்டது.

ஆட்டமோ அசைவோ இல்லாமல் ஏதோ ஒரு சாதாரண ஓலையைத் தாங்கிச் செல்வது போலப் பேரலையொன்று அப்படியே கடல் புறாவைத் தூக்கி அம்பு நுழைவது போல் முகத்துவாரத்தில் புகுத்திவிடவே, திடீரெனக் கடல் புறா நான்கு மரக்கலங்களுக்கிடையில் சிக்கிவிட்டதை இளைய பல்லவன் புரிந்துகொண்டான். இளையபல்லவன் எதிர் பார்த்தபடி எதிரி மரக்கலங்கள் நான்கே அங்கு காவல் இருந்தன. அவன் எதிர்பார்த்தபடி இருகரைகளுக்கும் அருகே தான் அவை இருந்தன. கரைக்கு இரண்டாகப் பிரிந்தும் நின்றன. ஆனால் அவன் எதிர்பார்த்ததில் ஒரு மாறுதல்

இருந்தது. முகத்துவாரத்துக்கு அருகில் நிறுத்தப்படவில்லை அந்த மரக்கலங்கள். உள்ளே சிறிது தூரம் தள்ளி அலைகள் மடிந்து நதியின் எதிர் நீரால் நிதானப்படுத்தப்படும் இடத்தில் இருந்தன. அதனாலுண்டான ஆபத்து இளையபல்லவனுக்குத் தெள்ளெனப் புரிந்தது. அந்த நான்கு மரக்கலங்களும் இரு கரைகளிலிருந்தும் நெருங்கி வந்து தன்னை அடைத்து நின்று விட்டால், அந்த இடத்தில் அலைவேகம் இல்லாததால் அவற்றுக்கு ஏதும் ஆபத்தில்லை யென்றும், அவற்றுக்குப் பின்னால் வரும் தனது மரக்கலங்களே அலைகள் புரளுவதால் நிற்க முடியாத நிலை ஏற்படும்போது பாலிக் குள்ளன் மரக்கலங்கள் கன வேகத்தில் முகத்துவாரத்துக்குள் நுழையுமென்றும் அவை நெருங்குமுன்பே நிதானத்துடன் நிற்கும் எதிரிக் கப்பல்கள் அவற்றின் மீது பாணங்களை வீசி விட்டால் அவை தீப்பிடித்து விடுமென்றும் எண்ணிப் பார்த்த இளையபல்லவன் திடீரெனத் தனது பழைய திட்டத்தை மாற்றிச் சேந்தனை அழைத்துச் சுக்கானைப் பிடிக்குமாறும், எதிரிக் கப்பல்கள் கடல்புறாவை நெருங்கி முகத்துவாரத்தை அடைக்க முற்பட்டால் சுக்கானை இரு புறங்களிலும் மாறிமாறித் திருப்பி மரக்கலத்தை ஒரு நிலையில் இல்லாமல் செய்து விடும்படியும் உத்தரவிட்டுத் திடுதிடுவெனத் தளத்தில் ஓடி மாலுமிகளை அழைத்து, “உம், உம், சீக்கிரம். நமது பந்தங்களைக் கொளுத்துங்கள். எரியம்புகள் தயாராகட்டும். இரண்டு பக்கங்களிலும் எரியம்புகள் பறக்கட்டும்” என்று உத்தரவிட்டுக் கிடுகிடுவென்று நடுப் பாய்மரத்தில் ஏறி எதிரி மரக்கலங்களின் நிலைமையைக் கவனித்தான்.

கடல் புறா நதி முகத்துவாரத்துக்குள் வேகமாக நுழைந்த வுடனேயே நங்கூரத்தை எடுத்துவிட்ட எதிரி மரக்கலங்கள் துடுப்புகளால் துழாவப்பட்டு நதியின் மத்திய பாகத்துக்கு வந்து கொண்டிருந்தன. அவை நடுமத்திக்கு வந்து சுவர்போல இணையுமுன்பே கடல் புறாவின் பெரும் உருளைகள் சுழன்று விற்கள் வளைந்து துடித்து நிமிர்ந்து எரியம்புகளை இரு புறத்திலும் வீசிவிடவே எதிரிக் கப்பல்கள் மீது பெரும்

பந்தங்கள் சரேல் சரேலென விழத் துவங்கின. எதிரிக் கப்பல் களும் திடீரெனத் துடிப்புப் பெற்றன. வெகு மும்முரமாக அந்தக் கப்பல்களிலொன்றின் தாரை ஊதப்பட்டதும் அவற்றிலும் பந்தங்கள் கொளுத்தப்பட்டன. அவற்றிலிருந்தும் எரியம்புகள் வந்து கடல்புறாவின் மீது விழுந்தன. கடல் புறாவின் இரு பக்கங்களிலிருந்தும், இரு கரைகளிலிருந்தும் அதை நெருங்கி வந்த எதிரி மரக்கலங்கள் நான்கும் வீசிய பந்தங்கள் ஒன்று சேர்ந்து ஏதோ அந்த நதிப் பிராந்தியத்தில் கோரமான வாண வேடிக்கை நடப்பது போன்ற பிரமையை ஏற்படுத்தியது.

இந்த நிலையைக் கடல் புறாவின் நடுப் பாய்மர உச்சி யிலிருந்து கவனித்துவிட்டுக் கீழே வந்த இளையபல்லவன் ஒரு மாலுமியை அழைத்து, "மாலுமி! கீழே சென்று துடுப்புத் துழாவுவோரை இடது பக்கமுள்ள இரண்டு மரக்கலங்களை நோக்கிக் கடல்புறாவைச் செலுத்தச் சொல்" என்று உத்தர விட்டு மற்றொரு மாலுமியை நோக்கி ஏதோ உத்தரவிட்டான். பிறகு இன்னும் சில மாலுமிகளை விளித்து வலது பக்கமுள்ள எதிரி மரக்கலங்கள் இரண்டின் மீதும் வேல்கள் வீசக் கட்டளையிட்டான். வேறொரு மாலுமியிடம் ஏதோ ரகசிய மாகச் சொன்னான். இப்படிப் பலபடி உத்தரவைப் பெற்ற மாலுமிகள் ஒவ்வொருவரும் தங்கள் ஆபத்தை உணர்ந்து கொண்டனர். கடல் புறா நான்கு மரக்கலங்களுக்கிடையில் தன்னந்தனியாக அகப்பட்டுக் கொண்டதை அறிந்தனர். உத்தரவுகளைப் பிறப்பித்த இளையபல்லவன் முகத்திலிருந்த கவலை அவர்கள் முடிவுக்குச் சந்தேகமற்ற அத்தாட்சியைத் தந்ததால், அவர்கள் ஒவ்வொருவரும் அவன் ஆணையை நிறைவேற்றுவதில் துரிதமாக முனைந்தார்கள். இளைய பல்லவன் தளத்தின் நடுவிலிருந்து திடீரெனப் பின்புறம் சென்றான். பின்புறத்தில் தூரத்தில் பாலிக்குள்ளன் மரக் கலமும் இன்னொன்றும் அலைகளில் எழுந்து கொண்டு இருந்தன. அடுத்த விநாடி அவை அலை வேகத்தில் சிக்கித் திண்டாடும் என்பதை உணர்ந்த இளையபல்லவன், அவை

உதவிக்கு வர நேரம் பிடிக்கும் என்பதையும், அதற்குள் கடல் புறா சரியாகக் கையாளப்படாவிட்டால் அது அழிக்கப் படுமென்பதையும் தீர்மானித்துக் கொண்டு அவற்றைக் கவனிப்பதை விட்டு, கடல் புறாவை இயக்குவதில் முனைந்தான். திடீர் திடீரென உத்தரவுகளைப் பிறப்பித்து வந்தான். அந்த உத்தரவுகளின் விளைவு எதிரி மரக்கலங் களுக்குக் குழப்பத்தை விளைவித்திருக்க வேண்டும். அவை இருகரைகளிலும் இருந்து நெருங்குவதும் சிறிது தடைப் பட்டது.

நதிக்குள் புகுந்த கடல் புறாவுக்கு இடது புறத்தில் நெருங்கிய இரு எதிரி மரக்கலங்களில் ஒன்றின் தளத்தில் அந்தச் சிறு படையை இயக்கி வந்தவனும் ஸ்ரீவிஜயத்தின் கடற்படையின் பிரதான தளபதியுமான விஜயசந்திரன் நின்று கொண்டிருந்தான். சுமாரான உயரத்துடனும் மெல்லிய தேகத்துடனும் இருந்தாலும் பெரும் கடற்போர் வீரனுக்குள்ள களை அவன் முகத்தில் பரவிக் கிடந்தது. ஸ்ரீவிஜயத்தின் பிராந்தியங்களில் இளையபல்லவனுக்கு இருந்த கீர்த்தி அவனுக்கும் இருந்தது. எந்த ஆபத்திலும் மரக்கலங்களைக் காப்பாற்ற வல்லவனென்றும், அபாரமான புத்திக்கூர்மை யுடையவனென்றும் பிரசித்தியடைந்திருந்த விஜயசந்திரன் கூட, கடல் புறாவின் நோக்கம் இன்னதென்று அறியாமல் அந்தக் கணத்தில் குழம்பினான். அலைகளின் நோட்டத்தை அறிந்ததாலும் புத்திசாலியான எந்த மரக்கலத் தலைவனும் உள்புகும் பருவக் காற்றலைகளில்தான் வருவானென்பதை உணர்ந்திருந்ததாலும், உள்ளே வந்த பின்பு எதிரியை மடக்குவதே சரியான முறையென்ற காரணத்தினாலும் முகத்துவாரத்திலிருந்து சற்றுத் தள்ளியே தன் மரக்கலங்களை நிறுத்தி வைத்திருந்தான் விஜயசந்திரன். கடலலைகள் வேகமும் நதி வேகமும் ஒன்றையொன்று எதிர்ப்புறம் தாக்கி நீர் சமனப்படும் இடத்தில் தனது மரக்கலங்கள் இணைந்தால் எதிரி மரக்கலங்களைத் தனது படை இரண்டாகப் பிரித்து விடுவதும் அவற்றைத் தனித்தனியே தாக்குவதும் சுலப

மென்றும் கருதியே தனது மரக்கலங்களை இடம் பார்த்து நிறுத்தியிருந்தான் ஸ்ரீவிஜயத்தின் கடற்படைத் தலைவன்.

அவன் நினைத்தபடிதான் சகலமும் நடந்தது. அவனும் முன் திட்டப்படியே தனது மரக்கலங்களை நெருக்கினான். அப்படி நெருக்கியபோது திடீரெனக் கடல் புறா எரியம்பு களை வீசத் துவங்கியது வியப்பாய் இருந்தது விஜய சந்திரனுக்கு. எரியம்புகள் பாய்மரச் சீலைகளுக்கே அதிக சேதத்தை விளைவிக்க முடியுமென்பதை உணர்ந்திருந்த விஜயசந்திரன், பாய் விரிக்காத தனது மரக்கலங்களின்மீது எதிரி எதற்காக எரியம்புகளை வீசுகிறான் என்பதை அறியாமல் வியப்பே எய்தினான். இளையபல்லவன் ஏதோ மிரண்டுபோய் கண்டபடி போர் துவங்கி விட்டான் என்பதை எண்ணித் தனது மரக்கலங்களிலிருந்தும் எரியம்பு வீசக் கட்டளையிட்டான். கடல் புறாவை விஜயசந்திரன் பார்த்த தில்லையே தவிர அதைப் பற்றியும் இளையபல்லவனைப் பற்றியும் பெரிதும் கேள்விப்பட்டிருந்தான். ஆகவே முதலில் எதிரி மிரண்டு போர் துவங்கிவிட்டான் என்று நினைத்த விஜயசந்திரன் அப்படி இருக்க முடியாது என்று தீர்மானித்துப் பிறகு மிகுந்த யோசனையுடன் போர் நடத்தினான். அவன் மரக்கலங்களில் இருந்த மாலுமிகள் பெரும் கூச்சலுடன் வேல்களை வீசினார்கள். எரியம்புகளையும் சரமாரியாகப் பொழிந்தார்கள். அத்தனை வீச்சுக்கும் இடையே திடீரெனக் கடல்புறா அதன் இடது புறத்தை நோக்கி, அதாவது தானிருந்த மரக்கலத்தை நோக்கி, நகர முற்பட்டதைக் கவனித்த விஜயசந்திரன் அதன் காரணத்தை அறியாமல் குழம்பினான். அந்தக் குழப்பம் அவனுக்கு அரை விநாடிதான் நிலைத்தது. கடல் புறா துடுப்புகள் ஒரு பக்கத்தில் மட்டும் துழாவப்பட்டுத் தன் மரக்கலத்தை முதலில் தாக்க வருவதை உணர்ந்து கொண்ட விஜயசந்திரன் தனது தாரையை எடுத்துப் பலமாக ஒருமுறை ஊதவே கடல் புறாவின் வலது புறத்திலிருந்த எதிரி மரக்கலங்கள் இரண்டும் கடல் புறாவை நோக்கித் துரிதமாக வந்தன. விஜயசந்திரன் நான்கு மரக்கலங்

களுக்கும் இடையில் கடல் புறாவை நெரித்துவிடத் திட்டம் செய்தான்.

இளையபல்லவனைத் தவிர வேறு கடற்படைத் தலைவன் யாராய் இருந்தாலும் தனது மரக்கலத்தை நதிக்குள் வேகமாகச் செலுத்தி இருபுறத்திலும் தாக்கப்படுவதைத் தடுக்கப் பார்த்திருப்பான். செய்ய வேண்டியதும் அதுதான். ஆனால் அந்த அபாயத்தை வேண்டுமென்றே அழைப்பவன் போல் இளையபல்லவன் கடல் புறாவை விஜயசந்திரன் மரக்கலத்தை நோக்கிச் செலுத்தினான். இரு மரக்கலங்களும் நெருங்கியதும் போருக்கும் எதிரி சன்னத்தமாகி விட்டதைக் கண்ட விஜய சந்திரன் அவன் துணிவை எண்ணிப் பெரிதும் வியந்தான். தன் அழிவைத் தேடிக்கொள்ள இதைவிடச் சிறந்த முடிவை இளையபல்லவன் செய்து இருக்க முடியாதென்று தீர்மானித்தான் விஜயசந்திரன். ஆனால் எத்தனை தவறான முடிவு அது! எதிரியை எத்தனை அற்பமாக எடை போட்டு விட்டோம் என்பதை விஷயம் முற்றிப்போன பிறகே உணர்ந்தான் ஸ்ரீவிஜயத்தின் தளபதி.

கடல்புறா அவன் மரக்கலத்தை நோக்கி மெள்ள மெள்ள வந்தது. அதன் இடது பக்கத்தில் அதைத் தாக்க விஜயசந்திரன் தயாராக நின்றான் இரு மரக்கலங்களுடன். வலது புறத்தி லிருந்து அதை நோக்கி வந்தன விஜயசந்திரனின் மற்ற இரு போர்க்கலங்கள். ஆனால் அந்த மரக்கலங்கள் நதியின் மத்தியை அடையுமுன்பாகவே கடல்புறா விஜயசந்திரனிருந்த மரக்கலத்தை நெருங்கியது. விஜயசந்திரனின் மாலுமிகள் எறிந்து கொண்டிருந்த வேல்களையும் எரியம்புகளையும் மீறி நெருங்கிக் கொண்டிருந்தது. விஜயசந்திரன் மேலும் வியப்படைந்தான். அவனது மரக்கலம் கடல்புறாவை விடப் பெரியது. பெரும் பாரமுள்ளது. அதை மோதக் கடல்புறா வந்தது வியப்பாயிருந்தது அவனுக்கு. அந்த மோதலால் கடல் புறா பெருவேகத்துடன் பின்னுக்குத் தள்ளப்படுமென்பதை உணர்ந்தான் ஸ்ரீவிஜயத்தின் கடற்படைத் தளபதி. தவிர, போர்க்கலம் இன்னொரு போர்க்கலத்தை நெருங்கும்போது

எதிரியை அருகில் இழுக்க உபயோகப்படுத்தப்படும் இரும்புக் கொக்கிகளைக் கூடக் கடல் புறா வீசவில்லை என்பதையும் கவனித்த விஜயசந்திரன், எதிரி எதைத்தான் அந்த மோதலால் சாதிக்க இஷ்டப்படுகிறானென்பதையும் அறியாமல் திகைத்தான். அடுத்த சில விநாடிகளுக்குள் கடல்புறா அவன் மரக்கலத்தை நெருங்கிவிட்டது. திடீரெனப் பெரும் பிரமை விஜயசந்திரனின் உள்ளத்தைக் கவிந்துகொண்டது. அவன் அதுவரை கண்டிராத காட்சியைக் கண்டான். கடல்புறா தனது இடது இறக்கையைத் திடீரென விரித்தது. இந்தப் பெரும் இறக்கையில் கடல் புறாவின் தளத்திலிருந்த மாலுமிகள், வில், வேல், வாட்களுடன் தோன்றி விஜயசந்திரன் மரக்கலத்தின் மீது குதித்தனர். அவ்வளவுதான், விஜயசந்திரன் மாலுமிகள் கைகலக்கத் தாரை ஊதினான். கடல்புறா மாலுமிகளும் விஜயசந்திரன் மாலுமிகளும் பெருங்கூச்சலுடன் வேல்களை வீசியும் வாட்களை உருவியும் போரில் இறங்கினார்கள்.

போருக்கு மாலுமிகளை ஏவிக்கொண்டிருந்த விஜய சந்திரன் திடீரெனத் திகைத்து நின்றான். அவன் மரக்கலத்தில் அடியில் சர்ரென்று பெரும் ஓசை கேட்டது. அடுத்த விநாடி அதே மாதிரி ஓசை மீண்டும் கேட்டது. கடல்புறா திடீரென அந்த மரக்கலத்தை விட்டுப் பின்னடைந்தது. சில விநாடிகள் பறந்தன. விஜயசந்திரன் மரக்கலத்தில் பெருங் குழப்பம் ஏற்பட்டது. மெள்ள மெள்ள அது மூழ்கத் தொடங்கியதை அந்த மரக்கல மாலுமிகள் உணர்ந்தனர். விஜயசந்திரன் வாயடைத்து நின்றான். திடீரெனத் தனது மரக்கலம் அமிழத் தொடங்கிவிட்ட காரணம் அவனுக்குப் புரியவில்லை. எதிரே அக்கரையை நோக்கினான் அவன். தோல்வி அங்கும் எதிர்நோக்கிக் கொண்டிருந்தது அவனை. அதனால் பெரிதும் வெகுண்ட விஜயசந்திரன் தோற்பதானால் தனக்கு அபஜயத்தை அளித்த கடல்புறாவை அழித்துவிட்டே தோற்பதென்று தீர்மானித்து, திடீரென மரக்கலத்திலிருந்த நூலேணியில் கிறுகிறுவென இறங்கினான். அந்த மரக்கலம்

சிறிது நேரத்தில் மூழ்கியது. அதற்குப் பின்னாலிருந்த மரக் கலத்தை அடைந்த விஜயசந்திரன் முதன்முதலாகத் தனது சக்தியைக் காட்டினான். கடல்புறாவை நோக்கிப் பெரும் தீப்பந்தமொன்று அடுத்த சில விநாடிகளில் பறந்து வந்தது. வானத்தில் வரவர அதன் பரிமாணம் பெரிதாகியது. அது கடல்புறாவின் மீது விழுந்தால் பெரு நாசம் ஏற்படுமென்பதை உணர்ந்த படைத்தலைவன் என்ன செய்வது என்று அறியாமல் ஒருகணம் திகைத்தான். அந்தக் கணத்தில் ஒரு மகிழ்ச்சியும் உண்டாயிற்று அவன் இதயத்தில். தனக்குச் சமதையான ஒரு கடல் வீரனைத் தான் சந்தித்து விட்டதால் உண்டான மகிழ்ச்சி அது. விஜயசந்திரன் அந்தக் கனல் பந்தத்தைக் கடல்புறாவின்மீது வீசிவிட்டு அந்த மரக்கலத்தைக் கொண்டு வேறு ஒரு புது அபாயத்தையும் சிருஷ்டித்தான் கடல் புறாவுக்கு. அதைச் சமாளித்தால்தான் கடல் புறா பிழைக்கும் என்பதை உணர்ந்த இளையபல்லவன் புத்தி துரிதமாக ஏதேதோ எண்ணமிடத் தொடங்கியது.



அத்தியாயம் 54

# எதிரியின் உதவி

ஸ்ரீவிஜயத்தின் கடற்படைத் தளபதியான விஜயசந்திரன் தான் விரித்த ஆரம்ப வலையிலிருந்து வெகு சாமர்த்தியமாகத் தப்பிவிட்டதையும், தப்பிய வேகத்தில் கடல்புறாவை அழித்து விடத் திடீரெனப் புது ஏற்பாட்டைச் செய்துவிட்டதையும் கண்ட இளையபல்லவன், அந்தப் புதிய ஏற்பாட்டிலிருந்து எப்படித் தப்புவது என்பதைப் பற்றித் துரிதமாக எண்ணமிடத் தொடங்கினான். கடல் புறாவின் இடது பக்கத்து இறக்கை யைத் தூக்கி அதன்மீது தனது மாலுமிகளை நிறுத்தி விஜய சந்திரன் மரக்கலத்தின் மீது தாவ விட்டும், அதே சமயத்தில் இறக்கைகளுக்குக் கீழ் பெரும் துளைகளுக்குள் மறைந்து கிடந்த பெரும் ஈட்டிகளை இயக்கி வெளிக் கிளப்பி எதிரி மரக்கலத்தின் அடிப்பாகத்தைப் பிளந்தும் விட்டால் எதிரி மரக்கலம் மூழ்க முற்படுமென்றும், அதனால் அந்த மரக் கலத்தின் மீதுள்ள மாலுமிகள் கிலிக்குள்ளாகலாமென்றும், அப்படி கிலியில் சிக்கும் மாலுமிகள் தப்பவே பார்ப்பார் களாகையால் அவர்களை முறியடிப்பது ஒரு பெரும் காரிய மல்லவென்றும் திட்டமிட்டிருந்த இளையபல்லவன், தனது திட்டப்படி காரியங்கள் நடந்தும் விஜயசந்திரனால் இருந்த அபாயம் நீங்கவில்லை என்பதை உணர்ந்தான்.

இளையபல்லவனின் திட்டப்படி கடல்புறாவின் இடது இறக்கையிலிருந்து மாலுமிகள் எதிரி கப்பல்மீது தாவியே போரிட்டார்கள். அவன் திட்டப்படி கடல்புறாவின் அடிப் பாகத்திலிருந்த மாலுமிகள் உருளைகளைத் திருப்பி ஈட்டி களை வெளிக் கிளப்பி எதிரி மரக்கலத்தின் அடியைச் சர்ரென்ற ஓசையுடன் பிளக்கவும் செய்தார்கள். அதனால் பெரும் ஓசை ஏற்பட்டு மரக்கலம் அமிழத் தொடங்கியதன்றி

எதிரி மாலுமிகளும் கிலியும் குழப்பமும் அடைந்தார்கள். இதுவரை திட்டம் சரியாகவே நடந்தது. அது மட்டுமல்ல. கடல்புறாவுக்குப் பின்னால் வந்த இரு மரக்கலங்களுக்குத் தலைமை வகித்த பாலிக்குள்ளனும் வெகு திறமையுடன் போரில் கலந்தான். அவன் நேராகத் தனது மரக்கலங்களைக் கடல்புறாவுக்குப் பின்னால் கொண்டுவரவில்லை. கடல்புறா இடதுபுறமாக ஒதுங்கி விஜயசந்திரன் மரக்கலங்களை நோக்கிச் சென்றதையும் மற்றொரு கரையிலிருந்த எதிரி மரக்கலங்கள் இரண்டும் கடல் புறாவை நோக்கி இயங்க ஆரம்பித்ததையும் கண்டதும் கடற்போரில் யாருக்கும் பின்னடையாத பாலிக்குள்ளன் தனது மரக்கலங்களிரண்டை யும் வலது பக்கம் செலுத்தினான்.

இப்படிக் கடல்புறாவை நோக்கி எதிர்க் கரையிலிருந்து நகர்ந்த எதிரி மரக்கலங்களிரண்டையும் பாலிக்குள்ளன் தடை செய்துவிடவே, அந்தப் பகுதியிலிருந்து தனக்கு உதவி கிடைக்காதென்பதை உணர்ந்து கொண்ட விஜயசந்திரன் அமிழத் தொடங்கிய மரக்கலத்திலிருந்து நூலேணியில் இறங்கி, தனது இன்னொரு மரக்கலத்திற்குச் சென்று அலை செல்லும் பாதையில் வேகத்துடனேயே செலுத்தினான். அப்படிச் செலுத்தினால்தான் கடல்புறாவிலிருந்து நன்றாக விலகிச் சென்றுவிடலாமென்பதையும் பக்கவாட்டில் இடது புறம் நகரும் கடல்புறாவை மீண்டும் அலை மார்க்கத்தில் கொண்டு வர நேரம் பிடிக்கும் என்பதையும் தீர்மானித்துக் கொண்ட விஜயசந்திரன் அப்படிப் பின்னடைந்து தீப்பந்தங்களை வீசுவது எளிதென்று முடிவு செய்தான். அது மட்டுமல்ல, தன்னிடமுள்ள தீப்பந்தங்கள் எதிரியிடமிருக்கக் காரண மில்லை என்பதையும் அவன் உணர்ந்தேயிருந்தான்.

உண்மையில் அத்தனை பெரிய தீப்பந்தங்கள் இளைய பல்லவனிடம் இல்லை. சீறி வரும் அந்தச் சீனத்து வாணப் பந்தங்கள் ஸ்ரீவிஜயத்திடம் இருப்பதை இளையபல்லவன் அறிந்திருந்தாலும் அந்தப் பந்தங்கள் மலையூர் பகுதியிலேயே கையாளப்படுமென்பதை அவன் எதிர்பார்க்கவில்லை.

அவற்றைச் சேகரித்து வந்த ஸ்ரீவிஜய சக்கரவர்த்தி அதைத் தனது கடைசி அஸ்திரமாக வைத்திருப்பானென்றே எண்ணினான். ஆகவே அந்தப் பந்தத்தை ஜம்பியின் முகத்துவாரத்திலேயே எதிர்நோக்கும் அவசியம் நேரிட்டதும் அவன் ஓரளவு திணறிப் போனான். விஜயசந்திரன் வீசிய நெருப்புப் பந்தம் இரவிலேயே கதிரவனுதித்து இளைய பல்லவனை அழிக்க வருவது போல் மிகப் பயங்கரமாகக் கடல்புறாவை நோக்கி வந்தது. அதனிடமிருந்து தப்ப இளைய பல்லவன் எத்தனையோ முயன்றும் முடியாமல் போயிற்று. பந்தம் வெகு வேகமாக வந்ததால் கடல்புறாவின் தளத்தில் விழுந்த பின்பும் அதில் கலந்திருந்த மருந்து பெரிதாக எரிந்து தன்னை அண்ட முடியாதபடி கனலைக் கக்கியதால் அந்தப் பக்கத்திலிருந்த மாலுமிகள் அதை அணைக்க விரைந்தனர். அணைப்பதற்குள் தளத்தில் ஒரு பகுதியைக் கருக்கிவிட்டது அந்தப் பந்தம். அதை அணைத்ததும் மற்றொரு பந்தம் கடல் புறாவை நோக்கிப் பறந்து வந்தது.

இரண்டாவது பந்தத்தை நோக்கிய இளையபல்லவன் அப்படிப் பந்தங்கள் அடுத்தடுத்து வந்து கொண்டிருந்தால் அதை அணைக்கும் வேலையே தனக்குச் சரியாயிருக்கும் என்பதையும், தொடர்ச்சியாக நான்கு பந்தங்கள் விழுந்தால் தளத்தின் பெரும் பகுதி தீக்கிரையாகி மரங்கள் வெடிக்கத் தொடங்கிவிடுமென்பதையும் உணர்ந்ததால், அவன் முகத்தில் கவலை பாய்ந்தது. சித்தத்தில் சிந்தனை வேகமாக ஓடியது. திடீரென ஒரு முடிவுக்கு வந்த இளையபல்லவன், "சீக்கிரம் அலைபுகும் வழிக்கு மரக்கலத்தைச் செலுத்துங்கள். எதிரி மரக்கலத்துடன் அலை வேகத்திலேயே சென்று கடல்புறா மோதட்டும்" என்று மாலுமிகளை நோக்கிக் கூவினான். மாலுமிகளுக்கு இந்த உத்தரவு பெரும் வியப்பைத் தந்தது. பெரும் தீப்பந்தங்கள் வீசும் எதிரி மரக்கலத்தை நோக்கிக் கடல்புறா தானாகச் செல்வது சுய அழிவுக்கு அடிகோலுவ தாகும் என எண்ணிய மாலுமிகள் பயத்தையும் வியப்பையும் ஒருங்கே அடைந்தாலும், போரில் இளையபல்லவன் எந்த

உத்தரவையிட்டாலும் அடிபணிய வேண்டிய கடமையை முன்னிட்டு அவன் உத்தரவுப்படி கடல்புறாவின் துடுப்புக் களைத் துழாவி அலை வேகமாக நதிக்குள் பாய்ந்து கொண்டிருந்த இடத்துக்குக் கடல்புறாவைக் கொண்டு வந்தார்கள். இதுவும் விஜயசந்திரனுக்கு விந்தையாயிருந்தது. இத்தனை துரிதமாகக் கடல்புறாவை அலை மார்க்கத்துக்குக் கொண்டுவர முடியுமென்று அவன் நினைக்கவேயில்லை.

அடுத்த சில நிமிஷங்களில் கடல்புறா பெரும் அலைகளில் தாவித் தாவி விஜயசந்திரன் மரக்கலத்தை நோக்கி வெகு வேகமாகச் சென்றது. இந்தப் புதுப் போர் முறையைக் கவனித்த விஜயசந்திரன் ஒரு விநாடிதான் பிரமித்தான். இளையபல்லவன் எதற்காகத் தானாக அழிவைத் தேடுகிறான் என்பது முதலில் தெரியவில்லை அவனுக்கு. ஆனால் அடுத்த விநாடி இளையபல்லவன் ஏற்பாட்டின் கருத்தை அறிந்து கொள்ளவே பெரிதும் திகைத்தான். தான் வீசிய இரண்டொரு நெருப்புப் பந்தங்கள் கடல்புறாவின் தளத்தில் விழுந்து எரிந்து கொண்டிருந்தும் அதை லட்சியம் செய்யாமல் தன்னை நோக்கி வந்துகொண்டிருந்த அந்த அசுரப் பறவை மட்டும் தனது மரக்கலத்தின்மீது மோதினால் பழையபடி தனது மரக் கலத்தின் அடிப்பாகம் பிளக்கப்பட்டு, தனது இரண்டாவது மரக்கலமும் மூழ்கிவிடுமென்பதைப் புரிந்துகொண்ட விஜய சந்திரன் தனது மரக்கலத்தின் பாய்களை ஏற்றுமாறு உத்தர விட்டான். பாய்கள் விரிந்தால் வடமேற்குப் பருவக்காற்று தன்னை நதிக்குள் வெகு தூரம் கொண்டுபோய் விடுமென்றும் அதனால் இளையபல்லவனின் தாக்குதலில் இருந்து தப்பலா மென்றும் தீர்மானித்தான் விஜயசந்திரன்.

ஆனால் அதற்கு இடங்கொடுக்காத இளையபல்லவன் எதிரி மரக்கலத்தில் பாய் கிளம்பத் தொடங்கிய உடனேயே அந்தப் பாய்களின் மீது எரியம்புகள் வீசக் கட்டளையிட்டான் தனது மாலுமிகளுக்கு. அடுத்த சில விநாடிகளில் விஜய சந்திரன் பாய் ஒன்று பற்றி எரிந்தது. அதையடுத்த சில நிமிஷங் களில் கடல்புறா ஒரு பக்கம் திரும்பியது. அதன் இறகு

உயர்ந்தது. அடியிலிருந்த ஈட்டிகள் விஜயசந்திரன் மரக் கலத்தின் அடிப்பாகத்தை வெகு வேகமாகப் பிளந்தன. இந்தப் பயங்கரப் போரை, இளையபல்லவனுடைய துணிகரத் தாக்குதலைத் தூரத்திலிருந்து கவனித்த அமீரும் கண்டியத் தேவனும் பிரமித்துத் தளத்தில் நின்றிருந்தார்கள். பெரும் தீப்பந்தங்களை எதிர்த்துத் தளத்தில் வாங்கிக் கொண்ட சேதத்தைக்கூட லட்சியம் செய்யாமல் கடல்புறா வெகு வேகமாக அலைகளில் சென்று எதிரி மரக்கலத்துடன் இணைந்துவிட்டதையும், இடையே வீசப்பட்ட எரியம்பு களால் எதிரி மரக்கலப் பாய்களும் எதிரி வீசிய தீப்பந்தங் களால் கடல்புறா தளத்தின் ஒரு பகுதியும் எரிந்து கொண் டிருந்ததையும் கண்ட அமீர், இளையபல்லவன் மரம் வெடிக்கக்கூடியதையும் அசட்டை செய்து தற்காப்பு வேலையில்கூட ஈடுபடாமல் எதிரியைத் தாக்கிவிட்டதை எண்ணி வியந்தான். அத்தனை வியப்பிலும் ஒன்று திட்ட மாகப் புரிந்துவிட்டது அவனுக்கு. அதற்குமேல் அதிக நேரம் போர் நடக்காது என்பதுதான் அது.

அமீரின் ஊகம் சரியாகவே இருந்தது. ஏற்கெனவே ஒரு மரக்கலம் அமிழ்ந்துகொண்டிருந்ததாலும் அதே வகையில் தங்கள் மரக்கலமொன்று மறுபடியும் பிளக்கப்பட்டதாலும் பீதியடைந்த விஜயசந்திரன் மாலுமிகள் பெரும் பீதியுடன் தளத்தில் நாலாபக்கமும் ஓடத் துவங்கினார்கள். சிலர் பக்கப் பலகைகள் மீது ஏறி நதியில் குதித்து நீந்தித் தப்ப முயன்றார்கள். நின்று போரிட்ட சிலர் இளையபல்லவன் மாலுமிகளால் கொல்லப்பட்டார்கள். அத்தனைக்கும் அசங்காமலும் தளத்தை விட்டு நகராமலும் தன் வாளை எடுத்துப் போரிட்டுக் கொண்டிருந்த விஜயசந்திரன் தன்னைச் சுற்றிலும் ஏற்பட்டுக்கொண்டிருந்த நாசத்தைக் கண்டு பயத்துக்குப் பதில் சினமே கொண்டான். அந்தச் சினத்தின் விளைவாக இளையபல்லவனின் மாலுமிகளுடன் பலமாகப் போரிடவும் முற்பட்டான். அவனைத் தனியாகப் பத்துப் பதினைந்து மாலுமிகள் வளைத்துக் கொண்டார்கள்.

அவர்களை வெகு அலட்சியமாகப் பார்த்துச் சிரித்து வாளை வீசிய விஜயசந்திரன் தனக்கு மரணம் சம்பவிக்க அதிக நேர மில்லை என்பதை உணர்ந்தான். அவனைச் சூழ்ந்திருந்த வர்கள் அவனை வெட்டிப்போட நெருங்கினார்கள். "நில்லுங்கள்" என்ற இளையபல்லவன் சொல் அவர்கள் பழிச்செயலை நிறுத்தியது.

மாலுமிகளை விலக்கிக் கொண்டு விஜயசந்திரனை நோக்கிய இளையபல்லவன், "மாபெரும் வீரனை நான் அழிக்க விரும்பவில்லை. ஆகவே ஸ்ரீவிஜயத்தின் படைத் தலைவர் வாளை உறையில் போட்டுவிடுவது நல்லது," என்றான்.

"மடிய எனக்குப் பயமில்லை," என்றான் விஜயசந்திரன் அப்பொழுதும்.

"வீரனை அழிக்க எனக்கு விருப்பமில்லை. தயவு செய்யுங்கள். கத்தியை இப்படிக் கொடுங்கள்" என்ற இளைய பல்லவன் தனது கையை நீட்டிக்கொண்டு விஜயசந்திரனை அணுகினான்.

விஜயசந்திரனின் கூரிய விழிகள் இளையபல்லவனை ஏறிட்டு நோக்கின. பிறகு நதிப் பிராந்தியத்தை ஒருமுறை வளைத்துப் பார்த்தன. பிறகு பெருமூச்சு விட்ட விஜயசந்திரன் ஏதும் பேசாமல் தனது வாளை நீட்டினான் இளைய பல்லவனிடம். வாளைப் பெற்றுக்கொண்டு நன்றி தெரிவித்த இளையபல்லவன் விஜயசந்திரனையும் அழைத்துக்கொண்டு விஜயசந்திரன் மரக்கலத்தைத் தொட்டு நின்ற கடல்புறாவின் இறக்கையில் ஏறி நடந்து கடல்புறாவின் தளத்தை அடைந்தான். விஜயசந்திரன் அந்த மரக்கலத்தை மிகுந்த ஆச்சரியத்துடன் நோக்கினான். அதன் தளத்திலிருந்த பல உருளைகளிலிருந்தும் ஆப்புகளிலிருந்தும் அதில் நூதன யந்திர வசதிகள் நிரம்ப இருப்பதை உணர்ந்தான். அத்தகைய மரக் கலத்தில் சில பகுதிகளையாவது தான் தீய்த்துவிட்டதை எண்ணிச் சற்றுப் பெருமையும் கொண்டான் விஜயசந்திரன்.

அவன் கண்கள் சென்ற திக்குகளை நோக்கிய இளைய பல்லவன், "ஆம் படைத்தலைவரே! போர் அநேகமாக முடிந்து விட்டது. அதோ பாலிநாட்டு மாலுமி உங்கள் மீதி மரக் கலங்களையும் கைப்பற்றியாயிற்று. ஆனால் என்னைப்போல் அத்தனை கடுமையல்ல என் உபதலைவன் நிலை" என்று கூறிப் புன்முறுவல் பூத்தான்.

"உங்கள் நிலையிலும் பெரும் கடுமை ஏதுமில்லை" என்றான் விஜயசந்திரன் சற்று தூரத்தே பாய்ச்சீலை பற்றி எரிந்து அமிழ்ந்து கொண்டிருந்த தனது மரக்கலத்தை நோக்கி.

"அப்படிச் சொல்லாதீர்கள். இந்தக் கடல்புறாவை நீங்கள் கருக்கிய அளவுக்கு இதுவரை யாரும் கருக்கியதில்லை" என்றான் இளையபல்லவன்.

இந்தப் பாராட்டுதலால் விஜயசந்திரன் திருப்தியடைவா னென்று எதிர்பார்த்ததால் இளையபல்லவன் ஏமாந்தே போனான். "கருக்கியதில் என்ன பெருமையிருக்கிறது? இந்தப் பந்தங்களுக்குத் தப்பிப் பிழைத்த மரக்கலங்கள் இதுவரை கிடையாது. தவிர தோல்வி தோல்விதானே" என்றான் விஜயசந்திரன் அருவருப்புடன்.

அந்த மகாவீரனை நோக்கிய இளையபல்லவன் கண் களில் அனுதாபம் வீழ்ந்தது. "படைத்தலைவர் சொல்வது தவறு. தோல்வியெல்லாம் தோல்வியல்ல. வெற்றியெல்லாம் வெற்றியுமல்ல. உங்கள் தோல்வியும் ஒருவகை வெற்றிதான்" என்றும் கூறினான் இளையபல்லவன்.

"எப்படி வெற்றி ஆகும் அது?" விஜயசந்திரன் கேள்வியில் வெறுப்பிருந்தது.

"இதுவரை நான் பல போர்களில் ஈடுபட்டிருக்கிறேன்."

"கேள்விப்பட்டிருக்கிறேன்."

"ஆனால் இதுவரை நான் எந்த எதிரியைக் கண்டும் திகைத்ததில்லை."

"அப்படியா!"

"ஆம். முதன் முதலில் உங்களைக் கண்டுதான் திகைத்தேன். ஒரு விநாடி கடல்புறா அழிந்துவிடுமோ என்று கூடக் கலங்கினேன். இதுவே உங்களுக்குப் பெருவெற்றி" என்று கூறிய இளையபல்லவன் இரண்டு மாலுமிகளை விளித்து விஜயசந்திரனை அக்ரமந்திரத்துக்கு அழைத்துச் செல்ல உத்தர விட்டான். மாலுமிகளுக்கிடையே விஜயசந்திரன் சென்றதும் தளத்தில் அப்பொழுது கனிந்துகொண்டிருந்த தீப்பந்தங்களின் நெருப்பை அணைப்பதிலும் மீண்டும் தனது மரக்கலங்களை ஒன்று சேர்ப்பதிலும் முனைந்த இளையபல்லவன் பாலிக் குள்ளனின் மரக்கலங்களிரண்டையும் நோக்கினான்.

அந்த இரண்டு மரக்கலங்களின் தாக்குதலைத் தாங்க முடியவில்லை எதிரி மரக்கலங்களால். தங்கள் தலைவனிருந்த மரக்கலங்கள் ஒன்றன்பின் ஒன்றாக அமிழ்ந்து விட்டதாலேயே குழம்பிப்போன ஸ்ரீவிஜய மாலுமிகள் இரண்டு மூன்று நாழிகைகளே போரிட்டனர். பிறகு மரக்கலங்களை விட்டு நீரில் குதித்துத் தப்ப முயன்றனர். இளையபல்லவன் உத்தரவு திட்டமாய் இருந்ததால் அவர்களை யாரும் தடை செய்யவோ கொல்லவோ முன்வரவில்லை. எதிரி மரக்கலங்கள் இரண்டையும் கைப்பற்றிய பாலிக்குள்ளன் தனது மாலுமி களில் சிலரை அவற்றில் ஏவி அவற்றை நடத்திக் கொணர உத்தரவிட்டான். பிறகு தளத்துக்கு வந்து பெரும் பந்த மொன்றை எடுத்துக் கடல்புறாவை நோக்கி ஆட்டினான்.

இளையபல்லவனும் இரண்டு பந்தங்களைக் கையி லெடுத்துக் கொண்டு முதலில் பாலிக்குள்ளனையும், பிறகு அவனுக்குப் பின்னால் நதிக்குள் நுழைந்துவிட்ட அமீர், கண்டியத்தேவன் இருவரிருந்த மரக்கலங்களையும் நோக்கி பலபடி பந்தங்களை ஆட்டி என்ன செய்யவேண்டுமென்பதை அறிவுறுத்தினான். பந்தங்களால் படைத்தலைவன் செய்த சைகையை அனுசரித்து மரக்கலங்கள் இயக்கப்படவே அடுத்த அரை ஜாமத்திற்குள் கடல்புறாவும், கடல் புறாவைச் சேர்ந்த நான்கு மரக்கலங்களும், பிடிபட்ட இரு எதிரி மரக்கலங்களும் அணிவகுத்து நதிக்குள் சென்றன. இப்படி சுமார் ஒரு ஜாம

நேரம் பயணம் செய்ததும் எல்லா மரக்கலங்களையும் நதியின் வலக்கரைக்கு வந்து நங்கூரம் பாய்ச்ச உத்தரவிட்ட இளைய பல்லவன் கடல் புறாவின் நங்கூரத்தையும் நதிக்குள் இறக்கினான். எல்லா மரக்கலங்களும் நிலைத்து நின்றதும் மாலுமியொருவனைப் படகில் அனுப்பி, தனது படைத் தலைவர்களை அக்ரமந்திரத்திற்கு வரவழைத்தான். அவர்கள் வந்ததும், விஜயசந்திரனை அவர்களுக்கு அறிமுகப்படுத்திய இளையபல்லவன் விஜயசந்திரனை நோக்கி, "படைத் தலைவரே! போர் முடிந்துவிட்டது. அடுத்த ஏற்பாட்டை நான் கவனிக்க வேண்டும்" என்றான்.

"என்ன ஏற்பாடு?" விஜயசந்திரன் குரலில் வியப்பிருந்தது.

"மலையூர் எங்கள் கைவசமாக வேண்டும்."

"நல்ல எண்ணம்தான். அதற்கு என்னை ஏன் கேட்கிறீர்கள்?"

"உங்கள் உதவி அதற்குத் தேவை."

விஜயசந்திரன் புருவங்கள் ஆச்சரியத்தால் உயர்ந்தன. "என் உதவியா?" என்ற கேள்வியில் வியப்பின் உச்சநிலை தெரிந்தது.

"ஆம்." திட்டமாக வந்தது இளையபல்லவன் பதில்.

"எதிரி உதவியா!"

"ஆம்!"

இளையபல்லவன் விளக்கினான். அதை விளக்க முற்பட்டவுடனேயே சினத்தின் வசப்பட்ட விஜயசந்திரன் இளையபல்லவன் முடித்ததும், பிரமித்துப் பல விநாடிகள் ஏதும் பேசாமல் உட்கார்ந்து விட்டான். திட்டம் அத்தனை விபரீதமாயிருந்தது.




''உங்கள்
இஷ்டத்துக்கு
நான்
இணங்க
மறுத்தால்?''

''ஸ்ரீவிஜயப்
தனது
சிறந்த
படைத்தலைவனை
இழக்கும்.''

## 55. மலையூர்க் கோட்டையில்

## அத்தியாயம் 55

# மலையூர்க் கோட்டையில்...

நதியின் ஒரு புறத்தில் நங்கூரங்களைப் பாய்ச்சி மரக் கலங்களை நிறுத்தி வைத்த இளையபல்லவன் மலையூரைக் கைப்பற்ற தன் உதவியை நாடியதும் ஒருகணம் வியப்பெய்திய விஜயசந்திரன், தனது அருகில் அக்ரமந்திரத்தில் அமர்ந் திருந்த ஸ்ரீவிஜயத்தின் எதிரியையும் அங்கு வரவழைக்கப்பட்ட அவன் உபதலைவர்களையும் ஒருமுறை தனது கண்களால் நோக்கினான். இளையபல்லவன் அறிமுகப்படுத்துவதற்கு முன்பே அவர்களின் பெயர்களைக் கேள்விப்பட்டிருந்த விஜய சந்திரன் அவர்களை நேருக்கு நேர் பார்த்ததும் அவர்கள் திறமையைப் பற்றி உலாவிய செய்தியில் பொய் எதுவுமில்லை என்பதைத் தீர்மானித்துக் கொண்டான். ஒரு ஜாமத்துக்கு முன்பு நடந்த ஜம்பிநதிப் போரில் இளையபல்லவன் திறமையை அவன் நேரில் அனுபவித்து விட்டதால் அவன் போர்த் திறமையைப் பற்றிய செய்திகளும் முழு உண்மை என்பதை உணர்ந்துகொண்ட ஸ்ரீவிஜயத்தின் கடற்படைத் தளபதி, 'இத்தகைய ஒரு சேர்க்கையைக் கொண்டு எந்த இடத்தைக் கைப்பற்றுவதும் பிரமாதமில்லை' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான்.

இளையபல்லவனும் அவன் உபதலைவர்களும் தனக்குக் காட்டிய மரியாதை மட்டும் அவனுக்குப் புதிராயிருந்தது. அவர்களைப் பற்றிய கொடுமையான கதைகளையே அவன் கேட்டிருந்தான். மாநக்காவரத்தில் கங்கதேவன் கொல்லப் பட்டதைப் பற்றி வீண் புரளிகள் பல கிளம்பியிருந்தன ஸ்ரீவிஜயத்தின் கடற்பகுதிகளில். அந்தப் புரளிகள் எத்தனை ஆதாரமற்றவை என்பதையும் இளையபல்லவன் கூட்டம் எத்தனை கண்ணியம் வாய்ந்தது என்பதையும் அந்த ஒரு

ஜாமத்தில் புரிந்துகொண்ட விஜயசந்திரன் மனத்தில், சிறைப்பட்டிருந்த சமயத்திலும் சந்துஷ்டியே நிலவிக் கிடந்தது. அதன் விளைவாக அவன் வெகு தெளிவாகச் சிந்திக்கவும் பேசவும் முடிந்தது. ஆகவே இளையபல்லவன் மலையூரைப் பிடிக்க தனது உதவியைக் கேட்டதும் பெருவியப்புடன் அவனை நோக்கிய விஜயசந்திரன், "எதிரியின் உதவியை நீங்கள் நாடுவது எனக்கு வியப்பைத் தருகிறது" என்று கூறினான். அத்துடன் தொடர்ந்து கேட்கவும் செய்தான், "என்ன உதவியை என்னிடம் எதிர்பார்க்கிறீர்கள்?" என்று.

இளையபல்லவன் சொன்ன முதல் பதிலே விஜய சந்திரனைத் திக்குமுக்காட வைத்தது. அடுத்து வந்த விவரங்கள் அவன் திகைப்பை உச்சநிலைக்குக் கொண்டு போயின. விஜயசந்திரன் கேட்ட கேள்விக்கு, "நீங்கள் எங்களுக்குத் தலைவராக வேண்டும்," என்று பதில் கூறினான் முதன் முதலாக இளையபல்லவன்.

இந்தப் பதிலைக் கேட்ட விஜயசந்திரனுடைய உணர்ச்சிகள் குலுங்கின. "என்ன! இன்னொரு முறை சொல்லுங்கள்" என்று கேட்டான் அவன்.

"நீங்கள் எங்களுக்குத் தலைவராக வேண்டும்." வெகு நிதானமாகவும் சகஜமாகவும் அதே பதிலைத் திருப்பினான் இளையபல்லவன்.

இளையபல்லவன் வார்த்தையில் ஏதோ சூதிருக்கிற தென்பதை விஜயசந்திரன் நொடிப் பொழுதில் புரிந்து கொண்டானே யொழிய அது என்ன என்பது அவனுக்குத் திட்டமாகத் தெரியாததால், "நான் உங்களுக்குத் தலைவனாக வேண்டுமா? எதற்கு?" என்று வினவினான் சந்தேகத்துடன்.

"மலையூரைப் பிடிக்க," என்று உணர்த்தினான் இளைய பல்லவன்.

"மலையூரை என்னைப் பிடித்துக் கொடுக்கச் சொல் கிறீர்களா?" விஜயசந்திரன் சொற்களில் வியப்பு நன்றாக ஒலித்தது.

"கிட்டத்தட்ட என் திட்டம் அதுதான்," என்றான் இளையபல்லவன்.

"கிட்டத்தட்ட என்றால்?" விஜயசந்திரன் மெள்ளக் குழம்பினான்.

"நீங்கள் தலைவராக வேண்டியதில்லை. தலைவராக நடித்தால் போதும்" என்று கூறினான் இளையபல்லவன்.

விஜயசந்திரனுக்கும் விஷயம் ஓரளவு விளங்கிவிட்டது. தன்னை உபயோகப்படுத்தி மலையூரைப் பிடிக்க இளைய பல்லவன் ஏதோ திட்டம் தயாரித்திருக்கிறான் என்பதை உணர்ந்துகொண்ட அவன், அது என்ன என்பதை அறிந்து கொள்ளக் கேட்டான், "தலைவனாக நடித்தால் போதுமா?" என்று.

"ஆம், நடித்தால் போதும். மீதி விஷயங்களை நாங்கள் கவனித்துக் கொள்கிறோம்."

"மீதி விஷயங்கள் எவை?"

"கோட்டையிலுள்ள வீரரை வெளிப்படுத்துவது, கோட்டையைப் பிடிப்பது முதலியன."

"கோட்டையிலுள்ள வீரரை என் உதவி கொண்டு வெளிப்படுத்தி, கோட்டையைப் பாதுகாப்பின்றிச் செய்து பிடித்துவிடத் திட்டமா?"

"ஆம்."

இதைக்கேட்ட விஜயசந்திரன் சற்று ஆலோசித்தான். "சரி! உங்கள் திட்டத்தைச் சொல்லுங்கள் பார்ப்போம்," என்றான்.

"சொல்கிறேன் கேளுங்கள்! தளபதி அவர்களே," என்று விஜயசந்திரனை நோக்கிக் கூறிய படைத்தலைவன், தனது உபதலைவர்களையும் நோக்கி, "நீங்களும் கவனமாய்க் கேளுங்கள்," என்று சொல்லிவிட்டுத் திட்டத்தை விவரிக்க முற்பட்டான்.,

"தளபதி அவர்களே! இப்பொழுது மூன்றாம் ஜாமம் துவங்கியிருக்கிறது. இப்பொழுது நாம் பயணத்தைத் துவங்கி னாலும் மலையூரை கதிரவன் கிளம்பி இரண்டு நாழிகைகள் கழித்துத்தான் அடையலாம். நல்ல வெளிச்சத்தில் எனது மரக்கலங்கள் மலையூருக்கு முன்பு நின்றால் மலையூர் மக்கள் கலவரப்படுவார்கள். எனக்குத்தான் கொள்ளைக்காரனென்று பட்டம் இருக்கிறதே. ஆகையால் மக்கள் கலவரப்பட்டால் அதிக வியப்புமில்லை. ஆனால் அங்கு நான் கலவரத்தையோ குழப்பத்தையோ விளைவிக்க விரும்பவில்லை. மக்கள் மகிழ்ச்சியுடன் இந்த மரக்கலங்களின் வருகையை வரவேற்க வேண்டும். புரிகிறதா?" என்று வினவினான் இளைய பல்லவன்.

விஜயசந்திரனுக்கு அந்த ஜாலவித்தை எப்படி சாத்தியம் என்று விளங்கவில்லை. கடல் புறாவைப் பற்றியும் இளைய பல்லவனைப் பற்றியும் கேள்விப்படாதவர்கள் அந்தப் பகுதியில் யாருமே இல்லை என்பதை அவன் உணர்ந் திருந்தான். ஆகவே கேட்டான், "அதற்கு எந்த மந்திரத்தை உபயோகப்படுத்துவது?" என்று, இகழ்ச்சி குரலில் தொனிக்க.

"மந்திரம் தேவையில்லை. மாயம் இருந்தால் போதும்" என்று கூறினான் இளையபல்லவன் அர்த்தபுஷ்டியுடன் தளபதியை நோக்கி.

"மாயமா?"

"ஆம். மாயம். மாயமென்றால் எது தெரியுமல்லவா?"

"சொல்லுங்கள்."

"இல்லாததை இருப்பதுபோல் காட்டுவது."

"எது இல்லாதது? எதை இருப்பதுபோல் காட்ட வேண்டும்?"

இளையபல்லவன் தனது ஆசனத்திலிருந்து எழுந்தான். பிறகு மெள்ள விஜயசந்திரன் புத்தியில் உறையும்படியாக ஒவ்வொரு வார்த்தையையும் உச்சரிக்கத் தொடங்கி, "நடந்த

போரின் முடிவை" என்று அழுத்திச் சொன்னான் இளைய பல்லவன்.

விஜயசந்திரனுக்கு அப்பொழுதும் விளங்கவில்லை. "போரின் முடிவையா?" என்று வினவினான் குழப்பத்துடன்.

"விஜயசந்திரரே! போரில் நாங்கள் வெற்றி பெற்றோம். நீர் தோல்வியுற்றீர். இதுதான் முடிவு. அதைச் சிறிது மாற்றிக் கொண்டால் என்ன?"

"மலையூர் புகும்போது நீர் வெற்றி வீரராகவும், நாங்கள் தோற்றதாகவும் மாறினாலென்ன?"

இதைக்கேட்ட விஜயசந்திரனுக்கு மெள்ள மெள்ள இளையபல்லவன் திட்டம் விளங்கலாயிற்று. இருப்பினும் முழு விவரங்களை அறிந்துகொள்ள விரும்பி, "ஓரளவு புரிகிறது எனக்கு. வெற்றி பெற்றது நானென்றால் மக்கள் மகிழ்வார்கள். கோட்டைப் பாதுகாப்பில் வீரர்களுக்கும் அசட்டை இருக்கும். அந்தச் சந்தர்ப்பத்தை நீங்கள் உபயோகப்படுத்திக் கொள்ளப் பார்க்கிறீர்கள். ஆனால் அது சாத்தியமல்ல" என்றான்.

"ஏன் சாத்தியமில்லை" என்று வினவினான் இளைய பல்லவன்.

"முழுப் பூசணிக்காயைச் சோற்றில் மறைக்க முடியாது."

"பூசணிக்காயில்லாமல் சிறு பிஞ்சாயிருந்தால்?"

"பிஞ்சல்ல, முழுப் பூசணிக்காய்தான் அது."

"எதைச் சொல்கிறீர்கள்?"

"அந்தக் கடல் புறாவைத்தான்" என்று கூறிய விஜய சந்திரனும் ஆசனத்திலிருந்து எழுந்து இளையபல்லவன் எதிரில் நின்றுகொண்டும் அறையில் உலாவிக் கொண்டும் பேசினான்: "இளையபல்லவரே! நீங்கள் நினைக்கும் திட்டம் நிறைவேற முடியும். ஆனால் அதற்கு மூன்று இடையூறுகள் இருக்கின்றன. முதல் இடையூறு கடல் புறா, இரண்டாவது இடையூறு நீங்கள், மூன்றாவது உங்கள் உபதலைவர்கள். கடல் புறாவின் அமைப்பு, திறமை இவற்றைப் பற்றியும் உங்கள்

அங்க அமைப்பு, அமீர், கண்டியத்தேவன் இருவரைப் பற்றியும் விவரங்கள் ஆகிய எல்லாம் அவ்வப்பொழுது வரும் வணிகர் மூலமாகவும் உங்களால் விடுதலை செய்யப்பட்ட சில மாலுமிகள் மூலமாகவும் ஸ்ரீவிஜயத்தின் சக்கரவர்த்திக்குத் தெரிந்திருக்கிறது: அவற்றை அவர் பறையறைவிப்பவர்களைக் கொண்டு ஸ்ரீவிஜயத்தின் முக்கிய நகரங்களில் எல்லாம் பறையறைவித்திருக்கிறார். ஆகவே உங்கள் மூவரையும் அனைவருக்கும் தெரியும். உங்களை மறைத்தாலும் ராட்சதப் பறவை போலிருக்கும் இந்தப் போர்க்கப்பலை மறைப்பது நடவாது. இதைப் பார்த்ததும் யார் வந்திருப்பது என்பது மக்களுக்குத் தெரியும். கோட்டை வீரர்களுக்கும் தெரியும்."

விஜயசந்திரனின் இந்த விவரணத்துக்குப் பின் அந்த அறையில் சிறிது நேரம் மௌனம் நிலவியது. அமீர் கூடச் சங்கடத்தால் அசைந்தான். "தளபதி சொல்வதில் பொருளிருக்கிறது" என்று கண்டியத்தேவனும் கூறினான்.

இளையபல்லவன் முகத்தில் மட்டும் அந்த விவரம் எந்த மாறுதலையும் விளைவிக்கவில்லை. அவன் தளபதிக்குச் சொன்ன பதிலில் தெளிவும் உறுதியும் தொனித்தன. "இதெல்லாம் நான் ஏற்கெனவே அறிந்தவை. ஓர் எதிரியைப் பற்றி இன்னொரு எதிரி அறிந்துகொள்ள முயல்வதில் வியப்பென்ன இருக்கிறது? அதுவும் கடற் பிராந்தியத்தில் பெரும் சாகஸக் காரியங்களைச் செய்திருக்கும் கடல் புறாவைப் பற்றி அறிந்திருப்பதிலும் ஆச்சரியமில்லை. ஆனால் எது ஆச்சரியம்? எது மக்களைப் பிரமிக்கச் செய்யும்? ஒரே ஒரு விளைவு" என்ற இளையபல்லவன் விஜயசந்திரனை நோக்கினான்.

"என்ன விளைவு?" விஜயசந்திரன் குரலில் முதலில் இருந்த திடமில்லை.

"அத்தகைய கடல் புறாவையே ஸ்ரீவிஜயத்தின் தளபதி கைப்பற்றியிருந்தால் அதன் பெருமை எத்தனை?" என்று வினவினான் இளையபல்லவன்.

விஜயசந்திரன் வியப்பினால், "என்ன? கடல் புறாவையா? நான் கைப்பற்றினேனா?" என்று கேட்டு வாயைப் பிளந்து கொண்டு சில விநாடிகள் நின்று விட்டான்.

இளையபல்லவன் மேலும் சொன்னான்: "இந்தச் சம்பவம் உங்களுக்கே பிரமிப்பாயிருக்கிறதல்லவா? அப்படியானால் மலையூர்வாசிகளுக்கு எத்தனை பிரமிப்பாயிருக்கும்? அந்தப் பிரமிப்பை நீங்கள் அளிக்கவேண்டும். கடல் புறாவின்மீது ஸ்ரீவிஜயத்தின் கொடி ஏற்றப்படும். மற்ற மரக்கலங்களிலும் அதே கொடி பறக்கும். முதலில் அமீர், கண்டியத்தேவனின் மரக்கலங்களிரண்டும், அவற்றிற்குப் பின்னால் கடல் புறாவும், அதற்குப் பின்னால் பாலி மாலுமி மரக்கலங்களிரண்டும், அவற்றுக்கும் பின்னால் கடைசியாக உங்களுடைய மரக் கலங்கள் இரண்டும் வர, நாம் மலையூரை அடைவோம். அங்கு நதியின் ஆழமான பகுதியில் நங்கூரம் பாய்ச்சி மரக் கலங்களை நிறுத்துவோம். நீங்கள் ஜம்பி முகத்துவாரத்தில் போரிட்டு என்னை முறியடித்து எனது மரக்கலங்களிரண்டை மூழ்கடித்து, கடல் புறாவையும் பிடித்து வந்திருப்பதாகக் கோட்டைத் தலைவருக்கு ஓலை எழுதி அனுப்புங்கள். கோட்டைத் தலைவன் வந்து உங்களைக் கடல் புறாவில் சந்திக்கட்டும். இங்கு தீப்பிடித்திருக்கும் பகுதிகளைப் பார்த்தால் அதைக் கோட்டைத் தலைவரும் நம்புவார். நீங்கள் இளையபல்லவனின் பெரும் பொக்கிஷத்தைக் கைப்பற்றி யிருப்பதாகவும் கூறுங்கள். அமீரும், கண்டியத்தேவரும் இருக்கும் மரக்கலங்களில் நிரம்பச் செல்வம் இருக்கிறது. அதை வேண்டுமானாலும் கோட்டைத் தலைவனுக்குக் காட்டலாம். இதுவரை நீங்கள் செய்தால் போதும். மீதியை நான் கவனித்துக் கொள்கிறேன்."

இளையபல்லவன் திட்டத்தைக் கேட்ட விஜய சந்திரனுக்கு அடுத்து இளையபல்லவன் என்ன செய்யப் போகிறானென்று விளங்காததால், "அடுத்து என்ன செய்ய உத்தேசம்!" என்று வினவினான்.

"அது என் இஷ்டம்" என்றான் இளையபல்லவன்.

"உங்களிஷ்டத்துக்கு நான் இணங்க மறுத்தால்?"

"ஸ்ரீவிஜயம் தனது சிறந்த படைத்தலைவனை இழக்கும்."

இதைக் கேட்டதும் இளையபல்லவனை அலட்சியத்துடன் நோக்கிய விஜயசந்திரன், "நான் மரணத்துக்குப் பயப்படுவேனென்று நினைக்கிறாயா?" என்று வினவினான். கோபத்தில் மரியாதையைக் கைவிட்டுப் பேசினான்.

"இல்லை. மரணம் சாதாரணமானது. அதை அடையும் முறைகளையும் கவனிக்க வேண்டும்" என்று கூறிய இளைய பல்லவன் குரலில் விபரீதத் தொனி இருந்தது.

அதைக்கேட்ட விஜயசந்திரன் உடலில் சிறிது நடுக்கம் ஊடுருவிச் சென்றது. "என் நாட்டைக் காட்டிக் கொடுக்க உதவச் சொல்கிறாய். இது நாணயமானவன் செய்யக் கூடியதல்ல" என்ற விஜயசந்திரன் முகத்தில் அந்த நடுக்கத்துடன் கோபமும் இணைந்து உச்சநிலைக்குச் சென்றதற்கான அறிகுறி இருந்தது.

"அந்தப் பெயர் உங்களுக்கு வராமல் நான் பார்த்துக் கொள்கிறேன்" என்று இளையபல்லவன் உறுதி கூறினான். அத்துடன் கூறினான், "என் திட்டப்படி நடந்தால் நாளைக்கு மறுநாள் மலையூர்க் கோட்டை என் கைவசமிருக்கும். இங்குள்ள எனது மாலுமிகளில் இருநூறு பேரை மட்டுமே கொண்டு கோட்டையைக் கைப்பற்றிவிடுவேன்" என்று.

இதைக்கேட்ட விஜயசந்திரன் பெரிதாக நகைத்தான் அந்த அறையே நடுங்க. "இருநூறு பேரைக் கொண்டு மலையூர்க் கோட்டையைப் பிடிக்கப் போகிறாயா? உனக்கேதாவது சித்தப்பிரமையா?" என்றும் கேட்டான் சிரிப்புக்கிடையே. அத்துடன் வினவினான், "என் ஓலையை யார் கொண்டு போகப் போகிறார்கள்?" என்று.

"நான்." இளையபல்லவன் சர்வ சகஜமாகப் பதில் சொன்னான்.

விஜயசந்திரன் பிரமை மேலும் விரிந்தது. எதிரியின் துணிவைக் கண்டு அசந்து போனான். "உனக்குச் சித்தப் பிரமைதான். சந்தேகமில்லை. உன்னை அனைவருக்கும் அங்கு தெரியும். போனதும் தூக்கிலாடுவாய், அல்லது வாளுக்கு இரையாவாய்," என்றான்.

"என்னை யாரும் கொல்ல முடியாது" என்றான் இளைய பல்லவன்.

"ஏன்?"

"நான் சென்று ஒரு ஜாமத்திற்குள் திரும்பாவிட்டால் உன் உயிர் அரைக்காசு பெறாது" என்று கூறி அமீரைக் கவனித்தான் தன் கண்களால்.

புரிந்ததற்கறிகுறியாகத் தலையை அசைத்தான் அமீர். விஜயசந்திரனுக்கு விஷயம் பூரணமாகப் புரிந்தது. இளைய பல்லவன் மலையூர்க் கோட்டைக்குச் சென்றால் திரும்ப மாட்டான் என்பது உறுதியாயிருந்தது அவனுக்கு. ஆகவே தானும் இறப்பது நிச்சயமென்ற முடிவுக்கு வந்தான். அந்த முடிவின் விளைவாக, 'இறப்பதானால் அந்தப் படையை அழித்துவிட்டு இறக்கிறேன்' என்று தனக்குள் சொல்லிக் கொண்ட விஜயசந்திரன் மேலுக்கு ஓலை எழுத இணக்கம் தெரிவித்தான். ஓலையும் எழுதிக் கொடுத்தான். ஆனால் அந்த ஓலையின் வாசகத்தில் இளையபல்லவனும் காணமுடியாத பயங்கரப் புதிரொன்றையும் புதைத்திருந்தான். இளைய பல்லவன் திட்டப்படி காரியங்கள் நடந்தன. ஸ்ரீவிஜயத்தின் கொடிகளுடன் கடல் புறாவும் மற்ற மரக்கலங்களும் மலையூரை அடைந்தன, மறுநாள் காலையில். கடல் புறாவின் தளத்திலிருந்து வெற்றி முரசு கொட்டப்பட்டது. அன்று மாலை வரை கடல்புறாவை விட்டு நகராத இளையபல்லவன் அன்றிரவில் மலையூர்க் கோட்டைக்குச் செல்ல மாற்றுடை அணிந்தான். அவன் புறப்படு முன்பு அவனைத் தனிமை யில் காஞ்சனாதேவி சந்தித்துக் கண்கலங்கி நின்றாள்.

"எனக்கென்னவோ நெஞ்சு திக்திக்கென்று அடித்துக் கொள்கிறது" என்று தன் பயத்தையும் தெரிவித்தாள்.

"அஞ்சாதே! என் திட்டத்தில் பலவீனம் ஏதுமில்லை" என்று கூறி, அவளிடம் விடைபெற்று மலையூர்க் கோட்டைக்குச் சென்ற இளையபல்லவன், கோட்டைத் தலைவரைப் பார்க்க அனுமதி கேட்டான். அனுமதி அளிக்கப்பட்டு, தலைவரிருந்த கோட்டையின் மத்திய மண்படத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டான். மண்டபத்தின் மத்தியில் அமர்ந்திருந்த உருவத்தைக் கண்டதும் கூடவந்த வீரர் தலைவணங்கி விலகினர். இளையபல்லவன் தலை வணங்கவில்லை. பெரும் திகில் பிடித்து நின்றான். யாரை எதிர்பார்த்தாலும் அந்த உருவத்தை அந்த இடத்தில் அவன் சற்றும் எதிர்பார்க்கவில்லை. விதியின் கரம் தன்னை மீளா ஆபத்தில் இறக்கிவிட்டதை உணர்ந்து செயலற்று நின்று விட்டான்.



அத்தியாயம் 56

# சினமும் சித்தினியின் சிரிப்பும்

மலையூர்க் கோட்டையின் மத்திய மண்டபத்தில் கோட்டைத் தலைவரைக் கண்டதும் தலை வணங்கக் கூட திராணியில்லாமல் திகில் பிடித்து நின்ற இளையபல்லவன், தான் விஜயசந்திரனைத்தான் ஏமாற்ற முடிந்ததே தவிர, விதியை ஏமாற்ற முடியவில்லையென்பதை சந்தேகமறப் புரிந்துகொண்டான். மனிதனுடைய முன்னேற்பாடுகள் எத்தனை பலமாகவும் அறிவுக்குப் புறம்பில்லாமலும் செய்யப்பட்டாலும், அதே முன்னேற்பாடுகளையும் மீறி விதி முன்னணிக்கு வந்து முட்டுக்கட்டை போட முடியும் என்பதை அன்று மலையூர்க் கோட்டையில் புரிந்துகொண்ட இளையபல்லவன் பெரிதும் பிரமை பிடித்து அந்த மத்திய மண்டபத்தில் நின்றான். நின்ற அந்தச் சில விநாடிகளில் தான் செய்து வந்த ஏற்பாடுகளை எண்ணிப் பார்த்து அவற்றில் எவ்விதப் பலவீனமும் இல்லையென்பதை நினைக்க நினைக்க அத்தனை ஏற்பாடுகளும் அரை நொடியில் தான் எதிர்பாராத வண்ணம் தவிடுபொடியாகிவிட்ட காரணத்தால் அவன் உள்ளத்தில் ஊடுருவிவிட்ட பிரமை லேசாக உடைந்து பெருமூச்சாகவும் வெளிவந்தது.

இளையபல்லவன் உண்மையில் மிக உன்னிப்பாக நிலைமையை அலசியும் தன் திட்டத்துக்கு எந்தவித ஊறும் விளையாத வகையிலும் ஏற்பாடுகளைச் செய்திருந்தான். ஸ்ரீவிஜயத்தின் கொடிகள் கம்பீரமாக மரக்கலங்களில் பறக்க மலையூரை அடைந்து நதியில் நங்கூரங்களைப் பாய்ச்சிய இளையபல்லவன், அன்று பகல் முழுவதும் வெளியே தலைகாட்டாமல் ஸ்ரீவிஜய வீரர்களின் உடையில் தனது மாலுமிகளை மட்டும் கரைக்கு அனுப்பி மலையடிவாரத்

திலிருந்த நகரத்தின் தெருக்களிலும் கடை வீதியிலும் உலாவ விட்டு, மெள்ள மெள்ளப் பேச்சுவாக்கில் விஜய சந்திரனின் வெற்றி வாகையைப் பற்றிப் பலவிதக் கதை களை மலையூர் மக்களிடையே பரப்பினான். அப்படிப் பரப்பு முன்பு மரக்கலங்கள் நங்கூரம் பாய்ச்சிய உடனேயே தாரைகளுக்குப் பதில் ஸ்ரீவிஜயத்தின் பெரும் சங்குகளை மரக்கலங்களிலிருந்து ஊதச் செய்து வெற்றியுடன் கடற்படை வந்திருப்பதை வலியுறுத்தினான். சங்குகள் பூம் பூம் என்று முழங்கிய உடனேயே கோட்டை வீரர்கள் கோட்டை மதில்களிலிருந்து கூட்டம் கூட்டமாக மரக்கலங்களைப் பார்த்ததையும் மக்களில் பலர் நதிக்கரைக்கு வந்து வேடிக்கை பார்த்ததையும் தன் அறையின் சாளரத்தின் மூலம் கவனித்த இளையபல்லவன், அடுத்தபடி இரண்டு மாலுமிகளை விளித்து மலையூர் கோட்டைக்குப் போய்வர ஏவினான். "ஸ்ரீவிஜயத்தின் கடற்படைத் தளபதி விஜயசந்திரன் வெற்றியுடன் வந்திருப்பதாகவும், மரக்கலங்களின் போர்க் காயங்களைக் கவனித்த பின்பு மாலையில் கோட்டைக்கு வருவதாகவும் கோட்டைத் தலைவரிடம் தெரிவித்துவிட்டு வாருங்கள்" என்ற இளையபல்லவன் திடீரென உத்தரவை மாற்றி, "கோட்டைத் தலைவரைச் சந்திக்க வேண்டாம், காவலாளிகளிடம் தெரிவித்தாலும் போதும்" என்றான். அந்த உத்தரவை நிறைவேற்றக் காவலர் சென்றதும் வேறு மாலுமிகளை, படகுகளில் கரைக்கு அனுப்பினான். அவர்களுடன் செல்லப் பாலிக்குள்ளனையும் பணித்த படைத்தலைவன் கேட்டான், "மாலுமி, உனக்கு இந்த ஊர் பழக்கமுண்டா?" என்று.

"உண்டு." பாலிக்குள்ளன் பதில் திட்டமாக வந்தது.

"கலிங்கத்து கங்கதேவன் துணைவனென்று உன்னை இங்கு மக்கள் அறிவார்களா?" என்றும் வினவினான் படைத் தலைவன்.

"அறிவார்கள்."

"அப்படியானால் ஒன்று செய்."

"சொல்லுங்கள் படைத்தலைவரே."

"கங்கதேவனிடமிருந்து நான் உன்னைச் சிறைபிடித்த தாகவும், ஸ்ரீவிஜயத்தின் தளபதி உன்னைச் சிறை மீட்ட தாகவும் வதந்தியைப் பரப்பு."

"எதற்கு அந்த வதந்தி?"

"கங்கதேவன் ஜெயவர்மன் நண்பன். அவனிடம் நீ உபதலைவனாய் இருந்து இருப்பதை மக்கள் அறிவார்கள். ஆகையால் நீ சொல்வது எதுவும் இங்கு செலாவணியாகும்."

பாலிக்குள்ளன் விஷயத்தைப் புரிந்துகொண்டதால் புன்முறுவல் பூத்ததன்றி, "புரிந்து கொண்டேன்" என்று கூறவும் செய்தான்.

"ஆம் மாலுமி! இன்று பகலுக்குள் மலையூர் மக்களிடம் பூரண நம்பிக்கையை நிலவச் செய்யவேண்டும். விஜய சந்திரனின் வெற்றியையும் என் தோல்வியையும் உண்மை யென்று நம்பி மக்கள் வெற்றி விழாக் கொண்டாடும் அளவுக்கு நாம் நம்பிக்கையைப் பரப்ப வேண்டும். மக்கள் நம்பிக்கைக் கோட்டையில் அசிரத்தையை உண்டாக்க வேண்டும். அந்த அசிரத்தையை நான் நாளை இரவு உபயோகப்படுத்திக் கொள்வேன்" என்று விளக்கினான் இளையபல்லவன்.

பாலிக்குள்ளன் படைத்தலைவன் ஆணையை நிறைவேற்ற மாலுமிகளைத் தொடர்ந்து தானும் ஒரு படகில் சென்றான். அவன் சென்ற பின்பும் தனது அறையை விட்டு அகலாத இளையபல்லவன் நகரத்திலும் கோட்டையிலும் ஏற்பட்டு வந்த நிலைமையைச் சாளரத்தின் மூலமே கவனித்து வந்தான். அவன் எதிர்பார்த்தபடி சகலமுமே நடந்தது. கோட்டைக்குச் சென்ற மாலுமிகள் திரும்பி வந்து கோட்டையில் செய்தியைத் தெரிவித்துவிட்டதாகவும் கோட்டைத் தலைவர் அன்றிரவு ஸ்ரீவிஜயத தளபதியைச் சந்திப்பாரென்றும் கூறினர். கரை சென்ற மாலுமிகள் பணியும் பலனளிக்கவே ஏராள மக்கள்

நதியின் பக்கம் கரையில் நின்றபடியே ஆரவாரித்தார்கள். சிலர் படகுகளிலும் வந்து மரக்கலங்களைப் பார்த்தார்கள். இளையபல்லவன் உத்தரவுப்படி மாலுமிகள் சிலர், படகு களில் வந்த நகர மக்களை 'மஞ்சளழகி'யிலும் 'காஞ்சனா' விலும் ஏறிப் பார்க்க அனுமதித்தனர். அந்த அனுமதியின் பலன் அன்று மாலையிலேயே பெரிதாகப் பரிமளித்தது. 'மஞ்சளழகி'யிலும் 'காஞ்சனா'விலும் இருந்த பெரும் செல்வத்தைப் பற்றிய செய்தி தீயென மலையூர்வாசி களிடையே பரவவே மக்கள் மாலையில் திரள்திரளாக வந்து மரக்கலங்களைப் பார்த்துப் பார்த்து வெற்றி கோஷம் செய்தார்கள். அன்று விஜயசந்திரன் பெயர் மலையூர் வாசிகளிடை பெரும் பிரசித்தியை அடைந்தது. மிகுந்த பயபக்தியுடனும் சந்துஷ்டியுடனும் மக்கள் அந்தப் பெயரை உச்சரித்தார்கள். இப்படிப் பிரமை தட்டிக் கிடந்ததன் விளைவாக எப்பொழுது விஜயசந்திரன் காட்சியளிப்பான், வெற்றிப் பவனி எப்பொழுது நடக்கும் என்று மக்கள் ஏங்கிக் கிடந்தார்கள்.

முன்னதாக இரவில் விஜயசந்திரன் வருவதாகக் கோட்டைக்குச் செய்தியனுப்பிவிட்டதால் கோட்டை வீரர்கள் மரக்கலங்களுக்கு வராதபடி தடுத்தும், விஜயசந்திரன் வெற்றி மயக்கத்தை மக்களுக்குத் தந்துவிட்டதால் நகரத்தில் கூச்சலையும் கொண்டாட்டத்தையும் வளரவிட்டு அங்கு அசிரத்தையை ஏற்படுத்தியும், தனது நிலையைப் பலப் படுத்திக்கொண்ட இளையபல்லவன் மாலை நகர்ந்ததும் கோட்டைக்குச் செல்லத் தன்னைத் தயார் செய்து கொண்டான். அதற்காக ஸ்ரீவிஜயத்தின் உபதலைவர்கள் அணியும் உடையை அணிந்து கொண்டான். விஜயசந்திர னிடம் ஓலையெழுதியும் வாங்கிக்கொண்டான். ஓலை எழுதி முடிந்ததும் அதை வாங்கிப் படித்த இளையபல்லவன் பெரும் திருப்தியைக் காட்டினான். "நல்லது ஸ்ரீவிஜயக் கடற்படைத் தலைவரே! ஓலை திருப்தியாயிருக்கிறது. என்னை நீர் முறியடித்த விஷயமும் என் பொக்கிஷத்தைக் கைப்பற்றிய

தகவலும் இருக்கிறது," என்று கூறிவிட்டு ஓலையை வாங்கிக் கொண்டு கிளம்ப முற்பட்டான். கிளம்பு முன்பு காஞ்சனா தேவியிடம் விடைபெற்றுக் கொண்டபோது அவள் அச்சத்தைத் தவிர்க்கச் சொன்னான் வேடிக்கையாக, "அஞ்சாதே! என் திட்டத்தில் ஏதும் பலவீனமில்லை" என்று.

'மனிதப் பிரயத்தனத்தில் பலவீனமில்லைதான். ஆனால் மனிதப் பிரயத்தனம் விதியின் வலிய கரத்துக்கு முன்பு எத்தனை அற்பமானது!' என்பதை மலையூர்க் கோட்டையின் மத்திய மண்டபத்தில் நின்ற அந்தச் சில விநாடிகளில் உணர்ந்து கொண்டான் இளையபல்லவன். அந்த மத்திய மண்டபத்தில் நுழைந்தபோது சிறிது சந்தேகம் துளிர்த்தது இளையபல்லவனுக்கு. வெற்றி வாகை சூடி வரும் ஒரு படைத் தலைவனுக்கு அளிக்கக் கூடிய மரியாதையின் அம்சங்களை அந்த மண்டபத்தின் சூழ்நிலை குறிக்கவில்லை. பெரும் விளக்குகள் இல்லை. நடை பாவாடையில்லை. வாத்திய முழக்கம் இல்லை. மண்டபத்தின் கோடியில் மட்டும் இரண்டு சிறு விளக்குகள் இருந்தபடியால் அதிக வெளிச்சம் இல்லை. மண்டபத்தின் மத்தியில் பெரிய மஞ்சத்தில் உட்கார்ந்திருந்த கோட்டைத் தலைவரை அணுகச் சொல்லிவிட்டுக் காவலர் வெளியே சென்றுவிட்டது விசித்திரமாயிருந்தது இளைய பல்லவனுக்கு. ஏதோ தானும் எதிர்பாராதது நடந்துவிட்ட தெனத் தீர்மானித்துக் கொண்டு மண்டபத்தின் நடுப்பகுதியை நோக்கி மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்தான். வெளியே சென்ற காவலரிருவரும் தனக்குப் பின்பிருந்த மண்டபக் கதவைச் சாத்திவிட்ட சத்தமும் விழுந்தது சோழ நாட்டுப் படைத் தலைவனின் பாம்புச் செவிகளில். ஆகவே சற்று சஞ்சலத் துடனேயே மண்டபத்தின் நடுவுக்கு வந்து மஞ்சத்திலிருந்த கோட்டைத் தலைவருக்குத் தலைவணங்கி நிமிர்ந்தான். நிமிர்ந்தவன் நிமிர்ந்தபடி நின்றான். மஞ்சளழகியின் அழகிய விழிகள் அவனை ஏறெடுத்து நோக்கின.

அதிர்ச்சி என்ற சொல்லுக்குத் தனிப் பொருளிருந்தால் அதன் முழு வேகத்தையும் அந்த விநாடியும் இளையபல்லவன்

அனுபவித்தான். அடியோடு விவரிக்க இயலாத உணர்ச்சிகள் அவன் சித்தத்தில் என்ன, உடல் நரம்புகள் ஒவ்வொன்றிலும் ஊடுருவிச் சென்றன. வைத்த கண் வாங்காதபடி மஞ்சளழகியைப் பார்த்துக்கொண்டே பல நிமிஷங்கள் நின்றான் படைத் தலைவன். அதுவரை அவள் தலையில் போர்த்தியிருந்த முக்காடு விலகி ஆசனத்தின் பின்பக்கம் தொங்கிக் கிடந்தது. அவள் தலையின் சூழலைச் சுற்றி அணைத்துக் கிடந்தது ஒரு வைரச்சுருள். அக்ஷயமுனையில் கண்ட அவள் அழகு சிறிதுகூடக் குன்றவில்லை. ஆனால் கண்களிலும் முகத்திலும் மட்டும் விரவிக் கிடந்தது ஒரு சோகம். லேசாக அவள் இளைத்திருந்தது பழைய அழகைப் பலமடங்கு அதிகப் படுத்தியதே தவிர எள்ளளவும் குறைக்கவில்லை. முகத்தில் விரவிக் கிடந்த சோகம்கூட அந்த முகத்துக்கு ஒரு தனிப் பொலிவைக் கொடுத்தது. அந்த முகத்தை, கண்களை மீண்டும் மீண்டும் பருகினான் இளையபல்லவன். பருகியது மட்டுமல்ல, திகைக்கவும் திகைத்தான். அந்தச் சில விநாடிகளில் அவன் கோட்டையை மறந்தான். ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தை மறந்தான். தனது கடமையையும் கடல் புறாவையும் மறந்தான், காஞ்சனா தேவியைக்கூட மறந்தான்.

பெரும் குழப்பம் அவன் புத்தியைச் சூழ்ந்து நின்றது. 'இவள் அக்ஷயமுனையை விட்டு ஏன் வந்தாள்? எதற்காக வந்தாள்? இந்தக் கோட்டைக்கு ஏன் தலைவியானாள்?' என்ற பல கேள்விகள் அவன் சித்தத்தைக் குழப்பிக் கொண்டிருந்தன. ஆகவே அவன் பேசவும் சக்தியற்று அவள் முன்னிலையில் நின்றான். மஞ்சளழகியின் அழகிய விழிகள் அவனை ஆராய்ந்தன. அந்த ஆராய்ச்சியில் மகிழ்ச்சியைவிடப் பரிதாபம் நிரம்பி நின்றது. சாதாரணமாக அவள் கடையிதழில் தவழும் புன்னகையில்கூட அன்று வருத்தமே தெரிந்தது. அத்தனை வருத்தத்திலும் அவள் அவனை வரவேற்கவில்லை. உறவாடவில்லை. உரையாடவும் இல்லை. தனது இடது கையை மெள்ள நீட்டினாள் அவனை நோக்கி.

அவள் கை நீட்டியதைத் தவறாகப் புரிந்துகொண்ட இளையபல்லவன் அதைத் தன் இரு கைகளாலும் பற்றப் போனான். "உம் உம். அதற்கல்ல கை நீட்டியது. ஓலையை எடுங்கள்" என்றாள் மஞ்சளழகி தெளிவான குரலில்.

அவள் கையைப் பற்றப் போன படைத்தலைவன் கால்கள் தடைப்பட்டு நின்றன. அவள் போக்கு அவனுக்குப் பெரும் விசித்திரமாயிருந்தது.

"என்ன ஓலை?" என்று சற்றுத் தடுமாற்றத்துடன் கேட்டான் இளையபல்லவன்.

"விஜயசந்திரன் கொடுத்த ஓலை." வறண்ட குரலில் வந்தது மஞ்சளழகியின் பதில்.

"விஜயசந்திரன் ஓலை கொடுத்ததாக யார் சொன்னது?" என்று கேட்டான் படைத்தலைவன் வியப்புடன்.

"யாரும் சொல்ல வேண்டியதில்லை தூதரே...!" என்று துவங்கிய மஞ்சளழகியை இடைமறித்த இளையபல்லவன், "என்ன! தூதனா?" என்று வினவினான் ஆத்திரத்துடன்.

"ஆம்" என்றாள் மஞ்சளழகி உணர்ச்சியற்ற குரலில்.

"யார் தூதன்?"

"நீங்கள்தான்."

"எப்படித் தெரியும் உனக்கு?"

மஞ்சளழகி தன் விழிகளில் சீற்றத்தைக் காட்டினாள். "கோட்டைத் தலைவரைத் தூதர்கள் மரியாதையின்றி அழைப்பது குற்றமாகும். அதற்கு மரணதண்டனை உண்டு. ஆகவே 'உனக்கு' என்று ஏக வசனத்தில் பேச வேண்டாம்," என்ற மஞ்சளழகியின் சொற்களில் சீற்றம் நன்றாகப் பிரதி பலித்தது.

இளையபல்லவனுக்கு ஏதும் புரியவில்லை. இத்தகைய ஒரு மஞ்சளழகியை அவன் பார்த்ததேயில்லை. "தாங்கள்..." என்று ஆரம்பித்தான்.

"உம். இது சரி" என்றாள் மஞ்சளழகி.

"நான் தூதன் என்பது உங்களுக்கு எப்படித் தெரியும்?" படைத்தலைவன் குரலில் ஏளனம் இருந்தது.

அதைக் கவனிக்கவே செய்தாள் மஞ்சளழகி. இருப்பினும் அதை அசட்டை செய்து, "விஜயசந்திரன் வருவதானால் அவர் கப்பலை விட்டுப் புறப்படு முன்பு இரண்டுமுறை சங்குகள் ஒலிக்கும். இது ஸ்ரீவிஜய சம்பிரதாயம். தூதர்களுக்கு அது கிடையாது" என்றாள்.

படைத்தலைவன் பதிலேதும் சொல்லவில்லை. கச்சையிலிருந்த ஓலையை எடுத்து நீட்டினான் அவளிடம். அவள் மண்டபத்தின் கோடியிலிருந்த விளக்கினருகில் சென்று ஓலையைப் படித்தாள். படைத்தலைவனும் அவளைத் தொடர்ந்து சென்று அவள் பின்புறம் நின்றான். அவன் உடலின் பின்புறம் லேசாக அவள்மீது பட்டுக்கொண்டிருந்ததால் அவன் உணர்ச்சிகள் கொந்தளித்துக் கொண்டிருந்தன. மஞ்சளழகியின் நிலையைப் பற்றி ஏதும் சொல்ல முடியவில்லை. ஓலையைப் படித்துத் திரும்பியபோது அவள் முகத்தில் எந்த உணர்ச்சி வேகமும் இல்லை. அவள் விழிகள் இளையபல்லவனை ஓர் அடிமையை நோக்குவது போல் நோக்கின. "ஓலை திறமையுடன் எழுதப்பட்டிருக்கிறது" என்ற அவள் சொற்களில் கொடுமை இருந்தது.

குழைவும் அன்புமே சொட்டும் தன்மை வாய்ந்த மஞ்சளழகியின் சொற்களில் கடுமை மண்டிக் கிடந்ததைக் கண்ட இளையபல்லவன், 'மஞ்சளழகி எத்தனை தூரம் மாறிவிட்டாள்' என்று எண்ணி ஏங்கினான். அந்த ஏக்கம் தொனிக்கும் குரலில் கேட்டான், "ஓலையில் என்ன திறமையிருக்கிறது!" என்று.

"படைத்தலைவரையும் ஏமாற்றும் திறமையிருக்கிறது," என்ற மஞ்சளழகி ஏளனமாக நகைத்தாள்.

அந்த நகைப்பு அவனுக்கு மேலும் அதிர்ச்சியை அளித்தது. மஞ்சளழகி பழைய மஞ்சளழகியல்ல என்பதைப்

புரிய வைத்தது. புது மஞ்சளழகி உருவெடுத்திருப்பதை உணர்ந்த இளையபல்லவன் "ஓலையில் என்ன எழுதி இருக்கிறது?" என்று வினவினான்.

"ஓலை என்ன புரிய வைக்கிறது என்று கேட்பது பொருந்தும்" என்றாள் மஞ்சளழகி.

"என்ன புரிய வைக்கிறது?" எரிச்சலுடன் கேட்டான் இளையபல்லவன்.

பதிலுக்கு மஞ்சளழகி ஓலையை அவனிடம் கொடுத்து விளக்கமும் தந்தாள். விளக்கத்தைக் கேட்ட படைத்தலைவன் மிதமிஞ்சிய சினத்தின் வசப்பட்டுச் சிலையென நின்றான். ஓலை பெரும் விபரீதக் கதையைச் சொல்லியது. இளைய பல்லவனின் சினத்தைக் கண்ட அந்தச் சித்தினிப்பாவை பொருள் பல துளிர்த்த சிரிப்பொன்றைக் கலகலவென உதிரவிட்டாள்.



அத்தியாயம் 57

# கல் நெஞ்சம்

அதுவரை தான் சொப்பனத்திலும் காணாத புதுவித மஞ்சளழகியைக் கண்டதுமே சித்தப்பிரமை பிடிக்கும் நிலையை அடைந்துவிட்ட இளையபல்லவன், அவள் விஜய சந்திரன் ஓலையைக் காட்டி விளக்கம் கூறிச் சிரிப்பொன்றை யும் கலகலவென உதிரவிட்டதும் விவரிக்க இயலாத பலவித உணர்ச்சிகளுக்கு இலக்கானான். சொர்ணத்தீவின் டாஜாங் நடன இசைக் கருவிகளிலிருந்து உதிரும் ஸ்வர ஜாலங்கள் போல் மிக இனிமையாக உதிர்ந்த அவள் சிரிப்பொலி மிக ரம்மியமாகவே இருந்தது. அந்தச் சிரிப்பொலியை மத்திய மண்டபத்தின் சுவர்களும் தூண்களும் வாங்கிச் செய்த எதிரொலியும் மயக்கம் தரக்கூடிய முறையிலேயே அமைந் திருந்தது. விஜயசந்திரனால் ஏமாற்றப்பட்டோமே என்ற நினைப்பும், தான் அக்ஷயமுனையில் வாரியணைத்த மஞ்சளழகி தன்னைக் கேவலம் மூன்றாவது மனிதனைப் போலும் தூதன் போலும் நடத்துகிறாளே என்ற ஆக்ரோஷமும் மட்டும் இளையபல்லவன் சிந்தையை நிலை குலையச் செய்திராவிட்டால் மஞ்சளழகியின் அந்தச் சிரிப்பை அவன் பெரிதும் ரசித்திருப்பான். அந்த ரசிகத் தன்மை வேறுபல ரசிகத்தன்மைகளுக்கும் இடங்கொடுத் திருக்கும். ஆனால் அந்தச் சமயத்தில் அவன் மனோநிலை பல துறைகளை மாறிமாறித் தொட்டுச் சிதைந்து கிடந்தது.

எந்த மஞ்சளழகியிடமிருந்து தப்ப அவன் படாத பாடு பட்டு, அமீரையும் தேவனையும் ஏமாற்றி அநபாயன் உத்தரவையும் மீறி, கடல் புறாவைத் திசை மாற்றி மலையூர் வந்தானோ அதே மஞ்சளழகி மலையூரில் தனக்காகக் காத்திருந்ததே பெரும் பிரமையையும் திகிலையும் அளித்தது

இளையபல்லவனுக்கு. அந்த மஞ்சளழகி கோட்டைத் தலைவியாகவும் இருந்து தன்னை மட்டு மரியாதையின்றி நடத்தியது சினத்தைத் தந்தது சோழ நாட்டுப் படைத் தலைவனுக்கு. எல்லாவற்றையும்விட மஞ்சளழகி எதற்காக அந்தக் கோட்டைக்கு வந்தாள், ஏன் தலைவியானாள் என்பது பெரும் விசித்திரமாயிருந்தது அந்த மாபெரும் கடல் வீரனுக்கு. இத்தனை சந்தேகங்களுக்கும் விளக்கம் பெறவேண்டிய அவசியம் அவனுக்கிருந்தாலும் முதன் முதலாக அவன் மஞ்சளழகி நீட்டிய ஓலையையே ஆராய்ந்தான். ஆனால் கூரிய அவன் புத்திக்குக்கூட அதில் ஏதும் புதுமை இருந்த தாகத் தெரியவில்லை. தான் சொன்னபடியே விஜயசந்திரன் எழுதியிருந்ததைப் பார்த்து, "இதில் அப்படி ஏதும் மர்மம் இருப்பதாகப் புரியவில்லையே எனக்கு?" என்றும் கூறினான் மஞ்சளழகியை நோக்கி.

மஞ்சளழகியின் இதழ்களில் ஏளன நகை விரிந்தது. "ஓலையைப் படியுங்கள்" என்ற அவள், படைத்தலைவன் ஓலைமீது மீண்டும் கண்களை ஓட்டியதும், "அப்படியில்லை தூதரே! இரைந்து படியுங்கள். நானும் கேட்கிறேன்" என்று சற்று அழுத்தமாகச் சொன்னாள்.

அவள் தன்னைத் 'தூதரே' என்று அழைத்ததும் தன்னைக் குழந்தைபோல் எண்ணி இரைந்து படிக்க உத்தரவிட்டதும் இளையபல்லவனுக்குப் பிடிக்கவில்லை யென்றாலும், மஞ்சளழகியை மறுத்துச் சொல்ல இஷ்டப்படாமல் இரைந்தே படித்தான். "என்னால் ஸ்ரீவிஜயத்தின் பிரபல விரோதி இளையபல்லவன் என்ற கொள்ளைக்காரன் முறியடிக்கப் பட்டான். அவனுடைய பெருவாரியான பொக்கிஷம் என்னிடம் சிக்கியிருக்கிறது. அவன் மரக்கலங்கள் இரண்டை மூழ்கடித்துக் கடல் புறாவையும் கைப்பற்றி விட்டேன். கோட்டைத்தலைவர் என்னை வந்து கடல் புறாவில் சந்தித்து, என்னிடம் சிக்கியிருக்கும் பொக்கிஷத்தையும், நமது ஸ்ரீவிஜயத் துக்குப் பெரும் சேதத்தை விளைவித்துள்ள அந்த ராட்சதக்

கப்பலையும் ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன்— விஜய சந்திரன்."

இதைப் படித்து முடித்த இளையபல்லவன், "இதில் என்ன மஞ்சளழகி..." என்று துவங்கியவனைச் சற்றே கைதூக்கித் தடுத்த மஞ்சளழகி, "கோட்டைத் தலைவரே என்பது பொருந்தும்" என்று தன்னை அழைக்க வேண்டிய முறையை வலியுறுத்தினாள்.

இளையபல்லவன் இதயத்தில் சினம் துள்ளி எழுந்து கொண்டிருந்தது. இருப்பினும் தன்னை நிதானப்படுத்திக் கொண்ட இளையபல்லவன், "தவறிவிட்டேன். மன்னிக்க வேண்டும். பழைய பழக்கம் போகவில்லை" என்று மன்னிப்புக் கேட்டுக்கொண்டு, "இந்த ஓலையில் என்ன புதுமை இருக்கிறது? என்ன மர்மம் இருக்கிறது?" என்று வினவினான்.

"ஓலையை நன்றாக ஊன்றிப் பாருங்கள் விளக்கொளி யில்" என்று மஞ்சளழகி வற்புறுத்தினாள்.

இளையபல்லவன் விளக்கொளியில் ஓலையை ஆராய்ந்தான். விளக்கம் கண்ணுக்கு அளித்தது விளக்கத்தை. ஆனால் சித்தத்துக்கு அளிக்காததால் கேட்டான் படைத் தலைவன், "தாங்களே மர்மத்தை விளக்குவது நல்லது," என்று.

"எதையும் ஆராயும் கூரிய புத்தியுடையவர் என்று பிரசித்தி பெற்ற சோழநாட்டுப் படைத்தலைவரால் இந்தச் சிறு ஓலையைப் புரிந்துகொள்ள முடியவில்லையா?" என்று மஞ்சளழகி கேட்டாள் ஏளனமாக.

"இல்லை." வறண்ட குரலில் வந்தது படைத்தலைவன் பதில்.

"இந்த ஓலை உங்களைக் காட்டிக் கொடுத்துவிட்டது. நீங்கள் யார் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது" என்றாள் மஞ்சளழகி மெதுவாக.

"எப்படிக் காட்டுகிறது?"

"பொதுவாகப் பார்க்கப் போனால் உங்களுக்குச் சௌகரியமாக வாசகத்தை அமைத்திருக்கிறார் ஸ்ரீவிஜயத்தின் கடற்படைத் தளபதி. ஆனால் அந்த வாசகத்தில் மூன்று சொற்களைக் கவனியுங்கள்..."

"எந்த மூன்று சொற்களை?"

"என்னால் என்ற சொல் ஒன்று. விரோதி என்ற சொல் ஒன்று. பெருவாரியான என்ற சொல் ஒன்று."

"அவற்றில் என்ன விசேஷம்?"

"என்னால் என்ற சொல்லில் 'எ' என்ற எழுத்தும் விரோதி என்ற சொல்லில் 'தி' என்ற எழுத்தும், பெருவாரி யான என்ற சொல்லில் 'ரி' என்ற எழுத்தும் மற்ற எழுத்துக் களைவிட அழுத்தமாக எழுதப்பட்டிருக்கிறது. அந்த மூன்றும் சேர்ந்தால்..." என்று சொல்லிக்கொண்டே போன மஞ்சளழகியை, "இரு இரு" என்று அவசரத்தில் மரியாதை யைக் கைவிட்டு இரைந்த இளையபல்லவன் மீண்டும் ஓலையைக் கவனித்தான். கவனித்தவன் பேசச் சக்தியற்று நின்றான். மஞ்சளழகி சொன்ன மூன்று எழுத்துக்களிலும் எழுத்தாணி அளவுக்கு அதிகமாகப் பதிந்திருந்தது. தவறைத் திருத்துபவன்போல் விஜயசந்திரன் அந்த எழுத்துக்களில், இரண்டாம் முறையும் எழுத்தாணியை ஓட்டியிருந்தான். பெரும் வாசகத்தினிடையே தூரத் தள்ளிக் கிடந்த அந்த எழுத்துக்கள் அழுத்தமாய் இருந்தது பொதுப் பார்வைக்குத் தெரியக் காரணமில்லை. ஏன்? கூரிய பார்வைக்கும் அது தெரியக் காரணமில்லை. ஆகவே மஞ்சளழகி சொன்ன பின்பே அதைக் கவனித்த இளையபல்லவனுக்குக் கோபத் துக்குப் பதில் விஜயசந்திரனிடம் பெரும் மதிப்பே ஏற்பட்டது. "ஆம், ஆம். மிகுந்த திறமையுடன் எழுதியிருக்கிறான் ஓலையை" என்று சிலாகிக்கவும் செய்தான் வெளிப்படையாக. அத்துடன் கேட்கவும் செய்தான் மஞ்சளழகியை நோக்கி, "ஆம் மஞ்ச- இல்லை இல்லை, கோட்டைத் தலைவரே! உங்களுக்கு மட்டும் இந்த மர்மம் எப்படித் தெரிந்தது?" என்று.

மீண்டும் மண்டபத்தின் மத்திக்கு வந்த மஞ்சளழகி தனது ஆசனத்தில் அமர்ந்து எதிரேயிருந்த மஞ்சத்தில் அமரும்படி இளையபல்லவனுக்குச் சைகை காட்டினாள். இளைய பல்லவன் அமர்ந்ததும் பேச்சைத் துவங்கிய மஞ்சளழகி, "தூதரே! நாமிருவரும் சந்தித்து கிட்டத்தட்ட ஓராண்டு முடியப்போகிறது" என்றாள்.

"இன்னொரு சித்ரா பௌர்ணமி வர இரண்டு மாதங்களே இருக்கின்றன" என்றான் இளையபல்லவன் மெல்ல. இதைச் சொன்ன அவன் குரல் குழைந்து கிடந்தது. அக்ஷயமுனையின் கடற்கரை அவன் இதயத்தில் எழுந்தது. அக்ஷயமுனைத் தொழிலாளர் அமைத்த அந்த நடனமேடை எழுந்தது. அதன் பின்னால் எழுந்தான் முழுமதி. முன்னால் ஆடினாள் மோகன மங்கை. அவள் இடை அசைந்தது. கால்கள் மரப்பலகைமீது தட்டின. ஜல் ஜல் என்ற சதங்கை ஒலி மீண்டும் ஒலித்தது. அப்படியே மயங்கி உட்கார்ந் திருந்தான் இளையபல்லவன்.

அவன் மனோநிலையை உணர்ந்துகொண்டாள் மஞ்சளழகி. அவள் இதயத்திலும் அந்தப் பழைய நினைவுகள் எழுந்தன. ஆனால் என்ன காரணத்தாலோ அவற்றை யெல்லாம் உதறிவிட்டு வறண்ட குரலில் சொன்னாள், "பழைய கதைகளை நினைக்க வேண்டாம் தூதரே. இன்றைய நிலைமையை ஆராய்வோம். நாம் சந்தித்துப் பல மாதங்கள் ஓடிவிட்டன. அத்துடன் நமது வாழ்க்கையிலும் மாற்றங்கள் ஏற்பட்டுவிட்டன..." என்று.

"என்ன மாற்றம்?" என்று இடைமறித்துக் கேட்டான் இளையபல்லவன்.

"கொள்ளையடிப்பதில் உங்கள் புகழ் இந்தச் சொர்ண பூமிப் பிராந்தியம் முழுவதும் பரவிவிட்டது" என்றாள் அவள்.

"அந்தப் புகழ் அக்ஷயமுனைக்கு வருமுன்பே உண்டே?"

"உண்டு. ஆனால் இத்தனை பயம் ஸ்ரீவிஜயத்துக்கு உங்களிடம் அப்பொழுது இல்லை."

"அப்படியா?"

"ஆம். அப்பொழுது கலிங்கத்தின் பெரும் கடற்படையின் உதவியிருந்தது ஸ்ரீவிஜயத்துக்கு. இப்பொழுது அதில் முக்கால் வாசிக்கு மேல் உங்களால் அழிக்கப்பட்டது, ஸ்ரீவிஜயத்தின் நண்பனும் கலிங்கத்தின் கடற்படைத் தளபதிகளில் ஒருவருமான கங்கதேவன் வசமிருந்த கடல் மோகினியும் உங்கள் வசமாகிவிட்டது. அதனால் ஸ்ரீவிஜயத்துக்குக் கலிங்கத்திடமிருந்து கப்பல்கள் வருவது நின்றுவிட்டது. கடல்புறாவின் சஞ்சாரம் இந்தக் கடற்பகுதிகளில் அதிகமாகி விட்டதால் ஸ்ரீவிஜயத்தை உங்களிடமிருந்து பாதுகாப்பது அவசியமாகி விட்டது..." இந்த இடத்தில் மஞ்சளழகி சிறிது நிறுத்தினாள்.

"உம், உம் சொல் மேலே." படைத்தலைவன் ஊக்கினான் உணர்ச்சி ஏதுமற்ற குரலில்.

அவன் சொற்களில் மரியாதை இல்லாதிருந்ததைக்கூட மஞ்சளழகி கவனிக்கவில்லை. அவன் ஏகாங்கியாக இடி விழுந்தவன்போல் உட்கார்ந்து விட்டது அவளுக்கு மகிழ்ச்சியை அளித்திருக்க வேண்டும். அவள் நகைத்தாள். சிரிப்பொலியைச் சிறிது அதிகமாகவே உதிரவிட்டாள். அந்தச் சிரிப்பைப் படைத்தலைவன் லட்சியம் செய்யவில்லை. "உம், உம் சொல் மேலே" என்று இரண்டாம் முறையும் சொன்னான்.

அவள் சொன்னாள்: "உங்கள் பலம் இப்படிப் பெரிது ஓங்கியதும் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதி ஜெயவர்மர் ஓரளவு அச்சமே கொண்டார். அவருக்குப் பெரும் பக்கபலமாயிருந்த பலவர்மர் உங்களால் சிறைப்படுத்தப்பட்டார். குணவர்மரும் உங்கள் காதலியும் கடாரம் வந்துவிட்டார்கள். ஜெயவர்மரை எதிர்த்த அவர்களுக்குச் சோழநாடு உதவுமென்றும் இங்கு வரும் வணிகர்கள் அறிவித்தார்கள். ஸ்ரீவிஜயத்தின் கடற் படையை மேலும் வலுப்படுத்த வழியில்லை. அதில் பல மரக்கலங்களை நீங்கள் கைப்பற்றித் தமிழ் வணிகர்களுக்குக்

கொடுத்துவிட்டீர்கள். ஆகவே ஸ்ரீவிஜயத்தைக் காக்க ஜெயவர்மர் ஏற்பாடு செய்தார்..."

அவள் விளக்கம் பெரும் ஆச்சரியத்தைத் தந்தது இளைய பல்லவனுக்கு. சொர்ணபூமியின் போர் நிலையை எத்தனை விவரமாகப் புரிந்து கொண்டிருக்கிறாள் மஞ்சளழகி என்று எண்ண எண்ண அவன் வியப்பு உச்சநிலையை அடைந்தது. அந்த வியப்பு குரலில் ஒலிக்கக் கேட்டான் இளையபல்லவன், "என்ன ஏற்பாடு செய்தார் ஜெயவர்மர்?" என்று.

"ஸ்ரீவிஜயத்தின் தலைநகரை உங்கள் தாக்குதலினின்றும் காக்க ஏற்பாடு செய்தார்" என்றாள் மஞ்சளழகி திட்டமாக.

"எப்படி?"

"ஸ்ரீவிஜயத் தலைநகரத்தின் அருகே இருக்கும் பெரிய அரண் இந்த மலையூர். இதைப் பிடித்தால் தலைநருக்குப் பேராபத்து."

"ஆம்."

"முந்திய சோழர் படையெடுப்பில் ராஜேந்திர சோழ தேவரும் இந்த மலையூர்க் கோட்டையைக் கைப்பற்றித்தான் ஸ்ரீவிஜயத்தைத் தாக்கினாராம்."

"ஆம்."

"அப்படித்தான் இப்பொழுதும் நடக்கும் என்று ஜெயவர்மர் கூறினார்!"

இளையபல்லவன் புருவங்கள் ஆச்சரியத்தால் உயர்ந்தன. "என்ன! ஜெயவர்மர் கூறினாரா?" என்று கேட்டான் இளைய பல்லவன்.

"ஆம்," என்றாள் மஞ்சளழகி.

"யாரிடம்?"

"அவர் உபதலைவியிடம்."

"யாரது உபதலைவி?"

"நான்தான்."

"நீயா!" இளையபல்லவன் குரலில் அவநம்பிக்கை ஒலித்தது.

"ஆம் படைத்தலைவரே! நான்தான். ஜெயவர்மர் என்னைத் தமது உபதலைவர்களில் ஒருவராக நியமித்தார். அக்ஷயமுனையை விட்டு நீங்கள் சென்ற பின் அங்கு ஏற்பட்ட சீர்திருத்தங்கள், பாதுகாப்பு ஏற்பாடுகள் எல்லாவற்றையும் கேள்விப்பட்ட ஜெயவர்மர் நேரிடையாக அக்ஷயமுனைக்கு வந்தார். பார்த்தார். பிரமித்தார். நீங்கள்கூட இப்பொழுது அக்ஷயமுனை சென்றால், அதைக் கைப்பற்ற முடியாது. இப்பொழுது அங்கு கொள்ளையரில்லை. சரியாக அமைக்கப் பட்ட போர்ப்படை இருக்கிறது. அந்த மாறுபட்ட நிலையைக் கண்ட ஜெயவர்மர் அக்ஷயமுனையை ஆண்டவளே மலையூரை ஆளவல்லவள் என்று தீர்மானித்திருக்கவேண்டும். ஆகவே ஆபத்து வந்தபோது என்னை மலையூரைக் காக்க நியமித்தார். விஜயசந்திரன் கடற்படையும் என் ஆணையின் மேல்தான் ஜம்பி முகத்துவாரத்தில் நின்றது" என்று விளக்கிய மஞ்சளழகி இளையபல்லவனைக் கூர்ந்து நோக்கினாள். இளையபல்லவன் முகத்தில் தெரிந்தது அவநம்பிக்கையா அல்லது ஆச்சரியமா என்பதை ஊகிக்க அவளால் முடிய வில்லை. அவநம்பிக்கையாயிருந்தால் அதை அகற்ற மாத்திரம் தீர்மானித்த மஞ்சளழகி, "கொள்ளைக்காரரே! விஜயசந்திரன் படை ஜம்பியின் முகத்துவாரத்திலல்லாமல் உள்ளே தள்ளி நின்றது உங்களுக்கு வியப்பாயிருந்திருக்கலாம்?" என்று ஒரு பெரு வெடியை எடுத்து வீசினாள்.

இளையபல்லவன் இதயத்தில் விவரிக்கவும் முடியாத வியப்பு தாண்டவமாடியது. "என்ன! என்ன சொன்னாய் மஞ்சளழகி?" என்று கூவினான் ஆசனத்தையும் விட்டு எழுந்து.

"அலை எழும்போது உங்கள் கடல் புறா வேகமாக நதிக்குள் புகுந்து விடுமென்றும், அதற்கும் மற்ற எதிரி மரக் கலங்களுக்கிடையில் சிக்கிக்கொள்ள வேண்டாமென்றும்,

சற்று நதியின் உட்புறத்திலேயே நிற்கும்படிக்கும் யோசனை சொன்னேன் விஜயசந்திரனுக்கு" என்றாள் மஞ்சளழகி.

"நீயா சொன்னாய் அதை?" படைத்தலைவன் குரலில் வியப்பு மண்டிக் கிடந்தது.

"ஆம், தூதரே! வேறு யாருக்கு உமது தந்திரங்களும் கடலின் தந்திரங்களும் தெரியும்?" என்று கேட்டாள் மஞ்சளழகி.

"கடலின் தந்திரங்கள் உனக்குத் தெரியுமா?" என்று ஏதோ கேட்க வேண்டுமென்பதற்காகக் கேட்டான் இளைய பல்லவன்.

மஞ்சளழகியின் முகத்தில் கடலின் பெயரைக் கேட்டதுமே இன்பம் படர்ந்தது. கண்கள் கனவுலகத்தை எட்டின. "கடலை என்னைவிட அறிந்தவர் யார்? எங்கள் இனமே கடலோடும் இனம். என் தாயின் இனத்தைச் சொல்கிறேன் இளையபல்லவரே! தவிர பிறந்த சில நாட்களில் அக்ஷயமுனை வந்தேன். வளர்ந்த நாட்களில் கடலைத் தவிர எனக்கு நண்பர் யாரும் இல்லை. கடலில் விளையாடினேன், நீந்தினேன். மரக்கலங்களிலும் படகுகளிலும் சென்றேன். அலையெழுச்சி, காற்று வேகம் அனைத்தையும் என்னைவிட யாரறிவார்? இப்பொழுதுகூட என் கண் முன்னால் அக்ஷய முனைக் கடற்கரையில் பழுப்பு மணல் தெரிகிறது. அதோ எழுந்து வருகின்றன பேரலைகள்; அதோ மடிந்து நுரைத்து என் காலைத் தொடுகின்றனவே! தொட்டுத் திரும்பு கின்றனவே இளையபல்லவர் போல்" என்ற மஞ்சளழகி பெருமூச்சு விட்டாள். சில விநாடிகள் மௌனம் சாதித்தாள். பிறகு சொன்னாள்: "ஆம் படைத்தலைவரே! நான்தான் யோசனை சொன்னேன் விஜயசந்திரனுக்கு, உம்மைச் சமாளிக்கும் வழியை" என்று.

"நீயா?" பிரமிப்பை அள்ளித் தெளித்தது இளைய பல்லவன் குரல்.

"ஆம்" என்றாள் மஞ்சளழகி.

"உன் நெஞ்சம் அதற்கு இடம் கொடுத்ததா?" என்று வினவினான் படைத்தலைவன்.

"கொடுத்தது."

"உன் நெஞ்சம் இளகியதாயிற்றே மஞ்சளழகி" என்று குழைந்தது இளையபல்லவன் குரல்.

"பழைய நெஞ்சம் அது."

"இப்பொழுது?"

"கல்நெஞ்சம். அத்தாட்சி வேண்டுமா?"

"என்ன அத்தாட்சி?" என்று வினவினான் இளைய பல்லவன். பதிலுக்கு ஒரு பெருவெடியை எடுத்து வீசினாள் மஞ்சளழகி.



அத்தியாயம் 58

# குருதட்சிணை

ஜம்பி நதியின் முகத்துவாரத்திலிருந்து பின்னடைந்து நிற்கும்படி விஜயசந்திரனுக்கு யோசனை சொல்லியது தான்தானென்றும், தன் நெஞ்சம் பழைய இளகிய நெஞ்சம் அல்லவென்றும், கல்லென கெட்டிப்பட்டு விட்டதென்றும் இளையபல்லவனை நோக்கிக் கூறிய மஞ்சளழகி அதற்கு அத்தாட்சியும் காட்ட முற்பட்டு, "தூதரே! உம்மைச் சிறை செய்வது என் கடமையாகிறது" என்றொரு பெரு வெடியையும் எடுத்து வீசினாள்.

அதைக்கேட்ட இளையபல்லவன் அதிர்ச்சிக்குப் பதில் பெருவியப்பே அடைந்து மஞ்சளழகியின் முகத்தைக் கூர்ந்து நோக்கினான். மஞ்சளழகியின் அழகிய விழிகள் அவன் விழிகளை உறுதியுடன் சந்தித்தன. "எனக்கு சித்தப்பிரமை யில்லை படைத்தலைவரே! மிகுந்த தெளிவுடன் இருக்கிறேன். என் கடமையை நான் செய்யவேண்டி இருக்கிறது" என்றும் கூறினாள், உறுதி பூரணமாகக் குரலில் துலங்க.

இளையபல்லவன் தனது ஆசனத்தில் சிறிது சங்கடத் துடன் அசைந்தான். 'மஞ்சளழகியா இப்படிப் பேசுவது! அக்ஷயமுனைக் கடலோரத்தில் என் கரங்களில் பதுமை யெனக் கிடந்த அதே பைங்கிளியா இப்படிப் பேசுகிறாள்!' என்று மிதமிஞ்சிய வியப்பால் தன்னைத் தானே இருமுறை கேட்டுக்கொண்ட இளையபல்லவன் அவளை நோக்கிக் கேட்டான் வெளிப்படையாக, "என்ன கடமை உனக்கு மஞ்சளழகி?" என்று.

"இந்தக் கோட்டையைப் பாதுகாக்கும் கடமை" என்றாள் அவள் சர்வ சாதாரணமாக.

"கோட்டைத் தலைவியென்ற முறையிலாக்கும்" என்று ஏளனத்துடன் கேட்டான் இளையபல்லவன்.

# கடல் புறா

சாண்டில்யன்



## 58. குரு தட்சணை



"வேறு முறையும் இருக்கிறது" என்று கூறினாள் மஞ்சளழகி.

"என்ன முறை?"

"இந்த நாட்டின் குடிமக்கள் என்ற முறை தவிர..."

"தவிர?"

"இந்த நாட்டின்..." என்று துவங்கிய மஞ்சளழகி சிறிது தயங்கினாள்.

"சொல்லுங்கள் தலைவியாரே!" இளையபல்லவன் இகழ்ச்சியுடன் வினவினான்.

மஞ்சளழகியிடமிருந்து பதில் திடமாகவும் அதிகார மாகவும் வந்தது. "இளவரசி என்ற முறையும் இருக்கிறது" என்ற வார்த்தைகளை மிக நிதானமாக உச்சரித்தாள் மஞ்சளழகி. அவள் சொற்கள் பேராச்சரியத்தை மட்டுமல்ல, பெரும் சந்தேகத்தையும் கிளப்பி விட்டன, இளையபல்லவன் இதயத்தில். அவன் மஞ்சளழகியின் முகத்தை நன்றாக ஆராய்ந்தான். பிறகு, "அப்படியானால்..." என்று ஏதோ துவங்கினான். அவனைப் புரிந்துகொண்ட மஞ்சளழகி, "ஆம் இளையபல்லவரே, ஆம்" என்று கூறிக் கொண்டே தன் ஆசனத்தை விட்டு எழுந்தாள். மேலும் சொன்னாள்: "ஆம் இளையபல்லவரே! நாம் யாரும் எதிர் பார்க்காதது நடந்து விட்டது. இப்பொழுது நினைத்தால் கூட எனக்கு வியப்பா யிருக்கிறது படைத்தலைவரே. என் தந்தை என்னை எப்படி ஏற்றுக் கொண்டார் என்பது அன்றுகூட எனக்குப் புரிய வில்லை. யாரோ ஒரு சீனத்துப் பெண்ணின் மீது ஆசைப் பட்டு அவளிடம் பெற்ற பெண், மணமாகாதவளுக்குப் பிறந்த ஓர் அநாதை, அவளைத் தன் மகளெனச் சொல்லிக்கொள்ள எத்தனை திறன் வேண்டும்? அத்தனைத் திறன் என் தந்தைக்குப் பிறந்து விட்டது படைத்தலைவரே! அக்ஷயமுனை வந்த இரண்டாவது நாளே என்னை மகளென அழைத்தார். மகளென அறிவித்தார். அக்ஷயமுனைக் கோட்டையில் இருந்த அநாதைப் பெண் அன்று முதல் இளவரசியானாள். இன்று ஸ்ரீவிஜயத்தில் என் சொல் ஜெயவர்மர் சொல்லுக்குச்

சமானம். நான் காட்டும் திசையில் படைகள் நகரும். அந்தப் பதவியை எனக்களித்தார் ஜெயவர்மர்..."

இங்கு குறுக்கே புகுந்த இளையபல்லவன் சொன்னான், "இளவரசிப் பதவி உன் கண்களை மறைத்துவிட்டது மஞ்சளழகி," என்று.

"இல்லை படைத்தலைவரே, இல்லை" எனக் கூறித் தலையையும் ஆட்டிய மஞ்சளழகி, "அந்தப் பதவியல்ல எனக்கு ஜெயவர்மரிடம் பக்தியை அளித்தது. அரசிப் பட்டமே தந்திருந்தாலும் அதைத் தூக்கி எறிந்திருப்பேன். ஆனால், பெண்களுக்கு வேண்டிய பட்டங்களில் ஒன்றைத் தந்தார் அவர்" என்றாள்.

இளையபல்லவன் ஏதுமறியாமல் குழம்பினான். "என்ன பட்டம் அது?" என்றும் வினவினான்.

"மகள் என்ற பட்டம். குழந்தைப் பருவத்தில் தந்தையிடம் மகள் என்ற பட்டத்தையும் வயது வந்தபின் கணவனிடம் மனைவியென்ற பட்டத்தையும், பிறகு மகனிடம் தாயென்ற பட்டத்தையும் பெறவே பெண்கள் துடிக்கிறார்கள். அவற்றில் ஒன்று கிட்டியது. ஒன்று கிட்டவில்லை" என்று மஞ்சளழகி பெருமூச்செறிந்தாள்.

"கிட்டியது எது? கிட்டாதது எது?" இளையபல்லவன் கேட்டான் பிரமிப்புடன்.

"நெருங்கிக் காதலித்தவர் கைவிட்டுப் போனார். மனைவி யென்ற பட்டம் கிடைக்கவில்லை. பருவப்பிராயம் வரையில் நெருங்காதிருந்த தந்தை வந்தார். மகளெனும் பட்டத்தைத் தந்தார். அதனால் எனக்கும் சமூகத்தில் ஒரு மதிப்பான வாழ்வை அளித்தார்" என்றாள் மஞ்சளழகி. அத்துடன் மேலும் தொடர்ந்து, "அத்தகைய தந்தைக்கு நான் கடமைப் பட்டிருப்பதும் அவரை அவருடைய விரோதிகளிடமிருந்து காப்பாற்றுவதும் நியாயமல்லவா?" என்றும் கேட்டாள்.

இளையபல்லவன் சில விநாடிகள் பதில் சொல்லவில்லை. மௌனமாகவே இருந்தான். பிறகு ஏதோ முடிவுக்கு வந்து கேட்டான், "ஜெயவர்மரை நீ நம்புகிறாயா!" என்று.

"ஏன் நம்பக்கூடாது?"

"நம்பிக்கையைக் காப்பாற்றுபவரல்ல அவர் என்பது உலகப் பிரசித்தம்."

"நம்பிக்கையைக் காப்பாற்றுபவர் என்று ஒருவருக்கும் பெயர் உண்டு. அவரை நம்பினேன். அவர் என்னை விட்டுத் தான் சென்றார். நம்பிக்கை யார்மீது வைக்கவில்லையோ அவர் எனக்கு ஆதரவுக் கரம் நீட்டினார். உலக வழக்குக்கும் என் வழக்குக்கும் பெரும் விரோதம் இளையபல்லவரே."

இளையபல்லவனுக்கு விஷயம் நன்றாகப் புரிந்தது. வருடக்கணக்கில் ஏற்காத மகளைத் திடீரென ஜெயவர்மன் ஏற்று அவளை இளவரசியாக்கியதில் பெரும் தந்திரம் புதைந்து கிடப்பது அவனுக்குத் திட்டமாகத் தெரிந்தது. துறவி மனப் பான்மை வாய்ந்த குணவர்மன், புதல்வியைத்தான் அரியணை யில் அமரவைப்பான் என்பதை அறிந்துள்ள ஜெயவர்மன், தானும் ஒரு பெண்ணைப் போட்டிக்குக் கொண்டுவந்தால் அரியணைப் போட்டியில் நாடு முழுவதும் குணவர்மனிடம் சேராது என்பதை அறிந்தே மஞ்சளழகியின் பிறப்பு மர்மத்தை அம்பலப்படுத்திவிட்டானென்பதையும், இதனால் ஸ்ரீவிஜயத் தின் கதை பெரும் சிக்கலாகி வருகிறதென்பதும் இளைய பல்லவனுக்கு வெட்ட வெளிச்சமாகியது. காஞ்சனாதேவியிட முள்ள பொறாமையால் மஞ்சளழகி தன்னைச் சிறை செய்யக் கூடத் தயங்கமாட்டாளென்பதையும் அவன் உணர்ந்திருந் தான். மஞ்சளழகியின் மோகன உருவமும் நல்ல குணங்களும் கோட்டை வீரர்களையும் மக்களையும் கவர்ந்திருக்கு மென்பதிலும் அவனுக்குச் சந்தேகமில்லை. அப்படி ஊரும் கோட்டையும் ஒன்றுபட்டு நின்றால் தனது மாலுமி களைக் கொண்டு மலையூர்க் கோட்டையைக் கைப்பற்றுவது அத்தனை எளிதான காரியமல்ல என்பதை உணர்ந்துகொண் டான் படைத்தலைவன். ஆகவே தீவிர யோசனைக்குப் பிறகே எந்த நடவடிக்கையையும் முடிவு செய்யவேண்டுமெனத் தீர்மானித்த படைத்தலைவன் தனது கடைசி அஸ்திரத்தை வீசுவதற்குப் பூர்வாங்கமாக மஞ்சளழகியை நெருங்கி,

"மஞ்சளழகி! என்னைச் சிறை செய்வதில் கஷ்ட மிருக்கிறது" என்று துவங்கினான்.

மஞ்சளழகி அவனைக் கூர்ந்து நிர்ப்பயமாக நோக்கினாள். "மற்றவர்களுக்குக் கஷ்டம்" என்றும் கூறினாள்.

"உனக்கு?"

"கஷ்டமில்லை."

"ஏன்?"

"மற்றவர்களைவிட உங்களை நான் நன்றாகப் புரிந்து கொண்டவள்."

"அதனால்?"

"அதனால் உங்கள் தந்திரத்தையெல்லாம் முன்கூட்டி ஊகித்து எச்சரிக்கையுடன் நடந்துகொள்ள முடியும்."

"என் தந்திரத்தை ஊகித்துவிடுவாயா?"

"ஆகா."

"எப்படி?"

"உதாரணமாக, நீங்கள் இங்கு சிறைப்பட்டால் விஜய சந்திரனைத் தீர்த்து விடும்படி அமீரிடம் கூறி வந்திருப்பீர்கள்" என்றாள் மஞ்சளழகி.

இதைக்கேட்ட இளையபல்லவன் ஆசனத்தை அடைந்து ஸ்தம்பித்து உட்கார்ந்துவிட்டான். மஞ்சளழகி தன் இதயத்தை எத்தனை உன்னிப்பாக அறிந்து கொண்டிருக்கிறாள் என்பதை உணரப் பெரும் பிரமிப்பாயிருந்தது படைத்தலைவனுக்கு. இருப்பினும் அதிலொரு சிறு விஷயமிருந்ததை அவள் அறிய வில்லை என்று நினைத்து உள்ளூரச் சிரித்துக்கொண்டான். அந்த நினைப்பையும் உடைத்தெறிந்தாள் மஞ்சளழகி. அவள் மெள்ள நகைத்துக்கொண்டு சொன்னாள், "ஆனால் அதை நீங்கள் விஜயசந்திரன் எதிரில் சொல்லியிருப்பீர்கள்" என்று.

வாயைப் பிளந்தான் வியப்பால் படைத்தலைவன். "என்ன சொல்கிறாய் மஞ்சளழகி?" என்று வினவவும் செய்தான், அந்த வியப்பு குரலில் விரவிக் கிடக்க.

"விஜயசந்திரனைக் கொல்லும் உத்தேசம் உங்களுக் கில்லை" என்றாள் மஞ்சளழகி.

"எப்படித் தெரியும் உனக்கு?"

"உங்களுக்கு அனாவசியக் கொலை பிடிக்காது, ஆகவே..."

"ஆகவே..."

"விஜயசந்திரன் மரணத்தைச் சுட்டிக்காட்டி இங்குள்ள கோட்டைத் தலைவனை மிரட்டத் திட்டமிட்டிருப்பீர்கள். ஆனால் எனக்குத் தெரியாதா அது வீண் பயமுறுத்தல் என்று? அமீருக்கும் கண்டியத்தேவனுக்கும் வேறு உத்தரவிருக்கும். ஆகையால் விஜயசந்திரனுக்கு ஆபத்து ஏதுமில்லை. ஆகவே, உங்களையும் நான் விடப்போவது இல்லை."

இளையபல்லவனுக்கு என்ன பதில் சொல்வதென்று புரியவில்லை. "அப்படியே வைத்துக் கொள். கடல் புறாவை யும், என்னுடைய மற்ற நான்கு மரக்கலங்களையும் வெற்றி கொள்ள முடியுமென்று நினைக்கிறாயா? என்னிடம் எத்தனை மாலுமிகள் இருக்கிறார்கள் தெரியுமா?" என்று கேட்டான் கோபத்துடன்.

மஞ்சளழகி, "இப்படி வாருங்கள்" என்று அவனை அழைத்துக்கொண்டு மத்திய மண்டபத்தின் வாயிலை நோக்கிச் சென்றாள். இளையபல்லவன் ஏதும் பேசாமல் அவளைப் பின்தொடர்ந்தான். மத்திய மண்டபத்தின் தெற்கு வாயில் வெளிப் பிராகாரத்துக்கு வழிவிட்டது. அந்தப் பிராகாரம் நல்ல அகலத்துடனும் மிகவும் பலமாக எழுப்பிய சுவர்களுடனும் காணப்பட்டது. சுமார் ஐந்நூறு வீரர்களுக்கு மேல் அந்தப் பிராகாரத்தில் நின்றார்கள். பிராகாரக் கோடியில் இருந்த பலமான கோட்டைச் சுவர் மிக உயரமாக இருந்ததால் அதன்மீது ஏறிச்செல்லப் படிகள் இருந்தன. இடையேயிருந்த காவல் வீரர்களைத் தாண்டிப் பிராகாரத்தின் இடைப்பகுதியில் புகுந்து கடந்து மதில் சுவர்ப்படிகளில் ஏறிச் சுவரை அடுத்திருந்த கருங்கல் பாதையை அடைந்தாள் மஞ்சளழகி. அவளைப் பின்தொடர்ந்து வந்த இளைய பல்லவன் அங்கிருந்த காவல் ஏற்பாடுகளைப் பார்த்துப் பிரமித்தான். பதக்குகளைச் சமாளிக்கத் தான் அக்ஷய முனையில் எந்த ஏற்பாடுகளைச் செய்திருந்தானோ அதே

ஏற்பாடுகள் அங்கும் செய்யப்பட்டிருப்பதைக் கண்டான். பாறைகளை எறியும் பெரும் யந்திரங்களும், எரி பந்தங்களை வீசும் ராட்சத விற்களும் ஆங்காங்கு இடைவெளி கொடுத்து நிறுத்தப்பட்டிருந்தன. இவற்றையெல்லாம் பார்த்துப் பிரமித்த இளையபல்லவனை நோக்கி இளநகை பூத்த மஞ்சளழகி, "குருநாதரே! எப்படியிருக்கிறது ஏற்பாடு?" என்று வினவினாள்.

இளையபல்லவன் கண்கள் நாலா பக்கங்களையும் துழாவிக்கொண்டு நின்றன. மஞ்சளழகியின் சொல்லைக் கேட்டதும் திடீரெனத் திரும்பிய இளையபல்லவன், "குருநாதரே! இது என்ன புதுப் பட்டம் மஞ்சளழகி!" என்று வினவினான்.

"நீங்கள் அக்ஷயமுனைப் பாதுகாப்புக்கு எந்த ஏற்பாடு களைச் செய்தீர்களோ அவற்றையே இங்கு நான் செய்திருக் கிறேன்."

"ஆம்."

"உங்களிடமிருந்து கற்ற படிப்பினைதானே அது?"

"ஓகோ."

"ஆமாம். ஆகையால் நீங்கள் இந்த வித்தையில் குருநாதரல்லவா!" வேடிக்கையாகக் கேட்டாள் மஞ்சளழகி.

"ஆமாம், ஆமாம்." எரிச்சலுடன் வந்தது இளையபல்லவன் பதில்.

"சீனப் பெண்ணைப் பற்றிப் பெருமைப்படுகிறீர் களல்லவா?"

"ஆமாம் ஆமாம். மிகவும் பெருமைப்படுகிறேன்."

அவன் குரலில் தொனித்த எரிச்சலைக் கண்டு லேசாக நகைத்த மஞ்சளழகி, "சீனப் பெண்ணின் திறமையை இன்னும் பாருங்கள். இப்படி வாருங்கள்" என்று அவனை அழைத்து மதில் சுவரின்மீது சாய்ந்து வெளியே எட்டிப் பார்க்கும்படி கூறினாள். தானும் அவன் பக்கலில் நின்று விளக்கினாள், "அதோ பார்த்தீர்களா இளையபல்லவரே, உமது மரக்கலங் களை. அதோ நீங்கள் கைப்பற்றிய இரண்டு ஸ்ரீவிஜயத்தின்

மரக்கலங்கள், அத்தனை மரக்கலங்களும், இந்தக் கோட்டை யில் இந்தப் பகுதியிலிருக்கும் எரிபந்தங்கள், பாறை வீசும் பயங்கர யந்திரங்கள் இவற்றின் குறியில் இருக்கின்றன. நான் கையசைத்தால் சில நிமிடங்களில் உமது மற்ற மரக்கலங்கள் அழிந்துவிடும். கடல்புறா பலமானது. அதை அழிப்பது சிறிது சிரமம். ஆனால் முடியாத காரியமல்ல," என்று.

மஞ்சளழகி சொல்வது முற்றிலும் உண்மை என்பதை அறிந்த இளையபல்லவன் பேசுவதற்கு ஏதுமில்லாததால் வாயடைத்து நின்றான். அவனை மீண்டும் அழைத்துக் கொண்டு மத்திய மண்டபத்துக்கு வந்த மஞ்சளழகி, "இப்பொழுது என்ன சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

பதிலுக்கு இளையபல்லவன் வெறுப்புக் கலந்த சிரிப்பொன்றை உதிரவிட்டான். "நீ குருவை மிஞ்சிய சீடப் பெண்ணாகிவிட்டாய். குரு உன் கையிலிருக்கிறார்," என்றான்.

இந்தக் கடைசிப் பதில் அவளைச் சற்று உலுக்கவே செய்தது. 'குரு மட்டும் என் கையிலிருந்தால் இன்றைய கதையே வேறு' என்று உள்ளுக்குள் சொல்லிக் கொண்டாள். பெண்மைக் குணம் அவள் உள்ளத்தில் பெரிதாக எழுந்து நின்றது. 'இதை மட்டும் இவர் உண்மையாகச் சொன்னால்? என் கையில் இவர் இருந்தால்' என்று நினைத்த அவள் சில விநாடிகள் மெய்மறந்தாள். 'சே! சே! இதென்ன வீண் கனவு. இவர் இருப்பது அவள் கையில்' என்று கடாரத்துக் கட்டழகியை நினைத்துப் பெருமூச்செறிந்தாள். பிறகு சில விநாடிகள் அந்த மத்திய மண்டபத்தில் அங்கும் இங்கும் நடந்தாள். கடைசியில் திடீரென நின்றாள். "இளைய பல்லவரே! நீங்கள் உங்கள் நாட்டை நேசிக்கிறீர்களா?" என்று வினவினாள்.

"சந்தேகமென்ன?" என்றான் இளையபல்லவன் அந்தக் கேள்வியின் காரணத்தை அறியாமல்.

"காஞ்சனாதேவியை நேசிக்கிறீர்களா?" இரண்டாவது கேள்வியும் எழுந்தது மஞ்சளழகியிடமிருந்து.

இதற்கு இளையபல்லவன் பதில் சொல்லவில்லை. அவன் பதிலை அவள் எதிர்பார்க்கவும் இல்லை. "இரண்டையும் நீங்கள் அடைய வழி இருக்கிறது இளையபல்லவரே" என்றாள், முடிவாக.

"என்ன வழி?" ஆத்திரத்துடன் கேட்ட இளையபல்லவன் தானிருக்கும் இடத்தையும், வந்த காரியத்தையும் மறந்தான். இரண்டெட்டில் மஞ்சளழகியை அடைந்து இறுக அவளை அணைத்துக் கொண்டான். "என்ன வழி மஞ்சளழகி?" என்று அவள் காதுக்கருகில் குனிந்து கேட்டான்.

அவள் மெள்ளச் சொன்னாள், "நீங்கள் குருநாதரல்லவா?" என்று.

"ஆம் ஆம்." அர்த்தம் தெரியாமல் முணுமுணுத்தான் இளையபல்லவன்.

"உங்களுக்குக் குருதட்சிணை கொடுக்க விரும்புகிறேன்" என்று மிக மெதுவாகச் சொன்னாள் மஞ்சளழகி, அவன் அணைப்பிலிருந்து விடுபடாமலே.

"என்ன தட்சிணை?"

"பெற்றுக்கொண்டால் நீங்கள் தப்பிச் செல்லலாம் இங்கிருந்து. அவளையும் அடையலாம், நாட்டையும் ஆளலாம்."

"என்ன! என்ன! சொல்." துரிதப்படுத்தினான் படைத் தலைவன்.

மஞ்சளழகி இளையபல்லவனை ஏறெடுத்து நோக்கினாள். அவள் கண்கள் விளக்கு வெளிச்சத்தில் பளபளத்தன. காணிக்கை என்னவென்று சொன்னாள் அந்தக் காரிகை. அதைக்கேட்ட இளையபல்லவன் அவளை உதறி விலகினான். "முடியாது முடியாது. அது முடியாது மஞ்சளழகி. கூப்பிடு காவலரை. என்னைச் சிறை செய். என் மரக்கலங்களை அழித்துவிடு" என்று ஆவேசம் வந்தவன் போல் கூவினான்.

# கடல் புறா



சாண்டில்யன்



## 59. அவள் ஏக்கமும் ஊக்கமும்

அத்தியாயம் 59

# அவள் ஏக்கமும் ஊக்கமும்

இளையபல்லவன் அணைப்பில் அவன் இரு கைகளுக் கிடையே இழைந்து நின்ற மஞ்சளழகி தான் அவனுக்கு அளிக்க எண்ணிய காணிக்கை என்னவென்று கூறியதும் இணையிலாத் துன்பமடைந்த படைத்தலைவன் நிலை குலைந்து, "முடியாது, முடியாது, அது மட்டும் முடியாது. என்னைச் சிறை செய், என் மரக்கலங்களை அழித்து விடு" என்று கூவினான் என்றால், அதற்குக் காரணம் இருக்கத்தான் செய்தது. அவள் காணிக்கை அத்தனை விலைமதிக்க முடியாததாகவும் பயங்கரமாகவும் இருந்தது. அவன் மார்பில் இழைந்த வண்ணம் கூறினாள் மஞ்சளழகி மீண்டும், "என் உயிர், அது உங்களுக்குச் சொந்தமானது. அதை நான் கொடுக்கக்கூடத் தேவையில்லை. நீங்களே எடுத்துக்கொள்ள உரிமையுண்டு" என்று.

பதிலுக்கு இளையபல்லவன் கைகள் இறுகின. "உன் உயிரை நீ அர்ப்பணிக்கிறாய் மஞ்சளழகி, அதை ஏற்க நான் என்ன அசுரனா அல்லது அற்பனா?" என்று கூறவும் செய்தான், ஒரு கையை அவள் உடலைவிட்டு நீக்கி அவள் தலைக் குழலைக் கோதியவண்ணம்.

மஞ்சளழகி சோகப் பெருமூச்சு விட்டாள். "இளைய பல்லவரே! நீங்கள் தப்ப வேறு வழியில்லை. இந்தக் கோட்டை சிறியதுதான். ஆனால் மிகவும் பலமானது. இதன் காவலும் சென்ற சில தினங்களில் இரட்டிக்கப்பட்டிருக்கிறது. இங்கு எனக்கு ஓர் உபதலைவனும் இருக்கிறான்" என்றும் கூறினாள்.

இதைச் சொன்ன அவள் குரலில் ஏதோ ஒரு புதுவித ஒலி இருந்ததை இளையபல்லவன் கவனித்தான். "என்ன

உபதலைவனா?" என்று வினவினான் அந்தப் புத்தொலியின் காரணத்தை அறிய.

தலையைச் சற்று நிமிர்ந்து இளையபல்லவனை நோக்கினாள் மஞ்சளழகி. "ஆம் படைத்தலைவரே. ஓர் உபதலைவன் இருக்கிறான். சக்கரவர்த்தியின் பகிரங்க உத்தரவுப்படி அவன் என் அடிமை. ஆனால் ரகசிய உத்தரவு எப்படியென்று எனக்குத் தெரியாது. சதா என்னை விட்டு இவன் அகலுவதில்லை. அகலும் சமயத்தில் உங்களை உள்ளே விட்ட இரு காவலரை எனக்குத் துணை வைத்துப் போகிறான். காரணம் கேட்டால், 'அரசமகளிர் தனிப்பட இருக்கலாகாது' எனக் கூறித் தலைவணங்குகிறான். என் கண்ணசைந்தால் காவலர் அசைவதென்னவோ உண்மை. ஆனால் கண்ணிருக்கும் இடங்களில் எல்லாம் காவலர் இருக்கிறார்கள். நான் இங்கு சிறையிருக்கிறேனா சுதந்திரமாய் இருக்கிறேனா என்று எனக்கே தெரியவில்லை. ஆகவே நான் முயன்றாலும் உங்களை உயிருடன் வெளியே அனுப்ப முடியாது. நீங்கள் தப்ப ஒரே வழி. அது தவறான வழியுமல்ல" என்றாள்.

"எது தவறான வழியல்ல?" என்று வினவினான் இளைய பல்லவன் சீற்றத்தால்.

"நான் சொன்ன வழி."

"உன்னைக் கொன்றுவிட்டுப் போகச் சொன்னாயே அதுவா?"

"ஆம், இளையபல்லவரே! இங்கு நாம் தனிமையிலிருக் கிறோம். உங்கள் குறுவாளை எடுத்து என் இதயத்தில் பாய்ச்சி விடுங்கள். இதோ என் கையில் இருக்கிறது ஸ்ரீவிஜயத்தின் முத்திரை மோதிரம். இதை எடுத்துச் செல்லுங்கள். நான் நித்திரை புரிவதாகச் சொல்லுங்கள். காவலாளிகள் நம்புவார்கள். தடை செய்யமாட்டார்கள். இங்கிருந்து மரக் கலங்களுடன் தப்பிச் சென்று விடுங்கள்." இந்த வார்த்தை களை மஞ்சளழகி சர்வ சாதாரணமாகச் சொன்னாள். அவள்

உள்ளத்தில் உணர்ச்சி வேகமிருந்ததால், அது குரலில் சற்றும் தெரியவில்லை.

இளையபல்லவன் கொடுமையாக நகைத்தான். "நன்றா யிருக்கிறது மஞ்சளழகி! உன் உயிரை என் கையால் எடுக்கவா?" என்றான் அந்தக் கொடுமையும் துன்பமும் குரலில் துலங்க.

"உங்களுக்கு உரியதைத்தானே எடுத்துக் கொள்கிறீர்கள்? இதில் என்ன தவறு?" என்று வினவினாள் மஞ்சளழகி.

"என்னை இதயமற்ற கொலைகாரன் என்று நினைக் கிறாயா?" என்று கேட்டான் கடுங்கோபத்துடன்.

"அதைவிடக் கொடியவர் நீங்கள்?" என்றாள் மஞ்சளழகி துன்பம் நிறைந்த குரலில்.

"நானா! கொடியவனா!"

"ஆம்."

"என்ன செய்துவிட்டேன் நான்?"

"இன்னும் என்ன செய்யவேண்டும். என்னை நிராகரித்து விட்டீர்களே. அது போதாதா? நீங்கள் என்னை விட்டுச் சென்றபோதே இந்த உயிர் எனக்கு அர்த்தமற்றதாகி விட்டது இளையபல்லவரே! என்றோ அதைத் துறந்திருப்பேன். ஆனால், ஒரு வீண் ஆசை, ஒருநாள் நீங்கள் திரும்பி வருவீர்கள் என்னைப் பார்க்க என்று. அதனால் உயிரை வைத்திருந்தேன். இளவரசிப் பதவியை ஏன் ஏற்றேன் தெரியுமா? நீங்கள் ஸ்ரீவிஜயத்தைப் பிடிக்க வருவீர்கள். உங்களைப் பார்க்கலாம் என்பதற்காக. பெண் இதயம் உங்களுக்குப் புரியாது இளைய பல்லவரே! இந்த உயிர் எனக்குத் தேவையில்லை. நீங்கள் இப்பொழுதிருக்கும் அபாயகரமான நிலையில் அதை ஏற்பது தான் சரி. இல்லையேல் உங்கள் கனவுகள் பறந்துவிடும். ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தை வெற்றி கொள்வதெல்லாம் வெறும் பேச்சளவில் நிற்கும். என் காணிக்கையை ஏற்றுக்கொள் ளுங்கள்" என்று கூறிய மஞ்சளழகி அவன் பிடியை விட்டு விலகி நின்றாள்.

இளையபல்லவன் வாயடைத்து ஸ்தம்பித்து அவளை வெறித்து நோக்கிக்கொண்டு பல விநாடிகள் நின்றான். அவன் சித்தத்தில் பல உண்மைகள் வலம் வந்து கொண்டிருந்தன. அவள் இதயத்தின் ஆழத்தை, அந்த ஆழத்தில் புதைந்துகிடந்த அன்பை, அந்த அன்பில் முளைத்த மாபெரும் தியாகத்தை எண்ணி எண்ணிப் பெரும் பிரமிப்பின் வசப்பட்டான் அவன். அவள் முதலில் தன்னை வரவேற்ற முறை, நெஞ்சம் கல்லாகி விட்டதாகச் சொன்ன கதை எல்லாம் உள்ளக் குமுறலை மறைக்கப் போடப்பட்ட பெரும் வேஷம் என்பதை உணர்ந்து கொண்டான் இளையபல்லவன்.

அப்படியானால் தன் மரக்கலங்களை முகத்துவாரத்துக் குள்ளிருந்து எதிர்பார்க்க விஜயசந்திரனுக்குப் பிறப்பித்த உத்தரவு? தன் மரக்கலங்களை விநாடி நேரத்தில் அழிக்க அவள் தன் வழிகளையே பின்பற்றச் செய்த ஏற்பாடுகள் எல்லாம் எதற்காக? இதற்கு முதலில் விடை காண முடிய வில்லை அவனால். ஆனால் யோசிக்க யோசிக்க அவனுக்கு உண்மை ஓரளவு விளங்கவும் முற்பட்டது. வருஷக்கணக்கில் பெண்ணை ஏற்காத ஜெயவர்மன் திடீரென்று அவளை ஏற்றதற்கும் மலையூர் கொண்டு வந்ததற்கும் பெரும் காரணங்கள் இருக்கவேண்டுமென்று தீர்மானித்தான் அவன். மஞ்சளழகியைக் கோட்டைத் தலைவியாக்கி இளவரசி யாகவும் செய்துவிட்டால் அவள், மக்களைப் பாதுகாத்தாக வேண்டும். மீறினால் மக்களே அவளை அழித்துவிடுவார்கள். அவள் கடமை தவறாதிருக்க ஓர் உபதலைவனும் கோட்டை யில் நியமிக்கப்பட்டிருக்கிறான். அந்த உபதலைவன் உண்மை யில் மஞ்சளழகியின் சிறைக்காவலன். இதையெல்லாம் உடைக்கத் தன்னையே அர்ப்பணிக்கிறாள் அக்ஷயமுனை அழகி— ஸ்ரீவிஜயத்தின் பிற்காலச் சக்கரவர்த்தினி. அவளைக் கொன்று அந்த மண்டபத்தில் கிடத்தி அவள் உறங்குவதாகக் கூறி அவள் முத்திரை மோதிரத்துடன் சென்றால் யாரும் அவனைத் தடுக்க மாட்டார்கள். மரக்கலங்களிடை சென்றதும் நங்கூரத்தை எடுத்துத் தப்பியும் சென்றுவிடலாம். ஆனால்...?

நினைக்கவும் அருவருப்பாய் இருந்தது படைத்தலைவனுக்கு. அவள் செய்ய முற்பட்ட மகத்தான தியாகம் மலைபோல் அவன் இதயத்தைத் தாக்கியது. 'ஆயிரம் ஸ்ரீவிஜயங்களைக் கைப்பற்றலாம். ஆனால் இப்படிப்பட்ட ஒரு பெண்ணை என்னால் திரும்பப் பெறமுடியாதே' என்று நினைத்த இளையபல்லவன் நின்றபடியே இருந்தான்.

மஞ்சளழகியும் பேசவில்லை. அவன் சிந்தையிலோடிய எண்ணங்களை நன்றாகப் புரிந்துகொண்டாள் அவள். அந்த மௌனத்தைக் கலைக்க அவள் வாயைத் திறந்தபோது அவன் அவளைப் பேசவேண்டாமென்று கையினாலேயே தடுத்தான். பிறகு அந்த மத்திய மண்டபத்தில் அங்கும் இங்கும் உலாவினான். கடைசியில் ஏதோ முடிவுக்கு வந்து, "மஞ்சளழகி! உன் காவலரை அழை" என்றான்.

"எதற்கு?"

"என்னைச் சிறை செய்ய."

"அப்படியானால் என் காணிக்கையை ஏற்க மறுக்கிறீர்கள்?"

"ஆம்."

"ஏன்?"

"என் உடம்பிலும் நல்ல உணர்ச்சிகள் ஓடுகின்றன. இந்தக் கொள்ளைக்காரன் அடியோடு கெட்டுவிடவில்லை."

"சிறை செய்தால் நீங்கள் தப்ப முடியாது."

"தப்ப இஷ்டமில்லை."

"உங்கள் உயிரைத் தந்தை வாங்கிவிடுவார்."

"உன் உயிரைவிட எனக்கு அது சிறந்ததல்ல." இந்தக் கடைசிச் சொற்களை வெகு கோபத்துடன் கூறினான் இளையபல்லவன். அவன் கோபத்தின் வேகம் அவனுக்கு அவளிடமிருந்த காதலைக் காட்டியது. அதைக்கேட்ட மஞ்சளழகியின் கொவ்வை இதழ்களில் இளநகை அரும்பியது. அவள் அவனை நெருங்கி வந்து அவன் தோள்மீது இரு கைகளையும் வைத்துத்

தலையை நிமிர்த்தி அவன் முகத்தை நோக்கினாள். உடலை யும் மெள்ள அவன்மீது சாய்த்தாள். உடல் அழுந்தியது, மெல்ல கண்கள் கலந்தன. உணர்ச்சிகள் உடல் மாறிவிட்டவை போல் சுழன்றன. "இது போதும் எனக்கு" என்று குழைந்த குரலில் சொற்களை உதிரவிட்டாள் மஞ்சளழகி.

"எது?" என்று ஏதுமறியாமல் வினவிய இளையபல்லவன் கைகள் அவனை அறியாமலே அவள் பொன்னிற மஞ்சள் உடலைச் சுற்றிச் சென்றன. பெரிய பல புஷ்பங்களிணைந்த ஆரம்போல் அவன்மீது துவண்ட அவள் உடல், அந்தக் கைகளின் ஊடே மெல்லத் துடிப்புடன் அசைந்தது. அவன் கேட்ட "எது?" என்ற கேள்விக்குப் பதில் சொல்ல அவளுக்குப் பல விநாடிகள் பிடித்தன. இடையே ஒரு காவியமே நிகழ்ந்தது. முடிவில் சொன்னாள் அவள், "என் உயிரைப் பற்றி நீங்கள் வைத்திருக்கும் மதிப்பு" என்று.

இளையபல்லவன் அந்த மோகனாங்கியின் சமீபத்தில், அவள் உடலமுந்திய காரணத்தால் மெய்மறந்திருந்தான். பேசும் சக்தியைக்கூட அவன் அந்தச் சில விநாடிகளில் அடியோடு இழந்திருந்தான். இத்தனை பலவீனம் தனக்கு உண்டு என்பதை அவன் அப்பொழுதுதான் உணர்ந்தான். யாருடைய காதலை அவன் வரவேற்றானோ அந்தக் காஞ்சனாதேவியின் அருகாமைகூட அளிக்காத கற்பனைக்கும் எட்டாத பெரும் பிணைப்பு ஒன்று மஞ்சளழகி யிடம் தனக்கு ஏற்பட்டதை எண்ணிப் பிரமித்தான் அவன். அந்தச் சில விநாடிகளில் தான் யாரைக் காதலிக் கிறோம் என்ற உண்மைகூட விளங்காதிருந்தது அவனுக்கு. அப்படி அவனைக் குழப்பியது மஞ்சளழகியின் மோகன உருவமா, அவள் அன்பின் ஆழமா, அவள் செய்ய முற்பட்ட தியாகத்தின் பலமா? அவனுக்கே புரியவில்லை. ஒன்று மட்டும் புரிந்திருந்தது அவனுக்கு. எது எப்படி யானாலும் மஞ்சளழகியைக் கைவிடுவதில்லை என்ற உறுதி பூண்டான் அவன். அந்த உறுதியின் விளைவாக அவளை அந்த மண்டபத்தின் கோடிக்கு அழைத்துச்

சென்று, "மஞ்சளழகி! உன் அந்தரங்க அறை எங்கிருக்கிறது?" என்று வினவினான்.

"இதற்குப் பின்னால். ஏன் கேட்கிறீர்கள்?" என்று வினவினாள் அவள்.

"அதைப் பார்க்க வேண்டும் எனக்கு" என்றான் இளைய பல்லவன்.

மஞ்சளழகியின் முகத்தில் சங்கடமும் குழப்பமும் தெரிந்தன.

இளையபல்லவன் தன்னைப் பெண்டாளத் தீர்மானிக்க வில்லை என்பதை அவள் நன்றாக உணர்ந்திருந்தாள். அவன் அப்படிப்பட்ட காமுகனுமல்ல, அற்பனுமல்ல என்பது அவளுக்குச் சந்தேகமறப் புரிந்திருந்தது. ஆகவே கேட்டாள் மீண்டும், "ஏன் பார்க்க விரும்புகிறீர்கள்?" என்று.

"காரணம் கேட்காதே. சொல்கிறபடி செய்" என்று அதட்டினான் இளையபல்லவன்.

மஞ்சளழகி புன்முறுவல் பூத்தாள். பெண்ணை எந்த நிலையிலும் அதட்டும் அந்த ஆண்பிள்ளைக் குணம் அந்த ஆபத்தான நிலையிலும் ஓங்கி நிற்பதை எண்ணிய மஞ்சளழகி மெல்ல நகைக்கவும் செய்தாள்.

"ஏன் நகைக்கிறாய்?" என்று வினவினான் படைத் தலைவன்.

"என்னை அதட்டுகிறீர்களே?" என்று கேட்டாள் அவள் மீண்டும் நகைத்து.

"ஏன் அதட்டக் கூடாதோ?"

"எப்படி அதட்டலாம்? நான் இந்தக் கோட்டையின் தலைவி. இந்த நாட்டின் இளவரசி."

"அதெல்லாம் புதுப் பதவிகள்."

"பழைய பதவிகள்..."

"பலவர்மனின் வளர்ப்புப் பெண், தாய் தந்தை யாரென்று தெரியாத அநாதை. அத்துடன்..." இதைச் சொல்லி நிறுத்திய இளையபல்லவன் குரலில் ஏதோ புதுவித ஒலி இருந்தது.

அதை மஞ்சளழகி கவனித்தாள். ஆகவே கேட்கவும் செய்தாள்: "அத்துடன்..."

"என்னைப் பைத்தியமாக அடித்த ஒரு பைங்கிளி" என்றான் இளையபல்லவன், அவளை விழுங்கி விடுபவன் போல் பார்த்து.

மஞ்சளழகி மோகப் புன்முறுவல் செய்தாள். தன்னிடமுள்ள காதலைப் பகிரங்கமாகச் சொல்லப் படைத்தலைவன் பயப்படுகிறான் என்பதைப் புரிந்துகொண்டாள். அந்தப் பயத்துக்குக் காரணமும் அவளுக்கு நன்றாகத் தெரிந்தது. காஞ்சனாதேவியிடம் ஏற்கெனவே காதல் கொண்ட மனம் தன்னிடமும் லயித்துக் கிடப்பதால் திண்டாடுகிறது என்பது வெட்ட வெளிச்சமாகத் தெரிந்தது பெண்ணின் கூரிய புத்திக்கு. அவன் இதய வீட்டில் பாகச் சுவர் எழுப்பப்பட்டு இருபுறங்களிலும் இரு பெண்களிருப்பதை மனக்கண்ணால் பார்த்த மஞ்சளழகி பெருமகிழ்ச்சி கொண்டாள். அவனை மேற்கொண்டு சோதிப்பதில் அர்த்தமில்லை என்பதையும், சோதனை மிகக் கடுமையானால் அவன் தாங்குவதும் கஷ்டமென்பதையும் புரிந்துகொண்ட மஞ்சளழகி, "இப்படி வாருங்கள்" என்று அவனை அழைத்துக் கொண்டு மத்திய மண்டபத்தின் ஒரு கோடியில் இருந்த கதவைத் திறந்து கொண்டு உட்புறம் சென்றாள்.

அந்தக் கதவுக்குப் பின்பு ஒரு குறுகிய தாழ்வாரம் ஓடியது. அதன் கோடியில் இருந்த அறைக் கதவைத் திறந்தாள் அவள். அறை சிறியதாகத்தான் இருந்தது. ஆனால் மிக மனோகரமாயிருந்தது பார்வைக்கு. அத்தனை அழகாக வைத்திருந்தாள் அந்த அறையை மஞ்சளழகி. கோடியில் இருந்த சாளரம் நேரே ஜம்பி நதியை நோக்கிக் கொண்டிருந்தது. ஒரு மூலையிலிருந்த விளக்கின் சுடர் ஜம்பி நதியின் மெல்லிய காற்றில் அவ்விருவர் உள்ளங்களைப்போல் படபடத்துக் கொண்டிருந்தது. புதிதாக உள்ளே நுழைந்த இளையபல்லவனை அறைக் கோடிக் கூண்டிலிருந்த பஞ்சவர்ணக் கிளி கழுத்தைத் திருப்பித் திருப்பிப் பார்த்தது. அறையின் ஒரு மூலையில்

சாளரத்தை ஒட்டிப் போடப்பட்டிருந்தது ஒரு சிறு பஞ்சணை. அதன் கீழே விரிக்கப்பட்டிருந்தது பெரும் கம்பளம்.

அந்தக் கம்பளத்தைச் சுட்டிக்காட்டிய இளையபல்லவன் கேட்டான், "இளவரசிக்கு இது நடை பாவாடையோ?" என்று.

"நடை பாவாடை இத்தனை அகலமாக உள்ளே அடைக்கும்படியாக இருக்காது" என்றாள் மஞ்சளழகி.

"இது எதற்கு?"

"சேடிகள் படுக்க."

"நீ தனியாக உறங்குவதில்லையா?"

"இளவரசிகள் உறங்கமாட்டார்கள். ஆனால்..."

"ஆனால்..."

"தனியாக உட்கார்ந்திருப்பார்கள்."

"உட்கார்ந்திருப்பார்களா!"

"ஆம்" என்ற மஞ்சளழகி, "இப்படி வாருங்கள்" என்று கூறி அவனைப் பஞ்சணையிருந்த இடத்திற்கு அழைத்துச் சென்று அதில் உட்காரச் செய்தாள். "இப்பொழுது சாளரத்தின் வழியாக நோக்குங்கள்" என்றாள்.

அவள் சொற்படி நோக்கிய இளையபல்லவன் எதிரே விரிந்த காட்சியைக் கண்டு பிரமித்தான். அந்த இடத்திலிருந்து ஜம்பி நதியின் அந்தப் பகுதி மட்டுமல்ல முகத்துவாரங்கூடத் தெரிந்தது. "முகத்துவாரம் தெரிகிறதல்லவா?" என்று கேட்டாள் மஞ்சளழகி.

"தெரிகிறது" என்றான் இளையபல்லவன், எதற்காகக் கேட்கிறாள் என்பதை அறியாமல்.

பதில் சொல்லுமுன்பு மஞ்சளழகியும் அவன் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டாள். அத்துடன் சொன்னாள், "இளையபல்லவரே, எத்தனையோ பகல்கள், எத்தனையோ இரவுகள், இந்த இடத்தில் தனிமையில் உட்கார்ந்து அந்த முகத்துவாரத்தை நான் நோக்கிக் கொண்டிருப்பேன். நீங்கள் வருவீர்கள் என்று ஏங்கியிருப்பேன். இந்த இடம் எனக்கு

ஏக்கமும் அளித்தது. உங்களை ஒரு நாள் சந்திக்கலாம் என்ற ஊக்கமும் அளித்தது. விஜயசந்திரன் என்ன முயன்றாலும் உங்களை வெற்றி கொள்ள முடியாதென்பது எனக்குத் தெரியும். ஆனால் ஸ்ரீவிஜயத்தின் கொடிகளைப் பறக்கவிட்டு நீங்கள் வந்தபோது மற்றக் காவலர் ஏமாந்தார்கள். நான் மட்டும் ஏமாறவில்லை," என்று.

இதை முடித்த அவள் கடலையும் நதியையும் மீண்டும் நோக்கினாள். அவள் அழகிய நாசியிலிருந்து பெருமூச் சொன்று கிளம்பி உடலை ஒருமுறை எழுப்பித் தாழ்த்தியது. இளையபல்லவன் அடியோடு நிலை குலைந்தான். அவன் ஏக்கம், எதிர்பார்ப்பு எல்லாம் அவனை அடியோடு குழப்பி விட்டிருந்தன. அவன் இடது கரம் அவள் இடையை நாடிச் சென்று அவளை அருகில் இழுத்துக்கொண்டது. கண்கள் கண்களை நாடின. உதடுகளும் உதடுகளை நாடியிருக்கும், ஒரு விபரீதம் மட்டும் அந்தச் சமயத்தில் நேர்ந்திராவிட்டால்!



# கடல் புறா

## ௬௦. அழிவுத்திட்டம்

சாண்டில்யன்



# 60. அழிவுத் திட்டம்




சாண்டிலியன்

கடல் புறா

அத்தியாயம் 60

# அழிவுத் திட்டம்

இணைந்துவிட்ட இரு உள்ளங்களாலும் உள்ளங்கள் தூண்டிய உணர்ச்சிகளாலும், இழுபட்ட இரு ஜோடி உதடுகள் இழைவதற்கு முன்பாக எதிர்பாராத வண்ணம் ஏற்பட்ட விபரீதத்தால் மஞ்சளழகி விலகிவிட முயன்றாளானாலும் இளையபல்லவன் மட்டும் அதைப்பற்றி அதிகமாக்க் கவலைப் படாதவன்போல் இருந்த நிலையிலேயே நிலைத்ததன்றி, அவளையும் அகல முடியாதபடி தன்னிடம் இழுத்தே நிறுத்திக் கொண்டான். அந்த நிலை அவளுக்குப் பெரும் சங்கடத்தை மட்டுமின்றித் திகிலையும் அளித்ததால், அறை வாயிற்படியை நோக்கிய அவள் கண்களில் அந்தத் திகிலும் சங்கடமும் சந்தேகத்துக்கிடமின்றிச் சுடர்விட்டன. இளையபல்லவனும் வாயிற்படியை நோக்கத்தான் செய்தான். ஆனால் அவன் உள்ளத்தில் எந்தவித உணர்ச்சி இருந்தாலும் அதை அவன் முகம் லவலேசமும் காட்டவில்லை. கண்கள் சர்வ சாதாரண மாக வாயிற்படியை ஆராய்ந்தன. வாயிற்படியை அடைத்துக் கொண்டு நின்ற கோட்டை உபதலைவன் முகத்தில் மாறுபட்ட பல உணர்ச்சிகள் தோன்றித் தோன்றி மறைந்தன. வைரம் பாய்ந்த உடலையும் வைரத்தைவிடக் கடினமான பார்வையுடைய கண்களையும் படைத்த அந்த உப தலைவனுக்கு மஞ்சளழகியின் சங்கடமும் திகிலும் புரிந்தது. ஆனால் புதிதாக வந்த தூதனின் உணர்ச்சியற்ற முகத்துக்கு மட்டும் காரணம் புரியவில்லை அவனுக்கு. ஆகையால் மஞ்சளழகியின் திகிலைக் கண்டு முதலில் மகிழ்ச்சி கொண்டவன் தூதனின் துணிவைக் கண்டு பெரும் சினத்துக்கே வசப்பட்டான். இருப்பினும் திடீரெனத் தன் கண் முன்பாக எழுந்த காட்சியின் விளைவாக, சினத்தை வெளிப்படையாகச் சொல்லாக்கி உதிர்க்கும் சக்தி மட்டும்

அவனுக்கு உண்டாகவில்லை. அவன் வாயடைத்தே பல விநாடிகள் நின்றுவிட்டான்.

அப்படி அவன் நிலை குலைந்து ஸ்தம்பித்து வாயடைத்து நின்ற விநாடிகளுக்குள் உள்ள நிலைமையையும் வந்திருக்கும் உபதலைவன் திறமையையும் எடை போட்டுவிட்ட இளைய பல்லவன், அந்தத் தருவாயில் தான் நடந்துகொள்ள வேண்டிய முறை என்ன என்பதையும் ஒருவாறு முடிவு செய்துகொண்டான். கோட்டையின் உபதலைவன் எந்தவித முன்னெச்சரிக்கையின்றியும் தான் இளவரசியின் அந்தரங்க அறைக்கு வரலாமா என்பதைத் தோழிகளைக் கொண்டு அனுமதிகூடப் பெறாமலும் நாட்டு இளவரசியின் அந்தரங்க அறைக்கு வருகிறானென்றால் அவனுக்குள்ள அதிகாரம் அபரிமிதமாகவும், இளவரசிக்குள்ள அதிகாரத்தைவிட ஒரு பங்கு அதிகமாகவும் இருக்கவேண்டுமென்றும் தீர்மானித்துக் கொண்டான். மலையூர்க் கோட்டையில் மஞ்சளழகி பெயருக்குத் தலைவியே ஒழிய உண்மை அதிகாரமெல்லாம் உபதலைவனிடமே இருக்கிறதென்பதையும் இளையபல்லவன் புரிந்துகொண்டான். இத்தனையிலும் அவனுக்கு ஒரு விஷயம் மட்டும் தெள்ளென விளக்கமாயிற்று. தன்னை அழிக்க ஜெயவர்மன் எந்த ஆயுதத்தை வேண்டுமானாலும் கையாளத் தயாராயிருக்கிறானென்பதும், ஜெயவர்மன் தன்னை எதிர் பார்த்திருப்பது ஸ்ரீவிஜய நகரில் மட்டுமல்லவென்பதும், ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் எல்லா மூலைகளிலும் அவன் கரம் நீண்டு கிடக்கிறதென்பதும் வெட்ட வெளிச்சமாகத் தெரிந்தது சோழ நாட்டுப் படைத்தலைவனுக்கு.

அக்ஷயமுனை தனக்கு வெகு அருகிலிருந்தும், பருவ மெட்டிப் பல வருஷங்கள்வரை தன் மகளை ஏற்காமலும், பலவர்மனிடம் அவளை விட்டுவைத்துத் திரும்பிக்கூடப் பார்க்காமலும் இருந்துவிட்ட ஜெயவர்மனுக்குத் திடீரெனப் பெற்ற பாசம் கிளம்பிவிடக் காரணமில்லை என்றும், தன்னை எதிர்க்கவும் தன்னைப் பிடிக்கவும் மஞ்சளழகி ஒரு சாதன மாகையாலேயே அவளை அவன் ஏற்றுக்கொண்டிருக்கிறா

னென்றும் தெரிந்து கொண்டான் இளையபல்லவன். ஜெயவர்மன் அக்ஷயமுனைக்கு விஜயம் செய்தது, பலவர்மன் தன்னிடம் சிக்கியதைப் பொருட்படுத்தாது மஞ்சளழகியை ஏற்றது, அவளைக் கொண்டே மலையூர்க் கோட்டையில் பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்தது, ஆகிய ஒவ்வொரு காரியத்திலும் தன் அழிவுக்கான திட்டங்கள் புதைந்து கிடப்பதைப் புரிந்துகொண்ட இளையபல்லவன், பலவர்ம னையும் கங்கதேவனையும் விடப் பலவிதங்களிலும் உயர்ந்த ஒரு பெரும் எதிரியைத் தான் சமாளிக்கவேண்டி இருப்பதை உணர்ந்துகொண்டான். தன் கோரிக்கை ஈடேற எதையும் செய்யக்கூடியவனும், மகளைக்கூட உபயோகப்படுத்தக் கூடியவனுமான ஜெயவர்மன் இதயம் மிகக் கடினமும் குரோதமும் வாய்ந்ததாயிருக்க வேண்டும் என்றும் முடிவு செய்துகொண்டான். அத்தகைய ஜெயவர்மனால் பரிபாலிக்கப்பட்ட ஸ்ரீவிஜயத் தலைநகரையும் சாம்ராஜ்யத் தையும் உடைப்பதென்றால் அது சாதாரணமாக நடக்கக் கூடிய காரியமல்ல வென்பதும் திட்டவட்டமாகத் தெரிந்து விட்டது படைத்தலைவனுக்கு. தன் அறிவைச் சரியாகச் சாணை பிடித்துக் கொண்டாலொழிய ஜெயவர்மனை வெற்றி கொள்வது நடவாத காரியமென்றும் தனக்குள் சொல்லிக் கொண்டான் படைத்தலைவன்.

இப்படி ஜெயவர்மனைப் பற்றியும், ஸ்ரீவிஜயத்தைப் பற்றியும் அதில் மஞ்சளழகியின் இடத்தைப்பற்றியும் எடை போட்ட இளையபல்லவன், தான் அந்தச் சமயத்தில் இருந்த நிலையை எண்ணிப் பார்த்ததும் தன் கதி உண்மையில் அதோ கதியாயிருந்ததை உணர்ந்துகொண்டான். வாயிற்படியில் நிற்கும் உபதலைவன் மட்டும் யாரையும் எதையும் கேட்காமல் தங்களிருவரையும் காவலில் வைத்துக் கோட்டை மீதுள்ள பாறைகளையும் தீப்பந்தங்களையும் யந்திரங்களைக் கொண்டு தனது மரக்கலங்கள் மீது வீசினால் தன் வாழ்வின் கடைசிப் பகுதி அந்தக் கோட்டையினுள்ளேயே முடிந்துவிடும் என்று அறிந்துகொண்டான். ஆகவே அத்தனை தூரத்துக்கு உப

தலைவன் வல்லவனா என்று நிர்ணயிக்கத் தன் ஆராய்ச்சிக் கண்களை அவன் முகத்தில் லயிக்க விட்டான். உபதலைவன் முகத்தில் சினம் நிரம்பிக் கிடந்ததால் உள்ளூரச் சிறிது சாந்தி யும் அடைந்தான். சினமிருக்கிற இடத்தில் நிதானக் குறைவு இருக்குமென்பதை அறிந்திருந்த இளையபல்லவன், இருந்த இடத்தை விட்டு எழுந்திராமலும் இருந்த நிலையைச் சீர் படுத்திக் கொள்ளாமலும் மஞ்சளழகியின் இடையிலிருந்த இடக்கரத்தை எடுக்காமல் ஓரளவு வெட்கத்தை விட்டும், உப தலைவனை நோக்கி, "யார் நீ?" என்ற அதிகாரத் தோரணை யில் கேட்டான்.

இந்தக் கேள்வியைக் கேட்டதும் உபதலைவன் ஓரளவு அதிர்ச்சியடைந்தான் என்பதை அவன் முகம் காட்டியது. அந்த அதிர்ச்சி அடுத்த விநாடி பெரும் கோபத்துக்கு இடம் கொடுத்ததைக் கண்கள் விளக்கின. இளையபல்லவன் கேள்வி மஞ்சளழகிக்குப் பயத்தை அளித்தது. இளையபல்லவனிடம் அவளுக்கு அபாரமான நம்பிக்கையிருந்தாலும், அந்தச் சந்தர்ப்பத்தில் அவன் கேட்ட கேள்வி கெட்டிக்காரத்தனத் திற்கு அடையாளமாக அவளுக்குப் புலப்படவில்லை. ஆகவே ஏதோ சொல்ல வேண்டுமென்பதற்காக, "அவர்... கோட்டை யின் உபதலைவர்" என்று தட்டுத் தடுமாறிச் சொன்னாள், உபதலைவனைச் சுட்டிக்காட்டி.

இளையபல்லவன் கேட்ட கேள்விக்கு மஞ்சளழகி பதில் சொல்லிவிட்டதால் உபதலைவனுக்குப் பதில் சொல்லத் தேவையில்லாது போகவே அவன் உஷ்ணம் கொட்டிய குரலில் கேட்டான், "நீ யார்?" என்று.

இளையபல்லவன் முகத்தில் வருத்தக் குறி படர்ந்தது. "உனக்கு வயது அதிகமில்லை...?" என்று வருத்தம் குரலில் தொனிக்கவும் இழுத்தான்.

கோட்டைக்குத் தூதனாக வந்தவன் தகாத காரியத்தில் திளைத்ததன்றிச் சம்பந்தமில்லாமல் தைரியத்துடன் பேச்சும் கொடுத்தது மிக வியப்பையும் குழப்பத்தையும் உபதலைவ

னுக்கு அளிக்கவே, “என் வயதைப் பற்றி என்ன இப்பொழுது?” என்று சீறினான்.

“வாலிபம்” என்று முணுமுணுத்தான் பதிலுக்குப் படைத் தலைவன்.

“அதனாலென்ன?” சினம் பெரிதும் ஓங்கி நின்றது உபதலைவன் குரலில்.

“இளங்கன்று பயமறியாது” என்றொரு தமிழ்ப் பழமொழி யையும் வீசினான் படைத்தலைவன்.

“என்னைச் சொல்கிறாயா?” என்று கேட்டான் உபதலைவன்.

“மீண்டும் வாலிபம் தெரிகிறது.”

“என்ன தெரிகிறது?”

“பயமின்மை.”

“எதற்குப் பயப்படவேண்டும் நான்?”

“என்னை மரியாதையின்றி அழைத்த யாரும் இதுவரை உயிர் வாழ்ந்ததில்லை” என்று சர்வ சாதாரணமாகச் சொன்ன இளையபல்லவன் மஞ்சளழகியின் இடையிலிருந்த கையை எடுத்துக்கொண்டு அவளுக்குச் சற்று விடுதலையளித்து, பஞ்சணையில் லேசாகச் சாய்ந்தும் கொண்டான்.

தன்னைப் பார்த்ததும் அஞ்சவோ அல்லது கத்தியை உருவி எதிர்க்கவோ வேண்டிய தூதன் சொந்தப் படுக்கையறை யிலிருப்பதுபோல் பஞ்சணையில் சாய்ந்துகொண்டதைக் கண்டு வியப்பும் எய்திய உபதலைவன், “தங்களை மரியாதை யுடன் அழைக்க வேண்டுமாக்கும்?” என்று ஏளனத்துடன் வினவினான்.

“உயிரில் ஆசையுள்ளவர்கள் அப்படித்தான் அழைப் பார்கள்” என்றான் இளையபல்லவன்.

“இல்லாவிட்டால் கொன்று விடுவீர்களாக்கும்?” இந்தச் சமயமும் ஏளனம் தொனித்தது உபதலைவன் பதிலில்.

“அந்த விபத்து பலருக்கு நேர்ந்திருக்கிறது.”

"எனக்கு நேராது."

"ஏன்? நீ மட்டும் சாகாவரம் பெற்றிருக்கிறாயா?"

"நான் பிழைக்க அந்த வரம் தேவையில்லை."

"வேறு வழி இருக்கிறதாக்கும்?"

"ஆம். மத்திய மண்டபத்தில் ஆறு வீரர்களை நிறுத்தி யிருக்கிறேன், கூப்பிட்டால் ஓடி வர."

"கூப்பிடவேண்டுமே."

"ஏன் கூப்பிடாமலென்ன?"

"கூப்பிட உயிர் வேண்டாமா?"

உபதலைவன் இளையபல்லவனைப் பிரமிப்புடன் நோக்கினான். "ஏன் உயிர் அத்தனை துரிதமாகப் போய் விடுமா?" என்று வினவினான்.

"அதில் சந்தேகமே வேண்டாம். உன் உதடு அசையுமுன்பு போய்விடும்" என்று உறுதி கூறினான் இளையபல்லவன்.

'இவன் என்ன யமனா இஷ்டப்பட்ட விநாடி உயிரை எடுத்துவிட?' என்று உள்ளூரக் கேட்டுக்கொண்ட உப தலைவன் கண்களில் அவநம்பிக்கை உதயமாயிற்று. அதைக் கண்ட இளையபல்லவன் சொன்னான் மிகுந்த மரியாதை யுடன், "மலையூர் உபதலைவரே! நான் சொல்வதில் ஐயம் வேண்டாம். சொன்னபடி செய்யக்கூடியவன் நான் என்பதை ஸ்ரீவிஜயம் அறியும். ஸ்ரீவிஜயமென்ன, இந்தக் கிழக்குக் கடற்பகுதியே அறியும். என் இடையிலிருக்கிற குறுவாளைக் கவனியுங்கள். நினைத்த விநாடியில் அதை உம்மீது மின்னல் வேகத்தில் எறிந்துவிட என்னால் முடியும். இதை நான் பயின்ற இடம் அப்படி" என்று.

இளையபல்லவன் குரலிலிருந்த உறுதி சற்று அசர வைத்தது கோட்டைத்தலைவனை. "யாரிடம் பயின்றீர்?" என்று வினவினான் ஏதோ கேட்க வேண்டுமென்பதற்காக.

"அமீரிடம்." நிதானமாகச் சொன்னான் இளைய பல்லவன்.

"யார் இளையபல்லவனின் உபதலைவனிடமா?" அதிர்ச்சியும் ஆச்சரியமும் இருந்தது உபதலைவனின் குரலில்.

"ஆம்" என்றான் இளையபல்லவன்.

"அப்படியானால் தங்கள் பெயர்?"

"இளையபல்லவன்?" மிகுந்த நிதானத்துடனும் அலட்சியத் துடனும் இந்தப் பதிலைச் சொன்னான் சோழர் படைத் தலைவன். இந்தப் பதிலைக் கேட்ட மஞ்சளழகிக்கு மட்டு மின்றி உபதலைவனுக்கும் அந்த அறையே சுழல்வது போல் இருந்தது. அந்தப் பதில் பல விஷயங்களை விளங்கவைத்தன உபதலைவனுக்கு. தூதனாக வந்தவனிடம் இளவரசி இழைந்ததன் காரணத்தைச் சந்தேகமறப் புரிந்துகொண்டான் உபதலைவன். தான் திடீரென அந்த இருவர் நிலையையும் கண்டுபிடித்த பின்பும் தூதன் சரிவர நடந்துகொள்ளாதது முதலில் பிரமிப்பாயிருந்தது உபதலைவனுக்கு. இந்தப் பதில் அந்த பிரமிப்பை அடியோடு உடைத்து எறிந்து விட்டது. 'என்ன முட்டாள்தனம்! இளையபல்லவன் ஒருவனைத் தவிர இத்தனை துணிவு வேறு யாருக்கு இருக்கும்? இதை நான் புரிந்துகொள்ளவில்லையே' என்று தன்னைத் தானே நொந்து கொண்டான் உபதலைவன்.

மஞ்சளழகிக்கு உலகமே சுழன்றது. அவள் சித்தம் குழம்பியது. மிதமிஞ்சிய அதிர்ச்சியால் அவள் பஞ்சணையில் குப்புற விழுந்தாள். அவளைத் தாங்கி மடியில் கிடத்திக் கொண்ட இளையபல்லவன், "உபதலைவரே! கொஞ்சம் நீர் கொண்டு வாரும். இளவரசி மயக்கமடைந்து விட்டாள்" என்றான்.

உபதலைவன் மயங்கினான். "மயங்க வேண்டாம் உப தலைவரே! என் வாளின் மேல் ஆணையாகச் சொல்கிறேன். நான் உமது அனுமதியின்றி இந்த இடத்தை விட்டு அகலுவ தில்லை. அகன்றும் பயனில்லை. என் வேஷம் வெளுத்து விட்டது. ஆகவே செல்லும், முதலில் இளவரசியைக் கவனிப்போம்" என்றான் படைத்தலைவன்.

படைத்தலைவன் வார்த்தைகளில், அவற்றின் தொனியில் அதை உச்சரித்தவன் தோற்றத்தில், ஏதோ மந்திரமிருந்திருக்க வேண்டும். அதைக் கேட்டதும் விடுவிடு என்று சென்ற உபதலைவன் ஒரு பொற்கிண்ணத்தில் நீர் கொணர்ந்தான். அதை மஞ்சளழகியின் முகத்தில் தெளித்து அவள் மயக்கத்தை நீக்கிய இளையபல்லவன் அவளைப் பஞ்சணையில் படுக்க வைத்தான். அவள் படுக்க மறுத்து எழுந்து உட்கார முற்பட்டு, "உபதலைவரே! இளவரசி ஆணையிடுகிறாள். இவரை நீங்கள் தொடவும் கூடாது. தொட்டால் இங்குள்ள அனைவரையும்... அனைவரையும்..." என்று ஏதோ சொல்ல முற்பட்டு முடியாமல் திணறினாள். அவள் விழிகள் உபதலைவனை நோக்கிச் சீறின. இளையபல்லவன் உபதலைவனை நோக்கி, "இளவரசி என்னிடமுள்ள அன்பால் ஏதோ சொல்கிறார்கள். நீங்கள் அதைப் பொருட்படுத்த வேண்டாம்" என்று கூறி விட்டு, "படு மஞ்சளழகி! நீ பெரிதும் அதிர்ச்சியுற்றிருக்கிறாய்" என்று கூறி அவளைப் பிடித்துப் படுக்க வைத்தான். பிறகு மீண்டும் உபதலைவனை நோக்கிக் கேட்டான், "இப்பொழுது என்னை என்ன செய்ய உத்தேசம்?" என்று.

"சிறை செய்ய உத்தேசம்." தடையின்றி வந்தது உபதலைவனின் பதில்.

"அதில் ஒரு சங்கடமிருக்கிறது" என்றான் இளையபல்லவன்.

"என்ன சங்கடம்?"

"சங்கடத்தை விளக்குமுன்பு ஒரு மர்மத்தை விளக்க வேண்டியிருக்கிறது."

"என்ன மர்மம்?"

"வெற்றியடைந்தது விஜயசந்திரனல்ல."

இந்தப் பதில் உபதலைவனை வியப்புக்குள்ளாக்கவில்லை. பஞ்சணையில் அமர்ந்திருந்தவன் இளையபல்லவன் என்பதை அறிந்த உடனேயே ஏதோ சூது நடக்கிறதென்று ஊகித்துக்

கொண்டான் உபதலைவன். ஆகவே சர்வ சாதாரணமாகச் சொன்னான், "அது தெரியும்" என்று.

"தெரிந்தது ஒரு விதத்தில் நல்லது. ஆகவே விஜயசந்திரன் நிலையையும் நீங்கள் தெரிந்து கொள்வது நல்லது" என்றான் இளையபல்லவன்.

"கடற்படைத் தலைவருக்கு-" சந்தேகத்துடன் இழுத்தான் உபதலைவன்.

"ஆபத்திருக்கிறது. இங்கிருந்து நான் ஒரு ஜாமத்திற்குள் திரும்பாவிட்டால் விஜயசந்திரனைத் தூக்கிலிட அமீருக்கும் கண்டியத்தேவனுக்கும் உத்தரவிட்டிருக்கிறேன்" என்று கூறினான் படைத்தலைவன்.

கடற்பகுதிகளில் இளையபல்லவனுக்கு அடுத்தபடி பிரசித்தமான அந்த இரண்டு பெயர்களையும் உபதலைவன் கேட்டதும் சிந்தனைக்குள்ளானான். ஆனால் அந்தச் சிந்தனை சில விநாடிகளே நிலைத்தது. இளையபல்லவன் திரும்பாவிடில் விஜயசந்திரனின் அழிவு நிச்சயமென்பதை உணர்ந்து கொண்ட உபதலைவன் கடைசியில் சொன்னான், "ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் நலனைவிட நான் ஒரு தனி மனிதன் நலனை அதிகமாக மதிப்பிட முடியாது" என்று.

"என்ன சொன்னீர்?"

"விஜயசந்திரன் உயிர் அத்தனை முக்கியமல்ல."

"மிகத் திறமைசாலியான கடற்படைத் தளபதி."

"ஜம்பிப் போர் முடிவு திறமையைக் குறிக்கவில்லை."

"போரில் வெற்றியும் தோல்வியும் சகஜம்."

"அந்த சகஜம் ஸ்ரீவிஜயத்துக்குப் பயனளிக்காது."

"அப்படியானால் என்ன செய்ய உத்தேசம்?"

"உங்களைச் சிறை செய்ய உத்தேசம்," என்று திட்டமாகக் கூறினான் உபதலைவன்.

"பின்பு?" இளையபல்லவன் கேள்வி தாமதமின்றித் துரிதமாக எழுந்தது.

"உங்கள் மரக்கலங்களை அழித்துவிட உத்தேசம்."

"எப்படி?"

"கோட்டைத் தளத்திலுள்ள யந்திரங்களைக் கொண்டு இளவரசியார் அவற்றை நன்றாக அமைத்திருக்கிறார்கள்." இதைச் சொன்ன உபதலைவன் குரூரச் சிரிப்புச் சிரித்தான்.

இளையபல்லவன் முகம் உணர்ச்சியற்றுக் கிடந்தது. "விவேகமான வழி அதல்ல" என்று கூறினான்.

"எது விவேகம்? எது விவேகமல்ல?" என்று கேட்டான் உபதலைவன் கொடுமை நிறைந்த குரலில்.

"என்னைச் சிறை செய்வது விவேகம். ஆனால் மரக் கலங்களை அழிப்பது விவேகமல்ல."

"ஏன்?"

"மரக்கலங்களில் ஸ்ரீவிஜயத்தின் திறமை மிக்க மாலுமிகள் இருக்கிறார்கள். திறமையான படைத்தலைவன் இருக்கிறான். மரக்கலங்களில் இரண்டைத் தவிர மற்றவை இணையற்ற போர்க்கலங்கள். அவற்றை அழிப்பது ஸ்ரீவிஜயத்துக்குக் கிடைக்கும் பெரும் சொத்தை அழிப்பதாகும். ஸ்ரீவிஜயத்தை எந்த எதிரியிடம் இருந்தும் காக்கத் தக்க பெரும் கடற் படையை அழிப்பதாகும். இதை ஜெயவர்மன் விரும்ப மாட்டார். இந்தப் படை உமது கையிலிருக்கிறது. அதை அப்படியே கைப்பற்றுவது விவேகம்."

"எப்படிக் கைப்பற்ற முடியும்?"

"ஏன் முடியாது? என்னைச் சிறை செய்து விட்டதையும், மரக்கலங்களை அழிக்க யந்திர சாதனங்களிருப்பதையும் என் உபதலைவர்களுக்குத் தெரியப்படுத்தினால் உடனே சரணடைந்து விடுவார்கள். மரக்கலங்களைக் காப்பாற்ற அல்லாவிட்டாலும் என் உயிரைக் காக்கவாவது சரணடை வார்கள்."

இளையபல்லவன் சொற்கள் அனைத்தும் உண்மை யென்பது உபதலைவனுக்குத் தெரிந்திருந்தது. இளைய

பல்லவனுடைய உபதலைவர்களும் மாலுமிகளும் அவனுக்காகத் தங்கள் உயிரையும் அர்ப்பணிக்கும் அன்புடையவர்கள் என்பதை அநேகரைப் போல அவனும் அறிந்திருந்தான். அது மட்டுமல்ல, இளையபல்லவன் சிறைப் பட்டதைச் சுட்டிக் காட்டிக் கடல் புறாவையும் மற்ற மரக் கலங்களையும் கைப்பற்றினால் தன் பதவி ஸ்ரீவிஜயத்தில் எத்தனை உயரும் என்பதையும் எண்ணிப் பார்த்தான். அவற்றை அழிப்பதைவிட கைப்பற்றும் ஆசை விரிந்தது அவன் உள்ளத்தில். அந்த ஆசைக்குத் தூபம் போட்டான் இளையபல்லவன். அந்தத் தூபத்தைத் தீபமாகவும் ஆக்கி ஜொலிக்க வைத்தான். அதற்காக உபதலைவனின் வலையில் தன்னைத் தானே அழுத்திக்கொண்டு தன் அழிவு மார்க்கத்தையும் உபதேசித்தான் எதிரிக்கு! உபதலைவன் மெள்ள அந்தத் திட்டத்துக்கு இணங்கினான். இளைய பல்லவன் திட்டம் அவன் வாழ்வுக்கே உலை என்று முடிவு செய்த மஞ்சளழகியின் கண்களில் நீர் பெருக்கெடுத்து ஓடியது. அதைக்கூடப் பொருட்படுத்தாத இளையபல்லவன் கோட்டை உபதலைவனுக்கு மரக்கலங்களைப் பிடிக்கும் மந்திரத்தை ஓதினான். மந்திரத்தைக் கைக்கொண்ட உபதலைவன் அடுத்த சில விநாடிகளில் தன் காவலரை அந்த அறைக்குக் காவல் வைத்துத் தானே கிளம்பினான் ஜம்பி நதித்துறையை நோக்கி. அவன் சென்றபின் அறைக் கதவைச் சாத்தினான் இளையபல்லவன். சாத்தப்பட்டது அவன் வாழ்வின் கதவு என்று தீர்மானித்த மஞ்சளழகி, காதலும் சோகமும் கலந்த விம்மல்களை வெளியிட்டாள், பஞ்சணைத் தலையணையில் தன் அஞ்சுக முகத்தைப் புதைத்துக் கொண்டு.

அத்தியாயம் 61

# செங்கதிர் வீழ்ச்சி

•

கைப்பற்றுவதற்கரிதெனக் கடலோடிகள் அனைவரும் ஒப்புக்கொண்ட கடல் புறாவையும் அதன் துணை மரக் கலங்களையும் கைப்பற்ற மனக்கோட்டை கட்டிக்கொண்டு மலையூர்க் கோட்டையின் உபதலைவன் அந்த அறையை விட்டு அகன்றதும், மஞ்சளழகியின் மனக்கோட்டை பலவித உணர்ச்சி இடிகளால் தாக்கப்பட்டுத் தவிடு பொடியாகும் நிலைக்கு வந்ததன் விளைவாக, அவள் தன் அஞ்சுக முகத்தைப் பஞ்சணைத் தலையணையில் புதைத்துக்கொண்டு விம்மி அழுதாளென்றால், அதற்குக் காரணம் இருக்கத்தான் செய்தது. தனது மரக்கலங்களைப் பிடிக்க லவலேசமும் அப்பழுக்கில்லாத அத்தனை சிறந்த வழியை உபதலைவ னுக்குக் காட்டிக் கொடுத்திருந்தான் இளையபல்லவன். படிப்படியாக எப்படி நடந்து கொண்டால் கடல்புறாவும் மற்ற மரக்கலங்களும் மலையூர்க் கோட்டை உபதலைவன் கையில் விழும் என்பதை மிகத் தெளிவாக இளையபல்லவன் எடுத்துக் காட்டியதைக் காதில் வாங்க வாங்க, சுய அழிவுக்குப் படைத்தலைவன் வகுத்த திட்டத்தை விடத் திறமையான ஒரு திட்டத்தை வேறு யாராலும், வகுக்கமுடியாதென்பதை மஞ்சளழகி புரிந்துகொண்டாள். அவன் திட்டத்தை விவரிக்கத் தொடங்கி உரையாடலை வளர்த்துக்கொண்டு போன ஒவ்வொரு விநாடியும் விவரிக்க இயலாத மன வேதனையை அளித்தது அக்ஷயமுனைக் கோட்டை அழகிக்கு. இளையபல்லவன் அந்தச் சுய அழிவுத் திட்டத்தை மிகுந்த நிதானத்துடனும், தான் போருக்கு அனுப்ப இருக்கும் தனது உபதலைவனொருவனுக்குக் கட்டளையிடும் தோரணையிலும், மிக விளக்கமாக மலையூர்க் கோட்டையின் உபதலைவனுக்கு எடுத்துரைக்கத் தொடங்கி, "உபதலைவரே! மிகக் கவனமாகக்

கேளுங்கள். நான் சொல்லும் முறையில் சிறிது நழுவினாலும் உமது உயிர் உமது உடலில் நிலைக்காது என்பதை நினைவில் வைத்துக்கொள்ளும். ஏனென்றால் நீர் சந்திக்கப் போகும் எனது உபதலைவர்கள் சாமான்னியப்பட்டவர்களல்ல. பெரிய அறிவாளிகள். அவர்களை அச்சுறுத்துவதால் விபரீதம் ஏற்படும். நீர் காட்டக்கூடிய நிதானத்திலும், உள்ள நிலையைச் சாவதானமாக விளக்கி உமக்கிருக்கும் சாமர்த்தியத்தாலும் இந்தப் பெரும் காரியத்தை நீர் சாதிக்க முடியும்" என்று கூறி உபதலைவனைச் சற்று உற்று நோக்கினான்.

கடல்புறாவையும் மற்ற மரக்கலங்களையும் பிடித்துவிடக் கனவுலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்த மலையூர்க் கோட்டையின் உபதலைவன் பதில் ஏதும் வாய் திறந்து சொல்லாமல், இளையபல்லவன் எச்சரிக்கையைத் தான் உணர்ந்து கொண்டதற்கறிகுறியாகத் தலையை மட்டும் அசைத்தான். இளையபல்லவன் மேலும் தொடர்ந்து, "அமீரும் கண்டியத் தேவனும் பாலிக்குள்ளனும்கூட பல போர்களைக் கண்டவர்கள். போர்களை மட்டுமல்ல, இதைவிடப் பெரும் சிக்கலான நிலைமையையும் சமாளித்தவர்கள். ஆகவே, நீர் சொல்லும் ஒவ்வொரு விஷயமும் அவர்கள் நம்பத் தகுந்ததாக அமைய வேண்டும். உமது குரல், தோரணை எல்லாவற்றிலுமே நம்பிக்கை அவர்களுக்கு ஏற்படவேண்டும்; ஒருவேளை அவர்கள் அவநம்பிக்கை கொண்டால்..." என்று பேச்சைச் சிறிது நிறுத்தினான்.

அதுவரை நிதானமாயிருந்த உபதலைவன் வதனத்தில் அச்சத்தின் சாயை சிறிது படர்ந்தது. அவநம்பிக்கை கொண்டால் தன்னை அமீரும் கண்டியத்தேவனும் என்ன செய்வார்கள் என்பதை அறிந்திருந்ததால், அச்சம் சிறிது குரலிலும் தொனிக்கக் கேட்டான் உபதலைவன், "அவநம்பிக்கை கொண்டால்?" என்று.

அந்த அச்சத்தைக் கவனித்து உள்ளூர மகிழ்ந்த இளைய பல்லவன், "உமது நிலை விரும்பத்தக்கதாக இருக்காது" என்று சுட்டிக் காட்டினான்.

"அது தெரியும் எனக்கு" என்ற உபதலைவன் குரலில் பீதி இருந்தது.

"ஆகவே அவர்கள் அவநம்பிக்கைக்குச் சிறிதும் இடம் தராத முறையில் அவர்களை நீர் சந்திக்கவேண்டும். அதற்கு வழி இருக்கிறது" என்று கூறினான் இளையபல்லவன், உபதலைவனுக்குத் தைரியத்தை ஊட்ட.

"என்ன வழி?" என்று கேட்ட உபதலைவன் குரலில் அச்சத்தின் தொனி இருந்தது.

"இந்தக் கோட்டையின் உபதலைவன் என்ற முறையில் நீர் அவர்களைச் சந்திக்கக் கூடாது" என்றான் இளைய பல்லவன்.

உபதலைவனுக்கு இளையபல்லவன் சொற்களில் இருந்த சூட்சுமம் புரியவில்லையாகையால் அவன் குழப்பத்துடன் படைத்தலைவனை நோக்கினான். "வேறு எந்த முறையில் சந்திப்பது?" என்று வினவினான் குழப்பம் குரலிலும் மண்டிக் கிடக்க.

இளையபல்லவன் பதில் திடமாக வந்தது. "எனது நண்பன் என்ற முறையில்" என்று விளக்கிய இளையபல்லவன் உபதலைவன் முகத்தை ஆராய்ந்தான். உபதலைவன் முகத்தில் அந்த விளக்கம் எத்தகைய தெளிவையும் ஏற்படுத்தியதாகத் தெரியவில்லை. "உங்கள் நண்பன் என்ற முறையிலா!" என்ற உபதலைவன் கேள்வியில் குழப்பமும் வியப்பும் கலந்து ஒலித்தன.

இளையபல்லவன் சாய்ந்த நிலையை விட்டுப் பஞ்சணையில் எழுந்து உட்கார்ந்து கொண்டான். "வேறு முறையில் கடல் புறாவுக்குச் சென்றால் நீங்கள் உயிருடன் திரும்ப முடியுமென்று நினைக்கிறீர்களா?" என்று வெறுப்பு குரலில் மண்ட வினவவும் செய்தான்.

"நீங்கள்தானே இங்குள்ள நிலைமையை அமீருக்கும் கண்டியத்தேவனுக்கும் விளக்கச் சொன்னீர்கள்?" என்று சற்றுக் கோபத்துடன் கேட்டான் உபதலைவன்.

"ஆம். சொன்னேன்." இளையபல்லவன் ஒப்புதலில் கூட ஒரு வெறுப்பு இருந்தது, உபதலைவனின் முட்டாள்தனத்தை நினைத்ததால்.

"நீங்கள் இங்கு சிறைப்பட்டிருப்பதையும், மரக்கலங்களை அழித்துவிட இங்குள்ள யந்திர வசதிகளைப் பற்றியும் அவர்களிடம் எடுத்துரைக்கச் சொல்லவில்லையா?"

"சொன்னேன்."

"இவற்றையெல்லாம் சொன்னால் மட்டும் அமீரும் கண்டியத்தேவனும் காது குளிரக் கேட்டுக் கொண்டிருப்பார்களாக்கும்?" இதைக்கேட்ட உபதலைவன் சொற்களில் இகழ்ச்சி ஒலி நன்றாகத் தெரிந்தது.

அந்த இகழ்ச்சியை லவலேசமும் லட்சியம் செய்யாத இளையபல்லவன் பதில் கூறினான், "அவர்கள் கேட்பதும் கேட்காததும் சொல்பவர் யார் என்பதைப் பொறுத்தது" என்று.

இளையபல்லவனின் இந்தப் பதில், உள்ள குழப்பத்தை உயர்த்தவே, உபதலைவன் கேட்டான், "யார் சொன்னால் கேட்பார்கள் உங்கள் உபதலைவர்கள்?" என்று.

இளையபல்லவன் திட்டத்தைத் தெளிவாக்க விரும்பி விளக்க முற்பட்டான். "உபதலைவரே! உமது அறிவை நன்றாகத் தீட்டிக்கொள்ளும். என் நலனில் அக்கறையுள்ள யார் சொல்வதையும் எனது உபதலைவர்கள் சிரம் வணங்கிக் கேட்பார்கள். ஆகவே நீர் எனது நண்பன் என்பதைச் சொல்லால் மட்டுமின்றிச் செயலாலும் வற்புறுத்த வேண்டும். நீர் எனது விரோதி என்ற முறையில் அமீரையும், கண்டியத் தேவனையும் சந்தித்து நான் இங்கு சிறைப்பட்டிருப்பதைக் கூறினால் அவர்கள் உம்மை மட்டுமின்றி விஜயசந்திரனையும் இரவோடு இரவாகக் கடல் புறாவின் தளத்திலேயே தூக்கி லிட்டு, கடல் புறாவிலும் மற்ற மரக்கலங்களிலும் உள்ள மாலுமிகளை இந்தக் கோட்டைக்கு அனுப்பி, இதையும் இங்குள்ள யந்திர வசதிகளையும் கைப்பற்றி விடுவார்கள்.

விஜயசந்திரன் எனது மரக்கலங்களைப் பிடித்துவிட்டதாக எண்ணி மலையூர் நகர மக்கள் பெரும் கோலாகலத்தில் இருப்பதால் வரும் மாலுமிகளை எதிரிகளென்று கருத மாட்டார்கள். கோட்டையின் வீரர் பலரும் இந்தக் கோலாகலத்தில் காலை முதலே ஈடுபட்டிருப்பதும் எனது உபதலைவர்களுக்குத் தெரியும். ஆகவே இதைப் பிடிப்பது அவர்களுக்கு ஒரு பொருட்டல்ல. நகரத்தின் அசிரத்தை அவர்களுக்கு அனுகூலம்" என்று சுட்டிக் காட்டினான் இளையபல்லவன்.

உபதலைவனுக்குப் பெரும் அதிர்ச்சி உள்ளத்தில் ஏற்பட்டது. கோட்டை வீரர்கள் வெற்றி விழாவில் கலந்து கொள்வதற்குத் தானே அனுமதியளித்ததை எண்ணிப் பார்த்துக் கேவலம் இருநூறு வீரர்களே உள்ள கோட்டையைக் கடல்புறாவின் கடற்படையிலுள்ள சுமார் ஆயிரம் மாலுமிகள் கைப்பற்றுவது ஒரு பெரும் காரியமல்ல என்பதை உணர்ந்து கொண்டதால் பெரும் அச்சத்தை அடைந்தான் உபதலைவன். அந்த அச்சத்தைத் தவிர்க்கக் கூறினான் இளையபல்லவன் உபதலைவனை நோக்கி, "நிலைமை உமக்கு விரோதமாகத் தானிருக்கிறது உபதலைவரே! ஆனால் இந்த நிலைமையை உமக்கு அனுகூலமாக நீர் மாற்றிக் கொள்ள வழி இருக்கிறது. இதைவிட அபாயமான கட்டங்களிலிருந்து நான் மீண்டிருக்கிறேன்" என்று.

ஆதரவு தரும் படைத்தலைவன் சொற்கள் உபதலைவன் அச்சத்துக்கு அமுதமெனச் சாந்தியளித்தன. "வழியைச் சொல்லுங்கள்" என்ற உபதலைவன் சொற்களில் பணிவு இருந்தது.

"நான் ஏற்கெனவே சொன்னதுதான் வழி. எனது நண்பன் என்ற முறையில் கடல் புறாவுக்குச் செல்லுங்கள். கடல் புறாவில் உங்களை யாரும் அறியமாட்டார்களே?" என்று வினவினான் இளையபல்லவன்.

"ஸ்ரீவிஜயத்தின் கடற்படைத் தலைவர் அறிவார்" என்றான் உபதலைவன்.

"யார் விஜயசந்திரனா?"

"ஆம்."

"அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவர் காவலில் வைக்கப்பட்டிருக்கிறார். கடல் புறாவுக்குச் சென்றதும் அமீரையும் கண்டியத்தேவரையும் காண விரும்புவதாகச் சொல்லுங்கள். மாலுமிகள் உங்களை அவர்களிடம் அழைத்துச் செல்வார்கள். அவர்களைச் சந்தித்ததும் தனிமையில் பேசவேண்டுமென்று கூறுங்கள். நீங்கள் எனது நண்பனென்பதையும் எடுத்துச் சொல்லுங்கள்."

"அவர்கள் நம்பாவிட்டால்?" என்று உபதலைவன் பழைய கேள்வியைப் பயத்துடன் மீண்டும் திருப்பினான்.

பதிலுக்கு இளையபல்லவன் தனது ஆள்காட்டி விரலில் இருந்த பெரும் சிவப்புக்கல் மோதிரமொன்றை எடுத்து உபதலைவனிடம் கொடுத்து, "இதைக் காட்டுங்கள்" என்றான்.

அந்த மோதிரத்தைக் கையில் வாங்கிக்கொண்டு விளக்கொளியில் அது படரவிட்ட பெரும் செங்கதிர்களை நோக்கிய உபதலைவன் முகத்தில் பெரும் திருப்தி நிலவியது. அந்தத் திருப்தியை அதிகரிக்கும் குரலில் பேசிய இளைய பல்லவன், "உபதலைவரே! இதைக் காட்டி நீர் எதைச் சொன்னாலும் எனது உபதலைவர்கள் நம்புவார்கள். ஆனால் எதைச் சொன்னால் அவர்கள் நம்பிக்கை உறுதியாகும் என்பதையும் நீர் தீர்மானித்துக் கொள்ளவேண்டும். நீர் எனது நண்பர் என்பதற்கு இந்த மோதிரம் அத்தாட்சி. ஆனால் அடுத்து என்ன சொல்லப் போகிறீர்! என் நிலைமையை எப்படி அறிவிக்கப் போகிறீர்? நான் அளிக்கும் இந்தச் சந்தர்ப்பத்தை உமக்கு அனுகூலமாக எப்படி ஆக்கிக்கொள்ளப் போகிறீர்?" என்று வினவினான்.

உபதலைவனுக்கு என்ன சொல்வதென்று விளங்க வில்லை. திருதிருவென விழித்தான். சொல்ல வேண்டிய விஷயத்தையும் இளையபல்லவனே சொல்லிக் கொடுத்தான். "உபதலைவரே! நான் இந்தக் கோட்டையில் தலைவனால்

சிறைப்படுத்தப்பட்டுவிட்டேன் என்று வைத்துக்கொள்ளும். நீர் எனது நண்பரானால் என்ன செய்வீர்?" என்று கேட்டான்.

இந்தக் கேள்விக்கும் உபதலைவனிடம் பதில் வராமல் போகவே இளையபல்லவன் சொன்னான்: "நான் உமது நிலையிலிருந்தால் உபதலைவன் உடையுடன் போக மாட்டேன். மாற்றுடையில் செல்வேன். அக்கம்பக்கம் பார்த்துத் திருடன்போல் பதுங்கி ஒரு தனிப் படகை எடுத்துக் கொண்டு கடல்புறாவை அடைவேன். அடைந்ததும் பயத் துடனும் பரபரப்புடனும், 'அமீர் எங்கே? தேவர் எங்கே?' என்று கேட்பேன். மாலுமிகள் என்னை யாரென்று கேட்டால், 'அவசரம், அமீர் எங்கே? தாமதிக்க நேரமில்லை' என்று மிரட்டுவேன். அமீரோ தேவரோ வந்தால் பதில் பேசாமல் இந்த மோதிரத்தைக் காட்டுவேன். அவர்கள் புரிந்து கொள் வார்கள். தனிமையில் பேச அவர்களே அழைத்துப் போவார்கள்..." என்று.

இதைக்கேட்ட உபதலைவன் பிரமித்தான். மஞ்சளழகி யின் அஞ்சன விழிகள் அச்சத்தின் எல்லையைக் காட்டின. "இளையபல்லவரே! உம்மைவிடச் சிறந்த தந்திரசாலி கிடையாது என்று ஸ்ரீவிஜயமே பாராட்டுகிறதென்றால் அதற்குக் காரணம் இருக்கிறது" என்று உபதலைவன் சிலாகிக்கவும் செய்தான்.

அந்தச் சிலாகிப்பைக் காதில் வாங்கிக் கொள்ளாத இளையபல்லவன், "அடுத்தபடி நான் என்ன செய்வேன் தெரியுமா?" என்று வினவினான்.

"என்ன செய்வீர்கள்?" ஆவலுடன் எழுந்தது உப தலைவனின் கேள்வி.

"இங்கு இளையபல்லவர் வந்ததாகவும், அவரை அடையாளம் கண்டுகொண்ட கோட்டையின் தலைவன் அவரைச் சிறை செய்துவிட்டதாகவும் கூறுவேன். பதிலுக்கு விஜயசந்திரனைக் கொன்று விடுவதாக அமீர் மிரட்டலாம்.

அதனால் பலனில்லை என்பதையும், அடுத்து இளைய பல்லவனும் கொல்லப்படுவான் என்பதையும் வலியுறுத்து வேன். எந்த நிமிஷத்திலும் கடல் புறாவுக்கும் மற்ற மரக் கலங்களுக்கும் இங்குள்ள யந்திர வசதிகளால் ஆபத்து என்பதையும் விளக்கிச் சொல்வேன்..." என்று வழி சொன்ன இளையபல்லவன் சற்றுத் தன் பேச்சை நிறுத்தி உப தலைவனை உற்று நோக்கினான்.

அதுவரை திட்டம் தொடர்ச்சியாகவும் சந்தேகத்துக்கு இடமின்றியும் இருந்ததைக் கண்ட உபதலைவனுக்கு அந்த இடம் வந்ததும் சந்தேகம் ஏற்படவே, "நான் எப்படி இளைய பல்லவனுக்குத் தூதனானேன் என்று அமீர் வினவினால் என்ன செய்வது?" என்று கேட்டான்.

"அக்ஷயமுனைக் கோட்டையில் நீர் மஞ்சளழகியின் மெய்க்காவலனாக இருந்ததாகவும் அவள் விரும்பும் இளைய பல்லவனுக்கு உதவுவது உமது கடமையாயிற்றென்றும் சிறையில் என்னைக் கோட்டைக் காவலரில் ஒருவனாகச் சந்தித்ததாகவும் கூறலாம். இளையபல்லவன் இறந்தால் மஞ்சளழகி என்ன செய்துகொள்வாளோ என்று பதறவும் பதறலாம். உமது உணர்ச்சிகளின் எழுச்சி, உதடுகளின் துடிப்பு, முகத்தின் சோகம், இவற்றைக் கண்டு அவர்கள் ஏமாற வேண்டும். நீர் எத்தனை திறமையுடன் இந்த நாடகத்தை முடிக்கமுடியும் என்பதிலிருக்கிறது உமது வெற்றி" என்றான் படைத்தலைவன்.

இளையபல்லவன் சுட்டிக்காட்டிய விளக்கம் அமீருக்கும் கண்டியத்தேவனுக்கும் திருப்தியை அளிக்குமென்பதைப் புரிந்துகொண்ட உபதலைவன், "அடுத்து உங்களை மீட்க அவர்கள் வழி கேட்பார்களே, அதற்கென்ன செய்வது?" என்று வினவினான்.

"கோட்டையில் வெற்றி விழாவில் காவல் அதிகமில்லை யென்றும், அமீரும் கண்டியத்தேவரும் பத்துப் பதினைந்து மாலுமிகளுடன் வந்தால் ரகசியமாக அவர்களைக்

கோட்டைக்குள் அனுமதித்து விடுவதாகவும், சிறைக்காவலரை வெட்டிப் போட்டு என்னை மீட்பதன்றி இங்குள்ள யந்திர சாதனங்களையும் அழித்து விடலாமென்றும் கூறுங்கள். அவர்கள் வருவார்கள். இங்கு அமீரையும் கண்டியத் தேவனையும் பத்துப் பதினைந்து பேரையும் சிறை செய்வது உமக்கொரு பிரமாதமா?" என்று வினவினான் இளைய பல்லவன்.

உபதலைவன் முகத்தில் திருப்தி பரிபூரணமாக நிலவியது. அவன் மனத்தில் வெற்றிக் கோட்டை பெரிதாக விரிந்தது. மீண்டும் மீண்டும் இளையபல்லவனின் திட்டத்தை அவன் அலசிப் பார்த்தான். அதில் அப்பழுக்கு, பலவீனம் எதுவும் எள்ளளவும் இல்லை. அவன் சொன்னபடி விஷயங்களை விளக்குவதோ சந்தர்ப்பத்துக்குத் தக்கபடி நடப்பதோ தனக்கு ஒரு பிரமாதமில்லையென்று நிச்சயித்துக் கொண்டான். கடல் புறாவும் மற்ற மரக்கலங்களும் தன் கைவசமாகி விட்டதாகவே எண்ணினான் மலையூர்க் கோட்டையின் உபதலைவன். அதனால் பிற்காலத்தில் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தில் தனக்கேற் படக்கூடிய பெரும் பதவியை எண்ணிப் பார்த்து அளவிலா உவகையடைந்த உபதலைவன், "நான் வருகிறேன் இளைய பல்லவரே! இந்தக் கடல் புறா என் வசம் சிக்கினால் எனது பதவி ஸ்ரீவிஜயத்தில் சக்கரவர்த்திக்கு அடுத்தபடியாக உயர்ந்து விடும். அப்படி உயர்ந்தால் உமது உயிரைக் காப்பது என் கடமை. நன்றியற்ற உள்ளமல்ல என்னுடையது. நீர் இன்று தரும் வெற்றி உம்மைக் காத்துவிட்டது. ஸ்ரீவிஜயத்தின் பெரும் படைத்தலைவனின் கரம் உமக்குத் துணை நிற்கும்" எனக் கூறிவிட்டுக் காவலரை விளித்து, "இந்த அறையை நான் திரும்பும் வரை காத்து நில்லுங்கள்! இந்த இருவரில் எவரும் வெளியே செல்ல இடந்தர வேண்டாம்" என்று திட்டம் செய்து கிளம்பிச் சென்றான்.

இளையபல்லவனிடம் உபதேசம் பெற்று மலையூர்க் கோட்டையின் உபதலைவன் அறையைவிட்டு வெளியே சென்றதும், மஞ்சளழகி பெரும் திகிலின் வசப்பட்டு

பஞ்சணைத் தலையணையில் தொப்பென விழுந்து முகத்தைப் புதைத்துக் கொண்டாள். இளையபல்லவன் தன்னையும் தனது கடற்படையையும் அழித்துக்கொள்ளத் திட்டம் வகுத்து அதை விளக்க முற்பட்டவுடனேயே அதிர்ச்சிக்கு உள்ளான அக்ஷயமுனைக் கோட்டை அஞ்சுகத்தின் பஞ்சு மனம், அவன் திட்டத்தின் அம்சங்களை அணு அணுவாக விவரிக்க விவரிக்கப் பயங்கர உணர்ச்சிகள் பலவற்றின் வசப்பட்டு அவளுக்குச் சொல்லவொண்ணா வேதனையை விளை விக்கவே, அந்த வேதனையைத் தாங்கமாட்டாமல் விம்மி விம்மி அழவே ஆரம்பித்தாள். பஞ்சணைத் தலையணையில் தனது பங்கஜ முகத்தைப் புதைத்த வண்ணம், இளைய பல்லவன் மலையூர்க் கோட்டைத் தலைவனுக்குச் சொல்லிக் கொடுத்த வழிகளைத் திரும்பத் திரும்ப அலசிப் பார்த்த அவள் மனம் அந்த வழிகளில் பழுதேதுமில்லையென்று உணர்ந்து உணர்ந்து உருகிக் கண்ணீரைத் தாமரை விழிகள் மூலம் தாரைதாரையாகப் பிரவாகித்தது. இளையபல்லவன் அடியோடு அழிந்து போனானென்றே அவள் எண்ணினாள். அந்த எண்ணம் அவள் உள்ளத்தைத் துன்பக் கோடாரியால் பிளந்து கொண்டிருந்தது. மனதில் கிடைத்த அந்தத் துன்ப இடிகள் அவள் பூவுடலைக் குலுக்கின. துன்பத்தின் அந்தக் குலுக்கலிலும் அந்த உடல் எத்தனை அழகாயிருந்தது என்பதைப் பஞ்சணையிலிருந்து எழுந்து சில விநாடிகள் நின்ற படைத்தலைவன் கவனித்தான். பிறகு இரண்டெட்டில் வாயிற்படிக்குச் சென்று அறைக் கதவைத் தாழிட்டு வந்து பஞ்சணையில் அவளருகே உட்கார்ந்து அவள் முதுகை ஆறுதலுடன் தடவிக் கொடுத்தான்.

காதலன் கைப்பட்டதும் ஆறுதலைப் பெறும் அந்தக் காரிகையின் உடல் அன்று சிறிதளவும் ஆறுதலையடைய வில்லை. விம்மல்கள் அதிகப்பட்டன. உடல் வேதனையால் துவண்டது பஞ்சணையில். இளையபல்லவனுக்குப் பேராபத்து நிகழ்ந்துவிடப் போகிறது அடுத்த ஒரு ஜாமத்தில் என்ற நினைப்பு அவன் கையின் ஸ்பரிசத்தைக்கூடப்

புறக்கணித்தது. அப்படித் தன் நிலையை எண்ணி வேதனைப் பட்ட அந்த உடலைத் தன் இருகைகளாலும் திருப்பித் தன் மடியில் கிடத்திக்கொண்ட இளையபல்லவன் அவள் கண்களில் உற்பத்தியாகிக் கன்னங்களில் வழிந்தோடிய நீர்த் துளிகளைத் துடைத்தான். "இதோ பார் மஞ்சளழகி, அழுவதற்குக் காரணமில்லை" என்று தைரியமூட்டும் சொற்களையும் உதிரவிட்டான்.

அவன் மடியிற் கிடந்தபடி மஞ்சளழகி தனது மலர்விழி களைத் திறந்து அவனை நோக்கினாள். அவன் முகத்தில் சிறிதளவு அச்சமோ, சிந்தனையோ குழப்பமோ கூட இல்லாதது அவளுக்கு விந்தையாயிருந்தது. அவன் வதனத்தில் புன்னகையின் சாயையே படர்ந்து நின்றது.

மஞ்சளழகி மெள்ள விம்மல்களைக் கட்டுப்படுத்திக் கொண்டு அவனை நோக்கினாள். "ஏன் காரணமில்லை? நீங்கள் உபதலைவனுக்குச் சொல்லிக்கொடுத்த திட்டத்தில் பழுதென்ன இருக்கிறது?" என்று வினவினாள்.

"பழுது ஏதுமில்லை" என்று சகஜமாகச் சொன்னான் இளையபல்லவன்.

"அப்படியானால் உங்கள் நிலை?"

"ஏன்? என் நிலைக்கு என்ன?"

"ஆபத்தல்லவா?"

"ஆபத்துக்கும் எனக்கும் எப்பொழுதும் தொடர்பு உண்டு."

"இந்த அறையில் அடைபட்டுக் கிடக்கிறீர்களே எப்படித் தப்பமுடியும்?"

"தப்ப வேண்டிய அவசியமில்லை. தப்ப எனக்கு இஷ்ட மில்லை."

இளையபல்லவனின் இந்தக் கடைசிப் பதிலும், பதிலில் கண்ட உறுதியும் மஞ்சளழகிக்கும் சிறிது தைரியத்தை அளிக்கவே அவள் அவன் மடியிலிருந்து எழுந்திருந்து பக்கத்தில் உட்கார்ந்து கொண்டாள். அவள் சொன்ன பதிலி

லிருந்து அவன் விவரித்த திட்டத்திலோ வேறு எதிலோ எங்கோ ஓர் ஊனத்தை அவன் வைத்திருக்கிறான் என்பதை அவள் புரிந்துகொண்டாள். அது என்ன என்பதை அறிய முற்பட்டு ஒருமுறை தனது முந்தானையால் கண்களைத் துடைத்துக்கொண்டு இளையபல்லவனை நோக்கிக் கேட்டாள், "திட்டத்தில் ஏதாவது ஊனமிருக்கிறதா?" என்று.

"ஏதுமில்லையென்று முன்னமேயே சொன்னேனே" என்றான் இளையபல்லவன் சர்வ சாதாரணமாக.

"அப்படியானால் அந்தத் திட்டம் நிறைவேறினால்..." என்று மேலும் ஏதோ கவலையுடன் சொல்லப் போன மஞ்சளழகியைக் கையின் சைகையால் அடக்கிய இளைய பல்லவன், "மஞ்சளழகி! முக்கியமாக ஒன்றை மறந்துவிட்டாய், திட்டங்கள் மட்டும் வெற்றியளிப்பவையல்ல" என்று சுட்டிக் காட்டினான் பஞ்சணையிலிருந்து எழுந்து அவளுக்கெதிரில் நின்றுகொண்டு.

"நீங்கள் சொல்வது புரியவில்லை" என்றாள் மஞ்சளழகி.

"திட்டத்தை வகுத்தது யார்?" என்று வினவினான் இளையபல்லவன்.

"நீங்கள்தான். வேறு யாரால் இந்தத் திட்டத்தை வகுக்க முடியும்?" என்று எரிச்சலுடன் கூறினாள் மஞ்சளழகி.

"வேறு யாரும் வகுக்க முடியாது, வேறு யாரும் நிறை வேற்றவும் முடியாது."

"என்ன சொல்கிறீர்கள்?"

"வகுத்தது இளையபல்லவனுக்கான திட்டம். அதை இளையபல்லவன்தான் நிறைவேற்ற முடியும்."

அவன் தற்புகழ்ச்சியைக் கேட்ட அவள் பதிலேதும் சொல்லவில்லை. அது உண்மையென்பதை உணர்ந்து கொண்டாள் மஞ்சளழகி. அந்த உண்மையை மேலும் வலியுறுத்திச் சொன்னான் இளையபல்லவன், "மஞ்சளழகி! பலவர்மனைவிட அறிவாளியல்ல இந்த உபதலைவன். அவன்

அறிவில் இவன் அறிவு ஆயிரத்தில் ஒரு பங்குகூட இல்லை. அந்த பலவர்மன் காவலிலும் நான் இருந்திருக்கிறேன். அந்தக் காவலை ஒத்திட்டுப் பார்த்தால் இந்தக் காவல் ஒரு காவலே அல்ல. பலவர்மன் மாளிகையில் மாடியறையில் பல வீரர்கள் கண்காணிப்பில் நான் குடித்தவனாகவும் மதி இழந்தவ னாகவும் பல வேடங்கள் தரிக்க, பலபடி நடிக்க அவசிய மிருந்தது. இங்கு அந்த அவசியமில்லை. இந்த உபதலைவன் அளித்த சிறையைவிட எனக்கு உபயோகமானது வேறு எதுவும் இல்லை" என்று கூறிய இளையபல்லவன் குரல் திடீரென உணர்ச்சி வேகத்தில் உயர்ந்தது. "இதோ பார் மஞ்சளழகி" என்று தனது அங்கியைக் கழற்றிப் பஞ்சணை மீது எறிந்த இளையபல்லவன் தனது கழுத்திலிருந்த தங்க ஆரத்தைக் கழற்றி அதன் இடையே பதிக்கப்பெற்ற நாகரத்தினச் சிவப்புக்கல்லை அவள் முன்னிலையில் ஆட்டிக் காட்டினான்.

எலுமிச்சம்பழத்தின் அரை மூடிப் பரிமாணமுள்ளதும் பத்தரை மாற்றுத் தங்கத்தில் பதிக்கப்பெற்றிருந்ததுமான அந்தப் பெரும் மாணிக்கத்தைப் பிரமிப்புடன் பார்த்தாள் மஞ்சளழகி. அந்தப் பெரும் நாகரத்தினம் அறை விளக்கில் எதிரொளி விட்டு அந்த அறையெங்கும் செங்கதிர்களைப் பரப்பியது. அந்தச் செங்கதிர்களில் குளித்த மஞ்சளழகி அந்த நாகரத்தினத்தின் அதிதேவதை போலக் காட்சியளித்தாள். அந்தச் செஞ்சோதிக்குள் இன்னொரு பொற்சோதியெனத் திகழ்ந்த மஞ்சளழகியின் இணையற்ற எழிலைச் சில விநாடிகள் பருகிய இளையபல்லவன், "மஞ்சளழகி! சீக்கிரம் அந்த விளக்கை எடுத்து வா" என்று அறை மூலையில் எரிந்து கொண்டிருந்த சிறு விளக்கைக் காட்டினான்.

மஞ்சளழகியின் எண்ணங்கள் எங்கெங்கோ சுழன்றன. அவள் பிரமிப்பின் வசப்பட்டிருந்தாள். இளையபல்லவனின் வேகத்துக்கும் உணர்ச்சியின் எழுச்சிக்கும் காரணம் அவளுக்குப் புரியவில்லை. பதுமையைப் போல் நடந்து சென்று அந்த விளக்கை எடுத்து வந்தாள். அந்த விளக்கை

ஒரு கையிலும் செங்கதிர் வீசும் அந்த மாணிக்கத் தங்கச் சங்கிலியை மற்றொரு கையிலும் பிடித்தவண்ணம் இளைய பல்லவன் பஞ்சணைமீது ஏறித் தவழ்ந்து பஞ்சணை அணைத் திருந்த சாளரத்தினிடம் சென்று உட்கார்ந்து மஞ்சளழகி யையும் தன் பக்கத்தில் வந்து உட்காரும்படி சைகை செய்தான்.

அவள் உட்காருமுன்பே சாளரக் கட்டையில் விளக்கை வைத்து அதன் திரியை நன்றாகத் தூண்டிச் சுடரைப் பெரிதாக்கிய இளையபல்லவன் அந்தப் பெரும் மாணிக்கத் தைச் சுடருக்கு முன்பாக ஆடவிட்டான். கடற்காற்றில் சுடர் ஆடியபோதிலும் அதன் ஒளியை வாங்கிய மாணிக்கம் தனது செங்கதிர்களை வெளியே பளீர்பளீரென்று அனுப்பத் தொடங்கியது. அந்த மாணிக்கத்தை அந்தச் சுடர் முன்பு ஆட்டிவிட்டபடியே திரியிலிருந்து இடது கையை எடுத்த இளையபல்லவன், "இப்பொழுது பார் மஞ்சளழகி? ஜம்பி நதித் துறையை ஊன்றிப் பார்!" என்றான். ஊன்றிப் பார்த்தாள் மஞ்சளழகி.

விளைவு புரிந்தது அவளுக்கு. எப்பேர்ப்பட்ட விளைவு அது! எண்ணவும் முடியாத விளைவு அவள் கண்ணெதிரே விரிந்தது.

கடல்



சாண்டில்யன்

6. செங்கதிர் வீழ்ச்சி

அத்தியாயம் 62

# தேவிகள் இருவர்

ஹரி நதியென்று ஆதிகாலத்திலும், மலையூர் நகரம் ஜம்பியெனப் புதுப்பெயர் கொண்டபிறகு ஜம்பி நதியெனப் பிற்காலத்திலும் வழங்கியதும், ராஜேந்திர சோழ தேவனுடைய மரக்கலங்கள் முதன்முதலாகச் சைலேந்திரர்களின் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தில் ஊடுருவ இடம்கொடுத்ததால் சரித்திரப் பிரசித்தி பெற்றதும், மலையூரை அணைத்து ஓடியதுமான அந்த நதிப் பிராந்தியத்தைக் கோட்டையின் அந்தரங்க அறையிலிருந்து கவனித்த மஞ்சளழகி வியப்பின் எல்லையை அடைந்தாள். இளையபல்லவன் எத்தனை சாமர்த்தியமாக உபதலைவனை ஏமாற்றிவிட்டானென்பதையும், தான் இளையபல்லவனுடைய அழிவுத் திட்டமெனக் கருதியது உண்மையில் அவனுக்கு ஆதரவுத் திட்டமென்பதையும் உணர்ந்துகொண்ட மஞ்சளழகி மேலும் மேலும் ஜம்பி நதிப் பிராந்தியத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

இளையபல்லவன் அந்த விளக்கெதிரே அந்தப் பெரும் நாகரத்தினக் கல்லை இடைவெளி விட்டு விட்டு ஆட்டிய படியே இருந்தான். முதல் இருமுறை அக்கல் ஆடி நின்றதுமே கடல் புறாவின் தளத்தில் திடீரென இரு பந்தங்கள் எழுந்து உலாவியதையும், அந்தப் பந்தங்கள் சில விநாடிகளுக்குள் மறைந்துவிட்டதையும் கவனித்தாள் மஞ்சளழகி. மீண்டும் இருமுறை இளையபல்லவன் அந்த நாகரத்தினக் கல்லை ஆட்டினான். அதன் பிரதிபலிப்பிலிருந்து நீண்ட செஞ்சோதி கிளம்பி அறைக்கு வெளியிலிருந்த வானவெளியை ஊடுருவிச் சென்று அசைந்ததையும், அந்த அசைவை மீண்டும் இரண்டு விநாடிகள் இளையபல்லவன் நிறுத்தியதையும் கவனித்தாள் மஞ்சளழகி. அந்த இரு விநாடிகள் முடிந்ததும் கடல் புறாவின்


லதா.
கடல் ராணி
2. தேவிகள் இருவர்
சாண்டில்யன்

தளத்திலும் ஒரு சிறு விளக்கு எழுந்து ஆடியது. அந்த விளக்கு ஆடுமுன்பே கடல் புறாவின் தளத்திலிருந்து விளக்குகளும் பந்தங்களும் அடியோடு மறைந்து விட்டதால் அந்த விளக்காட்டம் மையிருளில் தனிப்படச் சிறப்புறத் தெரிந்தது. அந்த ஆட்டத்தைக் கண்டு மீண்டும் தனது நாகரத்தினத்தை விளக்கொளியில் பலமுறை பலவிதமாக ஆட்டிக்கொண்டிருந்த இளையபல்லவனைக் கண்ட மஞ்சளழகி அதற்குக் காரணம் புரியாமல் கேட்டாள்: "நீங்கள் ஆபத்தில் இருப்பதைத்தான் உங்கள் நண்பர்களுக்கு அறிவித்துவிட்டீர்களே, இன்னும் எதற்காக இந்தச் சைகை?"

இளையபல்லவன் அவளைச் சற்றும் திரும்பிப் பார்க்காமலும், நாகரத்தினச் சுடர் வீச்சைப் பலபடி கிளப்பிவிட்டுக் கொண்டும், "என் ஆபத்தைப்பற்றி நான் எதுவும் குறிப்பிடவில்லை, அமீருக்கும் கண்டியத்தேவனுக்கும்" என்று பதில் கூறினான்.

மஞ்சளழகியின் வதனத்தில் வியப்பின் சாயை விரிந்தது. "என்ன, உங்கள் ஆபத்தைப்பற்றித் தெரியப்படுத்தவில்லையா!" என்று வினவவும் செய்தாள் குரலிலும் வியப்பு ஒலிக்க.

"இல்லை" என்றான் இளையபல்லவன்.

"ஏன் தெரியப்படுத்தவில்லை?" என்று கேட்டாள் அவள் மீண்டும்.

"ஆபத்து இருந்தாலல்லவா தெரியப்படுத்துவதற்கு?" இளையபல்லவன் கேள்வியும் முதல் பதிலைப் போலவே சர்வ சகஜமாயிருந்தது.

"ஆபத்தில்லையா உங்களுக்கு?"

"இல்லை."

"வெளியிலிருக்கும் காவலர்கள்!"

"சிறைப்பட்டவர்கள்."

"யாரிடம்?"

"என்னிடம்."

"உங்களிடமா?" இந்தக் கேள்வியைக் கேட்ட மஞ்சளழகி யின் குரலில் சற்றுக் கோபமிருந்தது.

பஞ்சணையில் பக்கத்தில் அமர்ந்திருந்த அவளை நன்றாக அருகில் இடக்கையால் இழுத்துக்கொண்ட இளையபல்லவன், "உனக்குப் புரியவில்லையா மஞ்சளழகி? இந்த மலையூர்க் கோட்டை என் கையில் விழுந்துவிட்டது" என்று கூறினான்.

"எப்படி அத்தனை உறுதியாகச் சொல்ல முடியும்?" என்று வினவினாள் மஞ்சளழகி.

"இன்னும் ஒரு நாழிகைக்குள் இந்த உபதலைவன் கடல் புறாவுக்குச் செல்லுவான். அங்கு என்ன நடக்கும் என்று நான் உனக்குச் சொல்லத் தேவையில்லை" என்றான் இளைய பல்லவன்.

என்ன நடக்குமென்பதை மஞ்சளழகி அறிந்தே இருந்தா ளாகையால், "இல்லை, சொல்லத் தேவையில்லை" என்றாள்.

"அங்கு சென்றதும் உபதலைவன் சிறைப்படுத்தப் படுவான்."

"அது தெரியும் எனக்கு?"

"என் திட்டமே அதுதானே! புரியவில்லையா உனக்கு?"

"என்ன உங்கள் திட்டம்?"

"உனக்கு ஏன் நான் ஸ்ரீவிஜயத்தின் கடற்படைத் தலைவனிடமிருந்து ஓலை வாங்கி வந்தேன்?"

இந்தக் கேள்வியை இளையபல்லவன் கேட்டதும் பல விஷயங்கள் திடீரென ஒளிர்விட்டன மஞ்சளழகியின் சிந்தையிலே. "ஆம், ஆம். புரிகிறது, புரிகிறது" என்ற அவள் குரலில் ஆச்சரியம் பெரிதாகத் தொனித்தது.

அவளுக்கு விஷயம் நன்றாக விளங்கிவிட்டதென்பதை அறிந்தும்கூடத் தன் உள்ளத்திலோடிய எண்ணங்களைச் சொற்களில் வடிக்கத் துவங்கினான் இளையபல்லவன். "ஆம் மஞ்சளழகி! இந்த மலையூர்க் கோட்டையை எனக்கோ மக்களுக்கோ சேதமின்றிப் பிடிக்கத் தீர்மானித்தேன். இந்த

ஊரில் தமிழர்களே பெரும்பான்மையர் என்பது எனக்குத் தெரியும். தொலைக் கிழக்கிலுள்ள தமிழர் கூட்டத்தின் பெரும் பிரிவு இங்கிருப்பதும், அவர்கள் ஜெயவர்மன் ஆக்கினைக்குள் அச்சத்துடன் வர்த்தகம் செய்து வருவதும் எனக்குத் தெரியும். ஆகவே இந்தக் கோட்டையின் பலத்தை மட்டும் நான் உடைத்துவிட்டால் இந்த ஊரை நான் வெற்றிகொண்டது போலாகும். இதன் அமைப்பையும் முக்கியத்துவத்தையும் எனக்கு யார் உணர்த்தியது தெரியுமா?" என்று வினவினான் இளையபல்லவன்.

உணர்ச்சி வேகத்துடன் உதிர்ந்த அவன் சொற்களையும் தமிழ் வணிகர் நிலை பற்றி அவன் பேசியபோது குரலில் தொனித்த கடுமையையும் கண்ட மஞ்சளழகி, அவன் உணர்ச்சிக்கும் கடுமைக்கும் காரணமிருப்பதை உணர்ந்து கொண்டாளானாலும் அதைப்பற்றி ஏதும் குறிப்பிடாமல், "யார்?" என்று ஏதோ கேட்கவேண்டுமென்பதற்காகக் கேட்டு வைத்தாள்.

இளையபல்லவன் மேலும் உணர்ச்சி பொங்கப் பேசத் துவங்கினான்: "ராஜேந்திர சோழ தேவர் மஞ்சளழகி, ராஜேந்திர சோழ தேவர். ஸ்ரீவிஜயத்தைவிட இந்த மலையூரை வெற்றி கொண்டதை அதிகப்படியாகத் தமது சாசனத்தில் பொறித்திருக்கிறார். கோட்டை வலுவுள்ள மலையூர் என்று பொருள்பட சாசனம் அமைத்திருக்கிறார். அதைக் கொண்டே நான் புரிந்துகொண்டேன், கோட்டை விழுந்தால் மலையூர் விழுந்ததென்று. இந்த ஊரில் வேறு அரண்கள் இல்லை யென்பதையும் இன்று பகலே புரிந்துகொண்டேன். பாலிக் குள்ளனும்–" என்று மேலும் ஏதோ சொல்லப் போன இளைய பல்லவனை இடைமறித்த மஞ்சளழகி, "யாரது பாலிக் குள்ளன்!" என்று வினவினாள்.

"கீழ்த்திசையின் சிறந்த மாலுமிகளில் ஒருவன். இந்தக் கடல் பகுதிகளை அணு அணுவாக அறிந்தவன். உடல் குள்ளமே யொழிய, அறிவு குள்ளமல்ல அவனுக்கு. போர்க் கலங்களை நடத்துவதில் அமீருக்கோ கண்டியத்தேவனுக்கோ

சற்றும் சளைத்தவனல்ல. முன்பு கங்கதேவனின் உபதலைவன். இப்பொழுது எனது பக்தன்." இந்தச் சொற்களைப் பெரும் பெருமையுடன் சொன்னான் இளையபல்லவன். அத்துடன் மேலும் கூறினான், "ஒரு தலைவனுக்கு விவேகம் மட்டும் போதாது பெரும் காரியங்களைச் சாதிக்க. அவன் உப தலைவர்களும் சிறந்தவர்களாயிருக்க வேண்டும். உதாரணமாக இந்தக் கோட்டையை எடுத்துக் கொள். நீ விவேகமுள்ள தலைவி. என்னை அழிப்பதற்கு வேண்டிய சகல வசதி களையும் இங்கு ஏற்படுத்தியிருக்கிறாய். ஆனால் பாவம்?" என்று.

மஞ்சளழகியின் கோபம் மெள்ள ஏறத் தொடங்கியது. "என்ன பாவம்! எதற்கு இந்தப் பரிதாபம்!" என்று வீசினாள் கேள்வியை.

"இந்தக் கோட்டை கடல்புறாவை அழிக்கும் சாதனங் களை உடையது. ஆனால் கடல்புறா இந்தக் கோட்டையை அழிக்கும் நிலைமையில் இருக்கிறது இப்பொழுது. இங்குள்ள அழிவு யந்திரங்களை உபயோகப்படுத்த உத்தரவு தேவை. அந்த உத்தரவை இடக்கூடியவர்கள் ஒன்று இளவரசியாகிய நீ. அல்லது உன் உபதலைவன். நீ இந்த அறையில் என்னுடன் சிறையிருக்கிறாய். உன் உபதலைவன் கடல் புறாவுக்குச் செல்கிறான் சிறைப்பட. இந்த யந்திரங்களை இயக்க யாரும் உத்தரவிட முடியாது இப்பொழுது. செல்வமிருந்தும் அனுபவிக்க முடியாத உலோபியின் நிலையிலிருக்கிறது இந்தக் கோட்டை. அது மட்டுமல்ல–" என்று இளையபல்லவன் சற்று நிதானித்துவிட்டு மேலும் சொன்னான்: "இங்கு நான் வந்ததே இந்தக் கோட்டையின் தலைவனை அழைத்துச் சென்று கடல் புறாவில் சிறைப்படுத்திவிட்டு இரவோடு இரவாக இந்தக் கோட்டையை ஆதரவற்றதாகச் செய்து பிடித்துவிட வேண்டும் என்பதற்காக. அந்த உத்தேசத்துடன்தான் நான் விஜயசந்திர னிடமிருந்து ஓலையும் வாங்கி வந்தேன். ஆனால் ஓலை பலிக்கவில்லை. ஏமாந்தேன். உன் புத்திக்கூர்மையில் நான் அழிந்திருப்பேன். நீ செய்ய முற்பட்ட தியாகத்தில் நான் கடல்

புறாவையும் என்னையும் என்னைச் சேர்ந்தவர்களையும் அழித்துக் கொண்டிருப்பேன். என் நல்ல காலம், உன் அறிவுடன் என் அறிவு மோதவில்லை. உபதலைவன் இடையே புகுந்தான், என்னைக் காக்க. ஆசை வலை விரித்தேன். அதில் விழுந்தான். எந்தக் காரியத்துக்கு நான் வந்தேனோ அதை அவனே முடித்துக் கொடுத்தான். இக்கோட்டையின் தலைவனைக் கடல்புறாவுக்கு அழைத்துப் போகவந்தேன்; நான் அழைத்துப் போவதற்குப் பதில், அவனே போயிருக் கிறான். வேலை மிகச் சுலபமாகி விட்டது," என்ற இளைய பல்லவன் அதுவரை ஆட்டிக் கொண்டிருந்த நாகரத்தினத்தை விளக்கொளியின் முன்பிருந்து எடுத்து விட்டான். விளக்கை யும் அணைத்து விட்டான். பின்பு மஞ்சளழகியைத் திரும்பி நோக்கினான்.

அறையின் விளக்கு அணைக்கப்பட்ட போதிலும் வானத்தில் ஜொலித்த விண்மணிகள் அளித்த அற்ப வெளிச்சத்தில் மஞ்சளழகியின் முகத்தில் அழகு பன்மடங்கு அதிகமாக இருந்தது. அவன் முகத்தைப் பெருமிதத்துடனும் ஆவலுடனும் நோக்கிய அக்ஷயமுனைக் கோட்டை அழகி கேட்டாள்: "ஆமாம், எதற்காகத் திரும்பத் திரும்ப நாக ரத்தினத்தை ஆட்டிக் கொண்டிருந்தீர்கள்?" என்று.

இளையபல்லவன் அவளைத் திருப்பிப் பஞ்சணையில் தனக்கெதிரில் உட்கார வைத்து அவள் முகத்தின் முன்பு அந்த நாகரத்தினத்தை ஆட்டினான். அந்த அற்ப வெளிச்சத் திலும் அந்த நாகரத்தினம் நெருப்புத் துண்டமென ஜொலித்தது. "மஞ்சளழகி! இதை நான் ஆட்டவில்லை. இதைக் கொண்டு பேசினேன்" என்றான்.

"பேசினீர்களா?"

"ஆம் பேசினேன், அமீருடனும் கண்டியத்தேவனுடனும்."

"இந்த நாகரத்தினத்தின் மூலமா?"

"ஆம்."

"எப்படிப் பேசினீர்கள்!"

"எனது மற்ற மரக்கலங்கள் கடல் புறாவைத் தொடரும் போது பந்தங்களை ஆட்டி ஒளிச் சைகை செய்து என் கருத்துக்களை அந்த மரக்கலங்களிலுள்ள மாலுமிகளுக்கு அறிவிப்பேன். வாய்மூலம்தான் பேசவேண்டுமென்பதில்லை மஞ்சளழகி. ஒளி மூலமும் பேசலாம். அந்த ஒளி இலக்கணத்தை என் மாலுமிகளுக்கு நன்றாகப் போதித் திருக்கிறேன். நான் வாய்மூலம் உத்தரவிட்டால் அதை எப்படி அவர்கள் அறிந்து கொள்வார்களோ அப்படியே ஒளிமூலம் நான் சொல்வதையும் அறிந்து கொள்வார்கள். இப்படி மஞ்சளழகியிடமும் காஞ்சனாதேவியிடமும் எத்தனையோ முறை நான் பேசி இருக்கிறேன்" என்றான்.

இதைக்கேட்ட மஞ்சளழகியின் முகம் லேசாகச் சுளித்தது. "காஞ்சனாதேவியிடம் பேசியிருப்பீர்கள். ஆனால் உங்களை நான் சந்தித்துத்தான் கிட்டத்தட்ட ஓராண்டு ஆகப்போகிறதே" என்றாள் அவள்.

இளையபல்லவன் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது. "யார் சொன்னது ஓராண்டு ஆயிற்றென்று? எப்பொழுதும் உங்களைப் பக்கத்தில்தானே வைத்துக்கொண்டிருக்கிறேன்" என்றான் விஷமமாக.

"எங்களையா?" கேள்வியில் கடுமையிருந்தது.

"உன்னையும் காஞ்சனாவையும் தான்!"

"ஊஹூம், இப்பொழுது அவள் காஞ்சனாதேவியிலிருந்து காஞ்சனாவாகி விட்டாளா?"

"இல்லையில்லை, இப்பொழுதும் தேவிதான்."

"யாருக்குத் தேவி? உங்களுக்கா?"

"ஆமாம். எனக்கு இரு தேவிகள்."

"ஒரு தேவி போதாதாக்கும்?"

"போதவில்லை, ஆகையால்தான்..."

மஞ்சளழகி இதைக் கேட்டதும் பஞ்சணை முகப்புக்கு நகர்ந்து கீழே இறங்க முற்பட்டாள். இளையபல்லவன் அவள்

கையைப் பிடித்து மீண்டும் இழுத்து, "மஞ்சளழகி! இப்படி வா. என் காஞ்சனாவை உனக்குக் காட்டுகிறேன்" என்றான்.

"வேண்டாம், எனக்கு. விடுங்கள் கையை" என்று திமிறினாள் மஞ்சளழகி.

ஆனால் இளையபல்லவன் கை அவள் மெல்லிய கையை இரும்புப் பிடியாகப் பிடித்துக் கொண்டிருந்தது. "வா! அவளை மட்டுமல்ல, உன்னையும் காட்டுகிறேன்" என்று கூறிச் சிரித்தான் இளையபல்லவன். அவன் சிரிப்பு மஞ்சளழகிக்கு வேப்பங்காயாக இருந்தது. "விடுங்கள், நீங்கள் இத்தனை கேவலம், இத்தனை காமுகர் என்பது எனக்குத் தெரியாது. உங்களை... உங்களை..." என்று பேச்சு வராமல் கோபத்தில் திணறினாள்.

"யோக்கியனென்று நினைத்தாய்" என்று அவள் வார்த்தைகளைப் பூர்த்தி செய்த இளையபல்லவன், அவளை இழுத்து மறுபடியும் சாளரத்தருகில் இருத்தி, "ஜம்பி நதிப் பகுதியைப் பார். கடல் புறாவுக்கு இருபககத்திலும் நிற்கும் அந்த இரு மரக்கலங்களையும் பார். அவள் மஞ்சளழகி, இவள் காஞ்சனா," என்று அந்த மரக்கலங்களிருந்த இடத்தைச் சுட்டிக்காட்டினான் இளையபல்லவன்!

மெள்ள மெள்ள விஷயம் புரிந்தது மஞ்சளழகியின் சஞ்சலப்பட்ட சித்தத்துக்கு. அவள் கண்கள் அவன் காட்டிய திசையை நோக்கின. அந்த இரு பெரும் உல்லாச மரக்கலங் களையும் பார்த்த மஞ்சளழகி பிரமித்தாள். அந்தப் பிரமிப்பை அதிகப்படுத்த இளையபல்லவன் சொன்னான்: "அந்த இரு மரக்கலங்களிலும் இருக்கும் செல்வத்தைக் கொண்டு இந்த ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தை விலைக்கு வாங்கிவிடலாம் மஞ்சளழகி. அவை உல்லாச மரக்கலங்கள் மட்டுமல்ல, போர்க்கலங்களும் கூட. அவற்றிலுள்ள பொக்கிஷத்தைக் களவாட முற்படும் எந்த மரக்கலத்தையும் நாசம் செய்யும் சக்தி அவற்றுக்கிருக்கிறது. ஒன்று உனக்கு மஞ்சளழகி, ஒன்று காஞ்சனாதேவிக்கு. முன்பு சம்பிரதாயப்படி காஞ்சனாதேவி

ஒருத்திதான் இளவரசி. இப்பொழுது நீயும் இளவரசி. இரண்டு இளவரசிகளும் என் அருகிலேயே இருந்திருக் கிறார்கள்," என்று அறிவித்தான் இளையபல்லவன்.

இளையபல்லவன் இதயத்தில் தனக்கும் இடமிருந்தாலும் காஞ்சனாதேவிக்கும் அதில் இடமிருப்பதை அவள் அறிந் திருந்ததால் இன்பத்துக்குப் பதில் துன்பமே ஏற்பட்டது அவளுக்கு. இளையபல்லவன் நாகரத்தினம் பதித்த சங்கிலியை அவள் கழுத்தில் போட்டு, "இது என் பரிசாக இருக்கட்டும் உனக்கு" என்று சொல்லி அவள் கன்னங்களை வருடியதுகூட இன்பத்தை அளிக்கவில்லை அவளுக்கு. எப்படியும் அவன் தன்னைவிட காஞ்சனாதேவியையே விரும்புகிறான் என்ற எண்ணம் அவள் மனத்தை அடைத்துக் கொண்டது. ஆகவே அவள் ஏதும் சொல்லாமல் மௌனமாகவே இருந்தாள்.

இளையபல்லவன் நிலை அவள் நிலையைவிடச் சங்கடமாயிருந்தது. எந்த மஞ்சளழகிக்குப் பயந்து அவன் அக்ஷயமுனைக்குச் செல்லாமல் பல திருட்டுத்தனங்களைச் செய்து மலையூர் வந்தானோ அந்த மஞ்சளழகியிடமே தான் சிக்கிக்கொண்டதை எண்ணினான். அது மட்டுமல்ல, மலையூர்க் கோட்டை அன்றிரவு பிடிபட்டதும் மறுநாள் காஞ்சனாதேவியும் மஞ்சளழகியும் சந்திக்கும்படி இருக்குமே, அந்த ஆபத்தை எப்படித் தவிர்ப்பதென்று யோசித்து உள்ளூரப் பயம் கொண்டான். எதற்கும் அஞ்சாத அந்தக் கடல் வீரன் தன் காதலிகள் இருவர் சந்திப்பையும் நினைத்து அஞ்சினான். 'இந்த நிமிஷம் வரை காஞ்சனாதேவி கடல் புறாவிலிருப்பது மஞ்சளழகிக்குத் தெரியாது. நாளை தெரிந்து விட்டால்?' இதை எண்ணி நடுங்கினான். ஆகவே மலையூர்க் கோட்டையை அறவே மறந்து அந்த இருவர் சந்திப்பையும் எப்படித் தடுக்கலாமெனத் திட்டம் போட முற்பட்டான் இளையபல்லவன். அதைப்பற்றி எண்ணப்போன சமயத்தில் மஞ்சளழகி திடீரெனக் கூவினாள், "அதோ பாருங்கள், பாருங்கள்," என்று.

இளையபல்லவன் அவள் காட்டிய திசையை நோக்கினான். “ஆம், மஞ்சளழகி! கடல் புறாவிலிருந்து மாலுமிகள் படகுகளில் இறங்குகிறார்கள்,” என்று அவன் மேலும் ஏதோ சொல்லப் போய் வார்த்தைகள் வராமல் நின்றான். மஞ்சளழகி நதிப் பகுதியைப் பார்த்துக் கொண்டிருந்தாள். கடல் புறாவிலிருந்தும், மற்ற மரக்கலங்களிலிருந்தும் மாலுமிகள் இறங்கினார்கள். அடுத்த அரை நாழிகைக்குள் படகுகள் நகர முற்பட்டன. ‘கோட்டை பிடிபட்டது போலத்தான்,’ என்று எண்ணிய மஞ்சளழகி இளைய பல்லவனை நோக்கினாள்.

அவன் முகத்தில் அச்சம் பரவிக் கிடந்தது. உதடுகள் மடிந்து கடுமையைக் காட்டின. அவளைப் பார்க்கப் பயந்த கண்கள் கடலை நோக்கின. அவன் புத்தி அத்தனை அச்சத்திலும் துரிதமாக வேலை செய்து கொண்டிருந்தது. என்ன செய்துமென்ன, அவன் எதிர்பார்த்த இடி மறுநாள் பொழுது புலருமுன்னமே அவன்மீது இறங்கிவிட்டது. அதிகச் சத்தமின்றி மலையூர்க் கோட்டைப் போர் முடிந்ததும் விடியற்காலையில் அந்த அந்தரங்க அறையின் கதவு தடதட வெனத் தட்டப்பட்டது. அறைக் கதவை மஞ்சளழகியே திறந்தாள். நிலைப்படியினருகில் நின்றிருந்தாள் கடாரத்தின் இளவரசி காஞ்சனாதேவி.

அத்தியாயம் 63

# மின்னலும் இடியும்

கதவு திறந்ததும் நிலைப்படியருகே நின்றிருந்த காஞ்சனாதேவியைப் பஞ்சணையிலிருந்தே கவனித்த இளைய பல்லவனுக்கு, அவள் கருவிழிகளில் விரவிக் கிடந்தது சினமா, வியப்பா, பிரமிப்பா என்பது அடியோடு புரியாததால், அவன் பெரும் சங்கடத்துடன் மஞ்சத்திலேயே மெல்ல அசைந்தான். உண்மையில் காஞ்சனாதேவியின் இதயத்தில் அந்த மூன்று உணர்ச்சிகளும் கலந்தே சுழன்றன. மலையூர் வீழ்ச்சியை இளையபல்லவனுக்குத் தானே அறிவிக்க வேண்டுமென்று ஆசையுடன் ஓடி வந்த அவளுக்குத் தனது ஆசையின் வீழ்ச்சிக் காட்சியொன்று அங்கு காத்திருக்குமென்பது எப்படித் தெரிந்திருக்க முடியும்? ஆகவே கதவு திறந்து எதிரே மஞ்சளழகி நின்றதும் அவள் ஒருகணம் பிரமித்தே போனாள். அடுத்த கணம் தனது கருவிழிகளைப் பெரும் சினத்துடன் மஞ்சளழகியின் மீது நிலைக்கவும் விட்டாள்.

மஞ்சளழகியின் நிலையும் கிட்டத்தட்ட காஞ்சனா தேவியின் நிலையிலேயே இருந்தது. மஞ்சளழகியும் காஞ்சனா தேவியும் நேருக்கு நேர் சந்தித்துக்கொள்ளவில்லையானாலும் இருவரும் சமீப காலத்தில் ஒருவரைப் பற்றி யொருவர் பலபேரிடம் விசாரித்தறிந்திருந்தமையால், ஒருவரையொருவர் இன்னாரென்று புரிந்துகொள்வது பிரமாதமாயில்லை. காஞ்சனாதேவி நின்ற தோரணையிலிருந்தும், அவள் கையில் உருவி நின்ற கத்தியிலிருந்தும், அவள் இளையபல்லவனிருந்த திசையையும் நோக்கித் தன்னையும் நோக்கியதிலிருந்தும், அவள் விழிகளில் எழுந்த கோபத்திலிருந்தும், அவள் கடாரத்தின் இளவரசி என்பதைப் புரிந்துகொண்ட மஞ்சளழகியும் அவள்மீது சினம் நிரம்பிய பார்வையை

வீசினாள். மஞ்சளழகியின் அழகிய விழிகளும், அவள் மஞ்சள்நிறத் தேகமும் அவள் இன்னாரென்பதை விளக்கியதால் அவளைச் சுட்டுவிடுபவள்போல் பார்த்த காஞ்சனாதேவி, தனக்கும் அந்த அறைக்கும் இடையே நின்ற அவளை இடது கையால் விலக்கிக் கொண்டு உள்ளே நுழைய முயன்றாள். ஆனால் திறந்திருந்த ஒரே கதவின் இடை வெளியை மஞ்சளழகியின் கை தடுத்து நின்றது. "யார் நீ?" என்ற கேள்வியிலும் அதிகாரத் தொனி இருந்தது.

"அதை அவரைக் கேட்டுத் தெரிந்துகொள்," என்று வேகத்துடன் பதில் கூறிய காஞ்சனாதேவி, "அதிருக்கட்டும் நீ யார்?" என்று வினவினாள்.

மஞ்சளழகியின் இதழ்களில் இகழ்ச்சி நகை விரிந்தது. "அதையும் அவரைக் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்," என்று சொற்களில் மட்டுமின்றி, இளையபல்லவனிருந்த திசையை நோக்கிச் சற்றே திரும்பிய அவள் தலையின் அசைவிலுங்கூட இகழ்ச்சி பலமாகப் பிரதிபலித்தது.

காஞ்சனாதேவியின் கருவிழிகள் கோபத்தை அள்ளி வீசின. "அப்படியா விஷயம்!" என்ற சொற்கள் மிகக் கடுமையுடன் உதிர்ந்தன.

"ஆம். அப்படியேதான் விஷயம்" என்று மஞ்சளழகி மிக அலட்சியத்துடன் பதில் சொன்னாள்.

அதற்கு மேல் தாளமாட்டாத காஞ்சனாதேவி என்ன செய்வதென்றோ என்ன பேசுவதென்றோ அறியாமல் நின்ற இடத்தில் சற்றே துடித்தாள். அவள் துடிப்பையும் கால்களின் நடுக்கத்தையும் மஞ்சளழகி கவனித்தாள். அவள் உணர்ச்சி வேகத்தால் துடிப்பதையும், அதற்குக் காரணம் தானே என்பதையும் ஊகித்துக்கொண்ட மஞ்சளழகி, குறுக்கே தடுத்து நின்ற தனது கரத்தை எடுத்து, "உம். போ உள்ளே!" என்று கூறினாள்.

காஞ்சனாதேவியின் உள்ளம் பெரும் கொதிப்படைந் திருந்ததால் அவள் பதிலேதும் பேசாமல் அறைக்குள்

சென்றாள். அவள் உள்ளே வந்ததும் அறைக் கதவை மீண்டும் சாத்திய மஞ்சளழகி, கதவின்மீது தனது முதுகை வைத்துச் சாய்ந்துகொண்டு காஞ்சனாதேவியையும் இளைய பல்லவனையும் மாறிமாறி நோக்கினாள். பஞ்சணையின் ஒரு மூலையில் சாளரத்துக்கருகே அப்பொழுதும் அமர்ந்திருந்தான் கடல் புறாவின் தலைவன். அதுவரை அவனுக்கிருந்த அசட்டை, நிதானம் எதுவும் அவனிடம் காணப்படவில்லை அந்தத் தருணத்தில். ஏதோ பயந்து ஒடுங்கும் திருடனைப் போலிருந்தது அவன் உட்கார்ந்திருந்த முறையுங் கூட.

அறைக்குள் நுழைந்ததும் காஞ்சனாதேவி சில விநாடிகள் இளையபல்லவனை உற்று நோக்கியதையும், பிறகு பஞ்சணையைக் கண்டதையும், அடுத்தபடி தன்மீது சுடு விழிகளைத் திருப்பியதையும் கண்ட மஞ்சளழகி அவள் சினம் தலைக்கேறிவிட்டதன் காரணத்தைப் புரிந்து கொண்டாள். இளையபல்லவனும் தானும் பஞ்சணையில் தவழ்ந்து சாளரத்தருகே சென்றதாலும் திரும்பத் தான் இறங்கிக் கதவைத் திறக்கச் சென்றதாலும், பஞ்சணையை மறைத்துக் கிடந்த சீலை பெரிதும் கலைந்து கசங்கிக் கிடந்ததைக் காஞ்சனாதேவி தவறாகப் பொருள் கொண்டிருக்கிறாளென்பதை உணர்ந்து கொண்டதால் பெரும் சங்கடத்துக்குள்ளான மஞ்சளழகி தனது கண்களை நிலத்தை நோக்கித் தாழ்த்தினாள். அத்தனை சங்கடத்திலும் ஒரு மகிழ்ச்சியும் இருந்தது அவளுக்கு. 'காஞ்சனாதேவி நினைப்பது மட்டும் உண்மையாயிருந்திருக்குமானால்...' என்று உள்ளூர எண்ணியதால் அவள் உடலெல்லாம் வெட்கமும் மகிழ்ச்சியும் கலந்து ஊடுருவிச் சென்றன.

காஞ்சனாதேவியின் மனத்தில் மகிழ்ச்சி ஏதுமில்லாதது மட்டுமல்ல, துன்பமும் கோபமும் கலந்த உணர்ச்சி அலைகள் எழுந்து எழுந்து அவள் இதயத்தைத் தாக்கின. 'இப்படியும் ஒரு வெட்கங்கெட்டவள் இருப்பாளா? என்னெதிரே சங்கோஜமின்றி நிற்கிறாளே இவள்!' என்று மனத்துக்குள் நினைத்தாள். அந்த நினைப்பை நேரடியாகச் சொல்லாமல்

குத்தலாகப் பேசவும் துவங்கிய காஞ்சனாதேவி, "இளைய பல்லவர் சிறையிலிருப்பதாகத் தேவர் சொன்னார். கோட்டைத் தலைவர் அறையில் சிறையிலிருப்பதாகவும் சொன்னார்" என்று கூறி இளையபல்லவனைக் கூர்ந்து நோக்கினாள்.

அதுவரை கடற்பகுதியைக் கவனிப்பதுபோல் பாசாங்கு செய்துகொண்டிருந்த இளையபல்லவன் மெல்லத் திரும்பி, "என்ன சொன்னார்," என்று மென்று விழுங்கினான்.

"சிறையிலிருப்பதாகச் சொன்னார்..." என்று இகழ்ச்சியுடன் சொற்களை உதிரவிட்ட காஞ்சனாதேவி, "ஆனால்..." என்று கூறி வார்த்தைகளைத் தேக்கினாள், கோபம் தொண்டையை அடைத்ததால்.

"ஆனால் என்ன?" என்று ஏதோ கேட்க வேண்டுமென்பதற்காகக் கேட்டான் இளையபல்லவன்.

"சிறிது தவறு செய்துவிட்டார்."

"என்ன தவறு?"

"நீங்கள் சிறையிருப்பது கோட்டைத் தலைவரின் அறை என்று சொன்னார், தலைவியின் அறை என்று சொல்லவில்லை..."

"உம்?"

"அது மட்டுமல்ல..."

"ஊம்."

"இந்தச் சிறையிலிருந்து நீங்கள் தப்ப இஷ்டப்பட மாட்டீர்கள் என்றும் சொல்லவில்லை." காஞ்சனாதேவியின் சொற்கள் மிகுந்த கடுமையுடனும் இகழ்ச்சியுடனும் ஒலித்தன. அவள் கண்கள் மீண்டும் கலைந்து கிடந்த பஞ்சணையை நோக்கின.

இளையபல்லவனுக்கு என்ன சொல்வதென்று விளங்கவில்லை. எதிரே நின்ற காஞ்சனாதேவியையும் கதவை அடைத்து நின்ற மஞ்சளழகியையும் மாறிமாறிப் பார்த்தான்.

பிறகு கோபத்தை மஞ்சளழகியின் மீது திருப்பி, "எதற்காக அந்தக் கதவை அடைத்துக்கொண்டு நிற்கிறாய்?" என்று சீறினான்.

அதுவரை சங்கடத்தால் நிலத்தை நோக்கியிருந்த தலையைத் திடீரென உயர்த்திய மஞ்சளழகி நன்றாக உடலையும் நிமிர்த்தி நின்றாள். அவள் கண்களிலும் சினம் ததும்பியது. கடுமையே சாதாரணமாகக் காணப்படாத மஞ்சளழகியின் குரலிலும் கடுமை ஒலித்தது. "உங்களிரு வருக்கும் தடையாய் இருந்தால் போய் விடுகிறேன்" என்று சுடுசொற்களை உதிர்த்த மஞ்சளழகி காஞ்சனாதேவியைச் சுடசுடப் பார்த்தாள்.

"ஆமாம். இனிமேல் இங்கிருக்க அவசியமில்லை உனக்கு" என்றாள் காஞ்சனாதேவி எரிச்சலுடன்.

"உனக்கு அவசியமிருக்கிறது. இரு," என்று கூறிவிட்டுச் சரேலெனத் திரும்பிக் கதவைத் திறந்து கொண்டு வெளியே செல்ல முயன்ற மஞ்சளழகியை நோக்கி, "இரு மஞ்சளழகி இரு" என்று கூவிக்கொண்டு பஞ்சணையில் தவழ்ந்து வந்து அவசரஅவசரமாக இறங்கினான் இளையபல்லவன்.

அவன் அவசரத்தைப் பார்த்த காஞ்சனாதேவி, "விழுந்து விடாதீர்கள். மெள்ளப் போங்கள், உங்கள் காதலி எங்கும் ஓடிவிடமாட்டாள்" என்றாள்.

வெளியே செல்ல முயன்ற மஞ்சளழகி சரேலென்று திரும்பினாள். அறையின் உட்பக்கம் நோக்கி, "என்ன சொன்னாய்?" என்று பெரிதும் கோபத்துடன் வார்த்தைகளை உதிர்த்துக்கொண்டே காஞ்சனாதேவியை நோக்கி இரண்டடி எடுத்து வைத்தாள்.

அதைக் கண்டு லவலேசமும் அஞ்சாத காஞ்சனாதேவி, "உன்னுடன் நான் பேசவில்லை" என்று முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

"பின் யாருடன் பேசினாய்? உன் காதலருடன் பேசினாயா?" என்று சீறினாள் மஞ்சளழகி.

காஞ்சனாதேவியின் சினம் தலைக்கேறியது. "ஆம் இவர் என் காதலர்தான். அதைப்பற்றி வெட்கப்படவில்லை நான்" என்று இரைந்தாள் காஞ்சனாதேவி.

"பின் எதைப்பற்றி வெட்கப்படுவாயோ?" என்று வினவினாள் மஞ்சளழகி, மேலும் அவளை நெருங்கி.

"இதற்கு வெட்கப்படுகிறேன்" என்று கூறிய காஞ்சனா தேவி, கலைந்து கிடந்த பஞ்சணையைக் காட்டினாள். அவள் பார்வையிலும் குரலிலும் இகழ்ச்சி பெரிதும் பிரதி பலித்தது.

அந்த இகழ்ச்சிப் பார்வையையோ பேச்சையோ சிறிதும் லட்சியம் செய்யாத மஞ்சளழகி, "இந்தப் பஞ்சணை இந்த ஒருநாள்தான் கலைந்து இருக்கிறது..." என்றாள். மஞ்சளழகி யின் குரலில் இகழ்ச்சி எல்லை கடந்து தொனித்தது.

"என்ன சொன்னாய்?" காஞ்சனாதேவியின் குரலில் சீற்றம் மிதமிஞ்சித் தொனித்தது.

"இந்த ஓர் இரவில்தான் இந்தப் பஞ்சணை கலைந்தது. ஆனால் இங்கு மட்டுமா பஞ்சணையிருக்கிறது..." என்று விஷமத்துடன் இழுத்தாள் மஞ்சளழகி.

"வேறு எங்கு இருக்கிறது?" காஞ்சனாதேவியின் குரலில் சங்கடம் இருந்தது.

"கடல் புறாவிலுந்தான் பஞ்சணை இருக்கும். அங்கும்..."

"அங்கும் என்ன?"

"தலைவரும் இருந்திருக்கிறார். தலைவியும் இருந்திருக் கிறாள். ஒரு நாளல்ல. பல நாட்கள்..."

காஞ்சனாதேவி திக்பிரமை பிடித்து நின்றாள். மஞ்சளழகி எந்தக் கருத்தை உட்புகுத்திப் பேசுகிறாளென்பது நன்றாக விளங்கியது கடாரத்துக் கட்டழகிக்கு. அவள் கோபத்தால் ஒரு விநாடி நடுங்கினாள். அடுத்தபடி நன்றாக நிமிர்ந்து கொண்டு, "மஞ்சளழகி! ஆம். அதுதானே உன் காதலர் உனக்கு இட்ட செல்லப் பெயர்! நன்றாக யோசித்துப் பேசு. யாருடன்

பேசுகிறாய் என்பதைப் புரிந்து கொண்டு பேசு," என்று அதிகாரத் தோரணையில் கூறினாள்.

"யாருடன் பேசுகிறேன்?" இகழ்ச்சி அப்பொழுதும் தொனித்தது மஞ்சளழகியின் குரலில்.

"கடாரத்து இளவரசியிடம்!" பெரும் கௌரவத்துடனும் அதிகாரத்துடனும் கூறினாள் காஞ்சனாதேவி.

"நீ யாருடன் பேசுகிறாய் தெரியுமா?" என்று பதிலுக்குக் கேட்டாள் மஞ்சளழகி.

"யாருடன்?"

"அதையும் நீ புரிந்துகொண்டு பேசுவது நல்லதல்லவா?"

மஞ்சளழகியின் குரல் புதுவிதமாக ஒலித்ததைக் கவனித்த காஞ்சனாதேவிக்கு அதற்குக் காரணம் புரியாததால் சற்றுக் குழப்பத்துடன் கேட்டாள், "நல்லது, சொல்" என்று.

மஞ்சளழகி மிகக் கம்பீரமாக நிமிர்ந்து நின்றாள். "எந்த சாம்ராஜ்யத்துக்குக் கடாரத்தின் சிற்றரசு உட்பட்டதோ, எந்த சாம்ராஜ்யத்தின் அதிபதிக்கு முன்னால் கடாரத்தின் மன்னர் தலைவணங்கி நிற்க வேண்டுமோ, அந்த ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் இளவரசியுடன் பேசுகிறாய் காஞ்சனா! உண்மையில் நீ பேச வேண்டியது இந்த நிலையிலல்ல. என் முன் தலைவணங்கி என் பாதம் பணிந்து நீ பேச வேண்டும்! இவரை உத்தேசித்து உன் சொற்களையும் உன் பதற்றத்தையும் பொறுத்தேன்" என்று பெரும் சக்கரவர்த்தினி பேசுவது போல் பேசிய மஞ்சளழகியின் சொற்களைக் கேட்டதும் விவரிக்க இயலாத பிரமிப்பை அடைந்தாள் காஞ்சனாதேவி. "என்ன நீயா? ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் இளவரசியா!" என்று வினவினாள் கடாரத்தின் இளவரசி தடுமாற்றமடைந்த குரலில்.

"சந்தேகமிருந்தால் இவரைக் கேட்கலாம்" என்றாள் மஞ்சளழகி.

காஞ்சனாதேவி இளையபல்லவனை நோக்கினாள். மஞ்சளழகி சொல்வது முற்றிலும் உண்மையென்பதற்கு அறிகுறியாகத் தலையசைத்தான் இளையபல்லவன். அந்தத் தலையசைப்பு அவள் கோபத்தைக் கிளறவே செய்தது. "இவளை நீங்களும் சக்கரவர்த்தியின் மகளென ஒப்புக் கொள்கிறீர்களா?" என்று வினவினாள்.

அந்த இரு அழகிகளுக்குமிடையில் பழைய சம்பாஷணை மறைந்து புதுவித சம்பாஷணை உதயமானதும் சிறிது சுயநிலையை அடைந்த இளையபல்லவன், "நான் ஒப்புக் கொண்டாலும் ஒப்புக் கொள்ளாவிட்டாலும் உண்மை அதுதான்" என்றான்.

"உண்மை அதுதானா?" வியப்பால் காஞ்சனாதேவியின் வாய் திறந்தது.

"ஆம்" என்றான் இளையபல்லவன்.

"இளவரசியாக ஒப்புக்கொண்டது யார்?"

"இவள் தந்தை."

"யார்? எனது சிறிய தந்தையா?"

"ஆம்."

"இருக்க முடியாது, இருக்க முடியாது." இதைச் சொன்ன காஞ்சனாதேவியின் இதயத்தில் பொறாமைக் கனல் பலமாக வீசியது. மஞ்சளழகி சாம்ராஜ்யத்தின் இளவரசியாகி விட்டாளே என்பதனாலேற்பட்ட பொறாமையல்ல அது. இளையபல்லவன் மன சாம்ராஜ்யத்தைப் பிடித்துவிட்டாளே என்ற பொறாமையால் நிதானம் இழந்து முறை தவறியும் பேச ஆரம்பித்தாள். "இருக்க முடியாது" என்று மீண்டும் வலியுறுத்தினாள்.

"ஏனிருக்க முடியாது?" என்று குறுக்கே புகுந்தது மஞ்சளழகியின் கேள்வி.

"உன் தந்தை சாம்ராஜ்யாதிபதிதான். ஆனால் அவர் மணமாகாதவர்," என்ற காஞ்சனாதேவியின் சொற்களில் பொறாமை மின்னல் பயங்கரமாகப் பளிச்சிட்டது.

"சொல், சொற்களை முடி." மஞ்சளழகியின் குரல் பயங்கரமாக ஒலித்தது.

"உன் தாய்..." சொற்களை விழுங்க முயன்றாள் காஞ்சனா தேவி, ஆனால் பொறாமையை விழுங்க முடியவில்லை அவளால். பொறாமை மின்னல் அவள் முகத்திலும் குரலிலும் கூடப் பளிச்சிட்டது.

மின்னலைத் தொடர்ந்து வரும் இடி அடுத்த விநாடி எழுந்தது. அதன் பயங்கரம் அந்த அறையையே நடுங்க வைத்தது. சற்றும் எதிர்பாராத விளைவு கண் மூடிக் கண் திறப்பதற்குள் நிகழ்ந்துவிட்டது.



அத்தியாயம் 64

# அவள் அளித்த பரிசு

விநாடி நேரத்தில் கண் மூடிக் கண் திறப்பதற்குள் நிகழ்ந்துவிட்ட அந்த விபரீதத்தைக் கவனித்ததால் பெரும் சங்கடத்துக்கும், ஏன், அச்சத்துக்குங்கூட உள்ளான இளைய பல்லவன், என்ன செய்வது ஏது செய்வது என்றறியாமல் பிரமை பிடித்துப் பல விநாடிகள் அந்த இருமங்கையர் களுக்குமிடையில் நின்றுவிட்டான். மஞ்சளழகியின் தாயைப் பற்றிக் காஞ்சனாதேவி பிரஸ்தாபிக்க முற்பட்டதுமே ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்து இளவரசியின் முகத்தில் என்றும் தான் காணாத கோபாக்கினி துளிர் விட்டதையும், அவள் உதடுகளும் மெள்ளத் துடிப்புடன் அசைந்ததையும் கவனித்த இளையபல்லவன் அடுத்து ஏதோ விபரீதம் ஏற்படப் போகிறதென்று எண்ணிக் கொண்டிருக்கையிலே திடீரென்று அந்தப் பயங்கர சம்பவம் நிகழ்ந்துவிட்டதால் அவன் மட்டுமல்ல, காஞ்சனாதேவிகூட நிலைகுலைந்து போனாள். "உன் தாய்—" என்று துவங்கி மேலே பேச முடியாமல் சொற்களை விழுங்கிய அந்த விநாடியிலேயே மஞ்சளழகியின் வலது கரம் சரேலென்று எழுந்து காஞ்சனாதேவியின் கன்னத்தில் பாய்ந்துவிட்டது.

பளீரென்று விழுந்த அந்த அடியின் வேகத்தால் அடைந்த துன்பத்தைவிட, அந்த அடி அளித்த அவமானத்தின் வேகத்தைச் சகிக்க முடியாத கடாரத்தின் இளவரசி, கன்றிச் சிவந்த கன்னத்தைக்கூடத் தடவிக் கொள்ளச் சக்தியற்றவளாய் மஞ்சளழகியின் முன்பு நின்றாள். அவள் பங்கஜ விழிகளில் நீர்த்துளிகள் திரண்டு எழுந்தன. அடிபட்டவள் கண்களில் நீர்த்துளிகள் எழுந்ததற்குக் காரணமுண்டு. அடித்த மஞ்சளழகியின் கண்களில் எதற்காக நீர்த்துளிகள் எழு

வேண்டும்? அந்த இரண்டு மங்கையரும் அந்தச் சோகக் கட்டத்தில்கூடப் பார்ப்பதற்கு அழகாகவே இருந்தார்கள். அவர்கள் கண்களில் திரண்ட நீர்த்துளிகள்கூட அவர்கள் முகங்களுக்குத் தனிச் சோபையை அளித்தன. அந்த இரண்டு அழகிகளின் சீற்றத்துக்கிடையே, இரண்டு பெண் புலிகளுக் கிடையே நிற்கும் ஆண் புலியென நின்றிருந்த இளைய பல்லவன் நிலை விவரிக்க இயலாததாயிருந்தது.

காஞ்சனாதேவியின் பொறாமை மின்னலைத் தொடர்ந்து மஞ்சளழகியின் கையடிக்குப் பிறகு ஏற்பட்ட பலவித உணர்ச்சிகளால் மூன்று பேரும் மௌனமே சாதித்தார்கள் பல விநாடிகளுக்கு. மூவரில் முதன் முதலாக மஞ்சளழகியே சுய நிலையடைந்தாள். வெகு சீக்கிரம் தனது முந்தானையால் கண்களைத் துடைத்துக்கொண்ட மஞ்சளழகி ஒருமுறை அந்த அறையிலிருந்த மற்ற இருவரையும் நோக்கினாள். பிறகு மிகுந்த கம்பீரத்துடன் தலையை நிமிர்த்திக் கொண்டாள். அவள் பார்த்த பார்வை பெரும் சக்கரவத்தினியின் பார்வையாக இருந்ததை இளையபல்லவன் மட்டுமின்றி, கண்ணீரின் மூலம் காஞ்சனாதேவிகூடக் கண்டாள். அந்தச் சில விநாடிகளில் மஞ்சளழகியைப்பற்றி தான் அதுவரை போட்டிருந்த எடை மிகவும் தவறு என்பதையும், நாடாளத் தன்னைவிடத் தகுதியுள்ள ஒருத்தியைத் தான் சந்தித்து விட்டதையும் உணர்ந்துகொண்ட காஞ்சனாதேவி, அழகும் திறமையும் ஒருங்கே அமைந்த மஞ்சளழகியிடம் இளையபல்லவன் மனத்தைப் பறிகொடுத்ததில் வியப்பில்லை என்பதையும் உணர்ந்துகொண்டாள். இந்த உணர்வின் விளைவாக ஏதோ சொல்ல அவள் உதடுகள் அசையத் தொடங்கின.

எதையும் சொல்ல வேண்டாமெனத் தன் கையின் கம்பீரச் சைகையினாலேயே உணர்த்திய மஞ்சளழகி இளைய பல்லவனை நோக்கி, "இளையபல்லவரே! உமது காதலியை அடித்தது பற்றி வருந்துகிறேன். இனி நீங்கள் உங்கள் கடமையைச் செய்யலாம்" என்றாள் சிறைப்பட்ட மகாராணி பேசும் குரலில்.

இளையபல்லவனுக்கு ஏதும் புரியாததால், "என் கடமையா? எதைச் சொல்கிறாய் மஞ்சளழகி?" என்று வினவினான்.

"மலையூர்க் கோட்டை பிடிபட்டு விட்டது இளைய பல்லவரே! அதை அறிவிக்கத்தான் தங்கள் காதலியார் வந்தார். ஆகவே அடுத்து நடக்க வேண்டியதைக் கவனிக்கலா மல்லவா?" என்றாள் மஞ்சளழகி.

"அடுத்து நடக்க வேண்டியது என்ன?"

"ஒரு கடற்படைத் தலைவரிடம் ஒரு கோட்டை சிக்கு கிறது, அடுத்தபடி அவர் என்ன செய்வார்?"

"கோட்டைக் காவலைத் தன் வீரர்களைக் கொண்டு உறுதிப்படுத்துவது, எதிரிகளை..." என்று சொல்லப்போன இளையபல்லவன் மேற்கொண்டு பேசமுடியாமல் திகைப்புற்று நின்றான்.

அவன் திகைப்பைக் கவனித்த மஞ்சளழகியின் முகம் அனுதாபத்தால் சற்றே கனிந்தது. அவன் திகைப்பதாக நடித்துப் பார்த்திருக்கிறாள் அவள், பல சந்தர்ப்பங்களில். ஆனால் அவன் உண்மையாகத் திகைத்ததை அன்றுதான் பார்த்தாளாகையால், அத்தகைய மாவீரனைத் திகைக்கச் செய்த தன்னையே நொந்து கொண்டாள் ஒருகணம். அடுத்தபடி அனுதாபத்துடன் பேசவும் முற்பட்டு, "ஏன் திகைக்கிறீர்கள் இளையபல்லவரே! ஏன் சொற்களைப் பாதியில் நிறுத்திவிட்டீர்கள்?" என்று கேட்டாள்.

இளையபல்லவன் அவளை வியப்புடன் பார்த்தான். கேவலம் பறவைபோல் கொள்ளையரிடையில் உலாவி வந்த மஞ்சளழகி ஓர் ஆண்டுக்குள்ளாகவே எத்தனை மாறி விட்டாளென்பதை எண்ணிப் பார்த்தான். அவள் கம்பீரத் தோற்றத்துக்கும் மாற்றத்துக்கும் காரணம் அவளுக்குத் திடீரென ஜெயவர்மன் அளித்த பதவியாயிருக்க முடியுமா என்று நினைத்துப் பார்த்து அதுவாயிருக்க முடியா தென்ற முடிவுக்கு வந்தான். 'இவளும் ஆளப் பிறந்தவள்!

கொள்ளையர் மத்தியில் இருந்தபொழுது சூழ்நிலையின் நீறு மூடியிருந்தது இந்த நெருப்புத் துண்டத்தை. அந்த நீற்றை ஜெயவர்மன் ஊதிவிடவே இயற்கையான கம்பீர அக்னி சுடர் விடுகிறது' என்று தனக்குள் சொல்லிக்கொண்ட இளைய பல்லவன், "சொற்களைப் பாதியில் நிறுத்தக் காரணமிருக்கிறது மஞ்சளழகி! நீ சொல்வதைச் செய்ய எனக்குத் திறனில்லை" என்றான்.

"இளையபல்லவருக்கா! திறனில்லையா?" என்றாள் மஞ்சளழகி இகழ்ச்சியுடன்.

அந்த இகழ்ச்சியைக் கவனித்தும் சட்டை செய்யாத இளையபல்லவன், "ஆம் மஞ்சளழகி! திறனில்லை" என்றான்.

"காஞ்சனாதேவிக்காக கங்கதேவனைக் கொன்ற இளையபல்லவருக்கா திறனில்லை?" என்ற மஞ்சளழகியின் கேள்வியின் பொருள் பலவாறாகத் தொனித்தது. கங்கதேவன் கொல்லப்பட்டது மாநக்காவரத்தைக் கைப்பற்ற மட்டுமல்ல என்பதை மஞ்சளழகி அறிந்து கொண்டிருக்கிறாள் என்பதைப் புரிந்துகொண்ட இளையபல்லவன் பெரும் சங்கடத்துக்குள் ளானான். அவன் மட்டுமல்ல, காஞ்சனாதேவியின் நிலைமை யும் சங்கடத்துக்குள்ளாகியது. அந்த இருவர் சங்கடத்தையும் அதிகப்படுத்தச் சொன்னாள் மஞ்சளழகி, "மாநக்காவரத்தில் நடந்தது பூராவையும் வணிகர் சொல்லக் கேட்டேன் இளைய பல்லவரே! அதிலிருந்துதான் முடிவுக்கு வந்தேன், அவசிய மில்லாதிருந்தும் நீங்கள் கங்கதேவனைக் கொன்றீர்கள் என்பதை" என்று.

இளையபல்லவன் பதிலேதும் சொல்லவில்லை. காஞ்சனாதேவி மட்டும் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு கேட்டாள், "அவசியமில்லை யென்பது உனக்கெப்படித் தெரியும்?" என்று.

பதிலுக்கு மஞ்சளழகி அத்தனை சோகத்திலும் புன்முறுவல் பூத்தாள். "உன்னைவிட இளையபல்லவரை நான் நன்கு அறிந்திருப்பதால் தெரியும். பாலூர்ப் பெருந்துறையில்

அவரைச் சிறை மீட்க நீ உதவினாய். அவர் மட்டும் தனித்து உன்னைக் காப்பாற்ற வேண்டிய சந்தர்ப்பங்கள் குறைவு. ஒரே சந்தர்ப்பம் மாநக்காவரத்தில் கிடைத்தது. அந்தச் சந்தர்ப்பத்தில் கங்கதேவனைப் பாதுகாக்க வேண்டிய மாலுமிகளையும் மரக்கலங்களையும் தன் கைக்கு மாற்றிக்கொண்டு விட்டார். இஷ்டமிருந்தால் அவர் கங்கதேவனைச் சிறை செய்து உயிருடன் விட்டிருக்கலாம். ஆனால் வேண்டுமென்று தனியிடத்துக்கு வரவழைத்து அவனைக் கொன்றிருக்கிறார். காரணம் எனக்குத் தெரியும். நீயும் தெரிந்து கொள்வது நல்லது" என்றாள் மஞ்சளழகி சோகப் புன்முறுவலுக்கிடையே.

"என்ன காரணம்?" என்றாள் காஞ்சனாதேவி சங்கடத்துடன்.

"உன்னை கங்கதேவன் ஏதோ ஒருவிதத்தில் அவமதித்திருக்க வேண்டும். உன்னிடம் தகாத எண்ணம் கொண்டிருக்க வேண்டும். ஆகையால்தான் அவனைக் கொன்றிருக்கிறார் இவர்" என்று மஞ்சளழகி இளையபல்லவனை நோக்கித் திரும்பி, "இல்லையா இளையபல்லவரே?" என்றும் வினவினாள்.

அவள் ஊகம் நூற்றுக்கு நூறு சரியென்பதை இளையபல்லவன் மட்டுமின்றி காஞ்சனாதேவியும் அறிந்திருந்ததால் இருவரும் பேசச் சக்தியற்று வாயடைத்து நின்றார்கள். மஞ்சளழகி மேலும் பேசத் துவங்கி, "காஞ்சனாதேவி! அவர் செய்கையிலிருந்து உனக்கொரு படிப்பினை தேவை" என்றாள்.

"என்ன படிப்பினை!" காஞ்சனாதேவியின் குரல் வறண்டு கிடந்தது.

"பெண்களின் கௌரவம் உயிரைவிட முக்கியமென்பது. உன் கௌரவத்திற்காக ஒருவன் உயிர் போயிருக்கிறது பார்" என்றாள் மஞ்சளழகி.

"பெண்களின் கௌரவம் முக்கியமென்பது எனக்கே தெரியும்" என்றாள் காஞ்சனாதேவி சற்றே கோபம் சொற்களில் தொனிக்க.

"தெரிந்தால் அதைப் பின்பற்றி நடக்கவும் தெரிந்து கொள்" என்றாள் மஞ்சளழகி, ஏதோ சீடனுக்குப் போதிக்கும் குருவைப்போல.

"இதை நீ எனக்கு உபதேசிக்க அவசியமில்லை."

"அவசியமிருக்கிறதால்தான் சொல்கிறேன்."

"என்ன அவசியத்தைக் கண்டுவிட்டாய் நீ? ஒரு பெண்ணைக் கன்னத்திலடிக்கும் நீ பெண் கௌரவத்தைப் பற்றிப் பேசுவது விந்தையாயிருக்கிறது!"

"கன்னத்திலடித்தது சாதாரண தண்டனை" என்றாள் மஞ்சளழகி, நிர்ப்பயமாகக் காஞ்சனாதேவியை நோக்கி.

"சாதாரண தண்டனையா!" கோபம் மிதமிஞ்சித் தொனித்தது காஞ்சனாதேவியின் கேள்வியில்.

"ஆம். பெண் கௌரவத்தை அல்பமாக நினைத்ததற்காக கங்கதேவனைக் கொல்லவில்லையா இவர்! அதை ஒப்பிட்டுப் பார் இந்த அடியுடன்" என்றாள் மஞ்சளழகி.

இந்தப் பதில் காஞ்சனாதேவியைத் திகைக்க வைத்தது. அந்தத் திகைப்பு அவள் முகத்தில் பூரணமாகப் பிரதி பலிக்கவும் செய்தது. அதைக் கவனித்த மஞ்சளழகி மேலும் சொன்னாள்: "காஞ்சனாதேவி! நீ ஒரு நாட்டின் இளவரசி. நாளைய சாம்ராஜ்ய பீடத்தில் அமர்ந்தாலும் அமரலாம். ஆகையால் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள். சொற்களை அளந்து பேசு. இந்த அறைக்கு வந்ததும் உன்னைப் போல் நானும் ஒரு பெண் என்பதை மறந்து பஞ்சணையைச் சுட்டிக் காட்டி எனக்கு மாசு கற்பித்துப் பேசினாய். மரக் கலத்தில் நீயும் இவரும் தனித்திருந்ததைச் சொல்லிச் சுட்டிக் காட்டினேன். அப்பொழுதும் நீ மசியவில்லை. பொறாமை யால் உணர்ச்சிகளைக் காற்றில் பறக்கவிட்டாய். இன்னொரு பெண், அதுவும் என் தாய், அவள்மீதும் மாசு கற்பிக்க முனைந்தாய். தாய்மையின் புனிதத் தன்மையை உணராத பெண் பெண்ணே அல்ல காஞ்சனாதேவி. இதை நன்றாக உணர்ந்து கொள். அது மட்டுமல்ல. புதுத் தலைமுறையை

ஈன்றுகொடுக்கும் தாய்மார்களை வைத்து அரசாள வேண்டிய நீ அவர்களைப் புனிதமாக நினைக்கவும் கற்றுக்கொள்ள வேண்டும். அதிகார மமதை, ஏன், காதல் பொறாமை கூட உன் கண்களை மறைக்கக் கூடாது. அப்பொழுதுதான் நீ சக்கரவர்த்தினியாக முடியும்?"

காஞ்சனாதேவி திக்பிரமை பிடித்து நின்றாள். மஞ்சளழகியின் தீரம், கௌரவமான பார்வை, உபதேசம் அனைத்தும் அவளை நடுங்க வைத்தன. கோபத்தில், பொறாமையில் எத்தனை பெரிய தீமையை அவளுக்கு விளைவித்துவிட்டோம் என்ற எண்ணம் அப்பொழுதுதான் காஞ்சனாதேவிக்கு உதயமாயிற்று. காஞ்சனாதேவியின் உள்ளத்தே அதுவரை புதைந்து கிடந்த கருணை உணர்ச்சி மேலெழுந்தது. இரண்டடியில் மஞ்சளழகியின் அருகே சென்று அவள் கையிரண்டையும் பிடித்துக்கொண்டாள் காஞ்சனாதேவி. "மஞ்சளழகி-" என்று பேசவும் துவங்கி மேலே ஏதும் பேச முடியாமல் வாயடைத்து நின்றாள்.

வாய் சொல்ல முடியாததைக் கண்கள் சொல்லின. காஞ்சனாவின் கருவிழிகளில் படர்ந்த உள்ளக்கிடக்கையைக் கண்ட மஞ்சளழகி அடிபட்ட அவள் கன்னத்தை ஒரு விநாடி தடவிக் கொடுத்தாள். பிறகு சரேலெனத் திரும்பி அந்த அறையிலிருந்து வெளியே ஓடினாள். காஞ்சனாதேவியும் இளையபல்லவனும் ஒருவரையொருவர் நோக்கிக்கொண்டு மௌனமாகவே நின்றார்கள். மௌனத்தைக் காஞ்சனா தேவியே கலைத்தாள், "பாவம்?" என்ற ஒரு சொல்லால்.

இளையபல்லவன் விழிகள் வெறித்த பார்வையொன்றைக் காஞ்சனாதேவியை நோக்கி வீசின. "ஆம். பரிதாபத்துக் குரியவள்தான்" என்ற சொற்களை அவன் உதடுகள் வருத்தத்துடன் உதிர்த்தன.

"உங்களைப் பிரிந்த பரிதாபத்தைத்தானே குறிப்பிடு கிறீர்கள்?" என்றாள் காஞ்சனாதேவி அச்சம் நிரம்பிய குரலில்.

"இல்லை! காஞ்சனா! என்னைப் பிரிந்தது மட்டுமல்ல பரிதாபம். எத்தனையோ இழந்தாள் அவள் இந்த வயதுக்குள். குழந்தையிலேயே தாயை இழந்தாள். தந்தை சாம்ராஜ்யாதி பதியாயிருந்தாலும் அவரைத் தந்தையென்று அழைக்கும் தகுதியை இழந்தாள். என்னையும் இழந்தாள் அக்ஷயமுனைக் கோட்டையிலிருந்து. அதுமட்டுமல்ல, எனக்காக இந்த ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தையும் இழந்துவிட்டாள்!" என்றான் இளையபல்லவன் துக்கம் கொட்டிய குரலில்.

"சாம்ராஜ்யத்தை இழந்தாளா!" என்று வினவினாள் காஞ்சனாதேவி ஆச்சரியத்துடன்.

"ஆம், காஞ்சனா! சாம்ராஜ்யத்தை இழந்தாள். அவள் இஷ்டப்பட்டிருந்தால் நேற்றிரவிலேயே நமது மரக்கலங்கள் அனைத்தையும் அழித்திருக்கலாம். நமது மரக்கலங்கள் அழிந்திருந்தால் இந்த மலையூர்க் கோட்டையில் இன்று நாமனைவரும் சிறைப்பட்டிருப்போம். ஆனால் வெற்றியடைய இஷ்டப்படவில்லை அவள். எனது வெற்றியையே நாடினாள். ஆகையால்தான் இந்தக் கோட்டைப் பாதுகாப்புக்காகச் செய்திருந்த அழிவுச் சாதனங்களை உபயோகப்படுத்தவில்லை. என்னிடம் கோட்டையை ஒப்படைத்திருக்கிறாள். இன்று நாமடைந்திருக்கும் வெற்றி அவள் வெற்றி" என்றான் இளைய பல்லவன்.

"அப்படியானால் நீங்கள் அனுப்பிய இந்தக் கோட்டையின் உபதலைவன், நீங்கள் செய்த சமிக்ஞைகள், இவை..."

"மஞ்சளழகி நமக்களித்த பெரு வெற்றியின் சிறு சம்பவங்கள். பெரும் பாறைகளையும், தீப்பந்தங்களையும் நெடுந்தூரம் வீசும் பெரும் யந்திரங்களை மஞ்சளழகி இந்தக் கோட்டையில் அமைத்திருந்தாள். எனக்கும் காட்டினாள். அந்த யந்திரங்கள் நதிப்பகுதியை நோக்கி நின்றன. மஞ்சளழகி மட்டும் கண்ணை அசைத்திருந்தால் கடல் புறாவும் மற்ற மரக்கலங்களும் படுசூரணமாகப் போயிருக்கும். ஆனால் யந்திரங்களை அவள் வீசவில்லை. தன்னைக் கொன்று தப்பிச்

சென்று என் மாலுமிகளுடன் மீண்டும் வந்து கோட்டையைப் பிடிக்கச் சொன்னாள். நான் இசையவில்லை. மஞ்சளழகியின் தியாகம் மகத்தானது. எனக்காகச் சகலத்தையும் உதறியிருக் கிறாள். இன்று அவள் தயவால், இராஜேந்திர சோழ தேவர் வெகு சிரமப்பட்டுப் பிடித்த இக்கோட்டையை மிகச் சுலபமாக நாம் பிடித்திருக்கிறோம்" என்றான் இளைய பல்லவன், குரலில் உணர்ச்சி பொங்க.

"ஆம், எதிர்ப்பு அதிகமில்லை. நமது ஆயிரம் மாலுமிகள் கோட்டையை ஆக்ரமித்துக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே இப்பொழுது நகரமும் நமது கையிலிருப்பதாக வைத்துக் கொள்ளலாம்" என்று ஒப்புக்கொண்டாள் காஞ்சனாதேவி.

"இது அவள் அளித்த பரிசு" என்று கூறினான் இளைய பல்லவன். அவன் சொற்களில் உற்சாகம் ஏதுமில்லை. ஒரு நாழிகைக்கெல்லாம் அமீரும் கண்டியத்தேவனும் வந்து கோட்டை பூரணமாகக் கையில் சிக்கிவிட்டதெனச் சொன்ன செய்தியையும் உற்சாகமில்லாமலே வாங்கிக் கொண்டான். மேற்கொண்டு நகரப் பிரமுகர்களை வரவழைக்கவும் சோழர் புலிக்கொடியை மலையூர்க் கோட்டை மீது ஏற்றவும் உத்தரவிட்டபோதும் எந்த உற்சாகத்தையும் காட்டவில்லை அவன்.

காஞ்சனாதேவியைக்கூட அறையை விட்டு அனுப்பி விட்ட அவன் அன்று பூராவும் அந்த அறையில் உற்சாக மின்றியே கழித்தான். நகரத்துப் பெரியோர்கள் வந்ததும் நகரம் பிடிபட்ட விஷயத்தைத் தெரியப்படுத்திச் சிறந்த தமிழ் வணிகர் நால்வரிடை நகரத்தின் நிர்வாகத்தை ஒப்படைத்தும், தனது மாலுமிகளில் இருநூறு பேரையும் உள்ளூரிலிருந்து கிடைக்கக்கூடிய தமிழ் வீரர்கள் பலரையும் கோட்டையை நிர்வாகம் செய்ய உத்தரவிட்டும், தனது கடமைகளைத் திட்டமாக முடித்துவிட்ட இளையபல்லவன் நகரமக்கள் வெற்றிவிழாக் கொண்டாடவும் அனுமதித்தான். அதற்குப் பிறகு தனது அறையில் யாரையும் அனுமதிக்கவில்லை அவன்.

வெற்றிவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. மலையூரில் கோட்டையில் பெரும் பெரும் தீபங்கள் ஏற்றப்பட்டன. தமிழ் வணிகரையும் ஊழியரையும் பெரும்பாலாக உடைய அந்த நகரம் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்ந்தது. அந்த மகிழ்ச்சியிலோ கொண்டாட்டங்களிலோ கலந்துகொள்ளாத இளைய பல்லவன், அந்த அறையில் தனித்தே இருந்தான் இரண்டு நாட்களும். அவனைப் பார்க்க விரும்பிய காஞ்சனா தேவிக்குக்கூட இடம் தரவில்லை அவன். இரண்டு நாட்களில் மலையூர் நிர்வாகத் திட்டத்தை அமைத்துக் கொடுத்ததும் மூன்றாவது நாள் புறப்படச் சித்தப்பட்ட இளையபல்லவன் அமீரையும் கண்டியத்தேவனையும் அழைத்துக் கோட்டைக் காவலுக்கு அவசியமான பேரைத் தவிர மற்ற மாலுமிகளை மரக்கலங்களுக்குச் செல்ல உத்தரவிடுமாறு பணித்தான். தானும் புறப்படச் சித்தமானான். உத்தரவைப் பெற்றதும் கண்டியத்தேவன் விரைந்தான். சற்றே தயங்கிய அமீரை நோக்கி இளையபல்லவன், "என்ன அமீர்? ஏதாவது சந்தேக மிருக்கிறதா?" என்று வினவினான்.

"ஆம் இளையபல்லவரே! இருவரைப் பற்றி உத்தரவு தேவையாயிருக்கிறது" என்றான் அமீர்.

இளையபல்லவன் அமீர் எதிர்பார்ப்பது என்ன வென்பதைப் புரிந்துகொண்டு சற்று நேரம் தீவிரமாக யோசித்தான். பிறகு தன் முடிவைக் கூறினான். முடிவு திருப்தியாயில்லை அமீருக்கு. "இதனால் சங்கடங்கள் இருக்கின்றன" என்றும் கூறினான்.

"என்ன சங்கடம்?" என்று வினவினான் இளைய பல்லவன்.

"நமது அடுத்த குறி."

"ஸ்ரீவிஜயம்."

"அதற்கு இந்த முடிவு இடையூறல்லவா?"

இதைக்கேட்ட இளையபல்லவன் புன்னகை பூத்தான். அமீரின் அருகில் வந்து அவன் தோள்மீது தனது வலது கையை வைத்து அவனை உற்று நோக்கி, "சில இடையூறுகளை நாம் தவிர்க்க முடியாது அமீர்" என்று கூறினான் பொருள்பட.

அமீர் புரிந்துகொண்டான். ஆகவே வருத்தத்துடன் தலையசைத்து இஷ்டமில்லாத அலுவலை நாடிச் செல்பவன் தோரணையில் நடந்து சென்றான். அடுத்த நாள் மாலை கடல் புறாவும் அதன் துணை மரக்கலங்களும் நங்கூரங்களை எடுத்து நகர்ந்தன நதியின் முகத்துவாரத்தை நோக்கி. கடல் புறாவின் தளத்தில் நின்று எதிரே விலகிக் கொண்டிருந்த மலையூர்க் கோட்டையைக் கவனித்துக் கொண்டிருந்தான் இளையபல்லவன். "அவள் அளித்த பரிசு இது. நானென்ன அளிக்கப் போகிறேன் அவளுக்கு?" என்று அவன் உதடுகளில் இருந்து சொற்கள் உதிர்ந்தன. சோகப் புன்முறுவலொன்று அவன் உறுதியான உதடுகளில் தவழ்ந்து அசையாத அந்த அதரங்களைக் கூடச் சற்றே துன்பத்தால் நெகிழ வைத்தது.





அத்தியாயம் 65

# மூன்றே சொற்கள்

மலையூர்க் கோட்டை பிடிபட்ட நாளிலிருந்தே மஞ்சளழகியை நினைந்து நினைந்து மனமுருகித் தவித்த இளையபல்லவனின் இதய நிலை, அன்றிலிருந்து மூன்றாவது நாளன்று அவ்வூரை விட்டு அகன்றுகொண்டிருந்த சமயத்தில் கூடப் பெரும் சஞ்சலத்திலேயே இருந்ததென்றால் அதற்குப் பலமான காரணங்கள் பல இருக்கவே செய்தன. கடல் புறா கிழக்கு நோக்கி ஹரி நதியில் நகர்ந்து கொண்டிருந்த சமயத்தில் மலையூரின் நதிக்கரையில் கூடி நின்ற ஏராளமான ஜனக்கூட்டம் தன்னை வழியனுப்பிக் கிளப்பிய பெரும் வாழ்த்துக் கூச்சலுக்கும், ராணுவத்தினர் வாள் தாழ்த்திச் செய்த பெரும் மரியாதைகளுக்கும் மூல காரணம் மஞ்சளழகியே என்பதைச் சந்தேகமற அவன் அறிந்திருந்தான். மலையூர்க் கோட்டை மீது அப்பொழுது பறந்து கொண் டிருந்த புலிக்கொடியின் கம்பீரக் காட்சியை மஞ்சளழகியின் உதவியில்லையேல் யாரும் கண்டிருக்க முடியாதென்பதும் அவனுக்குப் புரிந்திருந்தது. மஞ்சளழகியின் மகத்தான தியாகத்தின் பரிமாணத்தை அளவிடக்கூட முடியாதிருந்த தால் அவன் இதயம் உணர்ச்சி அலைகளில் தூக்கித் தூக்கி அப்படியும் இப்படியும் எறியப்பட்டுக் கொண்டிருந்தது. மலையூர், ஸ்ரீவிஜயத்தின் முன்வாசல் என்பதையும் மலையூர் பிடிபட்டால் ஸ்ரீவிஜயம் பிடிபட்டது போலத்தான் என்பதை யும் உணர்ந்திருந்த இளையபல்லவன், 'எத்தனை பெரிய சாம்ராஜ்யத்தை மஞ்சளழகி என் கையிலெடுத்து ஏதோ பெரும் கனியைக் கொடுப்பதுபோல் கொடுத்துவிட்டாள்' என்று நினைத்துப் பார்த்து அந்த நினைப்பால் அதிர்ச்சியும் அடைந்தான். ஸ்ரீவிஜயத்தின் தலைநகரைத் தாக்கிப் பிடிக்கத் தான் நீண்ட நாளாகவே ஏற்பாடுகளைச் செய்திருந்தாலும்

ஸ்ரீவிஜயத்துக்கு உதவக்கூடிய சக்திகளை மெள்ள மெள்ளத் துண்டித்து விட்டாலும், யாரும் அணுகுவதற்குரிய ஸ்ரீவிஜயத்தின் மணிக்கதவையும் வித்தியாதரத் தோரணத்தையும் உடைத்து அந்த நகரத்தைக் கைப்பற்றுவது அவ்வளவு எளிதல்லவென்பதையும், ஆனால் இப்பொழுது மலையூர் கைவசப்பட்டுவிட்டபடியால் ஸ்ரீவிஜயத்தின் பாதுகாப்புக்கள் பெரும் பலவீனமடைந்து விட்டதையும், அப்படி எதிரியைப் பலவீனமடையச் செய்தது மஞ்சளழகியின் மகத்தான தியாகமே என்பதையும் அவன் எண்ணி எண்ணிக் கலங்கினான்.

'அவள் ஏன் சாம்ராஜ்யத்தை உதறி விட்டாள்? தந்தை முதலில் அவளை உதறியது உண்மைதான். இருப்பினும், பின்னால் அவளை மகளாக உலகுக்கு அறிவித்து, இளவரசியாகவும் ஏற்றுக்கொண்ட பிறகு ஏன் அவரை உதறி விட்டாள்? அத்தனை தியாகத்துக்கு நான் தகுதியா?' என்று தன்னைத்தானே இரண்டு மூன்று முறை கேட்டுக் கொண்டான். அதை மட்டும் அவன் கேட்டுக்கொள்ளவில்லை. 'காஞ்சனாவுடன் மஞ்சளழகியையும் அழைத்துக் கொண்டு வந்து விட்டோமே, இது சரியா?' என்ற கேள்வியும் அவன் மனத்துள் எழுந்தது. இதுபற்றி மலையூர்க் கோட்டையில் அமீர் சுட்டிக் காட்டிய ஆபத்தையும் நினைத்துப் பார்த்தான் அவன்.

கோட்டையிலிருந்தபோது கேட்டான் அமீர், "இருவரைப் பற்றி உத்தரவு வேண்டியிருக்கிறது" என்று.

"இந்தக் கோட்டையின் உபதலைவனை விடுதலை செய்து ஸ்ரீவிஜயத்துக்கு அனுப்பிவிடு" என்றான் இளைய பல்லவன்.

"அவன் போய் ஜெயவர்மனிடம் இங்கு நடந்ததையெல்லாம் சொல்வானே?" என்று வினவினான் அமீர்.

"சொல்லட்டும் என்பதற்காகத்தான் அவனை அனுப்புகிறேன்" என்று கூறினான் இளையபல்லவன்.

"அதனால் மஞ்சளழகிக்குக் கஷ்டம் ஏற்படுமே? கோட்டையை எதிரி கையில் கொடுத்த மகளை ஜெயவர்மன் தண்டிக்காமலிருப்பானா?"

"மாட்டான்."

"ஆகையால்..."

"மஞ்சளழகியைக் கடல் புறாவுக்கு அனுப்பிவிடு."

இதைக்கேட்ட அமீர், திகைத்துச் சில விநாடிகள் வாயடைத்து நின்றான். பிறகு கேட்டான் மீண்டும், "மஞ்சளழகியை- கடல் புறாவுக்கா!" என்று சிறிது தடுமாற்றத்துடன்.

"ஆம்." திட்டமாக வந்தது இளையபல்லவன் பதில்.

"இதில் சங்கடங்களிருக்கின்றன" என்று சுட்டிக் காட்டினான் அமீர்.

என்ன சங்கடங்களை அமீர் குறிப்பிடுகிறானென்பதை இளையபல்லவன் உணர்ந்தேயிருந்தான். இருப்பினும் அவற்றை உணராதவன்போல், "என்ன சங்கடங்கள்?" என்று வினவினான்.

"ஏற்கெனவே ஒரு பெண்..." என்று இழுத்தான் அமீர்.

"ஆம். காஞ்சனாதேவி இருக்கிறாள் கடல்புறாவில்" என்று வாசகத்தைப் பூர்த்தி செய்தான் இளையபல்லவன்.

"இப்பொழுது மஞ்சளழகியையும் சேர்த்துவிட்டால்."

"பெண்கள் இருவர்."

"ஒரு பெண் இருந்தாலே போர்க்கப்பலில் கஷ்டங்கள் உண்டு."

"இருவர் இருந்தால் பெரும் தொல்லை என்கிறாய்?"

"தொல்லை எங்களுக்கல்ல" என்று உறுமினான் அமீர், எரிச்சலின் காரணமாக.

"எனக்குத்தான் தொல்லை அமீர். இருப்பினும் அத் தொல்லையால் அனுகூலங்கள் இருக்கின்றன. காஞ்சனா தேவியின் மீது கங்கதேவன் இச்சை கொண்டதால் நாம் மாநக்காவரத்தைப் பிடித்தோம். இப்பொழுது மஞ்சளழகி

இங்கிருந்ததால் மலையூரைப் பிடித்தோம். கோட்டைகளையும் துறைமுகங்களையும் பிடிக்கப் பெண்கள் உதவுகிறார்கள் அமீர். ஆகவே ஒருத்திக்கு இருவர் இருப்பது நமக்கு அனுகூலம் தான்" என்றான் இளையபல்லவன்.

கோட்டையிலிருந்து கிளம்பும் நாள் அன்று தனக்கும் அமீருக்கும் நிகழ்ந்த இந்தச் சம்பாஷணையைக் கடல்புறாவின் தளத்தில் நின்றிருந்த அந்த நேரத்தில் நினைத்த இளைய பல்லவன் இதழ்களில் புன்னகைகூட லேசாக அரும்பியது. 'அன்று பதில் சாமர்த்தியமாகத்தான் சொல்லிவிட்டேன். ஆனால் அதனால் விளையும் தொல்லைகள் அனந்தம். இருப்பினும் அவற்றை நான் சமாளித்துத்தானே ஆக வேண்டும்?' என்று தனக்குள்ளே சொல்லிக்கொண்டான் இளையபல்லவன். ஆனால் கடல் புறாவின் தளத்தில் நின்று அவன் நினைத்த தொல்லை அமீர் எண்ணிய தொல்லை யல்ல. வேறு தொல்லையை, மாசற்ற வீரன் சமாளிக்க வேண்டிய தொல்லையை எண்ணி எண்ணிக் குழம்பினான் சோழர் படைத்தலைவன். அந்தத் தொல்லை காதலைப் பற்றியதல்ல, ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தைப் பற்றியது, அதன் உரிமையைப் பற்றியது, சோழப் பேரரசைப் பற்றியது. 'ஸ்ரீவிஜய சாம்ராஜ்ய அரியணையில் உன்னை அடுத்த சித்ரா பௌணர்மியன்று சக்கரவர்த்தினியாக அமர்த்துகிறேன்' என்று காஞ்சனாதேவியிடம் ஆணையிட்ட சமயத்தில் மஞ்சளழகியின் நிலைமை அவனுக்குப் புரியாதிருந்தது. அவள் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதியால் மகளாக ஒப்புக்கொள்ளப் பட்டிருப்பாளென்றோ, அந்த அரியணைக்கு முறையுள்ள இளவரசியாகி விடுவாளென்றோ அவன் எதிர்பார்க்கவில்லை. மஞ்சளழகி அக்ஷயமுனையில் இருப்பாள்; தான் அமைத்துக் கொடுத்த பாதுகாப்பு அவளுக்குப் பெரும் அரணாயிருக்கும் என்று மட்டுமே நினைத்த அவனுக்கு, அவளுடைய புது நிலை பெரும் புதிரை விளைவித்தது.

காஞ்சனாதேவியும், மஞ்சளழகியும் இருவரும் ஸ்ரீவிஜய அரியணைக்கு உரிமை கொண்டாடினால் யாருக்கு அதை

அளி'யபது என்று எண்ணி ஏதும் புரியாமல் கலங்கினான் படைத்தலைவன். இருவர்பாலும் காதல் கொண்டிருந்த அவன் இதயம் இருபக்கங்களிலும் இழுபட்டுத் தத்தளித்துக் கொண்டிருந்தது. காஞ்சனாதேவியை அவன் முதலில் கண்டான், தொலைதூரத்திலிருந்த பாலூர்ப் பெருந்துறையில். பிறகு ஓராண்டு கழித்து மஞ்சளழகியைக் கண்டான், அக்ஷய முனையில். முதலாண்டின் உணர்ச்சிகள் இரண்டாம் ஆண்டு கிளம்பிய உணர்ச்சிகளுடன் போட்டி போட்டன. கடைசி யாகப் புகுந்த மூன்றாம் ஆண்டின் முடிவில் இருவரைப் பற்றிய காதலும் மோதி விட்டதால் எழுந்த உணர்ச்சிகளால் ஏற்பட்ட கலக்கமான நிலையில்தான் அன்று நின்றிருந்தான் இளையபல்லவன்.

ஸ்ரீவிஜயத்தை வெற்றி கொள்ள முடியும் என்ற உறுதி அவன் உள்ளத்தே திடமாக இருந்தது. அதற்குச் சகல ஏற்பாடு களையும் சிறுகச் சிறுகச் செய்து முடித்திருந்தான் இளைய பல்லவன். 'இன்னும் இரண்டே மாதங்கள், ஸ்ரீவிஜயம் என் கைவசமாகிவிடும்' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்ட இளையபல்லவன், 'அதை யாருக்களிப்பது? காஞ்சனா தேவிக்கா, மஞ்சளழகிக்கா?' என்ற ஒரு கேள்வியையும் கேட்டுக் கொண்டதால் பைத்தியம் பிடிக்கும் நிலையை அடைந்து கடல்புறாவின் தளத்தின் குறுக்கே வேகமாக நடந்து தனது அறைக்குச் சென்றான். சென்றதும் அமீரை அவசரமாக வரும்படி சொல்லியனுப்பினான். சில விநாடிகளுக்கெல்லாம் உள்ளே நுழைந்த அமீர் இளையபல்லவன் முகத்தைக் கண்டதும் பெரும் பிரமிப்புக்குள்ளானான். எதற்கும் கலங்காத படைத்தலைவன் உள்ளம் பெரிதும் கலங்கியிருப்பதை அவன் முகம் தெள்ளென எடுத்துக் காட்டியது. அவன் சஞ்சலத்தின் காரணத்தை ஓரளவு ஊகித்துக் கொண்டாலும் பூரணமாக அதன் அடிப்படையை உணராத அமீர் சொன்னான், "அவசரமாகக் கூப்பிட்டு அனுப்பியதாகக் கூறினான் மாலுமி" என்று.

"ஆம் அமீர்" என்றான் இளையபல்லவன்.

இதைச் சொன்ன இளையபல்லவன் குரல் பெரிதும் வறண்டு கிடப்பதைக் கண்ட அமீர் தன் உணர்ச்சிகளை வெளிக்குக் காட்டிக் கொள்ளாமல், "என்ன செய்யவேண்டும் படைத்தலைவரே?" என்று சாதாரணமாகவே கேட்டான்.

"காஞ்சனாதேவியும் மஞ்சளழகியும் எங்கிருக்கிறார்கள்?" என்று வினவினான் இளையபல்லவன் அதே வறண்ட குரலில்.

"தளத்திலிருக்கிறார்கள்" என்றான் அமீர்.

"இருவரும் ஒரே இடத்திலா?" என்ற இளையபல்லவன் குரலில் வியப்பு லேசாக ஒலித்தது.

"அதெப்படி ஒரே இடத்திலிருப்பார்கள்?" என்ற அமீரின் குரலில் லேசாக விஷமம் இருந்தது.

"வேறு எப்படியிருக்கிறார்கள்?"

"காஞ்சனாதேவி கண்டியத்தேவருடன் கடல்புறாவின் முனைப்பகுதியில் நிற்கிறார்கள். மஞ்சளழகி சுக்கானைப் பிடித்துள்ள சேந்தனுக்கருகில் உட்கார்ந்திருக்கிறார்கள். இருவரும் இரு துருவங்கள் மாதிரி ஆளுக்கொரு கோடியிலிருக் கிறார்கள்."

"அப்படியா!" என்று ஏதோ கேட்பதற்காகக் கேட்ட இளையபல்லவன் ஒரு விநாடி ஏதோ யோசித்தான். பிறகு துவங்கினான், "அமீர்!" என்று.

"ஏன்?" என்று வினவினான் அமீர்.

"நீதான் காரியங்களைச் சாமர்த்தியமாகச் செய்ய முடியும்..." என்று மீண்டும் துவக்க உரையிலேயே நின்றான் இளையபல்லவன்.

ஏதோ கஷ்டமான பணிக்கு இளையபல்லவன் அஸ்திவாரம் போடுகிறானென்பதை உணர்ந்துகொண்ட அமீர், "எனக்குப் பாராட்டுதல் எதற்கு? உத்தரவிடுங்கள் படைத்தலைவரே!" என்றான்.

"காஞ்சனாதேவியும் மஞ்சளழகியும்..." என்று மென்று விழுங்கினான் படைத்தலைவன்.

"ஆம், இருக்கிறார்கள்."

"எங்கு இருக்கிறார்கள்?"

"இங்குதான் கடல் புறாவில். இருக்குமிடங்களை இப்பொழுதுதானே சொன்னேன்!"

"அவர்கள் அங்கு இருக்கக்கூடாது."

"சரி, இங்கு அனுப்பி விடட்டுமா?"

இளையபல்லவன் தன் விழிகளை உயர்த்தி அமீரை நன்றாகப் பார்த்தான். "ஏன்? நான் நிம்மதியாயிருப்பது உனக்குப் பிடிக்கவில்லையா?" என்றும் வினவினான்.

அமீர் உள்ளுக்குள் நகைத்துக் கொண்டாலும் அதை வெளிக்குக் காட்டவில்லை. "என்னை என்னதான் செய்யச் சொல்கிறீர்கள்?" என்று அலுத்துக் கொள்வது போல் பாசாங்கு செய்தான் அமீர்.

"கடல் புறாவைவிட்டு அவர்களிருவரையும் அனுப்பிவிட வேண்டும்" என்று கூறிய இளையபல்லவன் குரலில் உறுதி பூரணமாகத் தொனித்தது.

இந்த உத்தரவைக் கேட்ட அமீருக்குத் தூக்கி வாரிப் போட்டது. "அவர்களை எங்கு அனுப்புவது?" என்று வினவினான்.

"அவர்களுக்குத்தான் தனி மரக்கலங்கள் இருக்கின்றனவே அமீர்! காஞ்சனாதேவியை- 'காஞ்சனாவுக்கும்' மஞ்சளழகியை 'மஞ்சளழகிக்கும்' அனுப்பிவிடு. இது என் உத்தரவு" என்று திட்டமாகக் கூறிய இளையபல்லவன் தலையை மார்புக்காகத் தொங்கப்போட்டுக்கொண்டான். மேற்கொண்டு இளைய பல்லவன் பேச விரும்பவில்லை என்பதைப் புரிந்துகொண்ட அமீர் அக்ரமந்திரத்தை விட்டு வெளியேறினான். அவன் சென்றதும் ஓரளவு நிம்மதியுடன் மஞ்சத்தை விட்டு எழுந்தான் இளையபல்லவன். நிம்மதியுடன் பெருமூச்சு விட்டான். தலையிலிருந்து பெரும் சுமையொன்று இறங்கியது போலிருந்தது அவனுக்கு. இரண்டு பெண்களையும் தனித்தனி யாக அவர்கள் பெயரிடப்பட்ட மரக்கலங்களில் இருத்தி விட்டால் இருவரும் சந்திக்க வாய்ப்பிருக்காதென்றும்,

ஆகையால் என்ன செய்யவேண்டுமென்பதைத் தான் நிதானமாகத் தீர்மானிக்கலாமென்றும் முடிவு செய்து கொண்டான் இளையபல்லவன். அந்த முடிவின் காரணமாக அறைமூலைக்குச் சென்று அங்கிருந்த மரக்குவளையிலிருந்து சிறிது நீரெடுத்துக் குடிக்கவும் செய்தான். மறுபடியும் மஞ்சத்துக்கு வந்து பஞ்சணையில் மல்லாந்து படுத்தான். சிறிது கண்களை மூடலாமென்று நினைத்த சமயத்தில் மீண்டும் அமீர் உள்ளே நுழைந்தான்.

அமீரின் வருகைக்குக் காரணமறியாத இளையபல்லவன் பஞ்சணையில் எழுந்து உட்கார்ந்து, "என்ன அமீர்? ஏன் வந்துவிட்டாய்? நான் சொன்னபடி..." என்றவனை இடை மறித்த அமீர், "செய்ய முடியவில்லை" என்றான்.

"ஏன் உத்தரவை நிறைவேற்றவில்லை நீ?" என்று சீறினான் இளையபல்லவன் வெளியே கோபத்துடனும் உள்ளே பயத்துடனும்.

"இல்லை."

"ஏன்?"

"முடியவில்லை. இருவரும் கடல்புறாவிலிருந்து நகர மறுக்கிறார்கள்."

"என் உத்தரவு என்று கூறினாயா?"

"கூறினேன்."

"என்ன சொன்னார்கள்?"

"வித்தியாசமாகச் சொன்னார்கள்."

"என்ன வித்தியாசம் அதில்?"

"காஞ்சனாதேவியிடம் விஷயத்தைக் கூறித் தங்கள் உத்தரவு அது என்றேன்" என்ற அமீரின் முகத்தில் விஷமக் குறி தோன்றியது.

"என்ன சொன்னாள் அவள்?" என்றான் இளைய பல்லவன் குரலில் கோபத்தைக் காட்டி.

"உத்தரவை உடைப்பில் போடு என்றார்கள்."

"மஞ்சளழகி?"

"இந்தக் கடலில் போடு என்று பக்கத்திலிருந்த கடலைக் கையால் காட்டினார்கள்."

இளையபல்லவன் பஞ்சணையிலிருந்து எழுந்து, "அமீர்?" என்று உக்கிரமாகக் கூவினான்.

"படைத்.தலைவரே!" அமீரின் பதிலில் பணிவிருந்தது.

"கேவலம் இரண்டு பெண்களிடம் உன் ஜம்பம் பலிக்க வில்லை, உம்..." என்று கூவினான்.

"அதில் என் ஜம்பம் மட்டுமில்லை, தங்கள் உத்தரவும் கலந்திருக்கிறது" என்று தாழ்மையுடன் தெரிவித்துக் கொண்டதன்றி, "இப்பொழுது..." என்று ஏதோ துவங்கி வார்த்தைகளை விழுங்கினான்.

"என்ன செய்ய வேண்டுமென்கிறாய் என்னை?" என்று கேட்டான் இளையபல்லவன்.

"என்னால் முடியாத பணியைத் தலைவர்தான் செய்து முடிக்கவேண்டும்" என்றான் அமீர்.

அமீர் தன்னை நோக்கி நகைக்கிறானென்பதைப் புரிந்து கொண்ட இளையபல்லவன் அவனை ஒருமுறை முறைத்து நோக்கிவிட்டு அறைக்கதவைத் திறந்துகொண்டு வெகு வேகமாகத் தளத்துக்குச் சென்றான். அவனைத் தொடர்ந்து சென்ற அமீருக்கு மேலும் வியப்பு காத்திருந்தது தளத்தில். அமீர் எதிர்பார்த்தபடி இளையபல்லவன் காஞ்சனாதேவி யையோ, மஞ்சளழகியையோ நோக்கிச் செல்லவில்லை. இருவரும் இல்லாத தனி இடமாகப் பார்த்துச் சென்று கடல்புறாவின் பக்கப் பலகையில் சாய்ந்துகொண்டு கண் முன்னால் ஓடிக்கொண்டிருந்த நதியையும், மேலே விரிந்து கிடந்த ஆகாயத்தையும் மாறிமாறிப் பார்த்தான். கடல் புறாவின் வேகத்தால் பக்கப் பலகையின் அடியைத் தடவிய நதி நீரின் சர்ரென்ற ஓசை அவன் காதுகளில் விழுந்தது. ஆகாயத்தின்மீது ஓட்டிய கண்களைப் பார்த்து விண்மீன்களும் பதிலுக்குக் கண்களைச் சிமிட்டின.

நேரம் போவது தெரியாமல் அந்த இடத்திலேயே நின்று கொண்டிருந்தான் இளையபல்லவன். இராப்போஜனம்கூட

வேண்டியதில்லையென்று தன்னைத் தேடிவந்த மாலுமியிடம் அறிவித்து விட்டான். இரவு நன்றாக முற்றிய பின்பும் கடல் புறாவின் தளத்தில் பக்கப் பலகையைப் பிடித்துக்கொண்டு தளத்துக்கு முதுகைக் காட்டிய வண்ணம் ஆகாயத்தை அண்ணாந்து பார்த்துக் கொண்டிருந்தான் இளையபல்லவன். இடையிடையே எதிரேயிருந்த காரிருளையும் கவனித்தான். படுக்கும் நேரம் தாண்டியும் அறையை நாடாதிருந்த அவனைப் பின்புறம் ஒரு மலர்க்கை தொட்டது. தேள் கொட்டிவிட்டதுபோல் திரும்பிப் பார்த்தான் இளைய பல்லவன்.

அவன் எதிரே காஞ்சனாதேவி நின்று கொண்டிருந்தாள். சற்று தூரத்திலிருந்த பந்தத்தின் வெளிச்சத்தில் அவள் முகம் பிரமிக்கும்படியான அழகை அள்ளித் தெளித்ததன்றி அந்த வெளிச்சத்தில் பிரதிபலித்த அவள் காதணிக் கற்கள் வீசிய பலவித வண்ண ஒளிகள் அவள் கன்னங்களில் அற்புதமான சித்திரங்களையும் தீட்டியிருந்தன.. ஆனால் அந்த அழகில் எள்ளத்தனையும் ரசிக்கும் ஆற்றலை இழந்திருந்தான் இளைய பல்லவன் அந்த நேரத்தில். ஆகவே சற்று முரட்டுத்தனமாகவே கேட்டான், "ஏனிங்கு வந்தாய்?" என்று.

"ஒரு விஷயம் சொல்ல வந்தேன்" என்றாள் அவள் அவன் மூர்க்கத்தனத்தை லட்சியம் செய்யாமலே.

"சரி, சொல்." இந்தச் சொற்களும் முரட்டுத்தனமாகவே உதிர்ந்தன.

அவள் மூன்று சொற்களைத்தான் சொன்னாள். ஆனால் அந்த மூன்றே சொற்கள் அவன் மூர்க்கத்தனத்தைப் பறக்கடித்து விட்டன. அவனுக்கு அதுவரையிலிருந்த சங்கடம் பன்மடங்கு அதிகமாக விரிந்தது. அந்த மூன்று சொற்கள் அவன் லட்சியம், பிரதிக்கினை, ஏற்பாடுகள் அனைத்திலுமே மண்ணைப் போட்டுவிடும் நிலையில் அமைந்திருந்தன. அவற்றால் ஏற்பட்ட திகைப்பால் அவன் பிரமை பிடித்து அவளை நோக்கியது நோக்கியபடியே நின்று விட்டான் பல விநாடிகள்.

அத்தியாயம் 66

# அவர் உத்தேசம்! அவர் கட்டளை!

"ஸ்ரீவிஜயம் எனக்கு வேண்டாம்" என்ற மூன்றே சொற்களைத்தான் காஞ்சனாதேவி சொன்னாள், கடல் புறாவின் தளத்திலே கவலை உள்ளத்தில் அலைபாய நின்றுகொண்டிருந்த சோழர் படைத்தலைவனை நோக்கி. ஆனால் அந்தச் சொற்கள் சுரீல் சுரீலென இளையபல்லவன் இதயத்திலே தைக்கவே செய்தன. எந்தக் காரணத்தை முன்னிட்டுச் சோழர்கள் உதவியை நாடி, தந்தையுடன் தொலைவிலுள்ள பாலூர்ப் பெருந்துறைக்கு ஒன்றேமுக்கால் ஆண்டுகளுக்கு முன்னதாக அவள் வந்தாளோ, எந்த ஒரு லட்சியத்தை நிறைவேற்றத் தானும் நாடுவிட்டு நாடு வந்து பல சாகசச் செயல்களைச் செய்தானோ, எந்த ஒரு பிரதிக்ஞையை நிறைவேற்ற ஸ்ரீவிஜயத்தின் கடற்படை பலத்தை அடியோடு ஒடுக்கினானோ, அந்தக் காரணம், லட்சியம், பிரதிக்ஞை இவை மூன்றையும் காஞ்சனாதேவியின் மூன்று சொற்கள் தவிடு பொடியாக்கி விட்டதை நினைத்த இளையபல்லவன் அவளுக்கு என்ன பதில் சொல்வதென்று அறியாமல் திணறினான். எந்தக் குணவர்மனுக்கு அபயமளிக்கச் சோழப் பேரரசரான வீரராஜேந்திர தேவர் முடிவு செய்து அநபாயரையும் கடாரத்துக்கு அனுப்பியுள்ளாரோ அந்த முடிவுக்கு அடிப்படையும் ஸ்ரீவிஜயத்திடம் தமிழர்கள் கொள்ளக்கூடிய வெற்றியே என்பதைச் சந்தேகமற உணர்ந்திருந்த இளையபல்லவன், 'காஞ்சனாதேவிக்கு ஸ்ரீவிஜயம் வேண்டாமென்றால் துறவி மனப்பான்மையுள்ள குணவர்மனும் அதை வேண்டாமென்பான். குணவர்மன் ஸ்ரீவிஜயத்தை வேண்டாமென்று தீர்மானித்து விட்டால் ஸ்ரீவிஜயத்தை நான் தாக்க வெளிப்படையான காரணமே கிடையாதே,' என்று தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டான். 'ஒருவேளை ஸ்ரீவிஜயம் வேண்டா

மென்று காஞ்சனாதேவி உணர்ச்சி வேகத்தில் சொல்கிறாளோ?' என்றும் தன்னைக் கேட்டுக்கொண்ட இளைய பல்லவன் ஒரு விநாடி காஞ்சனாதேவியைக் கூர்ந்து நோக்கினான்.

காஞ்சனாதேவியின் உள்ளத்தில் உணர்ச்சிக் கொந்தளிப்பு இருந்ததோ என்னவோ, அவள் முகத்தில் மட்டும் உணர்ச்சிகள் ஏதுமில்லை. உலகத்தையே துறந்துவிட்டது போன்ற ஒரு விரக்தி மட்டும் அதில் தெரிந்தது. அதன் காரணத்தை ஓரளவு உணர்ந்து கொண்டாலும் அவள் முடிவைப்பற்றி அவள் வாயாலேயே தெரிந்துகொள்ள இஷ்டப்பட்ட இளையபல்லவன், அவள் முகத்தின்மீது தன் கூர்விழிகளை நாட்டி, "ஏன் ஸ்ரீவிஜயம் உனக்கு வேண்டாம்?" என்று வினவினான் குரலில் சிறிது உணர்ச்சியைக் காட்டி.

காஞ்சனாதேவியின் அஞ்சன விழிகள் தூரத்தேயிருந்து வந்த தீப்பந்தத்தின் வெளிச்சத்தில் நன்றாகப் பளபளத்தன.

"அரசாள இஷ்டமில்லை" என்ற சொற்களும் அவள் பவள வாயிலிருந்து உறுதியுடன் உதிர்ந்தன.

"இந்தத் திடீர் மாற்றத்துக்கு என்ன காரணம்?" என்று வினவினான் இளையபல்லவனும் உறுதிமிக்க குரலில்.

"நிலைமைக்குத் தக்கபடி தங்கள் அபிலாஷைகளை மாற்றிக்கொள்வது விவேகிகள் செய்யவேண்டிய முக்கிய காரியம்" என்றாள் காஞ்சனாதேவி உறுதி சிறிதும் தளராத குரலில்.

"என்ன அப்பேர்ப்பட்ட நிலைமை ஏற்பட்டுவிட்டது உன் அபிலாஷைகளை மாற்றிக்கொள்ள?" என்று வினவினான் படைத்தலைவன்.

"அது உங்களுக்கே தெரியும்" என்றாள் கடாரத்தின் இளவரசி.

நிலைமை என்னவென்பது அவனுக்குத் தெரிந்தேயிருந்தது. இருப்பினும் அவள் வாயாலேயே பதில் வரட்டு

மென்று, "எனக்கு எதுவும் புரியவில்லை" என்று கூறினான் இளையபல்லவன்.

அடுத்து, காஞ்சனாதேவியின் உணர்ச்சிகள் கரை கடந்தன. சொற்கள் கோபத்துடன் மளமளவென்று உதிர்ந்தன. "என்ன புரியவில்லை உங்களுக்கு? மஞ்சளழகி என்னைவிட அழகியென்பது புரியவில்லையா? அல்லது அநாதையென்று நீங்கள் எண்ணிக் கொண்டிருந்த அவள் இளவரசியாகி விட்டாளென்பது புரியவில்லையா? ஏற்கெனவே ஓர் இளவரசி இருக்கும்போது ஸ்ரீவிஜயம் அவளைச் சக்கர வர்த்தினியாக ஏற்றுக்கொள்ளாமல் என்னை ஏன் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று புரியவில்லையா? அல்லது அவள் செய்த மகத்தான தியாகத்தை நினைத்து நினைத்துத் திண்டாடிக் கொண்டிருக்கிறீர்களே, அது புரியவில்லையா? குணசாலியும், சக்கரவர்த்தினியுமான மஞ்சளழகி இருக்கை யில் ஏன் இந்த அற்பப் பெண் காஞ்சனாவுக்கு ஸ்ரீவிஜயத்தைக் கொடுப்பதாக பிரதிக்ஞை செய்தோம் என்று திணறு கிறீர்களே, அது புரியவில்லையா? எது புரியவில்லை இளைய பல்லவரே! எல்லாம் புரிகிறது உங்களுக்கு. புரியாதது ஒன்று தான்" என்று படபடவென வார்த்தைகளை உதிர்த்த கடாரத்துக் கட்டழகி பெண்புலி போல் சீறி அவனெதிரே நின்றாள்.

மளமளவென தன்மீது கொட்டிய அந்தச் சொல்மழையில் நீராடியதன் காரணமாகத் தன் உள்ளத்திலிருந்த உணர்ச்சி மாசுக்கள் துடைக்கப்பட்டமையால் நிதானத்தை அடைந்து விட்ட இளையபல்லவன், 'இத்தனை கோபத்திலும் காஞ்சனா தேவி எத்தனை அழகாயிருக்கிறாள்!' என்று எண்ணிப் பார்த்தான். அந்த எண்ணம் உதயமான அதே சமயத்தில் அவள் பக்கத்தில் மஞ்சளழகியும் நிற்பது போன்ற பிரமை ஏற்பட்டது அவனுக்கு. காஞ்சனாதேவியின் கனல் வீசும் முகத்தில் பக்கத்தில் தெரிந்தது மஞ்சளழகியின் மந்தகாச வதனம். இந்த மந்தகாசத்திலும் வருத்தத்தின் சாயை அதில் படர்ந்து கிடந்தது. காஞ்சனாதேவியின் கோபக் கண்களை

அடுத்து நின்ற மஞ்சளழகியின் மயக்கம் தரும் சோகக் கண்கள் அக்ஷயமுனையின் பெரும் கதைகளைத் திரும்பத் திரும்பச் சொல்வது போலிருந்தது இளையபல்லவன் பார்வைக்கு. இரண்டும் துடியிடைகள்தான். ஆனால் மஞ்சளழகியின் இடை அடிக்கடி அவள் ஆடிய நடனத்தின் காரணமாகத் துவண்டு ஒரு பக்கம் சாய்ந்து நின்றது. அவ்விரு பெண்களின் கைகள், மார்புகள், கால்கள் எல்லாமே வித்தியாசமாயிருந்தன. ஆனால் அந்த ஒவ்வொரு வித்தியாசத்திலும் ஒவ்வோர் அழகிருந்தது. எது சிறந்தது, எது தாழ்ந்தது எனச் சொல்ல முடியாத வித்தியாசம் அது. இந்த இருவரில் யார் ஸ்ரீவிஜய சாம்ராஜ்ய அரியணையில் உட்காரத் தகுந்தவள் என்று எண்ணிப் பார்த்த இளையபல்லவன் அதற்கு மட்டும் விடை கண்டுபிடிக்க முடியாதவனானான். ஆனால் அந்த வினா மனத்தில் எழுந்ததன் விளைவாக அவன் பிரமையும் அகன்றது, மஞ்சளழகியின் உருவமும் மறைந்தது. அது மறையவே காஞ்சனாதேவியின் உதடுகள் பெய்த சொல் மழையையும் அதன் முடிவில், "புரியாதது ஒன்றுதான்" என்று அவள் திட்டவட்டமாகக் கூறிய வார்த்தைகளும் அவன் காதுகளில் மீண்டும் ஒலித்தன. ஆகவே இளையபல்லவன் கேட்டான், "புரியாதது எது காஞ்சனா?" என்று.

"என்னை எப்படித் தட்டிக் கழிப்பது என்பது" என்றாள் காஞ்சனாதேவி சீற்றத்தின் உச்சியைச் சொற்களில் காட்டி.

"உன்னை எதற்காகத் தட்டிக் கழிக்க வேண்டும்?" என்றான் இளையபல்லவன்.

"வீண் சங்கடத்திலிருந்து தப்ப."

"என்ன வீண் சங்கடம் இப்பொழுது ஏற்பட்டுவிட்டது எனக்கு?"

"மஞ்சளழகி கிடைத்த பின்பு காஞ்சனா வீண் சங்கடம் தானே?"

"அவள் வந்ததால் நீ எப்படி வீண் சங்கடமாகிறாய்?"

"மஞ்சளழகி உங்களிடம் மயங்கிக் கிடக்கிறாள். அவளை நீங்கள் ஏற்றுக்கொண்டால் ஜெயவர்மனுடன் போரிட

வேண்டிய அவசியமில்லை. மஞ்சளழகி தந்தையிடம் சொல்லி உங்களுக்குச் சகல சௌகரியங்களையும் செய்து தருவாள். போரில்லாமலும் உங்கள் மரக்கலங்களுக்குச் சேதம் இல்லாமலும் காரியம் முடியும். அதை விட்டு எனக்காகப் போரில் இறங்குவது அத்தனை புத்திசாலித்தனமா, லாபமா, விரும்பத்தக்கதா?" என்று வினவினாள் காஞ்சனாதேவி.

கடல்புறாவின் பக்கப் பலகையில் சாய்ந்து நின்ற இளைய பல்லவன் நன்றாக நிமிர்ந்து நின்றான். அவன் முகத்தில் புத்தொளியொன்றும் இணையற்ற கம்பீரமும் திடீரென உதயமாயின. மாறுபட்ட மனிதன் போல் நின்ற இளைய பல்லவன், "உனக்காக ஸ்ரீவிஜயத்தை நான் வெற்றி கொள்ளப் போவதாக யார் சொன்னது?" என்று கேட்டான் கடுமையான குரலில்.

அவன் மாறுதல் அவளுக்கு விசித்திரமாயிருந்தது. அவன் கடுமைகூட புதிதாயிருந்தது கடாரத்தின் கட்டழகிக்கு. இருப்பினும் சிறிதும் அஞ்சாமல் பதில் சொன்னாள் அவள், "நீங்கள்தான் சொன்னீர்கள்" என்று.

"எப்பொழுது?" இம்முறை குரலில் கடுமை மறைந்து விட்டது. கம்பீரமும் முன்னைவிட ஒரு மடங்கு அதிகமாகி விட்டது.

"மாநக்காவரத்தில்," என்றாள் காஞ்சனா.

"என்ன சொன்னேன்?"

"நீ இனி சக்கரவர்த்தினி, அடுத்த சித்ரா பௌர்ணமி யன்று உன்னை ஸ்ரீவிஜய அரியணையில் அமர்த்துவே னென்று."

இதைக் கேட்டதும் காஞ்சனாதேவியின் அழகிய தோளைப் பிடித்து நெருடி இளையபல்லவன் மெல்ல நகைத்தான். அந்த நகைப்பிலும் கம்பீரம் இருந்தது.

"ஏன் நகைக்கிறீர்கள்?" என்று கேட்டாள் காஞ்சனா.

"பெண்களின் மமதையைக் குறித்து நகைத்தேன்" என்றான் அவன்.

"அப்படியானால் என்னைச் சக்கரவர்த்தினியாக்கப் பிரதிக்ஞை செய்தது பொய்யா?"

"அல்ல."

இந்தப் பதிலைக் கேட்டுத் திகைத்தாள் அவள். குழம்பினாள் என்று சொல்வதுகூடப் பொருந்தும், அவள் மனமிருந்த நிலையைக் குறிக்க.

அவள் தோள் மீதிருந்த கைகளை எடுத்துவிட்டு, அவளெதிரில் நின்று இளையபல்லவன் விளக்கினான், "காஞ்சனாதேவி, உன்னிடம் நான் மனத்தைப் பறிகொடுத்தது உண்மைதான். உன்னைச் சக்கரவர்த்தினியாக்குவேன் என்று பிரதிக்ஞை செய்ததும் உண்மைதான். ஆனால் அந்தப் பிரதிக்ஞையின் அஸ்திவாரத்தை நீ கவனிக்க வேண்டும். பெண்கள் உரிமைகளையும் மானத்தையும் காக்க வீரர்கள் போரிட்டதுண்டு. ஆனால் அதற்காக அல்லாமல் அதைவிடப் பெரிய காரணங்களுக்காகவும் போர்கள் நிகழ்ந்திருக்கின்றன. உன்னைச் சக்கரவர்த்தினியாக்க நான் திட்டமிட்டதற்கு மூலகாரணம் உன்னிடம் எனக்கிருந்த ஆசையல்ல. சோழப் பேரரசின் விஸ்தரிப்பு தமிழர்களுக்கு இந்தப் பிராந்தியத்தில் நல்வாழ்வு கொடுக்க வேண்டுமென்ற எண்ணம். நான் பாலூர் வந்ததே தமிழர்களைக் காக்க, கலிங்கத்துடன் நல்லுறவு கொள்ள. நான் நீட்ட வந்த சமாதானக் கரத்தை உதறித் தள்ளினான், கலிங்கத்துப் பீமன். அவனுக்குத் துணை நின்றான் அனந்தவர்மன். அன்றே முடிவு கட்டினேன் கலிங்கத்தையும் ஸ்ரீவிஜயத்தையும் ஒழித்துக்கட்ட. ஸ்ரீவிஜயத்தை வெற்றி கொள்ள, கடலில் தமிழர் நிர்ப்பயமாக உலாவி வாணிபம் செய்ய, கலிங்கத்தின் கடல் பலத்தை உடைக்க வேண்டியதாயிற்று. உடைத்தேன். அது உடைந்த போது ஸ்ரீவிஜயம் உடைந்து போயிற்று. ஸ்ரீவிஜயம் கலிங்கத்தின் படைபலத்தை நம்பியே வாழ்ந்து கொண்டிருந்தது. அதற்குத் தரைப்படையும் சொற்பம். இருந்தும் படையும் நன்றாகப் பயிற்சியுள்ளதல்ல. இன்னும் நாகரீகப் போர் முறைகளை அறியாத காட்டு சாதிகள் பல தரைப்படையிலிருக்

கின்றன. ஆகவே ஸ்ரீவிஜயம் என் கையில் சிக்கியாகிவிட்டது. ஸ்ரீவிஜயத் தலைநகரை அணுகும் முக்கியத் துறைமுகங்களில் எல்லாம் நான் பிடித்து அனுப்பிய கலிங்கத்தின் போர்க் கப்பல்கள் நிற்கின்றன. எட்டு இடங்களிலிருந்து வேல்கள் ஸ்ரீவிஜயத் தலைநகரை நோக்கி நிற்கின்றன. நான் சமிக்ஞை செய்தால் அடுத்த பத்து நாட்களில் ஸ்ரீவிஜயத் தலைநகர் தூரக் கிழக்கிலுள்ள பெரும் தமிழர்படையால் சூழப்படும். ஸ்ரீவிஜயம் இப்படிப் பிடிக்கப்படுமானால் தமிழர் நன்மையை முன்னிட்டுத்தான் பிடிக்கப்படும். பெண்ணாசையைவிட அது பெரும் லட்சியம். அந்த லட்சியத்தை அடைவதில் உனக்கும் உன் தந்தைக்கும் நியாயம் செய்வது ஒரு கட்டம் அவ்வளவு தான். நன்றாகச் சிந்தித்துப் பார் என் லட்சியம் என்ன வென்பது புரியும் உனக்கு. இந்தப் படையெடுப்புக்குக் காரணம் நீயுமல்ல, அவளுமல்ல. சோழ சாம்ராஜ்யம். தமிழர் பெருங்குடி" என்று கூறிவிட்டு அவளை விட்டுத் தன் அறையை நோக்கிச் செல்ல இரண்டடி எடுத்துவைத்தான். பிறகு சட்டென்று நின்று, "மஞ்சளழகியையும் அழைத்துக் கொண்டு உன் அறைக்குப் போய்விடு. என்னிஷ்டப்படி நீங்கள் இருவரும் நடக்கவில்லையானால் மாலுமிகளை விட்டுப் பலவந்தமாக நாளையே உங்களிருவரையும் உங்கள் மரக்கலங்களுக்கு அனுப்பிவிடுவேன்," என்று மூர்க்கத் தனமாகவும் இரைந்து விட்டு அக்ரமந்திரத்தை நோக்கி விடுவிடு என்று நடந்தான்.

அவன் கனவேகத்தில் தன் லட்சியத்தை விவரித்ததாலும், கடைசியில் மூர்க்கத்தனமான முறையில் தனக்கு ஒரு வேலையும் கொடுத்து மூர்க்கத்தனமாகப் பேசிவிட்டுப் போனதாலும் பிரமித்துப் பல விநாடிகள் நின்றுவிட்ட காஞ்சனாதேவி, கடைசியில் மஞ்சளழகியிருந்த இடம் நோக்கிச் சென்றாள். அங்கும் அவளுக்குப் பிரமிப்பு காத்திருந்தது. சேந்தன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த மஞ்சளழகியை நெருங்கி, "மஞ்சளழகி" என்று அழைத்ததும் மஞ்சளழகி சர்வசகஜமாக, "ஏன்?" என்று கேட்டாள்.

"உன்னை அழைத்துச் செல்லும்படி உத்தரவு" என்றாள் காஞ்சனாதேவி.

"அவர் உத்தரவிட்டாரா?" மஞ்சளழகியின் கேள்வியில் உணர்ச்சி எதுவுமே தெரியவில்லை.

"ஆம்."

"எங்கு அழைத்துச் செல்ல உத்தரவு?"

"என் அறைக்கு."

"சரி" என்று கூறிய மஞ்சளழகி மேற்கொண்டு எதுவும் பேசாமல் அவளைப் பின்தொடர்ந்தாள். காஞ்சனாதேவி அக்ரமந்திரத்தின் பின் வாயிற்படி வழியாகத் தனது அறைக்குள் நுழைந்தபோதும் சரி, அறைக்கு வந்த சில விநாடிகளுக்குப் பின்பும் சரி, மஞ்சளழகி மௌனமே சாதித்தாள். கடைசியில் ஏதோ நினைத்துப் பெருமூச்செறிந்த அக்ஷயமுனைச் செல்வி, காஞ்சனாதேவியின் மஞ்சத்தி லிருந்த ஒரு சீலையைக் காட்டி, "அதை நான் எடுத்துக் கொள்ளலாமா?" என்று வினவினாள்.

"எதற்கு?" என்று கேட்டாள் காஞ்சனாதேவி.

"படுக்க."

"இந்தப் பஞ்சணையில் படுப்பதுதானே?"

"படுப்பதற்கில்லை."

"ஏன்?"

"சக்கரவர்த்தினிக்குச் சமதையாக ஓர் அநாதைப் பெண் படுப்பது சரியல்ல."

"நான் சக்கரவர்த்தினியென்று யார் சொன்னது உனக்கு?"

"அவர் உத்தேசம் அதுதானே!"

"ஆம். அதனால்...?"

"என் உத்தேசம் இதுதான். மனதில் அடைந்த மணவாளன் உத்தேசத்திற்கு மாறாக நடப்பது அறவழிக்கு ஒத்ததல்ல."

"அப்படியா?"

"ஆம். நாளைக் காலையில் நான் என் பெயர் கொண்ட மரக்கலத்துக்குப் போகப் போகிறேன்."

"ஏன்?"

"அவர் க்ட்டளை அது. இன்று நான் அதை மீறியதே தவறு."

"அவர் உத்தேசம்! அவர் கட்டளை! இதற்கெல்லாம் நாம் ஏன் கீழ்ப்படிய வேண்டும்?" ஆத்திரம் மிகுந்து நின்றது காஞ்சனாதேவியின் குரலில்.

"உங்களுக்குத் தெரியாது தேவி. நீங்கள் சக்கரவர்த்தினி" என்று சாதாரணமாகச் சொன்ன மஞ்சளழகி மஞ்சத்திலிருந்த சீலையை எடுத்து அந்த அறையின் மரத்தரையில் படுத்தாள். காஞ்சனாதேவி பிரமை பிடித்து நீண்ட நேரம் மஞ்சத்தில் உட்கார்ந்து கீழே படுத்திருந்த பைங்கிளியைப் பார்த்த வண்ணம் இருந்தாள். தரையில் ஒருக்களித்துப் படுத்திருந்த மஞ்சளழகியின் வலது காதில் கீழே கடல் புறாவைத் தாங்கி நின்ற கடலரசன் ஏதோ ரகசியத்தைச் சொல்லியிருக்க வேண்டும். இல்லையேல் உறக்கத்தில் ஏன் அப்படிப் புன்முறுவல் கொண்டாள் அக்ஷயமுனையின் அந்தப் பேரழகி?








66 அவர் உத்தேசம்! அவர் கட்டளை!

சாண்டில்யன்

"இளவரசரை அங்கு எதிர் பார்க்கிறேன் என்று சொல்."



# கடல் புறா

## 67. பிறை ஏழு

குமுதம்

சாண்டில்யன்

67 – பிறை ஏழு

சாண்டில்யனின்



# கடல் புறா

கடல் புறாவின் கட்டைத் தரையில் காஞ்சனாதேவியின் காலடியில் படுத்துக் கிடந்த அந்தக் கட்டழகியின் காதில் கடலரசன் என்னென்ன சேதிகளைச் சொல்லியிருப்பானோ, ஏதேது மந்திரங்களை ஓதியிருப்பானோ தெரியாது. ஆனால் அந்தச் சேதிகளும் மந்திரங்களும் எவையாயிருந்தாலும், அந்தச் சேதிகளையும் மந்திரங்களையும் தொலைவிலிருந்த அவள் தந்தை ஜெயவர்மன் காதிலும், கடலரசன் அலைகளை உந்தியெழுப்பும் காற்றுத் தூதன் போட்டிருக்க வேண்டும். அப்படியில்லாவிட்டால் கடல்புறாவில் அன்று மஞ்சளழகி யடைந்த பெரும் நிம்மதியை ஜெயவர்மன் எப்படிப் பெற்றிருக்க முடியும்?

கடல் புறாவின் தரையில் படுத்துக் கிடந்த ஸ்ரீவிஜயத்தின் இளவரசி அன்றிரவில் அடைந்த அமைதியும், அமைதியின் விளைவாக அவள் முகத்தில் விரிந்த மந்தகாசமும், அந்த இரவுக்குப் பிறகு ஒரு வார காலம் கழித்து ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதியான ஜெயவர்மன் முகத்திலும் தெளிவாகத் தோன்றவே செய்தன. தலைநகரின் பெயரையொட்டியே சாம்ராஜ்யப் பெயர் விரிந்ததால் கிழக்கு நாடுகளில் தனிப் பெருமையுடன் விளங்கிய ஸ்ரீவிஜய மாநகரத்திலிருந்து தனது பெருமாளிகையின் மூன்றாவது உப்பரிகையின் தாழ்வரையில் உலாவிய வண்ணம் தூரத்தே தெரிந்த மூசிநதியை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த ஜெயவர்மன் உள்ளம் அன்று உண்மையில் பேரமைதி கொண்டிருந்தாலும், முந்திய ஒருவார காலமாக அதில் அலைமோதிய உணர்ச்சிகளின் விளைவாக விரிந்த கவலை அளித்த சாயை கூடச் சிறிது லேசாக அவன் முகத்தை ஆக்ரமித்துக் கொண்டிருந்தது. ஜெயவர்மன் முகம் உண்மையில் பார்ப்பதற்குக் கம்பீரமாகவும் அழகாகவும்

இருந்தது. மஞ்சளழகியின் முகத்திற்கும் அவன் முகத்திற்கும் பெரும் ஒற்றுமையிருந்தபோதிலும் நீண்ட காலமாக உள்ளத்தில் குடிகொண்டுவிட்ட வஞ்சகமும் குரூரமும் அவன் கண்களை மட்டும் சிறிது மாற்றி அவற்றை யாரும் விரும்பிப் பார்க்க முடியாதபடி செய்திருந்தன. சாம்ராஜ்ய அரியணைக்கு உரிமையுள்ள தலைப்பிள்ளையான குணவர்மனை அகற்றித் தான் அதில் அமருவதற்காகச் செய்த கொடிய செயல்களாலும், அந்த சாம்ராஜ்யத்தை மீண்டும் எக்காரணம் கொண்டும் குணவர்மன் அடையக் கூடாதென்ற உறுதியில் தான் சந்தேகப்பட்டவர்களையெல்லாம் கொன்று குவித்ததாலும் பெரும் பாவச் சுமையைக் கட்டிக் கொண் டிருந்த ஜெயவர்மனின் அழகிய முகத்தைப் பாவத்தின் சாயை சிறிது விகாரப்படுத்தியே இருந்தது. அவன் அழகிய உதடுகள் அமைந்திருந்த நிலை அவன் அச்சத்தை அறியாதவன் என்பதை வலியுறுத்தியது. அத்தனை துணிவுடையவன் நெஞ்சத்திலும் சிறிது காலமாகக் கவலை அளவுக்கு மிஞ்சி யிருக்க வேண்டுமென்பதற்கான அறிகுறிகள், அவன் மூசி நதியை நோக்கிக்கொண்டிருந்த சமயத்தில் இல்லாததால் அவனுக்கு அமைதி தரவேண்டிய காரியங்கள் நடந்திருக்க வேண்டுமென்பதை அவன் உலாவிய இடத்திலிருந்து சிறிது விலகி அடக்கவொடுக்கத்துடன் நின்ற இருவரும் ஊகித்துக் கொண்டனர்.

பிரும்மாண்டமான தனது அரண்மனைத் தாழ்வரை யிலிருந்து மூசி நதியையும் மூசி நதியிலிருந்து அரண்மனை வரையிருந்த பெரும் அரண்களையும் கட்டடங்களையும் திரும்பத் திரும்பப் பார்த்து நடந்து கொண்டிருந்த ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதி திடீரெனத் தாழ்வரை முகப்புக்குச் சென்று நதிக்கு அப்புறமிருந்த பகுதிகளையும் உற்று நோக்கினான். மூசிநதி ஸ்ரீவிஜய மாநகரை ஊடுருவி ஓடியதால் நகரம் இரண்டாக்கப்பட்டு இருபுறங்களிலும் கட்டடங்களும் தேவாலயங்களும் இருந்தபோதிலும், நதிக்கு வடபுறமிருந்த அரண்மனையையொட்டியே அரண்களும் காவலும் பெரிதா

யிருந்தன. ஆகவே நதிக்குத் தெற்குப் புறமிருந்த காவலற்ற பெரும் பகுதியை நோக்கிய ஜெயவர்மன் முகத்தில் சிறிது சந்தேகம் ஏற்படவே அவன் திடீரெனத் திரும்பி, "தளபதி!" என்று துரிதமாக விளித்தான்.

அதுவரை கைகளை மார்புமீது கட்டிக் கொண்டிருந்த கடற்படைத் தளபதியான விஜயசந்திரன், "ஏன்?" என்று வினவினான்.

"இப்படி வாருங்கள்" என்ற ஜெயவர்மன் விஜயசந்திரனை மட்டுமின்றி அவனருகில் நின்ற மலையூர்க் கோட்டை உபதலைவனையும் அருகில் வரும்படி சைகை செய்தான். இருவரும் அருகில் வந்ததும், மூசி நதிக்குத் தெற்குப் புறத்தில் தெரிந்த நகர்ப் பகுதியைக் கையால் சுட்டிக் காட்டி, "அந்தப் பகுதிக்குக் காவலில்லையல்லவா?" என்று வினவினான்.

நீண்ட நாட்களாகத் தெரிந்த அந்த விஷயத்தை அன்று ஏன் சக்கரவர்த்தி புதிதாகக் கேட்கிறார் என்பதற்குக் காரணத்தை அறியாத அந்த இருவரும், 'இல்லை' என்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் அசைத்தனர்.

"சைலேந்திரர்கள் இந்த நகரத்தைச் சரியாக அமைக்க வில்லை. பெரும் பலவீனத்தை வைத்திருக்கிறார்கள்," என்று சக்கரவர்த்தி அந்தத் தெற்குப் புறத்திலேயே கண்களை நாட்டிக்கொண்டு கூறினான்.

அதுவரை அச்சத்துடன் நின்றிருந்த கடற்படைத் தளபதி சிறிது துணிவை வரவழைத்துக் கொண்டு, "தங்கள் மூதாதையரைப் பற்றிச் சொல்கிறீர்களா?" என்று வினவினான் குரலில் சற்று வியப்பைக் காட்டி.

"ஆம்." சக்கரவர்த்தியின் பதில் உறுதியுடன் வந்தது. "இப்பொழுது உள்ளபடி அமைத்திருக்கிறார்கள்" என்றான் விஜயசந்திரன்.

"அது என்ன தீர்க்காலோசனை என்பதைச் சற்று விளக்கலாமா?" என்று வினவினான் ஜெயவர்மன் இகழ்ச்சி யுடன்.

"மூசி நதிக்குத் தெற்கே விரிந்து கிடக்கிறது ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தின் பெரும் பகுதி. சாவகம் முதலிய பெரும் தீவுகள் தெற்கில்தானிருக்கின்றன. ஆகவே தெற்கிலிருந்து எதிரி யாரும் வருவது துர்லபம். வந்தாலும் நெடுக இருப்பது ஸ்ரீவிஜய சாம்ராஜ்யக் கடற்கரைதான். எந்த இடத்திலும் எதிரி கால் வைக்க முடியாது. அப்படிக் காலெடுத்து வைத்தாலும் சாவகத்தைத் தாண்டி, அதற்கும் சொர்ணத் தீவுக்கும் இடையிலுள்ள கடலையும் மீறி உள்ளே நுழைய வேண்டும். நுழைந்த பின்பு இருக்கும் ஜலசந்தி மிகக் குறுகியது. மூசிநதி முகத்துவாரத்துக்கு எதிரேயிருக்கும் *'பங்கஜ'த் தீவுக்கும் இம்மாநகர் இருக்கும் சொர்ணத் தீவின் கரைக்கும் இடையே யுள்ள குறுகிய ஜலசந்திக்குள் நுழைந்தால், பங்கஜத் தீவின் கரையிலும் மூசிநதி முகத்துவாரத்திலுள்ள நமது கடற்படை எந்த மரக்கலக் கூட்டத்தையும் அழிக்க முடியும். ஆகவே படையெடுப்பு ஏற்பட்டால், ஒன்று மூசிநதி ஓடும் மார்க்கத் தில் ஏற்பட முடியும். அல்லது அதற்கு வடபுறம் ஏற்பட முடியும். ஆகையால்தான் இந்த நதியின் வடபுறத்தை அதாவது இந்த அரண்மனையிருக்கும் நகரப்பகுதியை சைலேந்திரர்கள் மிக நன்றாகப் பார்த்திருக்கிறார்கள். மூசி நதிக்குள் புகும் எதிரி அதோ தெரியும் நமது கடற்படைக்குப் பதில் சொல்ல வேண்டும், பிறகு இதோ இந்தக் கனகமணிக் கதவுக்கும் வித்யாதரத் தோரண வாசலுக்கும் பதில் சொல்ல வேண்டும்" என்று உணர்ச்சி வசப்பட்டுப் பேசினான் விஜயசந்திரன்.

ஜெயவர்மன் தனது கடற்படைத் தலைவன் விவரணத் தைக் கேட்டதும் மெல்ல நகைத்தான். அந்த நகைப்பு கடற் படைத் தளபதியின் சீற்றத்தைத் தூண்டவே, "சக்கரவர்த்தி நகைக்கும் காரணம் தெரியவில்லை" என்றான் கோபத்துடன்,

"தளபதியவர்கள் வரலாற்றை மறந்து விட்டீர்களோ என்று சிரித்தேன்" என்றான்.

"எந்த வரலாறு!" அப்பொழுதும் கோபமிருந்தது விஜய சந்திரன் கேள்வியில்.

* இப்பொழுது பங்கா என்று அழைக்கப்படுகிறது.

"இதே மூசி நதியில் சைலேந்திரர்கள் கடற்படையை முறியடித்துக் கனகமணிக் கதவையும் தாண்டி வித்யாதரத் தோரணத்தையும் இராஜேந்திர சோழன் அபகரித்துச் சென்ற வரலாறு தளபதி! அந்த வரலாற்றை மறந்து விட்டீர்கள். அப்பொழுது பழுதுபட்ட மணிக்கதவைத் திரும்பவும் பழையபடி அமைக்கவும், பறிபோன வித்யாதரத் தோரணத் துக்குப் பதில் இன்னொன்று அடித்துக் கட்டவும் எத்தனை பொன்னை, எத்தனை காலத்தை என் தந்தை செலவிட்டிருக் கிறார் தெரியுமா!" என்றான் ஜெயவர்மன்.

விஜயசந்திரன் பெருவிழிகள் சக்கரவர்த்தியை மிகுந்த தைரியத்துடன் ஏறெடுத்து நோக்கின. "அப்பொழுது இருந்த நிலைமை வேறு" என்றான்.

"என்ன நிலைமை?" சக்கரவர்த்தியின் கண்களில் வெறுப்புக் குறி தெரிந்தது.

"சோழர்கள் அப்பொழுது பெரும் படையுடன் வந்தார்கள். நமது கடற்படை அப்பொழுது சிறியது. சோழர்கள் தலைமுறை தலைமுறையாகக் கடற்போரில் பயிற்சி பெற்றவர்கள். நமது கடற்படை அப்பொழுதுதான் சில போர்களைக் கண்டது."

"அப்பொழுதிருந்ததைவிட இப்பொழுது கடற்படை பெரிது என்கிறீரா?"

"ஆம்."

"பயிற்சியும் அதிகமாயிருக்கிறது?"

"ஆம். அதுமட்டுமல்ல."

"வேறென்ன?"

"கலிங்கம் போன்ற ஒரு பெரும் நாட்டின் கடற்படையின் உதவி அப்பொழுது நமக்கில்லை."

"இப்பொழுது இருக்கிறதாக்கும்?" இந்தக் கேள்வியைக் கேட்ட ஜெயவர்மன் பெரிதாக நகைத்தான். "உங்களிருவரை யும் இளையபல்லவன் ஏமாற்றியது எனக்கு வியப்பே இல்லை" என்றும் நகைப்புக்கிடையே கூறவும் செய்தான்.

“சக்கரவர்த்தியவர்கள்...” என்று ஏதோ சொல்ல வந்த விஜயசந்திரனைச் சட்டென்று, “முட்டாள் மாதிரி உளறாதே!” என்று சரேலென்று பெரும் உக்கிரத்துடன் இடைமறித்த ஜெயவர்மன் அதுவரை காட்டிய மரியாதையை அடியோடு கைவிட்டுச் சொன்னான்: “விஜயசந்திரா! கவனமாகக் கேள். இளையபல்லவனை மற்றவர்களால் சமாளிக்க முடியாதென்ற காரணத்தினாலேயே ஜம்பியின் முகத்துவாரத்துக்கு உன்னை அனுப்பினேன். எந்த வாண வீச்சிலிருந்து எந்த மரக்கலமும் மீளமுடியாதோ அந்தச் சீன வாண மருந்துகளையும் வெடிகளையும் நிரம்பக் கொடுத்தே உன்னை அனுப்பினேன். ஆனால் உன்னை நிமிட நேரத்தில் தோல்வியுறச் செய்து உன் மரக்கலங்களிரண்டையும் பிடித்துக்கொண்டான் இளையபல்லவன். ஸ்ரீவிஜயத்தின் வடக்கு அரணான மலையூர்க் கோட்டையையும் கைப்பற்றிக் கொண்டான். சென்ற ஓராண்டுக் காலத்தில் கலிங்கத்தின் மரக்கலங்களனைத்தையும் கைப்பற்றியோ அழித்தோ விட்டான். ஆகவே இப்பொழுது கலிங்கத்தின் உதவி நமக்கில்லை. நமது வட அரண் எதிரி கையில். ஸ்ரீவிஜயம் இன்று என்றுமில்லாத ஆபத்திலிருக்கிறது. தவிர சோழர்கள் இளவரசனொருவன் கடாரத்தில் எனது சகோதரனுடன் தங்கியிருப்பதாகக் கடலோடிகள் சொல்கிறார்கள். அவனும் படைகள் நடத்துவதில் இணையற்றவன் என்று சொல்கிறார்கள். அவன் மலையூரை அடுத்த நமது கடற்கரையில் இறங்கி, தரை மார்க்கமாகவும், இளையபல்லவன் கடற்புறத்தில் மூசிநதி மூலமும் தாக்கினால் நம் நிலைமை என்ன தெரியுமா?” இப்படிச் சொன்ன சக்கரவர்த்தி மிகுந்த உக்கிரத்துடனும் வெறுப்புடனும் விஜயசந்திரனை நோக்கினான்.

“அப்படி மூசிநதி மூலம் இளையபல்லவன் தாக்கத் துணிவானென்று எதிர்பார்க்கிறீர்களா?” என்று வினவினான் விஜயசந்திரன், ஏதோ கேட்கவேண்டுமென்பதற்காக.

“அவன் துணிவுக்குச் சான்று இருக்கிறது,” என்றான் ஜெயவர்மன்.

"என்ன சான்று?"

"உங்களிருவரையும் விடுதலை செய்து என்னிடம் அனுப்பியிருக்கிறானே அதைவிடத் துணிவு என்ன வேண்டும்? எதற்காக அனுப்பியிருக்கின்றான் தெரியுமா?"

"எதற்கு?"

"உன் கடலைக் காக்கவேண்டிய கடற்படைத் தளபதியையும் கோட்டையைக் காக்கவேண்டிய உபதலைவனையும் அனுப்பியிருக்கிறேன். முடியுமானால் உன் தலைநகரைக் காத்துக்கொள் என்று கூறுகிறான் இளையபல்லவன். இது அவன் அறைகூவல் விஜயசந்திரா! இதற்கு எப்படிப் பதில் சொல்ல உத்தேசம்?" என்ற ஜெயவர்மன் விஜயசந்திரனை உற்று நோக்கினான்.

விஜயசந்திரன் சில விநாடிகள் பதில் சொல்லவில்லை. பிறகு "உத்தரவு கொடுத்தால்...?" என்று ஏதோ துவங்கினான்.

"உத்தரவு கொடுத்தால் என்ன செய்து விடுவாய்?" என்று கேட்டான் சாம்ராஜ்யாதிபதி.

"மூசிநதி முகத்துவாரத்தில் என் கடற்படையை நிறுத்தி..."

"உம்..."

"இளையபல்லவனை இம்முறை..."

"முறியடித்து விடுவாய்" என்று வாசகத்தைப் பூர்த்தி செய்த ஜெயவர்மன் இகழ்ச்சியுடன் நகைத்தான். அத்துடன், "ஜம்பி நதி முகத்துவாரத்தில் நீ சாதித்தது போதும் விஜயசந்திரா, இம்முறை கடற்படையை என் இஷ்டப்படி இயக்கப் போகிறேன்" என்றும் கூறினான்.

"எப்படி இயக்கப் போகிறீர்கள்?" விஜயசந்திரன் கேள்வியில் ஆத்திரம் இருந்தது.

அதைச் சிறிதும் சட்டை செய்யாத ஜெயவர்மன், "விஜயசந்திரா! நதியின் முகத்துவாரத்தில் போர்க்கலம் எதுவும் தேவையில்லை. போர்க்கலங்கள் அனைத்தையும் இதோ நதியை அணைத்து நிற்கும் இரு கரைகளிலும் நிற்க வை. அப்படி இருபுறமும் நிற்கும் மரக்கலங்களை இணைக்க

நதியின் குறுக்கிலும் பெரும் நங்கூரங்களைப் பாய்ச்சி நான்கு பெரும் போர்க்கலங்கள் நிற்கட்டும். இது நமது முதல் அரண், நதிக் கோட்டை. அடுத்தது கனகமணிக்கதவம். அடுத்தது வித்யாதரத் தோரணவாயில். கடைசி இரண்டு அரண்களிலு முள்ள மர்ம அறைகளில் வீரர்கள் நிரம்பி நிற்கட்டும். இந்த அரண்களிலுமுள்ள் ஆயுதம் வீசும் யமப் பொறிகள் எந்த விநாடியிலும் இயங்கத் தயாராயிருக்கும். வடபகுதியில் நமது படையின் ஒரு பகுதி போருக்குத் தயாராய் இருக்கட்டும். இளையபல்லவன் இந்த நகரத்துக்குள் காலடி எடுத்து வைக்க முயன்றால் அவனை நான் கடலில் சந்திப்பேன். அநபாயன் தரைப் போர் வல்லவன். அவன் மலையூரை அடுத்த நமது கரையில் காலை வைத்தால் அவனைத் தரையில் சந்திக் கிறேன். நான் பலவர்மனோ, கங்கதேவனோ அல்லவென்பதை நிச்சயமாக இளையபல்லவன் புரிந்துகொள்வான்" என்று கூறினான். மேலும் "விஜயசந்திரா! நீங்கள் இங்கு வந்து ஒருவார காலம் ஆகியும் இளையபல்லவன் நடமாட்டம் எங்குமில்லை. அவனது கடல்புறாவும் மற்ற மரக்கலங்களும் போன இடம் தெரியவில்லை. அவன் எங்குதான் போயிருப்பான்?" என்று கேட்டான்.

அதற்கு விடையளிக்க விஜயசந்திரனாலோ உபதலைவ னாலோ முடியவில்லை. அந்த வினாவுக்கு விடை அடுத்த ஒன்றரை மாத காலத்துக்குக் கிடைக்கவில்லை. அந்த ஒன்றரை மாத இடைக்காலம் பெரும் அமைதியைத் தந்தது ஜெய வர்மனுக்கு. தனது அரண்களைப் பலப்படுத்திக்கொள்ள அவகாசமும் கிடைத்தது ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதிக்கு. அப்படித் தன்னைப் பலப்படுத்திக்கொண்டதால் அநபாயன் கடாரத்திலிருந்து விடுத்த இரண்டு சமாதானத் தூதுக் களுக்கும் செவி சாய்க்க மறுத்தான் ஜெயவர்மன். கடைசியாக வந்த தூது கடுமையாயிருந்தது. "இன்னும் பதினைந்து நாட்களுக்குள் பதில் இல்லையேல் சோழர்கள் படை ஸ்ரீவிஜயத்தில் நுழையும்" என்று அநபாயன் ஓலை அனுப்பி யிருந்தான்.

“இளவரசரை அங்கு எதிர்பார்க்கிறேன் என்று சொல்” என்று பதிலனுப்பினான் ஜெயவர்மன்.

அந்தப் பதிலை அனுப்பிய நாளிலிருந்து ஒவ்வொரு தினத்திலும் ஸ்ரீவிஜயப் பாதுகாப்பு பலப்பட்டது. அத்தனைக்கும் ஜெயவர்மன் காதுகளில், ‘இந்த இளைய பல்லவன் எங்கே ஒழிந்தான்?’ என்ற கேள்வி மட்டும் அடிக்கடி ஒலித்துக்கொண்டு இருந்தது. ஆனால் அந்த ஒலி விடையில்லா வினாவாகவே இருந்தது. இளையபல்லவன் அடியோடு மறைந்துவிட்டான். அதுவும் மரக்கலங்களுடன் மறைந்துவிட்டான். அதற்கு அத்தாட்சியுமிருந்தது. ஸ்ரீவிஜயத்தின் வணிகக் கப்பல்கள் நிர்ப்பயமாக பங்கஜத் தீவின் ஜலசந்தியில் உலாவின. ஜெயவர்மன் அமைதி நாளுக்கு நாள் அதிகரித்துக்கொண்டு வந்தது. அநபாயன் குறிப்பிட்ட பதினைந்து நாட்கள் கழித்தும் சோழர் படை எதுவும் ஸ்ரீவிஜயத்தினருகே தலை காட்டாததால் பெரும் துணிவும் ஏற்பட்டது ஜெயவர்மனுக்கு. சித்ரா பௌர்ணமியும் மெள்ள மெள்ள நெருங்கிக் கொண்டிருந்தது. ஆனால் அந்தச் சித்ரா பௌர்ணமியன்று காஞ்சனாதேவிக்கு முடி சூட்டச் சபதம் செய்திருந்த இளையபல்லவன் நடவடிக்கை எந்தத் திக்கிலும் காணவில்லை. இந்த விசித்திரத்துக்குக் காரணமும் ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதிக்குப் புரியவில்லை. அவன் புரிந்துகொள்ளக் கூடிய நாளும் மெள்ள மெள்ள நெருங்கியது. சித்ரா பௌர்ணமிக்கு எட்டுத் தினங்களுக்கு முன்பு ஏழாம் பிறை மெள்ள மெள்ள வானத்தில் எழுந்தது. அதுமட்டுமல்ல, ஸ்ரீவிஜயத்தின் ஆபத்தும் எழுந்தது.



இளையபல்லவனின்
விசித்திரத் தாக்குதல்
மெல்லத்தான் வந்தது.
ஆனால் திடமாக வந்தது.
திடீரென வெடித்தது.

## 68. தீக் கப்பல்கள்

சாண்டில்யன்



# கடல் புறா

அத்தியாயம் 68

# தீக்கப்பல்கள்

சித்திரைத் திங்களில் வளர்பிறையின் ஏழாம் இரவில் ஸ்ரீவிஜய மாநகரத்துக்கு அத்தனை பெரிய, அத்தனை விசித்திர, அத்தனை முறைகேடான ஆபத்து திடீரென எழுந்து டுமென்று ஜெயவர்மனோ, அவனது படைத்தலைவர்களோ சிறிதும் எதிர்பார்க்கவில்லையாகையால், எழுந்த ஆபத்தை அவர்கள் சமாளிப்பது பிரம்மப் பிரயத்தனமாகிவிட்டது. விஜயசந்திரன் யோசனையையும் மீறி, சாம்ராஜ்யாதிபதியான ஜெயவர்மன் எந்த ஒரு மரக்கல அரணை மூசி நதியில் அமைத்தானோ அந்த அரணே ஸ்ரீவிஜயத்தை நாசமாக்கும் கருவிகளில் ஒன்றாகுமென்றோ, அங்கு ஏற்பட்ட விசித்திரத் தாக்குதல் பாதி கடற்கொள்ளைக்காரர்கள் முறையிலும் பாதி அறப்போர் முறையிலும் நடக்குமென்றோ எதிர்பார்க்காத தால், அந்தத் தாக்குதலின்போது தான் இட்ட திட்டம் தவிடுபொடியாவதைத் தன் கண்களாலேயே ஜெயவர்மன் கண்டான். அதுமட்டுமல்ல அவன் கண்டது, மக்கள் பிரியப் படி அரசாளாமல் கொடுங்கோல் செலுத்தும் மன்னர்கள் வீழ்ச்சியுறும்போது எத்தனை துரிதமாக வீழ்ச்சி அடை கிறார்கள் என்பதையும் கண்டான். ஆகவே சற்றும் எதிர் பாராத விதமாக மூசி நதியிலுள்ள தனது மரக்கலங்கள் தீப்பிடித்து எரிந்து வெடிக்கத் தொடங்கியபோது அது தனது மரக்கலங்களைப் பிடித்த சாதாரணத் தீயல்லவென்பதையும் தனது மக்கள் மனத்தில் நீண்ட காலமாகப் பிடித்துச் சுடர் விட்டுக் கொண்டிருந்த துன்பத் தீ என்பதையும் ஜெயவர்மன் சந்தேகமற உணர்ந்து கொண்டான். நதியிலிருந்த மரக்கலங்கள் தீப்பிடித்ததைத் தொடர்ந்து நகரத்துக்குள்ளே ஏற்பட்ட குழப்பமும் கூச்சலும் ஜெயவர்மன் உணர்ந்து கொண்டது உண்மையே என்பதற்கு அத்தாட்சிகளாயிருந்தன.

அந்த ஏழாம் பிறையைக் குறித்து ஜெயவர்மன் பிற்காலத்தில் பெரிதும் கலங்கியிருக்கிறான். அன்று அவன் தனது அரண்மனை உப்பரிகையிலிருந்து கண்ட காட்சி ஆயுள் பூராவும் அவன் கண்ணெதிரே நின்றது. அன்றிரவில் அவன் இளையபல்லவனை ஏதேதோ சொல்லிச் சபித்தான். ஆனால் அதற்குப் பின் பல இரவுகளில் அந்த ஏழாம் பிறை இரவை நினைத்து நினைத்து வியப்பும் எய்தியிருக்கிறான். 'அத்தகைய ஒரு படைத்தலைவன் மட்டும் எனக்கிருந்திருந்தால் சீனத்தைக் கூட நான் வெற்றி கொண்டு இருப்பேனே?' என்று அவன் தனக்குள் பிற்காலத்தில் பலமுறை சொல்லிக் கொண்டான். இளையபல்லவனின் விசித்திரத் தாக்குதல் அப்படி வந்தது. மெள்ளத்தான் வந்தது. ஆனால் திடமாக வந்தது, திடீரென வெடித்தது.

ஏழாம் பிறை உதயமான சமயத்தில் தனது உப்பரிகையில் நின்று மூசி நதியைக் கண்ட ஜெயவர்மன் மனத்தில் நிம்மதி பெரிதும் நிரம்பி நின்றது. நதியில் அவன் அமைத்த போர்க்கல அரண் மிகுந்த கம்பீரமாகக் காட்சியளித்தது. நதியின் இரு கரைகளிலும் சுமார் இருபது மரக்கலங்கள் போர்ச் சன்னத்துடன் நின்றன. அவை ஒவ்வொன்றிலும் சீனத்து வாண வெடி மருந்துகள் நிரம்பிக் கிடந்தன. வேல்களையும் அம்புகளையும் வீசக் கூடிய பெரும் பொறிகளும் அமைக்கப் பட்டிருந்தன. பொறிகளை இயக்கவும், அவசியம் ஏற்பட்டால் நெருங்கிப் போராடவும் ஒவ்வொன்றிலும் ஐந்நூறு மாலுமிகள் சதா கண்ணுங் கருத்துமாகத் தயாராயிருந்தார்கள். இப்படி இரு கரைகளிலும் நின்ற போர்க்கப்பல் தொடரை நதிக்குக் குறுக்கே நின்று ஐந்து போர்க்கப்பல்கள் இணைத்து, நதிக்கு ஒரு குறுக்குப் பாலத்தையும் போட்டன. நதிக்குள் நுழையும் எந்த மரக்கலக் கூட்டமும் முதலில் குறுக்கே நின்ற ஐந்து போர்க்கலங்களை மோத வேண்டும், மோதி உள்ளே நுழைந்தாலும் இரு பக்கங்களிலுமுள்ள பத்துப் பத்துக் கப்பல் களின் தாக்குதலை ஒரே காலத்தில் சமாளிக்க வேண்டி யிருக்கும். ஒரே சமயத்தில் மூன்று போர்க்கலங்களுக்கு மேல்

மூசி நதிக்குள் சேர்ந்து வரமுடியாது. அகலம் அத்தனைதான் அந்த நதிக்கு. இது மட்டுமல்ல, மூசிநதி கடலில் கலக்க ஓடும் வேகமும் அதிகம்.

ஆகவே உட்புகும் மரக்கலங்கள் மெல்லவே வரமுடியும். அப்படி மெல்ல வரும் மரக்கலங்களை நதியை அடைத்துக் குறுக்கே நிற்கும் மரக்கலங்கள் மட்டும் நங்கூரமெடுத்துத் தாக்குவதானால் நதிவேகத்தில் வெகு துரிதமாக ஓடி, உள்புகும் மரக்கலங்களை மோதிவிட முடியும். எந்த வகையில் பார்த்தாலும் எதிரி யாரும் உட்புகமுடியாத பெரு அரண் அது. அதைப் பார்த்து ஜெயவர்மன் மகிழ்ச்சி அடைந்தான்.

அந்த மகிழ்ச்சிக்குக் காரணம் அந்த அரண் மட்டுமல்ல. அதை அடுத்து நகருக்குள்ளிருந்த இரண்டு வளைவுக் கோட்டை மதில்களும், அந்த மதில்களின் இரு வாயில்களுங் கூட அவன் உள்ள மகிழ்ச்சியை உச்சிக்குக் கொண்டுபோயின. முதல் அரணின் வாயிலாகக் 'கனகமணிக்கதவு'கள் கோபுரம் போல் உயர்ந்து நின்றன. அழகிய மணிகள் பல அவற்றில் பொருத்தியிருந்ததன் காரணமாக அந்தக் கதவுகள் திறக்கப் படும்போது அந்தப் பெரும் கதவுகள் கணகணவென்று பேரொலி கிளப்பும். கதவுகள் மிக அகலமாயிருந்ததால், அவற்றில் பல்வேறு திட்டிக் கதவுகளும், திட்டிக் கதவுகளுக்குப் பின்பு பெரும் மரத் தட்டுகளும் இருந்தபடியால் பெருங் கதவுகளைத் திறக்காமலே அந்தத் திட்டிக் கதவுகளை மட்டும் திறந்து மரத் தட்டுகளில் நின்று வீரர்கள் படையெடுப்பவர் மீது வேலெறிய வசதியிருந்தது. ஆதி சைலேந்திரர்களால் நிர்மாணிக்கப்பட்ட அந்தக் கனகமணிக் கதவுகள் இராஜேந்திர சோழனால் அழிக்கப்பட்ட பிறகு சில ஆண்டு களுக்கு முன்பே ஜெயவர்மனால் மீண்டும் பழுது பார்க்கப் பட்டுத் திருத்தியமைக்கப்பட்டன.

அடுத்த அரணான வித்தியாதரத் தோரணம் கவர்ச்சி கரமான ஒரு பெரும் தடை. அரண் வாயிலுக்குக் குறுக்கே யிருந்த அந்தப் பெரும் தோரணத்தில் தொங்கிய வஜ்ர வைடூரிய கோமேதகக் கற்களிழைத்த பெரும் மாவிலைகள்

சைலேந்திரர்கள் பெரும் செல்வத்துக்குச் சான்று கூறின. அந்தத் தோரணத்தைக் காக்க இருபுறத்திலும் இயங்கும்படி இரு தேர்களைப்போல் அமைக்கப்பட்டிருந்த இரு அம்புக் கூடங்கள் தோரணத்தினருகே வருபவர்களுக்கிருந்த ஆபத்தை நன்கு விளக்கின. தோரணத்தின் இரு முனைகளையும் அடுத்திருந்த பெரும் அரண் சுவரையொட்டி இயங்கிய இந்த இரு அம்பு ரதங்களும் எந்த விநாடியிலும் சுழன்று ஒன்று சேரக்கூடிய ஸ்திதியில் அமைந்திருந்தன.

இவையனைத்தையும் அந்த இரவில் வெண்மதி அளித்த நிலவில் கண்ட ஜெயவர்மன் நிம்மதிப் பெருமூச்சு விட்டான். அந்த இரவில் கடுமையான உத்தரவுகளின் காரணமாகச் சாதாரண மக்கள் வெளியில் அதிகமாக உலவாவிட்டாலும் வணிகர்கள் மட்டும் உலவிக்கொண்டிருந்ததையும், மூசி நதிக்கரையில் அப்பொழுதும் படகுகளிலிருந்து வணிகப் பொருள்கள் இறக்குமதி செய்யப்படுவதையும் கண்ட ஜெயவர்மன் முகத்தில் சிறிது மகிழ்ச்சிச் சாயையும் தெரிந்தது. அந்தச் சமயத்தில் நதியின் பிரவாகத்தை எதிர்த்துத் தனது போர்க்கல அரணை நோக்கி வந்து கொண்டிருந்த மூன்று பெரும் வணிகக் கப்பல்களில் ஸ்ரீவிஜயத்தின் கொடிகள் பறப்பதைக் கண்டு மேலும் சந்துஷ்டியடைந்தான் ஜெயவர்மன்.. அந்த மூன்று மரக்கலங்களும் ஒன்றன்பின் ஒன்றாய் அரணுக்குள் நுழைய நதியின் குறுக்கே நின்ற போர்க் கலங்கள் வழிவிட்ட முறைகூட ஜெயவர்மனுக்குத் திருப்தியே அளித்தது.

அந்த மூன்று மரக்கலங்கள் நெருங்கியதும் குறுக்கே நின்ற ஸ்ரீவிஜயத்தின் போர்க்கலங்களிலிருந்து சங்குகள் ஊதப் பட்டன. அந்தக் கட்டளையின் விளைவாக முன்னேறுவதை நிறுத்திக்கொண்ட அந்த மூன்று வணிகக் கப்பல்களில் முதலிலிருந்த கப்பலைத் தளத்திலிருந்தபடியே ஸ்ரீவிஜயத்தின் உபதளபதி விசாரித்த பின்பே அந்த மூன்று மரக்கலங்களும் உள்ளே நுழைய அனுமதியளிக்கப்பட்டது. அப்படி நுழைந்த மூன்று வணிகக் கப்பல்களும் நதியின் வடகரைக்கு வந்து

படகுகளில் வணிகப் பொருள்களை இறக்கத் தொடங்கின. அப்படி அவை இறக்கிக் கொண்டிருந்த சமயத்தில் வேறு மூன்று வணிகக் கப்பல்களும் நதியில் நுழைந்து வந்து கொண்டிருந்தன. இப்படி நிம்மதியாக வாணிபம் நடப்பதி லிருந்தே எதிரி நடமாட்டம் எதுவும் மூசி நதி முகத்துவாரப் பிராந்தியத்தில் இல்லையென்பதைத் தீர்மானித்துக் கொண்ட ஜெயவர்மன் மகிழ்ச்சி திடீரென உடைக்கப்பட்டது. வணிகப் பொருள்களை இறக்கிக் கொண்டிருந்த மரக்கலங்கள் மூன்றும் திடீரெனச் சுழன்று நதி நடுவேயிருந்த போர் அரணை நோக்கி நதி வேகத்தில் வேகமாக ஓடின. ஒருவேளை அவற்றின் நங்கூரங்கள் சரியாகப் பாய்ச்சப்படவில்லையோ என்று நினைத்தான் ஜெயவர்மன். அடுத்த விநாடி அந்த மூன்று மரக்கலங்களும் தீப்பிடித்துக்கொண்டு எரிய ஆரம்பித்தன. அவற்றிலிருந்த மாலுமிகள் சரேல் சரேலென நதியில் குதித்தார்கள்.

கிழக்கேயிருந்து வந்துகொண்டிருந்த காற்று அந்த மரக் கலங்களில் தீயை விசிறிவிட்டதால் தீ நாக்குகள் பெரிது பெரிதாக எழுந்தன. அப்படி எழுந்த தீ நாக்குகளுடன் நதியில் பின்னோடிய மரக்கலங்கள் நதியை அடைத்து நின்ற போர்க் கப்பல்களுடன் மோதவே அவற்றிலும் இரண்டு தீப்பிடித்துக் கொண்டன. இதன் விளைவாகத் திடீரென நதிப் பிராந்தியத்தில் பேரிரைச்சல் ஏற்பட்டது. இரு கரையிலும் நங்கூரம் பாய்ச்சி நின்ற இரண்டிரண்டு மரக்கலங்கள், நங்கூரங்களை எடுத்து உதவிக்கு நகர்ந்தன. உதவிக்கு நகர்ந்த மரக்கலங்களின் நிலைமையும் ஆபத்தாகிவிட்டது. நதியை அடைத்து நின்ற ஸ்ரீவிஜயப் போர்க்கப்பல்களைத் தீப் பிடித்த மூன்று வணிகக் கப்பல்களும் மோதிவிட்டதாலும், அந்த மோதலால் விளைந்த தீ ஜ்வாலைகள் ஸ்ரீவிஜயப் போர்க் கப்பல்களை மட்டுமின்றி அவற்றிலிருந்த வாண, வெடிமருந்துகளையும் பற்ற வைத்துவிட்டதாலும் பெரும் வாண வேடிக்கை மூசிநதிப் பிராந்தியத்தில் ஏற்பட்டது.

இத்தகைய கடுமையான நிலைமையையும் விஜயசந்திரன் சமாளித்தான். ஜெயவர்மன் உத்தரவுப்படி அவன் அரணை நதியில் அமைத்திருந்தாலும் எதிர்பாராது ஏற்பட்ட அந்தத் தீ விபத்திலிருந்து தனது மரக்கலங்களைக் காக்க அரணைச் சிறிது தளர்த்தி மரக்கலங்களைப் பிரியும்படி உத்தரவிட்டான். அப்படி அவன் போர்க்கலங்கள் பிரிந்திருந்தால் அந்தப் பெரும் கடற்படை தப்பியிருக்கும். ஆனால் விதியும் இயற்கை யும்கூட அவனுக்கு எதிராக இயங்கின. அந்த மரக்கலங்கள் தப்புவதற்குள் நதியின் முகத்துவாரத்திலிருந்து வந்துகொண் டிருந்த மற்ற மூன்று வணிகக் கப்பல்களும் தங்களுக்குத் தாங்களே தீ வைத்துக் கொண்டதாலும் அவை கிழக்குக் காற்றினாலும், நாழிகைகள் ஏறியதன் விளைவாக நதிக்குள் பிரும்மாண்டமாகப் புகுந்த கடல் அலைகளின் வேகத்தாலும் வெகு வேகமாக நதியின் குறுக்கு அரணை மோதின.

எங்கும் ஒரே ஜ்வாலை! எங்கும் ஒரே கூச்சல்! கடற் படையின் அணிவகுப்பு சின்னாபின்னப்பட்டது. நதிக்குக் குறுக்கே நின்ற ஸ்ரீவிஜயத்தின் போர்க்கலங்கள் நங்கூரமெடுத்து அகன்றும் தீப்பிடித்து எரிந்து வெடித்தன. அவற்றிலிருந்த வாண மருந்துகள் பெரிதாகப் பற்றியதால் பெரு வெடிகள் நகரத்தின் வடபுறத்தின்மீது வந்து விழுந்தன. நதிக்கரையில் ஏகக் கூச்சல்! நதியின் இருபுறங்களிலுமிருந்த மற்ற ஸ்ரீவிஜயப் போர்க்கப்பல்களும் நங்கூரமெடுத்தன. இவற்றின் தலைமைப் போர்க்கப்பலிலிருந்து போர்த் தாரைகள் பலமாகச் சப்தித்தன. போருக்கான ஆயத்தச் சத்தம், நதிக்கரை வணிகர் ஊருக்குள் விரையும் கூச்சல், மரக்கலங்கள் வெடிக்கும் கோர ஒலிகள், இப்படி நானாவித ஒலிகளுக்கிடையே ஸ்ரீவிஜய மாநகரம் பயங்கரக் கோலத்தைப் பூண்டது.

ஸ்ரீவிஜயத்தின் இரண்டு போர்க்கலங்கள் பிற நாட்டு வணிகக் கப்பல்கள் ஆறும் தீப்பிடித்ததால், வணிகக் கப்பல் களிலிருந்தவர்கள் திடீரென நீரில் குதித்துவிட்டாலும் ஸ்ரீவிஜயப் போர்க்கப்பல்களிலிருந்து குதிக்க முடியாத சில மாலுமிகள் வெடி மருந்தால் மாண்டு அவர் சடலங்கள்

நதியில் உருண்டோடின. வெடித்த கப்பல்களின் மரக் கட்டைகள் அந்தச் சடலங்களுடன் சேர்ந்து ஓடி, மனிதன் உயிர் பிரிந்துவிட்டால் அவன் போற்றும் உடல் கட்டைதான் என்பதை எடுத்துக் காட்டின.

இப்படித் தனது போர்க்கப்பல்கள் இரண்டு நாசமாகியும் விஜயசந்திரன் மிகச் சாமர்த்தியமாக மற்றப் போர்க்கப்பல் களைக் காப்பாற்றினான். நதியை அடைத்து நின்ற சேத மடையாத, மற்ற மூன்று போர்க்கலங்களைப் பின்னடையச் சங்கு ஊதினான். வந்தவை வெறும் வணிகக் கப்பல்கள் அல்ல என்பதையும், வெகு திட்டமாகச் செய்யப்பட்ட சதியின் தூதர்களே அவையென்பதையும் உணர்ந்த விஜய சந்திரன், போர்த் தாரைகளைச் சப்திக்க உத்தரவிட்டான். அந்தத் தாரைகளின் சத்தத்துடன் வேறொரு பேரொலியும் கிழக்கே நதி முகத்துவார மார்க்கத்தில் கேட்டது. அந்த ஒலி விஜயசந்திரன் காதில் மட்டுமல்ல அரண்மனை உப்பரிகை யில் நின்று நதிப் பகுதியில் நடந்த அனைத்தையும் கவனித்துக் கொண்டிருந்த ஜெயவர்மன் காதிலும் விழுந்தது. ஜெயவர்மன், நதி கடலை நோக்கிப் பாயும் பகுதியை நோக்கினான். நதி நீரை எதிர்த்துப் பாயும் கடலின் பேரலைகளில் ஊர்ந்து, விதித்தேவன் அனுப்பிய வாளிபோல், கடல்புறா வெகு வேகமாக நதிக்குள் நுழைந்து வந்து கொண்டிருந்ததை ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதி கண்டான்.

அத்தியாயம் 69

# சிதைந்த மாநகர்

மூசி நதிக்குள் தனது பெரும் மூக்கை நீட்டிக்கொண்டும் இரண்டு இறக்கைகளையும் அகல விரித்துக்கொண்டும், பறந்து வருகிறதா அல்லது நீரில் மிதந்துதான் வருகிறதா என்பதை நிர்ணயிக்க முடியாத நிலையில், வெகு வேகமாக உட்புகுந்து கொண்டிருந்த கடல்புறாவைக் கண்ட ஸ்ரீவிஜய சாம்ராஜ் யாதிபதிக்கு அந்தச் சமயத்தில் அச்சத்தைவிட வியப்பே மேலிட்டது. கடல்புறாவைப் பற்றி அவன் கேள்விப் பட்டிருந்தானே யொழிய நேரில் பார்க்கும் வாய்ப்பில்லா திருந்ததால், அது நதிக்குள் நுழைந்த முறையைக் கண்டதும் அதன் கீர்த்திக்குக் காரணமிருக்கிறதென்பதை, கூரிய அறிவு படைத்த ஜெயவர்மன் சந்தேகத்துக்கிடமின்றி அறிந்து கொண்டான். கடல்புறா பெரிதாயிருந்ததே தவிர, அது வரும் லாகவத்தில் அது மிகச் சுலபமாக நீரில் திரும்பித் திரும்பிப் போரிடவல்ல அசாதாரண போர்க்கலம் என்பதையும் ஜெயவர்மன் புரிந்துகொண்டான். இருப்பினும் அந்த ஒரு மரக்கலம் மீதியுள்ள தனது இருபத்து மூன்று மரக்கலங்களை எப்படி எதிர்க்க முடியும் என்றும் எண்ணினான். விஜய சந்திரனை நம்பாமல் தானே நதியில் மரக்கல அரண் அமைத்து அதை இயக்கும் முறையையும் கடற்படைத் தளபதிக்குத் தானே போதித்திருந்ததால், தன் ஆணைப்படி போரிட்டால் விஜயசந்திரன் எதிரியின் மரக்கலங்களை எப்படியும் வெற்றிகொள்ளலாமென்று தீர்மானித்திருந்த ஜெயவர்மன், கடல்புறா நுழைந்த சமயத்திலும் மிகத் துணிவுடனும் அலட்சியத்துடனுமேயே நதிப் பகுதியில் நடப்பனவற்றைக் கவனிக்கத் தொடங்கினான். அப்படிக் கவனிக்கத் தொடங்கிய சமயத்திலும் அவனுக்குப் பெரும்

சந்தேகமொன்று மட்டும் மனத்தில் எழுந்தது. 'இத்தனை பெரிய போர்க்கப்பலை இத்தனை நாட்கள் இளையபல்லவன் எங்கு ஒளித்து வைத்திருந்தான்? எனது ஒற்றுப் படகுகளின் கண்களில் எப்படி மண்ணைத் தூவினான்?' என்ற கேள்விகள் திரும்பத் திரும்ப •அவன் மனத்தில் எழுந்து கொண்டிருந்தன. அந்தக் கேள்விகள் அவன் மனத்திலெழுந்து முடிவதற்குள் மற்றும் ஒரு விசித்திரத்தையும் நதிப் பகுதியில் அவன் கண்கள் கண்டன.

கடல்புறாவைப் பின்பற்றி மரக்கலத் தொடர் ஒன்று வந்துகொண்டிருந்தது. சோழர்களின் பெரும் புலிக்கொடி கடல்புறா மீது பறந்தது போலவே அதைப் பின்தொடர்ந்த மரக்கலங்கள் மீதும் பறந்ததையும், பின் வந்த கப்பல்களும் போர்க்கலங்களே என்பதையும் கண்ட ஜெயவர்மனுக்கு ஏதும் விளங்கவில்லை. 'மூசி நதியின் முகத்துவாரத்துக்கு இரு பகுதியிலுமுள்ள கடலோரத்தில் தான் நிற்க வைத்திருந்த வேவுக் கப்பல்கள் என்னவாயின? அவை ஏன் ஆகாய வாணங்களை வீசி எதிரியின் வருகையைத் தெரியப்படுத்த வில்லை?' என்று வினாக்களைத் தன் உள்ளத்தில் எழுப்பிக் கொண்ட ஜெயவர்மன், அதற்கு மேலும் தாமதிக்காமல் திடீரென நின்ற இடத்திலிருந்து கிளம்பி வெகு வேகமாகத் தனது ஆஸ்தான மண்டபத்தை அடைந்து காவலரை அழைத்து, சீக்கிரம் தனது ரதத்தைத் தயார் செய்யுமாறு கட்டளையிட்டான். அது தவிர, தனது மேலுப்பரிகையின் மாடியிலிருந்து போர் முரசுகளைச் சப்திக்கவும் செய்தான்.

அடுத்த இரண்டு மூன்று நாழிகைக்குள் அந்த சாம்ராஜ்யத் தலைநகர் போருக்குத் துடித்து எழுந்தது. ஸ்ரீவிஜய மாநகரத்தின் வடபகுதியின் நடுவேயிருந்த சக்கர வர்த்தியின் அரண்மனையிலிருந்து போர் முரசு ஒலித்ததும், அந்த மாநகரில் பல பகுதிகளில் எழுப்பப்பட்டிருந்த பெரும் ஸ்தூபிகளிலிருந்து தாரைகள் முழங்கின. நகரத்தின் பெரும் அரண் வாயில்களான கனகமணிக் கதவுகளும் வித்தியாதரத் தோரண வாயில்களும் வெகு சீக்கிரம் மூடிக்கொண்டன.

இரண்டு அரண்களின் சுவர்கள் மீது காவல் வீரர்கள் சரசரவென ஏறி விற்களையும் இதர போர்ப் பொறிகளையும் இயக்கத் தயாராக நின்றனர். இத்தனை ஏற்பாடுகளையும் கவனித்துக்கொண்டும் அந்தந்த வாயிலுக்கு வந்தபோது புதுப்புது உத்தரவுகளைப் பிறப்பித்துக் கொண்டும் பூரணக் கம்பீரத்துடன் தனது ரதத்தில் சென்ற ஜெயவர்மன் பல வாயில்களையும் தாண்டி நதிக்கரைக்கு வந்து சேர்ந்தான். நதியை அடைந்ததும் காவலர் எத்தனை தடுத்தும் கேளாமல் தானே ஒரு படகைக் கட்டவிழ்த்து ஏறி அதைச் செலுத்திக் கொண்டு விஜயசந்திரன் இருந்த போர்க்கலத்தை அடைந்தான். அந்தப் பெரும் போர்க்கப்பலின் நூலேணியில் ஏறி தளத்துக்கு வந்த ஜெயவர்மன் தளத்திலிருந்தபடியே சுற்றிலுமிருந்த நிலையைக் கவனித்தான்.

தூரத்தில் அரண்மனை உப்பரிகையிலிருந்து பார்த்ததை விட அருகில் எழுந்த காட்சி மிகப் பயங்கரமாயிருந்தது. தீப்பிடித்த மரக்கலங்கள் அப்பொழுதும் நீர் மட்டத்தில் எரிந்துகொண்டும், வெடித்துப் பெரும் மரத் துண்டுகளைத் தீயுடன் நகரத்தின் மீது வீசிக்கொண்டுமிருந்தன. அவை வீசிய நெருப்புத் துண்டங்களால் நதியின் இருகரைகளின் ஓரங் களிலும் இருந்த மீனவர் குடிசைகள் பற்றி எரிந்து கொண் டிருந்தன. இறந்த மாலுமிகளின் பிணங்கள் பல அசுர வேகத்தில் நதியில் உருண்டும் அழிந்தும் பயங்கரத்தை விளைவித்துக் கொண்டிருந்தன. சில பிணங்கள் மல்லாந்த போது பல்லைக் காட்டியதால் ஜெயவர்மன் கொடுங் கோலாட்சி ஸ்ரீவிஜயத்தில் முடிந்துவிட்டதைக் குறித்து நகைப்பன போலிருந்தது.

இத்தனை கோரத்தையும் நாசத்தையும் கண்டும் சிறிதும் கலங்காத ஜெயவர்மன், விஜயசந்திரனை நோக்கி, "தளபதி! கடல்புறா வருவதைக் கவனித்தீரா?" என்று வினவினான்.

"கவனித்தேன்." விஜயசந்திரன் சற்றும் கலங்காமல் கூறினான்.

"அதைத் தொடர்ந்தும் போர்க்கலங்கள் வருகின்றன," என்று உணர்த்தினான் ஜெயவர்மன்.

"அதையும் கவனித்தேன்" என்றான் விஜயசந்திரன்.

"கவனித்தால் மட்டும் போதாது. அவற்றைச் சமாளிக்கவும் வேண்டும்."

"ஆம்."

"அதற்கு என்ன திட்டம் வகுத்திருக்கிறீர்?"

"திடீரென ஏற்படும் ஆபத்துகளுக்கு முன்கூட்டித் திட்டங்கள் வகுப்பதில்லை. அவ்வப்பொழுது ஏற்படும் நிலைமையை முன்னிட்டுப் போர் முறைகளை மாற்றிக் கொள்வது வழக்கம்" என்று சக்கரவர்த்தியை நோக்கிச் சற்று உஷ்ணத்துடனேயே சொன்ன விஜயசந்திரன், மேற்கொண்டு ஜெயவர்மன் உத்தரவுக்காகக் காத்திராமல் தனது உப தளபதியை அழைத்து விடுவிடுவென உத்தரவுகளைப் பிறப்பித்தான்.

அந்த உத்தரவுகளுக்கு ஜெயவர்மன் எந்த ஆட்சேபணைகளையும் கிளப்பவில்லை. போர் அரங்கத்தில் அந்தந்தப் போரில் அனுபவமுள்ள தளபதிகள் இஷ்டப்படி அலுவல்கள் நடக்கவிடுவதே முறையென்பதை நன்றாக உணர்ந்திருந்த ஜெயவர்மன், தளத்தின் ஒரு புறத்தில் நின்றவண்ணம் அடுத்து நடப்பதைக் கவனித்தான். விஜயசந்திரனின் உத்தரவுப்படி மீண்டும் தாரைகள் முழங்கின. அந்தத் தலைமைப் போர்க் கப்பலிலிருந்து பல இடங்களில் பந்தங்கள் ஆடின. நதியின் இருபுறங்களிலிருந்த போர்க்கப்பல்கள் நங்கூரமெடுத்துத் திரும்பி சில நதி மையத்துக்கும் சில பக்கவாட்டிலும் வளைந்து நதிக்குக் குறுக்கே மூன்றாம் பிறைச் சந்திரனைப்போல் வளைந்து நின்றன. அந்த வளையத்துக்குள் கடல் புறா நுழைந்ததும் வளையங்களின் நுனிகள் மூடி வளையத்தைப் பூர்த்தி செய்யவும் வாண மருந்துகளை வீசவும் உத்தர விட்டிருந்தான் விஜயசந்திரன். இந்த உத்தரவின் பலனில் சிறிது சந்தேகமிருந்தது ஜெயவர்மனுக்கு மட்டும். 'இத்தகைய

வளையத்துக்குள் நுழைய இளையபல்லவன் முட்டாளா?' என்று தன்னைக் கேட்டுக் கொண்டான். அந்தக் கேள்விக்குச் சிறிது நேரத்தில் கிடைத்த விடை ஜெயவர்மனுக்கே வியப்பை உண்டாக்கியது.

கடல் புறா எதிரியின் போர் வளையத்தை நோக்கி வேகமாக வந்துகொண்டிருந்தது. அது கிட்டத்தட்ட வளையத்தை எட்டும் சமயத்தில் அதன் பின்பு வந்து கொண்டிருந்த ஆறு மரக்கலங்கள் சற்றே தாமதமாக முன்னேறின. கடல் புறா மட்டும் திடீரென அந்த வளையத் துக்குள் நுழையவே வளையம் மூடப்பட்டு, கடல் புறாவின் மீது வேல் மழையும் அம்பு மழையும் பெய்யப்பட்டன. அந்த அம்பு மழையையும் வேல் மழையையும் சமாளிக்கக் கடல் புறா நின்று போராடுமென்று எதிர்பார்த்த விஜயசந்திரன் திகைத்தான். கடல் புறா தற்காப்புக்கு மட்டும் திரும்பி, சில தீப்பந்தங்களை வீசியதே தவிர, மற்றபடி போரிடும் முயற்சியில் ஈடுபடாமல் நதியில் வேகத்துடன் முன்னேறியது. அதனுடைய பெரும் துடுப்புக்கள் வேகத்துடன் துழாவப்பட்டதாலும், கிழக்கத்திக் காற்று வலுத்துவிட்டதாலும், கடலின் எதிரலை யும் உதவி செய்ததாலும் கடல் புறா நதியை அம்புபோல் கிழித்துக் கொண்டு தன்னை மடக்கியிருந்த போர்க்கப்பல் வளையத்தின் மேற்குப் பகுதியைத் திடீரெனத் தாக்கியது.

கடல் புறா தனது போர் வளையத்துக்குள் சுழன்று போராடும் என்று எதிர்பார்த்த விஜயசந்திரன் அது நேராகச் சென்று தனது வளையத்தின் முதுகை உடைக்க முற்பட்டதால் பிரமித்தான். அது என்ன புதுப் போர்த் திட்டமென்பதை ஊகிக்கு முன்பே நிகழ்ச்சிகள் துரிதத்தில் நிறைவேறின. வளையத்தின் முதுகை அடைந்த கடல் புறா சற்றே திரும்பி அந்த வளையத்தில் நின்ற இரண்டு போர்க்கப்பல்களைத் தனது பக்கத்தால் தாக்கிச் சற்றுப் பின்னடைந்தது. அப்படித் தாக்கியதால் அதன் இறக்கையொன்றின் அடியிலிருந்த பெரும் வேல்களும் இரும்புச் சலாகைகளும் எதிரி மரக்கலத்தின் அடியைப் பிளந்துவிடவே அந்த மரக்கலத்தின் அடியில் நீர்

ஏறி அது தள்ளாடியது. கடல் புறாவின் இறக்கையில் திடீரெனத் தோன்றிய மாலுமிகள் அந்த எதிரிப் போர்க் கலத்தின் மீதும் தாவிப் போரிட்டனர். அந்தப் போரிலிருந்து மீளவும், கப்பல் மூழ்கி விடுவதிலிருந்து காப்பாற்றவும் அந்தப் போர்க்கலத் தலைவன் சிறிது இடம் மாறவே, இடையில் கிடைத்த பிளவில் கடல் புறா அக்கம் பக்கத்திலிருந்த போர்க் கலங்களை நாசம் செய்துகொண்டு முதுகின் வளையத்தைப் பிளந்துகொண்டு அப்பால் சென்றுவிட்டது. அதை எதிர்க்கத் தாரை ஊதி, தனது கப்பல்களில் சிலவற்றை மேற்கு நோக்கித் திருப்பினான் விஜயசந்திரன். சில நிமிஷங்களில், ஆரம்பத்தில் கடல் புறாவைத் தொடர்ந்து வந்து சற்றே வேகத்தைக் குறைத்துக்கொண்ட இளையபல்லவனின் ஆறு மரக்கலங் களும் ஸ்ரீவிஜயப் போர் வளையத்தின் இதர கப்பல்களைத் தாக்கின. அடுத்த சில நிமிடங்களில் மிகவும் உக்கிரமான போர் துவங்கியது.

அசுரப் பட்சியான கடல் புறா தனது போர் அரண் வளையத்தின் முதுகெலும்பை முறித்து ஊடுருவி மேற்கில் அப்பால் சென்று திடீரெனத் திரும்பி விட்டதாலும் நதியின் கிழக்குப் பகுதியில் மார்புக்கூடு போலிருந்த வளையத்தின் மற்றோர் இடத்தை இளையபல்லவனின் இதர ஆறு போர்க் கப்பல்களும் தாக்கிவிட்டதாலும், இரண்டு பெரும் சக்தி களுக்கும் இடையே தனது அரண் நடுங்குவதைக் கண்டும் கலங்காத விஜயசந்திரன் மிகக் கடுமையுடன் போரிட்டான். அத்தனை ஆபத்திலும் அவன் போரிட்ட திறமையைக் கண்டு கடல் புறாவிலிருந்த இளையபல்லவன் பெரிதும் பிரமிப்பு அடைந்தான் அந்தச் சில விநாடிகளில். இத்தனை பெரிய எதிரியைத் தான் விடுதலை செய்து அனுப்பியது சரியா என்றுகூடச் சந்தேகமாயிருந்தது சோழர் படைத்தலைவனுக்கு. தான் எத்தனையோ சாமர்த்தியத்துடன் விஜயசந்திரனின் வளையத்தை உடைத்துவிட்டாலும் எதிரியின் இருபத்துமூன்று மரக்கலங்களை அழிப்பது அத்தனை சுலபமில்லையென்ப தைப் புரிந்துகொண்ட இளையபல்லவன், எதிரியைக் குழப்பி

வெற்றியடைவதைத் தவிர வேறு வழியில்லை என்ற முடிவுக்கு வந்தான். சில விநாடிகள் தான் என்ன செய்வதென்பதை யோசித்த இளையபல்லவன் திடீரெனக் கண்டியத் தேவனை அழைத்து, "தேவரே! கடல் புறா முழுவேகத்தில் போர் புரியட்டும். இந்த வளையத்துக்கு எதிர்ப்புறத்தி லிருக்கும் நமது ஆறு மரக்கலங்களில் சங்குகள் சப்திக்கட்டும்" என்றான்.

இளையபல்லவனின் இந்த உத்தரவுக்குக் காரணம் புரியவில்லை கண்டியத்தேவனுக்கு. "எல்லாச் சங்குகளும் ஊதினால் வெற்றிக்கு அடையாளம் அல்லவா..." என்று வினவினான் தேவன்.

"ஆம்" என்றான் இளையபல்லவன்.

"இன்னும் வெற்றி கிடைக்கவில்லையே!"

"கிடைத்த மாதிரிதான்."

"எதிரி மரக்கலங்கள் மீதி இருபத்துமூன்று இருக் கின்றன..."

"இருக்கட்டும்" என்றான் படைத்தலைவன் திட்டமாக.

கண்டியத்தேவன் மேற்கொண்டு பேசாமல் கடல் புறாவின் சங்கை ஊதச் செய்தான். 'பூம்...பூம்' என்று இரு புறத்திலுமிருந்த நகரமே அதிரும்படியாக ஊதப்பட்ட அந்தச் சத்தத்தைக் கேட்டதும் இளையபல்லவனின் மற்ற ஆறு மரக்கலங்களும் சங்குகளைப் பலமாக ஊதின. எங்கும் ஏற்பட்ட சங்கு சப்தங்கள் விஜயசந்திரனுக்கு மட்டுமல்ல, தலைமைப் போர்க்கப்பலில் இருந்த ஜெயவர்மனுக்கும் சந்தேகத்தை விளைவித்திருக்க வேண்டும். 'அதற்குள் வெற்றிச் சங்கை ஊதுகிறார்களே, வேறு உதவி வந்துவிட்டதா என்ன?' என்று சந்தேகப்பட்ட இருவரும் நதியின் கிழக்குப் பகுதியை நோக்கினார்கள்.

அவர்கள் மட்டும் நோக்கவில்லை, ஸ்ரீவிஜயத்தின் மற்றப் போர்க்கலங்களிலுள்ள உபதளபதிகளும் நோக்கினார்கள்.

இரண்டோர் உபதளபதிகள், மேலும் எதிரிக் கப்பல்கள் வருவதாயிருந்தால் போராடுவதற்கு இட வசதி வேண்டு மென்று சற்றே தங்கள் மரக்கலங்களை நகர்த்தி வளையத்தைச் சிறிதே தளர்த்தினார்கள். அவ்வளவுதான். கடல் புறாவின் பெரும் தாரைகள் சப்தித்தன புதுமுறையில். இளைய பல்லவனின் ஆறு மரக்கலங்களும் ஸ்ரீவிஜயப் போர் வளையம் தளர்ந்த இடங்களில் நுழைந்துவிட்டன. அடுத்த விநாடி பயங்கரப் போர் துவங்கியது அந்த நதிப் பகுதியில். இருபத்து எட்டுக் கப்பல்களுக்கும் இளையபல்லவனின் ஏழு மரக் கலங்களுக்கும் நடந்த அந்தப் போரைப்பற்றி, போர் முடிந்த பல வருடங்களுக்குப் பின்பும், சொர்ண பூமியின் மக்கள் ஆச்சரியத்துடன் பேசிக்கொண்டார்கள். இளையபல்லவன் அன்று புரிந்த போர் சாகசம் பல கவிஞர்களால் பாடவும் பெற்றது.

கடல் புறாவின் முழுபலம் அந்தப் போரில் தெரிந்தது. அத்துடன் தெரிந்தது தரைப்போர் வீரனான கருணாகர பல்லவன் கடற்போரிலும் எத்தனை வல்லவன் என்பது. அன்று ஜெயவர்மன் ஆணையை முன்னிட்டு விஜய சந்திரனும், தமிழர் பிற்காலத்தையும் புகழையும் முன்னிட்டு இளையபல்லவனும் தங்கள் யுக்தி, பலம், உணர்ச்சி, வேகம், அத்தனையையும் வைத்து அந்தப் போரை நடத்தினார்கள். அந்த நாள்வரை ஸ்ரீவிஜயத்தின் கடற்பிராந்தியத்திலேயே யாரும் காணாத அந்தப் பயங்கரப் போரில் சேதம் இருபுறமும் பலம். பொழுது விடியும் வரையில் திரும்பத் திரும்பப் பல பகுதிகளிலிருந்து மோதி, நதியிலிருந்த இருபுறத்து மரக் கலங்களில் பல செயலற்றன. கடல்புறாவின் பொறிகளும், தீ வீசும் விற்களும் ஏதோ மந்திரத்தால் இயக்கப்பெற்றன போல் சுழன்றன. கார்த்திகைத் தீபத்தன்று மாவலி சுற்றும் தமிழ்நாட்டுச் சிறுவன் போலவும், ஆட்டுக் கூட்டத்தில் சுழன்று சுழன்று வரும் சிறுத்தை போலவும் சுழன்ற கடல்புறா எதிரியின் போர்க்கப்பல்களில் நாலைந்தைக் கொளுத்தியது.

சிலவற்றின்மீது மோதி அடியிலிருந்து நீட்டப்பட்ட இரும்புச் சலாகைகளால் நாலைந்தின் அடிகளைப் பிளந்தது. அடிக்கடி கடல் புறாவிலிருந்து ஊதப்பட்ட தாரைகளின் பொருள் களைப் புரிந்துகொண்ட மீதி ஆறு மரக்கலங்களும் எதிரியின் அரணைப் பல இடங்களில் உடைத்து மேலும் மேலும் சின்னாபின்னப்படுத்திக் கொண்டிருந்தன.

நடு இரவுக்குள் தனது நதி அரண் சின்னாபின்னப் படுத்தப்பட்டதை அறிந்த ஜெயவர்மன் விஜயசந்திரனைத் துணிந்து போரிடும்படி சொன்னான். விஜயசந்திரன் தன் துணிவைக் காட்டினான். தானிருந்த மரக்கலத்தையே கடல் புறாவை நோக்கிச் செலுத்தினான். ஆனால் கடல்புறா இதைச் சந்திக்க மறுத்தது. ஏன் மறுத்தது? பயத்தாலா? இதற்கு விடை ஆரம்பத்தில் புரியாவிட்டாலும் கடைசியில் புரிந்தது விஜயசந்திரனுக்கு. புரிந்தபோது இளையபல்லவனின் நோக்கத்தை வியப்பதையும் பாராட்டுவதையும் தவிர வேறு வழியில்லாது போயிற்று ஸ்ரீவிஜயத்தின் கடற்படைத் தளபதிக்கு.

நடு சாமத்திற்குள் அந்த நதியில் நடந்த போராட்டத்தில் பத்துக் கப்பல்களை அழித்துவிட்டதாலும், இளைய பல்லவனின் ஆறு மரக்கலங்களும் மற்ற ஆறு மரக்கலங் களை அமிழ்த்திவிட்டதாலும், இதர சில மரக்கலங்களில் எதிரி வீசிய தீப்பந்தங்கள் பெரும் சேதத்தை விளைவித்து அவற்றைப் போருக்குப் பயனற்றதாகச் செய்துவிட்டதாலும் தனது நிலைமை பலவீனப்பட்டுவிட்டதை உணர்ந்த விஜயசந்திரன் தனது வாண வெடிகளை விடுவிடுவென்று வீசத் தொடங்கினான். தனது போர்க்கலத்திலிருந்து பதிலுக்குக் கடல் புறா வாண வெடிகளை மட்டுமின்றி அம்பு மழையும் பொழிந்தது. எங்கும் பேரிரைச்சலும் மரணக் கூச்சலும் வெடிச் சத்தங்களும் கேட்டுக்கொண்டிருந்த சமயத்தில் விஜயசந்திரன் என்ன சொல்லியும் கேளாமல், பிடிவாதத்துடன் தளத்தில் நின்று கொண்டிருந்த ஜெயவர்மன்

நெற்றியிலும் அம்பு ஒன்று பாயவே ஜெயவர்மன் வேரற்ற மரம்போல் தனது போர்க்கலத்தின் தளத்திலேயே சாய்ந்தான். சாய்ந்ததும் சுரணை இழந்தான். சுரணை மட்டுமிருந்திருந்தால், தனது தலைநகரின் வீழ்ச்சியைத் தன் கண்களாலேயே கண்டிருப்பான். வீரனான அவனுக்கு அந்த அதிர்ச்சியை— அவமானத்தைத் தரக் கூடாதென்ற காரணத்தாலோ என்னவோ விதி அந்தப் பாதுகாப்பை அளித்தது ஸ்ரீவிஜய சாம்ராஜ்யாதிபதிக்கு. இல்லையேல் நகரத்துக்குள் அந்தச் சமயத்தில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளை அவன் கண்டிருப்பான், கேட்டுமிருப்பான். அந்தச் சமயத்தில் அந்த மாநகர் சிதைந்து கொண்டிருந்தது.



அத்தியாயம் 70

# மகள் தந்த விளக்கம்

மூசி நதிப் போரின் மத்தியிலே, பயங்கர ஒலிகளுக்கிடையே, நடு நெற்றியில் அம்பு தாக்கியதால் நினைவிழந்து தனது போர்க்களத் தளத்திலே விழுந்துவிட்ட ஜெயவர்மன் கண் விழித்தபோது புத்தம் புதுச் சூழ்நிலையிலிருந்தபடியால், திறந்த தன் கண்களையே நம்பமுடியாமல் திரும்பவும் மூடிக்கொண்டான். சீனத்து வாண வெடிகளின் பேரொலிகளோ, தீப்பிடித்த மரக்கலங்களின் பலகைகள் வெடித்த பயங்கரச் சப்தங்களோ, இளையபல்லவனுடைய கொள்ளைக்கார மாலுமிகள் எழுப்பிய கூச்சல்களோ, கடல்புறாவின் தளத்தின் பெருவிற்களிலிருந்து சரமாரியாக எழுந்த அம்பு, வேல் கூட்டங்களின் விர்விர்ரென்ற சீறல்களோ, அதே சமயத்தில் நடுநிலை நடந்த போரின் விளைவாக நகரத்துக்குள் எழுந்துகொண்டிருந்த சலசலப்போ, எந்த அரவமும் கேட்காமல் மிக அமைதியான நிலைமை தன்னைச் சூழ்ந்திருப்பதை அவன் கண்டான். தவிர தான் கிடந்தது தளத்தின் மரப் பலகையல்ல என்பதும் மிக மிருதுவான பஞ்சணையென்பதும்கூட அவனுக்குத் தெரிந்தது. 'தளத்திலிருந்து இங்கு எப்படி வந்தோம்? இருப்பது என் அரண்மனைதானோ, அல்லது பெரிய மனிதர்களைக் காவல் வைக்கும் சிறைக்கூடத்தின் ஓர் அறையா? போரின் முடிவு என்னவாயிற்று?' என்று கண்ணை மூடிய வண்ணமே ஜெயவர்மன் தன்னைக் கேட்டுக்கொண்டான். அந்தக் கேள்விகளின் விளைவாகச் சிந்தையைச் சிறிது கசக்கிப் பிழிந்து உண்மையைத் தெரிந்துகொள்ளவும் முயன்றான். தான் தளத்தில் விழுந்த பிறகு தனக்கு ஏற்பட்ட உணர்ச்சிகள், கனவுகள், பிரமைகள் ஆகிய பலவற்றை ஒன்று கூட்டிப்

பார்த்தான். நினைவிழந்த பிறகு தன் காதுகளில் நகரப் பகுதியிலிருந்து பெரும் கோஷம் கேட்டது போன்ற பிரமை இருந்தது அவனுக்கு. கனகமணிக் கதவுகளின் மணிகள் கணகணவென்று பலமுறை சப்தித்ததால் கதவுகள் திறந்து திறந்து மூடப்பட்டதாகத் தான் எண்ணியதும் நினைவுக்கு வந்தது. மற்றபடி எல்லாம் கலந்த, விவரிக்க முடியாத பெரும் கூச்சல் காதில் விழுந்ததாகத் தெரிந்தது. பிறகு ஏதும் நினைப்பில்லை. தன் கண்ணெதிரே, மனக் கண்ணெதிரே யாரோ சிலர் வந்து போய்க்கொண்டிருப்பதாக ஒரு பிரமை மட்டுமிருந்தது.

சிந்தையைக் கசக்கியதில் தெரிந்தது அவ்வளவுதான். இவற்றிலிருந்து திட்டமாக எதுவும் தெரிந்துகொள்ள முடியாததால் சிறிது படுத்திருந்த இடத்தில் அசைந்தான். அசைந்த அவன் உடல் பஞ்சு போன்ற வெண்மையான எதன் பேரிலோ உராய்ந்தது. அடுத்த விநாடி சில தளிர் விரல்கள் அவன் கண்கள்மீது தவழ்ந்தன. இன்னும் சில அவன் குழலை மிக மிருதுவாகத் தள்ளிவிட்டன. ஜெயவர்மன் தன் கையை உயர்த்திக் கண்கள்மீது தவழ்ந்த விரல்களைப் பிடித்துக் கொண்டான். அந்த விரல்கள் அளித்த ஆதரவை அவனால் விவரிக்க இயலவில்லை. ஆயுளில் எப்பொழுதோ கண்டிருக்கிறான் இதேமாதிரி விரல்களை. "அவையேதான்... அவையேதான்" என்று முணுமுணுத்த ஜெயவர்மன் மெள்ள அந்த விரல்களைத் தன் கையால் அகற்றி வருடிய வண்ணம் கண்களைத் திறந்தான். அவன் பக்கத்தில் அவனைக் கவலையுடன் பார்த்தவண்ணம் மஞ்சளழகி உட்கார்ந் திருந்தாள். கவலை பாய்ந்த அந்தத் தருணத்திலும் அந்தக் கண்களில் எத்தனை மென்மையிருந்தது என்பதைப் பார்த்த ஜெயவர்மன் இதழ்களில் வருத்தப் புன்முறுவல் ஒன்று படர்ந்தது.

ஜெயவர்மன் கண்களைத் திறந்ததும் மஞ்சளழகியின் வதனத்தில் ஆறுதலின் சாயை படர்ந்ததன்றி, அவள் ஆசுவாசப் பெருமூச்சொன்றும் விட்டாள். அவள் முகத்தில்

ஏற்பட்ட ஆறுதலைக் கண்ட ஜெயவர்மன் உள்ளம்கூட நெகிழ்ந்தது. அவன் முகத்தில் அன்றுவரை யாருமே காணாத அன்பு கனிந்தது. எத்தனை செங்கோலைப் பிடித்தாலும் தனது மகளின் மலர் விரல்களைப் பிடிப்பதிலிருக்கும் ஆனந்தம் உலகத்தில் இல்லை என்பதை அவன் புரிந்துகொண்டான். எந்த மனிதனுக்கும், எப்பேர்ப்பட்ட கொடியவனுக்கும் வாழ்க்கையில் ஒருநாள் தெளிவு ஏற்படுகிறது. அந்தத் தெளிவை அடைந்த ஜெயவர்மன் தனது மகளை நோக்கி, "மகளே!" என்று மெல்ல அழைத்தான்.

பதிலுக்கு மஞ்சளழகி புன்முறுவல் செய்தாள். அந்தப் புன்முறுவலில் சந்துஷ்டி இல்லை. வருத்தம் நிரம்பி நின்றது. அவள் விழிகளில் இரண்டு நீர்த்துளிகள் திரண்டு நின்றன. அவை அவன் நெற்றியிலும் பொட்டுப் பொட்டாக உதிர்ந்தன. ஜெயவர்மன் அவள் துக்கத்தின் காரணத்தைப் புரிந்து கொண்டான். அதிலிருந்து தனது நிலையையும் புரிந்து கொண்டான். அப்படிப் புரிந்து கொண்டு புன்னகையே பூத்தான். மகளிடமிருந்து ஆசை மலைபோல் ஏற்பட்டுவிட்ட நஷ்டத்தைத் தூசிபோல் நினைக்க வைத்தது. அவள் கண்களை அவன் கை துடைத்தது. இன்னொரு கை அவள் விரல்களைப் பற்றியபடியே கிடக்க ஜெயவர்மன் மீண்டும் ஆசையுடன் அழைத்தான், "மகளே" என்று.

"அப்பா!" மஞ்சளழகியின் குரல் மெதுவாகவும் மிருது வாகவும் வந்தது. அந்த மிருதுவின் ஊடே உணர்ச்சி வெள்ளமாக ஓடிக்கொண்டிருந்தது.

அந்த ஒரு சொல் மிக இன்பமாக விழுந்தது ஜெயவர்மன் செவிகளில். எத்தனையோ விருதுகளைச் சொல்லித் தனது குறுநில மன்னர்கள் அழைத்தபோதுகூடக் கிடைக்காத இனபம் மகளின் 'அப்பா!' என்ற ஒரு சொல்லில் இருப்பதைக் கண்ட ஜெயவர்மன், தான் ஏதோ புது சாம்ராஜ்யமொன்றைப் பிடித்துவிட்டதாகவே நினைத்தான். ஆகவே சற்று அலட்சியத்துடனேயே உரையாடலைத் தொடங்கி, "வருந்து

வதற்கு என்ன இருக்கிறது மகளே?" என்றான் குரல் தழுதழுக்க.

"ஒன்றுமில்லை..." என்றாள் மஞ்சளழகி அவன் குழல் களைக் கோதிக்கொண்டே.

"போரின் முடிவு..." என்று தனது கண்களை மெல்ல உயர்த்தி மஞ்சளழகியின் கண்களைச் சந்தித்தான் ஜெயவர்மன்.

மஞ்சளழகி அவன் கண்களைச் சந்திக்க மறுத்தாள். தலையை மேலும் கீழுமாக ஒருமுறை அசைத்து ஜெயவர்மன் நினைத்தது சரியென்பதை உணர்த்தினாள். ஜெயவர்மன் கண்கள் வியப்பால் மலர்ந்தன. உள்ளே உறங்கிக் கிடந்த வீரம் மீண்டும் தலை தூக்கியதால் வியப்புடன் சொன்னான் அவன், "மகளே! இது ஏதோ இந்திரஜாலம் போல் இல்லையா?" என்று.

ஜெயவர்மன் எதைக் குறிப்பிடுகிறான் என்பது மஞ்சளழகிக்குத் தெரிந்தேயிருந்தது. இருப்பினும், "எதைச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டாள்.

"போரின் முடிவை!" என்றான் ஜெயவர்மன்.

"அதில் இந்திரஜாலம் என்ன இருக்கிறது தந்தையே?" என்று அவள் வினவினாள். அவனுக்குத் திடீரென்று அதிர்ச்சியை உண்டாக்கக் கூடாது என்பதற்காகவே விஷயங்களை மெல்ல மெல்ல விவரிக்க முற்பட்டாள். ஆகவே ஜெயவர்மன், "இந்திரஜாலம் இல்லாமல் என்ன மகளே! ஸ்ரீவிஜயத்தின் தலைநகரைப் பிடிப்பதென்றால், அதுவும் ஒருநாள் போரில் பிடிப்பதென்றால், அது மனித சக்திக்கு மீறிய காரியமென்று உனக்குப் புலப்படவில்லையா?" என்று வினவினான்.

"ஸ்ரீவிஜயம் ஒருநாள் போரில் பிடிபடவில்லை அப்பா! இந்த நகரிலேயே மூன்று நாள் போர் நடந்தது. இருபுறத்திலும் சேதம் அதிகம். நமது வீரர்கள் மிகத் திறமையுடன் பாதுகாத்

தார்கள் நகரத்தை" என்று கூறினாள் மஞ்சளழகி. அப்படி அவள் சொன்னபோது அவள் குரலில் சிறிது பெருமைகூட இருந்ததைக் கவனித்தான் ஜெயவர்மன். 'என்ன மாறினாலும் ஜெயவர்மன் மகள் ஜெயவர்மன் மகள்தான்' என்று உள்ளூரத் திருப்தியடைந்து சொல்லிக் கொண்டான் அவன். அதைத் தொடர்ந்து மேலும் விவரமறியக் கேட்டான், "மூன்று நாட்களா போர் நடந்தது?" என்று.

"ஆம்..." என்றாள் மஞ்சளழகி.

"மஞ்சளழகி..."

"ஏன் அப்பா?"

"மூசிநதிப் போரை நான் கவனித்தேன்..."

"உம்."

"அந்த இளையபல்லவன்..."

"உம்."

"போரில் அசுரனம்மா."

"ஆம்."

"பெரிய தந்திரசாலி கூட."

"ஆமாம்."

"எனது இருபத்தைந்து மரக்கலங்களைத்தான் துணிகரமாகத் தாக்கித் தோற்கடித்தான். ஆனால் நதிமுகத்துவாரத்தின் இருகரைகளிலும் நான் நிற்க வைத்திருந்தேனே சுமார் ஐம்பது மரக்கலங்களை, அவை என்னவாயின? அவற்றையும் தனது ஆறு மரக்கலங்களைக் கொண்டா அழித்துவிட்டான் இளைய பல்லவன்?" என்று வினவினான் ஜெயவர்மன்.

மஞ்சளழகி இக்கேள்விக்கு உடனே பதில் சொல்லவில்லை. சிறிது நேரம் சிந்தித்தாள். கடைசியில் சற்றுப் பெருமையுடன் சொன்னாள், "அப்பா! ஸ்ரீவிஜயம் போன்ற சாம்ராஜ்யத்தின் தலைநகரை உடைக்கக் கடல் புறாவும் ஆறு போர்க்கலங்களும் போதுமா? ஒருக்காலும் போதாது.

உங்களை வெற்றி கொண்டவை மரக்கலங்களல்ல, ஒரு மனிதர் வெற்றி கொண்டார்" என்று.

அந்த மனிதர் யாரென்பதையும், அந்த மனிதருக்கும் தன் மகளுக்குமுள்ள உறவு என்னவென்பதையும் உணர்ந்திருந்த ஜெயவர்மன் புன்முறுவல் கொண்டான். இருப்பினும் கேட்டான், "அந்த மனிதர் யாரென்பது புரிகிறது மகளே. இருப்பினும் அவர் எப்படி இந்தத் தலைநகரைப் பிடித்தார்? விளங்கச் சொல் மகளே" என்று.

மஞ்சளழகியின் அழகிய வதனத்தில் சிந்தனை ரேகை ஓடியது. "அப்பா! ஸ்ரீவிஜயம் இந்த மூன்று நாள் போரில் ஜெயிக்கப்படவில்லை. அதற்கான வேலை தொடங்கி வருஷம் ஒன்றாகிறது. இதன் வீழ்ச்சிக்கான ஒவ்வொரு படியும் திட்டமிட்டுக் கட்டப்பட்டது. அந்தத் திட்டத்துக்கு உதவியும் நிரம்ப இருந்தது. திட்டம் வகுத்தவர் கீழ்த்திசை நாடு களிலேயே சிறந்த அறிவாளி. அவர் நாட்டு மக்கள் கலிங்கத்தில் அடைந்த கஷ்டம் அவரைக் கலிங்கத்துடன் பகைமை கொள்ளச் செய்தது. கலிங்கத்துடன் நாம் கொண்டிருந்த நட்புமீது பகைமை கொள்ளச் செய்தது. கலிங்கத்தின் கடற்படையின் பலத்தை உடைக்க அவர் திட்டமிட்டு ஓராண்டு காலத்திற்குமேல் ஆகிறது. கலிங்கத்தின் மரக்கலங்கள் பல அவரால் பிடிக்கப்பட்டன என்று உங்களுக்குத் தெரியும்..." என்ற மஞ்சளழகி தந்தையின் மீது தனது கண்களை ஓட்டினாள்.

"ஆம், தெரியும்" என்றான் ஜெயவர்மன்.

"அந்த மரக்கலங்கள் எல்லாம் அழிக்கப்படவில்லை."

"பின் என்னவாயின?"

"ஸ்ரீவிஜயத்தின் கரையிலும் எதிர்க்கரையிலுமுள்ள தமிழர்களின் குடியிருப்புகளுக்குப் பரிசாகக் கொடுக்கப் பட்டன."

ஜெயவர்மன் உள்ளத்தில் விஷயம் மெள்ள மெள்ளத் தெளிவுபடத் தொடங்கியதற்கான அறிகுறி முகத்தில்

தெரிந்தது! "புரிகிறது மகளே, புரிகிறது! நான் எத்தனை குருடனாய் இருந்துவிட்டேன்?" என்று உணர்ச்சியுடன் கூறினான்.

மஞ்சளழகியும் உணர்ச்சியுடன் சொன்னாள். "ஆம் தந்தையே! கலிங்கத்தின் போர்க்கலங்கள் நம் நாட்டின் பல பகுதிகளில் உள்ள தமிழர் குடியிருப்புகளுக்குச் சென்று அங்கு பழுதுபார்க்கப்பட்டன. அங்குள்ள தமிழர்களுக்குக் கடற் போர்ப் பயிற்சியும் ரகசியமாக அளிக்கப்பட்டது. தமிழர் களிடம் அகப்பட்ட கலிங்க மரக்கலங்கள் மேலுக்கு வணிகக் கப்பல்களாகவும் உள்ளே போர்ச் சன்னத்துடனும் இருந்தன. ஸ்ரீவிஜய நகர் இத்தகைய குடியிருப்புகளால் மெள்ள மெள்ளச் சூழப்பட்டது தவிர, வணிகர் போர்வையில் அடிக்கடி இந்நகருக்குள் வந்த பல தமிழர்கள் சுமார் ஒரு மாத காலமாக இங்கேயே தங்கிவிட்டனர். இளையபல்லவர் ஏற்பாடுகளைச் சிறுகச் சிறுக மிகத் திட்டமாகச் செய்து வந்தார். அது மட்டுமல்ல..."

"சொல் மகளே!"

"மலையூரை விட்ட பிறகு ஒன்றரை மாத காலம் நாங்கள் எங்கிருந்தோம் தெரியுமா?"

"தெரியாது, சொல்."

"மூசிநதி முகத்துவாரத்துக்கு நேர் கிழக்கில் முக்கால் காதம் கடலைத் தாண்டினால்..."

"பங்கஜத் தீவு இருக்கிறது."

"அதில் இருந்தோம்" என்ற மஞ்சளழகி மேலும் சொல்லத் தொடங்கி, "இத்தனை அருகில் இளையபல்லவர் மரக்கலங்கள் இருந்தும் ஏன் தெரியவில்லையென்பது உங்களுக்கு வியப்பா யிருக்கும். இளையபல்லவர் மூசி நதிக்கு எதிரில் மரக்கலங் களை நிறுத்தவில்லை. பங்கஜத் தீவைச் சுற்றிச் சென்று மேற்குப் பகுதியிலிருந்த மறைவிடங்களில் நிறுத்தினார். பங்கஜத் தீவின் மேற்குப் பகுதியில் அடர்ந்த காடும்,

கண்ணுக்குத் தெரியாமல் மரக்கலங்கள் நிற்கக் கூடிய மலைக் குடைவுகளும் இருப்பது உங்களுக்குத்தான் தெரியுமே. இளையபல்லவர் ஒவ்வொரு மலைக் குடைவிலும் ஒவ்வொரு மரக்கலத்தை நிறுத்தினார். அப்படியும் மீதியாகி இடமில்லாது இருந்த இரு மரக்கலங்களை வணிகக் கப்பல்களாக ஓட விட்டார். பங்கஜத் தீவில் மறைந்து சுமார் ஒன்றரை மாத காலமாக இந்தத் தலைநகரைத் தாக்க ஏற்பாடுகளைச் செய்தார். வணிகர் போர்வையில் ஒற்றர்களை அனுப்பி மூசி நதியில் அலைகள் உட்புகுந்து பாயும் இரவு நாழிகைகளில் தாமே பலமுறை படகுகளைச் செலுத்தி வந்து பார்த்தார். கடல் புறா இன்று கடலலையில் நதிக்குள் நுழைந்த சமயம், அதைத் தொடர்ந்து மற்ற மரக்கலங்கள் வந்த நேரம் எல்லாம் அவரால் நிர்ணயிக்கப்பட்டன. இவை மட்டுமல்ல தந்தையே! அநபாயரை இந்தச் சமயத்தில் ஸ்ரீவிஜய மாநகரின் வடக் கெல்லையில் படையுடன் இறங்கச் செய்ததும், சோழ நாட்டுப் போர்க்கலங்களையும் இங்குள்ள குடியிருப்புத் தமிழர்களிடம் ஏற்கெனவே அளித்த போர்க்கலங்களையும் கொண்டு தாங்கள் மூசிநதி முகத்துவாரக் கரைகளில் நிறுத்திய ஐம்பது மரக்கலங்களை அழித்ததும் எல்லாம் அவர் செய்கைதான். கடற்படையின் பெரும் பகுதி முகத்துவாரத்தில் தாக்கப் பட்டதாலும், நதியின் உட்புறமிருந்த போர் அரணைக் கடல் புறா தகர்த்து விட்டதாலும், அநபாயர் நகரத்தை வடக்கில் தாக்கியதாலும், உள்ளே இருந்த தமிழ் ஒற்றர்கள் விளை வித்த குழப்பத்தாலும் நமது..." என்று விவரித்துக் கொண்டே போன மஞ்சளழகி பேச்சைச் சட்டென்று பாதியில் நிறுத்தினாள்.

"நமது மக்களே செய்த புரட்சியாலும் இம்மாநகர் வீழ்ந்தது. சொல் மகளே! உண்மையைப் பயப்படாமல் சொல். என்னை வீழ்த்தியது என் கொடுங்கோல் என்கிறாயா? சொல் அதை. ஆனால் இத்தனையும் என்னை வீழ்த்தவில்லை, தெரியுமா?" என்றான் ஜெயவர்மன் தனது வீழ்ச்சியைப் பற்றிக் கூட லட்சியம் செய்யாமல்.

"வேறு எது வீழ்த்தியது தந்தையே?" ஏதோ கேட்க வேண்டுமென்பதற்காகக் கேட்டாள் மஞ்சளழகி.

"உனக்குச் செய்த அநீதி மகளே! உன் தாய்க்கு நான் செய்த துரோகம். அவளிடம் நான் உயிரை வைத்திருந்தேன். நமது குல தர்மப்படிதான் அவளை மணந்தேன். இருப்பினும் பல விஷயங்களில் துணிவுள்ள எனக்கு ஒரு சீனத்துப் பெண்ணை ராணியாக அரியணையில் அமர்த்தத் துணிவில்லை. ஆகவே திருமணத்தை மறந்தேன். உன்னையும் துறந்தேன். அந்த அயோக்கியன் பலவர்மன் எத்தனை அதிர்ஷ்டசாலி! நீ விளையாடி வளர்ந்ததையெல்லாம் பார்த்தானே?" என்று உணர்ச்சி வேகத்தில் பேசிய ஜெயவர்மன் ஆயாசத்தில் சிறிது பேச்சை நிறுத்தி நெற்றியில் கையை வைத்தான்.

"அங்கு கையை வைக்காதீர்கள். இன்னும் புண் ஆறவில்லை" என்றாள் மஞ்சளழகி.

அதைப் பற்றிக் கவலைப்படாத ஜெயவர்மன், "கவலைப் படாதே மகளே! இன்னும் ஜெயவர்மனை அவர்கள் வெற்றி கொள்ளவில்லை. இந்த மாநகர் வீழ்ச்சி சாவகத்தில் பெரும் கிளர்ச்சியை உண்டுபண்ணும். சைலேந்திரர்களின் ஆதி இடம் சாவகத் தீவு. அங்கு எனது பெரும் படை இருக்கிறது. ஸ்ரீவிஜய மாநகர் வீழ்ச்சியைக் கண்டு அது வாளாவிருக்காது..." என்று கூறிக்கொண்டே மேலும் ஏதோ பேசப்போன அவன் உதடுகளில் சொற்கள் உறைந்து போயின! கண்களில் பழைய கொடுமை ஏறியது. வாயிற்படியை நோக்கிய அவன் விழிகள் கோப ஜ்வாலையை வீசின.

இளையபல்லவன் அந்த அறையின் வாயிற்படியில் நின்று கொண்டிருந்தான். இளையபல்லவனை அவன் அன்றுவரை நேருக்கு நேர் பார்த்ததில்லை. என்றாலும், தான் அக்ஷய முனை சென்றிருந்த போது தனது மகளும் மற்றோரும் தந்த விளக்கத்தை விவரமாக நினைவில் பதித்துக் கொண்டி

ருந்ததால், வாயிற்படியில் நின்றவன் யாரென்பதை விநாடி நேரத்தில் புரிந்துகொண்டான். அப்படி வந்தவன் யாரென்பதை ஊகித்துக் கொண்டதால் ஏற்பட்ட கோபம் விரைவில் வியப்புக்கு இடம் கொடுத்தது. "உள்ளே வர அனுமதி உண்டா?" என்றான் இளையபல்லவன். அவன் கேள்வியில் வெற்றியின் வீறாப்பு இல்லை. பணிவு இருந்தது. அந்தப் பணிவுக்குக் காரணம் விளங்கவில்லை ஜெயவர்மனுக்கு. விளங்கியபோது ஜெயவர்மன் வியப்பின் எல்லையை அடைந்தான்.



அத்தியாயம் 71

# ஜெயவர்மனின் நிபந்தனை

பணிவு நிரம்பிய குரலில் படைத்தலைவன் உள்ளே வர அனுமதி கேட்டதைக் கண்டு ஜெயவர்மன் மட்டுமின்றி மஞ்சளழகியும் வியப்படைந்தாள் என்றாலும், அந்த வியப்பை அவள் சிறிதும் வெளியில் காட்டாமல் பஞ்சணை முகப்பி லிருந்து எழுந்து நின்று அவனை நோக்கினாள். அவன் பார்வையில் வெற்றியின் களிவெறி சிறிதுமில்லை யென்பதை யும் துயரமே தோய்ந்திருந்ததையும் கவனித்த மஞ்சளழகி அந்தத் துயரத்துக்குக் காரணத்தை அறியாதவளாய் அவன் கண்களின் வீச்சிலிருந்து தன் கண்களை விடுவித்துக்கொண்டு தந்தையை நோக்கி, "தந்தையே! உள்ளே வர அவர் அனுமதி கேட்கிறார்" என்று கூறினாள்.

தனது அழிவுக்கும் சாம்ராஜ்யச் சிதைவுக்கும் காரண மான எதிரியை முதன்முதலாக நேருக்கு நேர் சந்தித்ததால் கோபத்தையும், அவன் பணிவுக் குரலால் வியப்பையும் அடைந்திருந்த ஜெயவர்மன் மகளைப் பார்த்து, "சரி, வரச் சொல்" என்ற சொற்களை மிகுந்த வெறுப்புடன் உதிர்த்தான். அதன் விளைவாக இளையபல்லவனிருந்த திசையை நோக்கி மஞ்சளழகி தலையசைத்துச் செய்த சைகையைத் தொடர்ந்து இளையபல்லவன் அறைக்குள் நுழைந்து மஞ்சத்தின் அருகில் வந்து ஜெயவர்மனைச் சில விநாடிகள் பார்த்துக்கொண்டு நின்றான். ஜெயவர்மனின் குரூரமான கண்களும் அவன் கண்களைச் சிறிதும் சலனமின்றிச் சந்தித்தன. இப்படிச் சந்தித்த நான்கு கண்களும் நீண்ட நேரம் ஒன்றையொன்று கவ்வியே நின்றதால் பரஸ்பரம் ஊடுருவிய எண்ணங்களை அலச முயன்ற அந்த இரு எதிரிகளும் பல விநாடிகள் மௌன மாகவே இருந்தனர். முதலில் அந்த மௌனத்தை உடைத்துப் பேச்சை இளையபல்லவனே துவங்கினான்.

அவன் பேச்சின் ஒலியில் வெற்றிக் களை இல்லை. வெறுப்பின் சாயையே படர்ந்து நின்றது. கடமை நிறைவேறி விட்ட கர்ம வீரன் அந்தக் கடமை இஷ்டமில்லாத பலனைத் தரும்போது எத்தனை சங்கடத்தில் இருப்பானோ அத்தனை சங்கடத்தில் இருப்பதுபோல் தோன்றியது இளையபல்லவன் பேச்சின் தொனி. "சக்கரவர்த்தியின் உடல் நிலை எப்படி யிருக்கிறது?" என்ற கேள்வியே ஜெயவர்மன், மஞ்சளழகி இருவரையுமே திகைக்க வைத்தது.

இருப்பினும் ஜெயவர்மன் கண்ணிமைக்கும் நேரத்தில் அந்தத் திகைப்பை உதறிக்கொண்டு, "முறை தவறி அழைக் கிறீர்கள் பகைவரே!" என்று மிகுந்த கம்பீரத்துடன் கூறினான்.

"இளையபல்லவன் முறை தவறி அழைத்தான் என்ற அபக்கியாதி இதுவரை கிடையாது. இந்த விநாடிகூட இந்த சாம்ராஜ்யத்தின் சக்கரவர்த்தி தாங்கள்தான்." இளைய பல்லவன், ஜெயவர்மனுக்குத் தலையும் வணங்கினான்.

ஜெயவர்மனின் திகைப்பு நீங்கி வியப்பு மேலிட்டது. "தோல்வியடைந்த பின்பு ஒரு மன்னனின் அரசு நிலைப்பதை வரலாறு கண்டதுண்டா?" என்று வினவினான் ஜெயவர்மன்.

"இல்லை, கண்டதில்லை." பணிவுடனேயே வந்தது இளையபல்லவன் பதில்.

"அப்படியானால் என் விஷயத்தில் மட்டும் வரலாறு மாறுமா?"

"மாறியிருக்கிறது?"

"நீங்கள் சொல்வது உங்களுக்கு விசித்திரமாயில்லையா?"

"இங்கு எல்லாமே விசித்திரமாயிருக்கிறது."

இதைக்கேட்ட ஜெயவர்மன், மஞ்சளழகியை அழைத்துத் தன்னைத் தலையணையில் நன்றாகத் தூக்கிச் சாய வைக்கச் சொல்லிச் சற்று எழுந்து சாய்ந்துகொண்ட பின்பு, "நீங்கள் சொல்வது எனக்கு விளங்கவில்லை. விளங்கச் சொல்லுங்கள்" என்றான்.

இளையபல்லவன் உடனே பதில் சொல்லாமல் சிந்தித்தான். பிறகு மெள்ளத் துவங்கி, "அது இரண்டு வருட காலக் கதை ஜெயவர்மரே! நன்றாய்க் கேளுங்கள். உங்களுக் கெதிராக உதவி நாடி இரண்டு ஆண்டுகளுக்கு முன்பாக உங்கள் மூத்த சகோதரர் குணவர்மர் சோழ நாட்டை நோக்கி வந்து பாலூர்ப் பெருந்துறையில் இறங்கினார். அவரை ஒழித்துவிட நீங்கள் செய்த ஏற்பாடு சோழப் பேரரசுக்குத் தெரிந்ததால் உங்கள் சகோதரரையும் அவர் மகளையும் எச்சரித்துக் காத்து அழைத்து வர வீரராஜேந்திர தேவர் என்னை அனுப்பினார். அத்துடன் சமாதான ஓலையொன் றையும் என்னிடமளித்து தென் கலிங்க மன்னன் பீமனிடம் சேர்ப்பிக்க உத்தரவிட்டார். ஓலையுடன் வந்த நான் பாலூர்ப் பெருந்துறையில் சிக்கிக் கொண்டேன். நானும் உங்கள் சகோதரரும் காஞ்சனாதேவியும் அநபாயரும் மரண அபாயத்தில் சிக்கித் தப்பினோம். அந்தப் பாலூர்ப் பெருந் துறையில் தீர்மானித்தேன் நான், குணவர்மரை இந்த அரியணையில் அமர்த்தவும் கலிங்கத்தின் கடல் பலத்தை உடைக்கவும். பிறகு நடந்த பல விஷயங்கள் ஸ்ரீவிஜயப் பிராந்தியத்திலேயே பிரசித்தம். உங்களுக்கு அவற்றை யெல்லாம் நான் சொல்லத் தேவையில்லை. கலிங்கத்தின் கடல் பலத்தைச் சிறுகச் சிறுக உடைத்தேன். தமிழர் குடியிருப்புகளைக் கடற்போர் அரண்களாக மாற்றினேன். அணு அணுவாகத் திட்டமிட்டு மலையூரைக் கைப்பற்றினேன். அணுகுவதற்கும் அரிய ஸ்ரீவிஜய மாநகரத்தின் அரண்களை யும் உடைத்துவிட்டேன். உடைந்தவை ஸ்ரீவிஜயத்தின் அரண்கள் மட்டுமல்ல. என் மனக்கோட்டைகள், பிரதிக்ஞைகள், ஏற்பாடுகள் எல்லாமே உடைந்துவிட்டன..." என்று சொல்லிக் கொண்டு போன இளையபல்லவன் தனது பேச்சைப் பாதியில் நிறுத்தினான் உணர்ச்சி மிகுதியால்.

ஜெயவர்மன் பிரமித்தான். இளையபல்லவன் என்ன சொல்கிறான் என்பது அவனுக்குப் புரியவில்லை. ஆகவே

கேட்டான், "உங்கள் மனக்கோட்டைகள், பிரதிக்ஞைகள் உடைந்துவிட்டனவா!" என்று.

பக்கத்தில் நின்ற மஞ்சளழகி அப்படித் திட்டமாகக் கேள்வியை வீசவில்லைதான். ஆனால் குனிந்திருந்த அவள் தலை சட்டென்று நிமிர்ந்தது. அவள் அழகிய விழிகள் சற்றே மலர்ந்து அவ்னை ஏதோ கேட்கும் தோரணையில் நோக்கின. மஞ்சளழகியின் அழகிய விழிகளுடன் தனது விழிகளை ஒரு விநாடி உராயவிட்ட இளையபல்லவன், ஜெயவர்மன் மீது மீண்டும் பார்வையைத் திருப்பிக் கூறினான், "ஆம் ஜெயவர்மரே! எனது மனக் கோட்டைகள் உடைந்து விட்டன. ஸ்ரீவிஜயத்தின் சாம்ராஜ்ய பீடத்தில் குணவர்மரை அமர்த்த இஷ்டப்பட்டார் வீரராஜேந்திரர். காஞ்சனாதேவியை இந்த அரியணையில் அமர்த்துவதாக நான் சபதம் செய்தேன் மாநக்காவரத்தில். ஆனால் இரண்டும் நடக்காததுபோல் தெரிகிறது" என்று.

ஜெயவர்மன் விழிகள் வியப்பினால் நன்றாக மலர்ந்தன. "ஏன்?" என்ற ஒற்றைச் சொல் கேள்வி மட்டும் அவன் உதடுகளிலிருந்து உதிர்ந்தது.

"குணவர்மர் சாம்ராஜ்ய பீடத்தை ஏற்க மறுக்கிறார். காஞ்சனாதேவியும் அரியணையில் உட்கார இஷ்டப்படவில்லை" என்றான் இளையபல்லவன்.

"அப்படியா!" என்ற ஜெயவர்மன் தலையணையில் நன்றாகச் சாய்ந்தான்.

"ஆம்."

"ஏன்?"

"உங்கள் சகோதரருக்கு இந்தப் போர் விளைவித்த நாசத்தில் இருந்து பெரு வெறுப்பு ஏற்பட்டிருக்கிறது. அவர் புத்த விஹாரத்துக்குச் சென்று துறவறம் ஏற்கப் போகிறாராம்."

"உம்."

"காஞ்சனாதேவி—" மேற்கொண்டு பேசவில்லை இளையபல்லவன்.

"அவளென்ன சொல்கிறாள்? அதையும் சொல்லுங்கள் இளையபல்லவரே?" என்று வினவினான் ஜெயவர்மன்.

அந்தக் கேள்விக்கு இளையபல்லவன் பதில் சொல்ல வில்லை. மஞ்சளழகியே பதில் சொன்னாள், "தெரிய வில்லையா, தந்தையே? அவளுக்கு ஸ்ரீவிஜயத்தைவிட, கடாரத்தைவிட, சோழநாடு பிடித்திருக்கிறது" என்று.

ஜெயவர்மன் இதழ்களில் வருத்தம் கலந்த புன்முறுவல் தவழ்ந்தது. "புரிகிறது மகளே, புரிகிறது" என்ற ஜெயவர்மன் இளையபல்லவனை நோக்கி, "அப்படியானால் இந்த ஸ்ரீவிஜயத்தை என்ன செய்ய உத்தேசம்?" என்று வினவினான்.

"அதைப் பற்றிச் சக்கரவர்த்தியான உங்களைக் கலக்கத் தான் அநபாயர் என்னை அனுப்பினார். ஸ்ரீவிஜய சாம்ராஜ்யம் இரண்டாகப் பிரிக்கப்படும். ஸ்ரீவிஜய தலை நகருள்ள சொர்ணத் தீவும் கடாரமும் சேர்ந்த பெரும் பகுதியைச் சக்கரவர்த்தியாக குணவர்மன் அரசாளவும் சைலேந்திரர்கள் ஜன்ம பூமியான சாவகத் தீவை மட்டும் நீங்கள் அரசாளவும் அநபாயர் திட்டமிட்டிருக்கிறார். இந்தப் பிராந்தியத்தில் சோழப் பேரரசு விரும்புவது நாட்டு ஆதிக்கமல்ல. கலிங்கம் போன்ற நாடுகளால் ஆக்கிரமிக்கப் படாத தமிழர்பால் அன்புள்ள சுதந்திர அரசை விரும்புகிறது. மூத்த குணவர்மன் சக்கரவர்த்தியாக, நீங்கள் சாவகத்தில் அவருக்கடங்கின அரசராயிருந்தால் இந்தத் திசையில் உங்கள் குடும்பச் சண்டை முடிந்து அமைதி நிலவும். நமது இரு நாடுகளின் வாணிபமும் வலுக்கும். தமிழர் வாழ்வும் நல்வாழ்வாகும்" என்றான் இளையபல்லவன்.

"குணவர்மன் புத்த விஹாரத்துக்குப் போய்விட்டால் அநபாயர் ஏற்பாட்டின் கதி என்ன?" என்று வினவினான் ஜெயவர்மன்.

"தாங்கள் இந்த ஏற்பாட்டுக்கு ஒப்புக்கொண்டால் குணவர்மன் கட்டாயமாக அரியணையில் அமர்த்தப்படுவார். நாளைக்குச் சித்ரா பௌர்ணமி" என்றான் இளையபல்லவன்.

இதைக் கேட்டதும் ஜெயவர்மன் சிந்தனையில் இறங்கினான். மஞ்சளழகிக்குத் தூக்கிவாரிப்போட்டது. இதே சித்ரா பௌர்ணமியில் ஓராண்டுக்கு முன்னால் இளையபல்லவன் அக்ஷயமுனையில் கால் வைத்ததும், அதைத் தொடர்ந்து நடந்த சம்பவங்களும் அவள் இதயத்தே எழுந்தன. பிறிதொரு நாள் நடந்த தனது நாட்டியம், அப்புறம் ஏற்பட்ட பலப்பல சந்திப்புக்கள், கடலலைகளில் தாங்களிருவரும் பரஸ்பர அணைப்பிலிருந்த தினங்கள் எல்லாம் அவள் உள்ளத்தே எழுந்து மோதின. அந்தக் காட்சிகள் கனவுக் காட்சிகளாகி விட்டதை நினைத்தாள். 'இந்த அலைபோலத்தான் நீங்களும், என்னைத் தொட்டுத் தொட்டுப் போய் விடுவீர்களென்று சொன்னேன். அது எத்தனை உண்மையாகி விட்டது' என்று எண்ணிப் பெருமூச்சு விட்டுத் தலையை நிலத்தை நோக்கித் தாழ்த்தினாள். அவள் கொண்டையிலிருந்து பிரிந்த அழகிய இரு மயிரிழைகள் அவள் முகத்தின் எதிரே தொங்கின.

ஜெயவர்மன் ஏக்கம் பிடித்து நின்ற தன் ஒரே மகளை நோக்கினான். அவன் இதயத்தில் திடீரென ஒரு யோசனை தோன்றவே இளையபல்லவனை நோக்கி, "இளையபல்லவரே! அநபாயர் ஏற்பாட்டை ஒப்புக்கொள்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை மட்டுமுண்டு என்று சொல்லுங்கள் இளவரசரிடம்" என்று கூறினான்.

"என்ன நிபந்தனை?"

"அதை அவரிடம் சொல்லுகிறேன்."

"என்னிடம்."

"சொல்வதற்கில்லை."

"இன்று மாலையே நிபந்தனையைக் கூறிவிட வேண்டும்."

"ஏன்?"

"நாளைக் காலையில் குணவர்மன் மகுடாபிஷேகம். உடனே நான் சோழ நாட்டுக்குப் புறப்படுகிறேன்."

"நல்லது! நல்லது!" என்ற ஜெயவர்மன் மெள்ள நகைத்தான்.

அவன் நகைப்புக்குக் காரணம் புரியவில்லை இளைய பல்லவனுக்கு. ஆகவே எதையும் உணர முடியாமலே அறையை விட்டு அகன்றான்.

அவன் சென்றதும் ஜெயவர்மன் மகளை நோக்கி, "மஞ்சளழகி" என்று அழைத்தான்.

"என்ன அப்பா?"

"நிபந்தனை என்ன தெரியுமா?"

"தெரியவில்லையே!"

"குனி, சொல்கிறேன்."

அவள் குனிந்தாள். அவள் காதில் நிபந்தனையைக் கூறினான் ஜெயவர்மன். அதைக் கேட்டதும், "அப்பா! அப்பா! அப்பா!" என்று அன்பையெல்லாம் கொட்டித் திரும்பத் திரும்ப அழைத்த மஞ்சளழகி ஜெயவர்மன் முகத்தில் தன் முகத்தை வைத்து இரண்டு மூன்று முறை புரட்டினாள். மகளின் முகம் தன் முகத்தின்மீது புரண்டதால் அடைந்த இன்பத்தை நுகர்ந்த ஜெயவர்மன், 'ஆகா! என் குழந்தையின் முகம் தரும் அளவுக்கு சந்துஷ்டி விளைவிக்கும் இந்த இன்பத்துக்கு முன்பு சாம்ராஜ்ய சுகம் எத்தனை அற்பமானது!' என்று தனக்குள் எண்ணி எண்ணி ஆனந்தத்தின் வசப்பட்டான். அவள் மகிழ்ச்சி அவன் துன்பத்தையெல்லாம் துடைத்தது. சாம்ராஜ்யச் சிதைவைத் துரும்பென நினைக்க வைத்தது.

அத்தியாயம் 72

# மந்திரத்தின் முடிச்சு

சாம்ராஜ்யம் கையை விட்டு நழுவிய துன்பத்தையே துடைக்கவல்ல மகளின் முக ஸ்பரிசத்தை எண்ணி எண்ணி அன்று பகல் வரையில் மகிழ்ந்து கொண்டிருந்த ஜெயவர்மன், அன்று மாலை அநபாயனையும் குணவர்மனையும் ஆஸ்தான மண்டபத்தில் சந்தித்தபோது கூடக் காலையில் செய்து கொண்ட முடிவில் உறுதியாயிருந்தான். ஆஸ்தான மண்டபத்தில் ஸ்ரீவிஜயத்தின் மந்திரிப் பிரதானிகள், படைத்தலைவர்கள், கடல்புறாவின் உபதலைவர்கள், குணவர்மனின் மந்திரிகள் ஆகிய பலர் முன்னிலையில் அவன் ஒப்பந்தத்தில் தனது கையொப்பத்தை நாட்டியபோது கூட இளையபல்லவனிடம் கூறிய ஒரு நிபந்தனையை மட்டும் விடாப்பிடியாகப் பிடித்துக்கொண்டிருந்தான். இளைய பல்லவனிடம் கூறியது போலவே நிபந்தனையைக் கூறவும் மறுத்தான். அநபாயனிடம் தனித்துக் கூறுவதாகச் சொன்னான். அவன் பிடிவாதம் பலருக்கு எரிச்சலையே உண்டாக்கியது.

ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தில் கொடுங்கோலாட்சி புரிந்தவனும், பல அட்டூழியங்களுக்கு மூல காரணமானவனும், அந்த அட்டூழியங்களிலிருந்து மக்களைக் காக்கவே சோழநாடு வந்த குணவர்மனின் விரோதியாகி விட்டவனுமான ஜெயவர்மன், ஆஸ்தான மண்டபத்தில் நுழைந்தபோது அனைவரும் அவனை வெறுப்புடனே நோக்கினர். நெற்றியில் அம்பு பாய்ந்த காயம் அப்பொழுதும் முழுவதும் ஆறாததால் மருத்துவன் பச்சிலையை உள்ளே வைத்து வெளியே சரிகைத் துணி சுற்றிப் போட்டிருந்த கட்டின் ஒரு மூலை குஞ்சலம் போல் நெற்றியின் பக்கவாட்டில் தொங்க மஞ்சளழகியின்

தோள்மீது ஒரு கையைப் போட்டுக் கொண்டு மெள்ள மெள்ள நடந்து வந்த ஜெயவர்மன், ஆஸ்தான மண்டபத்தில் இருந்தவர்களை ஒருமுறை தனது கூரிய கண்களால் நோக்கினான். அத்தனை வைரிகளையும் அலட்சியமாகப் பார்த்த ஜெயவர்மன் மெள்ள மெள்ள நடந்து அப்பொழுதும் காலியாயிருந்த அரியணையில் அமராமல், அதற்குப் பக்கத்து ஆசனத்தில் அமர்ந்தான். அவனை நன்றாக ஆசனத்தில் உட்கார வைத்து, பணியாட்கள் கொண்டு வந்த ஒரு தலையணையையும் அவன் பின்னால் போட்டுச் சௌகரிய மாகச் சாய வைத்த மஞ்சளழகி, பணியாட்களைப் போக ஜாடை காட்டி, தானும் கிளம்பத் துவங்கினாள்.

அவள் கையைப் பிடித்து நிறுத்திய ஜெயவர்மன், "இரு மகளே! இதில் உனக்கும் சம்பந்தம் உண்டு. நீ உட்கார வேண்டிய சாம்ராஜ்ய அரியணையில் இப்பொழுது யார் உட்கார வேண்டுமென்பது தீர்மானமாகப் போகிறது" என்று சர்வசகஜமாக அனைவரும் கேட்கக் கூறினான்.

பிறகு இளையபல்லவனை நோக்கி, "கொள்ளைக்காரரே! தாங்கள் இன்னாரென்பது தெரியும். அதோ இருக்கும் எனது தலைமையனையும் தெரியும். ஆனால் அநபாயர்..." என்ற ஜெயவர்மனை இடைமறித்த இளையபல்லவன், "இவர்தான் சோழர் குல இளவல்" என்று அநபாயனைச் சுட்டிக் காட்டித் தலையும் வணங்கினான்.

அநபாயனைச் சில விநாடிகள் கூர்ந்து நோக்கிய ஜெயவர்மன் தன்னைவிட அறிவிலும், ஆற்றலிலும், தெளிவிலும், தைரியத்திலும் இணையற்ற வீரனைச் சந்தித்து விட்டதை உணர்ந்தான். அநபாயனையும் நோக்கி இளைய பல்லவனையும் மீண்டுமொருமுறை நோக்கிய ஜெயவர்மன் இருவருக்கும் அதிக வித்தியாசமில்லையானாலும் படைத் தலைவனைவிட இளவரசன் அதிக நிதானமும் அரசியல் அறிவும் உடையவனென்பதையும் ஊகித்துக் கொண்டான். ஆகவே சொன்னான், "சோழ நாட்டு அரச குலம் ஸ்ரீவிஜயத்

தின் மண்ணில் கால் வைப்பது இது இரண்டாம் முறை அநபாயரே" என்று.

அநபாயன் முகத்தில் சிறிது ஆச்சரியரேகை படர்ந்தது. தோல்வியிலும் துணிவைக் காட்டும் ஜெயவர்மன் பேரரசனா யிருக்கத் தகுதியுள்ளவன் என்பதைச் சந்தேகமற அறிந்த அநபாயன் 'இவன் மட்டும் நல்லாட்சி புரிந்து, சோழர் களுடைய நட்புக் கொண்டிருந்தால் இவனை யாரும் இந்த மாபெரும் சாம்ராஜ்ய அரியணையிலிருந்து அசைக்க முடியாதே' என்று உள்ளூர எண்ணினான். அதைக் குறிப்பாகச் சொல்லவும் முற்பட்டு, "ஜெயவர்மரே! தமிழர் களுக்கு ஆதிக்க ஆசை கிடையாது. தங்கள் நாட்டு மக்கள் துன்பப்படாத இடத்தில் சோழர்கள் கால் வைப்பதில்லை. சோழர்களைக் கால் வைக்க அழைப்பது இதர இட.ங்களில் ஏற்படும் அநீதி?" என்றான்.

அரியணையிலிருந்து அரசன் இடும் உத்தரவைப்போல கம்பீரத்துட.னும், நீதியை வழங்கும் தோரணையிலும் அநபாயன் சொன்ன சொற்களைக் காதில் வாங்கிய ஜெயவர்மன் புன்முறுவல் கொண்டான். அத்துடன் சொன்னான், "பக்கத்திலுள்ள கலிங்கத்திலும் தமிழர்களுக்குத் தொந்தரவு இருக்கிறதே. கலிங்கத்தின்மீது ஏன் படையெடுக்க வில்லை? கடல் தாண்டி இத்தனை தூரம் வருவதைவிட அது சுலபமான காரியமல்லவா?" என்று.

அநபாயன் விழிகளில் வியப்பு நிரம்பியது. "கலிங்கத்தின் அரச பரம்பரையினர் யாரும் எங்கள் உதவியை நாடவில்லை. அங்கு சகோதரனை விரட்டும் மன்னன் யாரும் இல்லை" என்று சுட்டிக் காட்டினான் அநபாயன்.

"அங்கு குல விரோதி யாருமில்லையா? விபீஷணன் எவனுமே இல்லையா?" இதைச் சொன்ன ஜெயவர்மன் குணவர்மனை இகழ்ச்சியுடன் நோக்கினான்.

"கொலைகாரன், கொடுங்கோலன், பெண்களை அபகரித்துச் செல்பவன்— இப்படிக் குணமுடையவன்

அரசாளும்போது சகோதர முறை வருவதில்லை. தர்மத்தின் அவசியம் மேம்படுகிறது. விபீஷணன் நல்லவன், தர்மவான். தர்மத்துக்கு முரண் ஏற்பட்டபோது சகோதர பாசத்தை அறுத்துக் கொண்டான். எங்கு அநீதி ஏற்பட்டாலும், யாரால் ஏற்பட்டாலும், அதைத் தவிர்க்க எந்த முயற்சியைச் செய்தாலும், யார் செய்தாலும், யார் மூலம் செய்தாலும், அறத்தின் விதி, நாகரீகத்தின் தேவை, மனித குல நீதி, அதை அனுமதிக்கிறது” என்றான் அநபாயன். அத்துடன் கூறினான், “இதோ இருக்கும் உங்கள் மூத்த சகோதரர் இந்த அரியணை யில் அமர வேண்டியவர். இருப்பினும் துறவு மனப்பான்மை யால் அரசை உதறியவர். திரும்பவும் இதை ஏற்க இவருக்கு இஷ்டமில்லை. கடமையை முன்னிட்டு ஏற்கும்படி நான்தான் வற்புறுத்தினேன். இங்கு சகோதரர்களை விரோதிகளாக வைப்பதல்ல சோழ சாம்ராஜ்யத்தின் நோக்கம். நீங்களிருவரும் இந்த சாம்ராஜ்யத்தின் இரு பகுதிகளைச் சமரசத்துடன் ஆண்டால் இந்தப் பிராந்தியத்தில் அமைதி நிலவும். அதைத்தான் சோழப் பேரரசர் விரும்புகிறார். ஆகவே, இந்த சாம்ராஜ்ய பீடத்தில் குணவர்மரும், சைலேந்திரர் பரம்பரையில் ஸஞ்சயனுக்கு முன்னிருந்த ஆட்சி பீடமாகிய சாவகத்தில் நீங்களும் இருந்து, பூமியின் இந்தப் பகுதிக்கு அமைதியை அளிக்க வேண்டுமென்பது வீரராஜேந்திர தேவர் அவா” என்று.

“அந்த அவாவை நிறைவேற்ற நீங்கள் இந்த நாட்டில் இருப்பீர்களா?” என்று குத்தலாகக் கேட்டான் ஜெயவர்மன்.

“அதல்ல நோக்கம். நீங்கள் நான் சொல்லும் ஏற்பாட்டுக்கு ஒப்புக்கொண்டால், இதோ இந்த ஒப்பந்தத்தில் கையொப்ப மிட்டால்...” என்று துவங்கி கையிலிருந்த சீலைப் பெருஞ் சுருளைக் காட்டிய அநபாயன், “நான் இன்னும் ஒரு மாதத்தில் இந்தப் பகுதியைவிட்டுச் சென்றுவிடுவேன்” என்றான்.

“எங்கு சென்று விடுவீர்கள்?” ஜெயவர்மன் கேள்வியில் இகழ்ச்சி ஒலித்தது.

பதில் அனைவரையும் திடுக்கிடச் செய்தது. "சீனத்துக்கு" என்று தெளிவாக, குரலில் கணீரென்று சொன்னான் அநபாயன்.

"சீனத்துக்கா! சீனத்துக்கா!" என்று பல குரல்கள் நாலா பக்கத்திலிருந்தும் கிளம்பின.

"ஆம். வீரராஜேந்திர தேவர் சீனத்துக்குச் சோழத் தூதராக என்னை நியமித்திருக்கிறார். சமீபத்தில்தான் அப்படி ஓலை வந்தது. ஆகவே இந்த நாட்டில் நான் இல்லையென்றாலும் இதன்மீது எனது ஒரு கண் இருக்கும்" என்று சுட்டிக் காட்டினான் அநபாயன்.

சற்று நேரம் சாம்ராஜ்ய ஆஸ்தான மண்டபத்தில் மௌனம் சூழ்ந்தது. அந்த மௌனத்தை ஜெயவர்மனே உடைத்தான். "அநபாயரே? ஸ்ரீவிஜயத் தலைநகர்தான் இந்தக் கொள்ளைக்காரனாலும் உம்மாலும் பிடிக்கப்பட்டிருக்கிறது" என்று இளையபல்லவன் மீது ஒரு கண்ணை ஓட்டிவிட்டு மேலும் சொன்னான், "ஸ்ரீவிஜயத் தலைநகர் வீழ்ந்ததால் இந்தப் பேரரசு வீழ்ந்துவிட்டதாக நினைக்க வேண்டாம். சாவகத்தில் இன்னும் எனது பெரும் படை இருக்கிறது. இந்த மாநகருக்குப் புறம்பே இன்னும் பல படைகளும் இருக் கின்றன. அவற்றையெல்லாம் வெற்றி கொள்வது கடினம். இருப்பினும் நீங்கள் விரும்பும் அமைதியை எனது மக்களுக்கு நானும் விரும்புவதால் உங்கள் ஏற்பாட்டுக்கு ஒப்புக் கொள்கிறேன். ஆனால் ஒரு நிபந்தனை அநபாயரே! ஒரு முக்கிய நிபந்தனை இருக்கிறது" என்று.

"என்ன நிபந்தனை?" என்று கேட்டான் அநபாயன்.

"இரவு என் அறைக்குத் தனித்து வாருங்கள். இந்த ஒப்பந்தச் சீலையையும் எடுத்து வாருங்கள். நிபந்தனையைச் சொல்லுகிறேன். இதில் கையொப்பமுமிடுகிறேன்," என்று கூறினான் ஜெயவர்மன்.

"அத்தனை ரகசியமா அது?" என்றான் அநபாயன்.

"ஆம்."

"சரி. வருகிறேன்" என்று அநபாயன் ஒப்புக் கொண்டான்.

அத்துடன் ஜெயவர்மன் ஆசனத்திலிருந்து எழுந்தான். அந்த ஆஸ்தான மண்டபத்திலிருந்தோரை ஒருமுறை இகழ்ச்சிப் புன்முறுவலுடன் நோக்கினான். பிறகு, "வா மகளே" என்று மஞ்சளழகியை அழைத்துக்கொண்டு அவள் தோள்மீது ஒரு கையைப் போட்டுக்கொண்டு மெள்ள மெள்ள வந்தபடியே நடந்து சென்றான்.

அன்றிரவு இளையபல்லவனும் மற்றோரும் எவ்வளவோ தடுத்தும் கேளாத அநபாயன் தன்னந்தனியாக ஜெயவர்மன் அறைக்குச் சென்றான். அந்த அறைக்குள்ளே நீண்ட நேரம் கழிக்கவும் செய்தான்.

பிறகு வெளியில் வந்தபோது மிதமிஞ்சிய மகிழ்ச்சியுடன் வந்தான். அறைக்கு வெளியே காத்திருந்த இளையபல்லவனும் குணவர்மனும் ஜெயவர்மன் நிபந்தனை என்னவென்று கேட்டும் அநபாயன் பதிலேதும் சொல்லவில்லை. மறுநாள் குணவர்மன் மகுடாபிஷேகம் நடந்து இளையபல்லவன் கடல் புறாவில் சோழ நாடு நோக்கிப் புறப்பட்டபோது கூட அந்த நிபந்தனையை வெளியிட அநபாயன் மறுத்தான். ஸ்ரீவிஜய சாம்ராஜ்யத்தைச் சோழர்களுக்காக வெற்றி கொண்ட தன்னிடமே ஜெயவர்மன் நிபந்தனையை அநபாயன் மறைக்க வேண்டிய காரணம் புலப்படவில்லை இளையபல்லவனுக்கு. ஆகவே கடல்புறாவின் தளத்தில் நின்றபோது கேட்டான், "என்னிடம்கூட உங்களுக்கு நம்பிக்கை இல்லையா அநபாயரே?" என்று.

"இதில் நம்பிக்கைக் குறைவொன்றுமில்லை கருணாகரா. கொடுத்த வாக்கை நிறைவேற்றுவது என் கடமை. ஜெயவர்மன் தனது நிபந்தனை ரகசியமாயிருக்க வேண்டுமென்றான். நான் ஒப்புக்கொண்டேன். அரச குலத்தார் வாக்கு மீற முடியுமா?

போய்வா கருணாகரா! சோழ நாட்டில் உனக்குப் பெரும் வரவேற்பு காத்திருக்கிறது. தூரக் கிழக்கில் சோழர் கொடியை நாட்டிய மகாவீரனைத் தமிழர்கள் பார்க்கத் துடித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்தா, இந்த முத்திரை ஓலையை மன்னரிடம் கொடு" என்று முத்திரைகள் வைக்கப்பட்ட ஒரு தங்கக் குழாயையும் கொடுத்த அநபாயன், திரும்பக் கரைக்குச் செல்ல நூலேணியை நோக்கிப் புறப்பட்டான்.

இளையபல்லவன் சற்றுக் குழம்பி, "அநபாயரே?" என்றான்.

"என்ன கருணாகரா?"

"மஞ்சளழகி..."

"அவளுக்கென்ன?"

"மனமுடைந்திருக்கிறாள்."

"உம்."

"நேற்றிலிருந்து என்னைப் பார்க்கவும் மறுத்து விட்டாள்."

"பார்த்துப் பலனில்லை."

"அவள் தாயற்றவள். இப்பொழுது என்னையும் இழந்து விட்டாள். அவளுக்கு..."

"சொல் கருணாகரா!"

"தேறுதல் சொல்லுங்கள்."

அநபாயன் இளையபல்லவனை அனுதாபத்துடன் நோக்கினான். "அவளைப் பற்றிக் கலலைப்படாதே கருணாகரா. அவள் நலன் சிறிதும் பாதிக்காதபடி நான் பார்த்துக்கொள்கிறேன்" என்று கூறிவிட்டு நூலேணியில் இறங்கிச் சென்றான் அநபாயன்.

அநபாயன் படகு நகர்ந்தது, கடல்புறாவும் நங்கூர மெடுத்து நகர்ந்தது. கண்டியத்தேவனும் அமீரும் சேந்தனும்

நங்கூரமெடுக்கக் கூச்சல் போட்டதுகூட இளையபல்லவன் காதில் விழவில்லை. ஸ்ரீவிஜயத்திலேயே நிற்கத் தீர்மானித்துக் கரையிலிருந்து போய் வருகவென கரங் குவித்த பாலிக் குள்ளனைக்கூட அவன் கண்கள் பார்க்க முடியவில்லை.

சிந்தை ஒரு விஷயத்தையே திரும்பத் திரும்ப வட்ட மிட்டுக் கொண்டிருந்தது. சாம்ராஜ்யத்தை உதறிய ஜெயவர்மன் விதித்த அந்த நிபந்தனை என்னவாயிருக்கும் என்று மறுபடியும் மறுபடியும் அந்த ஒரு விஷயத்தையே சிந்தித்துக் கொண்டிருந்தது மனம். அந்த ரகசியம் ஸ்ரீவிஜயத்தை விட்டுக் கிளம்பிப் பல நாட்கள்வரை அவிழ வில்லை.

சோழ நாட்டில் இளையபல்லவன் கால் வைத்தபோதும் ரகசியம் மந்திரமாகவே இருந்தது. மந்திர முடிச்சை வீர ராஜேந்திர சோழ தேவரே அவிழ்த்தார். அப்பொழுது படைத்தலைவன் அடைந்த அதிர்ச்சி விவரணத்திற்கு அப்பாற்பட்டது.

அத்தியாயம் 73

# வீரராஜேந்திரரின் நகைச்சுவை

அநபாயனிடம் விடைபெற்று அவன் வீரராஜேந்திர சோழ தேவருக்களித்த முத்திரை ஓலையையும் பெற்றுக் கொண்டு, தாய்நாட்டை நோக்கிக் கிளம்பிய இளைய பல்லவனுக்கு ஸ்ரீவிஜயத்தில் கடைசித் தினத்தில் நடந்த விஷயங்கள் பல விசித்திரமாகவே இருந்தபடியால் அவன் கடலில் பயணம் செய்த இரண்டு மாத காலம் திரும்பத் திரும்ப அவற்றைப் பற்றியே சிந்தித்துக்கொண்டிருந்தான். தான் பயணப்படு முன்பு அநபாயர் காஞ்சனாதேவிக்கும் தனக்கும் சோழநாட்டில் திருமணம் நடக்குமென்றும், அதுவரை அவள் தனி மரக்கலத்திலேயே பயணம் செய்ய வேண்டுமென்றும், தங்களிருவருக்கும் அளவுக்கு மீறிய சந்திப்பு கூடாதென்றும் எச்சரித்ததையும், அதன்படியே காஞ்சனாவை அவள் பெயருள்ள தனி மரக்கலத்தில் ஏற்றிவிட ஏற்பாடு செய்ததையும் நினைத்துப் பார்த்த இளையபல்லவனுக்கு அந்த எச்சரிக்கைகள், கெடுபிடிகள் அனைத்தும் அர்த்தமற்றவையாகத் தெரிந்தன. காஞ்சனா தேவி ஸ்ரீவிஜயத்தின் இளவரசியென்ற முறையில் பல தோழிகளுடன் படகில் அவளது மரக்கலத்துக்குச் சென்ற போது தன்னை நோக்கிப் புன்முறுவல் செய்ததைக்கூட அவனால் ரசிக்கமுடியவில்லை. எல்லாவற்றுக்கும் மேலாக அவனுக்கு வெறுப்பைத் தந்தது, அநபாயர் தன்னிடம் முத்திரை ஓலையைக் கொடுத்தபோதுகூட ஜெயவர்மன் நிபந்தனையைக் கூற மறுத்ததுதான். 'ஒரு சாம்ராஜ்யத்தைக் கொடுத்த எனக்கும் தெரியாமல் ஒரு ரகசியம் இருக்க வேண்டுமா?' என்று இளையபல்லவன் திரும்பத் திரும்பச் சிந்தித்து மனம் புழுங்கியவண்ணம் அந்த இரண்டு மாத கால பயணத்தை நடத்தினான்.

அவனால் முறியடிக்கப்பட்ட கலிங்கத்தின் கடற்படை கிழக்குச் சமுத்திரத்தில் தலைகாட்டாததாலும், கடல் புறாவுடன் காஞ்சனா, மஞ்சளழகி ஆகிய இரு மரக் கலங்களைத் தவிர வேறு இரு போர்க்கலங்களும் துணை வந்ததாலும் எந்தவித இடையூறுமின்றிப் பயணம் நடந்த தாலும் ஜெயவர்மன் நிபந்தனை ரகசியத்தைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தான் இளையபல்லவன். அந்த ரகசியங்கூட அவன் மனத்தைக் குத்தவில்லை. போயும் போயும் தன்னிடம், கலிங்கத்தின் கடல்பலத்தை உடைத்து ஸ்ரீவிஜயத்தைப் பணியவைத்த தன்னிடங்கூட, அநபாயன் நிபந்தனையை மறைத்தானே என்ற மனத்தாங்கல் அவனுக்கு இருந்துகொண்டிருந்தது. அந்த மனத்தாங்கலைச் சிறிது ஆற்றிக்கொள்ள இருமுறை காஞ்சனாதேவியின் மரக்கலத்தை அருகில் வரச்சொல்லி, தான் அதற்குச் சென்று அவளிடம் பேசுவதற்குச் செய்த முயற்சியும் ஈடேறவில்லை. காஞ்சனா அவனை இருமுறை தளத்திலேயே சந்தித்தாள். அவளைக் கிட்டிப் பேச முற்பட்டபோது, "சோழநாடு வரட்டுமே, கிணற்று நீரை வெள்ளமா கொண்டுபோய்விடும்?" என்று தடுத்து அனுப்பிவிட்டாள்.

இளையபல்லவனுக்கு அவள் போக்கு பரம விசித்திரமா யிருந்தது. தன்னிடம் மையலில் சிக்கித் திண்டாடிய காஞ்சனா தேவிக்கு எத்தனை துடுக்கு உண்டாகிவிட்டது என்பதை எண்ணி வியந்தான். 'இவளென்ன பாலூர்ப் பெருந்துறை மாடியறையையும், இதே கடல்புறாவின் உச்சித்தட்டையும் மறந்துவிட்டாளா?' என்று தங்கள் காதல் உதித்து மலர்ந்து உறுதிப்பட்ட இடங்களை எண்ணித் தன்னைக் கேள்வியும் கேட்டுக்கொண்டான். இடையிடையே மஞ்சளழகியின் அழகிய முகம், தன் சுகத்துக்காக அவள் செய்த மகத்தான தியாகம் அவன் மனக்கண் முன்னெழுந்தது. அதைத் தொடர்ந்து அவனிடமிருந்து பெருமூச்சு வந்து கொண்டிருந்தது.

இத்தகைய மனோநிலையில் இரண்டு மாத காலப் பயணத்தை முடித்துப் புகார் துறைமுகத்துக்குள் கடல் புறாவைப் புகவிட்ட இளையபல்லவன் கண்ணெதிரே பெரும் மனித சமுத்திரம் விரிந்தது. கடல்புறா துறைமுகத்துக்கு வந்து நங்கூரம் பாய்ச்சு முன்பாகவே படகுகள் பல சோழர் புலிக் கொடிகளைத் தாங்கிக்கொண்டு கடல்புறாவை நோக்கி வந்தன. கடற்கரை மணலில் வாத்தியங்கள் இசைத்தன. கடல்புறா நங்கூரம் பாய்ச்சிய தருணத்திலேயே புகாரின் அரண்மனைத் தளத்திலிருந்து பெரும் தாரைகள் தங்கள் மாவீரனை வரவேற்பனபோல் பெரிதாகச் சப்தித்தன. கடல்புறா நங்கூரம் பாய்ச்சி நின்றதும் அதை எதிர்நோக்கி வந்த படகுகளில் பிரதானப் படகிலிருந்து சோழநாட்டு சேனாதிபதி நூலேணியில் ஏறி வந்தார். அவரைத் தொடர்ந்து வந்த நான்கு வீரர்கள் தளத்தில் நின்ற கருணாகர பல்லவனுக்குச் சிரங்கள் தாழ்த்தி வாட்களையும் தாழ்த்தி வணங்கினார்கள், “சோழர்கள் கீர்த்தியைக் கடலெங்கும் பரப்பிய வீரரே வருக! உங்களை வரவேற்கும் பாக்கியத்தை மன்னர் எனக்களித்திருக்கிறார்” என்று முகமன் கூறி சேனாதிபதி வரவேற்ற சமயத்தில் அந்திப் பொழுது நெருங்கிக் கொண்டிருந்தது. அந்த அந்தி வேளையில் புகார் இணையற்ற இயற்கை வனப்புடன் விளங்கியது. தாய் நாட்டுப் பிரதானத் துறைமுகமான புகார் கரிகாலன் காலத்துக்குப் பிறகு அதிகமாகச் சோழர்களால் பரிபாலிக்கப்படவில்லை யென்றாலும், அதன் கோட்டைகள் சரியாகப் பழுதுபார்க்கப் படவில்லை யென்றாலும் அதன் பழைய கம்பீரமும் வனப்பும் குறையவில்லை யென்பதைக் கண்ட கருணாகர பல்லவன், அந்த இரண்டு மாதங்களில் முதன் முதலாக மகிழ்ச்சிப் பெருமூச்சு விட்டான். அவன் முகம் மலர்ந்த அதே சமயத்தில் அந்தி நெருங்கியதால் ஆயிரமாயிரம் விளக்குகளும் பந்தங்களும் புகாரின் கரையில் ஏற்றப்பட்டு மாலைச் செக்கர் வானத்துடன் போட்டிபோட்டும், மாலையின் வெளிச்சம் இருந்துகொண்டிருந்ததால் அந்தப் போட்டியில் வெற்றி

யடைய முடியாமல் அரைகுறைச் சிவப்புடனும் தெரிந்தன. மீண்டும் அரண்மனைத் தாரைகள் சப்திக்கவே அரண்மனையிலிருந்து கிளம்பிய ஆயிரம் வெண்புறாக்கள் படபடவென்று இறக்கையடித்து ஆகாயத்தில் பறந்து கடல்புறாவை நோக்கி வந்தன. அதைக் கண்டு பிரமித்த இளையபல்லவனிடம் மெதுவாகச் சொன்னார் சோழ நாட்டுச் சேனாதிபதி, "கடல் புறாவுக்கு மன்னர் செய்யும் மரியாதை இது. வாருங்கள் போகலாம்" என்று. காஞ்சனாதேவியையும் தோழிகளையும் அழைத்துவர அமீருக்கு உத்தரவிட்ட இளையபல்லவன் சோழப் பேரரசைச் சந்திக்கச் சேனாதிபதியுடன் கிளம்பினான்.

சேனாதிபதியின் படகில் இளையபல்லவன் நின்று வர மற்றப் படகுகளில் வாளேந்திய வீரர்கள் நின்றவண்ணம் பயணம் செய்ய அந்தப் படகுக் கூட்டம் அணிவகுத்த வண்ணமே கரையை அடைந்ததும் கரையில் குதித்தான் கருணாகர பல்லவன். குதித்ததும் குனிந்து கடலலை நனைத்திருந்த மணலைக் கையில் எடுத்துக் கண்களால் பார்த்த கருணாகர பல்லவன் பல விநாடிகள் தாய்நாட்டின் அந்த மணலைத் தொட்டதால் மெய்மறந்து நின்றான். அவன் கரையில் குதித்துக் கால் வைத்தவுடனேயே பற்பல வாணங்கள் சீறி ஆகாயத்தை நோக்கிச் சென்றன. மக்கள் பந்தங்களை எடுத்துத் தலை உயரத்தில் ஆட்டினார்கள். பேரிகைகள் சப்தித்தன. வீரர்கள் புடைசூழ மணலில் நடந்து சென்ற இளையபல்லவன் ஆரம்பச் சாலையை அடைந்ததும் அங்கு வெண் புரவிகள் பூட்டிய ரதமொன்று அவனை ஏற்றிச் செல்லக் காத்திருந்தது! இப்படி அரச மரியாதைகளுடன் வந்த அந்தக் கடல்வீரனைப் பார்க்க வழி நெடுக மக்கள் நின்று ஆரவாரித்துத் தங்கள் மகிழ்ச்சியையும் தெரிவித்தனர். அம் மாவீரனை, தமது அரண்மனை வாயிற்படியிலேயே சந்தித்தார் வீரராஜேந்திர சோழ தேவர். மன்னனே வெளிவந்து வரவேற்கும் பாக்கியம் யாருக்கும் கிட்டாதது என்பதை உணர்ந்து கொண்ட இளையபல்லவன் வீர

ராஜேந்திரருக்குத் தலைவணங்கி அநபாயன் அளித்த முத்திரை ஓலையையும் சமர்ப்பித்தான்.

வீரராஜேந்திர சோழ தேவர் அந்த இடத்திலேயே முத்திரை ஓலையை உடைத்து நீண்ட நேரம் படித்தார். அவர் முகத்தில் ஏதோ விவரிக்க இயலாத புன்முறுவல் ஒன்று விரிந்தது. அதைச் சட்டென்று மறைத்துக் கொண்ட அவர், "கருணாகரா! நீ சென்று நீராடி உணவருந்தி என் அந்தரங்க அறைக்கு வா. நாம் பேசவேண்டிய விஷயங்கள் நிரம்ப இருக்கின்றன," என்று கூறிவிட்டு இளையபல்லவனை அழைத்துச் செல்ல சேனாதிபதிக்கு உத்தரவிட்டார்.

இளையபல்லவன் தனக்காக ஒழித்துவிடப்பட்ட அறையில் நுழைந்ததும் அங்கிருந்த பஞ்சணையில் பல விநாடிகள் உட்கார்ந்து விட்டான். வெளிநாட்டிலிருந்து வரும் சக்கரவர்த்திகளுக்குக்கூடக் கிடைக்காத வரவேற்பைத் தமிழ் மக்கள் தனக்கு அளித்ததை எண்ணி எண்ணி, 'இத்தனைக்கு நான் தகுதியா?' என்று தன்னைத்தானே கேட்டுக் கொண்டான். 'அநபாயர் ஓலையைப் படித்ததும் வீரராஜேந் திரர் ஏன் புன்முறுவல் கொண்டார்? அதிலென்ன அப்பேர்ப் பட்ட அற்புதம் எழுதப்பட்டிருக்கிறது? ஒருவேளை அந்த நிபந்தனையாயிருக்குமோ?' என்றும் கேட்டுக்கொண்டான். எதற்கும் விடை காணாததால் எழுந்து ஸ்நான அறை சென்று பணிமக்கள் நீராட்ட நீராடி உணவருந்தி, படைத்தலைவன் அணியவேண்டிய உடைகளை அணிந்துகொண்டு மன்னரைச் சந்திக்கத் தயாரானான்.

ஆறு நாழிகைகள் ஓடிய பின்பு சேனாதிபதியே வந்து இளையபல்லவனை மன்னரிடம் அழைத்துச் சென்றார். வீரராஜேந்திர தேவரின் அந்தரங்க அறையில் அன்று மன்னர் மட்டுமில்லை. இன்னும் படைத்தலைவர்களும் மந்திரிகளும் நிரம்பியிருந்தார்கள். அவர்கள் முன்னிலையில் தலை வணங்கிய இளையபல்லவனின் தலைமீது தனது இரு கைகளையும் வைத்து ஆசிர்வதித்த வீரராஜேந்திர தேவர், அவன் தலை நிமிர்ந்ததும், பக்கத்திலிருந்த மந்திரியிடமிருந்து

ஒரு பெரும் பேழையை வாங்கிக் கொண்டார். பேழை புறா உருவத்தில் இருந்ததைக் கண்ட இளையபல்லவன் பிரமித்தான். அந்தப் பிரமிப்பை உச்ச நிலைக்குக் கொண்டு போயின வீரராஜேந்திரரின் சொற்கள். "வண்டை மன்னனே அருகில் வா. வண்டைக் குறுநிலத்தை நீ நாட்டுக்குச் செய்த பணிக்காக உனக்கு அளிக்கிறோம். நீ பரம்பரை பரம்பரை யாய் அதை ஆளவும், இம்மாநிலத்துக்கும் மக்களுக்கும் நீயும் உன் சந்ததிகளும் சேவை செய்யவும் இதில் சாசனமிருக்கிறது. பெற்றுக்கொள். இனி உன்னை மக்கள் கருணாகரத் தொண்டைமான் என அழைப்பார்கள். வண்டையின் தொண்டைமானே, உன் பணிகள் மேன்மேலும் நீ பிறந்த இந்த நாட்டுக்குக் கிடைக்கட்டும்" என்றார் வீரராஜேந்திரர்.

கனவிலிருப்பவன்போல் புறா உருவில் இருந்த அந்த வெள்ளிப் பேழையைப் பெற்ற மறுகணம் அந்த அறையி லிருந்தவர்களில் பிரதான மந்திரி தவிர மற்ற எல்லோரும் வண்டை மன்னனுக்குத் தலை வணங்கினர். திடீரென உள் நுழைந்த இரு மங்கையர் அவனுக்கு ஆலத்தி எடுத்து இன்னிசை இசைத்துத் திருஷ்டி கழித்து வெளியே சென்றனர்.

எதற்கும் அசையாத கருணாகர பல்லவன் இதயம் பெரிதும் நெகிழ்ந்து கிடந்தது. திடீரெனக் குறுநில மன்னன் பதவி சுமத்தப்பட்டதால் பிரமை பிடித்துப் போன அவன் நீண்ட நேரம் செயலற்று நின்றான். அந்த நேரத்தில் மன்னன் செய்த சைகையின் விளைவாக அனைவரும் போய்விட்ட படியால் மன்னருடன் தனித்து விடப்பட்ட கருணாகர பல்லவன் திடீரெனப் பேழையைத் தரையில் வைத்து மண்டி யிட்டு மன்னர் தாள்களைத் தன்னிரு கைகளாலும் பிடித்துக் கொண்டான். அவனைத் தன்னிரு கைகளாலும் தூக்கிப் பிடித்து நிறுத்திய வீரராஜேந்திரர், "இதைக் கண்டு பிரமிக்காதே. இன்னும் இருக்கிறது" என்று கூறி அவனை அந்த அறைக்கோடிக்கு அழைத்துச் சென்று அங்கிருந்த ஒரு கதவைத் திறந்தார். இளையபல்லவன் கண்கள் நிலைத்தபடி நின்றன. "இது என்ன! இது என்ன!" என்று குளறினான்.

வீரராஜேந்திரர் மெல்ல நகைத்தார். "தெரியவில்லையா உனக்கு? அது காஞ்சனாதேவி! அது மஞ்சளழகி!" என்றும் நகைப்புக்கிடையே கூறினார். அத்துடன் அவன் காதுக்கருகில் குனிந்து, "இதுதான் ஜெயவர்மன் நிபந்தனை. காஞ்சனா தேவிக்குச் சமதையான வாழ்வளித்து மஞ்சளழகியையும் உனக்குத் திருமணம் செய்து வைத்தாலொழிய சமாதான ஒப்பந்தத்தில் கையெழுத்திட மறுத்துவிட்டான் ஜெயவர்மன்" என்றும் ரகசியமாகச் சொன்னார்.

அந்தச் சமயத்தில் பேச இளையபல்லவன் நா மறுத்தது. சொல்லுக்கும் மீறிய உணர்ச்சிகளால் இவன் புரண்டான். 'இருப்பினும் மன்னவா! இருவர்! இரு மனைவியர்...!" என்று தட்டுத் தடுமாறினான் இளையபல்லவன்.

வீரராஜேந்திரர் பலமாகச் சிரித்தார். "சோழர் மன்னர்களில் யார் ஒரு மனைவியுடன் காலந்தள்ளியது? ராஜராஜரா? ராஜேந்திரரா? யாருக்கு இரண்டு மனைவியருக்குக் குறைச்சல்? ஏன்? என்னைத்தான் எடுத்துக் கொள்ளேன். என் கதி எப்படி?" என்றும் கேட்டார். அத்துடன், "எங்களையெல்லாம் பார்த்தால் நீ அதிர்ஷ்ட சாலி. உனக்குக் கிடைத்த இருவரும் மனமொத்தவர்கள். மஞ்சளழகியின் குணம், தியாகம் எல்லாம் காஞ்சனா தேவியையும் ஆட்கொண்டு விட்டதால் அநபாயர் இஷ்டப்படி தனது மரக்கலத்திலேயே மஞ்சளழகியை உன் கண்ணில்கூடப் படாமல் கொண்டு வந்திருக்கிறாள். இந்தச் சேர்க்கை மிக அபூர்வம்" என்று கூறி நகைத்தார்.

பதிலுக்கு நகைக்க படைத்தலைவனுக்குத் திராணி யில்லை. அநபாயன் எத்தனை ரகசியமாகக் காரியத்தை முடித்திருக்கிறான் என்று எண்ணிக் கோபப்பட முயன்றான். கோபம் வரவே மறுத்தது. அந்தச் சமயத்தில் வீரராஜேந்திர தேவர் அந்த அறைக்குள்ளிருந்த சாளரத்தின் குறுக்கே வந்திருந்த மரக்கிளையை நோக்கிக் கையை நீட்டி, "அதோ பார். ஒரே கிளையில் இரண்டு புறாக்கள் உட்கார்ந்திருக்

கின்றன. கடல்புறாவை இயக்கிய நீ அந்த மாடப் புறாக்களை இயக்கப் பார். கடல்புறாவை இயக்குவதைவிட இந்தப் புறாக்களை இயக்குவது எத்தனை கடினம் என்பதை போகப் போகப் புரிந்து கொள்வாய்" என்று மேலும் நகைச்சுவையைக் காட்டியதன்றி அவனை அந்த அறைக்குள் பலவந்தமாக அனுப்பிவிட்டு அவ்விடத்தை விட்டு அகன்றார்.

அவர் நகர்ந்ததும் எதிரே கிளையில் உட்கார்ந்திருந்த இரு புறாக்களும் பறந்தோடின. உள்ளேயிருந்த இரு மா(னி)டப் புறாக்களும் பறக்கவுமில்லை; இருந்த இடத்தை விட்டு நகரவுமில்லை. தன் வாழ்விலே இணைந்துவிட்ட அந்த இரு புறாக்களையும் மாறிமாறிப் பார்த்த இளையபல்லவன் பிரமை பிடித்துப் பேச நா எழாமலும், நகரக் கால் எழாமலும் பல விநாடிகள் நின்றுவிட்டான்.

இருவரையும் அவன் அப்படி ஒரேவித உடையில் காண்பது அப்பொழுதுதான் முதல் தடவை. 'ஒரேவித வெண்பட்டு இவ்விருவருக்கும் ஏது?' என்று தன்னைத்தானே கேட்டுக்கொண்டான். ஒரேவிந தலைக் கொண்டை, ஒரேவித வைரச் சுட்டி, ஒரேவித முத்துக் காதணியும், முத்தாரமும்! பார்ப்பதற்கு இருவரும் இரட்டையர் போலவேயிருந்தனர். அத்தனை செயற்கையலங்காரத்திலும் இயற்கை வெளியிட்ட ரகசியம் மட்டுமே அவர்கள் வெவ்வேறு என்பதைக் காட்டிக் கொடுத்தது. வெட்கத்துடன் காதலனைப் பார்த்த அந்த இரு காரிகைகளின் கண்களும் வெவ்வேறாயிருந்தன. அழகுடன் வீரம் கலந்து நின்ற காஞ்சனாதேவியின் கண்கள் அவன் பாலூர்ப் பெருந்துறை நீதி மண்டபத்தில் வில்லேந்தி அம்பைத் தொடுத்து நின்ற காரிகையென்பதை எடுத்துக் காட்டின. விஷமத்துடனும், நாணத்துடனும் அசைந்து அலட்சியமாகச் சிரித்த மஞ்சளழகியின் கண்கள் கொள்ளைய ரிடையே அக்ஷயமுனைக் கடற்கரையில் உலாவிச் சென்று நடனம் புரிந்து கண்ணசைவால் கொள்ளையர் மனங்களையே அசைத்த அழகியை நினைவுபடுத்தின.

காஞ்சனாதேவியின் சிவந்த செண்பக மொட்டுப் போன்ற உதடுகளின் கம்பீரத்தைப் பார்த்து நகைத்தன, மஞ்சளழகியின் சற்றே பெரிய செம்பருத்தி இதழ்கள். அந்த இருவரின் கன்னங்களின் செழுமை இளையபல்லவனை வாவா என்றழைத்தன. சேலைக்கும் கச்சைக்கும் இடையில் தெரிந்த சிற்றிடைகளிரண்டும் தங்கப் பாளங்கள்போல்தானிருந்தன. ஆனால் ஒன்றில் மட்டும் சிறிது மஞ்சள் நிறம் அதிகமாக ஏறி இருந்தது. இயற்கையின் இந்த இரண்டு வகைப் புஷ்பங்களில் எது சிறந்தது என்பதை நிர்ணயிக்க முடியாமல் நின்ற இளையபல்லவனை நோக்கி இரு மங்கையரும் ஒரு விநாடி புன்னகை பூத்தனர். மறு விநாடி ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டு நகைத்தனர். பிறகு அவனை நோக்கி வந்தனர்.

இளையபல்லவன் திடீரென நின்ற இடத்தை விட்டு அகன்று விடுவிடுவென சாளரத்துக்குச் சென்று அதில் சாய்ந்து வெளியே தலையை நீட்டி, கடலில் ஆடி நின்ற கடல் புறாவைப் பார்த்தான். காற்றின் வேகத்தில் ஆடி கடல்புறா தன்னை கடலுக்கு அழைப்பதுபோல் தோன்றியது. ஆனால் நங்கூரம் பாய்ச்சிய கடல் புறா எப்படி அசையமுடியாதோ அப்படி இரு நங்கூரங்களால் நிறுத்தப்பட்ட தானும் நகர முடியாதென்பதைப் புரிந்துகொண்ட இளையபல்லவன் பெரும் சங்கடத்துக்குள்ளானான். அவன் பின்னால் இரு புறத்திலும் இரு வெண்பட்டுகள் கால்புறத்தில் உராய்ந்தன. அவனை அடுத்து இரு புறத்திலும் இரு பூவுடல்கள் சாளரத்தின்மீது சாய்ந்தன.

அப்படிச் சாய்ந்தபடியே அவன்மீது மெல்லப் பட்டுக் கொண்டிருந்த உடலுடன் காஞ்சனாதேவி கேட்டாள், "கிளையிலிருந்த புறாக்கள் ஓடிவிட்டனவே என்று வருத்தமா?" என்று.

"இல்லை அக்கா! இரண்டு புறாக்கள் வந்துவிட்டனவே யென்று அஞ்சுகிறார்" என்று மஞ்சளழகி மெல்ல நகைத்தாள்.

"படைத்தலைவரா அஞ்சுவார் மஞ்சளழகி?" என்று கேட்டாள் காஞ்சனா.

அந்த இரு அழகிகளின் மனமொத்த நிலையைக் கண்டு இளையபல்லவன் வியப்படைந்தான். இருவர் அருகாமையும் அவனை சொர்க்கலோகத்திற்கு அழைத்துச் சென்று கொண்டிருந்ததால் அவர்கள் விஷமப் பேச்சுக்கும், சிரிப்புக்கும் அவன் பதில் சொல்லவில்லை. சாளரத்தின் கீழே தொங்கிக் கொண்டிருந்த அவன் இருகரங்களும் எழுந்து அவ்விருவர் இடைகளிலும் தவழ்ந்து சென்றன. அப்பொழுது கடலைப் பார்த்த வண்ணமே மஞ்சளழகி கேட்டாள், "ஏன் அக்கா? இவர் படைத்தலைவர் தானே?" என்று.

"இல்லை, இடைத் தலைவர்," என்று கூறி மேலுக்கு வேடிக்கையாகச் சிரித்துவிட்டுத் தனது இடையில் தவழ்ந்த அவன் இடது கரத்தின் விரல்களுடன் தன் விரல்களைப் பிணைத்துக் கொண்டாள் காஞ்சனாதேவி. மஞ்சளழகியும் மெல்ல நகைத்துவிட்டு, காஞ்சனாதேவி தந்திரத்தை அவளும் கையாண்டாள்.

இருவர் இடைகளையும் தன்னை நோக்கி இழுத்து அழுத்தின அவன் கைகள். அவன் இரு கைவிரல்களும், அந்த இரு மங்கையரின் பூவிரல்களுடன் கலந்து திரும்பி அவற்றை நெரித்தன. உணர்ச்சி அலைகள் புரண்டன. மூவரும் பேச்சிழந்தனர். கண்களைக் கண்கள் பார்க்கும் போதுதான் வாய்ச்சொல் பயனில என்று வள்ளுவர் சொன்னார். ஆனால் கைவிரல்கள் கலந்தாலும் கதி அதேதானென்பதை இளைய பல்லவன் அந்தச் சமயத்தில் புரிந்துகொண்டான். அந்த இருவரும் வெளியில் நகைத்துப் பேசினாலும் எத்தனை தந்திரமாக ஒருவருக்குத் தெரியாமல் மற்றொருவர் தன் கைவிரல்களைப் பிடித்துக் கொண்டார்களென்பதை நினைத்துப் பார்த்த அவன் இந்த ரகசியப் போட்டி அவர்களுக்குள் ஆயுள் முழுவதுமிருக்குமென்பதைப் புரிந்துகொண்டான். அந்தப் போட்டியில் அவன் சிக்கிக்

கொண்டது தூரத்தே கடலில் ஆடி நின்ற கடல் புறாவுக்கும் தெரிந்திருக்க வேண்டும். 'வேண்டும், வேண்டும் உனக்கு' என்று அவனை நகையாடுவதுபோல் கடல்புறா தனது பெரும் மூக்கைத் தாழ்த்தி உயர்த்தியது.

அலைகள் கடலில் பெரிதாக எழுந்து அரண்மனைச் சாளரத்தில் மூவரிடையே எழுந்து கொண்டிருந்த உணர்ச்சி அலைகளுடன் போட்டி போட்டன. அந்தச் சாளரத்தில் மேற்கொண்டு துவங்கிய நாடகத்தைக் காண வெட்கப்பட்டது போல், பேரலையொன்றில் அதிகமாக மேலெழுந்த கடல்புறா திடீரெனத் தாழ்ந்து தன் முகத்தைக் கடலலைகளுக்குள் மறைத்துக் கொண்டது. அது திரும்பத் தலை தூக்கியபோது எதையும் பார்க்க முடியவில்லை. சாளரத்தின் கதவு மூடியிருந்தது.

முற்றும்

